# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்

(முதற் பகுதி)

வங்க மூலம்
மஹேந்திரநாத் குப்தர்
பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் சென்னை-600 004.

# முகவுரை

இறைவனின் திருவருளால் **ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகளைத்** தமிழ்ப் பெருமக்களுக்கு வழங்கும் வாய்ப்பு கிட்டியுள்ளமைக்குப் பெரிதும் மகிழ்கிறோம். மூன்று பகுதி களில் வெளி வர இருக்கும் அமுதமொழிகளின் முதல் பகுதி இதுவாகும்.

அவதார புருஷர் ஒருவரின் வாய்மொழிகளை, அப்பெரு மானார் வாழ்ந்த நாட்களிலேயே குறித்து வைத்துப் பின்னர் பக்தர்களுக்கு அங்ஙனமே நூல் வடிவில் அவற்றை வழங்கி யிருப்பது என்பது ஆன்மிக வரலாற்றில் இதுவே முதன்முறை யாகும். இந்த செயற்கரிய செயலைச் செய்தவர் மஹேந்திர நாத் குப்தர் எனும் ஸ்ரீராமகிருஷ்ணரின் இல்லறச் சீடராவர். 1882-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் குருதேவரை இவர் முதன் முதலாகச் சந்தித்தார். முதல் சந்திப்பிலேயே குருவும் சீடரும் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டனர். அன்று முதற் கொண்டு குருதேவர் பூதவுடலில் இருந்த நாள் வரை பலமுறை தட்சிணேசுவரத்திற்குச் சென்று அவரைச் சந்தித்திருக்கிறார். பல நாட்கள் அவருடன் தங்கியிருக்கிறார்.

இந்த நீண்ட ஐந்து வருடகாலங்களில் குருதேவர் மொழிந் தவற்றைத் தம் நாட்குறிப்பில் எழுதி வைத்தார். குருதேவரு டைய நினைவிலேயே இடைவிடாது ஒன்றியிருக்க வேண்டும் என்ற ஆசையாலும் மனத்திரையில் மீண்டும் மீண்டும் தாம் கண்ட காட்சிகளைக் கண்டு களிக்க வேண்டும் என்ற ஆர்வத் தாலும் தமக்காகவே எழுதி வைத்திருந்த இவ்வருள் வாக்குகளை, பிற்காலத்தில் பல பக்தர்களின் வேண்டு கோளுக்கிணங்க ஒன்றன்பின் ஒன்றாக ஐந்து நூல்களாக வெளியிட்டார். அவதார புருஷரின் தெய்விகப் பேச்சுக்களைப் படித்துமகிழ்ந்த மக்கள் மஹேந்திரரைப் பெரிதும் போற்றினர்.

எந்த நூலுக்குமில்லாத தனிச்சிறப்பு இவ்வமுதமொழி களுக்கு உண்டு. ஆன்மிகக் கருத்துக்களுக்குப் பொக்கிஷ மாகவும், ஆழ்ந்த தத்துவ விளக்கங்களுக்குக் களஞ்சியமாக வும் விளங்கும் இந்நூலின் தனிப் பெருமையாவது, ஞானக் கடலாகவும், உணர்வுமிக்கக் கலைஞராகவும் விளங்கிய ஸ்ரீ ராம கிருஷ்ணர், இறைவனை நேருக்கு நேர் கண்டவர், இறைவனோடு பேசியவர் என்பதே இத்தகைய பெறுதற்கரிய பேறு அவருக்குக் கிடைத்திருந்தது. இறைக் காட்சியினால் மாபெரும் ஞானியாக விளங்கிய அவருடைய திருவாக்கினின்றும் வெளிப்

கையில் நாம் காணும் சம்பவங்கள், எளிய உதாரணங்கள், கருத்தாழமிக்க கதைகள் வாயிலாகத் தெள்ளத் தெளிவாக விளக்குகின்ற எளிமையும் இனிமையும் வாய்ந்தவையாக உள்ளன. எனவேதான் சத்தியசீலர் காந்தியடிகள் "தெய்வ பக்தி மனித உருக் கொண்டாற் போன்ற ஸ்ரீராமகிருஷ்ணரின் ஆன்மிக அனுபவமிக்க வாழ்க்கை உலக நன்மைக்காகவே எழுந்தது. இவரது அருள்மொழிகள் இறைவனை நேருக்கு நேர் நாம் காணுமாறு செய்ய வல்லவை. இவ்வுபதேசங்களைப் படிப்போர் 'கடவுள் ஒருவரே உண்மை; மற்ற அனைத்தும் மாயை' என்பதை உணராமற் போகார்" என்று மனமாரப் போற்றினர்.

**அமுத மொழிகளைப்** படிக்கும்போது ஒரே உபதேசம், ஒரே உருவகக்கதை பல இடங்களில் மீண்டும் மீண்டும் பேசப்படுவதைக் காண்கிறோம். இது நூலின் சுவையைக் குறைப்பதாகத் தோன்றலாம். சற்றே சிந்தித்துப் பார்த்தால் ஓர் உண்மைபுலனாகும். "ஒரு முறை கேட்பதைவிட இருமுறை கேட்பின் பிழை குறையும். மும்முறை கேட்பின் தானும் உணர்ந்து பிறர்க்கும் சொல்லும் தெளிவு பெறுவான்." இது சமயநூல்களிலும், வியாகரணமாகிய இலக்கண நூல்களிலும் காணப்படும் ஒரு நெறி முறை ஆகும். எனவே உலக விஷயங்களில் ஊறிக்கிடக்கும் நம் மனத்திற்கு அடிமேல் அடி அடிப்பது போல் பன்முறை கூற வேண்டியுள்ளது. சமய நூல்கள் சிறந்த உண்மைகளை அடிக்கடிக் கூறுவதில் சலிப்படைவதில்லை.

மேலும், பக்தர்கள் பலர், பல சமயங்களில் குருதேவரை அணுகியிருக்கின்றனர், அவர்களது கேள்விகள் சற்றேறக் குறைய ஒரேவிதமாகத்தான் இருந்தன. அவற்றிற்குக் குருதேவர் அளித்தவிடைகள் ஒரேமாதிரி அமைவது இயற்கையே.

இம் முதற் பகுதியில் உருவ வழிபாடு பரவலாகப் பேசப்படுகிறது. ஸ்ரீராமகிருஷ்ணர் அவதரித்த போது ஆங்கிலேயரின் வெறியூட்டும் நாகரிகத்தில் மயங்கி, நமது சமய வழிபாடுகளை இகழ்ந்து எள்ளி நகையாடும் சூழ்நிலை உருவாகியிருந்தது. அப்பொழுது சமய மறுமலர்ச்சி இயக்கங்கள் பல தோன்றின. அவற்றுள் பிரம்ம சமாஜம் வங்க இளைஞர்களைப் பேரளவிற்கு ஈர்த்தது. பிரம்மசமாஜத்தின் தலைவராக அப்போது இருந்த கேசவசந்திர சேனரும் பிறரும் உருவ வழிபாட்டை ஏற்க மறுத்து பொம்மை வழிபாடு என்று கேலி செய்தனர். குணங்களோடு கூடிய அருவக் கடவுளை வழி

பட்டனர். கேசவர், விஜயகிருஷ்ணர், பிரதாப்சந்திர மஜூம்தார் போன்ற பிரம்ம சமாஜத்தலைவர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் ஆழ்ந்த அன்பும் மதிப்பும் கொண்டிருந்தனர். இவர்களும் பிரம்மசமாஜ உறுப்பினர்களும் குருதேவரைக் காண அடிக்கடி வருவதுண்டு. குருதேவர் உருவக் கடவுளைப் பற்றி எடுத்தியம்பி இவர்களுக்கு வாழ்க்கையில் விரிந்த மனப்பான்மையும் இந்து மதக் கொள்கைகளில் பிடிப்பும் ஏற்படும்படிச் செய்தார். **அமுத மொழிகளில்** இதைக் காணலாகும்.

இந்நூலைப் படிப்போர், காமினி காஞ்சனத்தை அறவே வெறுத்தவர் குருதேவர், எனவே பெண்ணினத்தை நிந்தித்தார்; பொருள் ஈட்டுவதை வெறுத்தார் என்ற முடிவுக்கு வந்துவிடக் கூடாது. அவர் ஒரு பெண்ணைத் தம் குருவாக ஏற்றுக் கொண்டவர். மனைவியைத் தெய்வமாக வழிபட்டவர். ஷோடசி பூஜையை மனைவிக்கே செய்து மங்கையர்க்கு மாண்பைத் தந்தவர். பல பெண்கள் அவருக்குச் சீடர்களாக இருந்தனர். பெண்களைக் காமப்பொருளாக, போகவஸ்துவாகப் பார்க்கும் காமத்தை இகழ்ந்தாரே யொழிய, பெண்ணையல்ல அது போன்றே பெண்களையும் ஆண்மீது கொள்ளும் மோகத்தை விட்டொழிக்கச் சொல்வார். இது ஆன்மிகச் சாதகர்களுக்குக் குருதேவர் செய்யும் எச்சரிக்கை ஆகும்.

இவ்வுலகில் வாழ்வதற்குப் பொருள் தேவை. இதைப் பல இடங்களில் குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் அறவழியில் ஈட்டப் படும்பொருளாக, எவ்வளவு தேவையோ, அவ்வளவிற்கேஈட்டு வதாய் இருக்க வேண்டும் என்பார். அளவற்ற பொருளாசை, காமம், ஒருவனின் ஆன்மிக முன்னேற்றத்திற்குப் பெருந் தடைகள் என்பதைத் தெளிவாக்கியிருக்கிறார். இதைக் கருத்திற் கொள்ளுமாறு வாசகர்களை வேண்டுகின்றோம்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் பிறமொழி பேசும் நம்நாட்டு பக்தர்கள் படித்துப் பயனடைய வேண்டும் என்ற காரணத்தினால் ஹிந்தி, குஜராத்தி, தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலான மொழி களில் இந்நூல் மொழிபெயர்க்கப் பட்டிருக்கிறது. பிறநாட்டு மக்களும் பயனடைய வேண்டி The Gospel of Sri Ramakrishna என்ற பெயரில் சுவாமி நிகிலானந்தர் அமெரிக்க நாட்டிலிருந்து மொழி பெயர்த்து வெளியிட்டார். சென்னை ராமகிருஷ்ண மடம் தொடர்ந்து இவ்வாங்கில மொழி பெயர்ப்பு நூலை வெளியிட்டு வருகிறது.

தமிழில் முதன் முதலாகக் குருதேவரின் 1121 உபதேசங்கள் அடங்கிய நூலினை "ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்" என்ற

தலைப்பில் சென்னை மடம் வெளியிட்டது. அதை அடுத்து சுவாமி பரமாத்மானந்தர் மொழி பெயர்த்த "மொழியமுதம்" சுவாமி தன்மயானந்தர் மொழி பெயர்த்த "ஸ்ரீராமகிருஷ்ண கதாமிருதம்" என்ற நூல்களும் பிரசுரமாயின. ஆயின் முதன் முதலாக முழு அளவில் மகேந்திரநாத் குப்தர் வங்க மொழியில் எழுதிய ஐந்து பாகங்களையும் அப்படியே மிக எளிய தமிழில் இப்பொழுது தந்திருக்கிறோம்.

ஸ்ரீராமகிருஷ்ணர் கிராமச் சூழ்நிலையில் வாழ்ந்தவர். அவர் பேசியதெல்லாம் கொச்சையான வங்கக் கிராமிய மொழியிலாகும். மிக உயர்ந்த தெய்விக அனுபவங்களை, சிக்கலான தத்துவங்களை எளிய முறையில் எளிய சொற்களில் தருவது ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் கைவந்தகலையாக இருந்தது. தாம் கண்ட, உணர்ந்த இறை அனுபவங்களை அப்படி அப்படியே அழகு கொஞ்ச விளக்கினார். அந்தக் கருத்துக் கருவூலங்களை மூலத்திலிருந்து சிறிதுகூட வழுவாமல், சுவை குன்றாமல், எளிய முறையில், தமிழ் மொழியின் இயல்பு கெடாது அப்படியே மொழி பெயர்த்துத் தர முயன்றுள்ளோம். குருதேவரின் அருட்துணை கொண்டு அவருக்குச் செய்யும் வழிபாடாக நினைத்து இப்பணியினைச் செய்திருக்கிறோம்.

பேச்சினூடே குருதேவர் பயன்படுத்திய வடமொழிச் சொற்கள் பலவற்றை அப்படியே தந்திருக்கிறோம். உதாரணத்திற்கு வியாகுலதா, காமினி, காஞ்சனம், மாயை, மித்யை,வஸ்து அவஸ்து, பத்தர், முமுக்ஷு, சம்ஸ்காரம், நித்யை, லீலை, நிராகாரப் பிரம்மம், சகுண நிர்குண உபாசனை என்பன ஒரு சில.

அமுதமொழிகளில் இடம் பெற்றுள்ள பாடல்களில் பெரும்பான்மையானவை வங்க மக்களைச் சொக்க வைத்த காளி பக்தர்கள் ராமப்பிரசாதர், கமலாகாந்தர் பாடியவை. சைதன்ய மகாப்பிரபுவைப் பற்றிய பாடல்கள், தத்துவ உருவகப் பாடல்கள், ராதை கிருஷ்ணர் பாடல்கள், தோத்திரப் பாடல்கள் என அநேகம் உள்ளன. தெய்வ பக்தியிலும், தமிழ் மொழியிலும் சிறந்து விளங்கும் திருமதி செளந்தரா கைலாசம் அவர்கள் அன்னை காளி பற்றி வரும் பாடல்களையும் ராதாகிருஷ்ணர் பற்றிய பாடல்களையும் அழகு தமிழில் மொழிப் பெயர்த்துள்ளார். தமிழ்க் கடலாக விளங்கிய காலஞ்சென்ற சுவாமி பரமாத்மானந்தர் மொழி பெயர்த்துள்ள சில பாடல்களையும் தந்திருக்கிறோம். குருதேவரிடம் அன்பு கொண்ட திரு செல்லம் ஐயர், திரு திருப்பூர் கிருஷ்ணன், திரு விசாக விஜயன் எனும் அன்பர்களும் சில கவிதைகளை மொழி பெயர்த்

திருக்கின்றனர். எளிமையும் இனிமையும் வாய்ந்தவை காலஞ் சென்ற ரேடியோ அண்ணா திரு அய்யாசாமி அவர்கள் மொழி பெயர்த்தவை.

சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் தலைவர் சுவாமி தபஸ்யானந்தரின் விருப்பத்திற்கிணங்க சுவாமிதன்மயானந்தர் வங்க மொழியிலிருந்து நேரடியாக அமுத மொழிகளைத் தமிழில் மொழி பெயர்த்தார். இப்பணியில் அவருக்கு சுவாமி ராகவேசானந்தர், சுவாமி கமலாத்மானந்தர், இன்னும் மடத்தைச் சேர்ந்த பலதுறவிகள், பக்தர்கள், மாணவர்கள் பலரும் உதவி புரிந்துள்ளனர். காலஞ்சென்ற திரு ஆர். ராம கிருஷ்ணன், பிரம்மச்சாரி தனராஜ் அவர்களும் இப்பணியில் ஆரம்பத்தில் ஈடுபட்டிருந்தனர். திரு நா. நாகேஸ்வரன் அவர்களும் பேராசிரியர் ஏ. சுப்பிரமணியம் எம். ஏ., அவர்களும் மொழிபெயர்ப்பைச் சரிபார்த்து யோசனைகள் பல தந்து உதவி யுள்ளனர்.

எத்திராஜ் மகளிர் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைமைப் பேராசிரியை செல்வி சீதாபாய் எம். ஏ.,எம். லிட்., இம்மொழி பெயர்ப்பை நல்ல எளிய தமிழில் அமைத்து அச்சிற்குத் தயாராக்கிய தோடல்லாமல், அச்சுப் பிரதிகளைத் திருத்திப் புத்தக வடிவில் அமைக்கப் பெரிதும் உதவியுள்ளார். இது அவர் குருதேவருக்குச் செய்த திருத்தொண்டாகும். நூலுக்குச் சொல்லடைவு செய்த திருமதி புஷ்பா, அழகான கையெழுத்தில் ஏடுகளை வரைந்து உதவிய திருமதி சக்தி கிருபாகரன் அவர் களுக்கும் எமது நன்றி உரித்தாகுக.

இப்புத்தகத்தை மலிவு விலையில் வெளிக் கொணர்வதற்கு குருதேவரின் பக்தர்களும், ஸ்ரீராம கிருஷ்ண இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டவர்களுமான திரு. நல்லிகுப்புசாமி செட்டியார் அவர்கள் ரூ. 50,000/ம், திரு. நா. மஹாலிங்கம் அவர்கள் சக்தி நன்கொடையிலிருந்து ரூ. 10,000/ம், நண்பர் திருபூஷண் அவர்கள் ரூ. 5,000/ம் நன்கொடையாக வழங்கி யுள்ளனர். மேலும் சில அன்பர்கள் சிறு தொகைகளை வழங்கியுள்ளனர். இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள் என்றென்றும் இருப்பதாக!

**ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்** எனும் இந்நூலை, பல அன்பர்கள் ஒன்று கூடி பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் பாத கமலங்களில் காணிக்கையாக்கும் ஒரு அன்பு மலர்ச்செண்டு எனலாம். இத்திருப்பணியில் ஈடுபட்டிருந்த அன்பர்கள் அனைவருக்கும் எமது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சென்னை
31-12-1982

பதிப்பாளர்.

# உள்ளடக்கம்

# நூலாசிரியர் மஹேந்திரநாத் குப்தர்

இந்திய ஆன்மிக வரலாற்றிலே, கடந்த நூற்றுண்டில், இரு நிகழ்ச்சிகள் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தன. ஒன்று, ஐந்து ஆண்டுகளுக்கும் மேலாக மேலைநாடுகளில், இந்திய ஆன்மிகக் கருத்துக்களைப் பரப்பித் தாய்நாட்டிற்குப் பெருமையும் பெருமிதமும் தேடித்தந்த ஆன்மிகச் சிங்கம் சுவாமி விவேகானந்தரது மேனுட்டு விஜயம். இரண்டாவது, அடக்கத்தின் திருவுருவாக, ஆடம்பரத்தை, அதைவிட விளம்பரத்தை அறவே வெறுத்தவராக, ஆசிரியர் மஹாசயர் என்று மதிப்போடும் மாண்போடும் வங்க மாணவர்களால் அழைக்கப் பெற்றவராகத் திகழ்ந்த மஹேந்திர நாத் குப்தர் (ம) எனும் குருதேவரின் இல்லறச் சீடர் தம் நாட்குறிப்பினின்றும் "ஸ்ரீராமகிருஷ்ண கதாம்ருதம்" எனும் பெயரில் தொகுப்பு நூல் ஒன்று வரைந்தது. ஸ்ரீராமகிருஷ்ணத் துறவாலயத்திற்குக் கம்பீரமான வாயிற்கோபுரமாக சுவாமி விவேகானந்தர் விளங்கினுர் எனின், பக்தர்களைத் தன்னிடத்து ஈர்க்கும் கருவறையின் மேற்கோபுரமாக விளங்கியவர் ம- என்றுல் அது உண்மை, வெறும் புகழ்ச்சியன்று. "எதைச் செய்ய வேண்டுமோ, அதை எப்படிச் செய்யவேண்டுமோ, அப்படி நீங்கள் செய்திருக்கிறீர்கள். அவரை இதுபோல உணர்ந்து கொண்டவர்கள் ஒரு சிலரே...... உங்கள் நூல் அருமையாக இருக்கிறது. நீங்கள் கையாண்டமுறை, எழுதியிருக்கும் பாங்கு, மூலத்திலிருந்து சிறிதுகூடப் பிறழாமல், சொந்தக் கருத்துக்களைக் கலப்படம் செய்யாமல், தூய்மையாக, நேர்மையாக எழுதியிருப்பது அருமையிலும் அருமை. இந்த இரண்டாம் இதழைப் படித்தபோது அந்தப் பழைய தெய்விக நாட்களுக்கே சென்று விட்டதைப் போல் உணர்ந்தேன். குருதேவருடைய வாழ்க்கையை எங்களில் யாரும் எழுத முற்படாமைக்கு, முயலாமைக்குக் காரணம் இப்போது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. இந்த மகத்தான புனித காரியம் உங்களுக்காகவே ஒதுக்கப்பட்டிருக்கிறது; ஆம், அவர் உங்களில் வாழ்ந்து வருகிறுர். இதில் சந்தேகமில்லை." சுவாமி விவேகானந்தர் ம-வுக்கு எழுதிய கடிதங்களில் காணப்பட்ட வரிகள் இவை. தன்னுடையவராக, தன் கூட்டத்தைச் சேர்ந்தவராக, இந்த உலகில் தன் அவதார காரியத்திற்குத் துணை செய்யத் தன்னேடு வந்தவராகக் குருதேவர் ம-வைக் கருதினுர். "என்னுடைய ஒரு சிறு காரியத்தை நீ செய்யவேண்டும் என்று அன்னை.

# நூலாசிரியர் மஹேந்திரநாத் குப்தர்

இந்திய ஆன்மிக வரலாற்றிலே, கடந்த நூற்றுண்டில், இரு நிகழ்ச்சிகள் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தன. ஒன்று, ஐந்து ஆண்டுகளுக்கும் மேலாக மேலைநாடுகளில், இந்திய ஆன்மிகக் கருத்துக்களைப் பரப்பித் தாய்நாட்டிற்குப் பெருமையும் பெருமிதமும் தேடித்தந்த ஆன்மிகச் சிங்கம் சுவாமி விவேகானந்தரது மேனுட்டு விஜயம். இரண்டாவது, அடக்கத்தின் திருவுருவாக, ஆடம்பரத்தை, அதைவிட விளம்பரத்தை அறவே வெறுத்தவராக, ஆசிரியர் மஹாசயர் என்று மதிப்போடும் மாண்போடும் வங்க மாணவர்களால் அழைக்கப் பெற்றவராகத் திகழ்ந்த மஹேந்திரநாத் குப்தர் (ம) எனும் குருதேவரின் இல்லறச் சீடர் தம் நாட்குறிப்பினின்றும் "ஸ்ரீராமகிருஷ்ண கதாம்ருதம்" எனும் பெயரில் தொகுப்பு நூல் ஒன்று வரைந்தது. ஸ்ரீராமகிருஷ்ணத் துறவாலயத்திற்குக் கம்பீரமான வாயிற்கோபுரமாக சுவாமி விவேகானந்தர் விளங்கினுர் எனின், பக்தர்களைத் தன்னிடத்து ஈர்க்கும் கருவறையின் மேற்கோபுரமாக விளங்கியவர் ம- என்றுல் அது உண்மை, வெறும் புகழ்ச்சியன்று. "எதைச் செய்ய வேண்டுமோ, அதை எப்படிச் செய்யவேண்டுமோ, அப்படி நீங்கள் செய்திருக்கிறீர்கள். அவரை இதுபோல உணர்ந்து கொண்டவர்கள் ஒரு சிலரே...... உங்கள் நூல் அருமையாக இருக்கிறது. நீங்கள் கையாண்டமுறை, எழுதியிருக்கும் பாங்கு, மூலத்திலிருந்து சிறிதுகூடப் பிறழாமல், சொந்தக் கருத்துக்களைக் கலப்படம் செய்யாமல், தூய்மையாக, நேர்மையாக எழுதியிருப்பது அருமையிலும் அருமை. இந்த இரண்டாம் இதழைப் படித்தபோது அந்தப் பழைய தெய்விக நாட்களுக்கே சென்று விட்டதைப் போல் உணர்ந்தேன். குருதேவருடைய வாழ்க்கையை எங்களில் யாரும் எழுத முற்படாமைக்கு, முயலாமைக்குக் காரணம் இப்போது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. இந்த மகத்தான புனித காரியம் உங்களுக்காகவே ஒதுக்கப்பட்டிருக்கிறது; ஆம், அவர் உங்களில் வாழ்ந்து வருகிறுர். இதில் சந்தேகமில்லை." சுவாமி விவேகானந்தர் ம-வுக்கு எழுதிய கடிதங்களில் காணப்பட்ட வரிகள் இவை. தன்னுடையவராக, தன் கூட்டத்தைச் சேர்ந்தவராக, இந்த உலகில் தன் அவதார காரியத்திற்குத் துணை செய்யத் தன்னேடு வந்தவராகக் குருதேவர் ம-வைக் கருதினுர். "என்னுடைய ஒரு சிறு காரியத்தை நீ செய்யவேண்டும் என்று அன்னை

எனக்குக் கூறியிருக்கிறாள். உலகிற்கு நீ பாகவதத்தை—இறை மொழிகளை வழங்கவேண்டும் என்பது அவள் விருப்பம்" என்று குருதேவர் ம-விடம் தெளிவாக எடுத்துரைத்தார்.

இப்படி ஒரு பெரிய தெய்வகாரியத்திற்காகக் குறிப்பிடப் பெற்ற மஹேந்திரநாத் குப்தர் 1854-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள், 14-ஆம் தேதி கல்கத்தாவில் மதுசூதன குப்தர் என்பவருக்கும், சுவர்ணமயிக்கும் மகனாகப் பிறந்தார். தந்தை, கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் அதிகாரியாகப் பணியாற்றியவர். ம- பள்ளிப் படிப்பிலும், கல்லூரிப் படிப்பிலும் சிறந்த மாணவராக விளங்கினர். ஆங்கில இலக்கியம், வரலாறு, பொருளாதாரம், மேனாட்டுத் தத்துவம், சட்டக்கலை எனும் இவற்றோடு வடமொழி இலக்கண இலக்கியம், தரிசனங்கள், புராணங்கள், ஸ்மிருதி, சமண பௌத்த சமயநூல்கள், ஜோதிடம், ஆயுர்வேதம் என்ற நம் நாட்டுக் கலைகளையும் கற்றுத் தேர்ந்தார். கல்லூரிப் படிப் பிற்குப் பிறகு தலைமை ஆசிரியராகப் பல பள்ளிகளில் பணி யாற்றினர். ரிப்பன் கல்லூரியில் பணியாற்றியபோது ஆங்கிலம், தத்துவம், வரலாறு, பொருளாதாரம் என்ற துறைகளில் மாணவர் களுக்குத் திறம்பட அற்புதமாகப் பாடம் நடத்துவார். கல்வி வட்டாரங்களில் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்த காரணத்தி ஞல் தலைவர் மஹாசயர் (Rector) என்று அழைக்கப்பட்டார். இவரோடு பணிபுரிந்த ஆசிரியர் ஒருவர், பாடம் நடத்துவதில் ம- மேற்கொண்ட நெறிமுறைகளைப் போற்றிக் கூறியுள்ளார். பாடம் நடத்தும்போது மாணவனின் நிலைக்கு இறங்கி வந்து, அவன் புரிந்துகொள்ளும் சக்திக்கு ஏற்ப வரைபடங்கள், படங்கள், அட்டவணைகள் முதலியவற்றைக் கொண்டு பாடத்தை விளக்குவாராம். பிற்காலத்தில் மார்டன் பள்ளியை விலைக்கு வாங்கியபோது தாய்மொழி வழிக் கல்வியினை அறிமுகப்படுத்திய பெருமை இவரைச் சாரும். வாழ்நாளின் பெரும்பகுதியைக் கல்விப் பணிக்காகச் செலவிட்டபோதும், மனித இனத்தின் ஆன்மிகப் புத்தெழுச்சிக்காகத் தோன்றிய வராதலால், இறைநாட்டத்தில், ஆன்மிகத் தாகத்தினல் சாதுக் களுடைய நட்புறவில், இவருடைய உள்ளம் ஈடுபட விரும்பியது. பிரம்மசமாஜத் தலைவரான கேசவசந்திரசேனர், இளைஞன் மஹேந்திரநாத்தின் உள்ளத்தைக் கவர்ந்தார். உயர் நோக்கங்களை வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்ட இந்த இளம் நெஞ்சத்தில் அன்று கேசவர் விதைத்த விதைதான் பிற்காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் எனும் கற்பகத்தின் நிழலில் ம-வின் ஆன்மிகக் கல்வி நன்குபடர்ந்து வளர ஏதுவாயிற்று.

கூட்டுக் குடும்பத்தில் வாழ்ந்தவர் ம-. ஆசிரியர் வேலைக்கு அமர்ந்த பத்தாண்டுகளுக்குப் பிறகு குடும்பத்தினரிடையே பூசல்களும் சண்டைகளும் எழுந்தன. வீடு போர்க்களமாயிற்று. ம-விற்கு வாழ்க்கை கசந்து போயிற்று. மனம் உடைந்த நிலையில் வாழ்க்கையை முடித்துக் கொள்ள எண்ணி நள்ளிரவில் வீட்டை விட்டு அகன்று வராகநகரில் வாழ்ந்து வந்த தம் சகோதரியின் வீட்டிற்குச் சென்றார். மனம் தத்தளித்தவராய்க் காலையில் மருமகன் சித்தேஸ்வருடன் (சிது) கல்கத்தாவிலுள்ள பல பூஞ்சோலைகளுக்கு அலைந்து திரிந்தார். கடைசியில் சிது தட்சிணேசுவரக் காளி கோயில் பூந்தோட்டத்திற்கு அழைத்துச் சென்றார். இயல்பாகவே இயற்கைக் காட்சிகளில் உள்ளத்தைப் பறிகொடுக்கும் ம-விற்குக் காளிகோயில் பூந்தோட்டம் வரப்பிரசாதமாக விளங்கிற்று. அங்கே இயற்கை அன்னை பூரணப்பொலிவோடு சிரித்து மகிழ்வது ம-வைப் பரவசப் படுத்தியது. சிதுவுடன் பரமஹம்சர் வாழ்ந்து வந்த அறைக்குள் ம- நுழைந்தார். புனித கங்கையைப் பார்த்தவண்ணம் அமைந்துள்ள அந்த அறையில் பக்தர்கள் தரையில் அமர்ந்திருக்க, கிழக்கு முகமாகக் கட்டிலில் அமர்ந்துகொண்டு, புன்சிரிப்புத் தவழப் பேசிக் கொண்டிருந்தார் ஸ்ரீராமகிருஷ்ணர். அவர் திருவாயினின்றும் வருகிற உண்மைகளை அமுதமெனப் பருகிக் கொண்டிருந்தனர் பக்தர்கள். இந்த அற்புதக் காட்சியைக் கண்டு ம- சொல்லிழந்து, செயலிழந்து, தன்னை மறந்து, பார்த்தது பார்த்தபடி நின்றார். மரணத்தைத் தழுவுவதற்குத் துடித்த அவரது முனைப்புக்கள் ஒடுங்கின, சிந்தனைகள் சுருங்கின. அவர் மனத்துள் இந்த அற்புதக் காட்சியொன்றே எல்லாவற்றையும் அழித்து விட்டு மீதூர்ந்து நின்றது. காலம், தேசம் எல்லாம் கடந்த நிலையில் அவர் நின்றார். இறப்பை எண்ணிய உள்ளத்தில் இறைஎண்ணங்கள் மோதி நின்றன. சாவை நோக்கிச் சென்றவரை சாகாநிலை ஆட்கொண்டது. வாழ்வதற்குப் பிடிப்பு காணாது வெறுத்தவரிடத்தில் இந்த மகானைக் காண்பதற்காகவே வாழவேண்டும், அடிக்கடி இங்கே வர வேண்டும் என்ற பேரவா அலைபாயத் தொடங்கி விட்டது. குருதேவரின் தரிசனம் இறப்பைப் போக்கி அமுதத்தை வார்த்தது. எதற்காக வாழ வேண்டும் என்ற எண்ணம் போய், இதற்காக வாழவேண்டும் என்றநிலை உருவாயிற்று. ம-வின் வாழ்க்கையில் மாபெருந்திருப்பம். புது மனிதனாய்த் திரும்பினார். இதை ம- கூறுகிறார். "என்ன விந்தை! வாழ்க்கையை முடித்துக் கொள்ள வேண்டும் என்ற உறுதி இருந்த இடத்தில் இறைவனைக் கண்டுகொண்ட பேரானந்தம். ஆஹா! உண்மையில்

துன்பத்தை மனிதன் தனக்கு நன்மை செய்யும் தோழனாக அன்றோ கருதவேண்டும்? இறைவன் நல்லவனே." பின்னாளில் ம- தம் வாழ்நாளில் மறக்க முடியாத நிகழ்ச்சி என்று இதைத் தான் குறிப்பிட்டிருக்கிறார்.

இதற்குப் பிறகு ம-வின் வாழ்க்கை குருதேவரைச் சுற்றிச் சுழன்றது. ஞாயிற்றுக்கிழமை, விடுமுறை நாட்கள், சிலபோது மாதக் கணக்கில் என்று குருதேவரோடு அவர் காலங்கழித்து வந்தார். குருதேவருக்கும் சிஷ்யருக்கும் இடையே அலாதியான தொரு நெருக்கம் ஏற்பட்டது. தன்முன் அமர்ந்து சைதன்ய பாகவதத்தைப் படித்துக் கொண்டிருந்த ம-வைப் பார்த்த குருதேவர் முற்பிறவியில் சைதன்ய தேவருடைய சீடர்களில் ஒருவராக ஞானக் காட்சியில் அவரைக் கண்டார். "நீ என்னுடையவன்; என்னைச் சேர்ந்தவன்; தந்தைக்கு மகன் உரியவனாதல் போல" என்று பரவசமுற்று நெகிழ்ந்து கூறினார்.

பந்தங்களிலிருந்து விடுபட்டு, இறைவனுக்கு ஆட்பட்டு வாழ்வதற்காகத் துறவறத்தில் ஈடுபடத் துடித்தார். தன் கருத்தைக் குருதேவரிடம் தெரிவித்தபோது, "தேவையில்லை. அவளுடைய சின்னஞ்சிறு வேலையை நீ செய்ய வேண்டும் என்று அன்னை என்னிடம் கூறியிருக்கிறாள். பாகவதத்தை— இறைமொழிகளை உலகமக்களுக்கு நீ எடுத்துரைக்க வேண்டும். அதனால் பாகவத பண்டிதனை அன்னை ஒரு பந்தத்தினால் உலகத்தோடு கட்டிப் போடுகிறாள்" என்று கூறி மறுத்துவிட்டார்.

கேசவசந்திர சேனருடைய தூரத்து உறவு முறையில் வந்த நிகுஞ்சாதேவி எனும் பெண்மணியை மணந்து இரண்டு ஆண் குழந்தைகளுக்கும் இரண்டு பெண்குழந்தைகளுக்கும் தந்தை யானார் ம-. குடும்பச் சுமை, வேலையில் இருக்க வேண்டிய கட்டாயத்தைத் தோற்றுவித்த போதிலும் தான் மேற்கொண்ட உயரிய கொள்கைகள், கட்டுப்பாடுகள் இவைகளினின்றும் சிறிதும் வழுவாது வாழ்ந்து வந்தார். வித்யாசாகர் நிர்வகித்து வந்த பள்ளியில் வேலை பார்த்து வந்த போது பள்ளித் தேர்வு முடிவுகள் மோசமாக இருந்தன. இதற்குக் காரணம் குருதேவரிடத்தில் கொண்ட அதிக ஈடுபாடு என்று வித்யாசாகர் ம-வைக் குற்றஞ்சாட்டிய போது நேர்மையாளரான ம- வேலையை ராஜினமா செய்தார். வெகு விரைவில் குடும்பம் வறுமையின் எல்லையைக் கண்டது. நாளை நிலை என்னகுமோ என்று கவலையோடு ம- சிந்தித்துக் கொண்டிருந்த

போது சுரேந்திரரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. ரிப்பன் கல்லூரியில் பேராசிரியர் பதவியினை ஏற்றுக் கொள்ளுமாறு கடிதத்தில் அவர் கேட்டிருந்தார். அன்று முதற்கொண்டு ம-வின் வாழ்க்கையில் வறுமை நீங்கி வளமை கொழிக்கலாயிற்று. பின்னாளில் மார்டன் பள்ளியை விலைக்கு வாங்கி அதைத் திறம்பட நிர்வகித்துக் கல்கத்தாவிலேயே மிகச் சிறந்த பள்ளியாக உயர்த்தினார்.

இப்படிக் கல்விப்பணி பூண்ட கல்வியாளராக ம- காணப் பட்டாலும், இல்லறத்தில் இருந்து கொண்டு மனைவி மக்களோடு வாழ்ந்து வந்தாலும், உள்ளத்துள் துறவிகள், ஞானிகள், சாதுக்கள், பக்தர்கள் இவர்களையே உண்மையான சுற்றத்தார்களாக மதித்து, அவர்களோடு பழகி வந்தார். குருதேவரின் அருள்வாக்குகளைச் செவிமடுப்பதிலும், அவரோடு பல இடங்களுக்குச் செல்வதிலும், பக்திப் பாடல் களைக் கேட்டு மகிழ்வதிலும் நாட்களைச் செலவிட்டு வந்தார். தியான முறைகளை, சகுண, நிர்க்குணப் பிரம்மத்தைப் பற்றிய கல்வியினை நேரடியாகக் குருதேவரிடம் கற்று வந்தார். அமுத மொழிகளில் இக்கருத்துக்கள் பரவலாகப் பேசப்படுகின்றன. அருவ வழிபாட்டில் திடமான நம்பிக்கை கொண்டிருந்தது போலவே உருவ வழிபாட்டிலும் நம்பிக்கைக் கொள்ளுமாறு எப்படியெல்லாம் குருதேவர் இந்தச் சீடரை படிப்படியாக உபதேசித்து உயர்த்தி வந்தார் என்பதையெல்லாம் விரிவாக அமுதமொழிகளில் காணலாம். பக்தனாகவும், ஞானியாகவும் குருதேவரின் பராமரிப்பில் ம- மலர்ந்தார். இதைச் சில சம்பவங் களின் வாயிலாக உணர முடியும்.

குருதேவர் பிறந்த ஊரான கமார்ப்புகூர் முதலான குருதேவ ரோடு தொடர்பு கொண்ட இடங்களைக் காண ம- விழைந்தார். குருதேவரின் அருளாசி பெற்றுக் கமார்ப்புகூர் சென்றபோது, அந்தப் புண்ணியபூமி தெய்விக ஒளியில் தோய்ந்திருப்பதைக் கண்டார். மரங்கள், செடி கொடிகள், விலங்குகள், பறவைகள் அனைத்துமே இத்தகைய தெய்வ ஒளியால் சூழப்பட்டிருந்த தைக் கண்டார். எல்லாவற்றையும் வணங்கித்தொழுதார். ஒரு பூனை ஆன்மிக ஒளிபெற்று பிரகாசித்துக் கொண்டிருப் பதைக்கண்டு பூமியில் விழுந்து அதையும் வணங்கினார். இதை அறிந்த குருதேவர் ம-வின் அன்பு, விபீஷணனின் அன்பைப் போன்றது என்றார். குருதேவரின் சொற்களுக்கிணங்கி, பூரிக்கும் சென்று ஜெகன்னாதரைத் தரிசித்து மகிழ்ந்தார். ஒரு கணம் தன்னைமறந்து ஜெகன்னாதருடைய உருவத்தை இருகைகளா லும் தழுவி மகிழ்ந்தார்.

சாதனை வாழ்க்கையும் சத்சங்கமும் ம-விற்குக் குருதேவரின் இணையடி நிழலில் ஆரம்பமாயிற்று. இப்படி ஆரம்பித்த வாழ்க்கை, வாழ்நாள் முழுதும் தொடர்ந்து நீடித்தது. இது காரணமாக இவரை இல்லறத் துறவி எனலாம். துறவு வாழ்க்கையைத் தழுவுவதற்குக் குருதேவர் தடைவிதித்தபோதும் துறவிகளின் குறிக்கோள்கள் ம-வைக் கவர்ந்தது போல் வேறெதுவும் கவர்ந்ததாகத் தெரியவில்லை. அதனுற்றான் குருதேவரின் மறைவிற்குப் பிறகு துறவினை மேற்கொண்ட அவரது இளஞ் சீடர்களை, அற்புதச் சிஷ்யப் பிள்ளைகளை அனுபவமற்ற இளைஞர்கள் என்று குருதேவரின் இல்லற பக்தர்கள் ஒதுக்கியபோது ம- அவர்களுக்குப் பக்கபலமாக இருந்து அவர்கள் துறவு வாழ்க்கைக்கு ஆதரவு காட்டி, குருதேவரின் கருத்துக்களும், உபதேசங்களும் அவர்களால் தான் உலகில் பரவ முடியும் என்று வற்புறுத்திவந்தார்.

வராகநகரில் ஒரு மடத்தை நிறுவி குருதேவரின் சீடப் பிள்ளைகள் துறவொழுக்கத்தை மேற்கொண்டபோது அவர்களுடன் ம-வும் இருந்து தியானவழிபாடுகளைச் செய்து வந்தார். சில போது தட்சிணேசுவரத்திற்கும் சென்று தோட்டத்தில் அமர்ந்து தியானத்தில் ஈடுபடுவார். பலமுறை யாத்திரை சென்றிருக்கிறார். காசி, பிருந்தாவனம், அயோத்தி முதலான க்ஷேத்திரங்களுக்குச் சென்றார். 1912-ல் தூய அன்னையாருடன் காசிக்குச் சென்றார். பிருந்தாவனம், ஹரித்துவார், ரிஷிகேசம், சுவர்காஸ்ரமம் முதலான இடங்களுக்குச் சென்று அங்குள்ள சாதுக்களுடன் ஓராண்டுக் காலம் வசித்துப் பயனடைந்தார். எனினும் குருதேவரோடு நெருங்கிய தொடர்புகொண்ட கல்கத்தா நகரம் அவரைத் தன்னிடம் ஈர்த்துக்கொண்டது. இதற்குப்பிறகு அவர் தேசயாத்திரை செய்ததாகத் தெரியவில்லை. மார்டன் பள்ளிக்கூடமே அவரது வாழ்விடமாக, வாழ்வின் மையமாக அமைந்தது. குருதேவருடைய வாழ்க்கையையும் அறிவுரைகளையும் தன்னை நாடிவந்த பக்தர்களுக்கு விளக்குவதும், தாம் எழுதிய ஸ்ரீராமகிருஷ்ணரின் கதாமிருதத்தை (அமுதமொழிகள்) படித்துக் காட்டுவதும் அவரது பணியாக அமைந்தது.

அருகிலிருந்து ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகளைக் கேட்கும் பேறு, கற்றோர் பலருக்குக் கிடைத்த போதிலும் இந்த அறிவொளி மிக்க புண்ணியாத்மாவுக்கே அவரது உபதேசங்களை எழுதும் பாக்கியம் கிட்டிற்று. குறிப்புகளை நாளேட்டில் வரையும் ம-வின் இந்தப் பழக்கத்திற்கு மனித

சமுதாயம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறது. பதின்மூன்று வயதுச் சிறுவனாக இருந்த காலத்திலேயே நாளேட்டில் அன்றாட நிகழ்ச்சிகளை வரையும் பழக்கம் ம-விடம் இருந்திருக்கிறது. "இன்று காலையில் எழுந்தவுடன் பெற்றோரை விழுந்து வணங்கினேன்... இன்று பள்ளிக்குச் செல்லும்போது வழியில் உள்ள காளி அன்னையை வணங்கினேன்." இப்படியெல்லாம் எழுதியிருக்கிறார். இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு 1882- ஆம் ஆண்டு குருதேவரைச் சந்தித்தபோதும் இந்த டயரி எழுதும் பழக்கத்தை அவர் விடவில்லை. ஒரு பண்பட்ட கலையாக அவரிடம் பரிணமித்திருந்தது; ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகளுக்கு ம-வை ஆசிரியராக்கியது. டயரிஎழுதுவதோடு உயரிய கற்பனைவளமும், வியக்கத்தக்க நினைவாற்றலும் அவரிடம் இருந்தன. ஐம்பது ஆண்டுகளுக்குப் பின்னரும் குருதேவருடன் தாம் பழகியது, பக்தர்களோடு குருதேவர் பேசியது, சுற்றுபுறச் சூழ்நிலைகள் எல்லாவற்றையும் நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்தும் புலமையுடையவராக விளங்கினர். இந்த அரிய ஆற்றலை வியந்து ஹக்ஸ்லி பின்வருமாறு எழுதியுள்ளது இங்கு நினைவு கொள்ளத்தக்கது.

"குருதேவரிடம் ம- கொண்ட பக்தி செழுமிய அன்பு, குருதேவருடைய உபதேசங்களில் அவர் அடைந்திருந்த ஆழ்ந்த அனுபவ அறிவு, சிறு நிகழ்ச்சிகளையும் சூழ்நிலையோடு நினைவு கூரும் அற்புதமான நினைவாற்றல், தேதி, நாள், கிழமை, ஆண்டு, காலம், நேரம், மாதம், அருகிருந்த மக்களின் பெயர், வேலை முதலானவற்றைத் தெளிவாகக் குறித்து வைத்திருந்த நேர்த்தி, இவைகளை உள்ளது உள்ளபடியே கலையழகோடு வரைந்து வைத்திருந்த பாங்கு, இவையனைத்தும் மகான்களின் வாழ்க்கை வரலாற்றினை விளக்கும் புராண, இலக்கிய உலகில் (hegiography) நிகரற்றதான ஒரு நூலை இயற்றுவதற்குத் துணை புரிந்தன."

குருதேவர் உயிரோடு வாழ்ந்த காலங்களில், நாட்குறிப்பில் எழுதி வைத்திருந்தவற்றை ம- யாருக்கும் காட்டியதில்லை. காரணம் அவர் குறிப்புக்களை எடுப்பதைக் கண்ட குருதேவர் பத்திரிகைகளில் பிரபலப்படுத்தப்பட்ட கேசவ சந்திரரைப் போல் தானும் பிரபலமடைந்தால் என்னவது என்று அஞ்சியதே யாகும். எனவே பத்தாண்டு காலத்திற்கு இந்த மதிக்க ஒண்ணாத பொக்கிஷத்தைப் பற்றி யாருக்கும் தெரிய வழியில்லாமல் இருந்தது. 1897ல் தூய அன்னையாரின் ஆசி பெற்று அவர் ஆதரவுடன் ஆங்கிலத்தில் ஒரு துண்டுப் பிரசுரமாக

வெளியிட்டார். வங்கமொழியில் அதைப் படிக்கக் கேட்ட தூய அன்னையார், குருதேவரே தம் எதிரே நின்று அவற்றை மொழிவதுபோல உணர்ந்ததாகக் கூறி ம-வைப் போற்றினர். அதற்குப் பிறகு ஆங்கிலத்தில் துண்டுக் கட்டுரைகள் இரண்டு பிரசுரமாயின. அவை சுவாமி விவேகானந்தரின் மனமார்ந்த பாராட்டுதல்களுக்கு உள்ளாயின. பொதுமக்களிடையேயும் பிரபலமடைந்தன. எனவே பலருடைய வேண்டுகோளுக் கிணங்கி வங்கமொழியில் நூல்வடிவில் குருதேவரின் அமுதமொழிகளை 'ஸ்ரீராமகிருஷ்ண கதாமிருதம்' என்ற தலைப்பில் ஐந்து பாகங்களாக முறையே 1902, 1905, 1907, 1910, 1932-ஆம் ஆண்டுகளில் வெளியிட்டார்.

குருதேவரின் நேரடிச் சீடரும், ஸ்ரீராமகிருஷ்ணத் துறவாலயத்தின் இரண்டாவது தலைவருமான சுவாமி சிவானந்தர் அமுதமொழிகளைப் படித்துவிட்டுப் பின்வருமாறு கூறினர்: "நல்ல கருத்துக்கள் பேசப்படும்போது ம- அங்கு இல்லையாயின் குருதேவர் அவரை அழைத்து வரச் செய்வார். தாம் பேசுவனவற்றை ம- கருத்தூன்றிக் கவனிக்குமாறு செய்வார். 'உனக்குப் புரிகிறதா?...இதைத் தெரிந்துகொள்...நன்ருகக் கவனி...... மனதில் நினைத்துப் பார்...' என்று தனிப்பட ம-விற்கு உரைப்பார். குருதேவர் இப்படி நடந்து கொண்டதன் நோக்கம் அப்போது எங்களுக்கு விளங்கவில்லை. இப்போது உணர்கிறேம். குருதேவரின் உபதேச மொழிகளைப் பேரளவிற்கு உலகிற்கு வழங்கும் உரிமை ம-விற்கே ஒதுக்கப் பட்டிருக்கிறது."

1905-இல் பள்ளி வாழ்க்கையினின்றும், கல்விப்பணியினின்றும் ம- ஓய்வு பெற்றூர். அதன்பிறகு ஏறக்குறைய இருபத்தேழு ஆண்டுகள் குருதேவரின் அருள் வாக்குகளை உலகிற்கு வழங்கும் உன்னதப்பணியில் முழுமூச்சுடன் செயல்பட்டார். மார்டன் பள்ளியின் நான்காவது மாடியில் ஓர் அறையைத்தம் இருப்பிடமாகக்கொண்டு தம் கையாலேயே சமைத்து உண்டு எளியவாழ்வினை நடத்திவந்தார்.

நெடிதுயர்ந்த உடல், சற்றே அதிகமாகப்பரந்த மார்பு, அறிவுச்சுடர் வீசும் விசாலமான நெற்றி, முழங்காலளவு நீண்ட கைகள், இறைசிந்தனையில் சொக்கிநிற்கும் கண்கள், இறைவனின் பாதகமலங்களில் தோய்ந்த உள்ளம், வெண்மையான அடர்ந்த நீண்ட தாடி, நடுவே வகுக்கை விழுந்த தலை, சாந்தமும், தயையும் தவமும் முகப்பொலிவு—வேதகால

ரிஷியைப்போன்ற கம்பீரமான தோற்றம் - ம்-வுடையது: வேதங்களிலும் அவற்றின் சிகரமான உபநிடதங்களிலும், கீதையிலும், கீழைநாட்டு, மேலைநாட்டுத் தத்துவங்களிலும் ஒப்பற்ற தேர்ச்சி கொண்டு அறிவுப் பிழம்பாகத் திகழ்ந்தார் ம-. இந்த அடிப்படையில் உருவாகியது 'ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்' எனும் நூல்.

'அமுதமொழிகளின்' சுவையுணர்ந்த மாணவருலகமும் மக்கட்சமுதாயமும் ஆன்மிகக் கல்வி பெற இவரிடம் வரலாயின. காலம் செல்லச் செல்ல அன்பர்கள் கூட்டம் அதிகரித்து வந்தது. நாலாவது மாடியில் அமைந்த இவரது அறை நவீன நைமிசாரண்யமாகத் திகழ்ந்தது. இறைநாட்டம் கொண்டு தன்னைச் சுற்றி அமர்ந்துள்ள அன்பர் கூட்டத்திற்கு இரவு பகலெனப் பாராது எல்லாக் காலத்தும், இறை விஷயங்களை விளக்குவார். 'அமுதமொழிகளை' எழுதுவதற்குத் தனக்குத் துணைபுரிந்த பக்தர்களுக்குக் குருதேவரின் உரையாடல்களை இனிமையாக, மென்மையாக இயம்புவார். சில சமயம் நட்டநடு இரவில் பக்கத்தில் உறங்கும் பக்தர்களை எழுப்பி "குருதேவரின் அமுதமொழிகளைச் செவிமடுக்க இதுவே பொன்னான நேரம்" என்பார். இரவின் ஆழ்ந்த அமைதியிலே, விண் மீன்கள் கண்சிமிட்டி தெய்விக சம்பத்தினைப் பெற பக்தர்களை அழைப்பது போலப் பளிச்சிட, வானமாம் விதானத்தின் கீழே, சுற்றிலும் செடி கொடிகளால் சூழப் பெற்ற இயற்கைத்தாயின் மடியிலே, மொட்டை மாடியிலே இறைவனின் அற்புத லீலைகளையும், வாழ்க்கையின் முடிந்த குறிக்கோளையும், குருதேவரின் வாழ்க்கையில், உபதேச மொழிகளில் தாம்கண்ட புதிர்களுக்கான விடைகளையும் விளக்குவார். குருதேவரின் உரையாடல்கள் வேத, புராண, சாஸ்திர, இதிகாச நூல்களின் விளக்கங்களாகத் தமக்கு விளங்கியமையை விவரிப்பார். இப்படிப் பேசுவதையே பெரும்பேறுகக் கருதினர். தம் கருத்துக்களைக் கேட்டு மகிழ்ந்து தம்மைப் புகழ்ந்துரைக்கும் அன்பர்களிடம் "நான் மிக மிகச் சாதாரண மனிதன். ஆனல் ஒன்று. ஒரு பெரிய அமுதக்கடலினருகே நான் வாழ்ந்து வருகிறேன். அதிலிருந்து சில குடம் நீரை எடுத்து வைத்திருக்கிறேன். என்னைக் காணவரும் பக்தர்களுக்கு அந்த அமுத நீரை யளித்து உபசரித்து உரையாடி மகிழ்கிறேன். அவருடைய அமுதமொழிகளைப் பேசுவதன்றி என்னல் வேறு எதைப் பேச முடியும்" என்பார். இந்தப் பணியின் எல்லையை சுவாமி விவேகானந்தர் "சாக்ரடீசின் உரையாடல்கள் அனைத்திலும் வெளிப்படுவது பிளேட்டோ என்பேன். ஆனல் நீர் எழுதி



தூயஅன்னை ஸ்ரீசாரதாமணி தேவியார்


தட்சிணேசுவர ஆலயம்
பின்புற வாசல்
குளம்
வில்வ மரம்
தோட்டம்
'கூஸ்'
குளம்
மாளிகை
தியான அறை (குடிசை)
பஞ்சவடி
ஆல மரம்
பகுல்தாலா படித்துறை
பைன் மரங்கள்
தூய அன்னை வசித்த நஹபத்
முற்றத்திற்குச் செல்லும் வாசல்
கங்கை
தெ.கி.
வ.கி.
வ.
0
100'
200'
300'
400'


முக்கிய வாசல்
கல்கத்தா. 4 மைல்கள்
வ
தோட்டம்
தோட்டம்
குளம்
பாத்திரங்கள் கழுவும் படித்துறை
சமயலறைகள்
சேமிப்பறைகள்
உணவுக் கூடங்கள்
அலுவலகங்கள்
விருந்தினர் அறைகள்
நடன மண்டபம்
காளிகோவில்
முற்றம்
இளைப்பாறுமிடம்
சிவாலயங்கள்
முக்கிய படித்துறை
நஹபத்
பூந்தோட்டங்கள்
ஸ்ரீராமகிருஷ்ணரது அறை
அரைவட்டத் தாழ்வாரம்

# தட்சிணேசுவர ஆலயம்

கல்கத்தாவிற்கு வடக்கே சுமார் ஐந்து மைல் தொலைவில், தட்சிணேசுவரம் என்னும் கிராமத்தில் புண்ணிய கங்கைநதியின் கிழக்குக் கரையில் இவ்வாலயம் அமைந்துள்ளது. இறை பக்தி மிக்க ராணி ராசமணி என்ற அம்மையார் இக்கோயிலைக் கட்டியவர். ஒரு நாள் இரவு அன்னை காளி இவ்வம்மையார் கனவில் தோன்றி தனக்கு ஒரு கோயில் கட்டும்படி உத்தர விட்டாள். அக்கட்டளைக்கேற்ப அவ்வம்மையார் குறுகிய காலத்தில் இக்கோயிலைக் கட்டி, 1855-ஆம் ஆண்டு மே மாதம் 31-ஆம் தேதி புனித நல்வேளையில் தேவியைப் பிரதிஷ்டை செய்தார். கங்கையைக் கடப்போர் கரையில் அமைந்துள்ள அழகு கொஞ்சும் இக்கோயிலைச் சுட்டிக்காட்டி "இந்த அற்புதக் கோயிலைக் கட்டிய ராணி ராசமணியே! உண்மையில் நீ மிகவும் கொடுத்துவைத்தவள். உன்னுடைய புண்ணியத் தினால் அல்லவோ மண்ணுலக மக்கள் இன்று, இந்த நடமாடும் தெய்வத்தை, ஞான தீபத்தை, ஸ்ரீராமகிருஷ்ண தேவரை, காளி கோவிலில் தரிசித்து வழிபட வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது!" என்று புகழ்ந்துரைப்பது வழக்கம். வரலாற்றுச் சிறப்பு மிக்க இக்கோயில் இன்றும் கல்கத்தா நகருக்குப் பெருமையைத் தேடித் தரும் ஒரு கவின்மிகு ஆலயமாகத் திகழ்கிறது. ஆயிரக்கணக்கான பக்தர்கள் இங்குக் கோயில் கொண்டுள்ள அன்னை பவதாரிணி, ராதாகாந்தர், பன்னிரெண்டு சிவா லயங்கள் இவற்றைத் தரிசித்து விட்டுப் பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் வாழ்ந்து வந்த அறையையும், அன்னையார் தங்கியிருந்த நஹபத் என்ற வாத்திய மண்டபத்தையும் தரிசித்துச் சித்தம் தெளிகின்றனர். சிந்தை மகிழ்கின்றனர்.

## வாத்திய மண்டபமும் பன்னிரெண்டு சிவாலயங்களும்

கங்கையைப் படகில் கடந்து இக்கோயிலை அடைந்தால் கரையில் விசாலமான படிக்கட்டுகளைக் கொண்ட அழகிய நீராடுதுறை ஒன்றைக் காணலாம். இப்படிக்கட்டுகள் வழியாக ஏறிவந்தால் கிழக்கே காணப்படுவது காளிகோவிலுக்கு இட்டுச் செல்லும் பெரியதொரு வாயில் மண்டபம். ஸ்ரீராம கிருஷ்ணர் இப்படித்துறைக்கு வந்து நீராடுவார். படித் துறையைத் தாண்டியதும் காணப்படுகின்ற வாயில் மண்டபத்தில் காவலாளிகள் தங்கிக் காவல் புரிந்து வரு

கின்றனர். அவர்களுடைய கட்டில், மரப்பெட்டிகள், இரண்டொரு பாத்திரங்கள் மண்டபத்தின் பக்கங்களில் வைக்கப் பட்டுள்ளன. கோவிலுக்கு வெகுஅண்மையில் வாழ்கின்ற செல்வந்தர்கள், கங்கையில் நீராட வரும்போது இந்த வாயில் மண்டபத்தில் உட்கார்ந்து எண்ணெய் தேய்த்துக் கொண்ட படியே உரையாடுவார்கள்.

சாதுக்கள், பக்கிரிகள், பைராகிகள் முதலியவர்களும் கோயிலுக்குச் சொந்தமான தரும சாலையில் விநியோகிக்கப் படும் பிரசாதத்தைப் பெறுவதற்காகப் பூஜை முடியும் வரை இங்குக் காத்திருப்பார்கள். சில வேளைகளில் காவியுடை அணிந்து, திரிசூலம் தாங்கிய பைரவிகளும் இம்மண்டபத்தில் வீற்றிருப்பதைக் காணலாம். இவர்களும் தரும சாலையில் தரப் பெறும் பிரசாதத்தைப் பெற்றுச் செல்வார்கள். வாயில் மண்டபத்தின் இரு மருங்கிலும் வடக்குத் தெற்காக பன்னிரெண்டு சிவாலயங்கள் உள்ளன. வடக்கே ஆறு சிவாலயங்களும், தெற்கே ஆறு சிவாலயங்களுமாக வரிசையாகக் காட்சியளிக்கின்றன. கங்கையைப் படகில் கடப்பவர்கள், வெகு தொலைவில் வரும் போதே, இந்தச் சிவாலயங்களைச் சுட்டிக் காட்டி, "ராணி ராசமணி கட்டியவை இவை" என்று பேசிக் கொள்வார்கள்.

## உட்பிராகாரமும் விஷ்ணு ஆலயமும்

வாயில் மண்டபத்திற்கும், அதன் இரு மருங்கிலும் அமைந்துள்ள சிவபெருமான் கோயில்களுக்கும் கிழக்கே, தள வரிசை இடப்பட்ட நீண்ட சதுர வடிவமானதொரு பெரிய முற்றம் வடக்குத் தெற்காக அமைந்துள்ளது. இம் முற்றத்தின் நடுவே இரண்டு கோயில்களை அடுத்தடுத்துக் காணலாம். தெற்குப் பார்த்தபடி தெற்கே உள்ள பெரிய கோயிலில் காளி தேவியும் வடக்கே, கங்கையைப் பார்த்த படியுள்ள சிறிய கோவிலில் 'ராதாகாந்தர்' எனப்படும் கிருஷ்ணரும் எழுந்தருளியுள்ளனர்.

விஷ்ணு கோயில் எனப்படும் ராதாகாந்தரது கோவிலில் ராதை, கிருஷ்ணர் இருவருடைய உருவங்கள் இருக்கின்றன. பிரேம பக்தியால் இறைவனோடு ஒன்றுபடுகிற நிலையைக் குறிப்பிடுவது இவ்வுருவங்களாகும். இவ்விரு உருவங்களும் மேற்கு நோக்கியவண்ணம் ஒரு பீடத்தின் மீது நிற்கின்றன. இக் கோவிலின் முன் தளம் சலவைக் கல்லால் ஆனது. கோவிலின் மேற் கூரையில் அலங்காரக் கண்ணாடிச் சரவிளக்குகள் தொங்குகின்றன. இப்போதெல்லாம் அவற்றைப்

பயன்படுத்துவதில்லை. தூசி விழாதபடி பாதுகாக்கச் சிவப்புத் துணியால் மூடி வைத்திருக்கின்றனர். மாலைக்காலத்துச் சூரியனின் கிரணங்கள் திருவுருவங்களின் மீது விழாமலிருக்கக் கனத்த திரைகள் தாழ்வாரத்துப் பெரிய தூண்களின் இடை வெளிகளில் தொங்குகின்றன. ஒரு காவலாளி கோயிலைக் கண்காணித்து வருகிறான்.

கர்ப்பக்கிருகத்தின் வாயிற்படிக்கு அருகே சிறிய பித்தளைப் பாத்திரம் ஒன்றில் சரணாமிருதம் (ஸ்ரீபாத தீர்த்தம்) வைக்கப்பட்டுள்ளது. பகவானை வழிபட்டுத் திரும்பும் பக்தர்கள் இத் தீர்த்தத்தை பக்தியோடு ஏற்கிறார்கள். கோயிலின் உட்புறத்தில் அரியாசனத்தில் ஸ்ரீராதாகாந்தர் வீற்றிருக்கிறார். 1857-58ஆம் ஆண்டில் ஸ்ரீராமகிருஷ்ணர் முதன் முதலில் இந்தக் கோயிலில்தான் பூசாரியாக இருந்தார்.

## அன்னை பவதாரிணி காளி

முக்கியமான கோயில் தென்பகுதியில் உள்ள காளி தேவியின் கோயில். காளி தேவியின் உருவம் அழகோடு விளங்குகிறது. தேவியின் திருநாமம் பவதாரிணி என்பது. பிறவியினின்றும் காப்பாற்றுபவள் என்பது இதன் பொருளாகும். கோயிலின் தளம் கறுப்பும் வெளுப்புமான சலவைக் கற்களால் அமைக்கப் பட்டுள்ளது. படிகள் கொண்ட உயர்ந்த பீடம் ஒன்றும் இங்கே உள்ளது. பீடத்தின் மேல் வெள்ளியினாலான ஆயிரம் இதழ்களைக் கொண்ட வெண் தாமரை மலர். அதன் மேல் தெற்கே தலையும், வடக்கே நீட்டிய கால்களுமாக அவளது தெய்வநாதனான சிவபெருமான் சவம் போல் படுத்திருக்கிறார். சிவபெருமான் பிரம்மத்திற்கு அறிகுறி. சிவபெருமானின் விக்கிரகம் வெள்ளைச் சலவைக் கல்லால் ஆனது. காசிப்பட்டுப் புடவை உடுத்தி, பலவகையான அணிகலன்களை அணிந்து கறுப்புச் சலவைக் கல்லால் செதுக்கப்பட்ட அழகு துலங்கும் முக்கண் தேவியான கரிய நிறக் காளி, இந்தச் சிவபெருமானின் மார்பின் மீது நின்று கொண்டிருக்கிறாள். அவள் நின்று கொண்டிருக்கும் கம்பீரத்தைச் சொற்களால் விளக்க இயலாது.

அவளுடைய பாதங்களை நூபுரம், சிலம்பு, கொலுசு, மெட்டி முதலிய பலவகை அணிகலன்களும், செம்பருத்திமலர், வில்வதளம் ஆகியவையும் அலங்கரிக்கின்றன. பரமஹம்சரின் விருப்பத்திற்கிணங்கி, மதுர்பாபு இந்த அணிகலன்களைத் தேவிக்குக் காணிக்கையாகத் தந்தார். கைகளில் பொன்

வளையலையும் கங்கணத்தையும் தேவி அணிந்திருக்கிருள். முன் கையைப் பொன் வளையலும் காப்பும் தென்னம்பூவும் அணி செய்கின்றன. கையின் மேற்பகுதியில் பனையோலையும் காப்புக் கவசமும், தோள்வளையும் உள்ளன. தோள்வளையின் முகப்பு இப்படியும் அப்படியும் அசைந்து கொண்டே இருக்கிறது. பொன் சரடு, ஏழு வடங்களையுடைய முத்து மாலை, முப்புத்திரண்டு வடங்களையுடைய ஒரு பொன்மாலை, ரத்தின மாலை, முதலியவை தேவியின் கழுத்தை அணி செய்கின்றன. தலையில் கிரீடம், காதுகளில் தோடு, மகரகுண்டலம், மூக்கில் தங்க மூக்குத்தி முதலானவை அவள் அழகுக்கு அழகு செய்கின்றன. முக்கண்ணும் நான்கு கைகளும் படைத்த தேவி இடது கைகளில் மனிதத் தலையையும், வாளையும் தாங்கியிருக்கிருள். வலக்கைகள் வரம், அபயம் என்னும் முத்திரைகளைக் காட்டுகின்றன. வெட்டப்பட்ட மனிதக் கைகள் கோத்த பட்டியையும், வேப்பிலைக் கோவையையும், ஒட்டியாணத்தையும் இடுப்பில் அணிந்திருக்கிருள். அவளது உருவம் அழிவின் பயங்கரத்தையும், தாயின் இளகிய நெஞ்சம் ஊட்டும் நம்பிக்கையையும் ஒன்ருக இணைக்கிறது. ஜகத் சக்தி இவளே. பிரபஞ்ச முழுமையிலும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட இரட்டைப் பொருள்களும் இவளே; அவற்றின் இணைவும் இவளே. படைப்பதும், காப்பதும் அது போன்றே அழிவையும் இவளே தோற்றுவிக்கிருள். அவளுடைய மூன்ருவது கண் ஞானக் கண். அக்கண்கள் தீயோர்க்கு மனத்தளர்ச்சியையும், அடியார்க்கு அன்பையும் தரவல்லன.

கர்ப்பக் கிருகத்தின் ஒரு பக்கத்தில் அதாவது வடகிழக்கு மூலையில் தேவியின் சயன மஞ்சம் (படுக்கைக் கட்டில்) இருக்கிறது. தேவி ஓய்வு கொள்வது இங்குதான். மற்ருெரு பக்கத்தில் சாமரம் தொங்குகிறது. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் இந்தச் சாமரத்தினல் தேவிக்கு எத்தனையோ முறை விசிறி சேவை செய்திருக்கிருர்.

தாமரைப் பீடத்தில் வெள்ளிக் கிண்ணத்தில் தண்ணீர் வைக்கப்பட்டுள்ளது. பீடத்தின் கீழே வரிசையாக உள்ள கலசங்களில் தேவி அருந்துவதற்காகத் தீர்த்தம் நிரப்பப்பட்டுள்ளது. பீடத்தைச் சுற்றி எண்வகை உலோகங்களால் ஆன சிங்கமும், முதலையும், திரிசூலமும், பெண்நரியும், கறுப்புக் கல்லால் ஆன காளையும், அன்னமும் காட்சி தருகின்றன.

பீடத்தின் படிக்கட்டில் வெள்ளியால் செய்யப்பட்ட சிறிய சிம்மாசனத்தில் சாளக்கிராமமும், ஜடதாரி என்ற சாதுவிடமிருந்து ஸ்ரீராமகிருஷ்ணர் பெற்ற எட்டு உலோகங்களால் ஆன ராம்லாலா என்றழைக்கப்படும் குழந்தை வடிவிலான ஸ்ரீராமசந்திர மூர்த்தியின் விக்கிரகமும், பாணேஸ்வரலிங்கமும், மற்றும் பல தேவதா விக்கிரகங்களும் வைக்கப்பட்டுள்ளன.

தேவி தென் முகமாகக்காட்சிதருகிருள். தேவியின் பீடத்திற்குத் தெற்கில் வைக்கப்பட்டுள்ள கலசத்தில் குங்குமம், அர்ச்சனை செய்யப்பட்ட மலர்க் குவியல், மலர்மாலை முதலியவைகள் இடப்பட்டு அக்கலசம் தெய்விக ஒளியோடு பிரகாசிக்கிறது.

கர்ப்பக்கிருகத்தின் மற்றொரு பக்கத்தில் தேவி முகம் கழுவிக் கொள்வதற்காகத் தாமிரத்தாலான பெரிய பாத்திரம் ஒன்றில், தண்ணீர் நிரப்பி வைத்திருக்கிருர்கள். தேவியின் பீடத்திற்கு மேலே உச்சியில் அழகான விதானம்அமைந்திருக்கிறது. தேவிக்குப் பின்புறம், காசிப்பட்டினுல் ஆன அழகான திரை தொங்குகிறது. பீடத்தின் நான்கு பக்கங்களையும் சிறு சிறு வெள்ளித் தூண்கள் தாங்கி நிற்கின்றன. தூண்களின் மேல் விலையுயர்ந்த பளபளப்பான வெள்ளி விமானம் அமைந்திருக்கிறது. விமானம், தேவியின் அழகை அதிகரித்துக் காட்டுகிறது. தேவிக்கு இருபுறமும் கர்ப்பக்கிருகச் சுவர்களையொட்டி இரண்டு தனிப்பகுதிகள் அறைகள் போல் அமைக்கப்பட்டுள்ளன. இவைகளுக்கு உறுதியான கதவுகள் உள்ளன. ஒரு கதவுப்புறம் வாயில்காப்போன் ஒருவன் உட்கார்ந்திருக்கிருன். கோயிலின் வாயிலுக்கருகே ஒரு பக்கமாக பஞ்சபாத்திரத்தில் தேவியின் சரணமிருதம் வைத்திருக்கிருர்கள். கர்ப்பக்கிருகத்தின் உச்சியை நவரத்தினங்கள் கொண்டு இழைத்திருக்கிருர்கள். காளி கோயிலின் உச்சியில் கோபுரங்களைத் தாங்கிய ஒன்பது கோள வடிவமோடுகள் அமைந்துள்ளன.

கீழ் சதுரத்தில் நான்கு சிறு கோபுரங்களும், நடுச்சதுரத்தில் நான்கு சிறு கோபுரங்களும், மேல் சதுரத்தில் ஒரு சிறு கோபுரமுமாக இவை அமைந்துள்ளன. இவற்றுள் ஒரு கோபுரம் இப்பொழுது உடைந்திருக்கிறது. பவதாரிணி கோயிலிலும் ராதாகாந்தர் கோயிலிலும் ஸ்ரீபரமஹம்ஸர் பூஜை செய்திருக்கிருர். ஞான வாழ்விற்குரிய அடையாளங்கள் பலவும் இக்கோயிலில் காணப்படுகின்றன. இயற்கையன்னை (காளி), பரம்பொருள் (சிவபெருமான்), அன்பு (ராதாகாந்தர்) என்னும்

பெருமுற்றத்தின் மற்ற மூன்று பக்கங்களிலும் மடைப் பள்ளிகளும் பண்டக சாலைகளும் அதிதி சாலையும் வரிசையாகக் கட்டப்பட்டிருப்பது புலனாகும். கிழக்கில் பண்டக சாலையும், மகாவிஷ்ணுவிற்கும், தேவிக்கும் நிவேதன உணவைத் தயாரிக்கும் தனித்தனியான மடைப் பள்ளிகளும், அதிதி சாலையும் அமைந்துள்ளன. விஷ்ணு ஆலயத்திற்கு வேண்டிய நைவேத்தியத்தையும், காளி கோயிலுக்கான நைவேத் தியத்தையும் தனித்தனி மடைப்பள்ளிகளில் சமைக்கின்றனர். நாள்தோறும் காலை பூஜைக்குப் பின்னரும், மதியவேளை வரு வதற்குச் சற்றுமுன்னரும் சமைத்த உணவை நிவேதனமாகப் படைக்கின்றனர். படைத்த பின் அதிதிசாலையில் கூடியிருக்கும் பக்தர்களுக்கும், ஏழைகளுக்கும் பிரசாதத்தினை வழங்கு கிறார்கள். இதுபோன்றே தேவி பூஜை முடிந்த பிறகு, பிரசாதத்தை சாதுக்களுக்கும் ஏழைகளுக்கும் கொடுக் கின்றனர். அதிதிசாலையில் சமைத்த உணவை ஏற்க சாதுக்களில் எவரேனும் விரும்பாராயின், அவர்களுக்கு, சமைத்து உண்பதற்கான உணவுப் பண்டங்களை செயலாளரின் அனுமதியின் பேரில் பண்டக சாலையிலிருந்து வழங்குவர். கோயில் அலுவலகத்தில் வேலை செய்பவர்களுக்கும் பிரசாதத்தில் பங்குண்டு. ராணிராசமணியின் உறவினர்களும், நண்பர்களும் வரும்போது விருந்தினர் மாளிகையில் தங்கு வார்கள். அவர்களுக்கும் கோயில் பிரசாதம் அனுப்பப் பெறும். பெரிய மண்டபமாக உள்ள பண்டக சாலைக்குத் தெற்கே பலிபீடம் அமைந்துள்ளது.

பெருமுற்றத்திற்குத் (உட்பிராகாரம்) தெற்கே பல அறைகள் வரிசையாகக் காணப்படுகின்றன. கோயில் அலுவலகமும், கோயில் சிப்பந்திகள் தங்குமிடமும், விருந் தினர் தங்குமிடங்களும் இங்கு உள்ளன. அலுவலகச் செய லாளரும், கணக்குப்பிள்ளையும் இங்கு நிரந்தரமாக வசித்து வருகின்றனர். பண்டகசாலை அதிகாரி, மடைப்பள்ளிச் சிப்பந்திகள், கோயில் அர்ச்சகர்கள், வேலைக்காரர்கள் முதலியோருடைய நடமாட்டம் எப்போதும் இருந்து கொண் டிருக்கும். திருவிழாக் காலங்களில் மட்டுமே பயன்படுத்துகிற பெரிய பெரிய விரிப்புகள், திரைச் சீலைகள் முதலியவற்றை ஒரு சில அறைகளில் பத்திரப்படுத்தி வைத்துள்ளனர். பரமஹம்சருடைய குரு பூஜையின் போது நிவேதனம் சமைக்க சில அறைகளை இன்றும் பயன்படுத்தி வருகின்றனர்.

வடதிசையிலும் சில அறைகள் வரிசையாகக் கட்டப்பட் டுள்ளன. இந்த வரிசையின் நடுவே நுழைவாயில் ஒன்று

காணப்படுகின்றது. ஒரு வாயிற்காப்போன், இங்கே இருந்து கொண்டு எப்போதும் காவல் காத்தபடி இருப்பான். இவ்வழியாகக் கோவிலுக்குள் நுழைகின்ற பக்தர்கள் தம் காலணிகளை இங்கே விட்டுச் செல்வார்கள்.

மேற்கிலுள்ள பன்னிரெண்டு சிவாலயங்களுக்கும் அப்பால் வடமேற்கு மூலையிலுள்ள அறை நம் கவனத்திற்குரியது. ஆன்மிக உலகிலே வரலாற்றுச் சிறப்புடையது. ஆம்! இங்குதான் நம் குருதேவர் தம் வாழ்நாளின் பெரும்பகுதியைக் கழித்தார். இக்காலங்களில் உலகின் மையமாக இவ்வறை திகழலாயிற்று. இவ்வறைக்கு மேற்கே அமைந்துள்ள அரை வட்ட வடிவிலமைந்த தாழ்வாரத்தில் நின்றுகொண்டு மேற்கே பார்த்தவாறு பிரம்மத்தின் ஓர் உருவாகத்தாம் கருதி வழிபடும் கங்கையாற்றைத் தரிசனம் செய்வதைக் குருதேவர் வழக்கமாகக் கொண்டிருந்தார். இத்தாழ்வாரத்தையடுத்து நடைபாதையொன்று வடக்குத் தெற்காகச் செல்கிறது. பாதையின் மேற்கே ஒரு பெரும் பூஞ்சோலையும் அதற்குக் கீழே கற்களால் கட்டப்பட்ட கங்கைக் கரையும் உள்ளன. கரையைத் தொட்டுக் கொண்டு சர்வதீர்த்த சொரூபிணியான புனித கங்கா தேவி கலகலவென்ற ஓசையை எழுப்பிய வண்ணம் ஓடிக் கொண்டிருக்கிற காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்கு வடக்கே நீண்ட சதுர வடிவில் அமைந்த தாழ்வாரமும், அங்கிருந்து பூங்காவை நோக்கிச் செல்லும் பாதையும், பூங்காவும் அமைந்துள்ளன. இப்பூங்காவையடுத்து மாடியுடன் கூடிய வாத்திய மண்டபம் (நஹபத்) காணப்படுகிறது. இந்த வாத்திய மண்டபத்தின் கீழ்ப் பகுதி அறையில் ஸ்ரீராமகிருஷ்ணரின் வணக்கத்திற்குரிய வயது முதிர்ந்த தாயும், தாயாரின் மறைவிற்குப் பிறகு தூய அன்னை ஸ்ரீசாரதாமணி தேவியாரும் வசித்து வந்தனர். இம் மண்டபத்தையடுத்து மகிழ மரங்களும், அவற்றையடுத்து கங்கைத் துறையும் காணப்படுகின்றன, இத்துறையில், அந்த ஊர்ப்பகுதியைச் சேர்ந்த பெண்கள் நீராடுவர். இவ்விடத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரின் அன்னையார் 1877ம் ஆண்டு இறைவனின் திருவடி நிழலை அடைந்தார்.

மகிழ மரங்களைத் தாண்டி வடக்கு முகமாகச் சென்றால் வருவது பஞ்சவடியாகும். ஸ்ரீராமகிருஷ்ணர் கணக்கற்ற ஞான சாதனைகளை இங்குப் பயின்றிருக்கிறார். தம் பக்தர்களோடு இங்கே அடிக்கடி உலவியிருக்கிறார். சிலபோது நள்ளிரவிலும்

இவ்விடம் தேடி வருவதுண்டு. பஞ்சவடியில் ஆலமரம், அரச மரம், வேப்பமரம், நெல்லிமரம், வில்வமரம் ஆகியவற்றைக் காண்கிறோம். இவற்றை ஸ்ரீராமகிருஷ்ணர் தம் கைகளினுலேயே நட்டு வளர்த்தார். பிருந்தாவனத்திலிருந்து தாம் கொண்டு வந்த புனித மண்ணை இவ்விடத்தில் தூவினர். இப் பஞ்சவடிக்கு நேர் கிழக்கில் ஒரு சிறு குடிசை அமைக்கச் செய்து அங்கே நீண்ட காலம் தவத்திலும், ஈசுவர சிந்தனையிலும் ஆழ்ந்திருந்தார். இப்போது இந்தக் குடிசையைக் கட்டிடமாக மாற்றியிருக்கின்றனர்.

பஞ்சவடியில் ஒரு பெரிய ஆலமரமும் அதை ஒட்டினாற்போல் ஓர் அரசமரமும் நன்ருக வளர்ந்து இரண்டும் இணைந்து ஒன்று போலவே காட்சி தருகின்றன. பல்லாண்டுகளாக இணையாக வளர்ந்து நாற்புறமும் கிளைகளைப் பரப்பி, விழுதுகளைத் தொங்கவிட்டு பிரம்மாண்டமாகக் காணப்படுகின்றன. அடர்ந்த மரக்கிளைகளிலும், மரப் பொந்துகளிலும் பல பறவைகளும் உயிரினங்களும் உறைவிடம் அமைத்துக் கொண்டு வாழ்ந்து வருகின்றன. அடிமரத்தைச் சுற்றி செங்கல்லால் கட்டப்பட்ட வட்ட வடிவ மேடை ஒன்று படிகளுடன் காணப்படுகிறது.இந்த மேடையில் மேற்கு முகமாக அமர்ந்து கொண்டு பரமஹம்சர் பல ஞான சாதனைகளைப் பழகியிருக்கிருர். இங்கே இருந்து கொண்டு தாய்ப்பசுவைக் காணுமல் துடிக்கும் கன்றின் ஏக்கத்துடன் இறைவனை எத்தனையோ முறைகள் கூவி அழைத்திருக்கிருர். இன்று இந்தப் புனித மேடைமீது எவரும் அமர இயலாதபடி ஆலமரத்தோடு இணைந்துள்ள அரசமரத்தின் ஒரு கிளை முறிந்து சாய்ந்திருக்கிறது. ஒடிந்து சாய்ந்துள்ள இந்நிலையிலும் இக்கிளை தாய்மரத்துடன் ஒட்டிக் கொண்டுள்ளது. இந்தப் புனிதமான மேடையில் பரமஹம்சருக்குப் பின் உட்கார்த் தகுதியுள்ள மகான் எவரும் இதுவரை தோன்றவில்லை என்பதை நமக்கு இப்படிச் சுட்டிக் காட்டுகிறது போலும்!

### சவுக்கு மரத் தோப்பு—வில்வமரம்—மாளிகை

பஞ்சவடியிலிருந்து இன்னும் சற்று வடக்கே சிறிது தொலைவு நடந்து சென்ருல் இரும்புக் கம்பிகள் இட்ட வேலியைக் காணலாம். இவ்வேலியை அடுத்தாற் போல் நான்கு வரிசைகளில் சவுக்கு மரங்கள் வளர்ந்துள்ளன. இந்தத் தோப்பைக் கடந்து கிழக்காகச் சென்ருல் சிறிது தொலைவில் வில்வ மரம் காணப்படுகிறது. ஸ்ரீராமகிருஷ்ணர் இம்மரத்தின் அடியில் அமர்ந்து கொண்டு கடினமான ஞான சாதனைகள்

பல புரிந்துள்ளார். இதற்கும் அப்பால் உயரமான மதில் சுவர் உள்ளது. சுவரைத் தாண்டி வெளியே அரசினர் வெடிமருந்து தொழிற்சாலை இருக்கிறது.

கோயிலுக்கு அருகில் ஒரு மாடி வீட்டைக் காணலாம். ராணி ராசமணியும், அவர் மருமகன் மதுரபாபுவும், குடும்ப உறவினர்களும் தட்சிணேசுவரக் காளி கோயிலுக்கு வருகை தரும்போதெல்லாம் இந்த மாடி வீட்டில் தங்குவார்கள். அவர்கள் தங்கும் காலங்களில் இந்த மாடி வீட்டின் கீழ்ப் பகுதியிலுள்ள மேற்குப் புற அறையில் ஸ்ரீராமகிருஷ்ணர் தங்கியிருப்பார். அறையிலிருந்தபடியே கங்கா நதியைக் கண்டு மகிழலாம். இங்கிருந்து மகிழ மரங்கள் சூழ்ந்த கங்கைத் துறையை எளிதில் அடைந்து விடலாம்.

### கோவில் பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவும் துறை—காஜிதோலா—இருபெரு வாயில்கள்

வடகோடியில் அமைந்துள்ள இந்த மாடி வீட்டிற்கும் வடக்கு வாயிலுக்கும் இடையில் . நடைபாதை ஒன்று கிழக்காகச் செல்கிறது. பாதையின் இடப் பக்கத்தே படித் துறைகளோடு கூடிய அழகான குளம் ஒன்று காணப்படுகிறது. காளி கோயிலுக்கு நேர் கிழக்கே இக்குளம் இருப்பதால் குளத்தின் படித்துறையில் அமர்ந்து கொண்டு ஆலயத்திற்குரிய பாத்திரங்களைத் துலக்குவார்கள். சற்று தூரத்தில் மற்றொரு படித்துறை இருக்கிறது. அதன் அருகே ஒரு மரம். அந்த மரத்தின் அடிக்கு 'காஜி தோலா' என்று பெயர். நடைபாதை வழியாக மேலும் கிழக்கு நோக்கி நடந்து சென்றால் மற்றொரு வாயிற்கதவு காணப்படுகிறது. பூஞ்சோலையிலிருந்து வெளியே செல்ல இவ்வாயில் பயன்படும். இந்த வாயிலை ஆலம் பஜாரிலிருந்தும் கல்கத்தாவிலிருந்தும் ஆலயத்திற்கு வரும் பக்தர்கள் பயன்படுத்துகின்றனர். இங்கேயும் ஒரு வாயிற் காப்போன் காவல் காத்து வருகிறான். சில சமயங்களில் ஸ்ரீராமகிருஷ்ணர் கல்கத்தாவிலிருந்து இரவில் திரும்பி வர நேர்ந்தால், பூட்டியிருக்கும் கதவை வாயிற் காப்போன் திறந்து விடுவான். அக்காலங்களில் பரமஹம்ச தேவர், வாயிற்காப்போனைத் தம் அறைக்கு அழைத்து வந்து லூசி, பாயசம் முதலான கோவிற் பிரசாதங்களை வழங்கி மகிழ்வார்.

### ஹம்சபுகூர்—குதிரைலாயம்—மாட்டுத் தொழுவம்

பஞ்சவடிக்குக் கிழக்கே ஹம்சபுகூர் என்ற குளம் உள்ளது. இக் குளத்திற்கு வடகிழக்கு மூலையில் குதிரைலாயமும் மாட்டுத்

தொழுவமும் இருக்கின்றன. தொழுவத்திற்குக் கிழக்கேயுள்ள வாயிற்கதவு வழியாகத் தட்சிணேசுவரக் கிராமத்தை அடையலாம். காளி கோவிலில் பணியாற்றும் அர்ச்சகர்களும் அலுவலர்களும், அவர்கள் குடும்பத்தினரும் இவ்வாயிலைப் பயன்படுத்துகின்றனர்.

வைகறைப்போதில், சூரியன் எழுவதற்கு முன்னரேயே கோவிலில் மங்கள ஆரதியின் இனிய இசையும், வாத்திய மண்டபத்திலிருந்து எழும் நாதசுவர இசையும் ஒலிக்க ஆரம்பித்து விடும். இவ்வதிகாலை நேரத்தில் அர்ச்சகர்கள் பூஜைக்காக மலர் பறிக்கத் தொடங்கி விடுவர்.

காளி கோவிலின் தென் கோடியிலுள்ள பூஞ்சோலையில் ஆரம்பித்து வடக்கே மகிழமரச் சோலை வரை கங்கைக்கரையோரமாக ஒரு நடைபாதை செல்கிறது. இப்பாதையின் இருமருங்கிலும் மலர் மரங்கள் உள்ளன. மகிழமரச் சோலையிலிருந்து பஞ்சவடி வரை, பாதையின் இடது பக்கம் மலர் மரங்கள் நிறைந்துள்ளன. ராணி ராசமணி தங்கும் மாடிவீட்டிற்குத்தெற்கே கிழக்கு மேற்காகச் செல்லும் நடைபாதையின் இரு பக்கங்களிலும் மலர் மரங்கள் உள்ளன. மேலும் காஜி தோலாவுக்கும் மாட்டுத்தொழுவம், மாளிகை, ஹம்சபுகூர் இவற்றுக்கும் இடைப்பட்ட இடத்தில் வண்ண வண்ண மலர் மரங்களையும், தீஞ்சுவைக் கனிகளைத் தரும் பழமரங்களையும் காணலாம். புனிதநீர்க்குளமும் இங்கு அமைந்துள்ளது.

பஞ்சவடிக்கும் கங்கையாற்றங்கரைக்கும் இடையே, கரையோரமாக மணம் கமழும் பன்னீர்ப்பூ மரங்கள் உள்ளன. பரமஹம்ச தேவர், பூஜைக்காக மல்லிகை, மாதவி, பன்னீர்ப்பூ ஆகிய மலர்களைச் சேகரிக்க விரும்புவார். மாதவிக் கொடியை பிருந்தாவனத்திலிருந்து இங்கு கொண்டு வந்து அவர் தம் கைகளால் நட்டுவைத்தார். ஹம்சபுகூருக்கும் மாளிகைக்கும் கிழக்கே உள்ள குளக்கரையிலும் சண்பக மரங்கள் பல உள்ளன. அருகில் ரோஜா, காஞ்சன் முதலிய மலர்ச்செடிகள் வளர்ந்துள்ளன. வேலியின் மீதாக சங்குப் பூக்கொடிகள் படர்ந்துள்ளன. அருகே, வேலியோரமாக முல்லைக் கொடிகளும், பாரிஜாத மரமும் இருக்கின்றன. பன்னிரு சிவாலயங்களுக்கு மேற்கே உள்ள செடிகளில் அன்றுடம் மலரும் வெள்ளை அரளி, செவ்வரளி, ரோஜா, மல்லிகை, முல்லை, ஊமத்தம்பூ ஆகிய மலர்களைக் கொண்டு சிவபெருமானைப் பூஜை செய்கின்றனர். ஆங்காங்கே துளசி மாடங்களும்

இருக்கின்றன. நஹபத்துக்குத் தெற்கேயும், பரமஹம்சரின் அறையை அடுத்தும் பல்வகைப் பூச்செடிகள் உள்ளன.

ஸ்ரீராமகிருஷ்ணர் முன்பெல்லாம் பூஜைக்காகப் பூப் பறிப்பது வழக்கம். ஒருநாள் பஞ்சவடிக்குப் பக்கத்திலுள்ள வில்வமரத்திலிருந்து வில்வ தளங்களைப் பறித்துக் கொண்டிருந் தார். அப்போது ஒரு சிறிய மரப்பட்டை உரிந்து வில்வ இலைகளோடு இலையாக வந்துவிட்டது. எல்லா உயிரினங்களி லும் வதியும் கடவுள் அந்த மரத்திலும் இருப்பாராதலால், அந்த மரப்பட்டை உரிந்ததால் அந்தக் கடவுளுக்கு எவ்வளவு துன்பம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்ற உணர்ச்சி பரமஹம் சருக்குத் தோன்றிற்று. அன்று முதல் வில்வ இலைகளைப் பறிப்பதை விட்டுவிட்டார்.

இதுபோன்றே பிறிதொருநாள் பூப்பறிக்கத் தோட்டத் திற்குச் சென்றபோது அவருக்குத் திடீரென்று யாரோ ஒருவர் ஓர் உண்மையை உணர்த்துவதாகப் பட்டது. நன்குகப் பூத்துக் குலுங்கும் ஒவ்வொரு மரமும் விராட்புருஷனை அலங்கரிக்கும் மாலையாக இருப்பதை உணர்ந்தார். இயற்கையே இறைவனுக்கு இரவும் பகலும் பூஜை செய்து வழிபட்டு வருவது போலத் தோன்றியது. அன்று முதல் அவரால் பூப்பறிக்க இயலவில்லை.

## ஸ்ரீராமகிருஷ்ணரின் அறையை அடுத்த தாழ்வாரம்

ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்குக் கிழக்கே தாழ்வாரம் ஒன்று உள்ளது. தாழ்வாரத்தின் தென்பகுதி பெருமுற்றத்தை அதாவது உட்பிராகாரத்தைப் பார்த்தவண்ணமிருக்கிறது. இந்தத் தாழ்வாரம் பெற்றபேறுதான் என்னே! ஸ்ரீராமகிருஷ்ணர் அடிக்கடி பக்தர்களோடு அமர்ந்து கொண்டு இறைவனைப் பற்றிப் பேசியதும் பக்தி மணம் கமழப் பாடல்களைப் பாடியதும் இங்குதான். தாழ்வாரத்தின் வடக்குப் பகுதியிலும் பக்தர்கள் , குருதேவரது பிறந்த நாளை விழாவாகக் கொண்டாடியும், அக்காலங்களில் அவரோடு கூடி பக்திப் பாடல்களைப்பாடியும் மகிழ்ந்துள்ளனர். குருதேவர் பக்தர் களுடன் பலமுறை பிரசாதம் உண்டதும் இவ்விடத்தில்தான். கேசவசந்திரசேனர் தம் சீடர்களோடு வந்து இங்கு பரமஹம்சரைப் பலமுறை சந்தித்திருக்கிறார். பயன்தரும் உரையாடல்களைக் கேட்டிருக்கிறார். பேசியவண்ணம் குருதேவரோடு அவல், பொரி, தேங்காய்த்துருவல், இனிப்புகள் முதலிய பிரசாதங்களைப் பகிர்ந்து உண்டிருக்கிறார். பின்னாளில் சுவாமி விவேகானந்தராகி உலகை ஆன்மிகத்தினால் வசப்

படுத்திக்கொண்ட நரேந்திரரைக் கண்டு குருதேவர் சமாதி நிலையில் ஆழ்ந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க இடமும் இந்தத் தாழ்வாரமேயாகும்.

ஒருபுறம் கண்ணுக் கெட்டிய வரை கங்கையின் புண்ணிய தரிசனம்; மற்றொருபுறம் மலர்களை ஏந்தி இறைவனை வணங்கத் துடிக்கும் வண்ண மலர்ச் சோலைகள்; இவற்றுக்கு இடையே யுள்ள தலத்தில் தெய்வ ஒளி கொண்டு இறைப் பித்துப்பிடித் தவராக அனைத்தையும் மறந்து அன்னையையே சதமாகக் கொண்டு உலவினார் ஒரு மகான்.

## ஆனந்த நிகேதனம்

தட்சிணேசுவரக் காளி கோயில் ஆனந்தத்திற்கு இருப் பிடம்; சாந்தத்திற்கு உறைவிடம்; சச்சிதானந்தத்தின் வாழ் விடம். பந்தமற நம்மைச் சந்ததம் வாழ்விக்கும் கருணைப் பேராறு பாயுமிடம். பிரம்மஸ்வருபிணியும் பிரம்மத்தை மறைக்கும் மாயையுமான மாதேவி, காளிபயங்கரி ஸ்ரீராம கிருஷ்ணரோடு பேசி, சிரித்து, அன்போடு நோக்கியதுமான புண்யபூமி. அன்னையும் குமரனும் உலகுக்கு உண்மையை உணர்த்திய உன்னத ஆலயம் இக்காளி கோயில்.

அன்னை பவதாரிணிக்கும், ராதா காந்தருக்கும், சிவபெரு மானுக்கும் நித்திய பூஜையும் நைவேத்தியமும் அதிதிசேவை யும் அன்றுடம் ஒழுங்காக நடைபெற்று வருகின்றன.

அதிகாலையில் வாத்திய மண்டபத்திலிருந்து எழும் மதுர இசை; மங்கள ஆரதி நடைபெறும்போது ஒலிக்கும் இனிய நாதம் காலை ஒன்பதுமணிக்கும், மதியவேளையிலும், தேவ தேவியர் ஓய்வு கொள்வதற்கு முன்னரும், மாலை நான்கு மணிக்கும் முழங்குகின்றது. மாலையில் நடைபெறும் தீபாரா தனைக் காலத்திலும், இரவு ஒன்பது மணிக்குப் பூஜை நிறை வுற்றவுடன் தேவ தேவியர் பள்ளியறைக்குச் செல்கின்ற நேரத்திலும் மதுரகானம் எழுந்து தன் அமுததாரைகளால் அவ்விடத்தைக் கந்தர்வபூமியாக்கும்.

அன்பர்களே! பக்தர்களே! வாருங்கள். நாமும் இங்கு வருவோம். இறைவியை வழிபடுவோம்! பிறந்த பிறப்பறுத்து, பொய்யாயின வெல்லாம் போயகல, சொல்லற்கரியவனைச் சொல்லால் துதித்து, சிந்தனைக்கெட்டாதவனைச் சித்தத்தில் இருத்தி உரம் பெறுவோம்! உய்வோம். வாருங்கள். குரு தேவர் காட்டிய பாதைவழியே செல்வோம். பயனுறுவோம்.

# ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கைச் சுருக்கம்*

மேற்கு வங்காளத்தில், ஹூக்ளி மாவட்டத்தில் உள்ள செழிப்பான கிராமம் கமார்ப்புகூர். இன்றும் கல்கத்தா நகரினின்று சுமார் ஐம்பது மைல் தொலைவில் அமைந்துள்ள இக்கிராமம் வயல்களும், மாந்தோப்புகளும், சோலைகளும், பனை மரங்களும் சூழப் பெற்று, நடுநடுவே நீர் நிறைந்த குளங்களையும் கொண்டு அழகோவியமாகத் திகழ்ந்து வருகிறது. இங்கே, சென்ற நூற்றுண்டில் மேலே கூரை வேயப் பெற்று, மண்சுவர்களால் எழுப்பப்பெற்ற ஒரு சிறு குடிசையில் அன்புக்கும், பண்புக்கும், அறிவிற்கும் இறைபக்திக்கும் எடுத்துக்காட்டாக ஓர் அந்தணர் குடும்பம் வாழ்ந்து வந்தது. கி. பி. 1836–ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 18–ஆம் தேதி அதிகாலையில் இத்தம்பதிகளுக்கு ஓர் ஆண்குழந்தை பிறந்தது. பெற்ருேர் குழந்தைக்குக் கதாதரன் என்று பெயர் சூட்டினர். தந்தை குதிராம் தமது மூதாதையர்களின் ஈமக்கடன்களைச் செய்ய கயை சென்றிருந்தபோது விநோதமான கனவு ஒன்று கண்டார். அங்கு எழுந்தருளியுள்ள திருமால் அவர் கனவில் தோன்றி, "குதிராம், உனது அளவிலா பக்தி என்னை மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறது. உனக்கு நான் மகனுக அவதரிக்கப் போகிறேன்" என்ருர். அதே நேரத்தில் அவர் மனைவியார் சந்திரமணி தேவியாரும் பல விநோதக் காட்சிகளைக் கண்டார். வீட்டின் அருகில் இருந்த சிவன் கோயிலுக்குச் சென்ற போது ஞானச் சுடர் வெள்ளம் தெய்வ உருவினின்றும் எழுந்து தன் உடலைச் சூழ்ந்து உட்புகுதலை உணர்ந்தார். வியப்பும், அச்சமும் பெருக மயங்கி வீழ்ந்தார். மயக்கம் தெளிந்து எழுந்த போது தாம் கருவுற்றிருப்பதாக உணர்ந்தார். கயையில் குடிகொண்ட இறைவன் அருளால் பிறந்த காரணத்தினுல் இக் குழந்தைக்குக் கதாதரன் என்று பெயர் சூட்டி மகிழ்ந்தனர்.

முல்லைச் சிரிப்பாலும், மழலைச் சொல்லாலும், கொள்ளை அழகாலும் கிராம மக்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டான் கதாதரன். சிறு வயதிலேயே கண்டவை,

---

* முதன் முறையாக ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகளைப் படிக்கும் வாசகர்களின் நன்மைக்காக, சமயவரலாறு காணுத விதத்தில் வாழ்ந்த ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கைச் சுருக்கத்தை இங்கு தந்துள்ளோம். அவரது விரிவான வரலாற்றை, 'ஸ்ரீராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் (465 பக்கங்கள்), 'ஸ்ரீராமகிருஷ்ண சரிதம்' முதலிய புத்தகங்களைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம்.

★ 'பிப்ரவரி மாதம் 17 ஆம் தேதி' - [illegible]

கேட்டவை அனைத்தையும் அப்படியே மனத்தில் பதிய வைக்கும் அற்புதமான நினைவாற்றல் அவனிடம் இருந்தது. பூரிக்குச் செல்லும் ராஜபாட்டையில் இருப்பது கமார்ப்புகூர். ஆதலால் யாத்திரிகர்கள், சாதுக்கள் அங்குத் தங்கிச் செல்வது வழக்கம். அவர்கள் பாடும் புராண இதிகாசப் பாடல்களும், தோத்திரங்களும் இவனுக்கும் மனப்பாடம். விழாக்காலங்களில் கிராம மக்கள் நடித்துக் காட்டும் தெய்வ வரலாற்று நாடகங்களைத் திறந்த கண் திறந்தபடி பார்ப்பான். குயவர்கள் கடவுள் வடிவங்களைச் செய்வதைப் பார்த்து, வீட்டிற்குத் திரும்பியதும் மண்ணைக் குழைத்து அற்புதமாக வடிவங்கள் செய்து, உலர வைத்து, வர்ணங்கள் பூசுவான். பச்சைப் பசேல் என்ற வயல்கள், சலசலவென ஓடும் சிற்றாறுகள், நீலவானம், பறவைகளின் இனிய ஒலி, தவழ்ந்து செல்லும் மேகக் கூட்டம் முதலான இயற்கைக் காட்சிகள் அவனது உள்ளத்தைக் கிளர்ச்சி கொள்ளச் செய்யும். கிராமப் பள்ளிக்குச் சென்று எழுதவும் படிக்கவும் கற்றுக் கொண்டான். கணிதம் மட்டும் அவனுக்கு அவ்வளவாக வராது. பெரியோர்களின் வாழ்க்கையைப் படிப்பதிலோ விருப்பம் அதிகம்.

கதாதரனுக்கு ஏழு வயது நடந்து கொண்டிருக்கும் போது நிகழ்ந்த ஒரு சம்பவம் தெய்விகத்தை வெளிப்படுத்தும் ஒரு அசாதாரண நிகழ்ச்சியாக அமைந்தது. இதைப் பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியதைச் சிறிது பார்ப்போம். "எனக்கு அப்போது ஏழு வயதிருக்கும். பொரியைத் தின்றவண்ணம் வயல் வரப்பின் மீது நடந்து கொண்டிருந்தேன். அண்ணாந்து பார்த்தபோது, ஒரு பெரிய கருநிற மேகம் மிக விரைவாக வந்து ஆகாயத்தை முழுவதுமாக மூடிக் கொண்டது. வெண்பனி போன்ற கொக்குகளின் கூட்டம் கீழே பறந்து சென்றது. நான் உணர்விழந்து விழுந்தேன். ஆடையிலிருந்த பொரி நாற்புறமும் சிதறியது. அந்நிலையில் என்னைக் கண்டவர்கள் என்னை வீட்டிற்குத் தூக்கிச் சென்றார்கள். வெளிப் பார்வைக்கு உணர்வற்றவனாகத் தோன்றினும் அகவுணர்வில் பேரின்பம் துய்த்தேன்." அவரது ஆன்மிக அனுபவத்தின் ஆரம்பம் என இச்சம்பவத்தைக் கூறலாம். மற்றொரு நிகழ்ச்சியும் இங்கு குறிப்பிடத் தக்கது. கமார்ப்புகூருக்கு அருகிலுள்ள கிராமதேவதை விசாலாட்சியை வழிபட மாதர் கூட்டம் ஒன்று ஆனூருக்குச் சென்றது. அவர்களோடு கதாதரனும் சென்றான். தோத்திரப் பாடல்களைப் பாடிக்கொண்டே வந்த கதாதரன் திடீரெனப் பக்திப் பரவசமுற்று நின்றான். உடல் விறைத்தது. புற நினைவுகள் அவனிடமிருந்து விலகின. தேவி

விசாலாட்சியின் பெயரைப் பன்முறை ஓதிய பிறகே தன்னினைவு பெற்றான். தேவியின் திருவடிகளின் மீது தன்மனம் ஒன்றியதன் விளைவே இது என்றான். கடவுட் சிந்தனையில் மனம் இறங்கிய பொழுதெல்லாம் கதாதரன் பரவசநிலை அடையலானான். சிவராத்திரியன்றும் இத்தகைய பக்திப் பரவசநிலை அவனுக்குக் கிட்டியது. அப்போது அவனுக்கு வயது ஒன்பது. உண்ணா நோன்பிருந்து சிவசிந்தனையில் மனதை ஒருமுகப்படுத்தியிருந்த போது நண்பனொருவனின் வேண்டுகோளை ஏற்று சிவவேடம் தாங்கி நாடகத்தில் அன்றிரவு நடிப்பதற்கு உடன்பட்டான். அன்றிரவு சிவவேடம் பூண்டு அரங்கின் மீது வந்து நின்ற அளவில் மனம் வேடம் ஏற்ற சிவனிடம் சென்று ஒன்றியது. புறநினைவுகள் கழன்றுபோய் அகமுகப்பட்டுப் பரவசமுற்றான். அன்றிரவெல்லாம் பரவச நிலை நீடித்தது. மறுநாள் காலையில் தான் உலக நினைவு திரும்பியது.

காலத்தின் ஏடுகள் புரண்டன. பல இன்னல்கள் இக் குடும்பத்தைப் பற்றிக் கொண்டன. தந்தை காலமானது, தமையன் ராம்குமாரின் மனைவி மரணமுற்றது, தாயின் முதுமை, குடும்பத்தின்வறுமை அனைத்தும் கதாதரன் உள்ளத்தில் ஆழ்ந்த உணர்ச்சிகளைத் தோற்றுவித்தன. உலகம் நிலையில்லாதது. உலக மக்கள் அறிவைத்தேடி ஓடுவது பொருளையும், புகழையும் சேர்க்கவே என்ற எண்ணம் மனத்தில் வேரூன்றலாயிற்று. பள்ளிப் படிப்பில் கவனம் செல்லவில்லை. "இக்கல்வியைக் கற்பதால் உண்மையறிவும் இறைபக்தியும் பெற முடியுமா? இறைவனைக் காணவோ, உலக துன்பங்களைக் கடக்கவோ உதவ மாட்டாத இக்கல்வியால் எனக்கு ஆவது என்ன? வெறும் சோறுங் கறியுமே மனிதப் பிறவியின் பயனாக மாட்டா." இப்படி அந்த இளம் உள்ளத்தில் சிந்தனைகள் ஓடின. பள்ளிப் படிப்பிற்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டான். பிற்காலத்தில் கல்வியைப் பற்றிப் பேசுகையில் பணிவு, தூய்மை, சுய நலமின்மை, இறைப்பற்று இவற்றோடு கூடிய கல்வியைத் தாம் பெரிதும் போற்றுவதாகக் கூறியுள்ளார் ஸ்ரீராமகிருஷ்ணர். இறைவனை உணர்வதற்கு ஏட்டுக் கல்வியைவிட ஆன்மிகப் பயிற்சியே பயனுள்ளது என்பதை அடிக்கடி வற்புறுத்தியிருக் கிறார்.

வயிற்றுப் பிழைப்புக்காகக் கல்கத்தா சென்ற தமையனார் ராம்குமார், கதாதரன் கல்வியில் நாட்டமின்றி இருப்பதறிந்து பணியில் தமக்குத் துணைபுரிவதற்காகக் கமார்ப்புகூர் வந்து தம்பியைத் தன்னுடன் அழைத்துச் சென்றார். பிறந்து வளர்ந்து

பதினேழு ஆண்டுகளை இனிமையாகக் கழித்த அருமைக் கமார்ப்புகூரை விடுத்துக் கல்கத்தா சென்றான் கதாதரன். ஒரு மாபெருந் தீர்க்கதரிசியாக, ஞானசெல்வத்தை வாரி வழங்கும் ஞானப் பெருவள்ளலாகக் கதாதரன் திகழப் போவது இம் மண்ணிலாதலால் அவனை இனி ஸ்ரீராமகிருஷ்ணர் என்றே பெருமை வாய்ந்த அன்னார் சிறப்புப் பெயரால் குறிப்பிடுவோம்.

கல்கத்தா நகரில் ஜான்பஜார் எனும் பகுதியில் ராணி ராசமணி எனும் செல்வச் சீமாட்டி வாழ்ந்து வந்தார். கணவர் இறந்த பின்னர் அவர் விட்டுச் சென்ற ஏராளமான செல்வத்திற்கு அதிபதியானார். இறைப்பற்றும், அஞ்சா நெஞ்சமும், செயலாற்றும் திறனும் கொண்ட இவருக்கு இஷ்ட தெய்வமாக இருந்தது காளியன்னை. 'காளியின் அடியிணைகளுக்காக ஏங்கும் ராசமணி' என்று அவரது ஜமீன்அரசியல் காரியங்களில் இடப் படும் முத்திரைகளில் பொறிக்கப் பட்டிருந்தது. காசி யாத்திரை மேற் கொள்ள வேண்டி ஒரு நல்ல நாளைக் குறித்து அதற்கான ஏற்பாடுகளைச் செய்து முடித்தார். புறப்படுவதற்கு முதல் நாளிரவு காளிமாதா அவர் கனவில் தோன்றி கங்கைக் கரையில் ஒரு கோவில் அமைத்து, அன்றாடம் வழிபாடும் நிவேதனமும் படைத்தால், அங்குள்ள திருவுருவில் தாம் குடிகொண்டு அடியார்களுக்கு அருள் புரிவதாக அருளி மறைந்தார். பெரிதும் மகிழ்ந்த ராணி ராசமணி கங்கைக் கரையில் இருபது ஏக்கர் பரப்புள்ள நிலத்தை விலைக்கு வாங்கிக் கோயில் திருப்பணியை விரைவாகச் செய்து முடித்தார். ராம்குமார் துணையில் கோயிலில் தேவியின் பிரதிஷ்டை நடந்து முடிந்தது. ராணி ராசமணியின் வேண்டுகோளை ஏற்று ராம்குமார் கோயிற் பூசாரியானார். ஸ்ரீராமகிருஷ்ணரும் தமையனுடன் தங்கி வரலானார். தட்சிணேசுவரமும், காளிகோயிலும், பஞ்சவடியின் எழில்மிகு தோற்றமும், புனிதகங்கையும் அவர் உள்ளத்தைக் கவர்ந்தன. தமையனாரின் பரிவு மிக்க பராமரிப்பு, ராணி ராசமணியும், அவரது மருமகன் மதுர்பாபுவும் காட்டிய மரியாதை கலந்த அன்பு, அருள் சுரந்து ஆட்கொள்ளக் காத்து நிற்கும் காளியன்னையின் தோற்றம் அவர் உள்ளத்தை நெகிழ்வித்தன. வந்த மூன்றும் மாதத்தில் அவர் காளிகோயிற் பூசாரியானார். ஸ்ரீராமகிருஷ்ண அவதாரத்தின் நோக்கம் ஈடேறும் சமயம் துவங்கியது.

பூசாரி வேலையில் அமர்ந்த ஸ்ரீராமகிருஷ்ணர் தன்னை முழு மனதுடன் அப்பணியில் ஈடுபடுத்திக் கொண்டார். அதி காலையில் எழுந்து கங்கையில் நீராடுவார். அன்னையின் புகழைப்

பாடியபடியே நந்தவனத்தில் பூக்கொய்வார். மாலைகள் கட்டுவார். கங்கை நீரைக் குடங்களில் ஏந்திவந்து அன்னையைக் குளிப்பாட்டுவார். ஆடை ஆபரணங்களை அணிவித்து அன்னையின் அழகுக்கு அழகு செய்வார். ராமப்பிரசாதர் கமலாகாந்தர் பாடிய பாடல்களைப் பக்தியோடு பாடுவார். இரவில் வெள்ளிக் கட்டிலில் அன்னையைத் தூங்க வைத்துத் தாலாட்டுவார். காலை ஒன்பது மணிக்குத் தொடங்கும் வழிபாடு மாலை வரைக்கும் சிலபோது இரவெல்லாம் நீடிக்கும். அல்லும் பகலும் அவள் நினைவில் தோய்ந்திருந்தார். அன்னையிடம் நெருக்கம் அதிகமாக அதிகமாக அவள் வெறும் கல்லாயிருக்க முடியாது என்ற எண்ணம் அடிமனத்தே உருவாகத் தொடங்கியது. நேருக்கு நேர் அவளைக் காண வேண்டும் என்ற அவா எழுந்து அவரை ஆட்டிப் படைத்தது. ராமப்பிரசாதருக்கு அருள்புரிந்தவள் ஏன் தனக்கும் அருளக் கூடாது? எல்லா வல்லமைகளையும் உடைய தெய்வம் விக்ரகத்தில் வரக்கூடாதா? உடம்புகளைப் படைக்கும் இறைவி ஓர் உடல் கொண்டு காட்சிதர மாட்டாளா? என்று ஏங்கினார். அழுதார். புலம்பினார். தரைமீது விழுந்து புரண்டார். கதறினார். நாட்கள் மாதங்களாயின. அன்னையின் காட்சி கிட்டவில்லை. "அவளைக் காண மாட்டாமையால் என் உள்ளத்தில் ஏற்பட்ட வேதனை இவ்வளவு அவ்வளவு அல்ல. ஈரத்துண்டை முறுக்கிப் பிழிவது போல யாரோ என் உள்ளத்தைப் பிழிவதை உணர்ந்தேன். வாழ்வதில் பயன் இருப்பதாகத் தெரியவில்லை. உயிரை மாய்த்துக் கொள்ள எண்ணி வாளைக் கையிலெடுத்தேன். அக்கணமே அன்னை காட்சி தந்தாள். கோயிலும் கட்டிடங்களும் கதவுகளும் எல்லாமே மறைந்தன. எங்கணும் ஒளி வெள்ளம். ஒளிப் பேரலைகள் பெருமுழக்கத்தோடு என் மீது மோதிய வண்ணமிருந்தன. மூச்சுத் திணறி நினைவிழந்து விழுந்தேன். இக்காட்சிக்குப் பிறகு கற்சிலை மறைந்தது. உயிர்த் துடிப்பு மிக்க அன்னை அங்கு எழுந்தருளினாள். என் கை மீது தேவியின் மூச்சு படுவதை உணர்ந்தேன். உண்மையாகவே உணர்ந்தேன். இரவில் விளக்கேற்றியபின் தெய்வக் கோலத்தோடு அவள் உலாவுவாள். உற்று உற்றுப் பார்ப்பேன். அவள் நிழல் சுவரில் விழுந்ததில்லை. நட்டநடு இரவிலே, சிறுமிக்குரிய களிப்புடன், காற்சிலம்புகள் கலகலக்க அவள் மாடிக்குச் செல்வதைக் கண்டிருக்கிறேன். படபடக்கும் நெஞ்சத்தைச் சுமந்தபடி பின் தொடர்வேன். மாடி வராந்தாவில் நின்று கொண்டு அந்தக் கருநிறத்தழகி கூந்தல் தவழ கங்கையை நோக்கிக் கொண்டிருப்பாள்." இந்தக் காட்சிகளினால் தெய்வம் மனிதன் என்ற நிலை போய், அம்பாள் பக்தன் என்ற நிலையும்

போய், தாய் சேய் என்ற நெருக்கம் ஏற்பட்டது. அனவரதமும் அம்மா! அம்மா! அம்மா! தான். தாயைக் காண ஏங்கும் குழந்தையின் துடிப்பே ஸ்ரீராமகிருஷ்ணரிடம் மேலோங்கி நின்றது.

இது முதற்கொண்டு இறைவழிபாடுகளில் மரபுகளைப் பின் பற்ற அவரால் முடியாது போயிற்று. தேவிக்கு இடும் மலர்களைத் தலையிலும், தோளிலும், சில போது தம் காலிலும் இட்டுக் கொள்வார். பிடி அன்னத்தைக் கையிலேந்தி அன்னைக்கு ஊட்ட முயல்வார். "ஓஹோ! நான் முதலில் உண்ண வேண்டுமா? சரிதான்." என்று தாமே உண்பார். அருகில் பூனையைக் கண்டால் "வா அம்மா இந்தா நிவேதனம்" என்று உணவைப் பூனைக்குப் படைப்பார். தேவிக்குரிய வெள்ளி மஞ்சத்தின் மீது ஏறிப்படுப்பார். ஒரு சமயம் மதுர்பாபு ஆயிரம் ரூபாய் மதிப்புடைய சால்வை ஒன்றை ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அன்பளிப்பாக வழங்கினர். அதை ஸ்ரீராமகிருஷ்ணர் விருப்புடன் போர்த்திக் கொண்டு ரசித்தபடியே அங்குமிங்கும் உலாவினர். மறுகணம் அதை வீசி எறிந்தார். காலால் மிதித் தார். "கடவுளை நான் அறிய இது உதவுமா? இதைப் போர்த்திக் கொண்டதும் பிறரைக் காட்டிலும் உயர்ந்தவன் என்ற எண்ணம் உண்டாகிக் கடவுளை விலக்கி விடும்" என்றவாறு சால்வையின் மீது காறித் துப்பினர். இச்செயல்களினுல் இவரைப் பித்தரெனக் கோயில் அதிகாரிகள் கருதலாயினர். மதுர்பாபுவிடம் தெரிவித்தனர்.

இந்நிலையில் அன்னையார் சந்திரா தேவியார் மூத்தமகன் ராம்குமார் காலமான கவலையில் மூழ்கியிருந்தார். தட்சிணே சுவரத்தில் கதாதரன் பைத்தியம் பிடித்துத் தாறுமாறாக நடந்து கொள்கிருன் என்று கேள்விப்பட்டு வெந்த புண்ணில் வேல் குத்தியதுபோல் வருத்தமுற்ருர். கமார்ப்புகூர் வருமாறு அழைப்பு விடுத்து ராமேஸ்வர் என்ற மகனை அனுப்பினர். ஸ்ரீராமகிருஷ்ணரும் அன்னையின் அழைப்பை ஏற்றுப் பிறந்த மண்ணை நோக்கித் திரும்பினர். அவருக்கு அப்போது வயது 23. அவருக்குத் திருமணம் செய்து பார்க்க அன்னையின் உள்ளம் ஆசைப்பட்டது. வறுமை காரணமாக மணப்பெண்ணுக்குப் பெரும்பொருள் கொடுக்க இயலாமையால் நல்ல மருமகள் கிடைக்காது அண்ணன் ராமேஸ்வரும் அன்னை சந்திரா தேவியாரும் வருந்தினர். இவர்களின் வாட்டத்தையுணர்ந்த ஸ்ரீராமகிருஷ்ணர் ஒருநாள் மனம் அகமுகப்பட்ட நிலையில் "ஜெயராம்பாடி செல்லுங்கள். அங்கே எனக்கென்றே குறித்து

காண விழைந்த ஸ்ரீராமகிருஷ்ணர் பைரவிபிராம்மணியைக் குருவாக ஏற்றார். தாந்திரீக நூல்கள் கூறுகின்ற 64 தந்திர முறைகளிலும் தேர்ச்சி பெற்றார். ஆண்டான்-அடிமை, தாய்-சேய், காதலன்-காதலி, நண்பன் முதலான பல பாவனைகளில் இறைவனைக் கண்டு மகிழ்ந்தார். பழுத்த வைஷ்ணவியான பைரவி பிராம்மணி தாம்கற்ற சாஸ்திர அறிவின் மூலமும், சுய அனுபவங்கள் மூலமும் ஸ்ரீராமகிருஷ்ணரை அவதாரமென உணர்ந்து, சபை கூட்டித் தக்க சான்றுகளுடன் நிருபித்தார். கௌரி பண்டிதர் முதலான ஞானிகள் பிராம்மணியின் கூற்றை ஏற்று ஸ்ரீராமகிருஷ்ணரைப் பணிந்தனர். அன்று முதற்கொண்டு நாலாப் பக்கங்களிலிருந்தும் மக்கள் வெள்ளம் தட்சிணேசுவரம் நோக்கிப் பெருகத் தொடங்கிற்று.

தந்திர சாதனைகள் நிறைவுற்ற வேளையில்தான் தோதாபுரி எனும் அத்வைத வேதாந்தி ஒருவர் தட்சிணேசுவரம் வந்து சேர்ந்தார். 40 ஆண்டுகள் சாதனைகள் பழகி, நிர்க்குண பிரம்ம ஞானத்தை நன்குணர்ந்து அதில் மூழ்கித்திளைத்தவர் தோதாபுரி. ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அத்வைத ஞானத்தைப் போதிக்க இவர் முன்வந்தார். தோதாபுரி பொய்யுறு மாயையைப் பொய்யெனக் கொண்டவர்; உலகைத் துறப்பதே உயர்வானது என்பவர்; இல்லாத மாயை என்செயவல்லது என்று கேட்பவர். ஸ்ரீராம கிருஷ்ணரோ மாயை பிரம்மமன்றி வேறில்லை; பிரம்மமும் சக்தியும் ஒன்றே என நம்பியவர். இறைக் காட்சிக்குப் பின்னர் உலகமே பிரம்ம மயமானது என்று உணர்ந்தவர். தீவிர ஞானி தோதாபுரியால் அன்பும் பக்தியும் இறை மயமானவை; இறைவனிடம் எளிதாக இட்டுச் செல்பவை என்ற கருத்தை ஏற்க முடியவில்லை. உள்ளமுருகிக் கண்களில் நீர் வழியக் கை தட்டி அன்னையைப் பாடல்களால் பாடி ஸ்ரீராமகிருஷ்ணர் வழி படும் போது தோதாபுரி 'என்னப்பா! சப்பாத்தி தட்ட ஆரம்பித்துவிட்டாயா?' என்று கேலி செய்வார். ஆயினும் இப் பாட்கள் அவரது உள்ளத்தை நெகிழ வைத்தன என்பதை அவர் மறுத்ததில்லை.

அத்வைத சாதனம் பழகத் தகுதி வாய்ந்தவர் ஸ்ரீராம கிருஷ்ணர் என்பதை தோதாபுரி நன்கு உணர்ந்தார். அன்னைப் பித்துக் கொண்ட இந்த இளைஞருக்கு, பித்துக்கு அப்பாற்பட்ட மோன நிலையைக் கற்றுத் தர விரும்பினார் தோதாபுரி. அவரிடம் துறவறம் ஏற்று பஞ்சவடியில் இருக்கும் குடிசைக்குக் குருவோடு சென்றார் ஸ்ரீராமகிருஷ்ணர். மந்திரங்களை ஓதியபின் குணங்குறிகளற்ற பிரம்மத்தைத் தியானிக்கு

மாறு தோதாபுரி கூறியபோது ஸ்ரீராமகிருஷ்ணரால் அதைச் செய்ய இயலவில்லை. தியானத்தில் அமர்ந்தவுடன் அன்னை காளியின் வடிவமே மீண்டும் மீண்டும் எழுந்தது. தோதாபுரி ஸ்ரீராமகிருஷ்ணரின் புருவமத்தியில் சிறிது கீறி இங்கே தியானம் செய் என்றதும் பேத உணர்வுகள் ஒடுங்கி அத்வைத நிலையில் சமாதியில் ஆழ்ந்தார் ஸ்ரீராமகிருஷ்ணர். மூன்று நாட்கள் தொடர்ந்து சமாதியில் திளைத்திருக்கும் சிஷ்யரை வியப்போடும் அச்சத்தோடும் பார்த்தார் தோதாபுரி. 'ஹரி ஓம்' எனும் மந்திரத்தைப் பெருங்குரலில் எடுத்தோதி ஸ்ரீராமகிருஷ்ணரை விவகார உலகிற்கு இழுத்து வந்தார். செயற்கரியது செய்த தீரனைப் பேரானந்தத்துடன் தழுவிக் கொண்டார். "செயலற்ற போது அதைப் பிரம்மம் என்கிறேன். அதுவே படைத்தல், காத்தல், அழித்தல் எனும் செயல்களோடு கூடியதாய் இருக்கும் போது சக்தி என்கிறேன். மாயை என்கிறேன். பிரம்மமும் சக்தியும் ஒன்றே. பாலும் அதன் வெண்மையும் போல. ஒன்றை விடுத்து மற்றொன்றை நினைக்க முடியாதது போல" என்று தம் அனுபவ உண்மையைக் கூறிய சீடன் கூற்றை ஏற்றார்; மாறுபட்டவரானார். பதினொரு மாதங்கள் தட்சிணேசுவரத்தில் தங்கி ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அத்வைத ஞானத்தைக் கற்றுத் தந்ததோடு தானும் மாயை பற்றிய புது விளக்கத்தைக் கற்றுக் கொண்டு விடைபெற்றுச் சென்றார் தோதாபுரி.

தோதாபுரி சென்ற பின்னர் ஆறுமாத காலம் ஸ்ரீராமகிருஷ்ணர் நிர்விகல்ப சமாதியில் இருந்து வந்தார். அந்நிலையில் மனம் என்பது இல்லாமல் போயிற்று. நான், நீ, எனது, உனது என்ற உணர்ச்சிகள் நீங்கி, ஒன்று, பல என்பதும் மறைந்து உரைக்கவும் உணர்த்தவும் இயலாத அகண்ட மெய்ஞான அனுபூதி மலையில் ஏறி, அதன் உச்சியை அடைந்தார். இந்த அத்வைத ஞானம் அடைந்ததன் பயனாகச் சமயங்கள் அனைத்தும் பூரணத்தை அடையச் செய்யும் நெறிகள் என்பதை உணர்ந்து அவற்றின் உண்மை காண விழைந்தார். முகம்மதியம், கிறித்தவம் முதலாம் சமய நெறிகளில் கருத்தை இருத்தி, அவ்வச் சமயத்திற்குரிய சாதனைகளை மேற்கொண்டார். இது எவரும் செய்து காட்டாத செயற்கரிய செயலாகும். ஏசுவை, கிறித்துவ முறைப்படி வழிபட்ட போது நான்காம் நாளில் ஏசுகிறிஸ்துவின் அருட்காட்சி ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் கிட்டியது. மனித இனத்தை உய்விக்க அவதரித்த பூரண அன்பின் வடிவமான ஏசு அவர் முன் தோன்றினார். ஸ்ரீராமகிருஷ்ணரை அணுகி அவருள் ஒன்றினார். சமாதி நிலையடைந்த ஸ்ரீராமகிருஷ்ணர் சாதாரண நிலைக்கு மீண்டதும்

ஏசுவைக் கடவுளின் அவதாரம் என்று போற்றினர். இது போன்றே முகம்மதிய சாதனையைப் பழகி அதன் மூலமும் இறைக் காட்சி கிடைக்கப் பெற்றார்.

இச்சமயம் குருதேவர் ஷோடசி வழிபாட்டை நடத்த விரும்பினர். அன்னை சாரதையையே ஷோடசியாக வழிபட நினைத்து குறிப்பிட்ட நாளில் தமது அறையில் அதற்கான ஏற்பாடுகளைச் செய்து அன்னையை நடுஇரவு அங்கு வருமாறு பணித்தார். அன்னையை ஆசனத்தில் அமரச்செய்து வழிபாடுகளை முறையாகச் செய்து முடித்தபோது என்ன ஆச்சரியம்! அன்னை சமாதியில் மூழ்கியிருந்தார். வழிபாட்டினை முடித்த குருதேவரும் சமாதியில் ஆழ்ந்தார். நெடுநேரத்திற்குப் பிறகு இருவருக்கும் சமாதி கலைந்தது. அதுவரை தாம் செய்து வந்த சாதனைகளையும், ஜெபமாலையையும் அன்னையாரின் திருவடிகளில் சமர்ப்பித்தார். ஷோடசி பூஜையோடு ஸ்ரீராம கிருஷ்ணரின் ஞான சாதனைகள் முடிவுற்றன.

இப்போது ஸ்ரீராமகிருஷ்ணர் எனும் தெய்வத் தாமரை ஆயிரம் இதழ்களை விரித்து மலர்ந்து நின்றது. வண்டுகளை எதிர் நோக்கி நின்றது. ஞானக் காட்சியில் தாம் கண்ட தூய மெய்யடியார்களுக்காக, சிஷ்யப் பிள்ளைகளுக்காகக் காத்துக் கொண்டு நின்றார். வழிமேல் விழிவைத்து உண்மையான பக்தர்களின் வரவுக்காக ஏங்கித் தவித்தார். அன்னையை வேண்டிக் குழைந்தார்.

ஆன்மிகத் தாகம் கொண்ட பெரியோர்கள் வரத் துவங்கினர். ஞானதாகம் கொண்ட இளைஞர்கள் படையெடுக்கலாயினர். பண்டிதர்கள், பெண்டிர்கள், பிரமுகர்கள், ஆசிரியர்கள், வியாபாரிகள் என மக்கட் பெருவெள்ளம் வந்த வண்ணமிருந்தது. அவரும் இரவு பகல் நோக்காது அறிவுரை வழங்கினர். எளிமை, பணிவு, இனிமை எனும் பண்புகள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் தஞ்சம் புரிந்து பெருமையுற்றன. ஆன்மிகம் எனும் இழைகளால் நெய்யப் பெற்றதாக அவருடைய தோற்றம் ஒளிகொண்டு விளங்கிற்று. அவரைக் கண்களால் காண்பதே பிறவியின் பயன் என்று மக்கள் கருதினர். "விவேக வைராக்கியங்களினால் உலகத்தினின்றும் எட்டாத தொலைவில் இருந்து வரும் இம்மகான், தம்மிடம் வரும் பக்தர்கள் கூறும் துன்பங்களை அக்கறையோடு கேட்கிறார்; உலகப் பற்றுகளால் எற்றுண்டுவருந்தும் மக்களின் புலம்பல்களுக்குச் செவி சாய்க்கிறார்; மகனை இழந்தவர்கள், பெற்றோரை இழந்தவர்கள், மனைவியை இழந்தவர்கள், என

வாழ்வில் துடிப்பினை இழந்த அனைவருக்கும் பக்திப் பாடல்களால் வாழ்வில் பிடிப்பினைத் தோற்றுவிக்கிறார்; தாழ்த்தப்பட்டோர் வாழுமிடங்களுக்குச் சென்று அவ்விடங்களைப் பெருக்கி தூய்மைப்படுத்துகிறார்; ஜாதிமத வேறுபாடின்றி அனைவரையும் அரவணைக்கிறார்!" உலகம் இப்படி அவரைப் பற்றிக் கூறத் தொடங்கியது. மஜூம்தார் கூறுகிறார்; "என் மனம் முழுதும் மந்திர சக்தியால் கட்டுண்டது போல் அவரிடம் வசப்பட்டு நிற்கிறது. நடவடிக்கைகளில், பழக்கவழக்கங்களில், ஐரோப்பியரைப் பின்பற்றுபவன்; நாகரிக வளப்பமுடையவன்; இயல்பாகவே தன்னல நோக்கு மிக்கவன்; பகுத்தறிவாளிகள் என்று தம்மை அழைத்துக் கொள்ளும் மேதாவிகளில் ஒருவனாக என்னை நினைப்பவன்; டிஸ்ரேலி, மாக்ஸ்முல்லர் முதலான மேனாட்டு அறிஞர்களையும், அவர்கள் மதாசார்யர்களையுமே மதிப்பவன்; அவரது உபதேசங்களைக் கேட்டிருந்த நான் இந்த எளிய மனிதர் முன் கைகட்டி, வாய்பொத்தி, மணிக்கணக்காக அவரது திருவாயினின்றும் வருகிற மொழிகளைக் கேட்க ஏன் இப்படி அமர்ந்து கொண்டிருக்கிறேன்?" இவ்வார்த்தைகள் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றி அக்காலப் படித்த மக்கள் கொண்டிருந்த கருத்தை வெளிப்படுத்துவதாக உள்ளன.

தேசீயத்தலைவர் கிரிஸ்டதாஸ் பால், நாவலாசிரியர் பங்கிம் சந்திரர், வங்கநாடகத் தந்தை கிரீஷ், பிரம்ம சமாஜத்தலைவர் கேசவசந்திரசேன், கல்விக்கடல் வித்யாசாகர், பண்டிதர் சசதர், விஜயகிருஷ்ண கோசுவாமி, பிரதாப்சந்திர மஜூம்தார், போன்றோர் ஸ்ரீராமகிருஷ்ணரின் நட்புறவால் பயனடைந்தவர்களில் ஒரு சிலர். இல்லறத்தாரும் இளைஞர்களும் என ஸ்ரீராமகிருஷ்ணருடைய சீடர்கள் இருவகையினர். இளைஞர்கள் பிற்காலத்தில் துறவினை மேற்கொண்டனர். இல்லறச் சீடர்களில் சுரேந்திரர், மஹேந்திரர் (ம), நாகமஹாசயர், கிரீஷ் கோஷ் முதலியவர்கள் முக்கியமானவர்கள், இவர்களில் மஹேந்திரர் 1882-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் குருதேவரைச் சந்தித்தார். உலகச் சமய வரலாற்றிலே புத்தர், ஏசுகிறிஸ்து என்பாரது வகுப்பினைச் சார்ந்தவராக ஏற்கப்படும் ஒரு மகானின் மொழிகளை நேரே இருந்து எழுதியது இவரது சிறப்பாகும். ஞானதாகமுள்ள பல இளைஞரோடு நேரிற் பழகி, அவர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரது உபதேசங்களைப் படிப்பதற்கு ம- ஒரு கருவியாக இருந்தார். காந்தம் இரும்பைக் கவர்வதுபோல் இளைஞர் கூட்டத்தைக் கவர்ந்திழுக்கலானார் ஸ்ரீராமகிருஷ்ணர். அதன் பயனாக குருதேவர் ஆனார். இவருடைய குறிப்பிடத்தக்க

சீடர்கள் 16 பேர். நரேந்திரன், ராக்கால், பாபுராம், சரத், சசி, தாரக், லாட்டு, மூத்தகோபால், நிரஞ்ஜன், யோகின், கங்காதரன், சாரதா பிரசன்னன், ஹரி, சுபோத், காளிபிரசாத், ஹரி பிரசன்னன்.. இப்பதினறு சீடர்களின் சீலம், தியானம், தவம், யோகம், நேர்மை, உழைப்பு, தியாகம் எனும் பண்புகளும், குருதேவரின் போதனைகளும் சேர்ந்து ஸ்ரீராமகிருஷ்ண மடங்கள் தோன்றுவதற்கும் உலகெங்கிலும் கிளைகள் விட்டுப் படர்வதற்கும், கல்விச் சாலைகளும், மருத்துவச்சாலைகளும் நூல் நிலையங்களும் தோன்றுவதற்கும் பணிசெய்வதையே கடமையாகக் கொண்டு இன்றைய துறவிகள் அவ்விடங்களில் தொண்டாற்றுவதற்கும் அடித்தளமாக அமைந்தன.

1885-ஆம் ஆண்டு குருதேவருக்குத் தொண்டையில் புண் தோன்றி அது நாளடைவில் புற்றுநோயாக முற்றியது. தட்சிணேசுவரத்தைவிட்டுக் காசிப்பூர் தோட்டமாளிகைக்கு அடியார்கள் குருதேவரை இட்டுச் சென்றனர். பக்தர்களும், இளந்துறவிச் சிஷ்யர்களும் தூய அன்னையாரும் இரவு பகல் குருதேவருக்குச் சேவை செய்தனர். 1886-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 16-ம் தேதி ஸ்ரீராமகிருஷ்ணர் மஹாசமாதியடைந்தார்.

குருதேவரின் பிரிய சிஷ்யரான சுவாமி விவேகானந்தர் ஸ்ரீராமகிருஷ்ணர் தோன்றியதன் பயனாக விளைந்த, விளையப் போகும் அற்புதங்களை விளக்கியுள்ளார். "ஸ்ரீராமகிருஷ்ணரின் அவதாரம் இந்த 20-ஆம் நூற்றாண்டிலே, விஞ்ஞான யுகத்திலே, மதத்தின் பெயரால் ஏற்படும் மதப் பூசல்களை யெல்லாம் நீக்கும். இன்று நாத்திகக் கருத்துக்கள் ஞானமெனும் வாளினல் வெட்டி வீழ்த்தப்பட்டன; மதத்தின் பெயரால், இனத்தின் பெயரால் பிளவுப்பட்டுக்கிடந்த நாடு பக்தியால் ஒற்றுமை கண்டது. பெண்ணிற்குப் பெருமையும் பேராதரவும் தரப் பெற்றன; ஆண், பெண், ஏழை, பணக்காரன், படித்தவன் படியாதவன், அந்தணர், அந்தணரல்லாதவர், உயர்ந்தோர், தாழ்ந்தோர், தன்சமயம், பிறசமயம் என்ற மேடுபள்ளங்கள் தகர்க்கப்பெற்றன......... இவ்வவதாரம் மக்கட்சமுதாயம் ஒரே குலமாக வாழ வேண்டும் என்றும்; வேறு வேறு மதப்பற்று கொண்டவர்களாக இருந்தாலும் முடிவில் அடையப்படும் தெய்வம் ஒன்றே என்பதைப் பறைசாற்றவும் தோன்றியதாகும். இதுவே அவதாரத்தின் சிறப்புத் தன்மை. தமது ஒரே வாழ்க்கையில் எல்லா அனுபவங்களையும் பெற்று, அவற்றின் வழியாக மக்கள் உள்ளத்தில் இறை நம்பிக்கையை ஊட்டி வாழ்க்கையைப் பொருளுள்ளதாக ஆக்கியது அவர் நமக்களித்த பெருங்கொடை எனலாம்.

தவ கதாம்ருதம் தப்தஜீவனம்
கவிபிரீடிதம் கல்மஷாபஹம் ।
ச்ரவணமங்களம் ஸ்ரீமதாததம்
புவி க்ருணந்தி தே பூரிதா ஜனா: ॥

உமது அமுதமொழிகள்
துன்பத்தைத் துடைப்பன
ஞானிகள் போற்றுவன
பாவங்களைப் போக்குவன
கேட்டற்கு இனியன
செல்வத்தை அளிப்பன
உமது அமுதமொழிகள்
பேசிடும் நல்லோர்
புண்ணியம் செய்தோர்

— ஸ்ரீமத்பாகவதம் – கோபிகீதம்

கங்கையிலிருந்து தட்சிணேசுவர ஆலயத்தின் காட்சி



தட்சிணேசுவர ஆலயம் (மற்றொரு காட்சி)

# குருவும சீடரும

பிப்ரவரி 26, 1882

**வசந்த** காலத்தில் ஒரு ஞாயிற்றுக்கிழமை. ஸ்ரீராம கிருஷ்ணரின் பிறந்தநாள்விழா முடிந்து சில நாட்கள் சென்றிருந்தன. தட்சிணேசுவரத்தில் கங்கைக் கரையில் தோட்டங்களின் நடுவே அமைந்துள்ள காளி கோயிலில் ஸ்ரீராமகிருஷ்ணர் வசித்து வந்தார்.

ஞாயிற்றுக்கிழமை ம-வுக்கு (மஹேந்திரநாத் குப்தர்) விடுமுறையாதலால் மாலையில் நண்பர் சிதுவுடன் வராக நகரில் உள்ள பல பூஞ்சோலைகளைச் சுற்றிப் பார்த்துவிட்டுப் பிறகு பிரசன்ன பானர்ஜியின் பூந்தோட்டத்திற்குச் சென்றார். அங்கு இருவரும் உலவிக் கொண்டிருக்கையில் சிது, "கங்கைக் கரையில் ஓர் அழகான இடம் இருக்கிறது. அங்கே பரமஹம்சர் ஒருவர் வாழ்ந்து வருகிறார். நாம் போய்ப் பார்க்கலாமா?" என்று கேட்க, ம- உடன்பட, இருவரும் உடனடியாக தட்சிணேசுவரக் கோயிலை நோக்கி நடந்தனர். சிறிது நேரத்தில் கோயில் வாயிலை அடைந்தனர். நேராக ஸ்ரீராமகிருஷ்ணருடைய அறைக்குச் சென்றனர். அங்கே ஒரு மரக்கட்டிலின் மீது கிழக்குத் திசையை நோக்கியவாறு அமர்ந்தவராய் ஸ்ரீராம கிருஷ்ணர் முகத்தில் புன்சிரிப்போடு இறைவனைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அறை முழுதும் மக்கள் தரையில் அமர்ந்து கொண்டு **ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகளை** ஆழ்ந்த அமைதியுடன் பருகிக்கொண்டிருந்தனர்.

**ம-வின் முதல் சந்திப்பு அது.** பேச்சிழந்து மிக்க வியப்போடு அந்தக் காட்சியை ம- பார்த்துக்கொண்டு நின்றார். புண்ணியத்தலங்கள் அனைத்தும் ஒன்று சேர்ந்து அந்த அறையில் கூடியிருப்பது போல் அவருக்குத் தோன்றியது. சுகதேவரே அங்கு வந்து அமர்ந்து கொண்டு இறைவனின் பெருமைகளைக் கூறுவது போன்ற ஓர் உணர்வு அவர் உள்ளத்தில் எழலாயிற்று. இன்னும் ஸ்ரீசைதன்ய தேவர்[1] பூரி க்ஷேத்திரத்தில், ராமானந்தரோடும், ஸ்வரூப் முதலான பக்தர்களோடும் சேர்ந்து இறைவனின் பெயரையும் புகழையும்

---

1. வங்காளத்தில் தோன்றிய அவதார புருடர். மக்களுக்கு பக்தி மார்க்கத்தைப் போதித்தவர்.

மெய்மறந்து பாடி ஆடிக் கொண்டிருப்பது போலவும் அந்தக் காட்சி ம-வுக்குத் தோன்றியது.

ஸ்ரீராமகிருஷ்ணர் பேசிக்கொண்டிருந்தார்: "எவன் ஹரி நாமத்தையோ, ராம நாமத்தையோ ஒருமுறை உச்சரித்த அளவிலேயே மயிர்க் கூச்சலடைகிருனே, ஆனந்தக் கண்ணீர் வடிக்கிருனே அவன் அக்கணம் முதல் சந்தியாவந்தனம் முதலான வழிபாடுகளைச் செய்யத் தேவையில்லை. இதை நன்ருகத் தெரிந்துகொள்ளுங்கள். இந்த நிலைக்கு வந்த பின்னர் தான் அவனுக்கு இந்த நியமங்களை விட்டுவிடும் உரிமை வருகின்றது. சொல்லப் போனுல் செயல்கள் தாமாகவே அவனிடமிருந்து கழன்றுகொள்ளும். இந்த நிலையில் அவன் ராம நாமத்தையோ, ஹரி நாமத்தையோ அல்லது ஓங்காரத்தையோ ஜபம் செய்தாலே போதுமானது." ஸ்ரீராமகிருஷ்ணர் மேலும் அதை விளக்கலானுர். "சந்தியா, காயத்ரியில் ஒடுங்கும்; காயத்ரி, பிரணவத்தில் ஒடுங்கிவிடுகிறது." இதைக் கேட்டு ம- பெரிதும் வியப்படைந்தார்.

சுற்று முற்றும் நோக்கிய ம- "ஆஹா! உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் எவ்வளவு அழகான இடம் இது. எத்தகைய அதிசய மனிதர் இவர்! என்ன அற்புதமான பேச்சு! இந்த இடத்தை விட்டு நகர என் மனம் மறுக்கிறதே!" என்று தனக்குள் கூறிக்கொண்டார். சில விநாடிகளுக்குப் பின்னர் "சரி, இந்த இடத்தை முதலில் நன்கு சுற்றிப் பார்த்துவிடுவோம். அதன் பிறகு மீண்டும் இந்த அறைக்கு வருவோம்" என்று எண்ணினுர்.

நண்பர் சிதுவோடு அறையை விட்டு வெளியில் வந்த அக்கணமே கோயிலிலிருந்து வந்த மாலை ஆராதனையின் இனிய இசை ம-வின் காதுகளில் வந்து பாய்ந்தது. மணியோசை, மிருதங்க ஒலி, தாள ஓசை எல்லாம் இணைந்த தெய்விக இசை காற்றில் மிதந்து வரலாயிற்று. அதே நேரத்தில் சோலையின் தெற்குப் பகுதியில் உள்ள நஹபத்திலிருந்தும்[1] இசை வரத் துவங்கியது. அந்த ஒலி அலைகள் எல்லாம் கங்கை நீர்ப் பரப்பின்மீது மெல்ல மெல்ல மிதந்துகொண்டே வெகு தூரம் சென்று எங்கோ மறைந்து கரைந்து போய்க் கொண்டிருந்தன. மலர் மணம் கமழும் வசந்த காலத் தென்றல் மெல்ல வீசத் தொடங்கிற்று. நிலா மெதுவாக வானில் எழுந்து ஒளி பரப்பலாயிற்று. ஏதோ, இயற்கை அன்னையும் நம்மைப்

1. வாத்திய மண்டபம்.

போலவே இறைவனின் மாலை வழிபாட்டிற்கு எல்லா ஏற்பாடுகளையும் நாற்றிசைகளிலும் செய்து கொண்டிருப்பது போலத் தோற்றமளித்தது. பன்னிரெண்டு சிவாலயங்களிலும், ராதா காந்தர் கோயிலிலும், ஸ்ரீ பவதாரிணி காளி சந்நிதியிலும் நடைபெற்ற ஆரதி தரிசனம் தனக்குக் கிட்டியதில் ம-வுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. அவரது உள்ளம் இன்பத்தில் திளைத்திருந்தது. நடக்கத் தொடங்கினர் ம-. நண்பர் சிது, "ராணி ராசமணி கட்டிய கோயில் இது. இங்கே தினமும் பூஜை நடந்து வருகிறது. அன்ருடம் அதிதிகளும் அடியார்களும் இங்கே வந்து பிரசாதம் பெற்றுச் செல்கின்றனர்" என்று விளக்கினர்.

காளிகோயில் உட்பிராகார வழியாக நடந்தபடி பேசிக்கொண்டே வந்த இருவரும், ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைவாயிலை அடைந்தனர். அறைக் கதவு மூடி இருந்தது. சாம்பிராணி தூபம் அப்பொழுதுதான் போட்டிருந்தார்கள். மேல்நாட்டுப் பழக்க வழக்கங்களில் ஊறிப்போயிருந்த ம- அனுமதியின்றி உள்ளே நுழையத் தயங்கினர். வாசற்படியில் வேலைக்காரி பிருந்தா நின்றுகொண்டிருந்தாள். அவளிடம், 'ஏனம்மா, சாது உள்ளே இருக்கிருரா?' என்று கேட்டார்.

பிருந்தா : "உள்ளேதான் இருக்கிருர்."

ம : "எவ்வளவு நாளாக இங்கே இருக்கிருர்?"

பிருந்தா : "ஓ, ரொம்ப நாளாக."

ம : "இவர் நிறையப் புத்தகம் படித்திருக்கிருரா?"

பிருந்தா : "புத்தகமாவது, படிப்பதாவது! எல்லாம் அவர் நாக்கிலேயே நடனமாடுகின்றன குழந்தாய்."

ம- சமீபத்தில்தான், ஆங்கிலக் கல்லூரிப் படிப்பை முடித்திருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் புத்தகங்களே படிப்பதில்லை என்பதைக் கேட்டதும் மிகவும் வியப்படைந்தார்.

ம : "சரிதான். இப்போது அவர் சந்தியாவந்தனம் செய்யும் நேரமாகிறதே? நாங்கள் உள்ளே போகலாமா? நீ அவருக்குத் தெரிவிப்பாயா?"

பிருந்தா : "தாராளமாக. உள்ளே போய் உட்காருங்கள்."

சிதுவும், ம-வும் உள்ளே நுழைந்தனர். அப்போது அறையில் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தவிர வேறு யாரும் இல்லை. அவர் மட்டும் தனியாகக் கட்டிலில் உட்கார்ந்திருந்தார்.

அறையில் தூபம் போடப்பட்டிருந்ததால் சன்னல் கதவுகள் மூடப்பட்டிருந்தன. உள்ளே நுழைந்ததும் ம- குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ணரைக் கைகூப்பி வணங்கினார். குருதேவர் இருவரையும் உட்காரும்படிச் சொல்ல, அவர்கள் தரையில் உட்கார்ந்தனர்.

குருதேவர் ம-விடம், "நீ எங்கே வசிக்கிறாய்? ஏதாவது வேலையில் இருக்கிறாயா? வராக நகருக்கு எதற்காக வந்திருக்கிறாய்?" என்று பல கேள்விகளைக் கேட்டார்.

ம-, தன்னைப் பற்றிய விவரங்களையெல்லாம் கூறினார். அதைக் கேட்டுக் கொண்டிருக்கும்போதே, ஸ்ரீராமகிருஷ்ணர் நடுநடுவே வேறு நினைவில் ஆழ்ந்து விடுவது போல ம-வுக்குத் தோன்றியது. அதுதான் பாவ நிலை, பரவச நிலை என்பதை ம- பின்னர் தெரிந்து கொண்டார். பாவநிலையாவது: ஒருவன் தூண்டிலைக் கையில் ஏந்தியபடி மீன் பிடிக்க உட்காருகிறான். மீன் இரையைக் கவ்வும்போது நீர்மிதப்பில் அசைவு ஏற்படும். மீன் பிடிப்பவன் கண்ணும் கருத்துமாக அதையே கவனித்துக் கொண்டிருப்பான்; யாரிடமும் பேசமாட்டான். மனம் ஒருமித்த இது போன்ற நிலையே பாவநிலை ஆகும். சந்திவேளையில் குருதேவர் இப்படி பாவநிலையில் இருப்பார். சில சமயங்களில் வெளி உணர்வை முற்றிலும் இழந்து விடுவார். அதை ம- கேட்டதுமட்டுமல்ல, பின்னாட்களில் தானே நேரில் பலமுறை கண்டுமிருக்கிறார்.

ம: "தங்களுக்கு இது சந்தியாவந்தன காலம் அல்லவா? நாங்கள் போய்வருகிறோம்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாவ நிலையில்): "இல்லை......... சந்தியாவா?......அந்த மாதிரி......எதுவும் இல்லை."

மேலும் சிறிது நேரம் உரையாடியபின் ம- பரமஹம்சரை வணங்கி விடைபெற்றார்.

'மறுபடியும் வா' என்றார் குருதேவர். வீடு திரும்பிச் செல்லுகையில் ம- தனக்குள்ளாக, 'யார் இந்த சாந்த மூர்த்தி? இவரிடம் மறுபடியும் வர என் மனம் ஆவல் கொள்ளுகிறதே! புத்தகம் படிக்காமலேயே ஒரு மனிதன் மகானாக முடியுமா? ஆச்சரியமாக இருக்கிறதே! அவரை மீண்டும் காண என் மனம் துடிக்கிறது. மறுபடியும் வா என்று அவரே கூறியிருக்கிறார்' என்று எண்ணமிட்டவராய் நடந்துகொண்டிருந்தார்.

இரண்டாம் முறையாக ம- ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிக்க தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்த போது அவர் தமது அறைக்குத் தெற்கேயுள்ள தாழ்வாரத்தில் குருதேவர் க்ஷவரம் செய்து கொள்ளத் தயாராக இருந்தார். காலை எட்டு மணி. இன்னும் குளிர் இருந்து கொண்டிருந்ததால் சிவப்புக்கரை சால்வையைப் போர்த்திக் கொண்டிருந்தார். ம-வைப் பார்த்ததும் "ஓ! நீ வந்து விட்டாயா? சரி, இங்கே வந்து உட்கார்" என்றார்.

பரமஹம்சர் க்ஷவரம் செய்து கொள்ள உட்கார்ந்தார். நாவிதன் முன் உட்கார்ந்தபடியே ம-வுடன் பேசத்துவங்கினர். உடம்பில் போர்வை, கால்களில் செருப்புகள், சிரித்த முகம், கொஞ்சம் திக்கலோடு வரும் பேச்சு.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து): "உன் வீடு எங்கே இருக்கிறது?"

ம: "கல்கத்தாவில் இருக்கிறது சுவாமி."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இங்கு எங்கே வந்தாய்?"

ம: "இங்கு வராக நகரில் என் சகோதரி வசிக்கிருள். ஈசான கவிராஜருடைய வீடு. அங்கு வந்தேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஓ! ஈசான் வீட்டிலா? கேசவர் எப்படியப்பா இருக்கிருர்? அதிக நோயுற்றிருந்தாரே."

ம: "நானும் அப்படித்தான் கேள்விப்பட்டேன். இப்போது குணம் அடைந்திருப்பார் என்று நினைக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "கேசவர் குணமடைய வேண்டும் என்பதற்காக நான் காளிதேவிக்கு இளநீரும், சர்க்கரையும் படைப்பதாகப் பிரார்த்தனை செய்துகொண்டேன். அதிகாலையில் விழித்துக்கொண்டதுமே அன்னையின் முன்னால் நின்றுகொண்டு 'அம்மா! கேசவரைக் குணமாக்கிவிடு. இல்லாவிட்டால் நான் கல்கத்தாவுக்குப் போகும்போது யாரிடம் பேசுவேன்?' என்று முறையிட்டுக்கொள்வேன். அதனால்தான் இளநீரும், சர்க்கரையும் அன்னைக்குப் படைப்பதாகப் பிரார்த்தனை செய்து கொண்டேன். அது சரி. 'குக்' என்ற ஆங்கிலேயர் ஒருவர் கல்கத்தாவிற்கு வந்திருக்கிருராமே? அவர் சொற்பொழிவு நிகழ்த்துகிருராம். உனக்குத் தெரியுமா? கேசவர் ஒரு தடவை என்னை நீராவிப் படகில் ஏற்றிக்கொண்டு சென்றார். அப்போது இந்தக் 'குக்' கும் படகில் இருந்தார்."

ம: "ஆம் சுவாமி. நான்கூட அவர் சொற்பொழிவு செய்பவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் பேசிக் கேட்டதில்லை, அவரைப்பற்றி எனக்கு அவ்வளவாகத் தெரியாது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பிரதாபரின் சகோதரன் இங்கே வந்து சில நாட்கள் தங்கியிருந்தான். வேலை வெட்டி எதுவும் இல்லை. ஏகப்பட்ட குழந்தை குட்டிகள். இங்கேயே தங்கிவிடப் போவதாகச் சொன்னான். தன் மனைவி, மக்களை மாமனார் வீட்டில் விட்டு வைத்திருக்கிறான் என்று கேள்விப்பட்டதும் நான் அவனைத் திட்டி அனுப்பினேன். நீயே சொல்! நிறையக் குழந்தைகளைப் பெற்றிருக்கிறான். அவனுடைய குழந்தைகளை ஊரார் சோறு போட்டு வளர்ப்பார்கள்? அவனுக்கு வெட்கம் என்பதே இல்லையே! வேறு யாரோ அல்லவா குழந்தைகளைக் கவனித்துக்கொள்கிறார்கள்! முதலில் ஒரு வேலை தேடிக் கொள்ளும்படிச் சொல்லி அவனை மிகக் கடுமையாகத் திட்டினேன். அதற்குப் பிறகுதான் இந்த இடத்தைவிட்டு நகர்ந்தான்.

"உனக்குத் திருமணம் ஆகிவிட்டதா?"

ம: "ஆம் சுவாமி."

ஸ்ரீராமகிருஷ்ணர் (அதிர்ந்து போய்): "ஏய், ராம்லால்* இவனுக்குத் திருமணம் ஆகிவிட்டதாமே!"

ஏதோ ஒரு பெரிய குற்றத்தைச் செய்துவிட்டது போல் ம- தலை குனிந்து வாய் மூடி மௌனமாக உட்கார்ந்திருந்தார். திருமணம் செய்துகொள்வது என்ன அவ்வளவு பெரிய தவறான காரியமா என்று தனக்குள் நினைத்துக் கொண்டார்.

குருதேவர்: "உனக்குக் குழந்தை குட்டி இருக்கிறதா?"

ம-வின் இதயம் அப்போது பட படவென்று அடித்துக் கொண்டது. பயந்துகொண்டே, "ஆம் சுவாமி, எனக்குக் குழந்தை இருக்கிறது."

இதைக் கேட்டதும் கேட்க விரும்பாததைக் கேட்டவர் போலக் குருதேவர் "நான் என்ன செய்வேன்? ஐயோ! இவனுக்குக் குழந்தை இருக்கிறதாமே" என்று கூறி வருத்தமுற்றார்.

* ராம்லால்: குருதேவருடைய அண்ணன் மகன். காளி கோயில் பூசாரி.

குருதேவர் அவ்வாறு கூறியதைக் கேட்டதும் ம- நிலை குலைந்து போனார். அவருடைய அகங்காரத்திற்கு ஓர் அடி செம்மையாக விழுந்தது. சில விநாடிகளுக்குப் பிறகு, குருதேவர் ம-வைப் பார்த்து அன்போடு கூறினார்.

“போகட்டும். இதோ பார்! உன்னிடம் சில நல்ல அறிகுறிகள் தென்படுகின்றன. உன்னுடைய் நெற்றி, கண்கள் முதலியவற்றைப் பார்த்து அவற்றை நான் புரிந்து கொண்டேன்” என்று கூறி நிறுத்தினார். பிறகு “அதிருக்கட்டும். உன்னுடைய மனைவி எப்படிப்பட்டவள்? ஞானியா, அஞ்ஞானியா?”[1]

ம : “சுவாமி, அவள் நல்லவள்தான். ஆனால் அஞ்ஞானி”

ஸ்ரீராமகிருஷ்ணர் (வெறுப்புடன்): “நீ பெரிய ஞானியோ?”

ம-வுக்கு ஞானம் எது, அஞ்ஞானம் எது, என்னும் தெளிவு இன்னும் ஏற்படவில்லை. ஒருவனுக்கு எழுதப் படிக்கத் தெரிவதாலும் நூல்களைப் படிப்பதாலும் மட்டுமே ஞானம் ஏற்படுகிறது என்று அவர் எண்ணியிருந்தார். பிற்காலத்தில் இந்தத் தவறான கருத்தைக் கைவிட்டு, ‘கடவுளை அறிதலே ஞானம், அவரை அறியாதிருத்தலே அஞ்ஞானம்’ என்பதை உணர்ந்து கொண்டார்.

“நீ என்ன பெரிய ஞானியோ?” என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கேட்டதும் ம-வினுடைய அகங்காரத்துக்கு இரண்டாவது முறை ஒரு பலத்த அடி கிடைத்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் : “போகட்டும், உனக்கு எதில் நம்பிக்கை? உருவ வழிபாட்டிலா, அருவ வழிபாட்டிலா?”

ம- வியப்படைந்தவராகத் தனக்குள் நினைக்கலானார். ‘உருவ வழிபாட்டில் நம்பிக்கை இருந்தால் அருவத்தில் எப்படி நம்பிக்கை உண்டாக முடியும்? ஈசுவரன் உருவம் அற்றவர், அருவமானவர் என்ற நம்பிக்கை ஏற்பட்டபின் இறைவன் உருவம் உடையவர் என்ற எண்ணத்தில் நம்பிக்கை பிறக்க முடியுமா? மாறுபட்ட இவை இரண்டும் ஒரே சமயத்தில் எப்படி உண்மையாக இருக்க முடியும்? ஒரு திரவம் ஒரே சமயத்தில் எப்படி வெள்ளையாகவும் கருப்பாகவும் இருக்க இயலும்?’

1. குருதேவர் கேட்டது: அவளிடம் வித்யாமாயை (பக்தி, ஞானம், விவேகம்) உள்ளதா, அல்லது அவித்யாமாயை (அறியாமை, உலகப்பற்று) உள்ளதா?

இப்படித் தனக்குள் எண்ணிய ம- ஸ்ரீராமகிருஷ்ணரிடம் "சுவாமி அருவத்தில் தான் எனக்கு நம்பிக்கை. அதுவே எனக்குப் பிடித்திருக்கிறது" என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "மிகச்சரி. ஏதாவது ஒன்றில் நம்பிக்கை வைப்பது நல்லது. உனக்கு அருவத்தில் நம்பிக்கை. அது நல்லதுதான். ஆனால் அது ஒன்றுதான் உண்மை, மற்றவையெல்லாம் பொய் என்ற எண்ணத்தை மட்டும் விடாப் பிடியாகக் கொண்டு விடாதே. ஈசுவரனுக்கு அருவமும் உண்டு, உருவமும் உண்டு. இதுதான் உண்மை. இதை எப்போதும் உன் நினைவில் வைத்துக் கொள். ஆனால் உனக்கு எதில் நம்பிக்கையோ அதையே பின்பற்று."

இறைவனுக்கு அருவம், உருவம் ஆகிய இருவிதமான நிலைகளும் உண்மையானவை என்ற உறுதிமொழியைக்கேட்ட ம- ஆச்சரியம் அடைந்தார். இந்த மாதிரி உண்மை அவர் படித்த ஏட்டுக் கல்வியில் இல்லையே!

ம-வினுடைய அகங்காரத்துக்கு மூன்றாவது முறை இன்னொரு அடி விழுந்தது. ஆனாலும் அகங்காரம் இன்னும் அடியோடு அழிந்து விடவில்லை. ஆகவே அவர் குரு தேவருடன் இன்னும் சிறிது வாதிட முன் வந்தார்.

ம : "சுவாமி, ஈசுவரன் உருவம் உடையவன் என்பதை உண்மை என்று ஒருவர் கொண்டாலும் அவர் களிமண் பொம்மையாக இருக்க முடியாது அல்லவா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நீ என்ன சொல்லுகிறாய்? களிமண் பொம்மையா? அது சைதன்ய (உணர்வு மயமான) வடிவம் ஆயிற்றே."

'என்ன? மண் சிலை உணர்வும் அறிவும் நிரம்பிய உருவமா?' இந்தக் கருத்தை ம-வால் புரிந்து கொள்ள முடியவில்லை.

ம : "களிமண்ணால் ஆன உருவத்தை வைத்துப் பூஜை செய்பவர்களுக்கு முதலில் அது களிமண் தான், கடவுள் அல்ல என்பதை எடுத்துக் கூறவேண்டும். அதோடு அந்த உருவத்தில் இறைவனை நினைத்துத்தான் பூஜை செய்யவேண்டுமே தவிர களிமண்ணுக்குப் பூஜை செய்வது சரியன்று."

வெறுப்படைந்த ஸ்ரீராமகிருஷ்ணர் கடுகடுத்த முகத்தோடு, "கல்கத்தா வாசிகளாகிய உங்களுக்கு இது ஒரு பொழுது போக்காகிவிட்டது. சொற்பொழிவு செய்வதும், தம்கருத்தைப் பிறருக்குத் தெளியவைப்பதும் உங்களுக்கு ஒரு தொழிலாகவே போய்விட்டது. உண்மையை அறிவது எப்படி என்று யாரும் சிந்தித்துப் பார்ப்பதில்லை. இந்த லட்சணத்தில் பிறர்க்குப் போதிக்க வந்துவிடுகிறீர்கள்! இந்தப் புவனங்கள் அனைத்தையும் எவன் தோற்றுவித்தானோ அவனே ஒவ்வொருவருக்கும் உண்மையை உணர்த்துவான். சூரியன், சந்திரன், மனிதர்கள், விலங்குகள், மற்றுமுள்ள ஏனைய உயிர்கள் அனைத்தையும் எவன் படைத்தானோ, எவன் இவை அனைத்தும் நிலைபெற்று வாழ்வதற்குத் தாய் தந்தையர்களைப் படைத்து, அவர்களிடம் மக்கட்பாசத்தையும் வைத்தானோ அவனே, அந்த இறைவனே, உண்மையை உணர்த்துவதற்கு உரியவன்.

"இவ்வளவையும் செய்து கொடுத்த இறைவன், மக்கள் தன்னை வழிபடுவதற்குரிய வழிகளைக் காட்டாமல் போவானா? நமக்குள்ளே இருந்து கொண்டு நம்மை நடத்திச் செல்பவன் அவனன்றோ? உண்மையை அறியவேண்டும் என்ற தேவை, நாட்டம் ஏற்படும் போது அவனே ஆசானாக வந்து போதிப்பான். நம் அந்தராத்மாவிற்கு அவனே நல்ல துணைவன். மண்ணுருவை வழிபடுவது தவறாக இருந்தால் ஆண்டவனாகிய அவனுக்கு அது தெரியாதா என்ன? தன்னைத்தான் அந்த மண் வடிவில் வழிபடுகிறார்கள் என்பதை அவன் அறியமாட்டானா? அவனை நாம் வழிபடுகிறோம் என்ற ஒன்றே அவனுக்கு மகிழ்ச்சியைத் தருமே! உனக்கு ஏன் இந்தத் தலைவலியெல்லாம். ஞானமும் பக்தியும் பெறுவதற்கு உன்வரை வழி என்ன என்று பார்த்து அதற்கு முயற்சி செய்."

இப்போது ம-வின் அகங்காரம் அடியோடு இற்று வீழ்ந்தது. ம-(தனக்குள்), 'இவர் சொல்வது சரிதானே! நான் பிறருக்குப் போதிக்க வேண்டிய அவசியம் என்ன? நான் என்ன, கடவுளைக் கண்டவனா? இறைவனிடம் எனக்குப் பக்தி இருக்கிறதா? "தனக்கே படுக்கப் படுக்கை இல்லை. சங்கரனை வேறு படுக்கக் கூப்பிடுகிறானே?" என்று கூறுவது போலல்லவா இது இருக்கிறது? நான் கடவுளைக் கண்டதுமில்லை; பிறர் கூறக் கேட்டதுமில்லை. அப்படி இருக்க மற்றவர்களுக்குப் போதிக்க முயல்வது மானக்கேடான செயல் அல்லவா? அடிமுட்டாளாக அல்லவோ நான் இருக்கிறேன்? இது என்ன கணிதமா, வரலாறு அல்லது இலக்கியப் பாடமா மற்றவர்களுக்குச் சொல்லிக்

ரூள்ள அழியாப் பொருள். மற்றவை எல்லாம் நிலையற்றவை, அழியக்கூடியவை. இப்படி அடிக்கடி விசாரம் செய்து நிலையற்ற பொருட்களை உள்ளத்திலிருந்து அகற்றிவிடு."

ம (பணிவோடு): "சுவாமி! இல்லறத்தில் இருப்பவன் இந்த உலகில் எவ்வாறு வாழ வேண்டும்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இல்லறத்தில் இருந்துகொண்டே ஒருவன் தனக்குரிய எல்லாக் கடமைகளையும் சரிவரச் செய்து வர வேண்டும். அதே சமயத்தில் உள்ளத்தை இறைவனிடம் செலுத்த வேண்டும். மனைவி, குழந்தை, தாய், தந்தை, இவர்களோடு இல்லறத்தான் வாழ்ந்தே ஆகவேண்டும். இவர்கள் எனக்கு மிகவும் வேண்டியவர்கள் என்ற நினைப்பில் அவர்களுக்குப் பணிவிடை செய்யத்தான் வேண்டும். ஆனால் இவர்கள் யாரும் எனக்கு நெருங்கிய உறவினர்கள் அல்ல என்பதைத் தெளிவாகத் தெரிந்து வைத்திருக்க வேண்டும்.

"இதைக் கேள். செல்வந்தர் ஒருவருடைய வீட்டில் பணி புரிந்துவரும் வேலைக்காரி ஒருத்தி எல்லாக் காரியங்களையும் செய்து கொண்டிருந்தாலும் அவள் மனம் எப்பொழுதும் கிராமத்தில் உள்ள தன் வீட்டையும் தன் குழந்தைகளையுமே நினைத்துக் கொண்டிருக்கிறது. அவள் பணக்காரரின் குழந்தைகளைத் தன் குழந்தைகளைக் கவனிப்பது போலவே கவனித்துக் கொள்கிறாள். அக்குழந்தைகளை 'என் ராமன்' என்றும் 'என் ஹரி' என்றும் சொல்லிக் கொள்கிறாள். இருந்தாலும் அந்தக் குழந்தைகளுக்கும் தனக்கும் இடையே எந்த வித உறவும் இல்லை என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும்.

"இன்னொன்று. ஆமை தண்ணீரில் இங்குமங்கும் அலைந்து திரிந்தாலும், அதன் மனமெல்லாம் கரையில், தான் இட்ட முட்டைகளின் மீதே இருக்கும். அதுபோல இல்லறத்தில் இருந்து கொண்டே உனக்குரிய கடமைகளை ஒழுங்காகச் செய்து கொண்டிரு. மனத்தை மட்டும் ஈசுவரனிடத்தில் நிறுத்திவை."

"இறைவனிடம் பக்தி பூணாமல் இல்லறத்தில் ஈடுபட்டால் பின்னர் பல சிக்கல்களில் மாட்டிக் கொள்ள நேரிடும். இல்லத்தில் ஆபத்து, துன்பம், கவலை இவையெல்லாம் வந்து மோதும்போது மன உறுதியை இழப்பாய். அது மட்டுமல்ல. உலகப் பொருட்களில் மனம் எவ்வளவுக்கெவ்வளவு செல்கிறதோ அந்த அளவுக்கு அவற்றின் மீது பற்றும் அதிகரிக்கும்.

"பலாப்பழத்தை அறுக்க முயல்பவன் முதலில் தன் கைகளில் எண்ணெய் தடவிக் கொள்வான். இல்லாவிட்டால் பழத்தின் பிசின் கைகளில் ஒட்டிக் கொள்ளும். அதுபோல இல்லறத்தில் ஈடுபட்டவன் கடவுட் பக்தி என்ற எண்ணெயைப் பூசிக் கொள்ள வேண்டும்.

"இந்தக் கடவுட்பக்தியை அடைய வேண்டுமானால் தனிமையை நாடிச் செல்ல வேண்டும். தயிரிலிருந்து வெண்ணெய் எடுக்க வேண்டுமானால் உறையிட்ட பாலை ஆடாமல் அசையாமல் இருக்கத் தனியிடத்தில் வைக்கிறோமல்லவா? அடிக்கடி பாத்திரத்தில் உள்ள பாலை அசைத்துக் கொண்டிருந்தால் தயிர் தோயாது. அடுத்து, எல்லா வேலைகளையும் ஒதுக்கி வைத்து விட்டுத் தயிரைக் கடைய வேண்டும். அப்போதுதான் வெண்ணெய் திரண்டு வரும்.

"இன்னும்கேள்! தனிமையில் அமர்ந்து கொண்டு இறைவனைக் குறித்துத் தியானம் செய்து வந்தால் நாளடைவில் ஞானம், வைராக்யம், பக்தி முதலியவற்றை நம் மனம் அடைகின்றது. இத்தகைய மனம் ஆசாபாசங்கள் மிகுந்த உலக பந்தங்களில் ஈடுபடுமானால் கீழ்த்தன்மையை அடைந்து கெட்டுவிடுகிறது. அதனால்தான் இல்லறத்தில் காமினி காஞ்சனம்[1] (பெண், பொன்) பற்றிய சிந்தனை ஒன்றே தோன்றி விடுகிறது.

---

1. 'காமினி' (பெண்) 'காஞ்சனம்' (பொன்) என்ற இரண்டு சொற்களும் அடிக்கடி ஸ்ரீராமகிருஷ்ணருடைய போதனைகளில் வருகின்றன. அவை ஞான முன்னேற்றத்துக்கு முக்கியத் தடைகள் என்பதைக் குறிக்கின்றன. "காமினி காஞ்சனம்" என்று குருதேவர் கூறும்போது அது காமத்தையும், பண ஆசையையும் குறிப்பதாகும். 'காமினி' என்னும் பதத்தை ஆண் அடியாருடன் பேசும்போது காம இச்சையைக் குறிக்கும் ஒரு பதமாகவே அவர் உபயோகிப்பார், பெண் அடியாருடன் பேசும் போது ஆண்களைத் தவிர்க்குமாறு போதிப்பார். 'காஞ்சனம்' என்னும் பதம் ஞான வாழ்க்கைக்கு மற்றோர் இடையூறான பண ஆசையைக் குறிப்பதாகும்.

பெண்ணையோ அல்லது பொதுவாகப் பெண்பாலரையோ வெறுக்க வேண்டுமென ஒருகாலும் ஸ்ரீராமகிருஷ்ணர் தம் சீடர்களுக்குப் போதிக்கவில்லை. அவர் பெண்கள் அனைவரையும் உலக மாதாவாகிய தேவியின் வடிவங்களாகவே கருதி வந்தார். மிக உயர்ந்த தந்திர சாதனங்களைப் பழகி வரும்போது அவர் ஒரு நங்கையையே தமது குருவாக ஏற்றுக்கொண்டார். இதனால் பெண்பாலரிடம் அவருக்கு இருந்த உயர்ந்த மதிப்பு நன்கு வெளியாகிறது. 'தூய அன்னையார்' என்று பலரும் பெயரிட்டு வணங்கும் ஸ்ரீராமகிருஷ்ணரின் மனைவியார் அவருக்கு விட்டுப் பிரியாத ஒரு தோழியாயும், சிஷ்யையாயும் இருந்தார். தமது ஞானசாதனம் முடிவடையும்போது, ஸ்ரீராமகிருஷ்ணர் தம் மனைவியாரைக் காளிதேவியின் உருவமாகவே வைத்து முறைப்படி பூஜித்தார். அவர் மறைந்ததும், தூய அன்னையாரே இல்லறத்தாருக்கும், ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த அநேக துறவிகட்கும் ஞான குருவாக வாழ்ந்தார்.

"இல்லறம் தண்ணீர் போன்றது. மனமோ பால் போல இருப்பது. பாலாகிய மனத்தைத் தண்ணீராகிய இல்லறத்தில் கலந்தால் நீரோடு கலந்து ஒன்றுகிவிடுகிறது. பிறகு தூய்மை யான பாலைத் தனியாகப் பிரிப்பது மிகக் கடினம். ஆனல் இதே பாலைத் தயிராக்கினுல் அதிலிருந்து உன்னதமான வெண்ணெய் எடுக்க முடியும். இல்லறம் என்ற தண்ணீரில் இந்த வெண் ணெயைப் போட்டாலும் அது மிதக்குமேயன்றி ஒட்டாது. அப்புறம் ஞான விசாரம் செய்யவேண்டும். இது மிக முக்கியம். காமினி, காஞ்சனங்கள் நிலையற்றவை; அழியக் கூடியன. ஈசன் ஒருவனே நிலையான பொருள். பணத்தை வைத்துக் கொண்டு ஒருவன் என்ன சாதித்து விட முடியும்? இருக்க இடமும் உண்ண உணவும், உடுக்க உடையும் தரும். அவ்வளவே. அதற்கு மேல் பணத்தால் என்ன தர முடியும்! நிச்சயமாக அதனுல் இறைவனைத் தர முடியாது. எனவேதான் வாழ்க்கை யின் குறிக்கோள் பணம்காசுகளாகவே இருக்கக் கூடாது. இப்படி ஆராய்ந்து பார்த்து ஒரு முடிவுக்கு வருவதுதான் ஞான விசாரம். பகுத்தறிவு. என்ன? புரிந்ததா?"

ம : "புரிந்தது சுவாமி. சில நாட்களுக்கு முன் சமஸ்கிரு தத்தில் எழுதியுள்ள 'பிரபோத சந்த்ரோதயம்' என்ற நாடக நூலைப் படித்தேன். அதில் 'வஸ்து விசாரம்' என்பது பற்றி விரிவாக ஆராயப்பட்டிருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "வஸ்து விசாரமா? சற்றே கவனி. தேடி அலைவதற்குப் பணத்தில் என்ன இருக்கிறது? அழகிய ஒரு பெண்ணின் உடலிலும் அப்படி என்னதான் இருக்கிறது? ஆராய்ந்து பார். ஓர் அழகியின் உடல், எலும்பு, மாமிசம், கொழுப்பு, மலம், மூத்திரம் இவை போன்ற இன்னும் அருவருக் கத்தக்க பொருட்களால் ஆனது. பேரின்பப் பொருளான இறைவனை விடுத்து இத்தகைய ஆபாசங்களில் மக்கள் ஏன் தான் மனத்தைப் பறிகொடுக்கிறார்களோ? இவைகளின் பொருட்டு இறைவனை மறக்க வேண்டுமா?"

ம : "சுவாமி! இறைவனைக் காண முடியுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "முடியும். நிச்சயமாக முடியும். அப்போதைக்கப்போது தனிமையில் இருப்பதும், பகவானின் நாமத்தையும் பெருமைகளையும் மீண்டும் மீண்டும் பாடுவதும், மெய்ப்பொருளுக்கும் பொய்ப் பொருளுக்குமுள்ள வேற்றுமை களை ஆராய்ந்து காண்பதும் போன்ற முறைகளை மேற் கொண்டால் கடவுளைக் காணலாம்."

ம: "ஐயா! ஒருவனுக்கு எந்த நிலைகள் ஏற்பட்டால் இறைவனைக் காண முடியும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "**தாங்க முடியாத தாபம் கொண்டு அவனையே நினைந்து நினைந்து, உருகி உருகி, இரு கண்களில் நீர் சொரிய மிக மிக ஏங்கி அழுதால் அவனைக் காண முடியும்.** மனைவி மக்களுக்காக ஆசை வசப்பட்டு, மாந்தர் குடங்குடமாகக் கண்ணீர் சிந்துகிறார்கள். மனிதர்கள் மண்ணினால், மங்கையரால், பொருளால் மனம் மயங்கி மிக வாடி அழுது கண்ணீர்க் கடலில் மூழ்குகிறார்கள். அந்தோ! இறைவனுக்காக யார் அழுகிறார்கள்? ஊனும் உயிரும் உருக அவனுக்காக உண்மையாக அழ வேண்டும்" இப்படிக் கூறிக் கொண்டே குருதேவர் பாடத் துவங்கினார்.

மனமே, தாயை மெய்யாக
வருந்தி அழைத்தால் வாராது
தனியே உன்னை விடுவாளோ?
சற்றே விலகிப் போவாளோ?
பிரிந்து காளி வாழ்ந்து நிற்கும்
பேச்சு முண்டோ? சிறுநெஞ்சே!
இருந்து வாழ்வாள் உன்னுடனே
என்றும் அவளே துணையாவாள்.
மல்கும் நினைவு வேறின்றி
மாதா பாதத் தாமரையில்
வில்வம் வைத்து செம்பருத்திப்
பூவும் வைத்துத் தூவுகவே!
சக்தித் தாயின் சரணத்தில்
தழையும் மலரும் சூட்டுகையில்
பக்தி எனும் சந்தனத்தைப்
பதமாய்க் கலந்து பூசுகவே.

"இறைவனை அடைய வேண்டும் என்று ஒருவன் கொள்கிற ஏக்கம் அருணோதயம் போன்றது. விடிந்த பிறகே சூரியன் உதிக்கிறான். அதுபோல இடைவிடாது ஏங்கும் இந்த ஏக்கத்திற்குப் பிறகே ஒருவனுக்கு இறைக் காட்சி கிட்டுகிறது.

"மூன்று விதக் கவர்ச்சிகள் ஒன்று சேர்ந்தால் இறைவனது காட்சி கிட்டும். தாய்க்குத் தன் குழந்தையிடம் இருக்கும் பாசம், உலக நாட்டமுடைய மனிதனுக்குப் போகப்

பொருட்களிடம் தோன்றும் பற்று, கணவனிடத்துக் கற்பு டைய மனைவி காட்டும் காதல் என்ற இந்த மூன்றுவிதக் கவர்ச்சி களும் ஒருங்கே ஒருவனுக்கு இறைவன்பால் ஏற்படுமாயின் அவன் இக்கவர்ச்சிகளின் வலிமையினுல் இறைவனை அடைய முடியும்.

"சொல்வது என்னவென்ருல், தாய் குழந்தையைநேசிப்பது போல, மனைவி கணவனை நேசிப்பது போல, உலகப் பற்றுடையவன் உலக இன்பங்களை நேசிப்பது போல ஒருவன் கடவுளை உள்ளன்போடு நேசிக்க வேண்டும். இந்த மூன்று நேசங்களும் ஒன்று சேர்ந்தால் எவ்வளவு வலிமை கொண்ட நேசம் பிறக்குமோ அந்த அளவு வலிமை கொண்ட நேசத்தை, அன்பை இறைவனிடம் காட்டினுல் அவன் நிச்சயமாக இறைவனைக் காண்பான். எனவே இறைவனுக்காக எப்பொழுதும் ஏங்குகின்ற உள்ளத்தை ஒருவன் பெறுவது மிக மிக அவசியம்.

"தாயைக் காண விரும்பும் பூனைக்குட்டி 'மியாவ் மியாவ்' என்று கத்தி அழுகிறது. தாய்ப்பூனை குட்டியை எங்கு கொண்டு போய் வைக்கிறதோ அந்த இடத்திலேயே குட்டி திருப்தியோடு இருக்கிறது. சில சமயம் சமையல் அறையிலும் வேறு சமயத் தில் குப்பை மேட்டிலும், இன்னெரு சமயம் பஞ்சுமெத்தையின் மீதும் குட்டியைத் தாய்ப்பூனை வைக்கிறது. பூனைக்குட்டிக்கு ஏதாவது துன்பம் வருமானுல் அது 'மியாவ் மியாவ்' என்று கத்து கிறது. இப்படிக் கத்துவதைத் தவிர அதற்கு வேறு எதுவும் தெரியாது. இந்தக் கதறலைக் கேட்ட அக்கணமே தாய்ப் பூனை எங்கிருந்தாலும் குட்டியிடம் ஓடோடி வந்து விடுகிறது. நாம் ஏங்கி அவனுக்காக அழுதால் இறைவனும் ஓடோடி வருவான்."

### ஞாயிற்றுக்கிழமை, மார்ச் 5, 1882

குருதேவரைக் காண ம- **மூன்ரும் முறையாகச்** சென்ருர். வராக நகரில் உள்ள தன் சகோதரியின் வீட்டில் ம- தங்கி யிருந்த காலம் அது. அந்த அற்புதமான மனிதரை ஏற்கனவே இரு முறைகள் சந்தித்திருந்ததில் அவரது உள்ளத்தில் அந்த மகானைப் பற்றிய மதிப்பு ஆழமாகப் பதிந்திருந்தது. அன்று முதல் குருதேவரைப் பற்றியும், ஆன்மிக வாழ்வுக்குரிய ஆழமான உண்மைகளை எளியமுறையில் அவர் விளக்கியதைப் பற்றியும் ம- சிந்தித்தவாறு இருந்தார். இப்படிப்பட்ட மனிதரை ம- தன் வாழ்நாளில் இதற்கு முன் சந்தித்ததில்லை. 'ஆனந்த

மயமான அந்த மூர்த்தியை எப்போதும் தரிசித்துக் கொண்டிருப்பது போலவும் அவருடைய வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருப்பது போலவும் அவருக்குச் சிலசமயம் தோன்றும். மறுபடி அவ்ரிடம் எப்போது செல்வோம், அவரை எப்போது காண்போம் என்பதே இரவுபகல் அவரது சிந்தனையாக இருந்தது.

வராகநகர் வாசியான நேபால்பாபு என்பவரோடு ம- தட்சிணேசுவரக் கோயிலை அடைந்தார். மாலை நான்கு மணி. முதன் முதலில் தான் பார்த்த அதே அறையில் குருதேவர் சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்திருந்தார். ஞாயிற்றுக் கிழமை விடுமுறை நாளாதலால் பரமஹம்சரைத் தரிசிக்க மக்கள் அறை நிறைய உட்கார்ந்திருந்தனர். ம-விற்கு அந்த பக்தர்கள் எவரோடும் அறிமுகம் ஏற்படவில்லையாதலால் ஒரு மூலையில் சென்று உட்கார்ந்தார். சிரித்த முகத்துடன் பக்தர்களுடன் குருதேவர் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டார்.

பத்தொன்பது வயதான ஒரு வாலிபரைப் பார்த்தவண்ணம் ஆனந்தத்தால் பூரித்தபடி குருதேவர் பேசிக் கொண்டிருந்தார். அந்த இளைஞனின் பெயர் நரேந்திரன்.[1] கல்லூரி மாணவன். பிரம்ம சமாஜத்திற்கு அடிக்கடி சென்று வருபவன். ஆற்றலும் உறுதியும் மிக்க பேச்சு; ஒளி வீசும் சுடர்க் கண்கள்; ஒரு பக்தனுக்குரிய தோற்றம் அவனுடையது.

ஆன்மிக நாட்டம் கொண்ட மக்களை எள்ளி நகையாடுகின்ற உலகப் பற்றில் ஊறிக் கிடக்கும் பாமர மக்களைப் பற்றியதாகப் பேச்சு இருப்பதை ம- உணர்ந்தார். எண்ணிக்கையில் பெருகிக்கிடக்கும் இத்தகைய மக்களைப் பற்றியும் அவர்களிடம் பக்தர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றியும் குருதேவர் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரைப் பார்த்து): "நரேந்திரா, இதைப் பற்றி என்ன நினைக்கிறாய்? உலக மக்கள் ஞானிகளைப் பற்றிப் பலவாறு தூற்றிப் பேசுகிறார்கள்! ஒன்றைக் கவனி. ஒரு யானை வீதியிலே போகும் போது அதைப் பார்த்து நாய்கள் குரைக்கின்றன. யானையோ திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை. உன்னை யாராவது இகழ்ந்து பேசினால் அவர்களைப் பற்றி நீ என்ன நினைப்பாய்?"

1. பிற்காலத்தில் சுவாமி விவேகானந்தர்.

பொருட்களிடம் தோன்றும் பற்று, கணவனிடத்துக் கற்புடைய மனைவி காட்டும் காதல் என்ற இந்த மூன்றுவிதக் கவர்ச்சிகளும் ஒருங்கே ஒருவனுக்கு இறைவன்பால் ஏற்படுமாயின் அவன் இக்கவர்ச்சிகளின் வலிமையினுல் இறைவனை அடைய முடியும்.

"சொல்வது என்னவென்ருல், தாய் குழந்தையைநேசிப்பது போல, மனைவி கணவனை நேசிப்பது போல, உலகப் பற்றுடையவன் உலக இன்பங்களை நேசிப்பது போல ஒருவன் கடவுளை உள்ளன்போடு நேசிக்க வேண்டும். இந்த மூன்று நேசங்களும் ஒன்று சேர்ந்தால் எவ்வளவு வலிமை கொண்ட நேசம் பிறக்குமோ அந்த அளவு வலிமை கொண்ட நேசத்தை, அன்பை இறைவனிடம் காட்டினுல் அவன் நிச்சயமாக இறைவனைக் காண்பான். எனவே இறைவனுக்காக எப்பொழுதும் ஏங்குகின்ற உள்ளத்தை ஒருவன் பெறுவது மிக மிக அவசியம்.

"தாயைக் காண விரும்பும் பூனைக்குட்டி 'மியாவ் மியாவ்' என்று கத்தி அழுகிறது. தாய்ப்பூனை குட்டியை எங்கு கொண்டு போய் வைக்கிறதோ அந்த இடத்திலேயே குட்டி திருப்தியோடு இருக்கிறது. சில சமயம் சமையல் அறையிலும் வேறு சமயத்தில் குப்பை மேட்டிலும், இன்னெரு சமயம் பஞ்சுமெத்தையின் மீதும் குட்டியைத் தாய்ப்பூனை வைக்கிறது. பூனைக்குட்டிக்கு ஏதாவது துன்பம் வருமானுல் அது 'மியாவ் மியாவ்' என்று கத்துகிறது. இப்படிக் கத்துவதைத் தவிர அதற்கு வேறு எதுவும் தெரியாது. இந்தக் கதறலைக் கேட்ட அக்கணமே தாய்ப் பூனை எங்கிருந்தாலும் குட்டியிடம் ஓடோடி வந்து விடுகிறது. நாம் ஏங்கி அவனுக்காக அழுதால் இறைவனும் ஓடோடி வருவான்."

### ஞாயிற்றுக்கிழமை, மார்ச் 5, 1882

குருதேவரைக் காண ம- மூன்ரும் முறையாகச் சென்ருர். வராக நகரில் உள்ள தன் சகோதரியின் வீட்டில் ம- தங்கியிருந்த காலம் அது. அந்த அற்புதமான மனிதரை ஏற்கனவே இரு முறைகள் சந்தித்திருந்ததில் அவரது உள்ளத்தில் அந்த மகானைப் பற்றிய மதிப்பு ஆழமாகப் பதிந்திருந்தது. அன்று முதல் குருதேவரைப் பற்றியும், ஆன்மிக வாழ்வுக்குரிய ஆழமான உண்மைகளை எளியமுறையில் அவர் விளக்கியதைப் பற்றியும் ம- சிந்தித்தவாறு இருந்தார். இப்படிப்பட்ட மனிதரை ம- தன் வாழ்நாளில் இதற்கு முன் சந்தித்ததில்லை. 'ஆனந்த

மயமான அந்த மூர்த்தியை எப்போதும் தரிசித்துக் கொண்டிருப்பது போலவும் அவருடைய வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருப்பது போலவும் அவருக்குச் சிலசமயம் தோன்றும். மறுபடி அவரிடம் எப்போது செல்வோம், அவரை எப்போது காண்போம் என்பதே இரவுபகல் அவரது சிந்தனையாக இருந்தது.

வராகநகர் வாசியான நேபால்பாபு என்பவரோடு ம- தட்சிணேசுவரக் கோயிலை அடைந்தார். மாலை நான்கு மணி. முதன் முதலில் தான் பார்த்த அதே அறையில் குருதேவர் சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்திருந்தார். ஞாயிற்றுக் கிழமை விடுமுறை நாளாதலால் பரமஹம்சரைத் தரிசிக்க மக்கள் அறை நிறைய உட்கார்ந்திருந்தனர். ம-விற்கு அந்த பக்தர்கள் எவரோடும் அறிமுகம் ஏற்படவில்லையாதலால் ஒரு மூலையில் சென்று உட்கார்ந்தார். சிரித்த முகத்துடன் பக்தர்களுடன் குருதேவர் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டார்.

பத்தொன்பது வயதான ஒரு வாலிபரைப் பார்த்தவண்ணம் ஆனந்தத்தால் பூரித்தபடி குருதேவர் பேசிக் கொண்டிருந்தார். அந்த இளைஞனின் பெயர் நரேந்திரன்.[1] கல்லூரி மாணவன். பிரம்ம சமாஜத்திற்கு அடிக்கடி சென்று வருபவன். ஆற்றலும் உறுதியும் மிக்க பேச்சு; ஒளி வீசும் சுடர்க் கண்கள்; ஒரு பக்தனுக்குரிய தோற்றம் அவனுடையது.

ஆன்மிக நாட்டம் கொண்ட மக்களை எள்ளி நகையாடுகின்ற உலகப் பற்றில் ஊறிக் கிடக்கும் பாமர மக்களைப் பற்றியதாகப் பேச்சு இருப்பதை ம- உணர்ந்தார். எண்ணிக்கையில் பெருகிக்கிடக்கும் இத்தகைய மக்களைப் பற்றியும் அவர்களிடம் பக்தர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றியும் குருதேவர் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரைப் பார்த்து): "நரேந்திரா, இதைப் பற்றி என்ன நினைக்கிறாய்? உலக மக்கள் ஞானிகளைப் பற்றிப் பலவாறு தூற்றிப் பேசுகிறார்கள்! ஒன்றைக் கவனி. ஒரு யானை வீதியிலே போகும் போது அதைப் பார்த்து நாய்கள் குரைக்கின்றன. யானையோ திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை. உன்னை யாராவது இகழ்ந்து பேசினால் அவர்களைப் பற்றி நீ என்ன நினைப்பாய்?"

---

1. பிற்காலத்தில் சுவாமி விவேகானந்தர்.

நரேந்திரர்: "நாய் குரைக்கிறது என்று நினைப்பேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: (புன்சிரிப்புடன்) "வேண்டாமடா! அவ்வளவு தூரம் போகாதே! (எல்லோரும் சிரிக்கின்றனர்.)

"கடவுள் எல்லா உயிர்களுக்குள்ளும் இருக்கிறார். நல்லவரோடு நெருங்கிப் பழகலாம். கெட்டவர்களைக் கண்டால் தூர விலகி நிற்க வேண்டும். புலியினிடத்தும் நாராயணன் இருக்கிறான். அதற்காக யாரும் புலியைக் கட்டித் தழுவிக் கொள்வதில்லை. (எல்லோரும் சிரிக்கின்றனர்.)

"புலியும் நாராயணன் தானே. அதைக் கண்டால் ஏன் ஓட வேண்டும்? என்று நீ கேட்கலாம். 'புலி வருகிறது. ஓடி விடு' என்று கூறி எச்சரிக்கிறார்களே அவர்களும் நாராயணர் தானே? அவர்களுடைய, அந்த நாராயணருடைய, வார்த்தைகளை ஏன் கேட்கக் கூடாது என்பதுதான் என் பதில்.

"ஒரு கதை சொல்கிறேன் கேள். ஒரு காட்டில் சாது ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்குப் பல சீடர்கள். ஒரு நாள் அவர் தம் சீடர்களைப் பார்த்து, 'ஈசன் எல்லோரிடத்திலும் இருக்கிறான். இதைத் தெரிந்து கொண்டு எல்லோரையும் வணங்குங்கள்!' என்று உபதேசம் செய்தார். ஒரு நாள், அந்தச் சீடர்களில் ஒருவன் ஹோமத்திற்கு விறகு சேகரிக்கக் காட்டிற்குச் சென்றான். அப்போது உரத்த குரல் ஒன்று கேட்டது. 'எல்லோரும் ஓடி விடுங்கள், ஓடி விடுங்கள். மதயானை ஒன்று வருகிறது.' அக்கூக்குரல் கேட்டு எல்லோரும் ஓடி விட்டனர். ஆனால் சீடன் மட்டும் ஓடவில்லை. 'எல்லா உயிரும் நாராயணன் என்றால் யானையும் நாராயணன்தானே? நான் ஏன் ஓட வேண்டும்?' என்று தனக்குள் எண்ணியவனாய், அங்கேயே நின்று கைகூப்பியவண்ணம் நாராயணனை ஸ்துதி பாடலானான். யானைப்பாகன் உரத்தகுரலில் 'ஓடி விடு' என்று எச்சரித்தான். அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் சீடன் நின்ற இடத்திலேயே நின்றுகொண்டிருந்தான். கடைசியில் மதயானை அந்தச் சீடனைத் தன் துதிக்கையால் எடுத்துச் சுழற்றி வெகு தூரத்தில் வீசி எறிந்துவிட்டுப் போய் விட்டது. உடல் முழுதும் காயத்துடன் சீடன் மூர்ச்சித்து விழுந்து கிடந்தான்.

இந்தச் செய்தியைக் கேட்டு குருவும் மற்ற சீடர்களும் அங்கே விரைந்து வந்து அவனை ஆசிரமத்திற்குத் தூக்கிச் சென்று சிகிச்சை செய்யத் துவங்கினார்கள். சற்று நேரத்துக்குப்

பின் மூர்ச்சை தெளிந்தான். அப்பொழுது சீடர்களுள் ஒருவன் அவனைப் பார்த்து 'மதயானை வருகிறது என்பதைக் கேட்டும் நீ ஏன் அந்த இடத்திலிருந்து ஓடவில்லை?' என்று கேட்கச் சீடன் 'நாராயணனே மனிதன் முதலிய உயிர்களாக இருக்கிறார் என்று குருதேவர் நமக்கு உபதேசித்திருக்கிறார் அல்லவா? ஆகவே யானை நாராயணன் வருகிறார், அதைக் கண்டு நான் ஏன் அந்த இடத்தை விட்டு ஓட வேண்டும் என்று விலகாமல் இருந்தேன்' என்றான். இதைக்கேட்ட குரு, 'மகனே, யானை நாராயணன் வந்தது உண்மைதான். ஆனால் யானையின் மேல் ஒரு நாராயணன்—யானைப்பாகன் உட்கார்ந்து கொண்டு உன்னை எச்சரித்தானே! எல்லோரும் நாராயணன் என்றால் யானைப் பாகனும் நாராயணன் தானே. நீ ஏன் அவன் வார்த்தைகளைக் கேட்கவில்லை? யானைப்பாகனான நாராயணனுடைய வார்த்தைகளையும் நீ மதித்திருக்க வேண்டுமல்லவா?' என்று கேட்டார். (எல்லோரும் சிரிக்கின்றனர்.)

'ஆபோ நாராயண' அதாவது தண்ணீரும் நாராயணன் என்று சாஸ்திரத்தில் சொல்லப் பட்டுள்ளது. ஆனால் சில வகைத் தண்ணீரைத்தான் வழிபாட்டுக்குப் பயன் படுத்தலாம். வேறு வகைத் தண்ணீரைப் பாத்திரம் கழுவவும், துணி துவைக்கவும், குளிக்கவும் தான் பயன்படுத்த முடியும். இந்தத் தண்ணீர் தேவ பூசை செய்ய உதவாது. அதுபோலவே நல்லவன், கெட்டவன், பக்தன், பக்தி இல்லாதவன் ஆகிய எல்லோர் இதயத்திலும் நாராயணன் இருப்பது என்னவோ உண்மைதான் ஆனாலும் கெட்டவர்கள், பக்தி இல்லாதவர்கள், போக்கிரிகள் இவர்களோடு எந்தவித உறவும் வைத்துக் கொள்ளக் கூடாது. அவர்களோடு பழகவும் கூடாது. சிலரோடு வெறும் வாய்ப் பேச்சு மட்டும் வைத்துக் கொள்ளலாம். இன்னும் சிலரோடு அதுவும் கூடாது. இத்தகைய மனிதர்களிடமிருந்து விலகியே வாழ வேண்டும்.

ஒரு பக்தர்: "சுவாமி! கெட்டவர்கள் கெடுதல் செய்ய வந்தாலோ, கெடுதல் செய்தாலோ நாம் அப்போது சும்மா இருப்பதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உலகத்தாரோடு வாழ நேரும் போது கெட்டவர்களிடமிருந்து நம்மைக் காத்துக் கொள்ளச் சிறிது தமோ குணத்தைக் காட்ட வேண்டும். அவர்கள் தீங்குச் செய்வார்கள் என்று எதிர்பார்த்து அந்தக் காரணத்துக்காக நாம் அவர்களுக்குத் தீங்கு செய்யக் கூடாது. ஒரு கதை கூறுகிறேன் கேளுங்கள்.

"சில சிறுவர்கள் புல்வெளியில் மாடு மேய்த்துக் கொண்டிருந்தார்கள். அங்கே ஒரு விஷப் பாம்பு வசித்து வந்தது. பாம்பிடம் உள்ள பயத்தால் எல்லோரும் மிகவும் எச்சரிக்கையாக இருந்தார்கள். ஒரு நாள் ஒரு பிரம்மசாரி அந்தப் புல்வெளி வழியாகச் சென்றார். அப்போது மாடு மேய்க்கும் பிள்ளைகள் அவரிடம் ஓடிவந்து, 'ஐயா, அந்த வழியாகப் போக வேண்டாம். அந்தப் பக்கம் ஒரு கொடிய விஷப்பாம்பு இருக்கிறது' என்று சொன்னார்கள்.

பிரம்மசாரி: 'ஓ! அப்படியா! அதனால் என்ன? அந்தப் பாம்பிடம் எனக்குப் பயமில்லை. எனக்கு மந்திரம் தெரியும்' என்று சொல்லி விட்டு அந்த வழியே சென்றார். பயத்தினால் இடைச் சிறுவர்கள் யாரும் உடன் வரவில்லை. பிரம்மசாரி வருவதைக் கண்ட பாம்பு படமெடுத்தபடி வேகமாக ஓடி வந்தது. பிரம்மசாரியை நெருங்கியதும் அவர் உச்சரித்த மந்திரத்திற்குக் கட்டுபட்டு, ஒரு மண்புழுவைப் போல அவர் காலடியில் விழுந்தது.

"பிரம்மசாரி அதைப் பார்த்து 'என்ன? நீ ஏன் இப்படி மனிதர்களைத் துன்புறுத்திக் கொண்டு திரிகிறாய்? உனக்கு ஒரு மந்திரம் கற்றுத் தருகிறேன். இந்த மந்திரத்தை நீ ஜபம் செய்தால் பகவானிடம் உனக்கு பக்தி ஏற்படும். கடவுளையும் நீ அடைவாய். பிறருக்குத் தீங்கு செய்யும் இந்தத் தன்மை போய் விடும்' என்று சொல்லி அந்தப் பாம்புக்கு மந்திரோபதேசம் செய்தார். மந்திர உபதேசம் பெற்ற பாம்பு குருவை வணங்கி,'குருதேவா,நான் எவ்வாறு சாதனை செய்யவேண்டும்?' என்று கேட்டது. குருவும், 'இந்த மந்திரத்தை ஜபம் செய். யாருக்கும் தீங்கு செய்யாதே' என்று சொன்னார். பிறகு அந்த இடத்தை விட்டுப் போகும் போது 'நான் மறுபடியும் வந்து உன்னைப் பார்க்கிறேன்' என்றார்.

"சில நாட்கள் கழிந்தன. அந்தப் பாம்பு யாரையும் கடிக்க வருவதில்லை. இதை மாடு மேய்க்கும் பிள்ளைகள் கண்டு கொண்டனர். அதன் அருகே சென்றனர். பாம்பும் ஒன்றும் செய்யவில்லை. அதன் மேல் கல்லெறிந்தனர். அப்போதும் ஒன்றும் செய்யவில்லை. மண்புழுவைப் போல் இருந்தது. ஒரு நாள், சிறுவன் ஒருவன் அதன் அருகில் சென்று, வாலைப் பிடித்து தூக்கிச் சுழற்றித் தரையில் அடித்தான். பாம்பின் வாயிலிருந்து ரத்தம் பீறிட்டது. பாம்பு மயங்கி நினைவிழந்துகிடந்தது. அது இறந்து விட்டது, என்று நினைத்துக் கொண்டு மாடு மேய்க்கும் சிறுவர்கள் போய் விட்டார்கள்.

"நடு இரவில் பாம்பிற்கு உணர்வு வந்தது. மிகுந்த துன்பப் பட்டு மெல்ல நகர்ந்து வளைக்குள் நுழைந்து கொண்டது. உடல் நொறுங்கியதால் அசையவும் முடியவில்லை. எலும்பும் தோலு மாக இருந்த அந்தப் பாம்பு, பல நாட்களுக்குப் பிறகு இரவு வேளையில் மட்டும் இரை தேட வெளியே வந்தது. பயம் காரண மாகப் பகல் வேளையில் வெளியே வருவதில்லை.

"மந்திர உபதேசம் பெற்றதிலிருந்து அது யாரையும் துன் புறுத்துவதில்லை. சருகுகளையும் பழுத்து உதிர்ந்த பழங்களையும் உண்டு உயிர் வாழ்ந்து வந்தது. ஓர் ஆண்டு கழிந்தது. பிரம்ம சாரி அந்த வழியாக மறுபடியும் வந்தார். பாம்பைத் தேடினார்.

"அந்தப் பாம்பு இறந்து விட்டதாக மாடு மேய்க்கும் சிறு வர்கள் சொன்னார்கள். ஆனால் பிரம்மசாரி நம்பவில்லை. தான் உபதேசித்த மந்திரத்தின் பலனை அடையாமல் பாம்பு இறந்தி ருக்க முடியாது என்பது அவருக்குத் தெரியும். எனவே இங்கும் அங்கும் தேடியபடி மந்திர உபதேசத்தின்போது தான் பாம்பிற்குக் கொடுத்த பெயரைச் சொல்லி அழைத்தார். குரு வின் குரலைக் கேட்ட பாம்பு வளையிலிருந்து வெளியே வந்து அவரை மிகுந்த பக்தியோடு வணங்கியது. 'என்னடா, எப்படி இருக்கிறாய்?' என்று பிரம்மசாரி விசாரித்தார். 'சுவாமி, சௌக்கி யமாயிருக்கிறேன்' என்றது பாம்பு. மெலிந்த அதன் உடலைப் பார்த்த பிரம்மசாரி 'நீ ஏன் இவ்வளவு மெலிந்திருக்கிறாய்? என்ன காரணம்' என்று கேட்க, 'குருவே, யாருக்கும் தீங்கு செய் யாதே என்று தாங்கள் எனக்குக் கட்டளையிட்டிருந்தீர்கள். அதன்படி சருகுகளையும் பழங்களையும் தின்று வாழ்ந்து வந்த தினால் இப்படி மெலிந்திருக்கிறேன் போலும்' என்று பாம்பு கூறியது.

"அந்தப் பாம்புக்குச் சத்துவ குணம் அதிகரித்திருந்ததால் அதற்கு யாரிடமும் கோபம் இல்லை. மாடு மேய்க்கும் பிள்ளைகள் தன்னைக் கொல்ல முயன்றதைக் கூட அது மறந்து போய் விட்டது. 'சரியாக உணவு சாப்பிடாததால் மட்டுமே உனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்க முடியாது. கண்டிப்பாக வேறு ஏதோ காரணம் இருக்க வேண்டும். சற்று யோசித்துப் பார்' என்று பிரம்மசாரி கூற, மாடு மேய்க்கும் சிறுவர்கள் தன்னை தரையில் அடித்தது அப்போதுதான் பாம்பின் நினைவிற்கு வந்தது. 'குருவே, இப்போது என் நினைவுக்கு வருகிறது. ஒரு நாள் மாடு மேய்க்கும் பிள்ளைகள் என்னைத்தரையில் சுழற்றி அடித்தார்கள். அவர்கள் அறியாச் சிறுவர்கள். என்னுடைய இப்போதைய

மனநிலையை அவர்கள் அறியவில்லை. நான் யாரையும் கடிப்ப தில்லை. எவருக்கும் தீங்கு செய்வதில்லை என்பது அவர்களுக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்?'' என்று பாம்பு சொல்லிற்று. 'அடடா! நீ எவ்வளவு முட்டாளாக இருக்கிருய்? உன்னைக் காப் பாற்றிக் கொள்ளக் கூட உனக்குத் தெரியவில்லையே! மற்றவர் களைக் கடிக்காதே என்று சொன்னேனே தவிர, சீருதே என்று சொல்லவில்லையே. சீறி அவர்களை ஏன் பயமுறுத்தவில்லை? என்ருர்.

''கெட்டவர்களிடம் சீற வேண்டும். அவர்கள் நமக்குத் தீங்கு செய்யாமல் இருப்பதற்காக அவர்களைப் பயமுறுத்த வேண்டும். ஆனுல் அவர்கள் மீது ஒரு நாளும் விஷத்தைச் செலுத்தி விடக் கூடாது, தீமை செய்யக் கூடாது.

''இறைவனது படைப்பில் மக்கள், விலங்குகள், மரங்கள், கொடிகள் என்று பலவகைப்பொருள்கள் உண்டு. மிருகங்களுக் குள்ளேயும் சில நல்லவை, சில கெட்டவை; புலியைப் போன்ற கொடிய மிருகங்களும் உண்டு. மரங்களுக்குள் அமுதம் போன்ற பழங்களைத் தரும் மரங்களும் உண்டு. நச்சுப்பழத்தைத் தரும் மரங்களும் உண்டு. இப்படியே மனிதர்களுக்குள்ளும் நல்லவர்களும் இருக்கிருர்கள், கெட்டவர்களும் இருக்கிருர்கள். புண்ணியாத்மாக்களும் உள்ளனர், பாபாத்மாக்களும் இருக்கி ருர்கள். உலகப் பற்றுள்ளவர்களும் இருக்கிருர்கள், பக்தர் களும் இருக்கிருர்கள்.

''மக்களை நான்கு வகையாகப் பிரிக்கலாம். உலக பந்தங்க ளில் கட்டுண்டு உழல்பவர்கள், விடுதலை வேண்டி நிற்பவர்கள், விடுதலை பெற்றவர்கள், எப்போதும் விடுதலையோடு இருப்பவர் கள். இவர்களை முறையே பத்தர்கள், முமுட்சுக்கள், முக்தர்கள், நித்யர்கள் என்று அழைக்கலாம். **நித்தியர்கள்** என்போர் நாரதர் போன்றவர்கள். இவர்கள் மக்களின் நன்மைக்காகவே உலகில் வாழ்கிருர்கள். அதாவது ஞானத்தைப் போதிப்பதற்காகவே வாழ்கிருர்கள். **பத்தர்கள்** என்போர் உலக ஆசை நிறைந்த வர்கள். பகவானை மறந்தவர்கள். மறந்தும் கூடக் கடவுளை நினைக்காதவர்கள். **முமுட்சுகள்** என்று கூறப்படுபவர்கள் முக்தி யில் ஆசை கொண்டவர்கள். அதை அடைய முயன்று வருப வர்கள். ஆனுல் இவர்களில் ஒரு சிலரே முக்தியை அடைகின் றனர். மற்றவர்களால் முடிவதில்லை. அடுத்தவர்கள் **முக்தர்கள்**. இவர்கள் உலகத்தில் பெண்ணுசை பொன்னுசையில் சிக்கிக் கொள்ளாதவர்கள். சந்நியாசிகள், மகாத்மாக்கள் இவர்களைப்

போன்றவர்கள். எவருடையமனத்தில் உலகஆசை இல்லையோ ஹரியின் திருவடித் தாமரைகளை யார் எப்போதும் சிந்திக்கிறார்களோ அவர்களே முக்தர்கள்.

ஒரு குளத்தில் மீன் பிடிக்க வலை வீசியிருப்பதாக வைத்துக் கொள்வோம். திறமையுள்ள சில மீன்கள் எப்போதும் வலையில் விழ்வதில்லை. அவை நித்திய ஜீவர்களுக்கு உதாரணம். ஆனால் ஏராளமான மீன்கள் வலையில் விழும். அவைகளில் ஒரு சில தப்பித்துக் கொள்ள முயலும். இவைகள் முமுட்சுகளுக்கு எடுத்துக்காட்டு. ஆனால் முயலுகின்ற எல்லா மீன்களாலுமே தப்பிக்கமுடிவதில்லை. இரண்டொன்று மட்டுமே 'தடால் தடால்' என்று எகிறிக் குதித்து வலையிலிருந்து தப்பி விடுகின்றன. அப்பொழுது செம்படவன் 'அதோ பார்! ஒரு பெரிய மீன் தப்பி விட்டது' என்று கூச்சலிடுகிறான். ஆனால் வலையில் விழுந்திருக்கின்ற பெருவாரியான மீன்களால் ஓட முடிவதில்லை. அவை தப்பிக்கவும் முயல்வதில்லை. அதற்கு மாறாக வலையைக் கவ்விக்கொண்டு தலையைக்குளத்துச் சேற்றில் புதைத்தபடி நிம்மதியாக இருக்கும். அப்போது அந்த மீன்கள் நமக்கு ஒரு பயமுமில்லை, நாம் சுகமாக இருக்கிறோம் என்று நினைத்துக் கொள்கின்றன. ஆனால் சற்று நேரத்தில் செம்படவன் வலையைக் கரைக்கு இழுக்கப் போகிறான் என்பது அவைகளுக்குத் தெரியாது. இவை பத்த ஜீவன்களுக்கு உதாரணம்.

வாழ்க்கையில் பொன்னாசை, பெண்ணாசை எனும் சங்கிலிகளால் கட்டுண்டவர்கள் இந்த பத்த ஜீவர்கள். கையும் காலும் கட்டப்பட்டவர்கள். கடவுள் பயம் இல்லாமல் வாழ்கிறவர்கள். பெண்ணாலும் பொன்னாலும் கிடைக்குமின்பமே வாழ்க்கை என்று நினைக்கிறவர்கள். அந்த இன்பத்திலேயே அழிவும் இருக்கிறது என்பது அவர்களுக்குத் தெரிவதில்லை. பத்த ஜீவன் ஒருவன், சாகிறபோது அவனுடைய பெண்டாட்டி, 'ஐயோ! போகிறாயே எனக்கு என்ன வழி செய்திருக்கிறாய்?' என்று புலம்புவாள். அப்பப்பா! இந்த மாயை தான் எப்படிப்பட்டது! ஒருவன் மரணப் படுக்கையில் இருக்கிறான். சிறிது நேரத்தில் சாகப் போகிறான். அவன் அருகே விளக்கு பெரிதாக எரிந்து கொண்டிருக்கிறது. அதைப் பார்த்ததும், எண்ணெய் தீர்ந்து விடும், விளக்கை நிறுத்து என்று அந்த நேரத்திலும் உலகப் பொருளையே நினைக்கிறான்.

பத்த ஜீவர்கள் இறைவனை என்றுமே நினைப்பதில்லை. ஓய்வு கிடைத்தால் தேவையில்லாத வம்பளப்பார்கள், அல்லது பயனற்ற வேலைகளைச்செய்வார்கள். காரணம் கேட்டால், 'என்னால்

சும்மா இருக்க முடியாது. அதனால்தான் இந்த வேலியைப் பழுது பார்த்துக் கொண்டிருக்கிறேன்' என்பார்கள். பொழுது போகாவிட்டால் சீட்டாடத் துவங்கி விடுவார்கள். (அறையில் எல்லோரும் வாய் திறவாமல் கேட்டபடி அமைதியாக உட்கார்ந்திருந்தனர்)

ஒருபக்தர்: "சுவாமி, இப்படிப்பட்ட இல்லறத்தான் கடைத்தேற ஒருவழியும் இல்லையா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நிச்சயமாக இருக்கிறது. உலக வாழ்வில் நடுநடுவே நல்லோர் இணக்கமும், தனிமையில் இறைவனை நினைப்பதும் வேண்டும். அதோடு ஞானவிசாரமும் செய்ய வேண்டும். எனக்குப் பக்தியையும் நம்பிக்கையையும் கொடு என்று ஆண்டவனிடம் வேண்டிக் கொள்ள வேண்டும்.

"நம்பிக்கை ஏற்பட்டுவிட்டாலே போதும், எல்லாம் கிடைத்ததுபோல. நம்பிக்கையைத் தவிர வேறு எதுவும் வேண்டியதில்லை. (கேதாரைப் பார்த்து) நம்பிக்கைக்கு எவ்வளவு வலிமை இருக்கிறது என்பதைக் கேள்விப்பட்டதில்லையா? புராணத்தில் நம்பிக்கையைப் பற்றி இவ்வாறு சொல்லியிருக்கிறது.

"பரிபூர்ணப் பிரம்மமும், நாராயண ஸ்வரூபமுமான ஸ்ரீராமருக்கு இலங்கைக்குப் போக அணைகட்ட வேண்டியிருந்தது. ஆனால் அனுமாரோ ராமநாமத்தில் வைத்த நம்பிக்கையால் ஒரே தாவலில் கடலைத் தாண்டி விட்டார். அவருக்கு அணை தேவைப் படவில்லை. (எல்லோரும் சிரிக்கிறார்கள்)

"ஒரு மனிதனுக்குக் கடலைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. வீபிஷணர் ஓர் இலையில் ராமநாமத்தை எழுதி அவன் உடுத்தியிருந்த ஆடையின் ஒரு முனையில் அதை முடிந்தார். 'இது உன்னை அக்கரைக்கு அழைத்துச் செல்லும். பயப்படாதே. நம்பிக்கையோடு தண்ணீரின் மேல் நட. ஆனால் ஒன்று, நம்பிக்கை இழந்தாயானால் அந்த விநாடியே தண்ணீரில் மூழ்கி விடுவாய்' என்றார்.

"அந்த மனிதன் கடலின் மீது எளிதாக நடந்து சென்று கொண்டிருந்தான். அப்படிப் போய்க் கொண்டிருக்கும் போது, துணியின் முனையில் முடிந்திருப்பது என்னவென்று பார்க்க அவனுக்கு மிகுந்த ஆவல் உண்டாயிற்று. முடிச்சினை அவிழ்த்துப் பார்த்தான். ராமநாமம் எழுதியிருந்த இலையைக்

கண்டான். அதைக் கண்டதும் 'இது என்ன! வெறும் ராம நாமம்தானே எழுதியிருக்கிறது' என்று நினைத்தான். அவ்வளவு தான், சந்தேகம் தோன்றிய அந்த விநாடியே கடலில் மூழ்கி விட்டான்.

"இறைவனிடம் நம்பிக்கை வைத்திருக்கும் ஒருவன் பசுக் கொலை, பிராம்மணர் கொலை, பெண் கொலை முதலிய பெரும் பாவங்களைச் செய்திருந்தாலும், இறைவனிடம் வைத்துள்ள நம்பிக்கையின் வலிமையினால் கொடிய பாவங்களிலிருந்து விடுதலை அடைய முடியும். நான் மீண்டும் இத்தகைய கொடிய செயல்களைச் செய்யமாட்டேன் என்று அந்த மனிதன் இறைவ னிடம் வேண்டினால்போதும், எதற்கும் அஞ்சவேண்டியதில்லை.

இவ்வாறு பேசிக்கொண்டே குருதேவர் பாடத்தொடங்கினார்.

தேவி, நின் பெயரைக் காளி மாகாளி
　　என்று நான் செப்பியவண்ணம்
ஆவியை விடுத்தால், ஏழையேன் என்னை
　　அணுகுமோ தீவினைக் கூட்டம்?
பாவமே படிந்த பாதகன் எனினும்
　　பைரவி, நின்திருப் பாதம்
மேவுவேன்; பிறவிப் பெருந்தளை கொய்து
　　விடுதலை நல்குவாய் அன்றோ?
அன்னையின் கருவில் சிசுவினைக் கொன்றேன்,
　　அந்தணன் ஆருயிர் கவர்ந்தேன்,
கன்னியை மாய்த்தேன், பசுவதைபுரிந்தேன்,
　　கள்ளினைப் பருகினேன், எனினும்—
நின்னருட் பெயரின் உறுதியினாலே
　　நிந்தையும் கவலையும் நீங்கி
மன்னிய பிரம்ம பதத்தையும் அடையும்
　　வாய்ப்பினைப் பெற்று நான் உய்வேனே.

நரேந்திரரைச் சுட்டிக்காட்டியபடி குருதேவர் பேசலானார். "இந்தப் பையனைப் பாருங்கள்! எவ்வளவு அடக்க ஒடுக்க மாக உட்கார்ந்து கொண்டிருக்கிறான். போக்கிரிப்பையன் ஒருவன், தன் தந்தையுடன் இருக்கும்போது ஒருவிதமாக இருக்கிறான். அதே பையன் மைதானத்தில் விளையாடும்போது

அவனுடைய தன்மையே வேறாகிவிடுகிறது. நரேந்திரனைப் போன்றவர்கள் நித்திய சித்தர் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் சம்சாரத்தில் ஒருபொழுதும் கட்டுப்படுவதில்லை. இவர்கள் வ்யது வந்ததும் ஆத்மிக உண்மையை உணர்ந்து மனத்தை இறைவனிடம் திருப்புகின்றனர். உலகத்தில் இவர்கள், ஜீவர்களுக்குப் போதிப்பதற்காகவே பிறக்கின்றனர். உலகப் பொருள் எதுவும் இவர்களுக்கு இன்பம் தருவதில்லை. இவர்கள் ஒருபோதும் பெண்ணிலும், பொன்னிலும் பற்று வைப்பதில்லை.

வேதங்கள், ஹோமா எனும் பறவையைப் பற்றிப் பேசுகின்றன. இப்பறவை வானத்தில் வெகு தொலைவில் வசிக்கிறது. வானத்திலேயே முட்டை இடுகிறது. அவ்வாறு இட்ட முட்டை பூமியை நோக்கி வேகமாக வந்துகொண்டிருக்கும். அதிக உயரத்திலிருந்து வரவேண்டியிருப்பதால் கீழே வருவதற்குப் பல நாட்களாகும். வந்து கொண்டிருக்கும்போதே முட்டை பொரிந்து குஞ்சு வெளிவரும். இந்தக் குஞ்சும் கீழ் நோக்கி வந்து கொண்டிருக்கும். அப்பொழுது அதன் கண்கள் திறக்கும். அதற்கு இறகுகள் முளைக்கும். கண் பார்வை பெற்றதும் அது தான் கீழ் நோக்கிச் செல்வதையும் தரையில் விழுந்தால் அடிபட்டுச் சிதைந்து விடுவோம் என்பதையும் உணரும். உடனே இறக்கைகளை அடித்துக்கொண்டு, தாய்ப் பறவையை நோக்கி வேகமாக மேலே பறந்து சென்றுவிடும்.

இந்த நேரத்தில் நரேந்திரர் எழுந்து வெளியே சென்றார். அறையில் கேதார், பிராணகிருஷ்ணர், ம- முதலிய பலர் இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இதோ பாருங்கள். இந்த நரேந்திரன், வாய்ப்பாட்டு, வாத்தியம், படிப்பு எல்லாவற்றிலும் பிறரை மிஞ்சுபவனாக இருக்கிறான். அன்றொரு நாள் நரேன் கேதாரோடு வாதம் செய்து கேதாரின் வாதங்களை நொறுக்கித் தூள்தூளாக்கி விட்டான்." (குருதேவரும் மற்றவர்களும் சிரிக்கின்றனர்.)

குருதேவர் : (ம-வைப் பார்த்து) "ஆங்கிலத்தில் தர்க்க வாதம் பற்றி ஏதேனும் புத்தகம் இருக்கிறதா?"

ம :"ஆம் சுவாமி, ஆங்கிலத்தில் தர்க்கசாஸ்திரம் உண்டு."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நல்லது. அதைப்பற்றி சிறிது கூறு. கேட்கலாம்."

ம தர்மசங்கடத்தில் மாட்டிக் கொண்டார். அவர் கூறினார். "பொதுவான கருத்திலிருந்து சிறப்பான கருத்தைக் கூறும் தர்க்கம் ஒருவகை. உதாரணமாக மனிதர்கள் எல்லோரும் சாகக் கூடியவர்கள். பண்டிதர்களும் மனிதர்கள். ஆகவே பண்டிதர்களும் சாகக்கூடியவர்கள் என்று கூறுவது ஒன்று.

"மற்றொரு வகையான தர்க்கம் இருக்கிறது. சில சிறப்பான உதாரணங்களையோ நிகழ்ச்சிகளையோ பார்த்து அதிலிருந்து சாதாரணக் கருத்தை அறிதல். உதாரணமாக, இந்த காக்கைக் கருப்பு; அந்தக் காக்கையும் கருப்பு; நாம் பார்க்கும் காக்கைகளெல்லாம் கருப்பாகவே இருக்கின்றன. அதனால் உலகில் உள்ள காக்கைகள் எல்லாம் கருப்பு. ஆகவே காக்கையின் நிறம்கருப்பு என்று கூறுவது ஒருவகை. இத்தகைய தர்க்க முறையில் தவறு ஏற்பட இடம் இருக்கிறது. ஏனென்றால் தேடிப் பார்த்தால் ஒருவேளை வேறொரு நாட்டில் வெள்ளைக் காக்கையும் இருக்கலாம்.

"இன்னொரு உதாரணம். மழை பெய்த இடங்களில் மேகம் இருந்தது, அல்லது, இப்போது இருக்கிறது. அதிலிருந்து மேகத்திலிருந்து மழை பெய்கிறது என்ற சாதாரணக் கருத்து உருவாகிறது. இன்னும் ஓர் உதாரணம், இந்த மனிதனுக்கு முப்பத்திரண்டு பற்கள். எந்த மனிதனைப் பார்த்தாலும் முப்பத்திரண்டு பற்கள். ஆகவே எல்லா மனிதர்களும் முப்பத்திரண்டு பற்களைக் கொண்டவர்கள். இப்படிப்பட்ட தர்க்க முறைகள் ஆங்கில தர்க்க நூலில் உள்ளன.

ஸ்ரீராமகிருஷ்ணர் இந்தச் சொற்களைக் காதில் வாங்கிக் கொண்டதாகத் தெரியவில்லை. கேட்டு வரும்போதே அவர் மனம் வேறு எங்கோ லயித்திருந்தது. ஆகவே இதுபற்றி மேற்கொண்டு பேச்சு தொடரவில்லை.

கூட்டம் கலைந்தது. பக்தர்கள் இங்கும் அங்குமாக உலாவிக்கொண்டிருந்தார்கள். மாலைநேரம். சுமார் ஐந்து மணி இருக்கும். ம-வும் பஞ்சவடி முதலிய இடங்களில் உலாவிக் கொண்டிருந்தார். சிறிதுநேரம் கழிந்ததும் ம-திரும்பி வந்தார். அப்போது ஸ்ரீராமகிருஷ்ணருடைய அறையின் வடக்கிலுள்ள சிறிய தாழ்வாரத்தில், ஓர் அற்புத நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் அசையாது நின்று கொண்டிருந்தார். நரேந்திரர் பாடிக்கொண்டிருந்தார். இரண்டொரு பக்தர்கள் அருகில் நின்றுகொண்டிருந்தார்கள். ம-வும் இப்போது அங்கே வந்து பாட்டைக்கேட்கலானார். பாட்டைக் கேட்டதும் அதிலேயே மனம் ஒன்றிப்போனார். குருதேவரின் இனிமையான குரல் போலவே இருக்கும் நரேந்திரரின் இனிய குரலை இதுவரைக்கும் அவர் எங்கும் எப்போதும் கேட்டதில்லை.

குருதேவர் இருந்த திசையை நோக்கிய ம- மிகவும் ஆச்சரியமடைந்தார். குருதேவரின் கண்கள் இமைக்கவில்லை. உடல் அசையவில்லை. அப்படியே நின்றுகொண்டிருந்தார். மூச்சு கூட நின்றுவிட்டது போல் தோன்றியது. இதுபற்றி அவர் ஒரு பக்தரைக் கேட்க அவர், 'இதுதான் சமாதி' என்று கூறினார். ம- இத்தகைய காட்சியை என்றும் கண்டதில்லை. கேட்டதும் இல்லை. அவர் மிகவும் வியப்புற்றார். "என்ன! இறைவனை நினைப்பதன் மூலம் ஒரு மனிதன் இவ்வாறு உலக நினைவை முற்றிலும் இழந்து விட முடியுமா? எவ்வளவு ஆழ்ந்த பக்தியும் நம்பிக்கையும் இருந்தால் இந்த நிலை கிட்டும்!" என்று ம- தமக்குள் நினைத்தார். நரேந்திரர் பாடிக்கொண்டு இருந்தார்.

ராகம்: பூபாளம் தாளம்: ரூபகம்

பல்லவி

சிந்தனை செய்மனமே
ஸ்ரீ ஹரியைத் தினமே (சிந்தனை)

அனுபல்லவி

சந்ததம் அடியவர் சிந்தனையில் இனிக்கும்
தத்துவ மூர்த்தியை வித்தகனைச் (சிந்தனை)

சரணம்

ஆயிரம் ஆயிரம் நிலவினை மிஞ்சும்
அருட்சுடர் பொங்கிய பரம்பொருளை
மாய விநோதனைத் தூயமா மணியை
மனம்கவர் மோகனைப் பேருருவைச் (சிந்தனை)
அறிவினை, நிகரிலா ஜோதியைப் புதிய
அன்பிலே மின்னெழில் பூத்தவனை,
இறைவனை, இன்பமாம் கடலிலே மூழ்கி
இருவிழி நீராருகப் புளகிதமாய்ச் (சிந்தனை)

பாட்டின் கடைசி வரியை நரேந்திரர் பாடி முடித்ததும் குரு தேவரிடம் ஒரு நடுக்கம் தோன்றியது; மயிர் சிலிர்த்தது; கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் தாரை தாரையாக வழிந்தது. இடை இடையே அவர் எதையோ பார்த்து ஆனந்தப் புன்னகை புரிந்தார். கோடி கோடி நிலவினைப் பழிக்கும் கடவுளின் ஒப்பற்ற அழகினை அவர் பார்த்துக் கொண்டிருந்தாரோ? ஆன்மீகத்தின் வடிவான இறைவனின் வடிவம் இது தானோ? இப்படிப்பட்ட கடவுட் காட்சி கிடைத்ததற்கு எவ்வளவு சாதனைகளை,எவ்வளவு தவங்களை இவர் செய்திருக்க வேண்டும்! எந்த அளவுக்குப் பக்தியும் நம்பிக்கையும் இருந்திருக்க வேண்டும்!

பாடல் தொடர்ந்தது.

கருத்திலே தெளிவும் கண்ணிலே அன்புக்
கனலுமாய், மனமெனும் தாமரையில்
இருத்துக மாதவன் இணையடி, இனிதே
எய்துக அதிசயத் தரிசனமே (சிந்தனை)

மறுபடியும் உலகை மயக்கும் அதே சிரிப்பு! முன் போன்றே அசைவற்ற உடல். அற்புதமான காட்சியொன்றைத் தன்னை மறந்து காண்கிற பாதியளவு மூடிய கண்கள்.

பாட்டு முடியும் தருணம்; நரேந்திரர் பாடினார்.

பூரண ஞானமும் பூரண அன்பும்
பொருந்திய பரம தயாபரனைச்
சேருக பரவச பக்தியாம் வலையில்
சிக்குக நித்தியம் சிக்குகவே (சிந்தனை)

குருதேவரின் சமாதி நிலையும்தெய்விகப்பேரானந்த நிலையும் ம-வின் உள்ளத்தில் என்றும் அழிக்கமுடியாத காட்சிகளாக அப்படியே ஆழப் பதிந்து விட்டன. மிகவும் பரவசப்பட்டவராய் வீடு திரும்பினார். ஆன்மாவைப் பித்தாக்கக்கூடிய இனிமை ததும்பும் அந்தப் பாடல் வரிகள் அடிக்கடி அவர் இதயத்தில் எதிரொலித்துக் கொண்டிருந்தன.

'பரவச பக்தியாம் வலையில் மனமே சிக்குக, நித்தியம் நீ சிக்குகவே' என்ற வரிகள் அவர் காதுகளில் ஒலித்துக்கொண்டிருந்தன.

**திங்கட்கிழமை மார்ச் 6,1882**

ம-வுக்கு விடுமுறை நாளாதலால் மாலை மூன்று மணியளவில் தட்சிணேசுவரம் வந்து சேர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தம் அறையில் உட்கார்ந்திருந்தார். தரையில் பாய் விரிக்கப்பட்டிருந்தது. அதில் நரேந்திரர், பவநாதர், மற்றும் இரண்டொரு பக்தர்கள் உட்கார்ந்திருந் தனர். அவர்கள் எல்லோரும் பத்தொன்பது அல்லது இருபது வயதுடைய இளைஞர்கள். குருதேவர் சிறிய கட்டிலில் உட் கார்ந்தபடி அவர்களுடன் ஆனந்தமாகப் பேசிக்கொண்டி ருந்தார்.

ம- அறையில் நுழைந்ததும் குருதேவர் உரக்கச் சிரித்த படியே, "இதோ பாருங்கள்! மறுபடியும் வந்துவிட்டான்!" என்று இளைஞர்களிடம் கூறினர். இளைஞர்கள் எல்லோரும் சிரித்தனர். ம- தரையில் விழுந்து குருதேவரை வணங்கி விட்டு உட்கார்ந்தார். முன்பெல்லாம் ம- நின்றபடியே ஆங்கி லப்படிப்புப் படித்தவர்களைப் போலக் கைகூப்பியபடியே வணக்கம் செய்வார். ஆனால் இன்று அவர் தரையில் விழுந்து வணங்கக் கற்றுக் கொண்டார்.

ம- உட்கார்ந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணர், தான் சிரித்ததற்கான காரணத்தை நரேந்திரர் முதலியவர்களுக்கு விளக்க ஆரம்பித் தார்.

"ஒரு மனிதன் ஒருநாள் மாலை நான்கு மணிக்கு ஒரு மயிலுக்குக் கொஞ்சம் அபினி கொடுத்தான். மறுநாள் சரியாக அதே நான்கு மணிக்கு அந்த மயில் அங்கே வந்து விட்டது. அபினியின் போதை மறுநாளும் சரியான நேரத்திற்கு அதை இழுத்து வந்துவிட்டது!" (எல்லோரும் சிரிக்கின்றனர்.)

ம-குருதேவர் கூறிய இந்த உவமையை நினைத்துப் பார்த் தார். 'இவர் பொருத்தமாகத்தான் சொல்லுகிறார்!" என்று தனக் குள் கூறிக் கொண்டார்.

வீட்டிலும் குருதேவரின் நினைவை ஒரு கணம் கூட நீக்க முடியவில்லையே! 'அவரை எப்போது காண்போம்?' என்ற ஆவல் மட்டுமல்ல, யாரோ அவரை அங்கே இழுத்து வருவது போலும் தோன்றிற்று. வேறு இடத்திற்குச் செல்ல மனம் இடம் தரவில்லை. இங்கே வந்து சேரும் வரை 'எப்போது வருவோம்

எப்போது வருவோம்!' என்ற எண்ணமே அவரை அலைக் கழித்துக் கொண்டிருந்தது.

குருதேவரோ அப்பொழுது அந்த இளைஞர்களுடன் விளையாடத் துவங்கி விட்டார். தன் வயதை மறந்தவராய்—அந்த இளைஞர்களோடு இளைஞராக அவர்களுடைய மிக மிக நெருக்கமான நண்பராகக் கேலியும் கிண்டலும் குறும்புகளும் பேசி, எல்லோரையும் வயிறு வெடிக்கும்படிச் சிரிக்க வைத்தார்.

ஆனந்தத்தை அளிப்பதற்குக் கூடியிருக்கும் சந்தைக்கடையாக அந்த இடம் ம-வுக்குத் தெரிந்தது. ஏதோ அற்புதம் நிகழவிருக்கிறது என்பதும் புரிந்தது.

ம-வியப்புடன் அந்த அற்புத மனிதரைப் பார்த்தார். "என்ன? நேற்று சமாதியிலும் என்றும் கண்டிராத பேரானந்தத்திலும் மூழ்கியவராக நாம் பார்த்தது இவரையா?

"இன்று இப்படி மிக மிகச் சாதாரண மனிதனைப் போல் பழகுகிறாரே!

"முதல் முறையாக எனக்கு உபதேசம் செய்த போது என்னைக் கடிந்து கொண்டவர் இவர்தானா?

"நீ என்ன ஞானியா?" என்று எச்சரித்தவரா இவர்?

"கடவுளுக்கு உருவம் உண்டு. கடவுள் அருவமும் கூட; இரண்டும் உண்மைதான் என்று சொன்னவர் இவர் தானா?

"கடவுள் ஒருவரே நிலையானவர், உலகப் பொருள்களெல்லாம் பொய் என்று எனக்குச் சொன்னது இவரா?

"இந்த உலகத்தில் ஒரு செல்வரின் வீட்டில் வேலை செய்து வரும் ஒரு வேலைக்காரியைப் போல் பற்றற்று நடந்து கொள்ளுமாறு சொன்னாரே அவர் தானா இவர்?" இப்படி எண்ணங்கள் உள்ளத்தில் ஓடின.

இளைஞர்களோடு அமர்க்களமாகச் சிரித்தபடியே குருதேவர் ம-வை நடு நடுவே நோட்டம் விட்டார்.

ம- வியப்பு வழிய அமைதியாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததும் ராம்லாலிடம் சைகை காட்டி, 'பார்த்தாயா? இந்தச்

சிறுவர்கள் எப்படியெல்லாம் சிரித்து விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்! அவனோ பேசாமல் 'உம்' என்று உட்கார்ந்திருக்கிறான். கொஞ்சம் வயதானவன் அல்லவா?' என்றார். அப்போது ம-விற்கு வயது இருபத்தேழு. தொடர்ந்து சென்று கொண்டிருந்த பேச்சு குருதேவரின் அறையில் மாட்டப்பட்டிருந்த அனுமான் படத்தின் மீது திரும்பியது.

குருதேவர் கூறினார்: அனுமனின் மனோ பாவத்தைப் பாருங்கள். பணமோ, புகழோ, உடல் சுகமோ எதையும் அவர் விரும்பவில்லை. இறைவன் ஒருவனையே விரும்பினார். பளிங்குத் தூணில் மறைத்து வைத்திருந்த பிரம்மாஸ்திரத்தை அவர் ஒரு சாதாரண குரங்கு போல எடுத்துக் கொண்டு ஓடிய போது மண்டோதரி பலவகையான பழங்களைக் காட்டி ஆசை காட்டினாள்! பழங்களில் ஆசை வைத்து அவர் அஸ்திரத்தைப் போட்டு விடுவார் என்று நினைத்தாள். ஆனால் அதற்கெல்லாம் மசிகிறவரா அனுமன்? மண்டோதரியைப் பார்த்து அவர் பாடத் தொடங்கினார்.

வேறு பழம் விழைவேனோ? பழவினையைக் கொய்யும்
　　மெய்ஞ்ஞானப் பழம் இருக்க, வீண்மயக்கம் உண்டோ?
பேறருளும் ஸ்ரீராமன் எழில்மரமாய் நெஞ்சில்
　　பெருகுகிறான்; மோட்சமெனும் நறுங்கனியைத் தருவான்
குன்றாத பசுமையுடன் என்மனத்தில் நிற்கும்
　　கோதண்டராமன் எனும் கற்பகத்தின்கீழே
நன்றாக நல்லின்ப நயம் கமழ வாழ்வேன்;
　　நான் விரும்பும் பழம் அனைத்தும் நினைத்தவுடன் பெறுவேன்.
தந்திரமாய் நீ கொடுக்கும் சாரமிலாக் கனியைத்
　　தருக எனக் கையேந்தும் இரவலனும் நானோ?
வெந்துயரக் காஞ்சிரங்காய் நீ சுவைக்கவிட்டு
　　வெளியேறிப் போகிறேன்; அதிவேகம் கொள்வேன்.

குருதேவர் இந்த பாட்டைப் பாடினார். மறுபடியும் சமாதி! மூச்சற்ற நிலை! பாதி மூடிய கண்கள்! அசைவற்ற உடல்! அவருடைய புகைப்படத்தில் இன்று நாம் காண்கிறோமே, அதே நிலை.

இதுவரை அவரோடு சேர்ந்து வேடிக்கை விநோதங்களில் ஈடுபட்டிருந்த பக்தர்களின் பார்வையெல்லாம் குருதேவரின் மீது பதிந்தன.

குருதேவரின் சமாதி நிலையை இரண்டாவது முறையாக ம– பார்த்தார். நீண்ட நேரத்துக்குப் பிறகு சமாதி கலைந்தது. குரு தேவருடைய உடல் பழைய நிலைக்குத் திரும்பியது. முகத்தில் புன்சிரிப்புத் தோன்றியது. கண், கை, கால்கள் அசைய ஆரம்பித்தன. கண்களில் ஆனந்தக் கண்ணீர் வழிந்தது. வாய் 'ராம் ராம்' என்று உச்சரித்தது.

''என்ன! இவ்வளவு பெரிய இந்த மகானு சற்று நேரத்திற்கு முன் ஐந்து வயதுச் சிறுவனைப் போல விலா வெடிக்கச்சிரித்துக் கொண்டிருந்தார்!'' என்று ம– நினைத்துக் கொண்டார்.

குருதேவர் முன்போல் தன் பழைய நிலையை அடைந்த வராய் சாதாரண மனிதனைப் போல் மீண்டும் பழகத் தொடங்கி னார். ம–வையும் நரேந்திரரையும் பார்த்து, ''நீங்கள் இரு வரும் ஆங்கிலத்தில் தர்க்கம் செய்யுங்கள் நான் கேட்கிறேன்'' —என்றார்.

ம–வும், நரேந்திரரும் இந்த வார்த்தைகளைக் கேட்டுச் சிரித் தனர். பிறகு இருவரும் பேச ஆரம்பித்தனர். பேச்சு வங்க மொழியிலேயே நடந்தது. குருதேவர் முன் ம–வினால் தர்க்கம் செய்ய முடியவில்லை. குருதேவரின் அருளால் தர்க்கம் செய்யும் மனப்பான்மையே அவரிடம்அடங்கிப் போய்விட்டது. குருதேவர் ஆங்கிலத்தில் பேசும்படி மேலும் வற்புறுத்தினார் என்றாலும் இருவரும் ஆங்கிலத்தில் பேசவில்லை. மணி ஐந்து அடித்தது. ம–வையும் நரேந்திரரையும் தவிர பக்தர்கள் எல்லோரும் குருதேவரிடம் விடை பெற்று வீட்டுக்குத் திரும் பினர்.

ம–கோயில் தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தார். உல வியபடியே அந்தத் தோட்டத்தின் ஒரு பக்கம் இருக்கும் வாத்துக் குளத்தின் அருகேவர நரேந்திரரும் குருதேவரும் குளக் கரையில் நின்று பேசிக் கொண்டிருப்பதைக் கண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் நரேந்திரனிடம் 'இதோ பார்! இன்னும் கொஞ்சம் அதிகமாக இங்கு வந்து போ. இப்போதுதான் நீ புதிதாக வர ஆரம்பித்திருக்கிறாய். மனிதர்கள் முதல் பழக்கத்

திலேயே அடிக்கடி சந்தித்துக் கொள்வதுண்டு. ஆரம்ப காலத்தில் காதலனும் காதலியும் அடிக்கடி சந்தித்துக்கொள்கி ருர்களே அதைப்போல. (இதைக் கேட்டு நரேந்திரனும் ம-வும் சிரித்தனர்) 'என்ன புரிந்ததா? அடிக்கடி வருகிருயா?'

நரேந்திரர் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவர். அவர்கள் வாக்குக்கொடுப்பதில் எச்சரிக்கையாக இருப்பார்கள். எனவே, சிரித்துக்கொண்டே 'முயற்சி செய்கிறேன்' என்ருர்.

மூவரும் குடிசை வழியாக நடந்து குருதேவரின் அறையை அடைந்தார்கள். குருதேவர் ம-வைப் பார்த்து, "இதோ பார்! குடியானவர்கள் காளேமாடு வாங்கச் சந்தைக்குப் போவார்கள். நல்ல காளே எது? கெட்டகாளே எது? என்று அவர்களுக்கு நன்ருகத் தெரியும். மாட்டின் வாலேத் தொடுவார்கள். தொட்ட உடனே சில காளேகள் மந்தமாக அப்படியே படுத்துக் கொள்ளும். அவை சொரணே கெட்டவை என்று விட்டு விடுவார்கள். நல்ல காளேயின் வாலேப் பிடித்ததும் அது விசுக் கென்று துள்ளிக்குதிக்கும். அந்த மாட்டை மட்டுமே வாங்கு வார்கள். நரேந்திரன் அப்படித் துள்ளிக்குதிக்கின்ற காளேயைப் போன்றவன். அவன் முழுக்கமுழுக்கத் துடிப்பு நிறைந்தவன்" என்ருர்.

இப்படிச் சிரித்துக்கொண்டே கூறிய குருதேவர் மேலும் தொடர்ந்தார். "இன்னும் சிலபேர் இருக்கிருர்கள். அவர்கள் பாலில் ஊறவைத்த அவல் போன்றவர்கள். சாரமோ, வீரமோ எதுவும் இல்லாதவர்கள். மனேதிடம் கொஞ்சம்கூட இல்லா தவர்கள்."

அப்போது சந்திவேளே. குருதேவர் கடவுள் நினேப்பில் மூழ்க ஆரம்பித்தார். ம-விடம் "நீ போய் நரேந்திரனிடம் பேசிப்பார். அவன் எப்படிப்பட்டவன் என்பதைப் பிறகு என் னிடம் வந்து சொல்" என்ருர்.

கோயிலில் மாலே வழிபாடு முடிந்தது. நீண்ட நேரம் தேடிய பிறகு ம- நரேந்திரனேக் கங்கைக் கரையின் அருகே சந்தித்தார். இருவரும் பேச ஆரம்பித்தனர். தான் ஒரு சாதாரண கல்லூரி மாணவன் என்றும் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவன் என்றும் நரேந்திரர் கூறிக்கொண்டார்.

மாலை முடிந்து நெடு நேரமாகிவிட்டது. ம- வீடு திரும்ப வேண்டும். ஆனால், குருதேவரைப் பிரிய அவரால் முடியவில்லை. ஆகவே, நரேந்திரரை விட்டுவிட்டுக் குரு தேவரைத் தேட ஆரம்பித்தார். குருதேவருடைய பாடல்களைக் கேட்டுத் தன் வசமிழந்த ம- மேலும் குருதேவர் பாடும் பல பாடல்களைக் கேட்க விரும்பினார். குருதேவரைப் பல இடங்களில் தேடியபின் இறுதியில் காளி கோயிலின் முன்மண் டபத்தின் நடுவே மேலும் கீழுமாக அவர் நடந்து கொண்டிருப் பதைப் பார்த்தார். கோயிலினுள்ளே காளியின் இரண்டு பக்கங் களிலும் இரண்டு விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. குரு தேவர் நடந்துகொண்டிருந்த மண்டபத்திலும் ஒற்றை விளக்கு ஒன்று மினுமினுத்தது. மண்டபம் முழுதும் நிறைந்த இருளின் நடுவே விளக்கின் ஒளியும் சேர்ந்து இருளும் ஒளியுமாக மண்டபம் விநோதமாகக் காட்சியளித்தது.

ம- குருதேவரின் இனிமையான பாடலைக் கேட்டுத் தன்னை மறந்தார். மந்திரத்தில் கட்டுண்ட பாம்புபோல் ஆனார். தயக்கத்தோடு குருதேவரிடம் 'இனிமேலும் தங்களின் பாட்டு ஏதாவது இருக்குமா?' என்று கேட்க, குருதேவர் சிறிது நேரம் யோசித்துவிட்டு 'இருக்காது, இனிமேல் பாட்டு ஒன்றும் இருக்காது' என்றார். பிறகு எதையோ நினைத்துக்கொண்டவர்போல், 'நான் விரைவில் கல்கத்தாவில் பலராமரின் வீட்டிற்கு வருவேன். அங்கே வா. நான் பாடு வதைக் கேட்கலாம்' என்றார். ம- அப்படியே வருவதாகக் கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பலராம்போஸை உனக்குத் தெரியுமா?"

ம: "இல்லை ஐயா! தெரியாது".

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பலராம்போஸின் வீடு போஸ்பரா வில் இருக்கிறது".

ம : "நல்லது சுவாமி. நான் தேடிக் கண்டுபிடித்துக் கொள்ளுகிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் ம-வுடன் மண்டபத்தில் மேலும் கீழும் நடந்துகொண்டே, 'உன்னை ஒன்று கேட்பேன். பதில் சொல்ல வேண்டும். என்னைப் பற்றி என்ன நினைக்கிறாய்?' என்றார்.

ம- மௌனமாக இருந்தார். குருதேவர் மறுபடியும் ம-வைப் பார்த்து, 'உன்னைத்தான், என்னைப்பற்றி என்ன நினைக்கிறாய்? எனக்கு எத்தனை அணு ஞானம் இருக்கிறது?'

ம : 'எத்தனை அணு என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால், இது மட்டும் நிச்சயம். இதற்குமுன் இப்படிப்பட்ட ஞானத்தையோ, கடவுளிடம் நம்பிக்கையையோ, துறவையோ, பரந்த மனத்தையோ நான் எங்குமே கண்டதில்லை.'

இதைக் கேட்டு குருதேவர் உரக்கச் சிரித்தார்.

ம- குருதேவரின்முன் வீழ்ந்து வணங்கி விடைபெற்றார். வீடு செல்லக் கோயிலின் பிரதான வாயில்வரை சென்ற ம-திடீரென்று எதையோ நினைத்துக்கொண்டு மறுபடியும் குருதேவரிடம் திரும்பிவந்தார். குருதேவர் இன்னும் அந்த ஒளியும் இருளும் கலந்த மண்டபத்தின் நடுவில் உலாவியபடி இருந்தார்.

மண்டபத்தின் மங்கிய ஒளியில் தன்னந்தனியாக, உலகம் முழுவதையும் மறந்து தன் ஆத்மாவில் மூழ்கியவராய், குருதேவர் உலவிக்கொண்டிருந்த இந்தக் காட்சி காட்டின் நடுவே வாழும் சிங்கம் தன்னந்தனியாக உலாவுவதுபோல் ம-வுக்குத் தோன்றியது. ம- அமைதியாக நின்றுகொண்டு குருதேவரின் அந்தப் பரமாத்ம நிலையைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (ம-வைப் பார்த்து) 'ஏன் திரும்பி வந்தாய்?'

ம : "தாங்கள் கல்கத்தாவில் வரச் சொல்லியிருக்கும் வீடு ஒரு பெரிய பணக்காரர் வீடாக இருக்கலாமென்று தோன்றுகிறது. நான் வந்தால் அவர்கள் என்னை ஒரு வேளை உள்ளே விடாமல் போகலாம். அதனால் நான் அங்கு வராமல் இருப்பதே நல்லது என்று நினைக்கிறேன். அதைக் காட்டிலும் நான் தங்களை இங்கு வந்தே தரிசிக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இல்லை இல்லை! நீ ஏன் அப்படி நினைக்கிறாய்? அங்கிருப்பவர்களிடம் என்னைப் பார்க்க வேண்டுமென்று என் பெயரைச் சொல். யாராவது ஒருவர் உன்னை என்னிடம் அழைத்து வருவார்."

ம- தலையசைத்துச் சரியென்று ஏற்றுக்கொண்டார். மறுபடியும் குருதேவரை வணங்கி விடைபெற்றார்.

# பக்தர்கள் கூட்டத்தில்

மார்ச் 11, 1882

இரவு மணி எட்டு இருக்கும். ஸ்ரீராமகிருஷ்ணர் ஏற்கெனவே தீர்மானித்திருந்தபடி கல்கத்தாவில் உள்ள பலராம்போஸ் எனும் பக்தருடைய இல்லத்திற்குச் சென்றார். டோல் யாத்திரை (சைதன்ய தேவர் பிறந்த தினம்) முடிந்து ஒரு வாரம் ஆகி இருந்தது. ராம், மனமோகன், ராக்கால், நித்யகோபால் இன்னும் சில பக்தர்கள் குருதேவரைச் சுற்றி நின்றுகொண்டிருக்க, அப்போது ம- வீட்டினுள் நுழைந்தார்.

சில நாட்களுக்குமுன் தட்சிணேசுவரத்தில் குருதேவர், 'நான் கல்கத்தாவில் பலராமருடைய வீட்டிற்குப் போவேன். நீயும் அங்குவா' என்று கூறியதற்கு ஏற்ப குரு தேவரைத் தரிசிக்க ம- வந்துசேர்ந்தார். பக்தர்களும், குரு தேவரும் ஹரிசங்கீர்த்தனம் செய்தவாறு ஆடியும் பாடியும்இறை யுணர்வில் மூழ்கிக்கிடந்தனர். அவர்களில் பலருக்குப் பரவச நிலை கிட்டியிருந்தது. பீறிட்டெழும் உணர்ச்சிக்கொந்தளிப்பால் நித்ய கோபாலரின் மார்பு சிவந்து காணப்பட்டது. ராக்கால் பர வசத்தில் ஆழ்ந்து, உலக நினைவு இழந்து தரைமீது கிடந்தார். குருதேவர் ராக்காலின் மார்பைத் தடவிய வண்ணம் "அமைதி, சாந்தி பெறு" என்று கூறிக்கொண்டிருந்தார். இப்பொழுது இரண்டாவது முறையாக ராக்காலுக்குத் தெய்வப் பரவசநிலை கிட்டியிருந்தது. தந்தையுடன் கல்கத்தாவில் வாழ்ந்து கொண்டிருந்ததால் அடிக்கடி குருதேவரைத் தட்சிணே சுவரத்தில் வந்து பார்த்துவிட்டுச் செல்வார். சியாம்புகூரில் உள்ள வித்யாசாகர் பாடசாலையில் படித்துவந்தார்.

சங்கீர்த்தனம் முடிந்த பிறகு பக்தர்கள் உணவு உட் கொள்ளத் தாழ்வாரத்தில் வந்து உட்கார்ந்து கொண்டனர். கட் டளையை எதிர்பார்த்துநிற்கும் ஒரு பணியாளைப்போல பலராம் போஸ் பணிவோடு நின்றுகொண்டிருந்தார். அந்த வீட்டின் யஜமானன் அவர்தான் என்று அவரைப் பார்த்த யாரும் அப் போது நினைத்திருக்கமாட்டார்கள். ம- அந்த இடத்திற்குப் புதி

யவர். நரேந்திரரைத் தட்சிணேசுவரத்தில் ஒருமுறை பார்த்த தோடு சரி. மற்ற பக்தர்களில் எவரிடமும் அவருக்கு இன்னும் அறிமுகமாகியிருக்கவில்லை.

சில நாட்களுக்குப் பிறகு ம- தட்சிணேசுவரம் சென்று குருதேவரைக் கண்டார்.

ம-வருவதற்குமுன் குருதேவர், தம்முடைய அறையில் தரையில் விரிக்கப்பட்டிருந்த படுக்கையில் சாய்ந்தவாறு ஓய்வு எடுத்துக்கொண்டிருந்தார். இருதயர் வேலையிலிருந்து நீக்கப்பட்டுக் காளி கோவிலைவிட்டுச் சென்றதிலிருந்து குருதேவருக்குச் சேவை செய்ய ஆளில்லாமல் இருந்தது. அடிக்கடி பாவ சமாதியில் மூழ்கிவிடும் குருதேவருக்குத் தன்னைத் தானே கவனித்துக் கொள்வது இயலாத காரியம். ஆளின்றி மிகுந்த தொல்லைப் பட்டார்.

ம- வந்தபோது மாலை 4 லிருந்து 5மணிக்கு இடைப்பட்ட நேரமாக இருக்கலாம். சிவாலயங்களின் படிக்கட்டில் குருதேவர் சென்று அமர்ந்தார். ம- அவர் அருகே சென்று உட்கார்ந்துகொண்டார். நடுவெளிக்கு அப்பால் எதிரே காணப்பட்ட ராதாகாந்தரது கோயிலைக் கண்ட மாத்திரத்தில் குருதேவர் பரவசநிலையை அடைந்தார்.

உலக அன்னையான காளிதேவியிடம் ஸ்ரீராமகிருஷ்ணர் பேசிக்கொண்டிருந்தார். 'அம்மா! இந்த உலகத்தில் ஒவ்வொருவரும் தன்னுடைய கடிகாரம் மட்டுமே சரியான மணியைக் காட்டுகிறது என்று கூறுகிறார்கள். என்ன அறியாமை! பிரம்ம சமாஜிகள், ஹிந்துக்கள், முகம்மதியர்கள், கிறித்துவர்கள் எல்லோரும் தங்களுடைய சமய மார்க்கமே சிறந்தது, சரியானது என்கிறார்கள். இவர்களில் யாருடைய கடிகாரமும் சரியான மணியைக் காட்டவில்லை என்பது தான் விஷயம். உன்னுடைய உண்மைநிலையை அறிபவர் யார்? அறிதற்கியலாத உன்னை மனமுருகி, ஏங்கி அழைத்தால் கருணைக் கடலாம் உன் அருளால் எந்தச் சமயத்தின் வழியாகவும் எல்லாச் சமய மார்க்கங்களின் மூலமாகவும் உன்னை அடையமுடியுமே! அம்மா! உன்னைக் கிறித்துவர்கள் தங்கள் மாதா கோவிலில் எப்படி அழைக்கிறார்கள்? இதை எனக்கு ஒருமுறை காட்டேன்! ஆனால், நான் அவர்கள் கோவிலுக்குச் சென்றால், இங்குள்ளவர்கள் என்னைப்பற்றி என்ன நினைப்பார்களோ? ஏதாவது

இடையூறுகள் ஏற்பட்டால்...? காளி கோயிலுக்குள் நான் செல்வது மறுக்கப்பட்டால்...? சரி அம்மா. கிறித்துவர்களின் கோவிலுக்கு வெளிப்புறத்திலிருந்தே நான் பார்க்க அருள் செய்.'

தட்சிணேசுவரக் கோயில். குருதேவருடைய அறை. பிறிதொரு நாள்.

குருதேவர் தம்முடைய அறையில் சிறிய கட்டிலின்மீது அமர்ந்துகொண்டிருந்தார். ஆனந்தமயமான தேஜோ வடிவம். புன்சிரிப்புத் தவழும் அருள்முகம்.

காளிகிருஷ்ண பட்டாச்சாரியா எனும் நண்பரை அழைத்துக் கொண்டு ம- அந்த அறைக்குள் நுழைந்தார். காளிகிருஷ்ணருக்கு, ம- தன்னை எங்கு அழைத்துக்கொண்டு வந்திருக்கிறார் என்பது தெரியாது. "உயர்ந்த மதுக்கடையைக் காணவேண்டும் என்று நீ விரும்பினால் என்னுடன் வா. அங்கே மதுரசம் நிரம்பி வழியும் ஒருபெரிய கள்குடம் இருக்கிறது. வந்து 'பார்'' என்று வேடிக்கையாகக் காளிகிருஷ்ணரை ம- அழைத்திருந்தார். இதை ம- குருதேவரிடம் கூறியபோது அவர் இந்த வேடிக்கையை நன்றாக ரசித்துப் பெரிதாகச் சிரித்தார்.

குருதேவர் கூறினார்: "இறைவனைப் பஜிப்பதால் வரும் பஜனானந்தம் அவனை உணர்ந்துகொள்வதால் ஏற்படுகின்ற பிரம்மானந்தம் இந்த ஆனந்தங்கள்தாம் பிரேமை எனப்படும் போதை. மனிதப் பிறவியின் நோக்கம், நம் வாழ்க்கையின் குறிக்கோள் கடவுளிடம் பக்தி செலுத்துதலேயாம். இறைவனை மனப்பூர்வமாக நேசிக்கும் பக்திதான் வாழ்க்கையின் சாரம். ஞான விசாரத்தினால் கடவுளை அறிவது மிகக் கடினம். இப்படிக் கூறிய குருதேவர் பாடத் துவங்கினார்:—

அன்பே உருவாம் அன்னைகாளியை அறிந்தவர் யாரோ உலகந் தனிலே!
ஆறும் வேத தரிசனம் எவையும் அவளை விளக்கும் திறனற்றனவே!
தன்மயக் களிப்பில் தனையே மறக்கும் தவயோகியரின் உட்பொருள் அவளே!
சாத்திரம் உரைத்திடும் தத்துவம் இதுவே என்பதை நாமே நன்குணர்த்திடுவோம்
தன்னுடை நிகரிலா விருப்பந்தன்னால் தானே ஆளும் பிரபஞ்சமெல்லாம்!
சக்தியாம் அவள்தன் உதரந்தனிலே அணுமுதல் அண்டம்வரை நிறைந் திடுமே!

என்னேதாயின் இப்பெரும் மகிமை! இதை அறிந்திலேயோ இன்னும் நீதான்?
ஆறும் யோகச் சக்கரங்களிலே மூலாதாரம் சஹஸ்ராரமெனும்
இந்நிலைகளிலே அன்னையைத் தியானம் செய்தின்புறுவர் யோகியரெல்லாம்!
ஈசனையன்றி வேறெவர்தாமே இவளுண்மைநிலை உணர்ந்தவர் ஆவர்?
இந்நிலைக் கமலப் பெருவெளிதன்னில் துணையாம் ஈசனுடன்னை திளைப்பள்!
இத்தகை மகத்தாம் அன்னையை உணர்ந்திட முயன்றிடும் அணுவாம் மனிதனை நினைத்தே
புன்னகை பூப்பள்! ராம்பிரசாத் தானே புரிந்திட நினைப்பது சிரிப்பினை யூட்டும்!
பொங்கும் எல்லையில் கடலினை நீந்தியே கடப்பேன் எனும் கற்பனை போலவே
என்மனம் அறிந்தது தாயாம் காளியை! ஐயகோ! ஜீவன் உணரவில்லையே!
இளம்பாலகன் ஒளிர் முழுநிலவதனைக் கையால் பிடிக்க முயல்வதைப்போலது.

குருதேவர் தொடர்ந்து பேசலானர்:—"கடவுளை நேசிப்பது ஒன்றே பிறப்பெடுத்ததன் நோக்கம். பிருந்தாவனத்துக் கோப கோபியர்களும், இடைச்சிறுவர்களும் கிருஷ்ணனிடம் எப்படிப் பட்ட அன்பினைக் கொண்டிருந்தார்கள்! ஸ்ரீகிருஷ்ணர் மதுரா விற்குப் புறப்பட்ட சமயம் அவருடைய பிரிவாற்றுமையால் இடைச்சிறுவர்கள் புலம்பிப்புலம்பி அழுதார்கள்." இவ்வாறு கூறிக்கொண்டே மேல்நோக்கிய பார்வையோடு குருதேவர், கிருஷ்ணன் பெயரைக்கூடச் சரியாக உச்சரிக்க முடியாது வெறும் 'கி கி'—என்று மட்டுமே கூறமுடிந்த இடைச்சிறுவர் களின் மன ஏக்கத்தைச் சித்தரிக்கும் வகையில் ஒரு பாட்டைப் பாடினர்.

ஒரு புதிய இடைச்சிறுவனைப் பார்த்தேன்!
அவன் இளங்கன்றைக் கையில் ஏந்தி
ஒரு மரக்கிளையைப் பற்றிநின்று
கேட்கிறன்! தம்பி, கிருஷ்ணன் எங்கே?
ஆனல், 'கி' என்கிறன்; கிருஷ்ணன் என்றது,
எங்கே என் சகோதரன்? எங்கே என் சகோதரன்
என்று கண்ணீர் வடித்துப் புலம்புகிறன்.

குருதேவரின் அன்பு கனிந்த பாட்டைக் கேட்ட ம-வின் கண்கள் ஆனந்தக் கண்ணீரால் நனைந்தன.

## ஞாயிற்றுக்கிழமை, ஏப்ரல் 2, 1882

கல்கத்தாவில் சியாம்புகூரில் வசித்துவந்த பக்தர் பிராண கிருஷ்ண முகோபாத்யாயருடைய வீட்டின் இரண்டாவது மாடியில் உள்ள வரவேற்பறையில் குருதேவர் பக்தர்கள் கூட்டத்தின் நடுவே அமர்ந்துகொண்டிருந்தார். சற்றுமுன்புதான் பக்தர்களுடன் பிரசாதம் அருந்தினர். நடுப்பகல் வேளை, சுமார் ஒன்று அல்லது இரண்டுமணி இருக்கும். கேப்டன் இந்தப் பகுதியில்தான் வசித்துவந்தார். குருதேவர் சிறிதுநேர ஓய்விற்குப்பின் கேப்டனை அவரது இல்லத்திலேயே சந்திக்க விரும்பினர். அதன் பிறகு அங்கிருந்து சென்று'கமலகுடீர்' என்ற இல்லத்தில் வசிக்கும் கேசவசேனரைப் பார்த்துப் பேசவேண்டும் என்று ஆவல் கொண்டிருந்தார். பிராணகிருஷ்ணர், ராம் மனமோஹன், கேதார், சுரேந்திரர், கிரீந்திரர், ராக்கால், பலராம், ம- முதலியவர்கள் அங்கே குழுமியிருந்தனர். அந்தப் பகுதியில் வாழும் செல்வர்களும், விருந்தினர்களும் வந்து கூடியிருந்தனர். அவர்களும் குருதேவர் கூறப்போவதைக் கேட்க மிக்க ஆவலோடு இருந்தனர்.

குருதேவர்: "இறைவனும் அவனுடைய செல்வமும். இவ்வுலக மனைத்தும் அவனுடைய செல்வங்களே. மக்கள் அவனுடைய செல்வத்தைமட்டும் கண்டு அவற்றில் மயங்கி விடுகின்றனரேயொழிய இந்த ஐசுவரியம் யாருடையதோ, அவரைத் தேடுவதில்லை. எல்லோரும் பெண், பொன் முதலிய சிற்றின்பங்களில் நாட்டம் கொள்கின்றனர். கடைசியில் அவர்களுக்குக் கிடைப்பதெல்லாம் இன்பத்திற்குப் பதிலாகத் துன்பமும் அமைதி இல்லாத நிலையும்தான். விசாலாட்சி நீர் ஓடையில் காணப்படுகின்ற நீர்ச்சுழி போன்றது இந்த உலகம். இதில் அகப்பட்டுக்கொண்ட படகிற்குக் கதிமோட்சமே இல்லை. மேலும் இந்த உலகத்தை ஒரு முட்புதர் என்று கூறலாம். இதில் சிக்கிக்கொண்ட மனிதன் சில முட்களிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்டிருக்கும்போதே வேறு சில முட்கள் அவனைத் தைத்துவிடுகின்றன. தடுமாறச்செய்யும் சிக்கல் வழி போன்றது இந்த உலகம். ஒருமுறை இதில் அகப்பட்டுக் கொண்டால் மீண்டும் வெளிவருவது மிகக் கடினம். மனிதன் உலகமாயையால் விரட்டப்படுகிறன். அதன் தாபத்தினல் பொசுக்கப்படுகிறன்.

ஒரு பக்தர்: "அப்படியானல் இதிலிருந்து தப்பும் வழி தான் என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "வழி இருக்கிறது. பிரார்த்தனையும் சாதுக்களுடைய சேர்க்கையும்தான் வழி."

"மருத்துவனிடம் போகாவிட்டால் நோய் குணமாவதில்லை. என்றோ ஒருநாள் மட்டும் சாதுக்களை நாடிச்செல்வது போதாது. சாதுக்களின் இடைவிடாத சங்கம் மிகவும் இன்றியமையாதது. ஏனெனில், வாழ்க்கை என்ற நோய் எப்பொழுதும் நம்மைப் பற்றிக்கொண்டே இருக்கிறது. மருத்துவனோடு நெருங்கிப் பழகினால்தான் நாடியைப்பற்றிய அறிவு நமக்கு ஏற்படும். அதற்கு அவன் பின்னாலேயே சுற்றி அலைய வேண்டும். அப்பொழுதுதான் எது பித்த நாடி, எது கபநாடி என்பது விளங்கும்."

பக்தர்: "சாதுக்களுடைய சேர்க்கையினால் என்ன பயன்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனிடம் ஆழ்ந்த பக்தி ஏற்படும். அவனிடம் உண்மையான அன்பு உதயமாகும். இறைவனுக்காக உள்ளம் உருகாவிட்டால் எந்தப் பயனும் கிடைக்காது. சாதுக்களின் சேர்க்கை வளர வளர இறைவனுக்காக உருகுகின்ற உள்ளம் உருவாகும். இறைவனுக்காக ஏங்கிநிற்கும் அவனது ஏக்கநிலை, நோயினால் பீடிக்கப்பட்ட நோயாளியைப் பற்றி அவனுடைய உறவினர்கள், அவன் நலமடைய வேண்டும் என்பதற்காக எப்படி ஏங்கிநிற்பார்களோ அதுபோன்றது.

"ஒருவனுக்கு வேலை போய்விட்டதாக வைத்துக்கொள்வோம். அவன் மறுபடி வேலை கிடைப்பதற்கு எவ்வளவு பாடுபடுவான்? இடைவிடாமல் பல்வகை அலுவலகங்களுக்குச் சென்று ஓயாது வேலை கேட்டுக்கொண்டேயிருப்பான். அதுபோன்றதுதான் இது. வேலை கிடைக்கும்வரை அவனிடம் அமைதி இருக்காது. அதுபோல இறைவனை அடையும்வரை உள்ளத்தில் அமைதியின்மையும் துடிப்பும் வேண்டும். வேலை காலி இல்லை என்று ஓர் அலுவலகத்தில் கூறினாலும் மறுநாள் மீண்டும் அதே அலுவலகத்திற்கு வந்து இன்று ஏதாவது வேலை காலி இருக்கிறதா என்று கேட்பான்.

"இறைவனை அடைய மற்றொரு வழி உண்டு. இறைவனுக்காக உள்ளம் உருகி இரங்குவது. அவனே நமது நெருங்கிய உறவினன். அவனிடம் முறையிட வேண்டும். 'நீ எப்படியிருக்கிறாய், உன் இயல்பு எத்தகையது என்பதை எனக்குக்

காட்டு! கண்டிப்பாகக் காட்டவேண்டும். இல்லையேல் என்னை நீ படைத்தது எதற்காக?' என்று அவனிடம் முறையிட்டுக் கதற வேண்டும்.

''சில சீக்கியர்கள் இறைவன் கருணையே வடிவானவன் என்று என்னிடம் கூறுவார்கள். நான் அவர்களிடம், இறைவனைக் கருணை வடிவானவன் என்று ஏன் கூறவேண்டும்? அவன் நம்மைப் படைத்தவன். நம்மைக் காப்பாற்ற வேண்டியது படைத்தவனாகிய அவன் பொறுப்பல்லவா? இதில் என்ன வியப்பிருக்கிறது? என்று பதிலளித்தேன். தாய், தந்தையர்கள் தங்கள் குழந்தைகளைக் காப்பாற்றவில்லையா? அது குழந்தையிடம் அவர்கள் கொண்ட கருணையினாலா? அவர்கள் கடமை அல்லவா அது? ஆகவே, கடவுளிடம் பிரார்த்தனை செய்ய வேண்டும். அவரன்றோ நம்முடைய நிரந்தரமான தாயும் தந்தையும்.

மகன் உண்ணாவிரதம் இருந்து பிடிவாதம் பிடித்து, தனக்குச் சேரவேண்டிய சொத்தைத் தரும்படி தந்தையிடம் வற்புறுத்தினால், சில ஆண்டுகள் முன்னதாகவே சொத்தைப் பாகம் பிரித்து மகனுக்குக் கொடுத்துவிடுகிறார். ஒரு குழந்தை தாயை வற்புறுத்திக் காசு கேட்கிறது. முதலில் தாய் தர மறுக்கிறாள். ஆனால், குழந்தை பிடிவாதமாகத் திரும்பத்திரும்ப வற்புறுத்துகிறது! 'உன் காலில் விழுந்து கெஞ்சிக் கேட்கிறேன், எனக்குக் காசு கொடு' என்கிறது. அப்போது குழந்தையின் பிடிவாதத்தைக் கண்டு வேறு வழியில்லாமல் தாய் காசு கொடுத்து விடுகிறாள். அதுபோல நமக்கு வேண்டியதைக் கடவுளிடம் கேட்டுப்பெறலாம்.

''சாது சங்கத்தினால் மற்றொரு பயனும் உண்டு. அதாவது நிலையானது எது? நிலையற்றது எது? என்ற விவேகம் உண்டாகிறது. இறைவன் ஒருவனே நிலையான பொருள். மற்ற அனைத்தும் நிலையற்றவை. மனது உலக விஷயங்களை, நிலையற்ற பொருள்களை நாடும்பொழுது, விவேகத்தைப் பயன்படுத்த வேண்டும். அடுத்தவன் வீட்டு வாழை மரத்தைத் தின்ன யானை தன் துதிக்கையை நீட்டும்பொழுது யானைப் பாகன் உடனே துதிக்கையின்மீது ஓர் அடி அடிக்கிறான்.''

மற்றொருவர்: ''ஐயா! பாவ புண்ணியங்கள் ஏன் உண்டாகின்றன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனது படைப்பில் பல வகை உண்டு. நல்லவர்களைப் படைத்திருக்கிறான். அவனே தீயவர்களையும் படைத்திருக்கிறான். நல்ல அறிவை அளிப்பவனும் அவனே; தீய அறிவை அளிப்பவனும் அவனே."

பக்தர்: "அப்படியானால் நாம் செய்யும் பாவத்திற்கு நாம் பொறுப்பாளி அல்ல."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பாவம் செய்தால் அதன் பயனை அடைந்தே தீரவேண்டும். இதுவே இறைவனது கோட்பாடு. மிளகாயைக் கடித்தால் காரத்தைச் சுவைத்தே ஆகவேண்டும் அல்லவா?"

மதுரா நாத் *இளவயதிலே தாறுமாறாக வாழ்ந்தார். அதன் விளைவாக இறக்கும் தறுவாயில் பலவித நோய்களுக்கு உள்ளானார். இளவயதில் இதுபற்றி ஒன்றும் தெரிவதில்லை. காளி கோவிலில் பிரசாதம் சமைக்க விறகு உபயோகிப்பதைப் பார்த்திருக்கிறேன். ஈரமான கட்டைகளின் முன்பாகம் எப்படியோ எரிந்துவிடுகிறது. அவற்றில் இருக்கும் தண்ணீர் அப்பொழுது நமக்குத் தெரிவதில்லை. விறகு எரியும்போது அந்தத் தண்ணீர் அக்கட்டையின் பின்புறத்திற்கு வரத்துவங்குகிறது. அவ்வாறு வெளிவரும் தண்ணீர் 'புஸ் புஸ்' என்ற சப்தத்தோடு நெருப்பையே அணைத்துவிடுகிறது. அதனால் தான் காமம், வெகுளி, பேராசை இவற்றிலிருந்து தப்ப வேண்டும். கொஞ்சம் கவனித்துப்பார். அனுமாருக்குக் கோபம் வந்தபோது இலங்கையை எரிக்க ஆரம்பித்தார். பிறகே அசோகவனத்தில் சீதை இருப்பது நினைவிற்கு வந்தது. உடனே என்ன செய்வது என்று அறியாமல் பதைபதைத்துப் போனார். சீதைக்கு ஆபத்து வந்துவிடுமே என்ற எண்ணம் அவரை வாட்டியது.

பக்தர்: "அப்படியானால் இறைவன் துஷ்டர்களைப் படைத்ததன் காரணம் என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அது அவருடைய விருப்பம். அது அவருடைய விளையாட்டு. அவரது படைப்பில் வித்யா மாயையும் உண்டு, அவித்யா மாயையும் உண்டு. இருட்டின் அவசி

---

* ராணி ராஷ்மணியின் மருமகன் காளி கோவில் நிர்வாகத்தைக் கவனித்துவந்தார். குருதேவர்பால் அளவிலா அன்பு கொண்டிருந்தார்.

யமும் இருக்கின்றது. இருட்டு இருப்பதனால்தான் வெளிச்சத்தின் பெருமை விளங்குகிறது. காமம், வெகுளி, பேராசை முதலியவை தீயவைகள் தாம். அதில் சந்தேகமில்லை. அப்படியானால், இறைவன் அவற்றை ஏன் நம்மிடம் வைத்திருக்கிறான்? சாதுக்களை உண்டுபண்ணுவதற்காகத்தான். பொறிகளை அடக்கியாண்டால் உயர்ந்தவர்கள் ஆகலாம். பொறிகளை வென்றோன் இந்த உலகில் சாதிக்க முடியாதது எதுவுமில்லை. கடவுட் காட்சியும் அவருடைய கருணையால் அவனுக்குக் கிட்டும். சற்றே கவனி. இன்னொரு விதமாகப் பார்க்கும்பொழுது காமத்தை முன்வைத்தே இறைவன் தன்னுடைய படைப்பாகிய விளையாட்டைத் தொடர்ந்துநடத்துகிறான்.

''தீயவர்கள் இருக்கவேண்டியதும் அவசியம்தான். ஒரு கிராமத்துவாசிகள் மிகவும் கொடியவர்களாக இருந்தார்கள். அவர்களை அடக்க, கோலாக்சௌதிரி என்ற ஒரு பயங்கர மனிதனை ஆட்சியாளர் அனுப்பினர். அவனுடைய பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே அந்தக் கிராமவாசிகள் நடுநடுங்கினர். அவனிடம் நாம் ஏன் உதைபட வேண்டும் என்று எண்ணினார்கள். எல்லா வகையான மக்களும் வேண்டும். சீதை இராமனைப் பார்த்து, 'நாதா! அயோத்தியில் பல வீடுகள் இடிந்தும் பழையதாகவும் தென்படுகின்றனவே! எல்லா வீடுகளும் மாளிகைகளாக இருந்தால் எவ்வளவு அழகாக இருக்கும் என்று கேட்டபோது இராமர், 'சீதா! எல்லா வீடுகளும் அழகாக இருந்தால் கொத்தனார்களின் பிழைப்பு என்ன ஆவது' என்றார். (எல்லோரும் சிரிக்கின்றனர்)

இறைவன் பலவிதமான படைப்புக்களைப் படைத்திருக்கிறான். நல்ல பழங்களைத் தரும் மரம் இருக்கிறது. விஷக்கனியைத்தரும் மரமும் உள்ளது. உபயோகமற்ற புதர்கள் முதலியவற்றையும் இறைவன் படைத்திருக்கிறான். விலங்குகளிலும் நல்லவை, தீயவை இரண்டும் இருக்கின்றன. புலி, சிங்கம், பாம்பு இவைகளும் இருக்கின்றன.''

பக்தர்: ''ஐயா! இல்லறத்தில் இருந்துகொண்டே இறைவனை அடையமுடியாதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கண்டிப்பாக முடியும். ஆனால், முன் கூறியதுபோல் சாதுக்களுடைய சேர்க்கையும், இடைவிடாத பிரார்த்தனையும் முக்கியம். இறைவனிடம் அழவேண்டும்.

மனத்தின் மலம் துடைக்கப்பட்டால் அவரது காட்சி கிடைக்கும். மனம் சேற்றினுல் மூடப்பட்டுள்ள ஊசி போலிருக்கிறது. கடவுள் காந்தக்கல். சேற்றினுல் மூடப்பட்டுள்ள ஊசியை காந்தம் இழுப்பதில்லை. இறைவனை வேண்டி அழுவதால் மனத்தைக் மூடியிருக்கும் சேறு கரைந்து ஓடிவிடும். காமம் வெகுளி. ஆசை, தீய எண்ணம், பொருட்பற்று இவையே மனத்தை மூடியிருக்கும் சேறு. மூடியிருக்கும் சேற்றை அகற்றி விட்டால் இறைவனுகிய காந்தம் ஊசியாகிய மனத்தைத் தன்னிடம் இழுத்துக்கொள்ளுகிறது. அதாவது இறைவனுடைய காட்சி கிட்டுகிறது. நன்ருகச் சுரம் கண்டிருக்கும் நிலையில் வெறும் 'கொய்னு' மாத்திரை எதைச் சாதிக்க முடியும்? இல்லறத்திலிருந்துகொண்டே ஏன் கடவுளை அடைய முடியாது? நிச்சயமாக அடையமுடியும்.

"வேண்டுவதெல்லாம் சாதுக்கள் சேர்க்கை, அழுது அழுது பிரார்த்தனை செய்வது, இடையிடையே தனிமையில் வாழ்வது முதலியன. வேலி இல்லையேல் சிறிய செடியை ஆடு, மாடுகள் தின்றுவிடும்."

பக்தர்: "அப்படியானுல் இல்லறத்தில் வாழ்பவனும் இறைவனை அடைவான். அப்படித்தானே?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "எல்லோரும் வீடுபேற்றை அடையலாம். அதற்குக் குரு காட்டிய வழியில் செல்வது அவசியம். தவருன வழியில் சென்ருல் திரும்பிவர வேண்டிய தொல்லை ஏற்படும். வீடுபேறு அடைய அதிகக் கால தாமதம் ஆகும். இந்தப் பிறவியில் கிட்டாதும் போகலாம். அல்லது பல பிறவிகளுக்குப் பிறகு வாய்க்கலாம். சனகர் முதலியோர் இல்லறத்தில் இருந்துகொண்டே கடமைகளைச் செய்துவந்திருக்கின்றனர். இறைவனிடம் சித்தத்தை வைத்துச் செயல்புரிந்தனர். இது நடனப்பெண் தலையில் குடம் வைத்துக்கொண்டு நடனமாடுவது போலாகும். தலையின்மீது தண்ணீர்க் குடத்தைச் சுமந்து மெதுவாகப் பேசிக்கொண்டே ஆடி, அசைந்து, தண்ணீர் கொண்டுசெல்லும் மேற்கத்திய பெண்களை நீ பார்த்ததில்லையா?"

பக்தர் : "குருவின் உபதேசத்தைப்பற்றிக் குறிப்பிட்டீர்கள். குரு எவ்வாறு கிடைப்பார்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "எல்லோரும் குரு ஆகிவிடமுடியாது. மிதந்துகொண்டிருக்கும் ஒரு பெரிய மரக்கட்டை பல மனிதர்களையும், விலங்குகளையும் ஆற்றைக் கடந்து அழைத்துச் செல்லக் கூடும். ஆனால் உறுதியற்ற கட்டையின்மேல் உட்கார்ந்தால் கட்டை மூழ்குவதுடன் நாமும் மூழ்கிவிடுவோம்.

"ஆகவே, ஒவ்வொரு யுகத்திலும் மனிதனுக்கு ஞானத்தை வழங்க இறைவனே அவதரிக்கிறான். சச்சிதானந்தமே குரு.

"ஞானம் என்றால் என்ன? நான் யார்? எல்லாம் இறைவன் செயலே. நம்மால் ஆவது ஒன்றுமில்லை. இப்படி நினைப்பது தான் ஞானம். என்னால் ஆவது ஒன்றுமில்லை. நான் கடவுளின் கையிலுள்ள கருவி என்று நினைப்பதும் ஞானம். அதனால்தான் 'நீ என்னை ஆட்டுவிப்பவன், நான் ஆடுபவன்; நீ வசிப்பவன், நான் வீடு; நீ இயக்குபவன், நான் இயந்திரம்! நீ எப்படி என்னை நடத்துகிறாயோ, அப்படியே நான் நடக்கிறேன். எப்படிச் செய்யச்சொல்லுகிறாயோ, அப்படியே செய்கிறேன். எப்படிப் பேசச் சொல்லுகிறாயோ, அப்படியே பேசுகிறேன். நான் இல்லை; நான் இல்லை; எல்லாம் நீதான், நீதான் என்று நான் கூறுவேன்."

பின்னர் ஸ்ரீராமகிருஷ்ணர் பிராணகிருஷ்ணருடைய வீட்டிலிருந்து கர்னல் விஸ்வநாதருடைய வீட்டிற்கும் அங்கிருந்து கமலகுடீர் என்ற இல்லத்திற்கும் சென்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் கேசவரின் வீடான 'கமலகுடீரு'க்கு வந்தபோது மாலை சுமார் 5 மணி இருக்கும். குருதேவர் வந்திருக்கும் செய்தி வீட்டினுள் இருக்கும் கேசவருக்கு அறிவிக்கப்பட்டது. அந்நேரம் கேசவர் நோய்வாய்ப்பட்டிருந்த தன் நண்பர் ஒருவரைக் காணப் புறப்பட்டுக்கொண்டிருந்தார். குருதேவர் வந்திருக்கும் செய்தியைக் கேள்விப்பட்டதும் வெளியில் செல்வதற்காக அணிந்த உடைகளைக் களைந்துவிட்டு சாதாரண வேட்டி சட்டையை அணிந்துகொண்டுவந்து ஸ்ரீராமகிருஷ்ணரை வணங்கினார்.

கேசவரைக் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் அவரிடம் "உங்களுக்குப் பொறுப்புகள் அதிகம். ஏகப்பட்ட வேலை. அதோடு பத்திரிகையும் நடத்தியாக வேண்டும். அதனால் தட்சிணேசுவரம் வருவதற்கு உங்களுக்கு நேரமே இருப்பதில்லை. எனவே நானே உங்களைப் பார்க்க, இப்போது வந்துவிட்டேன். நீங்கள்

உடல் நலமில்லாததைக் கேள்விப்பட்டதும் நீங்கள் உடல் நலம் பெறுவதற்காக அன்னை காளிக்கு இளநீரும் சர்க்கரையும் படைப்பதாகப் பிரார்த்தித்துக்கொண்டேன். காளியிடம் தாயே! "கேசவருக்கு[1] ஏதாவது நடந்துவிட்டால் கல்கத்தா போகும்போது அங்கு நான் யாரோடு பேசுவேன்" என்று முறையிட்டுக்கொண்டேன்.

பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் அங்கிருந்த பிரதாப் முதலான மற்ற பிரம்மோ பக்தர்களிடமும் பேசினார். குருதேவர் தன் அருகே அமர்ந்திருக்கும் ம- வைச் சுட்டிக்காட்டிக் கேசவரிடம் "இவர் இப்பொழுதெல்லாம் தட்சிணேசுவரத்திற்கு வருவதே இல்லை. ஏன் என்று தயவுசெய்து கேளுங்கள். திரும்பத் திரும்ப மனைவியிடமோ, பிள்ளைகளிடமோ தனக்கு எந்தவித பாசமும் இல்லை என்று கூறுகிறார். ஆனால் என்னவோ தட்சிணேசுவரத்திற்கு மட்டும் வருவதில்லை."

ஒரு மாத காலமாகத் தட்சிணேசுவரம் சென்று குருதேவரைத் தரிசித்துக்கொண்டிருந்த ம- கொஞ்ச நாட்களாகத் தட்சிணேசுவரத்திற்குப் போகவில்லை. அதுதான் குருதேவரின் இந்தப் பேச்சுக்குக் காரணம். ம- தட்சிணேசுவரம் வருவது தாமதப்படுமாயின் அதுபற்றித் தனக்குக் கடிதம் எழுதுமாறு குருதேவர் ம- விடம் கூறினார்.

பண்டிதர் சாமாத்யாயி என்பவரும் அங்கிருந்தார். பிரம்மோக்கள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அந்தப் பண்டிதரைச் சுட்டிக் காட்டி, "இவர் ஒரு பெரிய பண்டிதர். வேதத்திலும் மற்ற சாஸ்திரங்களிலும் நல்ல ஞானம் உடையவர்" என்று கூறி அறிமுகப்படுத்தினார்கள். குருதேவர் உடனே, 'ஆமாம்; ஆமாம்; கண்ணாடி பீரோவிற்குள் இருக்கும் பொருளை எப்படித் தெளிவாகக் காணமுடியுமோ அப்படி இவர் மனத்தில் இருப்பதை நான் அவருடைய கண்கள் வழியாகத் தெளிவாகப் பார்க்கிறேன்' என்றார்.

---

1. பிரம்மசமாஜத் தலைவர் கேசவர். கேசவரைக் குருதேவர் மிகவும் நேசித்தார். ஸ்ரீராமகிருஷ்ணர்- கேசவர் சந்திப்பு முதன்முதலில் பெல்கேரியா என்ற இடத்தில் 1875- ல் நிகழ்ந்தது. அதை அடுத்துப் பல முறை இருவரும் சந்தித்துள்ளனர். கேசவருக்குக் குருதேவரிடம் மிக்க மதிப்பும் மரியாதையும் அளவற்ற அன்பும் ஈடுபாடும் இருந்தன. இவ்விருவரும் சந்தித்துக்கொண்ட சந்திப்புக்களின் விவரத்தை அனுபந்தத்தில் காண்க. (3-ம் பாகம்).

பிறகு திரைலோக்யர் பாடத்துவங்கினர். திடீரென்று குருதேவர் எழுந்துநின்றார். அவருக்கு சமாதி கூடிற்று. பிறகு அந்த நிலையிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக இறங்கிவந்து உலக நினைவு பெற்றபின் குருதேவர் பாடியபடியே நடனமாடத் தொடங்கினர்.

சாதா ரணமது நான்குடியேன்
சந்தத மின்ப மதுக்குடிப்பேன்
மாதா காளியின் நாமமதை
மறவா தோதும் போதினிலே
உள்ளத் தேயெழும் வெறிகாண்பார்
ஓதுவர் என்னைக் குடியனென்றே.

தம் அன்புக் குகந்த கேசவரைக் குருதேவர் அருள்கனிந்த பார்வையோடு நோக்கினர். கேசவர் குருதேவருக்கு மிகவும் நெருங்கியவர். ஆதலால் எங்கே கேசவர் ஒருவேளை சம்சார மக்களோடு சேர்ந்துவிடுவாரோ என்ற பயம் குருதேவருக்கு. அவரைப் பார்த்தபடியே மறுபடியும் பாடலானர்.

பகர்ந்திட யானும் பயப்படு கின்றேன்!
பகரா திருக்கவும் பயப்படு கின்றேன்!
எங்கே மணியை இழந்திடு வேனே,
இழந்திடு வேனே என்றஞ் சுகின்றேன்!
உன்மனம் உன்வசம் உளது, நன் கறிவேன்!
அதனல் மந்திரம் அளித்தேன் உனக்கே!
இத்திரு மந்திரம் இனிஉன் னதுவே!
உன்மனம் இக்கணம் உள்ளதுன் னிடமே!
எம்மணி மந்திரம் எதிர்விபத் தினின்றும்
உன்னைக் காக்கும் உலகம் இதிலே?

பாடலின் கடைசிப் பகுதியை மீண்டும் ஒரு முறை பாடிய குருதேவர் கேசவரிடம் கூறத் தொடங்கினர். இந்தப் பாடலின் கருத்து: எல்லாவற்றையும் துறந்து கடவுளையே நம்பி இரு. கடவுள் ஒருவர்தான் நிலையானவர். மற்றவை அனைத்தும் மாயை (நிலையற்றவை). கடவுளைக் காணவில்லையென்றல் மற்ற எல்லாமே வீண்! இதுதான் மஹாமந்திரம்.

குருதேவர் மீண்டும் அமர்ந்து பக்தர்களோடு பேசத் துவங்கினர். தாழ்வாரத்தின் ஒரு மூலையில் ஒரு பக்தன் 'பியானே

வாசித்துக்கொண்டிருந்தான். சிரித்த முகத்தோடு குருதேவர் அவனருகில் சென்று பியானே வாசிப்பதைக் கண்டு ஒரு குழந்தையைப்போல் ரசித்தார். சிறிது நேரத்தில் குருதேவரைப் பெண்கள் வசிக்கும் வீட்டின் உட்பகுதிக்கு அழைத்துச் சென்றனர். அங்கே பெண்கள் அனைவரும் வந்து வணங்கினர். தின்பண்டங்களைச் சுவைத்து நீரைப் பருகினர் குருதேவர்.

குருதேவரைத் திரும்ப அழைத்துச்செல்ல வாயிலில் வண்டி வந்துநின்றது. குருதேவர் அதில் ஏறிக்கொள்ள பக்தர்கள் வண்டியின் அருகே கூட்டமாக வந்து நின்றார்கள். கமலகுடீரை விட்டு வண்டி தட்சிணேசுவரம் நோக்கிப்புறப்பட்டது.

---

# வித்யாசாகரைச் சந்தித்தல்

**சனிக்கிழமை, ஆகஸ்டு 5, 1882**

ஸ்ரீராமகிருஷ்ணர் வித்யாசாகரைச் சந்திக்க வண்டியில் சென்றுகொண்டிருந்தார். பவநாத், ம-, ஹாஸ்ரா முதலியோரும் உடன் சென்றனர்.

குருதேவர் ஹுக்ளி மாவட்டத்தில் உள்ள கமார்புகூர் என்னும் கிராமத்தில் பிறந்தவர். அதன் அருகே உள்ள வீர்சிங் எனும் கிராமம்தான் வித்யாசாகர் பிறந்த ஊர். ஸ்ரீராமகிருஷ்ணர் இளமையிலேயே வித்யாசாகரின் உதாரகுணத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்த பிறகு அவருடைய பல்வேறு சிறந்த குணங்களையும் அறச் செயல்களையும் அதிகமாகக் கேள்விப்பட்டு அவரைக் காண வேண்டும் என்று பல நாட்களாகப் பெரிதும் ஆவல் கொண்டிருந்தார்.

ம- வித்யாசாகர் பள்ளியில் ஆசிரியராக வேலைபார்க்கிறார் என்று அறிந்ததும், "வித்யாசாகரிடம் என்னை அழைத்துச் செல்கிறாயா? அவரைக் காண எனக்குப் பெரிதும் ஆவலாக இருக்கிறது" என்று குருதேவர் கேட்டார். வித்யாசாகரிடம் ம- இதைத் தெரிவித்தபோது அவர் மிகுந்த மகிழ்ச்சியோடு ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்திக்க இசைந்தார். ஒரு சனிக்கிழமை மாலை நான்கு மணி அளவில் ஸ்ரீராமகிருஷ்ணரைக் காண ஏற்பாடு செய்யும்படி கூறினார். பிறகு ம-வைப் பார்த்து, "ஒரே ஒரு விஷயம். பரமஹம்சர் எப்படிப்பட்டவர்? காவி உடை அணிந்தவரா?" என்று கேட்டார். அதற்கு ம- "அப்படியொன்றும் இல்லை ஐயா. அவர் ஒரு விசித்திரமான மனிதர். குடும்பஸ்தர்போல் சிவப்புக்கரை வேட்டியும், சட்டையும், பாலிஷ் போட்ட செருப்பையும் அணிகிறார். ராணிராசமணி கட்டிய தட்சிணேசுவரக் கோயிலில் ஓர் அறையில் வசித்துவருகிறார். மெத்தையோடு கூடிய கட்டிலையும் கொசுவலையையும் பயன்படுத்துகிறார். தெய்விகத்தைக் காட்டும் வெளி அடை

யாளங்கள் எதுவும் அவரிடம் இல்லை. ஆனால், கடவுளைத் தவிர, அவருக்கு வேறு எதுவுமே தெரியாது. இரவும் பகலும் ஈசன் நினைப்பிலேயே வாழ்ந்துவருகிறார்'' என்றார்.

தட்சிணேசுவரக் கோயிலிலிருந்து புறப்பட்ட வண்டி யாலத்தைக் கடந்து சியாம்பஜார் வழியாக மெல்ல ஆமர்ஷட் வீதியை அடைந்தது. 'நாம் இப்பொழுது பாதூர்பகானை நெருங்கிக்கொண்டிருக்கிறோம்' என்று பக்தர்கள் கூறினார்கள். இந்தப் பகுதியில்தான் வித்யாசாகர் வாழ்கிறார். இதுவரை குழந்தையைப்போல மிகுந்த மகிழ்ச்சியோடு பேசிக் கொண்டேவந்த குருதேவர் ஆமர்ஷட்வீதி வந்ததும் திடீரென்று தெய்விகப் பரவசத்தை அடைந்தார். ஆவேசம் கொண்ட நிலையில் அவர் இருப்பதாகத் தோன்றியது.

வண்டி ராஜாராம்மோகன்ராயின் மாளிகை வழியாகச் சென்றுகொண்டிருந்தபொழுது பரமஹம்சரின் பரவசநிலையைக் கவனிக்காத ம- பரபரப்போடு 'இதுதான் ராம்மோகன்ராயின் வீடு' என்றார். ஸ்ரீராமகிருஷ்ணரோ எரிச்சலடைந்தவராக 'இது போன்ற பேச்சுக்களையெல்லாம் இப்பொழுது பேசாதே' என்றார். குருதேவர் தெய்விகப் பரவசநிலையில் ஆழ்ந்திருக்கும்போது இத்தகைய உலகப் பேச்சுக்களைக் கேட்கச் சிறிதும் விரும்புவதில்லை.

வித்யாசாகரின் வீட்டுவாசலில் வண்டி வந்துநின்றது. மேல்நாட்டு முறையில் கட்டப்பட்டிருந்த இரட்டை மாடி வீடு அது. மிகப்பரந்த இடம். நாற்புறமும் மதில்சுவர். நடுவில் வீடு. வீட்டைச்சுற்றி மலர்கள் பூத்துச் சொரியும் செடி கொடிகளும், பல பழமரங்களும், அழகான புல்வெளியும், பாதைகளும் இருந்தன. வீட்டின் மேற்குப்புறமுள்ள படிக்கட்டு களின் வழியாக மாடியை அடையலாம். மேல்மாடியில்தான் வித்யாசாகர் வசிப்பது வழக்கம்.

படிக்கட்டுகள் வழியாக ஏறி மாடியை அடைந்தால் அடுத் தடுத்துப் பல அறைகளைக் காணலாம். கிழக்கில் ஒரு பெரிய விருந்தினர் அறை உண்டு. இந்த அறைக்குக் கிழக்கே இருப்பது வித்யாசாகரின் படுக்கை அறை. இதை ஒட்டினாற்போலுள்ள அறையில் ஒரு நூலகம்போல் பல அரிய நூல்கள் அறை முழு வதும் நிறைந்திருந்தன. அலமாரிகளில் பைண்டு செய்யப்பட்ட நூல்கள் அழகாக அடுக்கிவைக்கப்பட்டிருந்தன. விருந்தினர்

அறையின் ஒரு மூலையில் மேசை, நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. வித்யாசாகர் இந்த இடத்தில் அமர்ந்துகொண்டு தன் வேலைகளைக் கவனித்து வந்தார். அவரைப் பார்க்க வருபவர்கள் இந்த நாற்காலிகளில் அமர்ந்துகொள்வார்கள். மேசையின் மேல் பல எழுதுகருவிகள், தாள்கள், மைக்கூடு, பல கடிதங்கள், நோட்டுப் புத்தகங்கள், கணக்குப் புத்தகங்கள் முதலியன இருந்தன.

மேசையின்மேல் உதவி கோரிப் பலபேர் எழுதிய கடிதங்கள் வைக்கப்பட்டிருந்தன. யாரோ ஒரு விதவை இப்படி எழுதியிருந்தாள். "என் கைக்குழந்தை அனாதையாக இருக்கிறது. காப்பாற்ற யாரும் இல்லை. நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்."

மற்றொரு கடிதம். இதுவும் ஒரு விதவை எழுதிய கடிதமே. "என் கணவர் இறந்துவிட்டார். எனக்குச் சேரவேண்டிய பணத்தை இதுவரை பெறமுடியவில்லை. மிகவும் துன்பப்படுகிறேம். உதவிசெய்ய வேண்டும்."

மற்றொரு ஏழை மாணவன் எழுதியிருந்தான். "உங்கள் பள்ளிக்கூடத்தில் இலவசமாக என்னைச் சேர்த்துக் கொண்டார்கள். ஆனால், புத்தகம் வாங்க எனக்குச் சக்தியில்லை. தயவு செய்து உதவவேண்டும்."

"என்னுடைய குடும்பம் பசியால் துடிக்கிறது. அருள் கூர்ந்து, ஒரு வேலை பார்த்துக்கொடுக்கவேண்டும்." இப்படி ஒரு கடிதம்.

மற்றொரு கடிதம். வித்யாசாகருடைய பள்ளியில் வேலை பார்க்கும் ஆசிரியர் எழுதியிருந்தார். "என் சகோதரி விதவையாகிவிட்டாள். அவளையும் இப்போது நான் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. இப்போதைய சம்பளம் போதவில்லை. மனமிரங்கி உதவிபுரிய வேண்டும்."

இன்னொரு கடிதம் யாரோ மேலைநாட்டவர் எழுதியது. "நான் இங்கே மிகுந்த துன்பத்திற்குள்ளாகி இருக்கிறேன். நீங்கள் ஏழைகளின் நண்பர் என்று கேள்விப்பட்டேன் கொஞ்சம் பணம் அனுப்பி என்னை இப்போதைய துன்பத்திலிருந்து விடுவிக்கவேண்டும்."

இன்னும் ஒருவர் "குறிப்பிட்ட இந்தத் தேதியில் விசாரணை நடக்கிறது. அன்று தாங்கள் இங்கே வந்து எங்கள் வழக்கைத் தீர்த்துவைக்கவேண்டும்" என்று எழுதியிருந்தார்.

குருதேவர் வெள்ளை உடை அணிந்து, சிவப்புக்கரையிட்ட வேட்டியின் ஒருபகுதியை நீண்ட துண்டைப்போலத் தோளின் மீது அணிந்திருந்தார். காலில் பாலிஷ் செய்த பளபளப்பான செருப்புக்கள்.

குருதேவர் வண்டியிலிருந்து இறங்கினர். ம- அவரை வீட்டிற்குள் அழைத்துச்சென்றார். வழியில் உள்ள மரங்கள் ஊடே நடந்துவரும்பொழுது குருதேவர் ம-விடம் தன் சட்டையில் கை வைத்துக்காட்டிப் 'பொத்தான்கள் பொருத்தப்படாமல் சட்டை திறந்து இருக்கிறதே! வித்யாசாகர் தவறாக நினைக்க மாட்டாரே?' என்று ஒரு குழந்தையைப்போல் கேட்டார். ம- குருதேவரிடம் 'அதுபற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. அதனால் எந்தத் தவறும் ஏற்படாது. நீங்கள் பொத்தான்களைப் போடவேண்டிய அவசியமில்லை' என்று பதிலுரைத்தார். இதைக் கேட்டதும் பயந்த குழந்தைக்குத் தைரியம் சொன்னால் எப்படி நிம்மதி அடையுமோ அதுபோல நிம்மதி அடைந்தார் குருதேவர்.

பக்தர்களுடன் மாடிப்படிகளில் ஏறி முதல் மாடியில்உள்ள ஒரு பெரிய அறைக்குள் குருதேவர் நுழைந்தார். வித்யாசாகர் அந்த அறையில் தெற்கே பார்த்தவண்ணம் அமர்ந்திருந்தார். எதிரே பளபளப்பான பெரிய மேசை. அதைச் சுற்றிலும் சில நாற்காலிகள். அடுத்து ஒரு சாய்வு பெஞ்சு. வித்யாசாகருடன் சில நண்பர்கள் இருந்தனர். அவர்களுடன் வித்யாசாகர் பேசிக்கொண்டிருந்தார்.

குருதேவர் உள்ளே நுழைந்ததும் வித்யாசாகர் எழுந்து நின்று வரவேற்றார். குருதேவர் மேஜையின் அருகே சென்று இடது கையை மேசையின்மீது ஊன்றிக்கொண்டு எதிரே நின்றுகொண்டிருக்கும் வித்யாசாகரைத் தனக்கு முன்பே நன்கு தெரிந்தவர்போல் மிகுந்த அன்போடு பார்த்தார்.

வித்யாசாகருக்கு வயது அறுபத்திரண்டு அல்லதுஅறுபத்து மூன்று இருக்கும். குருதேவரைவிடப் பதினறு அல்லதுபதினேழு வயது மூத்தவர். கைத்தறி வேட்டியும் மெல்லிய கம்பளிச்

சட்டையும் அணிந்திருந்தார். காலில் காலணிகள்; ஓரிசா மக்களைப்போல் தலையில் குல்லாய்; பேசும்பொழுது புதிதாகக் கட்டப்பட்ட பல்வரிசைகள் பளிச்சிட்டன. சற்றே குள்ள மான உருவம், பெரிய தலை, அகன்ற நெற்றி, மாநிறமேனி, பிராமணர், பூணூல் போட்டிருந்தார்.

வித்யாசாகரிடம் பல அரிய குணங்கள் இருந்தன. கல்வி யில் அவருக்கிருந்த ஆர்வம் அளவு கடந்தது. இளமைப் பருவத் தில் வறுமையின் காரணமாக அவரால் நிறையப் படிக்க முடியா வில்லை. இந்தக் கொடிய நிலையை ம-விடம் ஒருநாள் 'அப் பொழுது எனக்கு நிறையப் படிக்க வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. ஆனால், அது நிறைவேறவில்லை. என்ன செய்வது? இப்போது குடும்ப வாழ்க்கையில் சிக்கிக்கொண்டதால் வசதி இருந்தும் படிக்கமுடியவில்லை' என்று கண்ணீர் விட்டு வருந்திக் கூறினர்.

உயிர்களிடம் அவர் காட்டிய கருணை அபாரமானது. அதனால் வித்யாசாகரைத் தயாசாகர்[1] என்றும் கூறுவர். கன்றுக்குக்கூட விடாமல் பாலைக் கறந்துவிடுகிறார்கள் என்ப தால் பல வருடங்களாக அவர் பால் குடிப்பதையே நிறுத்தி யிருந்தார். உடல் மிகுந்த நோயுற்றபோது வழியின்றி மீண் டும் பால் பருகத் தொடங்கினர். வண்டியில் பூட்டிக் குதிரைகளை அடித்து ஓட்டுகிறார்கள் என்பதால் குதிரை வண்டியில் செல் வதை விட்டுவிட்டார். ஒரு சமயம் ஏழை வியாபாரி ஒருவன் காலரா கண்டு வாந்தியும் பேதியுமாக நடைபாதையில் விழுந்துகிடந்தான். அவனுடைய வியாபாரக்கூடை அருகில் விழுந்துகிடந்தது. இதைக் கண்ட வித்யாசாகர் அவனைத் தன்தோளில் தூக்கிக்கொண்டு வீட்டிற்குக் கொண்டுவந்தார். அவனுக்குத் தேவையான சேவைகள் செய்து குணப்படுத்தி அனுப்பினர்.

அவர் பண்புகளில் குறிப்பிடத்தக்கது அவருடைய சுதந்திர மனப்பான்மை. மிகுந்த புகழும் வருமானமும் தரும் கல்கத்தா சம்ஸ்கிருத கல்லூரியில் முதல்வர் பதவி வகித்த போது அதன் ஆட்சியாளர்களோடு ஏற்பட்ட மனவேறுபாடு காரணமாக, பதவியைத் துறந்து கல்லூரியினின்றும் விலகினர். அவரிடம் இருந்த மற்றொரு சிறந்த பண்பு எளிமை. தாழ்ந்

---

1. கருணைக்கடல்

தவர்களையும் தனக்குச் சமமாக மதித்துப் போற்றுவார். ஓர் ஆசிரியரிடம் மிகுந்த அன்பு காட்டிவந்தார். அந்த ஏழை ஆசிரியரின் மகளுக்குத் திருமணம் நடந்தது. நாடு முழுவதும் போற்றும் புகழும் செல்வமும் கொண்ட வித்யாசாகர் அந்தத் திருமணத்திற்குத் தானே நேரில் சென்று புடவையொன்றைப் பரிசாக அளித்தார்.

அவர் தம் தாயிடம் கொண்ட அன்பும் மதிப்பும் மகத்தானவை. ஒருமுறை கிராமத்தில் இருந்த அவருடைய சகோதரருக்குத் திருமணம் நடந்தது. அப்போது அவருடைய தாயார் வித்யாசாகரிடம் 'ஈஸ்வர்! நீ இந்தத் திருமணத்திற்குக் கண்டிப்பாகக் குறிப்பிட்ட நேரத்தில் வந்து கலந்துகொள்ளவேண்டும் இல்லையென்றால் நான் மிகவும் வருந்துவேன்' என்று கூறியிருந்தார்.

குறிப்பிட்ட நாளில் வித்யாசாகர் கல்கத்தாவிலிருந்து புறப்பட்டார். வழியில் ஆறு ஒன்றைக் கடக்கவேண்டியிருந்தது. படகு ஏதும் துறைக்கு வரவில்லை. சிறிது நேரம் காத்துக் கொண்டிருந்தார். திருமண வேளையோ நெருங்கிக்கொண்டிருந்தது. உடனே பெருக்கெடுத்து ஓடும் ஆற்றுவெள்ளத்தில் தன் உயிரைத் துச்சமாக மதித்து நீந்திக் கரையேறி ஈரத் துணியுடன் அன்னையின்முன் நின்று, 'அம்மா! இதோ வந்து விட்டேன்' என்றார். இப்படி வியத்தகு பண்புகளால் மேம்பட்ட உத்தமர் வித்யாசாகர்.

இந்த உத்தமரைக் கண்ட அளவில் குருதேவரின் மனம் பரவச நிலையில் ஆழ்ந்து மூழ்கியது. மேலே எழுந்துசெல்லும் தம் மனத்தை உலகநிலைக்கு இழுத்துவரும்போதெல்லாம் அவர் 'தண்ணீர் குடிக்க வேண்டும்,' 'குடிக்க நீர் வேண்டும்' என்று கூறுவார். அவ் வழக்கப்படி இப்பொழுதும் 'தண்ணீர் வேண்டும்' எனக் கேட்டபோது தண்ணீர் கொண்டுவந்து தர, குருதேவர் நீரைப் பருகினார்.

இதற்குள் வீட்டினுள்ளிருந்து இளைஞர்களும் உறவினர்களும் நண்பர்களும் வந்து குருதேவரைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டனர். ஸ்ரீராமகிருஷ்ணர் பரவசநிலையில் பெஞ்சின்மேல் அமர்ந்திருந்தார். தன் படிப்பிற்காகப் பணஉதவி கேட்டு வித்யாசாகரிடம் வந்திருக்கும் பதினாறு அல்லது பதினேழு வயதுள்ள இளைஞன் ஒருவனும் அந்தப் பெஞ்சின் ஒரு பக்கத்தில் அமர்ந்திருந்தான்.

அந்த இளைஞனுக்குச் சற்றுத் தொலைவில் அமர்ந்திருந்த குருதேவர் உலகை மறந்த நிலையில், 'அம்மா! இந்தப் பையன் அளவுக்குமீறி உலக ஆசை பிடித்தவனாக இருக்கிறான். இவன் உன் அஞ்ஞான உலகைச் சேர்ந்தவன்' என்றார்.

'பிரம்ம ஞானத்தை அடையும் துடிப்பில்லாதவனாக, வெறும் பணம் சம்பாதிப்பதற்காக மட்டும் படிப்பவனாக எவன் இருக்கிறானோ அவன் வாழ்க்கை பாழானதே என்பதைத்தான் இங்கு குருதேவர் குறிப்பிடுகின்றாரோ?'

வித்யாசாகர் நீர் கொணருமாறு ஒருவரிடம் கூறிவிட்டு ம-வைப் பார்த்து, 'குருதேவருக்கு ஏதாவது கொஞ்சம் இனிப்புத் தரலாமா' என்று கேட்டார். 'தரலாம்' என்று ம- கூற, வித்யாசாகரே மிகுந்த ஆர்வத்தோடு வீட்டினுள் விரைந்து சென்று ஒரு தட்டில் இனிப்புக்களைக் கொண்டுவந்தார். அவற்றைக் குருதேவரின்முன் பணிவோடு வைத்தார். பவநாத்துக்கும், ஹாஸ்ராவுக்கும் இனிப்புக்கள் வழங்கப்பட்டன. இனிப்புக்கள் ம-விற்கும் மரியாதைக்காக நீட்டப்பட்டபோது, வித்யாசாகர் 'அவர் எங்கள் வீட்டுப்பிள்ளை. அவரைப்பற்றிக் கவலைவேண்டாம்' என்றார். குருதேவர் வித்யாசாகரிடம் பக்திமானான ஓர் இளைஞனைச் சுட்டிக்காட்டி, 'இந்தப் பையன் அருமையானவன். சத்வ குணத்தைத் தன் நாடி நரம்புவரை தேக்கிவைத்திருக்கிறான். பல்கு நதியைப் போன்றவன் இவன். அந்த ஆற்றின் மேல்பகுதி முழுவதும் மணல் மூடிக்கிடக்கும். சிறிது தோண்டினால்போதும். தண்ணீர் பெருக்கெடுக்கும். அதைப்போன்றவன் இந்த இளைஞன்' என்றார்.

கொஞ்சம் இனிப்பைச் சாப்பிட்ட பிறகு, குருதேவர் புன்னகையோடு வித்யாசாகரிடம் பேசத்துவங்கினார். இதற்குள் அந்த அறையில் மக்கள் கூட்டம் நிரம்பி வழியஆரம்பித்தது. சிலர் நின்றுகொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆ! ஒரு வழியாக இன்று நான் கடலிடம் வந்திருக்கிறேன். இதுவரையிலும் கால்வாய்களையும், ஓடைகளையும் அதிகமாகப் போனால், ஓர் ஆற்றைமட்டுமே பார்த்திருக்கிறேன். ஆனால், இன்றோ நான் நேருக்குநேர் சாகரத்தை[1] யல்லவோ பார்த்துக்கொண்டிருக்கிறேன்!" (எல்லோரும் சிரிக்கின்றனர்.)

---

1 சாகரம்—கடல். ஈஸ்வரசந்திரர் என்பது அவர் இயற்பெயர். அவருடைய அறிவுக் கூர்மையைப் பாராட்டி அவருக்கு வித்யாசாகர் என்ற பட்டம் தரப்பட்டது. பின்னர் அந்தப் பெயரே நிலைத்துவிட்டது. வித்யா—கல்வி. சாகரம்—கடல்.

வித்யாசாகர் : (புன்னகையோடு) . "அப்படியானல் அந்தக் கடலின் உப்புநீரைக் கொஞ்சம் ருசித்துப் பாருங்களேன்." (சிரிப்பு)

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இல்லை! இல்லை! இது எப்படி உப்பு நீராக இருக்கமுடியும்? நீங்கள் அஞ்ஞானக் கடல் அல்ல; வித்யைக் கடல்! நீங்கள் ஒரு பாற்கடல்". (எல்லோரும் சிரிக்கிருர்கள்)

வித்யாசாகர் : "அன்பின் காரணத்தால் நீங்கள் அப்படிச் சொல்லலாம்".

வித்யாசாகர் அமைதியில் மூழ்கியபடி அமர்ந்துகொண்டிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் மேலும் தொடர்ந்து பேசலானர்.

"உங்களுடைய செயல்கள் எல்லாம் சத்துவகுணம் நிரம்பியவை. அதாவது ரஜோகுணச் செயல்கள் என்ருலும் இவை சத்துவ குணத்தின் தூண்டுதலால் நடைபெறுகின்றன. சத்துவ குணத்திலிருந்து ஊற்றெடுப்பது கருணை. மற்றவர்களின் நன்மைக்காகச் செய்யப்பட்டாலும்கூட காரியங்கள் அனைத்தும் ரஜோகுணத்தைச் சார்ந்திருப்பவையே. இருப்பினும் உங்களிடம் உள்ள ரஜோகுணம் சத்துவத்தையே தன் அடித்தளமாகக் கொண்டிருக்கிறது. ஆகவே, நீங்கள் செய்யும் காரியங்கள் பிறர்க்குத் துன்பம் இழைப்பதில்லை.

"சுகர் முதலான மகான்கள் பிரம்மநிலை அடைந்த பிறகும் மக்களுக்குச் சமயஞானத்தை ஊட்டுவதற்காகவும், கடவுளைப் பற்றி உபதேசிப்பதற்காகவும் தங்கள் உள்ளத்தில் இத்தகைய கருணையை வளர்த்துக்கொண்டனர். நீங்கள் உணவும் கல்வியும் எல்லோருக்கும் தருகிறீர்கள். அது நல்ல காரியம் தான். இத்தகைய காரியங்கள் சுயநலமில்லாமல் செய்யப்படுமானல், அவை செய்பவரைக் கடவுளிடத்திற்கு இட்டுச் செல்லும். ஆனல், உலகில் பெரும்பாலான மக்கள் புகழ் பெறுவதற்கும் மதிப்பினைச் சம்பாதிப்பதற்கும் செய்வதனல் அவர்களுடைய காரியங்கள் சுயநலமில்லாதவை அல்ல. நீங்கள் ஒரு சித்தனகவும்[1] இருக்கிறீர்கள்."

---

[1] சித்தர் என்பதற்கு முழுமைபெற்றவர் அல்லது வேகவைக்கப்பட்டது என்னும் இரண்டு பொருள்கள் உண்டு. முழுமைபெற்ற மகான்களையும் வேகவைக்கப்பட்ட பொருள்களையும் இந்த வார்த்தையால் குறிப்பிடுவார்கள்.

வித்யாசாகர் : "எப்படிச் சொல்லுகிறீர்கள்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : (சிரித்தபடியே) "உருளைக்கிழங்கு முதலிய காய்கறிகள் நன்ருக வேகவைக்கப்பட்டதும் மிருது வாகிவிடும். உங்களிடம் அத்தகைய மிருதுவான மனம் இருக்கிறது, மிகமிகக் கருணையுள்ளவர் நீங்கள்."(சிரிப்பு)

வித்யாசாகர் : (சிரித்துக்கொண்டே) "ஆனல் உளுத்தம் பருப்பால் செய்த உருண்டையை வேகவைத்தால், அது உடனே கெட்டியாகிவிடுகிறது." (எல்லோரும் சிரிக்கிருர்கள்)

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நீங்கள் அந்த இனத்தைச் சேர்ந்த வரல்ல. வெற்றுப் பண்டிதர்கள் நோய்பிடித்த காயைப் போன்றவர்கள். அது வளரவளரக் கடினமாகி விடுவதோடு பழுக்கவும் பழுக்காது. பழுத்தாலும் பசுமையோ இனிமையோ அதனிடம் இருக்காது.

"கழுகுகள் ஆகாயத்தில் மிக உயரப் பறக்கின்றன. ஆனலும் அவைகளின் பார்வை வெகு தூரத்தில் பூமியில் விழுந்து கிடக்கும் அழுகிய பிணங்களையே தேடுகின்றன. புத்தகம் மட்டும் படித்த பண்டிதர்கள் இந்தக் கழுகுகளைப் போன்றவர்கள். எவ்வளவு படித்தாலும் அவர்கள் மனம் பெண்ணிலும் பொன்னிலும் புதைந்துபோகின்றது. இவர்கள் அறியாமை என்னும் உலகத்தில் நன்கு மூழ்கியவர்கள். மெய்ஞ்ஞான உலகில் கருணை, அன்பு, கடவுள்பக்தி, வைராக்கியம் முதலிய குணங்களுக்கே இடம் உண்டு."

வித்யாசாகர் மௌனத்தில் ஆழ்ந்து இந்த வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தார். அங்குக் கூடியுள்ள மற்ற எல்லோருடைய பார்வைகளும் ஆனந்தமயமான அந்த மகான்மீதே பெருமையோடு பதிந்திருந்தன. அவருடைய தெய்வமயமான வார்த்தைகளை அக் கூட்டத்தினர் தங்களை மறந்து கேட்டுக் கொண்டிருந்தனர்.

வித்யாசாகர் மிகப் பெரிய படிப்பாளி. சம்ஸ்கிருத கல்லூரியில் படித்த காலத்தில் வகுப்பில் சிறந்த மாணவராகத் திகழ்ந்தவர். ஒவ்வொரு தேர்விலும் முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்று தங்கப்பதக்கங்கள், சான்றிதழ்கள் பலவற்றைப்

பெற்றவர். படிப்படியாக உழைத்து சம்ஸ்கிருத கல்லூரியின் தலைமையாசிரியர் பதவிக்கு உயர்ந்தவர். அவருக்கு சம்ஸ்கிருத இலக்கணத்திலும், காவியத்திலும் நல்ல பயிற்சியிருந்தது. சுய முயற்சியினால் ஆங்கிலமும் கற்றிருந்தார்.

வித்யாசாகர் பிறருக்கு சமய அறிவுரைகள் வழங்குவதை எப்போதும் தவிர்த்துவந்திருக்கிறார். இந்து சமய நூல்களை மிகவும் ஆழ்ந்து படித்தவர். ஆயினும் அவற்றைப்பற்றி யாரிடமும் எதுவும் பேசமாட்டார். ஒருமுறை ம- அவரிடம் 'இந்து சமய ஞானிகள் தங்கள் மனத்தில் இருப்பதைப் பிறர்க்கு விளக்கமாகச் சொல்லுவதில் தோற்றுவிட்டனர் என்று நான் நினைக்கிறேன்' என்று கூறியிருந்தார். தம்முடைய அன்றாட வாழ்க்கையில் இந்து சமயத்தின் சம்பிரதாயங்களையும் சடங்குகளையும் தவறாமல் அவர் பின்பற்றிவந்தார். பிராமணர்களுக்கு உரிய பூணூலையும் அணிந்திருந்தார். தான் எழுதும் ஒவ்வொரு கடிதத்திலும் 'ஸ்ரீ ஸ்ரீ ஹரிசரணம்' என்று முதலில் எழுதிய பிறகே கடிதத்தைத் துவக்குவார்.

வேறொரு சமயம் கடவுளைக் குறித்து வித்யாசாகருடைய கருத்து என்ன என்பதை ம- கேட்டபோது வித்யாசாகர் "கடவுளை அறிவது என்பது உண்மையில் இயலாத காரியம். அப்படியானால் நாம் செய்ய வேண்டிய கடமைதான் என்ன? மற்றவர்களுக்கு ஓர் உதாரணமாக (இலட்சிய வாழ்வு) நாம் வாழ்ந்தால் இந்த உலகமே சொர்க்கமாகிவிடும். இதுவே கடவுளைப்பற்றிய என் எண்ணம். ஒவ்வொருவரும் பிறர்க்கு நல்லது செய்வதற்கான முயற்சியை மேற்கொள்ளவேண்டும்" என்று பதிலளித்தார்.

இதுவரை வித்யை, அவித்யைபற்றிப் பேசிக்கொண்டிருந்த ஸ்ரீராமகிருஷ்ணரின் உரையாடல் இப்போது பிரம்ம ஞானத்தைப்பற்றித் திரும்பியது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "வித்யை, அவித்யை, ஞானம், அஞ்ஞானம் என்னும் இவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டது பிரம்மம். பலவாகத் தோற்றமளிக்கின்ற மாயைக்கும் அப்பாற்பட்டது இந்தப் பிரம்மம்.

"இந்த உலகில் **வித்யா மாயை**[1], **அவித்யா மாயை**[2] என்று இரண்டு இருக்கின்றன. ஞானமும் பக்தியும் இருக்கின்றன.

---

1. ஞானம். 2. அஞ்ஞானம்.

பெண்ணாசை, பொன்னாசைகள் இருக்கின்றன. இதுபோல இவ்வுலகில் தெய்விகமும்உண்டு; ராட்சசமும் உண்டு. நல்லதும் உண்டு; கெட்டதும் உண்டு. ஆனால், பிரம்மம் இவைகளுக்கு எல்லாம் அப்பாற்பட்டது. நல்லதும் கெட்டதும், சத்தும் அசத்தும் உயிர்களுக்கு மட்டுமே தவிர, பிரம்மத்தை அவை ஒருகாலும் தீண்டுவது இல்லை.

"விளக்கின் வெளிச்சத்தில் ஒருவன் பாகவதம் படிக்கிறான். மற்றொருவன் திருட்டுக் கையெழுத்துப் போடுகிறான். ஆனால், விளக்கு இந்த நன்மை தீமையினால் பாதிக்கப்படுவதில்லை. சூரியன் நல்லவனுக்கும் ஒளி தருகிறான். கெட்டவர்களுக்கும் ஒளி தருகிறான்.

"அப்படியென்றால் துன்பம், பாவம், வேதனை என்ற இவை இவ்வுலகில் இருக்கின்றனவே! அவைகளைப்பற்றி என்ன சொல்லுகிறீர்கள் என்று என்னை நீங்கள் கேட்கலாம். அதற்கு விடை இதுதான்: இவைகளால் பாதிக்கப்படுவன ஜீவர்களே யன்றிப் பிரம்மம் அல்ல. பிரம்மம் இவைகள் எதனாலும் பாதிக் கப்படுவதில்லை. பாம்பின் வாயில் விஷம் இருக்கிறது. அந்த விஷத்தால் மற்றவர்கள் இறக்கிறார்களேயொழிய பாம்புக்கு ஒன்றும் நேர்வதில்லை. தன்னிடமுள்ள விஷத்தினால் எந்தவிதத் தீமையும் பாம்பிற்கு உண்டாவதில்லை.

"அப்படியாயின் பிரம்மம் என்பதுதான் என்ன? இதைச் சொற்களால் விளக்க இயலாது. உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் எச்சிலாக்கப்பட்டுவிட்டன. வேதங்கள், புரா ணங்கள், தந்திரங்கள், ஆறு தரிசனங்கள், இவைகளெல்லாம் நாக்கால் தீண்டப்பட்டவையே. ஆனால், ஒரு பொருள்மட்டும் எச்சிலாக்கப்படவில்லை. அதுதான் பிரம்மம். இதுவரை பிரம் மம் என்பது எது என்று யாராலும் கூறி முடிந்தபாடில்லை."

வித்யாசாகர்: (தன் நண்பர்களிடம்) "ஆஹா! என்ன அழகான உண்மை. இன்று நான் புதியதொரு கருத்தைத் தெரிந்துகொண்டேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஒருவனுக்கு இரண்டு பிள்ளைகள். தந்தை இருவரையும் பிரம்மஞானத்தைப் பயின்றுவர ஓர் ஆசி ரியரிடம் அனுப்பினார். சில ஆண்டுகளுக்குப் பிறகு அவர்கள் ஆசிரியரிடமிருந்து திரும்பிவந்து தந்தையை வணங்கினார்கள். அவர்களின் பிரம்ம ஞானத்தை அறிய விரும்பிய தந்தை, மூத

லில் மூத்தவனைப் பார்த்து, 'மகனே! நீ எல்லா சாஸ்திரங்களை யும் படித்திருக்கிறாய். இப்போது பிரம்மத்தைப்பற்றிச் சொல்?' என்றார். அவன் வேதத்திலிருந்து பல்வேறு சுலோகங்களை ஒப் பித்துப் பிரம்மத்தை விளக்க முயன்றான். தந்தை பதில் ஏதும் சொல்லவில்லை. இளைய மகனையும் பார்த்து அதே கேள்வியைக் கேட்டார். அவனோ தலைகுனிந்து கண்களைத் தரையில் பதித்த படி அமைதியாக நின்றான். அவன் வாயிலிருந்து வார்த்தைகள் வரவில்லை. இதைக் கண்ட தந்தை மகிழ்ந்து, 'மகனே! பிரம் மத்தைப்பற்றி நீ ஒரு சிறிது தெரிந்துகொண்டிருக்கிறாய். வார்த்தைகளால் விளக்க முடியாததுதான் பிரம்மம்' என்றார்.

"பிரம்மத்தை முழுதும் அறிந்துகொண்டதாக மனிதர்கள் அடிக்கடி நினைக்கிறார்கள். ஒரு முறை எறும்பு ஒன்று மலை போல் குவிந்துகிடந்த சர்க்கரைக் குவியலிடம் சென்றது. ஒரே ஒரு பொடி அதன் வயிற்றை நிரப்பிவிட்டது. மற்றொரு பொடியை வாயில் எடுத்துக்கொண்டு வீட்டை நோக்கித் திரும்பியது. போகும் வழியில் 'அடுத்த முறை நான் வரும் போது சர்க்கரை மலையையே வீட்டிற்குத் தூக்கிக்கொண்டு வந்துவிடுவேன்' என்று எண்ணிக்கொண்டது. சாதாரண மனிதர்கள் இப்படித்தான் நினைக்கின்றனர். பிரம்மம் என்பது மனம் வாக்கிற்கு அப்பாற்பட்டது என்பதை அவர்கள் அறிவ தில்லை. எவ்வளவுதான் பெரிய மகானாக இருக்கட்டுமே, பிரம் மத்தைப்பற்றி அவன் எவ்வளவு தெரிந்துகொண்டிருப்பான்? சுகதேவர் முதலான மகத்தான ரிஷிகளே, சொல்லப்போனால் சற்றுப் பெரிய கட்டெறும்பு போன்றவர்கள்தாம். அவர்களா லும் சர்க்கரைமலையிலிருந்து அதிகப் பட்சம் எட்டு அல்லது பத்து சர்க்கரைப் பொடிகளைத்தான் கொண்டுவர முடியுமே தவிர, முழுதுமாக உண்ண முடியாது.

"ஆனால் வேதங்களிலும், புராணங்களிலும் பிரம்மத்தைப் பற்றிக் கூறியுள்ள அனைத்தும் எதைப் போன்றது தெரியுமா? ஒருவன் கடலைப் பார்த்திருக்கிறான் என்று வைத்துக்கொள் வோம். மற்றொருவன் 'கடல் எப்படி இருக்கிறது?' என்று கேட் கிறான். முதல் மனிதன் தன்வாயைப் பெரிதாகத் திறந்து, "ஆ! என்னவென்று சொல்வேன்! அப்பப்பா! எவ்வளவு பெரிய அலைகள்! எப்பேர்ப்பட்ட பயங்கர ஓசை" என்று சொல்வான். சாஸ்திரங்களில் பிரம்மத்தைப்பற்றிச் சொல்லி இருப்பதெல் லாம் இதுதான். வேதங்கள் பிரம்மம் ஆனந்தமயம் என்று கூறு கின்றன. அதாவது பிரம்மம் சச்சிதானந்த ரூபம் என்று கூறப் படுகிறது.

"சுகர் முதலான மகாமுனிவர்கள் பிரம்மமாகிய கடலின் கரையில் நின்றுகொண்டு அதன் தண்ணீரைத் தொட்டுப் பார்த்தவர்கள்தாம். ஒருசிலரின் கருத்துப்படி அவர்கள் பிரம்மத்திற்குள் இறங்கவே இல்லை. யார் அதனுள் இறங்குகிறார்களோ அவர்களால் மறுபடியும் இந்த உலகத்திற்குத் திரும்பிவர முடிவதில்லை.

"சமாதியில் பிரம்ம ஞானம் ஏற்படுகிறது. ஒருவர் பிரம்ம ஞானத்தை அனுபவிக்கிறார். அந்த நிலையில் அவர் சிந்தனை நின்றுபோய்விடுகிறது. ஊமையாகி விடுகிறார். பிரம்மத்தை விளக்கிக்கூறும் ஆற்றல் அவருக்கு வருவதே இல்லை.

"உப்பு பொம்மை ஒன்று கடலின் ஆழத்தை அளக்கச் சென்றது. (எல்லோரும் சிரிக்கிறார்கள்) கடலின் ஆழம் எவ்வளவு என்று எல்லோருக்கும் சொல்ல அது ஆசைப்பட்டது. அது என்றும் நடக்கக் கூடியதல்லவே. ஏனென்றால், தண்ணீருக்குள் இறங்கியவுடனே உப்புப்பதுமை கரைய ஆரம்பித்து விட்டது. இப்போது யார் வந்து கடலின் ஆழத்தைச் சொல்வது?"

ஒரு பக்தர் :—"சமாதியில் பிரம்ம ஞானத்தை அடைந்த மனிதனால் பேசமுடியாதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சங்கராச்சாரியார் பிரம்ம ஞானம் அடைந்த பின்னரும் மக்களுக்கு உபதேசம் செய்ய வேண்டி ஞான ஆணவமான "நான்' என்பதைத் தன்னிடம் வைத்திருந்தார். பிரம்ம ஞானம் அடைந்த பிறகு மனிதன் மௌனியாகி விடுகிறான். அதை அடையாத வரையில்தான் பெரிய பெரிய வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருப்பான்.

"ஞானி அகங்காரம்' என்பது பிரம்ம ஞானத்தால் தூய்மையாக்கப்பட்டதும் விளக்கம் பெற்றதும் ஆன 'நான்" எனும் உணர்ச்சி. நித்திய அநித்திய வஸ்து விவேக முறையைப் பின்பற்றி வரும் ஞானி, சமாதி யடையும்போது அகங்காரத்தைப் பிரம்மத்தில் லயமடையச் செய்கிறான். அதன்பின் அவன் வியவகார நிலைக்கு இறங்கும்போது அகங்காரத் தோற்றம் ஒன்று உள்ளது; ஆனால் அந்நிலையிலும் அவன் எப்போதும் தான் பிரம்மத்தோடு ஐக்கியமாகியுள்ள உணர்ச்சியை இழக்காதிருப்பான். இது "போலி அகங்காரம்" எனப்படும். அன்பு நெறியைப் பின்பற்றும் ஒரு பக்தனோ பகவானுக்கும் தனக்கும் உள்ள நித்திய சம்பந்தத்தை உணர்கிறான். அவனும் வியவகார நிலையில் ஒரு போலி அகங்காரத்தை வைத்துக்கொள்கிறான், இந்த அகங்காரத்தில் அஞ்ஞான அகங்காரத்திற்குரிய தன்மைகள் ஒன்றேனும் இரா, இது "பக்த அகங்காரம்" எனப்படும். இங்கே கூறப்பட்டுள்ள இருவகை அகங்காரங்களும் ஒரே அனுபூதி நிலையினைக் குறிப்பன.

“வெண்ணெய் காய்ச்சும்போது அதில் தண்ணீர் இருக்கும் வரை ஓசை கேட்கிறது. தண்ணீர் காய்ந்து நெய்யாக உருகியதும் ஓசை வருவதில்லை. மறுபடியும் ஈரக் கசிவுடைய பச்சைமாவில் ரொட்டி தட்டி அதில் போட்டதும் ‘உஸ்’ என்று சத்தம் எழுகிறது. ரொட்டி நன்ருக வெந்ததும் ஓசை நின்றுவிடுகிறது. அதுபோல பிரம்ம ஞானத்தை அடைந்த மனிதன் மற்றவர்களுக்குப் போதிப்பதற்காக அந்த உயர்ந்த நிலையிலிருந்து கீழே இறங்கி, சாதாரண உலக நிலைக்கு வருகிருன். அப்போது அவன் கடவுளைப்பற்றிப் பேசுகிருன்.

“தேனீ பூவில் உட்காராதவரை ரீங்காரமிடுகிறது. பூவில் அமர்ந்து தேனைப் பருகும்போது மௌனமாகி விடுகிறது. சில நேரங்களில் தேனைக் குடித்ததினுல் வெறி ஏறிப்போய், மறுபடியும் சத்தம் போட ஆரம்பித்துவிடுகிறது.

“ஒரு காலிக் குடத்தை நீருக்குள் அமிழ்த்தினுல் ‘புரு,’ ‘புரு’ என்று சத்தம் கேட்கிறது. தண்ணீர் நிறைந்ததும் சத்தம் நின்றுவிடுகிறது. (எல்லோரும் சிரிக்கிருர்கள்) ஆனுல், அந்தக் குடத்திலிருந்த தண்ணீரை வேறு இடத்திற்கு ஊற்றும்போது மறுபடியும் குடத்தில் சத்தம் உண்டாவதை நீங்கள் கேட்கலாம். (சிரிப்பு)

“பழங்கால ரிஷிகள் பிரம்ம ஞானத்தை அடைந்திருந்தனர். மிகமிகச் சின்னஞ்சிறு உலக ஆசைகள் மனத்தில் இருந்தாலும் பிரம்ம ஞானத்தைப் பெறமுடியாது. பிரம்ம ஞானத்தைப் பெற அந்தக் கால ரிஷிகள் எவ்வளவு பாடுபட்டார்கள்! அதிகாலையில் ஆசிரமத்தை விட்டுச்செல்வார்கள். நாள் முழுதும் தனிமையில் அமர்ந்து பிரம்மத்தைத் தியானிப்பார்கள். இரவு நெடுநேரம் கழித்து ஆசிரமத்திற்குத் திரும்புவார்கள். கொஞ்சம் பழமோ, கிழங்கோ சாப்பிடுவார்கள். உலகில் நடக்கும் புலன்களுக்கு விருப்பமான காட்சிகளைப் பார்ப்பது, உண்பது, கேட்பது முதலான எந்தக் காரியத்திலும் மனத்தைச் செலுத்த மாட்டார்கள். மனத்தை அவைகளிடம் செல்லாமல் பிரித்துத் தனியே வைத்திருந்தனர்.

“ஆனுல், இந்தக் கலியுகத்தில் மனிதனுடைய உடல் உணவையே நம்பி இருக்கிறது. அதனுல்தான் உடம்பு என்கிற

நினைப்பை யாராலும் நீக்க முடிவதில்லை. இத்தகைய நிலையில் இருந்துகொண்டு நானே கடவுள், நானே பிரம்மம், 'ஸோஹம் ஸோஹம்' என்று அவன் சொல்லுவது எப்படி உண்மையாக இருக்கமுடியும்?

"உலக வாழ்வில் ஆழ்ந்திருக்கும் ஒருவன் 'நான் பிரம்மம்', 'நான் பிரம்மம்' என்று சொல்லுவது சரியானதல்ல. உலகப் பொருள்கள் மீதிருக்கும் பற்றை விடாதவர்களும், 'நான்' என்கிற உணர்வை நீக்கிக்கொள்ளாதவர்களும், 'நான் கடவுளின் தொண்டன்', 'நான் அவருடைய பக்தன்' என்னும் நினைப்பைக் கொள்ளவேண்டும். இத்தகைய பக்தி மார்க்கத்தின் மூலமாகவும் ஒருவன் கடவுளை அடையலாம்.

"உண்மையான ஞானி உலக ஆசைகள் அனைத்தையும் நீக்கி, 'இது அல்ல', 'இது அல்ல', என்று விசாரம் செய்து இறுதியில் கடவுளை அடைகிறான் இது படிகளின்மீது ஏறி மேல்மாடியை அடைவது போன்றது. ஏறுபவன் படிகள் ஒவ்வொன்றையும் கடந்து மேல்மாடியை அடைவதைப் போன்றது. ஒவ்வொன்றாகத் துறப்பவனே மேலே செல்கிறான். விஞ்ஞானியோ பிரம்மத்தோடு நெருக்கமான தொடர்பு கொண்டு மேலும் பலவற்றை அறிகிறான். அவன் மாடி எப்படி செங்கல், சுண்ணம்பு, செங்கல்தூள் இவைகளால் கட்டப்பட்டிருக்கின்றதோ அப்படியே அதன் படிகளும் கட்டப்பட்டிருக்கின்றன என்பதை அறிகிறான். 'இதுவல்ல, இதுவல்ல' என்னும் வழியின்மூலம் ஞானி அறிந்த உணர்வுமயமான அதே பிரம்மமே, இந்த அண்ட சராசரங்களாகவும், அதில் உள்ள எல்லா உயிர்களாகவும் ஆகியிருப்பதை விஞ்ஞானி காண்கிறான். குணமில்லாமல் நிர்குணமாக எது இருக்கிறதோ அதுவே குணங்களோடு கூடிய சகுணமாகவும் இருப்பதை விஞ்ஞானி காண்கிறான்.

"ஒரு மனிதன் மாடியின் மேலேயே நீண்ட காலம் தங்க முடியாது. அவன் மறுபடியும் கீழே வரவேண்டும். சமாதியில் பிரம்மத்தை அடைந்தவர்கள் அங்கிருந்து மறுபடியும் கீழே இறங்கி வருகிறார்கள். சமாதியில் எது பிரம்மமாக இருந்ததோ அதுவே இந்த உலகங்களாகவும், அதில் உள்ள எல்லா உயிர்களாகவும் இருப்பதைக் காண்கிறார்கள்.

"இசையில் ச, ரி, க, ம, ப, த, நி என்று ஏழு ஸ்வரங்கள் இருக்கின்றன. ஒருவன் தன் குரலை எப்போதும் உச்ச ஸ்வர

மான 'நீ'யிலேயே வைத்துக்கொண்டிருக்கமுடியாது. 'நான்' என்னும் உணர்வு ஒருவனுக்கு முழுவதுமாக நீங்குவதில்லை. சமாதியிலிருந்து கீழே இறங்கிவரும் மனிதன், அந்த பிரம்மமே 'நான்' என்னும் உணர்வாகவும், உலகங்களாகவும், அதில் உள்ள உயிர்களாகவும் இருப்பதை அறிகிறான். இப்படி அறிவதுதான் விஞ்ஞானம்.

"கடவுளை அடைவதற்கு ஞானமார்க்கம் ஒரு வழி. ஞானம், பக்தி இவையிரண்டும் கலந்தது மற்றொரு வழி. இன்னொரு வழி பக்தி மார்க்கம். ஞான மார்க்கமும் உண்மை. பக்தி மார்க்கமும் உண்மை. எல்லா மார்க்கங்கள் வழியாகவும் இறைவனை அடையலாம். ஆனால், கடவுள் எவ்வளவு காலம் 'நான்' என்னும் உணர்வை நம்முள் வைத்திருக்கிறாரோ, அதுவரை பக்தி மார்க்கத்தைப் பின்பற்றுவது சுலபமானதாகும்.

"விஞ்ஞானி பிரம்மத்தை மேருமலையைப்போல அசைவற்றதாகவும் செயலற்றதாகவும் காண்கிறான். இந்த உலக வாழ்க்கை இறைவனின் சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களைக் கொண்டு உருவாகியது. இந்த குணங்கள் பிரம்மத்திலிருந்து தோன்றியவை. ஆயினும், பிரம்மம் இவைகளால் பாதிக்கப்படுவதில்லை.

"மேலும் எது பிரம்மமாக இருக்கிறதோ அதுவே பகவானாகவும் இருப்பதை விஞ்ஞானி காண்கிறான். எது முக்குணங்களைக் கடந்ததோ அதுவே ஆறு செல்வங்களுடன் கூடிய பகவானாகவும் இருக்கிறது.

"ஜீவராசிகள், உலகங்கள், மனம், அறிவு, அன்பு, வைராக்யம், ஞானம் இவையாவும் பகவானின் செல்வங்கள். (சிரித்தபடியே) 'பிரபு ஒருவனுக்கு எல்லாவற்றையும் விற்கவேண்டிய கட்டாயம் ஏற்பட்டு, சொத்து சுதந்திரம் எல்லாவற்றையும் விற்று ஒன்றுமில்லாதவனாய் ஒட்டாண்டி ஆகிவிட்டான். அப்பொழுது அவனிடம் சென்று யாராவது அவனைப் பிரபு என்று அழைப்பார்களா? (எல்லோரும் சிரிக்கிறார்கள்) கடவுள் அறுவகைப்பட்ட செல்வங்களை உடையவர். இவை அவரிடம் இல்லாவிட்டால் அவருக்கு யார் அடங்குவார்? (அனைவரும் சிரிக்கின்றனர்)

"இந்த உலகம் எவ்வளவு அழகாக இருக்கிறது பாருங்கள்! எத்தனை எத்தனையோ பொருட்கள் இங்கே இருக்கின்றன. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள்! எத்தனையோ வகையான உயிரினங்கள்! பெரியவை, சிறியவை; நல்லவை, கெட்டவை;

வலிமையுள்ளவை, வலிமையற்றவை; சிலவற்றுக்கு மிகுந்த ஆற்றல், சிலவற்றுக்குக் குறைந்த ஆற்றல் – இப்படி எத்தனை எத்தனை வேறுபாடுகள்!"

வித்யாசாகர் : "சிலருக்கு அதிகமான ஆற்றலையும், சில ருக்குக் குறைந்த ஆற்றலையும் கடவுள் தருகிறாரா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "கடவுள் எல்லா இடங்களிலும் நீக்க மற நிறைந்திருப்பதால் எல்லா உயிர்களிலும் அவர் இருக்கிறார். எறும்பிலும் இருக்கிறார். ஆனால், எல்லோரிடமும் அவருடைய சக்தி ஒரே விதமாக வெளிப்படுவதில்லை. வெளிப்பாட்டில் வித்தியாசம் உண்டு.

"ஒரு மனிதன் பத்துப் பேரை அடித்து ஓடச் செய்கின்ற போது, மற்றொரு மனிதனால் ஒருவனோடுகூடச் சண்டை போட முடியாமல் போகிறதே ஏன்? இவையெல்லாம் எப்படி நடக்கின்றன? இந்த சக்தி வேறுபாடு இல்லையென்றால் எல்லா மக்களும் உங்களுக்கு எதற்குத் தனிப்பட்ட மரியாதை செலுத்தவேண்டும்? உங்கள் தலையில் இரண்டு கொம்புகளா முளைத்திருக்கின்றன? (சிரிப்பு) உங்களிடம் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமான படிப்பும் கருணையும் இருக்கின்றன. அதனால் மக்கள் உங்களை மதிக்கிறார்கள்; வந்து மரியாதை செலுத்துகிறார்கள். என்னுடைய இந்தக் கருத்தை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள் அல்லவா?" (வித்யாசாகரிடம் புன்னகை தோன்றியது)

குருதேவர் தொடர்ந்து பேசலானார். "வெற்றுப் படிப்பில் எந்தவிதப் பயனும் இல்லை. படிப்பின் இலட்சியம் கடவுளை அடையும் வழியை அறிவிப்பதும், கடவுளை அடைவதும்தான். ஒரு சாது புத்தகம் ஒன்று வைத்திருந்தார். அதில் என்ன இருக்கிறது என்று கேட்டதும் புத்தகத்தைத் திறந்து காட்டினார். அந்தப் புத்தகம் முழுவதும் 'ஓம்ராம்', 'ஓம்ராம்' என்று மட்டும் எழுதப்பட்டிருந்தது. வேறு எதுவுமே இல்லை!

"கீதையின் சாரம்தான் என்ன? கீதை என்னும் வார்த்தையைப் பத்து முறை திருப்பித்திருப்பிச் சொன்னால், அதன் சாரம் என்ன என்பதை நீங்களே அறிந்துகொள்ளலாம். அதாவது 'தாகி' என்ற வார்த்தை கிடைக்கும். தாகி என்றால் எல்லாவற்றையும் கடவுளுக்காகத் துறந்தவன் என்பது பொருள். 'ஏ மனிதனே! எல்லாவற்றையும் தியாகம் செய்துவிடு.

கடவுளை மட்டுமே தேடு. குடும்பஸ்தனாக இருந்தாலும் சரி, சந்நியாசியாக இருந்தாலும் சரி, ஒருவன் தன் மனத்திலிருந்து எல்லாப் பற்றுக்களையும் உதறிவிட வேண்டும். இதுவே கீதையின் சாரம்.

“சைதன்யதேவர் தென்னாட்டில் யாத்திரை செய்துகொண்டிருந்தார். ஒரு நாள் ஒருவன் கீதையை உரக்கப்படித்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அவனுக்குச் சற்று தூரத்தில் மற்றொருவன் கீதையைக் கேட்டபடி தேம்பித் தேம்பி அழுதுகொண்டிருந்தான். அவன் கண்களில் கண்ணீர் பெருகிக்கொண்டிருந்தது. சைதன்யர் அவன் அருகே சென்று, ‘ஏன் அப்பா அழுகிறாய்? கீதையை நீ புரிந்துகொண்டாயா?’ என்று கேட்டார். அதற்கு அந்த மனிதன், ‘இல்லை ஐயா! அவர் படித்துக்கொண்டிருந்ததில் ஒரு வார்த்தைகூட எனக்குப் புரியவில்லை’ என்றான். ‘பின் ஏன் அழுகிறாய்?’ என்று சைதன்யர் கேட்டபோது அந்த மனிதன் ‘இதோ என் கண்முன் அர்ச்சுனனின் தேர் நிற்கிறது! பகவான் கிருஷ்ணரும் அர்ச்சுனரும் அதில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள். என் இரு கண்களால் அந்தக்காட்சியை இப்போது தரிசித்துக்கொண்டிருக்கிறேன். ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறேன்’ என்று கூறினான்.

“விஞ்ஞானி கடவுளிடம் பக்தி பூணுவதன் காரணம் என்ன? இதற்குரிய விடை ‘நான்’ என்னும் உணர்வு இன்னும் அவனிடம் அகலாமல் இருப்பதுதான். இந்த உணர்வு சமாதியில் அழிந்துபோகிறது என்பது உண்மைதான். ஆயினும் சமாதி கலைந்ததும் மறுபடியும் வந்து ஒட்டிக்கொள்ளுகிறது. சாதாரண மக்களைப் பொறுத்த வரையில் இந்த ‘நான்’ எப்போதும் மறைவதில்லை. அரச மரத்தை வெட்டி எறிந்துவிட்டாலும் மறுநாளே துளிர்த்துக்கொள்கிறதே அதுபோல! (சிரிப்பு)

“ஞானம் பெற்ற பிறகுகூட இந்த ‘நான்’ தலைதூக்குகிறது. இது எங்கிருந்து வந்தது? யாருக்குமே தெரியாது. கனவில் தான் புலியைக் காண்கிறான் என்றாலும் விழித்துக்கொண்ட பின்னும் நெடுநேரம் பயத்தால் அவன் இதயம், ‘படபட’ வென்று அடித்துக்கொண்டே இருக்கிறது. நமது எல்லா விதமான துயரங்களுக்கும் இந்த ‘நான்’தான் காரணம். பசு ‘ஹம்பா’ ‘ஹம்பா’ என்று கத்துகிறது. ஹம்பா என்றால் ‘நான்’

என்பது பொருள். அதனுல் அது பல துன்பங்களுக்கு உள்ளாகிறது. ஏரில்[1] பூட்டப்படுகிறது; மழையிலும் வெய்யிலிலும் வேலை செய்கிறது; கிழடானதும் கசாப்புக் கடைக்கு அனுப்பப்படுகிறது. அங்கே அது துண்டு துண்டாக்கப்படுகிறது. இத்துடன் அதன் துன்பம் நின்றதா? உரித்தெடுத்த தோலிலிருந்து செருப்புகளும், மத்தளங்களும், மேளங்களும் செய்யப்படுகின்றன. செருப்பைக் காலில் போட்டுப்போட்டுத் தேய்க்கிருர்கள். மேளங்களும் மிருதங்கமும் கொஞ்சம்கூடக் கருணையில்லாமல் 'அடி அடி' யென்று அடிக்கப்படுகின்றன. (எல்லோரும் சிரிக்கின்றனர்)

"இத்துடனுவது அதன் துன்பங்கள் ஓய்ந்தனவா? அதுதான் இல்லை. அதன் குடலிலிருந்தும் நரம்பிலிருந்தும் பருத்தியைச் சுத்தம் செய்யும் நீளமான கயிறுகள் முறுக்கப்படுகின்றன. பருத்தியைச் சுத்தம் செய்யும்போது அந்தக் கயிற்றையும் சுண்டி 'அடிஅடி'யென்று அடிக்கிருர்கள். இப்போது பசுவின் அந்தக் குரல் 'ஹம்பா' 'ஹம்பா' 'நான்' 'நான்' என்று கத்துவதில்லை. 'துஹீ' 'துஹீ' 'நீ' 'நீ' என்றே சத்தமிடுகிறது. இந்த நிலைக்கு வந்தபின்பே, பசுவின் துன்பங்களுக்கு ஒரு முடிவு ஏற்படுகின்றது. 'ஏ! பிரபு! நான் உன் அடிமை; நீ என் ஆண்டான். நான் சேய்; நீ தாய்!' இந்தநிலை வரவேண்டும்.

"ஒரு சமயம் இராமர் அனுமனைப் பார்த்து, 'நீ என்னை எப்படிக் கருதுகிருய்?' என்று கேட்டார். அதற்கு அனுமன் "ஐயா, 'நான்' எனும் உணர்வு என்னுள் இருக்கும் போதெல்லாம், பல்வேறு பொருளாகி அண்ட கோடிகளையெல்லாம் தாங்கிநிற்கும் முழுமுதற் பொருளாகத் தங்களையும், என்னை அதில் விளங்குகின்ற ஒரு பகுதிப் பொருளாகவும் எண்ணிக் கொள்ளுகிறேன். அத்துடன் இவற்றையெல்லாம் காத்துநிற்கும் தலைவனுகத் தங்களையும், அந்தத் தலைவனுக்குச் சேவை செய்யும் ஒரு தொண்டனுக என்னையும் கருதிக் கொள்கிறேன். மேலும் பிரபோ! நான் என்னைச் சின்மய (அறிவுமய)மானவடிவமாகக் காணும்போது, 'நான் நீயாக, நீ நானுக' இருப்பதை உணர்கிறேன்" என்று பதில் கூறினுர். இறைவனிடம் நாம் கொள்ளும் இத்தகைய ஆண்டான்—அடிமை என்னும் மன நிலையே பொருத்தமானது; சிறந்தது. ஏனென்ருல், 'நான்' எனும் ஆணவத்தைத் தள்ளுவது எளிதில் முடியாதாகையால் இந்த 'நான்' எனும் போக்கிரி 'கடவுளின் அடிமையான நானுக' இருந்துவிடட்டும்.

[1] வடமேற்கு இந்தியாவில் பசுவை ஏரில் கட்டுவார்கள்.

'நான்' 'எனது' என்ற அகங்கார மமகாரங்கள் அறியாமை யின் வெளிப்பாடுகளே. 'என் வீடு' 'என் செல்வம்' 'என் படிப்பு' 'என் சொத்து' இப்படிப் பேசவைக்கும் மனப்போக்கு ஒருவனுக்கு அவனுடைய அறியாமையிலிருந்தே தோன்று கிறது.

"ஞானத்திலிருந்து வரும் மனப்போக்கோ இதற்கு நேர் மாருக 'ஏ பகவானே! நீயே இவ்வுலகத்தைப் படைத்தவன்! எல்லாப் பொருட்களும் உனக்குரியவை. வீடு, வாசல், மனைவி, மக்கள், வேலையாட்கள், நண்பர்கள் மற்றும் சகலமும் உன்னுடையவை' என்று பேச வைக்கிறது.

"என்றேனும் நாம் இறந்துபோவோம் என்பது நிச்சயம். இந்த எண்ணத்தை இடைவிடாது சிந்தித்துவரவேண்டும். சாவி லிருந்து எதுவும் தப்பமுடியாது. எதையும் எடுத்துச் செல்லவும் நம்மால் இயலாது. வேலையின் காரணமாக மக்கள் கிராமங்களி லிருந்து கல்கத்தா நகரத்திற்கு வருவதுபோல, நாமும் சில கடமைகளைச் செய்வதற்காக இந்த உலகில் வந்து பிறந்திருக் கிறோம். ஒரு பணக்காரனுக்குரிய பூஞ்சோலையை வேடிக்கை பார்க்கவந்திருக்கும் ஒரு விருந்தினனிடம், பூஞ்சோலைக் கண் காணிப்பாளன், 'எங்களுடைய இந்தத் தோட்டத்தில்' 'இது தான் எங்களுடைய ஏரி' என்று சொந்தம் கொண்டாடி விளக் குகிறான். அந்தக் கண்காணிப்பாளனே, தான் செய்த தவறுக்காக வேலையிலிருந்து விலக்கப்படும்போது சொந்தம் பேசிய அவன் கேவலம் ஒரு பழைய மாம்பலகைப் பெட்டியைக்கூட அங்கிருந்து எடுத்துச்செல்ல முடிவதில்லை. எடுத்துச்செல்ல வேண்டுமானால் திருட்டுத்தனமாக, வாயிற் காப்போன் துணையில், ரகசியமாக எடுத்துச்செல்லவேண்டி யிருக்கிறது. (அனைவரும் சிரித்தல்)

"கடவுள் இரண்டு தருணங்களில் நம்மைப் பார்த்துச் சிரிக் கிறார். ஒன்று, ஒரு வைத்தியன் நோய்வாய்ப்பட்ட குழந்தையின் தாயாரிடத்தில் 'அம்மா! நான் இருக்கிறேன். எதற்கும் அஞ்ச வேண்டாம். உங்கள் மகனை நிச்சயமாகக் குணப்படுத்தி விடு கிறேன்' என்று கூறும்போது கடவுள் தமக்குத் தாமே சிரித் துக் கொள்ளுகிறார். 'என்ன இது? இந்த நோயாளியின் உயிரை நானே கொண்டுபோகப் போகிறேன். இவனோ பிழைக்க வைத்துவிடுவேன் என்கிறானே!' என்று கூறிச் சிரிக்கிறார். கடவுள் ஒருவரே எதையும் செய்யக்கூடிய ஈஸ்வரன், வைத் தீஸ்வரன் என்ற நினைப்பை மறந்து தன்னால்தான் எதுவும் நடக்கிறது என்று, பாவம்! மனிதன் நினைத்துக்கொள்ளுகிறான்.

"இரண்டு சகோதரர்கள் அளவுக் கயிற்றைப் பிடித்துக் கொண்டு நிலத்தை அளந்து, 'இந்தப் பகுதி என்னுடையது, அந்தப் பக்கம் இருப்பது உன்னுடையது' என்று கூறும் போது கடவுள் மறுபடியும் சிரிக்கிறார். 'இந்த அண்டசராசரமே எனக்குச் சொந்தமாக இருக்கும்போது இவர்கள் இந்தப் பக்கம் எனக்குச் சொந்தமானது. அந்தப்பக்கம் உனக்குச் சொந்தம் என்று கூறிச் சண்டையிட்டுக்கொள்ளுகிறார்களே' என்று தமக்குத்தாமே கூறிக் கொண்டு சிரித்துக் கொள்கிறார்.

"இறைவனைக் காரண காரியங்களினாலும், வெறும் ஆராய்ச்சியினாலும் ஒருவனால் அறிய முடியுமா என்ன? உன்னை அவருக்கு அடிமையாக்கிவிடு; அவரிடம் சரணாகதி அடைந்து விடு. பின்னர் மனம் ஒப்பி வழிபடு; அப்போதே இறைவனை உணர முடியும், அறிந்துகொள்ள இயலும். (வித்யாசாகரைப் பார்த்து) கடவுளிடத்தில் நீங்கள் மேற்கொண்டிருக்கும் வழி முறை என்ன?"

வித்யாசாகர்: "என்றாவது ஒரு நாள் நிச்சயமாகச் சொல்லி விடுகிறேன் அந்த ரகசியத்தை". (எல்லோரும் சிரிக்கிறார்கள்)

ஸ்ரீராமகிருஷ்ணர் சிரித்துக்கொண்டு "கல்வி கேள்விகளினால் ஆராய்ந்து பார்த்து இறைவனை அறிய முடியாது." தெய்விகப் பரவசத்தில் மயங்கியவராய் குருதேவர் பாடத் துவங்கினார்.

> அம்மை காளி இன்னாரென் றறிய வல்லவர் எவரே தான்?
> அவளைக் காட்டச்செம்மையுறு தரிசனங்கள் திறனிலவாம் ஓராறும்;
>
> ... ... ...

"பார்த்தாயா! காளியின் வயிற்றில் இந்தப் பிரம்மாண்டமே இருக்கிறது. அதை எப்படி அறிவாய்? ஆறு தரிசனங்களும் அவள் காட்சியை அருளா என்றால், வெறும் படிப்பினால் அவளை அடைய முடியுமோ?

"ஒருவனுக்குக் கடவுளிடம் பக்தியும், இறைவன் உண்டென் பதில் அசைக்க முடியாத நம்பிக்கையும் இருக்க வேண்டும். இறை நம்பிக்கை எந்த அளவுக்கு ஆற்றல் மிக்கது என்பதைக் கூறுகிறேன் கேளுங்கள். இலங்கையிலிருந்து இந்தியாவிற்கு வர ஒருவனுக்குக் கடலைக் கடக்க வேண்டியிருந்தது. அவனைப் பார்த்து விபீஷணர் 'இதோ பார், இந்தப் பொருளை நீ உன் ஆடைமுனையில் நன்றாக முடிந்துகொள். கடலைப் பத்திரமாகக்

தாண்டிவிடுவாய். கடல்மேல் நடக்கும் ஆற்றல் உனக்கு வந்துவிடும். ஆனால், இந்தப் பொருள் என்ன என்றுமட்டும் நீ பிரித்துப்பார்த்துவிடாதே' என்றார். அந்த மனிதனும் அந்தப் பொருளை வாங்கி ஆடையில் முடிந்துகொண்டான். கடல்மேல் எளிதாக நடக்கத் துவங்கினான். நம்பிக்கைக்கு அவ்வளவு வலிமை! கடல்மீது கொஞ்சதூரம் நடந்துசென்றதும் 'விபீஷணர் அப்படி என்ன பொருள் கொடுத்திருக்கிறார்? இதைக் கொண்டு இந்த நீரின்மீது இவ்வளவு எளிதாக நடக்க முடிகிறதே!' என்று எண்ணித் துணியின் முடிச்சை அவிழ்த்துப் பார்த்தான். அதில் இராமர் பெயர் எழுதிய ஓலைச்சுருள் இருந்தது. அதைக் கண்டதும், 'ஓ! இவ்வளவுதானா' என்று நினைத்தான். அவ்வளவு தான்; உடனே கடலில் மூழ்கிவிட்டான்!

"அனுமனுக்கு இராமநாமத்தில் அதிக நம்பிக்கை. அந்த நம்பிக்கையின் வலிமையால்தான் இராமருடைய பெயரைக் கூறியபடியே கடலைத் தாண்டினார். ஆனால், இராமருக்கோ பாலம் கட்டிக் கடலைக் கடக்கவேண்டிய நிலை ஏற்பட்டது.

"ஈசுவரனிடம் ஆழ்ந்த நம்பிக்கை இருந்தால் பாவம் செய்தாலும், அல்லது பாதகனாக இருந்தாலும் எதற்கும் அஞ்சத் தேவையில்லை". இப்படிக் கூறிக்கொண்டே குருதேவர் பக்திப் பரவசத்தில் மூழ்கியவாறு நம்பிக்கையின் வலிமை குறித்துப் பாடத்துவங்கினார்.

துர்க்கையின் நாமம் ஓதிக் கொண்டே
என்னுயிர் தனையான் விடுவே னாகில்
எத்துணைப் பாவம் யான்செய் திருப்பினும்
புண்ணிய மூர்த்தி, எங்ஙனம் என்னைநீ
உய்விக் காது தடைசெயக் கூடும்?
ஒருவாய் மதுவினைத் திருடி யிருப்பினும்
பிறக்குமுன் குழந்தையைக் கருவழித் திருப்பினும்
பசுவையோ பெண்ணையோ நசிப்பித் திருப்பினும்
நல்லஅந் தணனைநான் கொல்வித் திருப்பினும்
அனைத்துமெய் யாயினும் தினையள வச்சமும்
எனைக்கொளச் செய்ய எதற்கும் இயலுமோ?
என்னொனில் அன்னாய் நின்நா மத்தின்
சக்தியைக் கொண்டு மெத்தப் பாவியேன்
பிரம்ம பதத்தையும் பெறுதலும் இயலுமால்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தொடர்ந்து பேசலானார்.

"தேவை நம்பிக்கையும் பக்தியும்தான். பக்தியால் ஈசனை மிக எளிதில் அடையலாம். அவன் பக்திக்கு மிகவும் இணங்குபவன்."

இப்படிக் கூறிக்கொண்டே குருதேவர் மறுபடியும் பாடத் துவங்கினார் :—

இறையியல்பை அறிவதற்கா என்நெஞ்சே
எங்ஙனம்நீ முயலு கின்றாய்?
நிறையிருள்சேர் ஓரறையிற் சிறைப்பட்ட
பித்தனென நீடு நின்றாய்;
உறையன்பின் பரவசத்தால் ஓர்ந்திடலாம்;
அதுவன்றி ஒண்ணு மோதான்?
அதை 'இதி'யென் நெறியொன்றால் அறியலாம்,
'நேதி'யினால் ஆகா தன்றே.
நான்மறையால் தந்திரத்தால் நாலிரண்டு
தரிசனத்தால் ஞான மேது?
மான்மருவும் அன்பமுதால் மகிழுமிறை
தனையடைய மற்றென் றின்றால்;
ஊன்மிசையுள் நெஞ்சத்தே உலவாத
பேரின்பத் துறைவான் ஈசன்;
கான்மருங்கே யுகந்தோறும் கணமுனிவர்
யோகு பயில் கருத்தும் அன்பே.
அன்புதிக்கின் உயிரைஇறை அருங்காந்தம்
போலிழுப்பான்; அகத்திற் சேர்ப்பான்;
என்புருகி ராம்பிரசாத் எமதன்னை
யென்றணுகும் ஈசன் அன்னோன்:
வன்புமிகும் சந்தையிதில் மறைபொருளை
யான்வழங்கல் மரபு மன்றே;
முன்பு மொழி குறிப்புகளால் முன்னியுணர்ந்
திடுகஅந்த முதலை நெஞ்சே.

[தேடுதல்-தேடுதல்; இதி-இதுவே; நேதி-இதுவன்று; மால் மருவும்-ஆசைமயக்கம் பொருந்தும்; மறைபொருள்-இரகசியம்; முதலை-முதற்பொருளாகிய ஈசனை]

பாடிக்கொண்டிருக்கும் பொழுதே சமாதியில் ஆழ்ந்து போனார். கூப்பிய கரங்கள்; நிமிர்ந்த உடல்; மூச்சை உள்ள டக்கிய நிலையில் அசையாமல் மேற்கு திசையைப் பார்த்தபடி பெஞ்சின்மேல் கால்களைத் தொங்கவிட்டுக்கொண்டு அமர்ந் திருந்தார். எல்லோரும் மிகுந்த வியப்போடு இந்த அற்புத மான காட்சியை இமைக்காது பார்த்துக் கொண்டிருந்தனர். வித்யாசாகரும் மனம் ஒருமுகப்பட்டவராய்ப் பேச்சற்று அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்.

குருதேவர் மீண்டும் சாதாரண நிலக்குத் திரும்பினார். ஒரு நீண்ட பெருமூச்சைவிட்டுச் சிரித்துக்கொண்டே மறுபடியும் பேச ஆரம்பித்தார். "பரவசபக்தி என்பது இறைவனை மனமார நேசிப்பது. எது பிரம்மமோ அதையே அன்னை பராசக்தி என்று அழைக்கின்றோம். இராம்பிரசாதர் பாடினார்.

என்புருகி ராம்பிரசாத் எமதன்னை என்றனுகும் ஈசன் அன்னேன்!
வன்புமிகும் சந்தையிதில் மறைபொருளை யான்வழங்கல் மரபு மன்றே!
முன்புமொழி குறிப்புகளால் முன்னியுணர்ந் திடுகஅந்த முதலை நெஞ்சே!

"இராம்பிரசாத் தன் மனத்திடம், 'மனமே! கடவுளைப் பற்றிக் கற்பனை செய்' என்று வேண்டுகிறார். மேலும் வேதத்தில் எது பிரம்மம் என்று கூறப்படுகிறதோ அதையே நான் அன்னை என்று அழைக்கிறேன். குணம், வடிவம் இல்லாத நிர்க்குண மான பரம்பொருளே குணமும் வடிவமும் உள்ள சகுணமாயி ருக்கிறது. பிரம்மமாயிருப்பது எதுவோ, அதுவே சக்தியாகவும் இருக்கிறது. செயலற்றதாகக் கருதப்படும் பொழுது அது பிரம்மம் எனப்படுகிறது. அதுவே படைத்துக் காத்து அழிக்கும் செயல்களைப் புரிவதாகக் காணும்பொழுது ஆதிசக்தி என்று அழைக்கப்படுகிறது. அதுவே தான் காளி.

"நெருப்பும் அதன் சூடும் போல, பிரம்மமும் சக்தியும் ஒன்று தான். நெருப்பு என்றவுடன் அதன் சூட்டையும் அறிந்து கொள்கிறோம். சூடு என்னும்போது நெருப்பை நினைக்கிறோம். ஒன்றை ஒப்புக்கொண்டால் மற்றொன்றையும் ஒப்புக் கொண்டதாகிவிடுகிறது.

"பிரம்மத்தையே அன்னை என்று அழைக்கிறோம். அன்னை ஆழ்ந்த அன்பிற்கு உகந்தவள் அல்லவா! ஈசனை மனமார நேசித்தால் அவனை அடையமுடியும். உணர்ச்சி, அதனால் விளையும் பரவசம், பக்தி, அன்பு, நம்பிக்கை ஆகியவையே தேவை. மற்றொரு பாட்டைக் கேளுங்கள்.

எத்துணைத் தியானம் அத்துணைப் பக்தி;
எத்துணைப் பக்தி அத்துணை இலாபம்;
அனைத்துக் கும்வேர் நினைத்திடில் சிரத்தை.
காளி யம்மையின் கழலமு தேரியில்
நாளுமென் நெஞ்சம் நன்கமிழ்ந் திடுமேல்
வணக்கமும் அன்புடன் வழங்குகா ணிக்கையும்
இணக்கப் பலியும் எதற்கோ எனக்கே?

"மனம் அவனில் லயித்துவிட வேண்டும். இறைவனிடம் அன்பு செலுத்தவேண்டும். அவர் அமுதக்கடல். அதில் மூழ்கினால் மனிதன் இறப்பதில்லை. சாகாநிலையை அடைகிறான். கடவுளை அதிகமாக நினைத்தால் மூளைக்கோளாறு ஏற்படும் என்று சிலர் நினைக்கின்றனர். அது உண்மையல்ல. ஏனென்றால் ஆண்டவன் அமுதக் கடல். வேதம் இறைவனை 'அமிர்தம்' என்று பாடுகிறது. இதில் மூழ்கினால் மனிதன் இறப்பதில்லை. சாகாநிலையை அடைகிறான்.

"பூஜை, ஹோமம், யாகம், யக்ஞம் எதுவும் பக்தி இல்லையெனில் பயன்படாது. ஈசனிடம் பக்தி ஏற்பட்டாலோ இப்படிப்பட்டச் செயல்களுக்கு அவசியமும் இல்லை. காற்றில்லாதபோது விசிறி தேவை. தென்றல் வீசத்தொடங்கியதும் விசிறியை வைத்துவிடுகிறோம். அப்போது விசிறிக்கு என்ன வேலை?

(வித்யாசாகரிடம்) "நீங்கள் செய்யும் காரியங்கள் எல்லாம் நல்ல காரியங்கள். 'நான் செய்கின்றேன்' என்ற எண்ணத்தை விட்டுவிட்டுப் பயன் கருதாமல் செய்யமுடியுமானால் மிகவும் நல்லது. பயன் கருதாமல் காரியம்செய்து கொண்டே இருந்தால் இறைவனிடம் அன்பு கலந்த ஆழ்ந்த பக்தி உண்டாகிறது. இதைத் தொடர்ந்து செய்துகொண்டேயிருந்தால் இறைவனின் காட்சி கிட்டுகிறது.

"ஆனால், எவ்வளவுக்கெவ்வளவு பக்தி வளர்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு காரியங்கள் செய்யும் ஆர்வம் குறைந்து கொண்டுவரும். மருமகள் கர்ப்பவதியானால் மாமியார் அவளுடைய வேலைகளைக் குறைத்துவிடுகிறாள். நாள் செல்லச் செல்ல, வேலைகளும் குறைந்துகொண்டே போகின்றன. பத்தாவது மாதம் நெருங்கும்போது அவளுக்கு எந்தவிதமான வேலையும் கொடுப்பதில்லை. அப்படி ஏதாவது வேலை செய்தால்

வயிற்றிலிருக்கும் குழந்தைக்கு ஏதாவது கெடுதல் விளையலாம். பிள்ளைப் பேற்றின்போது தொல்லைகள் ஏற்படுமே என்று தான். (சிரிப்பு)

"நீங்கள் உலக நன்மைக்காக எந்தக் காரியங்களைச் செய்கிறீர்களோ அவைகளால் நீங்களும் பயனடைகிறீர்கள். அவைகளைப் பயன் கருதாது செய்யும் பொழுது உங்கள் மனம் தூய்மையடைகிறது. இறைவனிடம் பக்தி பிறக்கிறது. இறைவனிடம் ஆழ்ந்த பக்தி ஏற்பட்டால் பிறகு அவனது காட்சி கிட்டுகிறது. இந்த உலகத்திற்கு உதவி செய்வது என்பது நம்மால் முடியாது. எல்லா உதவிகளையும் செய்வது ஈசன் ஒருவன் தான். சந்திர, சூரியர்களைப் படைத்தவர் எவரோ, தாய் தந்தையர் உள்ளங்களில் அன்பை வைத்தவர் எவரோ, நல்லவர் உள்ளங்களில் நன்மையை வைத்தவர் எவரோ, சாதுக்கள், பக்தர்கள் மனத்தில் பக்தியை வைத்தவர் எவரோ அவர் ஒருவரே உலகுக்கு உதவி செய்யமுடியும். பயன் கருதாது பணிபுரிபவன் உண்மையில் தனக்கே நன்மையைத் தேடிக் கொள்ளுகிறான்.

"உங்கள் உள்ளத்தில் பொன் புதையுண்டுகிடக்கிறது. ஆனால், அந்தப் பொன் இருப்பது இன்னும் உங்களுக்குத் தெரியவில்லை. மண்ணால் சிறிது மூடப்பட்டிருக்கிறது. அது இருப்பதுமட்டும் ஒருமுறை உங்களுக்குத் தெரியவந்தால், எல்லாக் காரியங்களும் குறைந்துவிடும். மருமகளுக்குக் குழந்தை பிறந்ததும் அந்தக் குழந்தையைப் பார்த்துக் கொள்வதே அவளுடைய வேலை. எப்பொழுதும் அதைப் பற்றியே நினைத்துக்கொண்டும் பேசிக்கொண்டும் இருப்பாள் மாமியார் அவளுக்கு எந்த வீட்டுவேலையும் கொடுப்பதில்லை. (எல்லோரும் சிரிக்கின்றனர்)

"முன்னேறிச்செல்வது இன்றியமையாதது. ஒரு விறகு வெட்டி விறகு வெட்டிவரக் காட்டுக்குச் சென்றான். வழியில் எதிரே வந்த பிரம்மச்சாரி ஒருவர் அவனிடம், 'முன்னேறிச்செல்' என்று கூறினார். அவர் சொல்படி விறகுவெட்டியும் முன்னேக்கிச் சென்றான். அவனுக்குச் சந்தனமரம் ஒன்று கிடைத்தது. சில நாட்களுக்குப் பிறகு விறகுவெட்டி, 'அவர் முன்னேக்கிச் செல்லும்படித்தானே கூறினார். சந்தனமரத்துடன் என்னை நின்றுவிடச் சொல்லவில்லையே,' என்று தனக்குள் நினைத்தான். இன்னும் காட்டிற்குள்ளே சென்று பார்த்தான். வெள்ளிச் சுரங்கம் ஒன்று தென்பட்டது. சில நாட்கள் கழித்து மேலும்

உள்ளே சென்று பார்த்தான். தங்கச்சுரங்கம் இருப்பதைக் கண்டான். அதற்குப் பிறகு மேலும் முன்னேக்கிச் சென்ற போது வைரம், மாணிக்கம் முதலியவை எல்லாம் கிடைத்தன. பெரிய பணக்காரனுக ஆகிவிட்டான்!

"பயன் கருதாமல் காரியங்கள் செய்தால் இறைவனிடம் உண்மையான பக்தி ஏற்படும். நாளடைவில் அவன் அருளால் அவன் காட்சியையும் பெறலாம். இறைவனைக் காண முடியும்! அவனுடன் பேசமுடியும்! அதாவது நான் இப்போது எப்படி உங்களுடன் பேசிக்கொண்டிருக்கிறேனே அதுபோல் அவரோடு பேசமுடியும்!" (அனைவரும் ஆழ்ந்த மௌனத்துடன் இருந்தனர்)

வியப்புடன் அவருடைய இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தனர். கலைமகளே பரமஹம்சரின் நாவில் தோன்றி, வித்யாசாகரை முன்வைத்து உலக மக்களின் நன்மைக்காக அவரைப் பேசவைத்ததுபோல் தோன்றியது.

இரவு மணி ஒன்பது இருக்கும். பரமஹம்சர் இன்னும் சிறிது நேரத்தில் விடைபெறுவதாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (வித்யாசாகரைப் பார்த்துச் சிரித்தபடி) "இப்பொழுது நான் கூறிய எல்லாம் நீங்கள் ஏற் கெனவே நன்ருக அறிந்தவையே. ஆனல், அவற்றைப்பற்றிய சிந்தனைதான் உங்களிடம் இல்லை. (எல்லோரும் சிரிக்கின்றனர்) வருணதேவரின் கருவூலத்தில் எவ்வளவோ விலையுயர்ந்த இரத்தினங்கள் உள்ளன. ஆனல், அவர் எல்லாவற்றையும் எண்ணிக்கொண்டிருப்பதில்லை."

வித்யாசாகர் :—(சிரித்துக்கொண்டே) "நீங்கள் வேண்டு மானல் அப்படிக் கூறலாம்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : (சிரித்துக்கொண்டே) "ஆமாம். பல பணக்காரர்களுக்குத் தங்களிடத்தில் வேலைபார்க்கும் வேலைக் காரர்களின் பெயர்கூடத் தெரிவதில்லை. (எல்லோரும் சிரிக் கின்றனர்) அல்லது வீட்டில் எங்கே என்ன விலையுயர்ந்த பொருள்கள் இருக்கின்றன என்பதும் தெரியாது."

குருதேவரின் இவ்வமுதமொழிகளை இதுவரை கேட்டுவந்த எல்லோரும் பரவசமடைந்தனர். குருதேவர் மறுபடியும் வித்யாசாகரை நோக்கிப் பேசத்துவங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (சிரித்துக்கொண்டே) "ஒருமுறை தட்சிணேசுவரக் கோயில் தோட்டத்தைப் பார்ப்பதற்கு வாருங்களேன். ராணி ராசமணியின் தோட்டம். அது மிக அழகான இடம்."

வித்யாசாகர் : "நிச்சயமாக வருகிறேன். எவ்வளவு பேரன்போடு என்னைப் பார்க்கவந்திருக்கிறீர்கள்? நான் தங்களைக் காணவராமல் இருப்பேனா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "என்னைக் காணவருவதா? ஒருபோதும் அப்படிக் கூறவேண்டாம்."

வித்யாசாகர் :—"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : (சிரித்துக்கொண்டே) "நாங்கள் சிறு சிறு மீன்களைப் பிடிக்கும் சின்னஞ்சிறு படகுகள். (எல்லோரும் சிரிக்கின்றனர்) நாங்கள் சிறிய ஓடையிலும் செல்லலாம்; பெரிய நதியிலும் செல்லலாம். ஆனால், நீங்களோ ஒரு பெரிய கப்பல். ஓடையிலும் நதியிலும் வந்து வழியில் சேற்றில் மாட்டிக் கொண்டு விட்டால்........." (எல்லோரும் சிரித்தனர்) பரமஹம்சரும் சிரித்தார். வித்யாசாகர் சிரித்த முகத்தோடு மௌனமாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (சிரித்தபடி) "ஆனால், இந்தச் சமயத்தில் பெரிய கப்பல்களும் வரக்கூடும்."

வித்யாசாகர்: (சிரித்துக்கொண்டே) "ஆமாம், ஆமாம். இப்போது மழைக்காலம்!"(எல்லோரும் சிரிக்கின்றனர்)

ம :— (தனக்குள்) "ஆம்; புதியதாகத் தோன்றியிருக்கிற அன்புமயமான மழை. புதிதாக இத்தகைய அன்புமழை பொழியும் காலத்தில் மானம், அவமானம் முதலிய எண்ணங்கள் அடித்துச்செல்லப்படுகின்றன அன்றோ?"

குருதேவர் பக்தர்களுடன் புறப்படலானார். வித்யாசாகர் தம் சுற்றத்தாரோடு எழுந்துநின்றார். பரமஹம்சரை வண்டியிலே அனுப்பக் கிளம்பலானார்கள்.

"ஸ்ரீராமகிருஷ்ணர் புறப்படாமல் இன்னும் எதற்காக நின்று கொண்டிருக்கிறார்? மூலமந்திரத்தை ஜபம் செய்துகொண்டே பரவசநிலையை அடைந்துவிட்டார். மக்களைக் காப்பாற்றும்

கருணைக்கடல் அல்லவா அவர்! வீட்டைவிட்டுப் புறப் படுவதற்குமுன் வித்யாசாகரின் ஆத்மிக மேன்மைக்காக அன்னையிடம் பிரார்த்தனை செய்கிறார்போலும்!"

ஒரு பக்தரின் கையைப் பிடித்துக்கொண்டு குருதேவர் படிக்கட்டுகள் வழியாகப் பக்தர்களுடன் இறங்க ஆரம்பித்தார். வித்யாசாகர், உறவினர் நண்பர்களுடன் கையில் விளக்கேந்தி வழிகாட்டிக்கொண்டு முன்னே சென்றார்.

ஆவணி மாதம். அமாவாசைக்கு அடுத்த எட்டாம் நாள். அதனால் இன்னும் சந்திரன் வானத்தில் உதயமாகவில்லை. இருள் சூழ்ந்திருக்கும் தோட்டத்தின் வழியே விளக்கின் மங்கலான வெளிச்சத்தில் எல்லோரும் முன்வாயிலை நோக்கி நடந்துசென்றனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் பக்தர்களுடன் வாயிற்கதவையடைந்தார். எதிர்பாராத ஓர் அழகான காட்சியைக் கண்டு அப்படியே அனைவரும் நின்றனர். சுமார் முப்பத்தேழு வயதுடைய ஒருவர் அங்கு நின்றுகொண்டிருந்தார். வங்காளி உடை தரித்த அவர் தாடி வைத்திருந்தார். சீக்கியரைப்போன்ற தலைப்பாகை, சட்டை முதலியவற்றை அணிந்திருந்தார். காலுறையும் அணிந் திருந்தார். மேல் துண்டு எதுவுமில்லை. பரமஹம்சரைப் பார்த் தவுடனேயே அவர் திருவடிகளில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கியதை எல்லோரும் பார்த்தவாறு நின்றனர். அவர் எழுந்துநின்றபோது குருதேவர், "ஓ பலராம்! நீயா இந்த இரவில்?" என்று கேட்டார்.

பலராம் : (சிரித்துக்கொண்டே) "நான் வந்து நீண்ட நேரமாகிவிட்டது. இங்கேயே நின்றுகொண்டிருந்தேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஏன் உள்ளே வரக்கூடாது?"

பலராம்: "எல்லோரும் உங்களுடைய வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். நடுவிலே வந்து இடையூறு விளைவிப்பதா?" (இவ்வாறு கூறிக் கொண்டே பலராம் சிரித்தார்)

குருதேவர் பக்தர்களுடன் வண்டியில் ஏறிக்கொண்டார்.

வித்யாசாகர்: (ம-வைப் பார்த்துத் தாழ்ந்த குரலில்) "வாடகை கொடுக்கட்டுமா?"

ம : 'வேண்டாம். ஏற்கெனவே கொடுத்தாகிவிட்டது.'

வித்யாசாகரும், மற்றவர்களும் குருதேவரை வணங்கி வழியனுப்ப, வண்டி தட்சிணேசுவரக் கோயிலை நோக்கி வட திசையில் வேகமாகச் செல்ல ஆரம்பித்தது. எல்லோரும் உள்ளே செல்ல மனமின்றி வண்டி செல்லும் திசையைப் பார்த்தபடி நீண்ட நேரம் நின்றுகொண்டிருந்தனர்.

"இவர் கடவுளை எவ்வளவு நேசிக்கிறார்! பக்தர்களுடைய வீடு தேடிச் செல்கிறார்! 'கடவுளிடம்ஆழ்ந்த பக்தி செலுத்துவது ஒன்றுதான் வாழ்க்கையின் நோக்கம்'என்று கூறுகிறார். இந்த மகாபுருஷர் யார்?" என்று எண்ணிக்கொண்டிருந்தார்களோ?

———

# இல்லறத்தார்க்கு அறிவுரை

**ஞாயிற்றுக்கிழமை, ஆகஸ்ட் 13, 1882**

அமாவாசை தினம். மாலை ஐந்து மணி. குருதேவர் தட்சி ணேசுவரக் காளி கோயிலில் தம்முடைய அறையில் கேதார் முதலிய அடியார்களுடன் உரையாடிக்கொண்டிருந்தார்.

ஹாலிசகர் என்ற இடத்தில் கேதார் சட்டர்ஜி வசித்து வந்தார். அரசாங்க அலுவலகம் ஒன்றில் கணக்கராக அவர் பணியாற்றி வந்தார். கிழக்கு வங்கத்திலுள்ள டாக்காவில் பல ஆண்டுகள் வாழ்ந்தவர். அந்நாளில் குருதேவரின் இன்னொரு பக்தரான விஜயகிருஷ்ணகோஸ்வாமியுடன் இவருக்கு நெருங் கிய நட்பு உண்டாயிற்று. ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றியும் அவரு டைய ஆத்மிக அனுபவங்களைப் பற்றியும் இருவரும் நெடுநேரம் பேசுவது வழக்கம். கேதார் ஒரு காலத்தில் பிரம்ம சமாஜத்தின் உறுப்பினராக இருந்தார். பக்தி நெறியைப் பின்பற்றுபவர் கேதார். தெய்விகப் பேச்சுகளைக் கேட்ட அளவில் அவருடைய திருவிழிகள் இரண்டும் இன்பக் கண்ணீர் பெருக்கும்.

குருதேவர் தமது அறையின் தென்தாழ்வாரத்தில் அடியார் குழாத்துடன் அமர்ந்திருந்தார். ராம், மனமோகன், சுரேந்திரர், ராக்கால், பவநாதர், ம-முதலிய அன்பர்கள் பலரும் அங்குக் குழுமியிருந்தனர். குருதேவர் பொருட்டு கேதார் அன்று ஆன்மிக விழா ஒன்று கொண்டாட விரும்பினர். இதன் காரணமாகப் பஜனைப் பாடல்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஒரு பாடகரை இராமச்சந்திரர் அழைத்துவந்தார். அதனால் நாள்முழுவதும் ஆனந்தப் பரவசம் குடிகொண்டிருந்தது.

பக்திப் பாடல் பாடப்பெற்றபோது அறையில் உள்ள சிறிய கட்டிலின்மீது குருதேவர் சமாதியில் ஆழ்ந்தவராய் அமர்ந்திருந்தார். அதன் பின்னர் ஆண்டவனோடு ஐக்கியப் படுத்தும் சமாதிநிலையின் இரகசியத்தைக் குறித்து அடியவர் கட்கு விளக்கத்தொடங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சச்சிதானந்தத்தை உணர்ந்துகொண்டவுடன் ஒருவன் சமாதிநிலையை அடைகிறான். அந்த நிலையில் கடமைகள் அவனிடமிருந்து தாமாகக் கழன்றுவிடுகின்றன. பின் அவன் எந்தக் கடமையையும் செய்ய முடியாதவனாகிவிடுகிறான். உதாரணத்திற்கு, நான் ஒரு சங்கீத வித்வானைக் கூப்பிட வேண்டும் என்று நினைத்துக்கொண்டிருக்கிறேன். அப்பொழுது அவரே என் எதிரில் வந்துநிற்கிறார். அதன் பின்னர் நான் அவரைக் கூப்பிட வேண்டிய அவசியம் என்ன?

"எவ்வளவு நேரம்தான் தேனீ ரீங்காரம் செய்து கொண்டிருக்க முடியும்? பூவின்மீது அமராத வரைதானே? ஆனால் அப்படியல்ல சாதகர்களின் நிலை. கடவுளை அடைய முயன்று கொண்டிருப்பவர்கள் தங்கள் சாதனைகளை நிறுத்திவிடக் கூடாது. பூஜை, ஜபம், தியானம், பிரார்த்தனை, யாத்திரை செல்லல் முதலிய காரியங்களைத் தொடர்ந்து செய்துகொண்டு வரவேண்டும். ஈசனுடைய காட்சியைப் பெற்ற பிறகும் எவரேனும் அவனைப் பற்றிய ஆராய்ச்சியில் இறங்குவார்களாயின், நான் அவர்களை மலரிலிருந்து தேனைக் குடித்துக்கொண்டிருக்கும் போதே மெல்ல ரீங்காரம் செய்கின்ற தேனீக்களைப் போன்றவர்கள் என்பேன்."

இசைவாணர் பாடிய இனிய பாடல்களைக் கேட்டு மகிழ்ந்த குருதேவர் அவரை நோக்கி, 'ஏதாவது ஒரு திறமை ஒருவரிடம் தலைதூக்கிநின்றால், அதாவது இசை முதலான நுண்கலைகளில் ஒருவர் மிகச்சிறந்த புலமை பெற்றிருந்தால், அவரிடம் கடவுளின் சக்தி சிறப்பாக வெளிப்பட்டுக்கொண்டிருக்கிறது என்று அறிந்து கொள்ளவேண்டும்' என்றார்.

பாடகர் : "ஐயனே! ஆண்டவனை அறிவதற்குரிய வழி என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பக்திதான் சாரம். பார்க்கும் இடம் எங்கும் எல்லாவற்றிலும் பரமன் நீக்கமற நிறைந்திருக்கிறார் என்பது நிச்சயம். அப்போது பக்தனைப் பிரித்து அறிவது எப்படி என்று கேட்கலாம். எவருடைய மனம் எப்பொழுதும் இறைவனை நாடிய வண்ணம் இருக்கின்றதோ அவரே பக்தன். ஆணவமும், தற்பெருமையும் ஒருவனிடம் உள்ளவரை பக்தி தோன்றாது. கடவுளுடைய கருணை எனப்படும் மழைநீர் 'நான்' எனும் ஆணவக் குன்றின் உச்சியில் ஒருபோதும் தங்காது. வழிந்து கீழே ஓடிவிடும். 'நான் ஒரு கருவி மட்டுமே' என்று உணர வேண்டும். (கேதார் மற்றுமுள்ள பக்தர்களைப் பார்த்து)

"எல்லா நெறிகளின் மூலமாகவும் கடவுளை அறியமுடியும். சமயங்கள் யாவும் உண்மையானவையே. உச்சியை, அதாவது முடியை ஒருவர் அடைந்துவிடவேண்டும் என்பதுதான் முக்கியம். உச்சியைக் கற்படிகள் மூலம் ஏறி அடையலாம்; மரப் படிகள் மூலம் ஏறி அடையலாம்; மூங்கிற்படிகள் மூலமும் அல்லது கயிற்றின் மூலமும் அடையலாம். இன்னும் சொல்லப்போனால் மூங்கிலைத் தரையில் ஊன்றித் தாண்டியும் அடையலாம்.

"நீங்கள் மற்ற மதங்களில் பல்வேறு தவறுகளும், மூட நம்பிக்கைகளும் இருப்பதாகக் கூறலாம். இருக்கட்டுமே! என்ன குடிமுழுகிப்போயிற்று? என்றே நான் பதில் அளிப்பேன். எல்லா மதங்களிலும் தவறுகள் உள்ளன. ஒவ்வொருவரும் தங்கள் கடிகாரம் மட்டுமே உரிய நேரத்தைக் காட்டுவதாக நினைக்கிறார்கள். இறைவனை அடைய உள்ளத்தில் ஏக்கமும், துடிப்பும் இருந்தாலே போதும். நமக்குள் இருந்துகொண்டு நம்மை வழிநடத்துபவர் இறைவர். அவரிடம் நமக்கு ஆழ்ந்த அன்பும், ஈர்ப்பும் இருந்தாலே போதும். அவர் நம் உள்ளத்தின் உண்மை ஏக்கத்தையும், அவரிடம் நாம் கொள்ளும் பற்றையும் நன்கறிவார்.

"ஒருவனுக்குப் பல பிள்ளைகள் இருப்பதாக வைத்துக்கொள்வோம். மூத்த பிள்ளைகள் அவரை 'அப்பா' என்று திருத்தமாகக் கூப்பிடுகிறார்கள். ஆனால், பச்சிளம் குழந்தையோ 'பா' 'அப்' என்று அரைகுறையாகத்தான் அழைக்கிறது. அதற்காகக் குழந்தையைத் தந்தை கோபித்துக்கொள்கிறாரா? அந்தக் குழந்தை தன்னைத்தான் அழைக்கிறது என்று அவருக்கு நன்றாகத் தெரியும். திருத்தமாகக் குழந்தையால் உச்சரிக்க முடியவில்லை, அவ்வளவுதான். தந்தைக்கு எல்லாக் குழந்தைகளும் ஒன்றுதான். அது போன்று, பக்தர்கள் பரம்பொருளைப் பல்வேறு பெயர்களில், எப்படி அழைத்தாலும் அவர்கள் அழைப்பது அந்த ஒரு பரம்பொருளையே ஆகும்.

ஒரு குளத்துக்கு நான்கு படித்துறைகள். இந்துக்கள் ஒரு துறையில் இறங்கி நீரைப் பருகிவிட்டு அதைத் "தண்ணீர்" என்கின்றனர். முஸ்லிம்கள் இன்னொரு படித்துறையில் நீரைப் பருகிவிட்டுப் "பானி" என்கின்றனர். கிருத்துவர்களோ அடுத்த படித்துறையிலிருந்து "வாட்டர்" என்கிறார்கள். மற்றொரு படித் துறையில் இருப்பவன் "ஆகுவா" என்கிறான். தண்ணீர் என்னவோ ஒன்றுதான். அதுபோல **இறைவன் ஒருவனே! அவனுக்கு நாமங்கள்தான் பல.**

## வியாழக்கிழமை, ஆகஸ்ட் 24, 1882

தட்சிணேசுவரக் காளிகோயில். ஸ்ரீராமகிருஷ்ணருடைய அறைக்கு வடகிழக்கில் உள்ள நீண்ட தாழ்வாரம். அங்கு ஸ்ரீராமகிருஷ்ணர் நின்றவாறு ஹாஸ்ராவுடன் பேசிக் கொண்டிருந்தார். உள்ளே வந்த ம- குருதேவரை மிகுந்த பய பக்தியோடு அவருடைய பாதத்தாமரைகளில் வணங்கினார். சில நாட்களாக ராம்லால், ஹாஸ்ரா, ராக்கால் முதலியோர் குரு தேவருடன் தங்கியிருந்தனர். குருதேவர் சிரித்த முகத்தோடு ம- வைப்பார்த்து, 'வித்யாசாகரை இன்னும் இரண்டொரு முறை நான் சந்திக்கவேண்டும்' என்றார். பிறகு பின்வருமாறு பேசலானார்.

"ஓர் ஓவியன் படம் தீட்டும்பொழுது, முதலில் கோடுகளை மிகுந்த கவனத்தோடு வரைந்துகொள்கிறான். பிறகு நிதான மாக உட்கார்ந்துகொண்டு அதில் வரைய வேண்டிய உட்பகுதி கள் ஒவ்வொன்றையும் அழுத்தமாக வரைகிறான். அதுபோல, பொம்மைகள் செய்பவர்கள் முதலில் அச்சில் களிமண் பொம்மை செய்து கொள்வார்கள். அடுத்து மூலை முடுக்குகளைக் களிமண் கொண்டு சரிசெய்து இலேசாக வெள்ளையடிப்பார் கள். இறுதியாகப் பல்வேறு வண்ணம் பூசி அழகுபடுத்துவார் கள். இந்த வேலைகளையெல்லாம் படிப்படியாகத் தொடர்ந்து செய்ய வேண்டும்.

"வித்யாசாகர் உள்ளம் இதுபோலப் பண்படுத்தப்பட்டுக் கடவுளைக் காணச் சித்தமாக இருக்கிறது. ஆனால், அது ஒரு மெல்லிய திரையால் மூடப்பட்டுள்ளது. இப்போது அவர் நற்பணிகளைச் செய்வதில் மூழ்கியிருக்கிறார். ஆனால், தனக்குள் இருப்பது என்னவென்பதை அறியாதவராக இருக்கிறார். அவருடைய உள்ளத்தில் தங்கம் புதைந்து கிடக் கிறது. இதயத்துள் இறைவன் உறைவதை அறிந்துகொண்டால், அவர் உடனே பணிகள் அனைத்தையும் அப்படியே உதறித் தள்ளிவிட்டு, அகம் உருகிக் கடவுளைக் கனிவுடன் அழைக்க ஆசைப்படுவார்."

நீண்ட அந்தத் தாழ்வாரத்தில் குருதேவர் சிறிதுநேரம் நின்றுகொண்டும், சிறிதுநேரம் முன்னும் பின்னுமாக நடந்து கொண்டும் ம-விடம் தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "தனக்குள் புதைந்து கிடப்பது என்ன என்பதை அறிந்துகொள்ள வேண்டுமெனில், மனிதர்கள் கொஞ்சமேனும் சாதனைகள் செய்தாக வேண்டும்."

ம : "வாழ்நாள் முழுவதும் சாதனைகள் புரிய வேண்டி இருக்குமா?"

குருதேவர் : "இல்லை. ஆனால், ஆரம்ப காலத்தில் மிக மிகத் தீவிரமாக முயற்சி செய்ய வேண்டும். ஆற்றில் படகு செல்லும்போது பெரிய அலைகள், சுழற்காற்று முதலியவை களைக் கடந்துசெல்ல நேரிடும். அப்போது படகோட்டி மிகுந்த எச்சரிக்கையோடு எழுந்து நின்றுகொண்டு படகு ஆபத்தில் சிக்கிக்கொள்ளாமல் இருக்கத் திசைதிருப்பும் சுக் கானை அழுத்தமாகப் பிடித்துக் கொள்வான். இந்த ஆபத்துக் களைத் தாண்டிய பிறகு மேலும் சுக்கானைப் பிடித்துக்கொண் டிருக்க வேண்டிய அவசியம் இல்லை.

பிறகு சாதகமான காற்று வீசும் போது படகோட்டி சுகமாக உட்கார்ந்து கொள்ளுகிறான். இப்பொழுது, சுக்கானை விட்டு விட்டுப் பாய்மரத்தைத் தூக்கி விரிப்பதற்கு ஏற்பாடு செய்கிறான். அதன்பிறகு அமைதியாக உட்கார்ந்து புகை பிடிக்க ஆரம்பிக்கிறான்.

அதுபோல, வாழ்க்கை ஓட்டத்தில் பெண், பொன் என்னும் அலைகளையும், புயல்களையும் சமாளித்துவிட்டானானால் அதன்பிறகு சாதகனுக்குச் சாந்தி கிடைக்கிறது.

"சிலர் யோகிக்குரிய தகுதிகளோடு பிறக்கிறார்கள். இருந்தாலும் அவர்களும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். காமினியும் காஞ்சனமுமே யோகத்திற்குத் தடைகள். அவை களில் மனம் செல்வதால் யோகநெறியிலிருந்து நழுவி, வாழ்க் கைச் சுழலில் அகப்பட்டுக் கொள்ளும்படி நேருகின்றது. இந்த ஆசைகள் தீர்ந்ததும், இத்தகையோர் மீண்டும் தங்கள் மனத்தை இறைவனை நோக்கிச் செலுத்துவார்கள். மேன்மேலும் யோகத்தில் ஈடுபட்டுச் சாதனைகளைச் செய்வதற்கான யோக மனநிலையை மீண்டும் பெறுவார்கள்.

"நீ எப்பொழுதாவது மீன்களைப் பிடிக்கப் பயன்படுத்தும் 'ஸ்பிரிங்' தூண்டிலைப் பார்த்திருக்கிறாயா?"

ம : "இல்லை ஐயா. நான் பார்த்ததில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "கிராமத்துப் பக்கங்களில் அதைப் பயன்படுத்துவார்கள். மூங்கிலின் ஒருமுனை பூமியில் கட்டப் பட்டிருக்கும். மற்றொரு முனை வளைக்கப்பட்டு, அந்த இடத்தில் இரையோடு கூடிய தூண்டில்முள் ஒன்று கட்டப் பட்டிருக்கும். மூங்கிலின் இந்தப் பகுதி தண்ணீரைத் தொட்டுக் கொண்டிருக்கும். மீன் தூண்டிலைக் கவ்வியதும் உடனே வளைந்த மூங்கில் நிமிர்ந்து நிற்கும்.

"இன்னும் விளக்கவேண்டுமானால் உதாரணத்திற்கு, தராசுத் தட்டுக்களை எடுத்துக்கொள். ஒரு தட்டில் பொருளை வைத்ததும் எடைகாட்டும் சிறியமுள், பெரியமுள்ளி லிருந்து விலகிச்சாயும். மனம் கீழே உள்ள சிறிய முள். மேலே உள்ள பெரியமுள் கடவுள். இந்த இரண்டும் சந்திப்பதுதான் யோகம்.

"மனம்மட்டும் ஒருமுகப் பட்டதாக இல்லையானால் யோகமே இல்லை. உலக ஆசையாகிய காற்றுதான் மனத்தை எப்போதும் அலைக்கழிக்கிறது. மனத்தை விளக்கின் சுடருக்கு ஒப்பிடலாம். விளக்கின் சுடர் எந்தப் பக்கமும் அசையாது நேராக எரியும். அதுபோல மனமும் எந்தப் பக்கமும் ஆடாது, அசையாது நேராக நிற்குமானால் ஒருவன் யோகத்தை அடைந்துவிட்ட தாகக் கூறலாம்.

"காமினி காஞ்சனங்களே யோகத்திற்கு இடையூறுகள். நீ பார்ப்பதையெல்லாம் எப்போதும் துருவி ஆராய்ந்துபார். ஒரு பெண்ணின் உடம்பில்தான் அப்படி என்ன இருக்கிறது? மிகவும் அருவருப்பான இரத்தம், தசை, கொழுப்பு, குடல்கள், மலம், சிறுநீர் முதலியவற்றால் அமைந்ததுதான் உடல். அத்தகைய உடம்பின் மேல் ஒருவன் ஏன் ஆசை வைக்க வேண்டும்?

"ஆசைகளைத் துறப்பதற்காக நான் சில நேரங்களில் ரஜோ குணபாவத்தை மேற்கொள்வதுண்டு. ஒருமுறை எனக்குத் தங் கச்சரிகைகள் இழைத்த போர்வையைப் போர்த்துக் கொள்ள வேண்டுமென்றும், விரலில் ஒரு மோதிரம் அணிந்துகொள்ள வேண்டுமென்றும், நீளமான குழாய் வைத்த உக்காவில் புகை பிடிக்கவேண்டுமென்றும் ஆசை எழுந்தது. மதுர்பாபு எனக்காக அவைகளை வாங்கிவந்தார். தங்கச்சரிகைப் போர்வையைப் போர்த்துக்கொண்டு, கொஞ்சநேரம் பொறுத்து மனத்திடம், 'ஓ! மனமே, 'தங்கச்சரிகைப்போர்வை, தங்கச்சரிகைப்போர்வை'

என்று சொல்லுகிறார்களே அது இதுதான். இதோ பார். அதை நான் இப்போது போர்த்திக்கொண்டிருக்கிறேன். போதுமா?' என்று சொல்லிவிட்டு உடனே அதை எடுத்துத் தூர வீசி எறிந்தேன். அதற்குப் பிறகு அந்தப் போர்வையை உடம்பின்மீது ஒரு கணம் வைக்கவும் என்னால் முடியவில்லை. அடுத்துத் தங்க மோதிரத்தைக் கையில் அணிந்துகொண்டேன். மனத்தினிடம் 'மனமே, இதுதான் தங்க மோதிரம். இதைப் பார்த்தாயா?' என்று சொல்லிவிட்டு அதையும் கழற்றி வீசி எறிந்தேன். அப்படியே நீண்ட உக்காவிலும் புகை குடித்துவிட்டு, அதையும் வீசி எறிந்தேன். அதற்குப் பிறகு அவைகளைப் பற்றிய எண்ணமே என் மனத்தில் தோன்றவில்லை."

அப்போது ஏறக்குறைய இருட்டும் பொழுதாயிற்று. ஸ்ரீராமகிருஷ்ணரும் ம- வும் தனியாகப் பேசியபடி, தென் கிழக்குத் தாழ்வாரத்தில் நின்றுகொண்டிருந்தார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (ம-விடம்) "யோகியின் உள்ளம் எப்போதும் பரம்பொருளிலே நிலைத்திருக்கும். அவனுடைய பார்வை எப்போதும் உள்நோக்கியே ஆத்மாவில் நிலைத்திருக்கும். பார்க்கும்போதே அத்தகைய மனிதனை அடையாளம் கண்டுகொள்ளலாம். அவனுடைய கண்கள், முட்டையை அடைகாக்கும் தாய்ப்பறவையின் கண்கள்போல் எங்கேயோ பார்த்தவண்ணம் அகலத் திறந்திருக்கும். அடைகாக்கும் கோழியின் மனம் முழுக்கமுழுக்க முட்டையின் மீதே நிலைத்திருக்கும். கண்களிலோ ஒரு வறட்டுப் பார்வையிருக்கும். அப்படிப்பட்ட பறவை ஒன்றின் படத்தைக் கொண்டுவந்து காட்டுகிறாயா?"

ம- : "முயலுகிறேன் சுவாமி."

மாலை நேரம் வரவே, கோயில்களில் விளக்கேற்றப்பட்டன. ஸ்ரீராமகிருஷ்ணர் தம்முடைய அறையில் சிறிய கட்டிலில் அமர்ந்துகொண்டு காளியை நினைத்துத் தியானம் செய்தார். பின்னர் தெய்வத் திருநாமங்களை இனிமையாகப் பாடினார். அறைக்குள் சாம்பிராணிப்புகை போடப்பட்டு, எண்ணெய் விளக்கு ஏற்றிவைக்கப்பட்டது. காளி கோயிலில் மாலைவழிபாடு ஆரம்பமாகிவிட்டதால், சங்கொலியும், மணியோசையும் காற்றில் மிதந்துவந்தன. நிலவொளி ஆலயம் எங்கும் வெள்ளம் போல் பரவியிருந்தது. குருதேவர் ம-விடம் பேசத்துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நீ உன் காரியங்களைப் பயன் கருதாமல், தன்னலமில்லாமல் செய்துவா. வித்யாசாகர் செய்கின்ற பணிகள் மிகவும் சிறந்தவை. பயனைக் கருதாமல் காரியங்களைச் செய்ய அவர் முயற்சி செய்கிறார்."

ம— : "அப்படியே ஐயா. ஆனால், ஒன்று தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன். ஒருவன் தன் கடமைகளைச் செய்துகொண்டிருக்கும்போதே ஈசனை உணரமுடியுமா? இராமனும், காமனும்[1] ஒன்றிணைந்திருக்கக் கூடுமா? சில நாட்களுக்கு முன் ஓர் இந்திப் புத்தகத்தில் 'இராமன் எங்குளனோ அங்கே காமன் இல்லை. காமன் எங்குளனோ அங்கே இராமன் இல்லை' என்று படித்தேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இன்னார்தான் என்றில்லாமல் அனைவருமே செயல்களைச் செய்துகொண்டிருக்கிறோம். பகவானின் பெருமைகளைப் பேசுவதும் அவன் நாமங்களைப் பாடுவதும் காரியங்கள்தான். அத்வைதிகள் (ஸோஹம்) 'நானே அவன்' என்று நினைத்து, தியானம் செய்வதும் செயல்தான். மூச்சை இழுப்பதும், விடுவதும்கூடச் செயல்தான். வேலையை ஒரேயடியாக விட்டுவிடுவது என்பது இந்தக் கர்மபூமியில் எளிதில் நடக்கிற காரியமில்லை. எனவே, உன் கடமைகளைச் செய்துவா. ஆனால், அவற்றின் பலனைமட்டும் கடவுளிடம் அர்ப்பணித்து விடு."

ம :— "ஐயா! நான் அதிகமாகப் பொருளீட்டும் முயற்சிகளை மேற்கொள்ளலாமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைபக்தியோடு வாழ்ந்துவரும் குடும்பத்தை நடத்துவதற்காக அதிகப் பணம் சம்பாதிப்பது அனுமதிக்கப்பட்டுள்ளது. நீ உன் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள முயற்சிகளை மேற்கொள்ளலாம். ஆனால், பணம் சம்பாதிப்பது ஒன்றையே வாழ்க்கையின் இலட்சியமாகக் கொள்ளக்கூடாது. இறைவனுக்குச் சேவை செய்வதே வாழ்க்கையின் குறிக்கோளாக இருக்கவேண்டும். பொருளின் வழியாகப்புண்ணியன் சேவை நிகழுமானால்,பொருளீட்டுவதில் தவறேதும் இல்லை."

---

[1] கடவுளும், உலக ஆசையும்

ம: "ஒரு மனிதன் எவ்வளவு காலம்வரையில் தன் மனைவியையும் மக்களையும் காப்பாற்றக் கடமைப்பட்டிருக்கிறான்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உணவிற்கும், உடைக்கும் உன்னை எதிர்பார்க்கிற நிலைமை எவ்வளவு காலம் உண்டோ, அவ்வளவு காலம் வரை அவர்களை நீ காப்பாற்ற வேண்டும். ஆனால், அவர்களுக்குத் தங்களைத் தாங்களே காப்பாற்றிக்கொள்ளும் நிலைமை ஏற்பட்டுவிட்டாலோ அவர்களை நீ காப்பாற்றத் தேவையில்லை. குஞ்சுகள் இரையைப் பிடிக்கக் கற்றுக்கொண்டதும், தாய்ப்பறவை தன்னிடம் வரும் அக்குஞ்சுகளை அலகால் கொத்தி விரட்டிவிடும்."

ம: "எதுவரை நான் கடமைகளைச் செய்து வரவேண்டும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "காய் தோன்றியதும் பூ தானாக உதிர்ந்து விடுகிறது. கடவுளை அடைந்தபின் ஒருவன் காரியங்களைச் செய்யவேண்டியதில்லை. காரியம் செய்யவேண்டும் என்ற எண்ணமும் அப்போது எழாது.

"ஒரு குடிகாரன் அளவுக்கு மிஞ்சிக் குடித்தானானால், அவனால் சுய நினைவோடு இருக்கமுடியாது. குடிப்பதை இரண்டு, மூன்று கோப்பைகளோடு மட்டும் நிறுத்திவிட்டால், அவன் தன் வேலைகளைக் கவனிக்கமுடியும். நீ கடவுளின் அருகில் செல்லச்செல்ல, உன் காரியங்களை அவர் கொஞ்சங்கொஞ்சமாகக் குறைத்துக்கொண்டே வருவார். அதைப்பற்றிய அச்சமே வேண்டாம்.

"உன் கையில் இருக்கும் கொஞ்சம் கடமைகளையும் முடித்துவிடு. அதன்பிறகு அமைதி பெறுவாய். வீட்டின் தலைவி சமையலையும், வீட்டுவேலைகளையும் முடித்துவிட்டுக் குளிக்கப்போவாள். அப்போது நீ எவ்வளவுதான் கரடியாகக் கத்தினாலும் திரும்பிக்கூடப் பார்க்கமாட்டாள்."

ம: "ஐயா! இறைவனை அடைவது என்பதன் பொருள் என்ன? இறைக்காட்சி என்று நீங்கள் எதைச் சொல்லுகிறீர்கள்? அதை ஒருவர் அடைவது எப்படி?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: வைணவ சம்பிரதாயப்படி, கடவுளைக் காணும் ஆர்வம் உடையவர்களும், கடவுளைக் கண்டவர்

களும் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள்: அவர்கள் **பிரவர்த்தகர்கள், சாதகர்கள், சித்தர்கள், சித்தசித்தர்கள்** எனப்படுவார்கள்.

"ஆன்மிகப் பாதையில் எவன் ஆரம்பத்தில் அப்போது தான் அடியெடுத்து வைத்திருக்கிறானோ, அவனுக்குப் **பிரவர்த்தகன்** என்று பெயர். ஆன்மிகச் சாதனைகளான பூஜை, ஜபம், தியானம், கடவுளின் பெயரையும் புகழையும் பாடுதல் முதலியவற்றைக் கொஞ்ச காலமாகக் கடைப்பிடித்து வருப வனைச் **சாதகன்** என்பார்கள். உள் அனுபவத்தின் மூலமாகக் கடவுள் உண்டு என்பதை அறிந்துகொண்டவனைச் **சித்தன்** என்பார்கள். இதை விளக்குவதற்கு வேதாந்தத்தில் ஓர் உதாரணம் உண்டு. வீட்டுக்குச் சொந்தக்காரன் ஓர் இருட்ட றையில் படுத்துக்கொண்டிருக்கிறான். அவனைக் காண ஒருவன் இருட்டிலே தடவிக்கொண்டு வருகிறான். கதவைத் தொடுகிறான்; கட்டிலைத் தொடுகிறான். 'இது அவன் இல்லை,' 'இது அவன் இல்லை' என்கிறான். வேதாந்த மொழியில் 'நேதி நேதி முறை' அதாவது 'இது இல்லை இது இல்லை' என்று மறுக்கும்முறை என்று இதைக் குறிப்பிடுவர். கடைசியாக வீட்டுக்காரனின் உடம்பின் மீது கை பட்டுவிடும். அப்பொழுது 'ஆ! இதோ எஜமான், இதோ எஜமான்' என்று கூறுவான். அதாவது, எஜமானனை இப்போது அறிந்துகொண்டான். ஆனாலும் இன்னும் நெருங்கிய உறவு ஏற்படவில்லை. இத்தகைய நிலையில் இருப்பவர்கள்தாம் **சித்தர்கள்**.

**சித்தசித்தர்கள்** அதாவது சித்தர்களுள் சித்தர்களாக இருப்பவர்கள் மற்றொரு வகையினர். இவர்கள் இறைவனோடு மிக நெருக்கமான உறவு கொண்டவர்கள். வீட்டின் தலைவ னைக் கண்டுபிடிப்பது என்பது வேறு. அவனுடன் மிகமிக நெருங்கி உரையாடுவது, உறவு கொள்வது என்பது வேறு. அதுபோலத்தான் கடவுளைக் காண்பது என்பது வேறு; அவ ருடன் நெருக்கமான உறவுகொள்வது என்பது வேறு. பிரேம பக்தியின் மூலமும், ஆழ்ந்த பற்றின் மூலமும் ஆண்டவனிடம் மிக நெருக்கமான உறவுகொள்ளலாம்.

"சித்தர்கள் கடவுளை அடைந்தவர்கள். இதில் ஐயமே இல்லை. ஆனால், சித்தர்களுள் சித்தர்கள் கடவுளை மிக மிக நெருக்கமாக அறிந்தவர்கள்; அனுபவிப்பவர்கள்.

"ஒருவர் கடவுளை அடையவேண்டுமானல் **சாந்தம், தாஸ்யம், சக்யம், வாத்சல்யம், மதுரம்** என்று கூறப்பட்ட உறவு நெறிகளில் ஏதாவது ஒன்றை நிச்சயம் மேற்கொண்டு பக்தி செலுத்தவேண்டும்.

**சாந்தம் :** இது அமைதியான மனோபாவம். பழங்கால முனிவர்கள் இத்தகைய மனோபாவத்தைத்தான் கடவுளிடம் கொண்டிருந்தார்கள். இத்தகையவர்கள், எந்தவொரு உலக இன்பத்திற்கும் ஆசைப்படமாட்டார்கள். இவர்களுடைய **பாவம்**, மனைவி கணவனிடம் காட்டுகின்ற மனம்ஒருமித்த அன்பாகும். மனைவிக்குத் தன்கணவன் மன்மதன்.

**தாஸ்யம் :** அனுமார் இராமரிடம் செலுத்திய **பாவம்** இது கடவுளை ஆண்டான் என்றும், தன்னை இறைவனின் அடிமை என்றும் உறவு கொள்வது. அதாவது, ஆண்டான் அடிமை என்ற நிலையில் பக்தி செலுத்துவது. இத்தகைய மன நிலையைக் கொள்பவன் சிங்கம்போல் காரியங்களைச் செய்கிறான். அனுமார் இராமரின் காரியங்களை இவ்வாறே செய்தார். மனைவியிடமும் இத்தகைய பாவனையைக் காணலாம். அவள் தன் கணவனுக்கு மனமாரச் சேவை செய்கிறாள். தாயிடம் இத்தகைய **பாவம்** சிறிது இருக்கிறது. கண்ணனிடம் யசோதை காட்டிய பக்தியில் இத்தகைய **பாவம்** சிறிது இருந்தது.

**சக்யம் :** தோழமைநிலை. அதாவது சகமார்க்கம். கடவுளைத் தன்னுடைய தோழனாகக் கொண்டு பக்தி செலுத்துவது. 'டேய்! அருகில் வா, இங்கே உட்கார்' என்று மிக சகஜமாகக் கடவுளுடன் பழகுவது. சுதாமருக்குக் கண்ணனிடத்தில் இருந்த பக்தியை, சக்யபக்தி என்று கூறலாம். கோகுலத்தில் ஆயர் சிறுவர்கள் தாங்கள் கடித்த எச்சில் பழங்களைக் கண்ணனுக்குக் கொடுத்தனர். அவன் தோள்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டனர். அச்செயல்கள் கண்ணன் நம் தோழன் என்ற உறவு முறையால் எழுந்தவையே.

**வாத்சல்யம் :** இந்த பக்திநிலை தாய் தன் குழந்தையிடம் மேற்கொள்ளும் பாசம் போன்றது. இப் பாச நிலை யசோதையிடம் இருந்தது. மனைவியிடம் இத்தகைய **பாவம்** ஒரு சிறிது காணலாம். குழந்தை வயிறு நிறைய உண்டால், தாய் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறாள். அதுபோலக் கணவனுக்கு மனைவி மனமார உணவு படைக்கிறாள். கண்ணன் உண்பான் என்று யசோதை கையில் வெண்ணெயை வைத்துக்

கொண்டு வீதிகளில் திரிந்தது இத்தகைய வாத்சல்யத்தினால் தான்.

**மதுர பாவம் :** இராதையிடம் காணப்பட்ட பாவம் இது. பெண்களிடம் இந்த பாவம் இயல்பாகவே உண்டு. இந்த பாவத்தில் சாந்தம், தாஸ்யம், சக்யம், வாத்சல்யம் முதலிய பிற எல்லா பாவங்களும் அடங்கிவிடுகின்றன. மனைவிக்குக் கணவனிடம் இருக்கும் அன்பு இத்தகையது எனலாம்."

ம : "சுவாமி! இந்த ஊனக் கண்களால் கடவுளைக் காண முடியுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "தோலினாலான இந்த ஊனக் கண்களைக் கொண்டு கடவுளைக் காண முடியாது. சாதனை புரிந்து கொண்டிருக்கும்பொழுது பிரேமை மயமான ஓர் உடல் உண்டாகிறது. அதன் கூடவே, பிரேமை மயமான கண்கள், பிரேமை மயமான காதுகள் ஏற்படுகின்றன. அப்பொழுது அன்பு மயமான இத்தகைய கண்களால் அவரைப் பார்க்கலாம்; இத்தகைய செவிகளால் அவருடைய பேச்சைக் கேட்கலாம். இதர அவயங்களும் இவ்வண்ணமே பிரேமை மயமாக மாறி விடுகின்றன. இதே மாதிரி ஆண், பெண் உறுப்புக்களும் பிரேமை மயமாகத் தோன்றுகின்றன."

இதைக் கேட்டதும் ம- உரக்கச்சிரித்தார். குருதேவர் முகம் சுளிக்காமல் மேலும் தொடர்ந்து பேசினார். "இந்தப் பிரேமைமயமான உடல் ஆத்மாவோடு கலந்து ஆனந்தமடையும்." ம- மீண்டும் மிக உன்னிப்பாகக் கேட்கத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஈசனிடம் ஆழ்ந்த அன்பு உண்டானாலன்றி இது கிட்டாது. ஆழ்ந்த அன்பு ஏற்பட்டாலோ எல்லாத் திசைகளும் இறைமயமாக இருப்பதைக் காண்கிறோம். ஈசன் ஒருவனையே எங்கும் காண்கிறோம். தீவிரமான காமாலை நோய் ஏற்பட்டிருக்கும்பொழுது, பார்க்கும் திசைகள் எல்லாம் மஞ்சளாகத் தெரிகின்றன அல்லவா? அதைப்போல.

"அப்பொழுது 'அவனே நான்' என்ற எண்ணம் உண்டாகிறது. குடிகாரனுடைய போதை அதிகமாகிவிட்டால் அவன் 'நானே காளி' என்கிறான். கோபியர்களுக்குப் பிரேமைப் பைத்தியம் பிடித்ததும் 'நானே கிருஷ்ணன்' என்று கூற ஆரம்பித்தனர். இரவு பகலாக அவனையே நினைத்துக்கொண்டிருந்தால்

பார்க்கும் திசையெங்கும் அவனைக் காணலாம். தீபத்தின் சுடரைச் சிறிது நேரம் உற்றுப்பார்த்துக்கொண்டிருந்தோமானல், பிறகு பார்க்கின்ற திசைகளில் அதே தீபச்சுடரைப் பார்க்கிறேமல்லவா? அதுபோல."

அப்போது ம-வின் மனத்தில் அந்த தீபச்சுடர் நிஜமான தீபம் அல்லவே என்ற எண்ணம் பளிச்சிட்டது. குருதேவர் பிறர் மனத்தில் உதிக்கும் எண்ணங்களையெல்லாம் அறிபவர் ஆயிற்றே! உடனே பதில் கூறினர். "உணர்வுமயமான (சின்மயமான) ஒளியைச் சிந்திப்பவன் உணர்வில்லாத இருளாகமாட்டான். 'ஈசனை நூறு முறை எண்ணினல், அதாவது மிதமிஞ்சி நினைத்தால் மூளைக்கோளாறு ஏற்படும்' என்று சிவநாத் ஒருமுறை என்னிடம்கூறினன். அதற்கு நான் 'என்ன? அறிவுமயமான சைதன்யத்தை நினைப்பவன் அறிவற்றவனக, அசைதன்யமாக இருக்கமுடியுமா?' என்று கேட்டேன்."

ம: "ஆம், ஐயா, இப்போது உணர்ந்துகொண்டேன். உண்மையற்ற உலகப் பொருளை நினைப்பது போன்றதல்ல இது. நித்தியசைதன்ய சொரூபத்தில் மனத்தைச் செலுத்துகின்ற மனிதன், எப்படி அசைதன்ய வஸ்துவாக இருக்க முடியும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: (மகிழ்ந்தவராய்) நீ இவ்வண்ணம் தெளிந்துகொண்டது அவருடைய கருணையே. அவருடைய அருளின்றி ஐயப்பாடுகள் அகலுவதில்லை. ஆத்ம தரிசனம் கிடைக்காவிட்டால் ஐயங்கள் நீங்குவதில்லை. அவனருள் கிடைத்துவிட்டாலோ, பிறகு எவ்வித அச்சமும் இல்லை. தந்தையின் கையைப் பிடித்துக்கொண்டு நடந்தால் ஒருவேளை குழந்தை கீழே விழுந்துவிடக்கூடும். குழந்தையினுடைய கையைத் தந்தை பிடித்துக்கொண்டால் எந்தபயமும் வேண்டியதில்லை. அவனே கருணை கூர்ந்து காட்சி அளிப்பானேயானல், அல்லல் என்பதில்லை. ஆனல், ஒன்று துடிதுடிக்கும் மனத்தோடு அவனைக் கூவி அழைத்தவாறு இருந்தால், அதாவது சாதனை புரிந்துகொண்டு இருந்தோமானல், அவனுடைய கருணை தானகவே கிடைக்கும். அன்னையைக் காணுத குழந்தை அங்கும், இங்கும் கதறி ஓடிக்கொண்டிருப்பதைப் பார்க்கும்பொழுது, தாய்க்குக் கருணை தானகவே ஏற்படுகிறது. ஒளிந்துகொண்டிருந்த தாய் வெளியே வந்து குழந்தையைத் தழுவிக்கொள்ளுகிருள். அதாவது குழந்தைக்குக் காட்சி தருகிருள்."

'அங்குமிங்கும் நம்மை ஓடச்செய்வதில் ஆண்டவனுக்கு என்ன பெருமை?' என்று ம- தனக்குள் நினைத்தார். அதை அறிந்தாற்போல, குருதேவர் உடனே விளக்க ஆரம்பித்தார்.

"அங்குமிங்கும் நாம் சற்று ஓட வேண்டும் என்பது அவனுடைய இச்சை.அப்பொழுதுதான் விளையாட்டு சுவையாக இருக்கும். விளையாட்டாகவே (லீலையாகவே) இந்த உலகை இறைவன் உண்டாக்கி இருக்கிறான். இதற்கு **மகாமாயை** என்று பெயர். எனவேதான், அவனுடைய சக்தியான, மகாமாயையான பராசக்தியிடம் சரணடையவேண்டும். மாயை என்னும் பாசக்கயிற்றினால் அவள் நம்மைக் கட்டியிருக்கிறாள். இந்த பந்தங்களை, பிணிப்புக்களை அறுத்தெறிந்தால்தான் ஈசனது காட்சி கிடைக்கும்.

"அன்னையின் கருணையைப் பெறவேண்டுமானால் ஆத்யா சக்தி வடிவமான அவளை மகிழ்விக்கவேண்டும். அவளுக்கு இதமாக நடந்துகொள்ளவேண்டும். அவளேதான் மகாமாயை. உலகத்தை மயக்கிப் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தொழில்களையும் புரிந்துவருகிறாள். அவள் நம்மை அறியாமையில் வைத்திருக்கிறாள். மகாமாயை என்று கூறப்படும் அவள் வழியைவிட்டு விலகி நின்றால்தான் நாம் உள்ளே செல்லமுடியும். வெளியில் விழுந்துகிடந்தால், வெறும் புறவிஷயங்களைத்தான் பார்க்கலாம். சச்சிதானந்த மயமான அந்த நித்திய புருஷனை அறிந்துகொள்ள முடிவதில்லை. மார்க்கண்டேய புராணத்தில் சண்டியைப்பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. பிரம்மா முதலான தேவர்கள் மது கைடபன் என்ற அரக்கனைக் கொல்ல வேண்டி மகாமாயையின் புகழ்பாடி அவளைத் துதித்தார்கள்.

"**மகாசக்தியே உலகின் மூல ஆதாரம்.** ஆத்யா சக்தியிடம் வித்யை, அவித்யை என்னும் இரு கூறுகள் உள்ளன. அவித்யை மயக்கத்தைத் தருகிறது. பெண், பொன்னாசைகளால் மதியை மயங்கச்செய்வது **அவித்யை.** பக்தி, தயை, ஞானம், பிரேமை இவற்றைத் தோற்றுவிப்பது **வித்யா** சக்தியாகும். அந்தச் சக்தியே ஈசனிடம் நம்மை அழைத்துச்செல்கிறது.

"அந்த அவித்யையை மகிழ்விக்கவேண்டும். அதுதான் சக்தி பூஜையின் நோக்கம். அவளை மகிழ்விக்க அமைந்தவையே அநேக விதமான பூஜைகள். தாசி பாவனை, வீர பாவனை, சந்தான பாவனை ஆகிய பூஜை முறைகள் உள்ளன.

**வீரபாவம்** : இன்பத்தின் வழியாக அவளை மகிழ்ச்சியடையச் செய்தல்.

சக்தி சாதனை :—மிகக் கடுமையான சாதனைகள் மூலம் அவளை மகிழ்வித்தல். இது வெறும் விளையாட்டுப் பேச்சல்ல, நான் அன்னையின் அடிமை என்ற எண்ணத்திலும், தோழி என்ற எண்ணத்திலும் இரண்டு வருடங்கள் சாதனை புரிந்தேன். எனக்குப் பிடித்தது **தேவியின் குழந்தை** என்ற எண்ணம்தான். மங்கையரின் மார்பைக் காணும்போது அதை அன்னை பராசக்தியின் மார்பு என்றே எண்ணுவேன்.

"பெண்கள் சக்தியின் வெவ்வேறு வடிவங்கள் ஆவர். இந்தியாவின் மேற்குப் பகுதிகளில் திருமணத்தின் போது மணமகன் கையில் ஒரு கத்தி இருக்கும். வங்காளத்தில் பாக்குவெட்டி இருக்கும். அதன் பொருள் ஆண்மகன் தன் மனைவியான சக்தியின் துணைகொண்டு மகா மாயையை வெட்டி வீழ்த்துவான் என்பதாகும். இது தான் வீர பாவம். நான் வீர பாவத்தில் பூஜை செய்யவில்லை. எனக்குப் பிடித்தது சந்தான பாவமே.

"பெண், சக்தியின் வடிவம். கலியாணத்தில் நீ பார்த்த தில்லையா? மாப்பிள்ளை அசடுவழியப் பின்புறமாக உட்கார்ந் திருக்கிறான். ஆனால், பெண்ணோ பயமற்று முன்னே உட்கார்ந் திருக்கிறாள்.

"ஈசனுடைய காட்சி கிடைத்த பிறகு அவனுடைய வெளி உலகக் கவர்ச்சியை, உலகச் செல்வங்கள் முதலியவற்றை மறந்துவிடுகிறோம். அவனைக் கண்டுகொண்டபின், அவன் படைத்துள்ள செல்வப்பொருள்களில் உள்ளம் நாட்டம் கொள்வதில்லை. இறையின்பத்தில் மூழ்கிய பக்தனின் கண்களுக்கு வேறு எப்பொருளும் தென்படாது நரேந்திரனைப் பார்த்தபோதெல்லாம் 'உன் பெயர் என்ன? உன் வீடு எங்கே?' என்று கேட்கும் வினாக்களுக்கு அவசியமே எனக்கு ஏற்பட்டதில்லை. கேட்பதற்கு நேரம் எங்கே? அனுமாரை ஒருவர், 'இன்று என்ன கிழமை?' என்று கேட்ட போது, அவர், 'தம்பி! எனக்குக் கிழமை, திதி, நட்சத்திரம் இவை ஒன்றும்தெரியாது. நான் எப்பொழுதும் இராமரையே நினைத்துக்கொண்டிருக்கிறேன்' என்று பதில் கூறினார்."

**அக்டோபர் 16, 1882**

இன்று திங்கட்கிழமை. வரும் வியாழன் சப்தமியன்று துர்கா பூஜை ஆரம்பமாகும். இன்றைய தினம் நரேந்திரர் தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்திருந்ததால் குருதேவரின் மனம் பேரானந்தத்தில் திளைத்திருந்தது. மேலும் சில நெருங்கிய பக்தர்களும் உடன் இருந்தனர்.

குருதேவருடன் ராக்கால், ராம்லால், ஹாஸ்ரா ஆகியோரும் இருந்தனர். நரேந்திரருடன் பிரம்மசமாஜத்தைச் சேர்ந்த இரண்டோர் இளைஞர்களும் வந்திருந்தனர். ம- வும் வந்திருந்தார்.

நரேந்திரர் கங்கையில் நீராடிவிட்டு ஸ்ரீராமகிருஷ்ணருடன் மதிய உணவு உண்டார். உணவு உண்ட பிறகு பக்தர்கள் ஓய்வு பெறுவதற்காகக் குருதேவர் தம் அறையில் ஒரு படுக்கையைத் தாற்காலிகமாக விரிக்குமாறு கூறினார். வெள்ளை உறையிட்ட ஒரு சிறு மெத்தையைத் தரைமீது விரித்தனர். பாயின்மீது தலையணைகளை வைத்தனர். படுக்கை போட்டவுடன் நரேந்திரர் முதலிய பக்தர்கள் படுத்துக்கொண்டனர். சின்னஞ்சிறு குழந்தையைப்போல மகிழ்ச்சி பொங்க, நரேந்திரருக்குப் பக்கத்தில் சென்று உட்கார்ந்துகொண்டார் குருதேவர். பக்தர்களிடம் மிக்க ஆர்வத்தோடு பேச ஆரம்பித்தார். முகத்தில் புன்னகை முத்தொளி வீச, விழிகள் நரேந்திரரை விழுங்கியவண்ணமிருக்க அடியார்கட்கு ஆன்மிகக் கருத்துக்களை இடையிடையே தமது வாழ்க்கையில் நடந்த சம்பவங்களோடு இணைத்து ஒரு கதையைப்போலச் சுவையாகக் கூறத்துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (நரேந்திரர் முதலிய பக்தர்களிடம்) "எனக்குச் சமாதியனுபவம் கிடைத்தபிறகு, ஈசுவரனைப்பற்றிய பேச்சுக்களை மட்டுமே கேட்கவேண்டும் என்ற விருப்பம் எழுந்தது. அதற்காகவே என் மனம் ஏங்கியது. எங்கே பாகவதம் கேட்கலாம், எங்கே அத்யாத்ம இராமாயணம் கேட்கலாம், எங்கே மகாபாரதம் கேட்கலாம் என்று நான் பல இடங்கள் தேடியலைந்தேன். கிருஷ்ணகிஷோர் அத்யாத்ம இராமாயணம் வாசிப்பதையறிந்து பலமுறை அவரிடம் சென்றதுண்டு.

"கிருஷ்ணகிஷோருக்குத்தான் இறைவனிடம் எவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கை! ஒருநாள் பிருந்தாவனத்தில் இருந்தபோது அவருக்குத் தாகம் ஏற்பட்டதாம். நீர் பருக ஒரு கிணற்றடிக்குச்

சென்றார். கிணற்றருகே ஒருவன் நின்றுகொண்டிருந்தான். அவனிடம் நீர் கேட்டபோது அந்த மனிதன், 'ஐயா! நான் தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்தவன். நீங்களோ பிராமணர். நான் எப்படி உங்களுக்கு நீர் மொண்டு தரமுடியும்?' என்று கேட்டான். கிருஷ்ணகிஷோர் அவனைப் பார்த்து, ''நீ 'சிவா' என்று சொல். 'சிவ சிவ' என்று பகவானின் நாமத்தைச் சொல்லுவதனால், நீ பரிசுத்தன் ஆகிவிடுகிறாய்'' என்று சொன்னார். அவன் 'சிவ சிவ'என்று ஓதி அவருக்குத் தண்ணீர் எடுத்துக்கொடுத்தான். வைதிக ஆசாரம் மிக்க கிருஷ்ணகிஷோரும் அந்தத் தண்ணீரைக் குடித்தார்! அவருக்குத்தான் பகவான் திருநாமத்தின்மீது எவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கை!

''ஒருசமயம் கங்கைக்கரையில் ஏடேதா என்னும் படித்துறைக்கு அருகே சந்நியாசி ஒருவர் வசித்துவந்தார். அவரை, ஒருநாள் தரிசித்து விட்டு வரலாம் என்று நாங்கள் நினைத்திருந்தோம். நான் ஹலதாரியிடம், 'கிருஷ்ணகிஷோரும் நானும் சாதுவைப் பார்க்கப்போகிறோம். நீயும் வருகிறாயா?' என்று கேட்டேன். அதற்கு ஹலதாரி, 'ஒரு களிமண் கூட்டை (அந்த சாதுவின் மனித உடலை)ப் பார்க்கப் போவதனால் என்னபயன்?' என்று பதில் அளித்தார். கீதை, வேதாந்தம் ஆகியவெல்லாம் படித்தவர் அல்லவா ஹலதாரி! அதனால்தான் அவர் சாதுவை ஒரு மண்கூடு என்று குறிப்பிட்டார்! அவர் சொன்னதை நான் கிருஷ்ணகிஷோரிடம் .தெரிவித்தேன். அவருக்குப் பெருங்கோபம் வந்துவிட்டது. 'என்ன! ஹலதாரி இப்படியா சொன்னார்? அந்தச் சாது பகவானையே நினைத்துக்கொண்டிருப்பவர்; ஸ்ரீராமபிரானையே எந்நேரமும் தியானம் செய்து வருபவர். எல்லாவற்றையும் துறந்தவர். அவ்வாறிருக்க அவருடைய உடல் வெறும் ஒரு மண்கூடா? இத்தகைய ஒரு பக்தரின் உடம்பு சின்மய வடிவமானது என்பது ஹலதாரிக்கு எப்படித் தெரியாமல் போயிற்று?' என்று கேட்டார். கிருஷ்ணகிஷோருக்கு ஹலதாரியின் மீது வந்த கோபம் கொஞ்ச நஞ்சமல்ல. அவர் காளி கோயில் பூந்தோட்டத்திற்குப் பூப்பறிக்க அடிக்கடி வருவதுண்டு. அதற்குப் பிறகு ஹலதாரியுடன் பேசப் பிடிக்காமல் ஹலதாரியைச் சந்திக்க நேர்ந்த போதெல்லாம் கிருஷ்ணகிஷோர் தம்முடைய முகத்தையே வேறு பக்கம் திருப்பிக் கொள்வார்.

''ஒருமுறை .கிருஷ்ணகிஷோர், 'நீங்கள் ஏன் பூணூலை எறிந்து விட்டீர்கள்?' என்று என்னைக் கேட்டார். எனக்குக் கடவுள் காட்சி கிட்டிய அந்நாளில், ஒரு பெருஞ் சுழற்காற்றைப்

போன்ற ஏதோ ஒன்று எங்கெல்லாமோ என்னைக் கொண்டு சென்றது. என் பழைய நிலைக்குரிய அடையாளம் எதுவும் மிஞ்சாமல் எல்லாமே மறைந்தன. உடல் உணர்வை முற்றிலும் இழந்தேன். உடுத்தியிருந்த துணியே என் உடலில் தங்க முடியாதபோது பூணூல் எம்மாத்திரம்? கிருஷ்ணகிஷோரிடம் 'என்னைப்போல உனக்கும் ஒருமுறை இறைவெறி வருமானால் அப்போது இந்நிலையை நீயே நன்கு அறிந்துகொள்வாய்' என்று பதில் கூறினேன்.

"பின்னர் மெய்யாகவே கிருஷ்ணகிஷோருக்கு அந்நிலை வாய்த்தது. அவரைக் கடவுட்பித்துப் பிடித்துக்கொண்டது. அப்போது அவர் ஓர் அறையில் இடையறுது எந்நேரமும் தன்னந்தனியாக அமர்ந்து 'ஓம், ஓம்' என்று ஜபித்துக்கொண்டு எவருடனும் பேசாமல் மௌனத்தைக் கடைப் பிடித்தார். அவருடைய உறவினர் அனைவரும் அவருக்கு உண்மையாகவே மூளை கெட்டுவிட்டது என்றெண்ணி, ஒரு மருத்துவரை அழைத்துவந்தனர். கிருஷ்ணகிஷோர் அவ் வைத்தியரிடம் 'ஐயா, என் நோயைக் குணப்படுத்துங்கள். ஆனால், என்னுள் கலந்த 'ஓம்' ஜபத்தைமட்டும் குணப்படுத்திவிடாதீர்கள்' என்று சொன்னார். (அனைவரும் சிரித்தனர்)

"ஒருநாள் நான் கிருஷ்ணகிஷோருடைய வீட்டுக்குச் சென்றேன். அப்போது அவர் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார். 'உனக்கு என்ன நேர்ந்துவிட்டது?' என்று அவரைக் கேட்டேன். 'வரி வசூலிப்பவன் இங்கு வந்திருந்தான். நான் வரி செலுத்தாவிட்டால் என் வீட்டிலுள்ள சாமான்களையெல்லாம் ஏலம் போட்டுவிடுவதாகப் பயமுறுத்தினன்' என்று தெரிவித்தார். 'சரி, அதைப்பற்றிக் கவலைப்படுவதனால் என்ன பயன்? அதிகப்பட்சம் அவன் பாத்திரங்களை மட்டும்தானே எடுத்துக்கொண்டு செல்லமுடியும்? அவைகளை அவன் நன்ருக மூட்டை கட்டி எடுத்துக்கொண்டு போகட்டும்! உன்னை எடுத்துச்செல்லமுடியாதே! உன் இயல்புதான் 'க' [1](ஆகாயம்) ஆயிற்றே!' என்று நான் கூறினேன். (நரேந்திரரும் பிறரும் சிரித்தனர்.)

"கிருஷ்ணகிஷோர் தம்மைப் பற்றி, நான் 'க' போன்றவன் என்று அடிக்கடி என்னிடம் சொல்லுவது வழக்கம். அவருக்கு அக் கருத்து அத்யாத்ம இராமாயணத்திலிருந்து

1 ஆகாயம் போன்று எங்கும் பரந்தது, எதற்றும் கட்டுப்படாதது.

எழுந்தது. அவ்வப்போது நான் அவரை 'நீ ஆகாயம்' என்று கேலி செய்வதுண்டு. எனவே, அன்று அவரிடம் "நீ 'க' ஆயிற்றே! வரி உன்னை எப்படிப் பாதிக்கமுடியும்?" என்று கேட்டேன்.

"கடவுட்பைத்தியமாக நான் இருந்த காலங்களில் என் மனத்தில் என்ன என்ன தோன்றுமோ அவற்றையெல்லாம் அப்படியே மற்றவர்களிடம் சொல்லி விடுவது என் வழக்கமாக இருந்தது. அக் காலங்களில் நான் எவரையும் மதித்துப் பேசியது கிடையாது. செல்வந்தர்களிடமும் உண்மையைச் சொல்லச் சிறிதும் நான் அஞ்சியதில்லை.

"யதுமல்லிக் என்பவரின் தோட்டத்திற்கு யதீந்திரர் வந்திருந்தார். அச்சமயம் அங்கிருந்த நான் அவரை 'நாம் செய்ய வேண்டிய கடமை பகவானை நினைப்பது அல்லவா?' என்று கேட்டேன். அதற்கு யதீந்திரர், 'நாங்கள் சம்சார பந்தத்தில் உழலுபவர்கள் ஆயிற்றே! எவ்வாறு எங்களுக்கு முக்தி சித்திக்கும்? எவ்வகையிலும் மேலான தர்மபுத்திரருக்கே நரகத்தைப்பார்க்கவேண்டிய நிலைமை ஏற்பட்டதே!' என்று பதில் கூறினார். இதைக் கேட்டதும் 'சீசீ, நீ தர்மபுத்திரர் நரகத்தைப் பார்த்தார் என்பதை மட்டுமே எண்ணிக்கொண்டிருக்கிறாயே, அவரிடம் குடிகொண்டிருந்த சத்தியம், பொறுமை, தைரியம், விவேகம், வைராக்கியம், கடவுள்பக்தி ஆகியவற்றைக் கொஞ்சமும் நீ நினைத்துப் பார்க்கவில்லையே!' என்று யதீந்திரரிடம் நான் கோபமாகக் கூறினேன். இன்னும்கூடக் கடுமையாக அவரிடம் ஏதேதோ சொல்லவேண்டுமென்று எண்ணினேன். ஆனால், அதற்குள் ஹிருதயன் என்வாயைப் பொத்திவிட்டான். சற்று நேரம் கழித்து யதீந்திரர், தமக்கு ஏதோ சிறிது வேலை இருப்பதாகச் சொல்லி அவ்விடத்தைவிட்டு அகன்றார்.

"பல நாட்களுக்குப் பின் நான் கேப்டனுடன் ராஜா சௌரீந்திரதாகூர் என்பவரின் இல்லத்திற்குச் சென்றேன். சௌரீந்திரரைப் பார்த்த அளவிலேயே அவரிடம், 'உங்களை ராஜா கீஜா என்றெல்லாம் என்னால் அழைக்க முடியாது. ஏனென்றால், அது பொய் சொல்லுவதாகும்' என்றேன். என்னுடன் அவர் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார். கனவான்கள் பலர் அங்கே வருவதும் போவதுமாக இருந்ததைக் கவனித்தேன். சௌரீந்திரர் ரஜோகுணம் படைத்தவர். பல பணிகளில் ஈடுபட்டிருந்தார். அவரிடம் விடைபெற விரும்பி நான் அவருக்குத் தகவல் சொல்லி அனுப்பினேன். அவரோ, 'எனக்குத்

'தொண்டை வலியாக உள்ளது' என்று பதில் சொல்லி அனுப்பி விட்டார்.

"என்னைக் கடவுட்பித்துப் பிடித்திருந்த அந்தக்காலத்தில் ஒருநாள் பாரநகோரில் கங்கைப் படித்துறையில் ஜயமுகர்ஜியைக் கண்டேன். அவர் பகவானின் நாமத்தை ஜபித்துக் கொண்டிருந்தார். ஆனால், அவர் மனமோ எங்கேயோ அலைந்து கொண்டிருந்தது. அவரருகில் சென்று நான் அவருடைய கன்னத்தில் இரு முறை அறைந்தேன்.

"ஒரு சமயம் காளி கோவிலுக்கு வந்திருந்த ராணி ராஸமணி காளிதேவியின் திருச்சந்நிதிக்கும் வந்தார். அன்று பூஜை வேளையின்போது இரண்டொரு பாட்டுக்கள் பாடும்படி என்னைக் கேட்டுக்கொண்டார். நான் பாடினேன். ஆனால், ராஸமணி அம்மையார் வேறு சிந்தனையில் ஈடுபட்டுப் பூவைக் கசக்கிக்கொண்டிருப்பதைப் பார்த்தேன். உடனே அவருடைய கன்னத்தில் இரண்டு அறை கொடுத்தேன். ராஸமணி தமது நிலைக்கு மனம் வருந்தியவராய் இரண்டு கைகளையும் கூப்பிக் கொண்டு அங்கேயே அமர்ந்திருந்தார்.

"உள்ளதை உள்ளபடியே கூறிப் பிறர் மனத்தைப் புண்படச் செய்யும் இத்தகைய என் நிலையைக் கண்டு பயந்த நான், 'அண்ணா! இக்கெட்ட பழக்கம் எனக்கு எப்படி வந்தது? இதிலிருந்து நான் எப்படி விடுபடுவேன்?' என்று ஹலதாரியிடம் முறையிட்டேன். சிறிது காலம் ஜகன்மாதாவிடம் திரும்பத் திரும்ப மனமாரப் பிரார்த்தனை செய்து கதறிய பிறகு, இப் பழக்கம் என்னிடமிருந்து நீங்கியது.

"இத்தெய்விகப் பரவசநிலையில் நான் ஒன்றியிருந்தபோது, இறைவனைப் பற்றிய பேச்சைத் தவிர, வேறு எதுவுமே எனக்குச் சுவைக்கவில்லை. இலௌகிக விஷயங்கள் காதில் விழுந்தால் நான் உட்கார்ந்துகொண்டு அழுவேன். மதுர்பாபு என்னைத் தீர்த்த யாத்திரைக்கு அழைத்துச்சென்றார். அப்போது காசியில் ராஜாபாபுவின் வீட்டில் சில நாட்கள் தங்கியிருந்தோம். ஒரு நாள் மதுரபாபுவோடு நான் வரவேற்பறையில் அமர்ந்திருந்தேன். அங்கு ராஜாபாபு முதலியவர்களும் இருந்தனர். அவர்கள் இலௌகிக விஷயங்கள் பலவற்றைப் பற்றிப் பேசியதைக் கேட்டேன். 'வியாபாரத்தில் பணநஷ்டம் எவ்வளவு ஏற்பட்டது?' என்பது போன்ற இலௌகிக விஷயங்களைக் குறித்து அவர்கள் பேசினர். அதைக் கேட்டதும் நான் உடனே

அழ ஆரம்பித்தேன். 'அம்மா! ஏன் என்னை இங்கே அழைத்து வந்திருக்கிறாய்? தட்சிணேசுவரக் கோயிலில் நான் மிகவும் மகிழ்ச்சியுடன் இருந்தேனே! யாத்திரையாக வந்த இடத்திலும் காமம்—காஞ்சனம் பற்றிய பேச்சா வேண்டும்? தட்சிணேசுவரத்தில் இப்படிப்பட்ட இலௌகிக விஷயங்களைப் பற்றிய பேச்சுக்களைக் கேட்கும்படியான வாய்ப்பே இருக்காதே!' என்று அழுது முறையிட்டேன்."

இவ்வாறு கூறிய குருதேவர் பிறகு அடியார்களையும், தனியாக நரேந்திரரையும் பார்த்துச் சிறிது ஓய்வெடுத்துக் கொள்ளப் பணித்தார். அவரும் சிறிய கட்டிலின் மீது படுத்துக் கொண்டார்.

மாலைப் பொழுது. நரேந்திரர் பாடிக்கொண்டிருந்தார். ராக்கால், லாட்டு, ம-, ஹாஸ்ரா, நரேந்திரரின் பிரம்மசமாஜ நண்பர் பிரியர் ஆகியோர் அங்குக் கூடி இருந்தனர். நரேந்திரரின் இனிய பாட்டிற்கு ஏற்ற வண்ணம் மிருதங்க ஒலியும் எழுந்தது. நரேந்திரர் பாடிய பாட்டு :—

நினைந்திடு மனமே, நினைந்திடு ஹரியை!
மாசிலாப் பொருளை, சைதன்ய மயத்தை.
நினைந்திடு மனமே, நினைந்திடு ஹரியை!
அவரிடத் தொளிரும் சோதிக் கீடிலை!
மனத்தைக் கவரும்அம் மாய வடிவம்!
அடியா ரிடத்தவர் அன்பையென் னென்பேன்!
ஆயிரம் மதிகளும் தண்மைக்கு நாணுறும்,
மலரும்அவ் அன்பினில் புத்தழகு அவிரும்,
அவன்வடி வின்புகழ் மின்னென வயங்கும்,
இன்பத் தாலுடல் புளகம் கொள்ளும்!

மிருதங்கம், கைத்தாளம் (ஜால்ரா) ஆகியவற்றின் இசை ஒலிகளோடு இணைந்து நரேந்திரர் தொடர்ந்து பாடிக் கொண்டிருந்தார். பின்னர் நரேந்திரரோடு பக்தர்களும் சேர்ந்துகொண்டு குருதேவரைச் சுற்றிச் சுற்றிவந்து,

"பிரேமானந்த ரசத்தில் மூழ்கு......" என்று பாடினார்கள்.

அதை அடுத்து,

சத்தியம் சிவம் சுந்தரம் எனும்
தத்துவப் பெருஞ் சோதியாய்
அத்தன் என்மன ஆலயந்தனில்
அமரும் அந்தநாள் அணுகுமோ?

என்ற பாட்டைப் பாடினர்கள்.

கடைசியாக நரேந்திரரே மிருதங்கத்தை வாசித்தபடி ஆனந்தமே வடிவெடுத்தது போல விளங்கி, "ஆனந்த வதனத்தால் ஹரியின் பெயரை ஓது" என்று குருதேவருடன் சேர்ந்து பாடலானர். பாட்டு முடிந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணர் நரேந்திரரை நீண்டநேரம் அணைத்தவண்ணம் "இன்று எங்களை எப்படியெல்லாம் மகிழ்வித்திருக்கிருய்! எவ்வளவு மனக்களிப்பினை எங்கட்குத் தந்திருக்கிருய்!" என்று பலவாறு புகழ்ந்தார்.

அன்றிரவு குருதேவரின் உள்ளத்தில் அன்பு பொங்கி வழிந்தது. அவர்மனம் அன்புப் பெருக்கினல் உடைப்பெடுத்துக் கொண்டது. ஆனந்தவெள்ளம் அவரிடம் கரைபுரண்டோடியது என்றே சொல்லவேண்டும். அப்போது மணி சுமார் எட்டு இருக்கும். குருதேவர் தெய்விகப் பரவசத்தில் மூழ்கியவராய், தம் அறைக்கு வடபகுதியில் உள்ள நீண்ட தாழ்வாரத்தில் தன்னந்தனியாக ஒரு கோடியிலிருந்து மற்ெருரு கோடிக்கு நடந்தவண்ணம் இருந்தார். இடையிடையே அம்பிகையோடு அவர் ஏதோ பேசிக்கொண்டிருந்தார். திடீரென்று உள்ளக் கிளர்ச்சியுற்று, "உன்னல் என்னை என்ன செய்துவிட முடியும்?" என்று உரக்கக்கூவினர். 'யாரை ஜகன்மாதா காப்பாற்றுகிருளோ அவர்களை மாயை என்ன செய்துவிட முடியும்?' என்று எண்ணினர் போலும்.

நரேந்திரர், ம-, பிரியர் ஆகிய மூவரும் அன்றைய இரவை அங்கேயே தங்கிக்கழிப்பதென்று முடிவு செய்தனர். நரேந்திரர் இரவு அங்கேயே தங்கப் போகிருர் என்பதை அறிந்ததும் குருதேவர் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார், தூய அன்னையார் இரவு உணவைத் தயாரித்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் மனைவியான ஸ்ரீசாரதாதேவியைப் பக்தர்கள் 'தூய அன்னையார்' என்று அழைப்பது வழக்கமாக இருந்தது. தூய அன்னையார் 'நகபத்' எனப்படும் பாடகர்

மண்டபத்தில் அப்போது வசித்துவந்தார். அடியார்களின் இரவு உணவிற்காக அவர் சப்பாத்தி, பருப்பு ஆகியவற்றைத் தயாரித்து ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்கு அனுப்பியிருந்தார். தென்கிழக்குத் தாழ்வாரத்தில் இலைகள் போடப்பட்டன.

பக்தர்கள் அவ்வப்போது தட்சிணேசுவரம் வந்து குருதேவருடன் தங்குவது வழக்கம். ஸ்ரீராமகிருஷ்ணரின் அன்பான இல்லறச் சீடராகிய சுரேந்திரர் குருதேவரது செலவில் பெரும்பகுதியைத் தாம் ஏற்றுக்கொண்டு மாதந் தோறும் பணஉதவி செய்துவந்தார்.

அறைக்குக் கிழக்குப் பகுதியில் உள்ள கதவருகே நரேந்திரரும் மற்றும் சிலரும் உரையாடிக்கொண்டிருந்தனர்.

நரேந்திரர்: "இந்தக் காலத்து மாணவர்கள் எப்படி இருக்கிறார்கள்?"

ம: "அவ்வளவு மோசம் என்று சொல்லுவதற்கில்லை. ஆனால், மதபோதனை எதுவும் அவர்களுக்குத் தரப்படுவதில்லை."

நரேந்திரர்: "என் அனுபவத்தில் அவர்கள் கீழ்நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறார்கள் என்றே நினைக்கிறேன். புகை குடித்தல், வீண்வம்பு பேசுதல், ஆடம்பரமாக உடைஅணிதல், பள்ளிக்குப் போகாமல் மட்டம் போடுதல் இன்னும் சொல்லப் போனால் போகத்தகாத இடங்களுக்குக்கூடப் போகிறார்கள் என்பேன். இதுதான் என்றில்லாமல் எல்லாக் காரியங்களிலும் இறங்கியிருக்கிறார்கள்."

ம: "நாங்கள் படித்த அந்தக் காலத்தில் இப்படிப் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை."

நரேந்திரர்: "நீங்கள் அவ்வளவாக மாணவர்களோடு நெருங்கிப் பழகவில்லை என்றே நினைக்கிறேன். மாணவர்கள் ஒழுக்கமற்றவர்களுடன் பேசிக்கொண்டிருப்பதைக்கூட நான் பார்த்திருக்கிறேன். நெருங்கிப் பழகியவர்கள் போன்று பையன்கள் அவர்களைப் பெயரிட்டே அழைக்கிறார்கள்! இவர்களுக்கு அவர்களுடன் அப்படிப்பட்ட நெருங்கிய தொடர்பு எப்போது ஏற்பட்டதோ? அது யாருக்குத் தெரியும்?"

ம: "ஆச்சரியமாக இருக்கிறதே!"

நரேந்திரர்: "பலருடைய ஒழுக்கம் கெட்டுவிட்டது என்பதும் எனக்குத் தெரியும். பள்ளி நிர்வாகிகளும் பிள்ளைகளின் பெற்றோர்களும் இந்த விஷயங்களில் எல்லாம் சற்றுக் கவனம் செலுத்தினால் நல்லது."

இவ்விதம் ம-வும் நரேந்திரரும் பேசிக்கொண்டிருந்தபோது குருதேவர் தமது அறையிலிருந்து அவர்கள் இருந்த இடத்திற்கு வந்தார். புன்முறுவலுடன் அவர்களைப் பார்த்து, "என்னப்பா, உங்களுக்குள்ளே என்ன பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

நரேந்திரர் (ம-வைச் சுட்டிக் காட்டி): "இவருடன் பள்ளி மாணவர்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். இந்தக் காலத்தில் மாணவர்களின் ஒழுக்கம் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இல்லை."

அவர்கள் என்ன பேசிக்கொண்டிருந்தார்கள் என்பதைக் கேட்டதும் குருதேவர், ம-வை நோக்கிக் கடுமையான குரலில் "இப்படிப்பட்ட பேச்சில் ஈடுபடுவது நல்லதல்லவே. கடவுள் சம்பந்தமாகப் பேசுவதைத் தவிர வேறு எந்தவிதப் பேச்சி லும் ஈடுபடுவது நல்லதல்ல. நீ இவர்களைவிட வயதில் பெரிய வன்; அத்துடன் புத்திசாலியாகவும் இருக்கிறாய். அப்படியிருக்க இத்தகைய பேச்சுக்கள் எழுவதற்கு நீ இடமளித்தது சரி யல்ல" என்றார்.

நரேந்திரருக்கு அப்போது பத்தொன்பது வயது. ம-வுக்கு இருபத்தெட்டு வயது நடந்துகொண்டிருந்தது. குருதேவர் இவ்விதம் கண்டிப்பார் என்று ம- எதிர்பார்க்கவில்லை. அவருக்குத் தர்மசங்கடமாக இருந்தது. நரேந்திரர் முதலியோரும் வாய்மூடி மௌனமாக இருந்தனர்.

பிறகு நரேந்திரர் உட்பட பக்தர்கள் அனைவரும் மகிழ்ச்சி யுடன் உணவுண்ண ஆரம்பித்தனர். அவர்கள் உண்பதை ஸ்ரீராமகிருஷ்ணர் பேரானந்தம் பொங்கப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர்களின் அருகில் நின்றுகொண்டு குருதேவர் சிரித்துச் சிரித்துப் பேசி அவர்களை வயிறுநிறைய உண்ணச்செய்தார்.

சாப்பாடு முடிந்ததும் பக்தர்கள் குருதேவரது அறையில் தரைமீது விரிக்கப்பட்டிருந்த பாய்மீது அமர்ந்தனர். அவர்கள்

குருதேவரோடு உரையாடத் தொடங்கினர். உண்மையில் அதுவே அவர்களுக்கு அரிய பேரின்ப விருந்தாக அமைந்தது. பேச்சுக்கிடையில் குருதேவர் நரேந்திரரை நோக்கி, 'ஞான வான்றிற் பிரேமையெனும் நளிர் வெண்முழுமதி' என்று தொடங்கும் பாட்டை ஒரு தடவை பாட மாட்டாயா? என்று கேட்டார். குருதேவரின் விருப்பத்திற்கிசைந்து நரேந்திரர் அப்பாடலைப் பாட ஆரம்பித்தார். அவருடைய பாட்டுக்கிசைந்தபடி அங்கிருந்த பக்தர்கள் வெண்கலக் கைத்தாள மிட்டனர்; மிருதங்கத்தை வாசித்தனர்.

ஞான வானிற் பிரேமையெனும் நளிர்வெண் முழுமதி தோன்றிடுமால்!
ஆரு அன்பிற் பொங்கியெழும் அலைகள் எங்கும் பரந்திடுமால்!
மோன இன்ப வாரிதியில் மூழ்கித் திளைக்கும் முதற்பொருளே!
யானவ் வகையை என்னென்பேன்! என்றும் வெல்கநின் இணையடியே!
இந்துவைச் சூழும் தாரகைபோல் எங்கும் விளங்குவர் அடியார்கள்!
எந்தை இறைவன் அருட்கடலான் இன்புற லீலை புரிந்திடுவான்!
காணுய் இன்று சுவர்க்கத்தின் கதவு விரிவாத் திறந்துளதை!
பூணும் வேனில் இளங்காற்று புதிய இன்ப அலையெழுப்பி
மெல்லப் பிரேமை நறுமணத்தை மேதினியார்க்கு வழங்கிடுமால்!
ஏமஞ் சான்றே மாண்பிஞெடும் இவர்வாள் அன்னை அதன்மீதே!
ஆங்கே பெருகும் இன்பமது அருந்திச் சுரும்பு வெறிகொள்ளும்!
ஓங்கும் அன்னை முகத்தொளிகாண்! உலக முழுவதும் கவர்ந்திடுமால்!
அவள்தான் சுற்றி அன்பர்கணம் ஆடுவர் தாண்டவம் இன்பத்தால்!
அவளழ குக்கிணை ஏது? அவள்தான் அருளால் தரிசனம் அளித்திடுங்கால்!
அளவறுந் திருத்தி நிறைந்திடுமால்; அன்பீர், பிரேம்தாஸ் கெஞ்சுகின்றான்;
உளநாள் நீவிர் அனைவருமே உரைப்பீர் அம்மை திருப்புகழை.

ஸ்ரீராமகிருஷ்ணர் பாடிக் கொண்டே ஆடினார். பக்தர்களும் அவரைச் சூழ்ந்து நின்று ஆடினார்கள்.

பாட்டு முடிந்ததும் குருதேவர் வடகிழக்குத் தாழ்வாரத்தை நோக்கி நடந்துகொண்டிருந்தார். ஹாஸ்ரா வடக்குப் பக்கமாக உட்கார்ந்திருக்க அவருடன் ம- பேசிக் கொண்டிருந்தார். அவர்கள் இருந்த இடத்திற்கு வந்த குருதேவர் அவர்களுடன் அமர்ந்துகொண்டார்.

குருதேவர் ஒரு பக்தரிடம்*, "நீ கனவு காண்பதுண்டா?" என்று கேட்டார்.

பக்தர் : "ஆம். அன்றைய தினம் நான் ஓர் அதிசயக் கனவு கண்டேன். இந்த உலகம் முழுவதும் ஒரே தண்ணீர் மயமாக இருந்தது! நாலா புறங்களிலும் எல்லையே காண இயலாத வகையில் தண்ணீர் சூழ்ந்திருந்தது! சில படகுகள் அதில் மிதந்துகொண்டிருந்தன. சிறிது நேரத்தில் பெரிய அலைகள் எழுந்து அந்தப் படகுகளை மூழ்கடித்துவிட்டன. சிலருடன் நான் ஒரு கப்பலில் ஏறிக்கொண்டேன். அதே சமயத்தில், எல்லையே காண இயலாத அந்தக் கடலின்மீது ஒரு பிராமணர் நடந்து கொண்டிருந்ததைக் கண்டேன். அவரிடம் நான், 'உங்களால் எப்படி நடந்து போக முடிகிறது?' என்று கேட்டேன். அதற்கு அந்தப் பிராமணர் புன்சிரிப்புடன், 'இதில் ஒரு கஷ்டமும் இல்லையே! தண்ணீருக்கு அடியில் கீழே ஒரு பாலம் இருக்கிறது' என்று கூறினார். நான் அவரை, 'நீங்கள் எங்கே போகிறீர்கள்?' என்று மீண்டும் கேட்டேன். அவர் 'ஜகன்மாதாவின் நகரமாகிய பவானிபுரத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறேன்' என்று பதில் சொன்னார். நான், 'கொஞ்சம் இருங்கள்; நானும் உங்களோடு வருகிறேன்' என்று கூவினேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஹா! இதைக் கேட்கவே எனக்கு மயிர்க்கூச்செறிகிறது."

பக்தர் : "ஆனால், அந்த பிராமணர், 'நான் இப்போதே விரைவாகச் செல்ல வேண்டும். நீ படகிலிருந்து நீரில் இறங்குவதற்குச் சிறிது நேரம் பிடிக்கும். இப்போதைக்கு இருக்கட்டும். நான் செல்லும் இந்த வழியை நினைவில் வைத்துக் கொள். பிறகு நீ என்னைத் தொடர்ந்து வந்து விடலாம்' என்று கூறிவிட்டார்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஹா! எனக்கு மயிர்சிலிர்க்கிறது. நீ சீக்கிரமாகவே மந்திர தீட்சை பெற்றுக்கொள்."

இரவு சுமார் பதினொரு மணி ஆன பின்னரே நரேந்திரரும் மற்றவர்களும் குருதேவரின் அறையில் தரைமீது படுக்கையை விரித்துப்படுத்தனர்.

---

* ம- தமது பெயரைக் குறிப்பிடாமல் ஒரு பக்தர் என்று இங்குக் குறிப்பிட்டிருக்கிறார்.

பொழுது விடிந்ததும் சில பக்தர்கள் விழித்தெழுந்தனர். அவர்கள் ஒரு காட்சியைக் கண்டனர். அறையில் ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு குழந்தையைப் போல, ஆடையின்றி, இங்கும் அங்குமாக பகவானின் பல்வேறு திருநாமங்களை ஓதியபடி உலவிக்கொண்டிருந்தார். அவர் குரல் அமுதம்போல மிக இனிமையாக ஒலித்துக் கொண்டிருந்தது. சற்றே நின்று கங்கையை உற்றுப் பார்த்தார். சுவர்களில் மாட்டப்பட்டிருந்த தெய்வத் திருவுருவப் படங்களின் அருகில் சென்று நின்றார். சிரங்குவித்து அவ்வடிவங்களை வணங்கினார். பக்திப்பாடல்களை உள்ளம் உருக்கும் இனிய குரலில் சிறிது நேரம் பாடினார். வேதம், புராணம், தந்திர சாஸ்திரம், கீதை, காயத்ரி, பாகவத, பக்த, பகவான் என்று உச்சரித்தார். கீதையை உள்ளத்திற் கொண்டு, 'தாகி, தாகி, தாகி (தியாகி)' என்று பன் முறை கூறினார்.

"அம்மா! நீயே உண்மையில் பிரம்மம்; நீயே உண்மையில் சக்தி; நீயே புருஷன்; நீயே பிரகிருதி; நீயே விராட்; நீயே ஸ்வராட்; நீயே நித்தியம், (பாரமார்த்திகப் பரம்பொருள்); நீயே உன்னை வியவகாரிகமாகவும் தோற்றுவிக்கிறாய் (லீலாமயீ); நீயே உண்மையில் இருபத்து நான்கு (பிரகிருதியின்) தத்துவங்களாக உள்ளாய் என்பர்." இவ்வாறு மொழிந்தவண்ணம் உலவினார் குருதேவர்.

அப்போது காளி கோவில், ராதாகாந்தர் கோவில் ஆகிய கோவில்களிலிருந்து விடியற்காலைக்குரிய மங்கள ஆரதி நடைபெறுவதற்கான சங்கொலியும் மணியோசையும் காற்றில் மிதந்துவந்தன. அடியார்கள் அனைவரும் உறக்கம் நீங்கி, அறையை விட்டு வெளியே வந்தனர். கோவில்களில் பூஜை செய்வதற்காகப் பூசாரிகளும் பணியாட்களும் பூந்தோட்டத்திலே பூக்களைப் பறித்துக்கொண்டிருப்பதைக் கண்டனர். 'நகபத்' திலிருந்து காலை வேளைக்கேற்ற வாத்திய இன்னிசை முழங்கிக்கொண்டிருந்தது.

நரேந்திரரும் மற்ற பக்தர்களும் காலைக்கடன்களை முடித்த பின், குருதேவரிடம் வந்தனர். ஸ்ரீராமகிருஷ்ணர் முகத்தில் இனிய புன்னகை தவழத் தம் அறைக்கு அருகிலுள்ள தாழ்வாரத்தின் மேற்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தார்.

நரேந்திரர் : "பஞ்சவடியில் நானக் சம்பிரதாயத்தைச் சேர்ந்த சந்நியாசிகள் சிலர் அமர்ந்திருந்ததைக் கண்டேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆம், அவர்கள் நேற்று இங்கு என்னைப் பார்ப்பதற்காக வந்திருந்தார்கள். (நரேந்திரரை நோக்கி) நீங்கள் அனைவரும் அறைக்குள் சென்று பாயில் உட்கார்ந்து கொள்ளுங்கள்."

பக்தர்கள் அனைவரும் பாயின்மீது உட்கார்ந்தனர். குருதேவர் மகிழ்ச்சி பொங்க அவர்களுடன் உரையாடத் தொடங்கினார். நரேந்திரர் ஆன்மிக சாதனைகளைப் பற்றி விளக்குமாறு குருதேவரைக் கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்:(நரேந்திரர் முதலியவர்களிடம்) "பக்தியே அதாவது கடவுள்மீது கொள்ளும் அன்பே எல்லா ஞான சாதனங்களின் சாரமாகும். ஆண்டவனிடம் ஆழ்ந்த அன்பு செலுத்தினால் விவேகமும் வைராக்கியமும் தாமாகவே ஏற்படும்."

நரேந்திரர்: "மாதருடன் சேர்ந்து ஞானசாதனை பழகுவது பற்றித் தந்திர சாஸ்திரங்கள் கூறுகின்றனவாமே! அவை உண்மையா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவைகளெல்லாம் நல்ல வழிகள் அல்ல. மேலும், அவை கடைப்பிடிப்பதற்கு மிகவும் கடினமானவை. அவற்றில் வீழ்ச்சியுறுவது என்பதுதான் பொதுவாகப் பலருடைய அனுபவமாக உள்ளது. வீரபாவ சாதனை (பெண்ணை மனைவியாகக் கருதுவது), தாஸிபாவ சாதனை (பெண்ணைத் தோழியாக எண்ணுவது), மாத்ருபாவ சாதனை (பெண்ணைத் தாயாகப் பாவிப்பது) என்ற மூன்று விதமான* சாதனை முறைகள் உள்ளன. இவற்றுள் மாத்ருபாவ சாதனைதான் எனக்கேற்றது. தாஸிபாவ சாதனையும் நல்லதுதான். வீரபாவ சாதனையோ மிகமிகக் கடினமானது. தன்னை உலக அன்னையின் குழந்தை என்று கருதுவது மிகவும் பரிசுத்தமான மனநிலை ஆகும்."

அப்போது அங்கு வந்த நானக் சம்பிரதாயத்தைச் சேர்ந்த சாதுக்கள், 'நமோ நாராயண' என்று சொல்லி, (சாதுக்கள் ஒருவரையொருவர் வணங்குகிற முறைப்படி 'நாராயணனுக்கு வணக்கம்' என்ற பொருளில்) குருதேவரை வணங்கினர். குருதேவர் அவர்களை ஆசனங்களில் அமரும்படியாகக் கேட்டுக்கொண்டார்.

---

* இந்த மூன்று விதமான சாதனை முறைகளிலும் பெண் ஜகன்மாதாவின் சின்னமாகக் கருதப்படுகிறாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவனால் இயலாதது எதுவுமில்லை. அவருடைய இயல்பை வாக்கினால் எவராலும் விளக்கிவிட முடியாது. அவர் எல்லாம் வல்லவர்; எதையும் செய்யக்கூடிய ஆற்றல் உடையவர். இரண்டு யோகிகள் இருந்தார்கள். அவ்விருவரும் ஈசுவரனைக் குறித்துச் சாதனம் பழகிக்கொண்டிருந்தனர். ஒருநாள் நாரத முனிவர் அவர்கள் இருந்த வழியாகச் சென்றார். ஒரு யோகி நாரதரைப் பார்த்து, 'நீங்கள் நாராயணரிடமிருந்து வருகிறீர்கள் அல்லவா? இப்போது அவர் என்ன செய்து கொண்டிருக்கிறார்?' என்று கேட்டார். அதற்கு நாரதர் 'பகவான் ஓர் ஊசியின் காது வழியாக ஒட்டகம், யானை ஆகியவற்றை நுழைத்துக் கொண்டும், மீண்டும் அவற்றை வெளியே எடுத்துக்கொண்டும் இருந்ததை நான் பார்த்தேன்' என்று பதில் சொன்னார். இதைக் கேட்ட மற்ற யோகி, 'இதிலென்ன விந்தை? அவரால் எதையும் செய்ய முடியும்' என்று கூறினார். ஆனால், அந்த யோகியோ, 'இது நடக்கக் கூடிய காரியமா? நீங்கள் ஒரு போதும் பகவானுடைய இருப்பிடத்திற்குச் சென்றதே இல்லை!' என்று மறுத்துக் கூறினார்."

காலை ஒன்பது மணி ஆயிற்று. குருதேவர் தமது அறையில் அமர்ந்திருந்தார். கொன்னகரிலிருந்து மனமோகன் தம் உறவினர்களுடன் அங்கு வந்தார். அவர் குருதேவருக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்துவிட்டுத் தமது உறவினர்களைச் சுட்டிக்காட்டி, 'இவர்களைக் கல்கத்தாவிற்கு அழைத்துச்செல்லுகிறேன்' என்று தெரிவித்தார். குருதேவர் அவருடைய நலன்களை விசாரித்துவிட்டு, 'இன்று வங்காள மாதத்தின் முதல் நாள்; பிரயாணத்திற்கு இது உகந்த நாள் ஆகாதே! நீயோ இவர்களைக் கல்கத்தாவிற்கு அழைத்துச் செல்கிறாய். அனைத்தும் நல்ல விதமாக நடக்கட்டும்' என்றார். அதன்பின் அவர் புன்னகை ததும்ப மனமோகனுடன் இதர விஷயமாகப் பேசினார்.

நரேந்திரரும் அவருடைய நண்பர்களும் நீராடி விட்டு வந்தனர். குருதேவர் அன்புடன் "பஞ்சவடிக்குச் சென்று ஆல மரத்தடியில் அமர்ந்து தியானம் செய்யுங்கள். தியானம் புரிய உங்களுக்கு ஆசனம் தரட்டுமா?" என்று நரேந்திரரைக் கேட்டார்.

சுமார் பத்தரை மணி இருக்கும். நரேந்திரரும் அவருடைய பிரம்மசமாஜ நண்பர்கள் சிலரும் பஞ்சவடியில் மரத்தடியில் தியானம் செய்துகொண்டிருந்தனர். சிறிது நேரம் சென்றபின் குருதேவர் அங்கு வந்தார். அவருடன் ம-வும் வந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (பிரம்ம சமாஜ பக்தர்களிடம்) "தியானம் பழகும் பொழுது மனமானது எங்கும் அலையாமல் இறைவன் எண்ணத்தில் ஒன்றிவிட வேண்டும். தண்ணீரின் மேல்மட்டத்தில் மட்டுமே மிதந்தால் அடியில் உள்ள விலை யுயர்ந்த இரத்தினங்கள் கிடைத்து விடுமா என்ன?" இவ்வாறு உரைத்த குருதேவர் இனிய குரலில் பாட ஆரம்பித்தார்.

மூழ்குக நெஞ்சே, ஆழ்ந்து செல்லுக,
அன்னை காளியின் அரும்பெயர் ஓதியே
அளப்பரும் ஆழத்து அடிவரை ஆங்கே
மறைந்தொளிர் விலையுயர் மணிபல காண்பாய்!
சிலமுறை மூழ்கியும் பலன்பெறு தொழியின்
அலைகடல் அடித்தலத்து இலைமணி யென்றிடேல்!
தளரா உறுதியும் அடக்கமும் வளர
ஆழ்ந்து மூழ்குக, அன்னை காளியின்
உறைவிடம் வரும்வரை நெறியே செல்க!
ஞானமெனும் கடலினிடை நனியாழத் துள்ளனவால் நலனுர் முத்தம்!
ஊனமிலா அன்புடனே உயர்நூலின் விதிபற்றி ஒழுகு வீரேல்
நூனமவை நும்வசமாம் எனினுமவண் காமமுதல் நுவலும் ஓராறு
ஆனபகைக் கராத்தப்ப அணிந்திடுவீர் விவேகமெனும் மஞ்சட் பூச்சே!
கடலின் அடியிற் கிடப்பன எண்ணிலா
முத்தும் பலப்பல நத்துமா மணிகளும்;
இராமபிரசாத் இயம்புவன்
கொணர்க கைந்நிறை மணிகளை மூழ்கியே!

[இலை—இல்லை. நலனுர்முத்தம்—நன்மை மிகுந்த முத்துக்கள், நூனம்—நிச்சயம், கரா—முதலைகள், தப்ப—தப்பிக்க, நத்தும்—விரும்பும்.]

நரேந்திரரும் அவரது நண்பர்களும் பஞ்சவடி மேடையிலிருந்து இறங்கி வந்து குருதேவரின் முன் நின்றனர். குருதேவர் அவர்களோடு பேசிக் கொண்டே தமது அறை நோக்கி நடக்க ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நீ கடலில் மூழ்கும்போது முதலைகள் உன்னை வந்து பிடித்துக் கொள்ளலாம். உடலில் மஞ்சள் பூசி கொண்டோமானால் அவை நம்மைத் தொடமாட்டா. ஆழம் காண முடியாத இதயக் கடலின் தண்ணீரிலே காமம், குரோதம் முதலிய ஆறு முதலைகள் உள்ளன. ஆனால், விவேகம் வைராக்

கியம் என்னும் மஞ்சளைப் பூசிக்கொண்டால் அவை உன்னைத் தீண்டவே மாட்டா.

"விவேகமும் வைராக்கியமும் ஏற்படாதபோது வெறும் பாண்டித்தியமும், சொற்பொழிவு செய்வதும் என்ன பயனைத் தரும்? கடவுள் மட்டுமே சத்தியம்; மற்றவை அனைத்தும் அநித்தியமானவை. ஆண்டவன் ஒருவன்தான் உண்மையான வஸ்து, அதாவது மெய்ப்பொருள்; மற்றவை அனைத்தும் அவஸ்து, பொருள் ஏதும் இல்லாத பொய்ப்பொருள். இவ்விதம் தெளிவாக உணர்ந்துகொள்வதுதான் விவேகம் எனப்படும்.

"முதலில் ஆண்டவனை உன் இதயக் கோவிலில் பிரதிஷ்டை செய்து கொள். வேண்டுமானல் பேச்சு, பிரசங்கம் ஆகியவற்றை அதன் பிறகு வைத்துக் கொள். விவேகமும் வைராக்கியமும் இல்லாமல் வெறுமனே பிரம்மம், பிரம்மம் என்று திரும்பத்திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பதனுல் என்ன பயன் ஏற்பட முடியும்?

"தெய்வம் இல்லாத கோயிலில் ஊதப்படும் சங்கின் வெற்று முழக்கம் போன்றதுதான் இது.

"ஒரு கிராமத்தில் பத்மலோசனன் என்ற பையன் ஒருவன் இருந்தான். அவனை ஊரார் 'போதோ' 'போதோ' என்று சுருக்கமாக அழைப்பது வழக்கம். அந்தக்கிராமத்தில் மிகவும் இடிபாடுகளோடு கூடிய பாழடைந்த கோவில் ஒன்று இருந்தது. கோயிலுக்குள் தெய்வ விக்ரகம் ஏதும் இல்லை. இடிந்து போயிருந்த கோவில் சுவர்களின் மீது செடி, கொடிகள் முளைத்திருந்தன. ஏராளமான வௌவால்கள் கோவிலுக்குள் குடிபுகுந்திருந்தன. தூசியும் வௌவால்களின் புழுக்கையும் தரையை இடந்தெரியாமல் மூடியிருந்தன. எனவே, ஊரார் அந்தக் கோவிலுக்குச் செல்வதை அறவே நிறுத்தியிருந்தனர்.

"ஒரு நாள் மாலை மறைந்து இருள் கவ்விய சிறிது நேரத்திற்கெல்லாம் சங்கு முழங்கும் சப்தத்தைக் கிராம மக்கள் கேட்டனர். 'பூம், பூம்' என்ற அந்தச் சங்கின் முழக்கம் கோவிலிலிருந்துதான் வந்துகொண்டிருந்தது. 'யாரோ ஒருவர் கோவிலில் பகவானின் விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்திருக்கிறுர் போலிருக்கிறது; அதனுல் அவர் கோவிலில் மாலைக்கால பூஜை செய்கிறார்.' என்று கிராம மக்கள் எண்ணினர். எனவே,

சிறுவர்கள், வயதானவர்கள், ஆண்கள், பெண்கள் ஆகியோர் அனைவரும் ஓடோடிச் சென்று கோவிலின் முன்னால் குழுமினர். தெய்வத்தைத் தரிசித்து வழிபாடு நடைபெறுவதைப் பார்க்கலாம் என்று ஆவலில் குழுமி நின்றுகொண்டிருந்தனர். அக்கூட்டத்தில் இருந்த ஒருவன் கோவிலின் கதவை மெல்ல மெல்லத் திறந்து, மெதுவாக உள்ளே எட்டிப்பார்த்தான். அங்கு ஒரு மூலையில் பத்மலோசனன் நின்று கொண்டு 'பூம், பூம்' என்று சங்கூதுவதைக் கண்டான். தெய்வ விக்கிரகம் எதுவும் அங்குப் பிரதிஷ்டை செய்யப்படவில்லை; கோவிலில் இருந்த குப்பைகள் நீக்கப்படவில்லை; இடம் கழுவிச் சுத்தம் செய்யப்படவில்லை. வௌவால்களின் புழுக்கையும் குப்பையும் எப்போதும்போல எங்கும் கிடந்தன. போதோவைப் பார்த்து அந்த மனிதன் பின்வருமாறு உரக்கக் கத்தினான்.

சங்கூதினை நீகலக்கமெழச் சாமியில்லாக் கோயிலிலே
எங்கும் ஓயாதிரவு பகல் இரையும் வாவல்[1] பதினொன்றே.

"உனது இதயக் கோவிலிலே இறைவனை நீ பிரதிஷ்டை செய்ய விரும்பினால், ஆண்டவனை அடைய நீ ஆசையுற்றால் வெறுமனே 'பூம், பூம்' என்று சங்கை மட்டும் ஊதினால் போதுமா? இப்படி வெறுங்கூச்சல் போடுவதால் எப்பயனுமில்லை. முதலில் மனத்தைச் சுத்தமாக்கு. மாசற்ற தூய மனத்தில் பரமன் தானே வந்து குடி புகுந்து கொள்கின்றான். துர்நாற்றம் வீசும் வௌவால்களின் புழுக்கை எங்கும் சூழ்ந்திருக்கும்போது, கோவிலில் பகவானின் பிரதிமையை எழுந்தருளப்பண்ண முடியாது. பதினொரு இந்திரியங்களும் பதினொரு வௌவால்களாகும். கர்மேந்திரியங்கள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், மனமும் ஆகிய பதினொரு இந்திரியங்களுமே இங்குப் பதினொரு வௌவால்கள் என்று உருவகமாகச் சொல்லப்படுகின்றன.

"முதல் காரியமாக உன்னுடைய உள்ளத்தில் இறைவனை நிலை நிறுத்து; பின்னர் விருப்பமிருப்பின், ஆசை தீரும் வரை பேச்சு, பிரசங்கங்கள் முதலான எல்லாவற்றையும் நிகழ்த்திக் கொள்.

"முதன் முதலாக உனது உள்ளக்கடலில் ஆழ்ந்து மூழ்கு. ஆழ மூழ்கி அடிவரைச் சென்று அங்குள்ள விலையுயர்ந்த முத்துக்களைச் சேகரித்துக் கொள். அதன் பிறகு மற்ற பணிகளைக் கவனித்துக் கொள்ளலாம்.

---

1. வௌவால்

"ஆனால், மக்கள் எவரும் ஆழ்ந்து மூழ்குவதற்கு விரும்புவதில்லை. ஞானசாதனம் செய்வதில்லை; பஜனை செய்வதில்லை; விவேக வைராக்கியம் பழகுவதில்லை. ஏதோ இரண்டொரு வார்த்தைகளைக் கற்றுக்கொள்கிறார்கள். உடனே மக்களுக்குப் பிரசங்கம் செய்யத்தொடங்கிவிடுகிறார்கள்.

"மக்களுக்குப் போதிப்பது மிகவும் கடினமான காரியம். பகவானது தரிசனம் கிடைத்த பிறகே, அவரிடமிருந்து யாரவது ஆணையைப் பெற்ற பின்னரே மக்களுக்குப் போதிக்கக் கூடிய உரிமை உடையவர்களாகிறார்கள்."

இவ்விதம் பேசிக்கொண்டே குருதேவர் வடக்குத் தாழ்வாரத்தின் மேற்குப் பகுதியில் வந்து நின்றார். ம-வும் அருகில் நின்று கொண்டிருந்தார்.

'விவேகமும் வைராக்கியமும் இல்லாவிட்டால் பகவானை அடையவே முடியாது' என்று குருதேவர் மீண்டும் மீண்டும் கூறிக்கொண்டிருந்தார். ம- வுக்குத் திருமணம் ஆகியிருந்தது. ஆகவே அவர், 'என் நிலை என்ன ஆகுமோ?' என்று யோசிக்கலானார். அவருக்கு வயது இருபத்தெட்டு. கல்லூரியில் ஆங்கிலக் கல்வி சிறிது கற்றிருந்தார். 'விவேக வைராக்கியம் என்றால் காம காஞ்சனத்தைத் தியாகம் செய்வது அல்லவா?' என்று அவர் தமக்குள்ளேயே நினைத்துக்கொண்டார்.

ம- (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): "மனைவி ஒருத்தி கணவனைப் பார்த்து, 'நீங்கள் என்னைக் கவனிப்பதே இல்லை. நான் தற்கொலை செய்துகொள்ளுகிறேன்' என்று கூறினால், என்ன செய்வது?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (கண்டிப்பான குரலில்): "பகவானை அடைய விரும்பும் பாதையிலே குறுக்கே நிற்கும் அத்தகைய மனைவியைப் புறக்கணித்துவிடு. அவள் தற்கொலைதான் செய்துகொள்ளட்டும், அல்லது வேறு என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளட்டும்! கடவுளை அடையும் வழியில் எவள் குறுக்கே நிற்கிறாளோ அவள் அவித்யை வடிவான பெண் ஆவாள்."

ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவராய் ம- சுவர்மீது ஒரு காலை ஊன்றிக்கொண்டு சாய்ந்து நின்றுகொண்டிருந்தார். நரேந்திரரும் மற்ற பக்தர்களும் ஒரு விநாடி வாய்பேசாமல் வியப்புடன் நின்றனர்.

குருதேவர் அவர்களுடன் ஒருசில வார்த்தைகள் பேசினர். பிறகு திடீரென்று ம- வின் அருகில் சென்று அவருடைய காதில் பின்வருமாறு கூறினர்: "ஒருவனுக்கு இறைவனிடம் உண்மையிலேயே ஆழ்ந்த பக்தி இருக்குமாயின் அவனுக்கு எல்லாமே சாதகமாக அமைந்துவிடும். அரசன், தீயவர், மனைவி ஆகிய அனைவருமே அவனுக்குச் சாதகமாக அமைந்து விடுவார்கள். ஒருவனுக்கு மனப்பூர்வமாக இறைபக்தி இருக்குமானல் நாளடைவில் அவனுடைய மனைவியும் இறைவாழ்க்கையைப் பின்பற்றுவது சாத்தியமாகிவிடும். ஒருவன் நல்லவனக இருப்பானுயின் இறைவனது கருணையால் மனைவியும் நல்லவளாக ஆகிவிடக்கூடும்."

குருதேவரின் இந்த வார்த்தைகள் ம-வின் மனக்கவலை என்னும் கொழுந்துவிட்டு எரியும் நெருப்பின்மீது நீர் ஊற்றியது போல ஆறுதலைத் தந்தன. இவ்வளவு நேரமும் தமது நிலைமையைக் குறித்து, 'மனைவி தற்கொலை செய்துகொள்வதானல் செய்துகொள்ளட்டும். அதற்கு நான் என்ன செய்ய முடியும்?' என்று நினைத்துக்கொண்டிருந்தார்.

ம: (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்) "இல்லற வாழ்க்கை உண்மையிலேயே மிகவும் பயங்கரமானதுதான்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: (ம-, நரேந்திரர் ஆகியோரைப் பார்த்து) "ஆகவேதான் சைதன்ய தேவர் தமது தோழராகிய நித்தியானந்தரிடம், 'சகோதரர் நித்தியானந்தரே! கவனமாகக் கேளுங்கள். உலக ஆசைகளுடன் இல்லறத்தில் உழலும் மக்களுக்குக் கதிமோட்சமே கிடையாது' என்று சொன்னர்."

ம-விடம் குருதேவர் ஒருநாள் தனிமையில் கூறியிருந்தார். "இறைவனிடம் தூய பக்தி இல்லாமற் போகுமானல் அப்படிப்பட்ட இல்லறத்தான் கடைத்தேறுவதற்கு வேறு எந்த வழியும் இல்லைதான். ஆனல், இறைவனின் தரிசனத்தைப் பெற்ற பிறகு யாராகிலும் சம்சார வாழ்க்கையில் தங்கியிருந்தால் அப்படிப்பட்டவருக்கு எந்த வகையான பயமும் இருக்காது. தனிமையான இடத்தில் யார் ஒருவர் அடிக்கடி ஆத்மசாதனை பழகுவதன் பயனுகத் தூய பக்தியைப் பெற்றுவிடுகிருரோ, அப்படிப்பட்டவர் உலக வாழ்க்கையில் தங்கியிருந்தாலும் எந்தவித அச்சமும் கொள்ளத் தேவை இல்லை. சைதன்யதேவருக்கு இல்லற பக்தர்களும் இருந்தார்கள். ஆனல்

பெயரளவிற்குத்தான் அவர்கள் இல்லறத்தில் இருந்தார்களே தவிர உண்மையில் அவர்கள் உலகப் பற்றற்றவர்களாகவே வாழ்க்கை நடத்தினர்."

உச்சிப்பொழுது ஆயிற்று. கோவிலில் தேவ தேவியருக்கான பூஜை முடிந்து நைவேத்தியம் சமர்ப்பிக்கப்பட்டு வாத்தியங்கள் முழங்கின. பின்னர் கோயிற் கதவுகள் மூடப்பட்டன. ஸ்ரீராமகிருஷ்ணர் உணவு உட்கொள்ள அமர்ந்தார். நரேந்திரரும் மற்ற பக்தர்களும் இன்றைய பொழுதும் தங்கியிருந்து குருதேவருடன் பிரசாதம் உட்கொண்டனர்.

## ஞாயிற்றுக்கிழமை, அக்டோபர் 22, 1882

காலை ஒன்பதுமணி. துர்கா பூஜையின் கடைசி நாளான விஜயதசமி. இந்நாளில், இதுவரை நான்கு நாட்களாக வீட்டில் வைத்து வழிபட்டு வந்த துர்கையின் சிலை குளத்திலோ ஆற்றிலோ விடப்படும்.

தட்சிணேசுவரக் காளிகோயிலில் ஸ்ரீராமகிருஷ்ணர் தம் அறையில் சிறிய கட்டிலில் சாய்ந்தவண்ணம் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். ம- தரையில் அமர்ந்திருக்க, அவருடன் குருதேவர் பேசிக்கொண்டிருந்தார். சில நாட்களாக ராக்கால் இங்கு வந்து குருதேவருடன் தங்கியிருந்தார். நரேந்திரரும், பவநாதரும் அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்தனர். ராம், மனமோகன், சுரேஷ், ம-, பலராம் முதலியோர் வாரம் ஒரு முறையாவது குருதேவரைத் தரிசிக்க வருவது வழக்கம். பாபுராம் ஓரிருமுறை வந்து சென்றிருக்கிறார். குருதேவருடன் ராம்லாலும், ஹாஸ்ராவும் வசித்துவந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "துர்கா பூஜை விடுமுறை தொடங்கி விட்டதா?"

ம : "ஆம் சுவாமி. பூஜையின் முதல் மூன்று நாட்களும் நான் கேசவரின் வீட்டிற்குச் சென்றிருந்தேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அப்படியா?"

ம : "அங்கே துர்கா பூஜையைப்பற்றிய அழகான ஒரு விளக்கத்தைக் கேட்டேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அப்படியா? என்ன சொன்னார்கள்?"

ம: "கேசவர் ஒவ்வொரு நாளும் காலையில் தன் வீட்டில் பத்துப் பதினொரு மணிவரை பிரார்த்தனை நடத்தினர். இப் பிரார்த்தனைகளின்போது அவர் துர்கா பூஜைக்குரிய தத்துவத்தை எடுத்துவிளக்கினர். 'யார் வேண்டுமானாலும் அன்னை காளியை உணர முடியும். அதாவது, அவரை உள்ளமெனும் கோவிலில் நிறுத்த முடியும். அப்படி நிறுத்தியதும் இலட்சுமி, சரஸ்வதி, கார்த்திகேயன், கணேசன் ஆகிய நால்வரும் தாமாகவே நம் இதயத்தில் வந்து குடிகொள்வார்கள். இலட்சுமி என்பது செல்வத்தையும், சரஸ்வதி அறிவையும், கார்த்திகேயன் பராக்கிரமத்தையும், கணேசன் சித்தியையும் குறிக்கும். அன்னை காளி வரும்போது இவை அனைத்தும் தாமாகவே வந்துசேரும்."

ஸ்ரீராமகிருஷ்ணர் இடையிடையே கேள்விகளை எழுப்பியபடி கேசவர் நிகழ்த்திய பிரார்த்தனையைப் பற்றிய விளக்கங்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். கடைசியில் ம-விடம் குருதேவர் பின்வருமாறு கூறினர் :

"நீ இங்கே அங்கே என்று பல இடங்கட்கும் போய்க் கொண்டிருக்காதே. இங்குமட்டும் வா. **யாரெல்லாம் அந்தரங்க பக்தர்களோ, அவர்கள் இங்கே—என்னிடம் மட்டுமே வருவார்கள்.** நரேந்திரன், பவநாத், ராக்கால் முதலிய இளைஞர்கள் என் அந்தரங்கச் சீடர்கள். அவர்களை மிகச் சாதாரணமாக நினைத்துவிடாதே. அவர்களை ஒருநாள் நீ உன் வீட்டுக்கு அழைத்துச் சென்று விருந்தளி. அதிருக்கட்டும், நரேந்திரனைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?"

ம: "அவரைப் பற்றி மிக உயர்வாக நினைக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவனுடைய பல வகையான சாமர்த்தியங்களையும், சிறந்த ஆற்றல்களையும் நீ கவனித்ததுண்டா? அற்புதமாகப் பாடுகிறான்; இசைக்கருவிகளை அருமையாக வாசிக்கிறான்; நன்றாகப் படிக்கிறான்; தன் மனத்தைக் கட்டி ஆள்வதிலும் திறமை உடையவனாக இருக்கிறான்; திருமணம் செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லுகிறான்; சிறு வயதிலிருந்தே இறைவனிடம் சித்தத்தைப் பதியவைத்திருக்கிறான்.

"இப்பொழுது உன் தியானம் எந்த நிலையில் இருக்கிறது? உன் மனத்திற்கு எந்த வழிபாட்டு முறை பிடித்திருக்கிறது? உருவக் கடவுளா? அல்லது அருவக் கடவுளா?"

ம : "ஐயா, இப்பொழுதெல்லாம் என் மனம் உருவக் கடவுளை நாடுவதில்லை. அதே நேரத்தில் உருவமற்ற அருவக் கடவுள்மீதும் மனத்தைச் செலுத்தி ஒருமுகப் படுத்த முடியவில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பார்த்தாயா? உடனடியாகச் சட்டென்று மனத்தை உருவமற்ற கடவுள்மீது நிலைநிறுத்த முடியாது என்பது இப்போது உனக்குத் தெரிகிறதல்லவா? அதனால்தான் ஆரம்ப காலத்தில் உருவமுள்ள கடவுள்மீது உள்ளத்தை நிலைநிறுத்துவது நல்லது என்கிறேன்."

ம : "அப்படியானால் மண்ணாலான தெய்வச் சிலைகளின்மீது தியானம் செய்ய வேண்டுமென்று நீங்கள் கூறுகிறீர்கள்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஏன் மண் என்று சொல்லுகிறாய்? இச்சிலைகள் சின்மய வடிவங்கள் ஆயிற்றே!"

ம : "அப்படியே இருந்தாலும் அவற்றிற்குக் கைகள், கால்கள், மற்றும் உடம்பின் பல்வேறு உறுப்புக்கள் இருப்பதாக நாம் நினைத்துக் கொள்ள வேண்டுமே. ஆரம்ப காலத்தில் உருவத்தின் மீது தியானம் செய்யா விட்டால், மனத்தை நிலை நிறுத்த முடியாது என்று நீங்கள் கூறியிருக்கிறீர்களே. கடவுள் தம் விருப்பம் போல் எந்த வடிவத்தையும் எடுத்துக் கொள்வார் என்பதை நான் உணர்கிறேன். அப்போது ஒருவனுடைய தாயின் வடிவமாகவும் அவரால் ஆகமுடியும் அல்லவா? அதனால் என்னுடைய தாயின்மீது நான் தியானம் செய்யலாமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஓ! செய்யலாமே. ஒருவனுடைய தாய் உண்மையில் பிரம்மத்தின் வடிவம்தான். அவள் பிரம்ம மயமானவள்; அவளே குரு."

ம–, பேச்சற்றுச் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தார். பிறகு குருதேவரிடம் "சுவாமி, அருவக் கடவுள் காட்சி எப்படி இருக்கும்? அதனை விளக்குவது இயலாத காரியமா?" என்று கேட்டார்.

குருதேவர் (சிறிது யோசித்து) "அது எப்படிப்பட்ட காட்சி தெரியுமா?" என்று கூறி சற்று மௌனமாக இருந்தார். பிறகு, ஒருவன் கடவுளை உருவத்தோடும் உருவமில்லாமலும் காணும்போது ஏற்படும் அனுபவத்தைச் சிறிது விளக்கினர். மறுபடி குருதேவர் மௌனமாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "எது ஞானம் என்று ஒருவன் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டுமானால், அவன் ஆன்மிகச் சாதனைகளைப் பழக வேண்டும். ஓர் அறையினுள் விலை உயர்ந்த இரத்தினங்கள் இருப்பதாக வைத்துக் கொள்வோம். நீ அவற்றைப் பார்க்கவும், கைப்பற்றவும் விரும்பினால், அந்த அறையின் சாவியை முதலில் அலைந்து திரிந்து தேடிப்பெற வேண்டும். பிறகு கதவைத் திறக்க வேண்டும். அதன் பிறகே இரத்தினங்களை வெளியே கொண்டு வர முடியும். அப்படியின்றி, பூட்டப்பட்ட அறைக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு உனக்கு நீயே, 'இதோ! நான் கதவைத் திறந்து விட்டேன். பெட்டியைத் திறந்து விட்டேன். இரத்தினங்களை வெளியே எடுத்து விட்டேன்' என்றெல்லாம் வெறுமனே சொல்லிக் கொண்டிருந்தால் போதுமா? நீ கதவையும் திறக்க மாட்டாய். இரத்தினங்களையும் எடுக்க மாட்டாய். உனக்கு ஒன்றுமே கிடைக்காது. ஆகவே கட்டாயம் ஆத்மசாதனைகள் செய்ய வேண்டும்.

"ஞானிகள் தியானிப்பது அருவக் கடவுளைத்தான். கடவுளின் அவதாரங்களை அவர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. அர்ச்சுனன் கிருஷ்ணனைப் பாராட்டும் பொழுது, 'நீங்கள் பரப்பிரம்மே' என்று கூறினன். உடனே கிருஷ்ணர், அருச்சுனனிடம் 'என் பின்னல் வா. நான் பரப்பிரம்மமா? இல்லையா? என்பதை அறிந்து கொள்வாய்' என்றார். ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு அருச்சுனனை அழைத்துச் சென்று 'இங்கே என்ன காண்கிறாய்?' என்று வினவினர். 'ஒரு பெரிய மரத்தைப் பார்க்கிறேன். அதில் கொத்துக்கொத்தாகக் கருவண்ணப் பழங்கள் இருப்பதைக் காண்கிறேன்' என்றான். கிருஷ்ணர் அவனிடம் 'இன்னும் கொஞ்சம் அருகில் சென்று பார். மரத்தில் இருப்பது கருப்பு நிறப் பழக்கொத்துக்கள் அல்ல. கொத்துக் கொத்தாக (என்னைப் போன்ற) கிருஷ்ணர்கள் மரத்தில் தொங்கிக் கொண்டிருக்கிறார்கள்' என்றார். இதை இன்னும் தெளிவாகச் சொல்வதானால், பிரம்மமாகிய மரத்தில் கணக்கே இல்லாத தெய்விக அவதாரங்கள் தோன்றிக் கொண்டும், மறைந்து கொண்டும் இருக்கின்றன என்பதாகும்.

"கபீர்தாசர் அருவக் கடவுளிடமே ஆழ்ந்த பக்தி கொண்டிருந்தார். கிருஷ்ணருடைய நாமத்தைச் சொன்னதும், 'நான் ஏன் அவனைப் பூஜிக்க வேண்டும்? கோபிகைகள் கைக் கொட்டிச் சிரிக்கும்படி குரங்கைப் போல அவன் குதித்து நாட்டியம் ஆடினன்' என்றார் கபீர். (சிரிப்பு)

"உருவக் கடவுளை வழிபடுபவர்களுடன் நான் இருக்கும் போது உருவக் கடவுளை வணங்குபவனாக இருக்கிறேன். அருவக் கடவுளை வணங்குபவர்களுடன் இருக்கும் போது அருவக் கடவுளை வணங்குபவனாக இருக்கிறேன்."

ம: (புன்சிரிப்போடு) "நாம் இப்போது பேசிக் கொண்டிருக்கும் கடவுள் எப்படி எல்லையற்றவரோ, அதுபோல் நீங்களும் எல்லையற்றவர்! உண்மையில் உங்கள் ஆழத்தை யாராலும் கண்டறிய முடியாது!"

ஸ்ரீராமகிருஷ்ணர் :(சிரித்துக் கொண்டே) "ஆ! நீ அதைப் புரிந்து கொண்டு விட்டாயா! நான் உனக்கு ஒன்று சொல்லுகிறேன். ஒருவன் பல்வேறு மார்க்கங்களையும் பின்பற்றி வர வேண்டும். எல்லாச் சமயங்களையும் சிறிது காலத்திற்குக் கடைப்பிடித்து வரவேண்டும், சொக்கட்டான் ஆட்டத்தில் ஒரு காய், வட்டம் முழுவதையும் சுற்றுவிட்டால் நடு இடத்தை எப்படி அடைய முடியும்? அப்படிச் சுற்றி, அது ஒருமுறை நடு இடத்தை அடைந்து விட்டால் பிறகு வேறு எந்தக் காயாலும் அதை வெட்ட முடியாது."

ம: "உண்மைதான் சுவாமி!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இருவகைப்பட்ட யோகிகள் இருக்கிறார்கள். ஒருவர் பஹூதக், மற்றொருவர் குடீசக். மனத்தில் இன்னும் சாந்தி கிடைக்காமல் சாந்தியைத் தேடிப் பல்வேறு இடங்களுக்குத் தீர்த்த யாத்திரையாக அலைந்து திரிபவரைப் 'பஹூதக்' என்பார்கள். பல்வேறு இடங்களைச் சுற்றி அலைந்து திரிந்தபின் மனத்தில் அமைதி ஏற்பட்டு ஓரிடத்தில் நிலையாகத் தங்கிச் சாதனைகள் செய்பவரை, அவ்வாறு தங்குவதில் ஆனந்தமும், அமைதியும் அடைபவரைக் 'குடீசக்' என்பார்கள். எத்தகைய புண்ணியத் தலமாக இருந்தாலும் அத்தலத்திற்குச் செல்லும் விருப்பம் அவருக்குத் தோன்றுது. ஒருவேளை அவர் அப்படிச் சென்றாலும் அது ஒரு புதிய உற்சாகத்தைப் பெறுவதற்காகவே இருக்கும்.

''இந்து சமயம், இஸ்லாம், கிருத்துவம் முதலிய பல்வேறு சமயங்களையும் சிறிது காலத்திற்கு நான் பின்பற்ற வேண்டியிருந்தது. அத்துடன் சாக்தம், வைஷ்ணவம், வேதாந்தம் ஆகிய மதநெறிகளையும் பின்பற்றினேன். அவற்றின் மூலம் அனைவரும் 'ஒரே கடவுளை நோக்கியே செல்கிறார்கள். செல்லும் பாதைகள் மட்டுமே வேறானவை' என்று உணர்ந்து கொண்டேன்.

''புண்ணியத் தலங்களைத் தரிசிக்கச் சென்றபோது சில சமயம் எனக்கு அளவற்ற வேதனை ஏற்பட்டதுண்டு. ஒரு சமயம் காசியில் மதுர்பாபுவோடு, ராஜாபாபுவின் வரவேற்பறைக்குச் சென்றேன். அவர்கள் அங்கே பணம், நிலம் என்று வெறும் இலௌகிகப் பேச்சுக்களையே விடாமல் பேசுவதைக் கேட்டுக் கண்ணீர் விட்டுக் கதறினேன். அன்னை காளியிடம், 'தாயே! என்னை ஏன் இப்படிப்பட்ட இடத்திற்கு அழைத்து வந்தாய்? தட்சிணேசுவரத்திலேயே நான் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தேனே' என்று கூறி அழுதேன். அலகாபாத்திற்குச் சென்றபோது பொதுவாக எல்லா இடங்களிலும் பார்க்கின்ற அதே குளங்கள், புல்வெளி, மரங்கள், புளியமர இலைகள் இவற்றைத்தான் அங்கேயும் பார்த்தேன்.

''ஒன்று மட்டும் நிச்சயம். புண்ணியத் தலங்களில் ஒருவர் நிச்சயமாக உள்ள நெகிழ்ச்சி அடைகிறார். மதுர்பாபுவுடன் நான் பிருந்தாவனம் சென்றேன். ஹிருதயனும், மதுர்பாபு வீட்டுப் பெண்களும் எங்கள் கூட்டத்தில் இருந்தனர். அங்கே காளியதமனம் செய்த நீர்த்துறையைப் பார்த்தவுடனே தெய்விக ஆவேசம் என்னுள் கிளர்ந்து எழுந்தது. அந்த ஆவேசம் என்னை முழுவதுமாக ஆட்கொள்ள நினைவிழந்தேன். யமுனையின் அந்த நீர்த்துறையில் ஹிருதயன் என்னை ஒரு சிறு குழந்தையைக் குளிப்பாட்டுவதுபோலக் குளிப்பாட்டினான்.

''மாலை வேளையில் மாடுகள் புல் மேய்ந்துவிட்டு வீடு திரும்பும் நேரத்தில், யமுனையின் மணற்பாங்கான கரையில் நடந்து செல்வேன். புல் மேய்ந்துவிட்டுத் திரும்பும் அந்தப் பசுக்களின் வெறும் காட்சியே என் மனத்தில் கிருஷ்ணனைப் பற்றிய நினைவை மின்னல்போலப் பளீரென்று எழுப்பிவிடும். பைத்தியம் பிடித்தவன்போல், 'ஓ! கிருஷ்ணா! நீ எங்கே இருக்கிறாய்? என் கண்ணா! எங்கே இருக்கிறாய்?' என்று கதறிக் கொண்டு கரைமுழுதும் ஓடுவேன்.

"நான், சியாம குண்டத்தையும், ராதா குண்டத்தையும் பார்க்க ஒரு பல்லக்கில் சென்றேன். வழியில் கோவர்த்தன கிரியைப் பார்க்க இறங்கினேன். கோவர்த்தனகிரியின் வெறுங் காட்சியே என் மனத்தில் அளவற்ற தெய்விக ஆவேசத்தை எழுப்பியது. அந்த ஆவேசத்தில் மலையின் உச்சிக்கே சென்று விட்டேன். அங்கே சென்றதும் நினைவிழந்தேன். அங்குக் கூடி இருந்தவர்கள் மலையிலிருந்து என்னை இறக்கிக்கொண்டு வந்தார்கள். புண்ணியத் தீர்த்தங்களான சியாம குண்டத்திற் கும், ராதா குண்டத்திற்கும் போகும் வழியில் நான் புல்வெளி களையும், மரங்களையும், புதர்களையும், பறவைகளையும், மனிதர் களையும் கண்டு ஆனந்தப் பரவசம் அடைந்தேன். அழுதழுது என் ஆடைகள் கண்ணீரால் நனைந்தன. 'ஓ கிருஷ்ணா! நீ இருந்த காலத்தில் இருந்ததுபோல எல்லாம் அப்படியே இருக்கின்றன. ஆனால், நீ மட்டும்தான் இல்லை!' என்று அழுதேன். இவ்வேதனையால் பல்லக்கில் அமர்ந்திருந்த நான் பேசும் ஆற்றலையே இழந்துவிட்டேன். பல்லக்கின் அருகில் நடந்துவந்த ஹிருதயன், பல்லக்குத் தூக்கிகளிடம் என்னை மிகக் கவனமாகப் பார்த்துக்கொண்டு வரும்படிக் கூறினான்.

"பிருந்தாவனத்தில் இருந்த கங்காமயி என்னிடம் மிகுந்த அன்பு காட்டினார். வயது முதிர்ந்த அப்பெருமாட்டி தன்னந் தனியாகப் பிருந்தாவனத்தில் நிதுவனத்தின் அருகே குடிசை ஒன்றில் வசித்து வந்தார். என்னுடைய தெய்விக நிலையையும் பேரானந்தத்தையும் கண்டு அவர் என்னை, 'இவர் ராதையின் மறுவடிவமே' என்றார். என்னைத் 'துலாயி' என்று அவர் அழைத்தார். நான் அவரோடு இருந்தபோது உண்பது, குளிப்பது, வீடு செல்வது முதலிய எல்லாவற்றையும் மறந்து விட்டேன்.

"சில நாட்கள் ஹிருதயன் நாங்கள் தங்கியிருந்த வீட்டிலி ருந்து எனக்குச் சாப்பாடு கொண்டுவந்து தந்தான். கங்காமயியும் தன் கையால் செய்த உணவை எனக்குக் கொடுப்பார்.

"கங்காமயி அடிக்கடி தெய்விகப் பரவச நிலையை அடை வார். அந்த நேரங்களில், அவரைக் காணத் திருவிழாவைப் போல் பெரிய கூட்டம் வந்து சேர்ந்துவிடும். ஒருநாள் அத்தகைய பரவசநிலையில் இருந்த அவர், ஹிருதயன் தோளில் ஏறி அமர்ந்து கொண்டார்.

"அவரை விட்டு விட்டுத் தட்சிணேசுவரம் திரும்ப எனக்கு விருப்பமே இல்லை. அவரோடு பிருந்தாவனத்திலேயே தங்க எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. எனக்குப் புழுங்கல் அரிசி உணவிற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. எங்கள் இருவருடைய படுக்கைகளும் குடிசையின் இரண்டு ஓரங்களிலும் போடப்பட்டன."

"எல்லா ஏற்பாடுகளும் ஆகியிருந்தபொழுது, ஹிருதயன் 'உங்களால் கண்டதைச் சாப்பிட முடியாது. உங்களுக்கு ஜீரண சக்தி மிகவும் குறைவு. ஏதாவது நேர்ந்தால் யார் பார்த்துக் கொள்வார்கள்?' என்றான். கங்காமயி, 'ஏன்? நான் பார்த்துக் கொள்ளுகிறேன், நான் வைத்தியம் செய்கிறேன்' என்றார். ஆனால், என்னை அங்கே விட்டுச் செல்ல விரும்பாத ஹிருதயன் தன்னோடு கல்கத்தா வரும்படி என் கையைப் பிடித்து இழுத்தான். போக வேண்டாமென்று கங்காமயி என்னுடைய இன்னொரு கையைப் பிடித்துத் தடுத்தார். இப்படி இரண்டு பேரும் மாறிமாறி என் கைகளை இழுத்துக்கொண்டிருந்தபோது திடீரென்று நான் என் தாயை நினைத்துக் கொண்டேன். அவர் அப்பொழுது தட்சிணேசுவரக் கோயிலில், நஹபத்தின் மாடியில் தன்னந்தனியாக வசித்து வந்தார். அவரை விட்டுத் தனியே பிருந்தாவனத்தில் இருப்பது என்பது என்னால் முடியாத காரியம். உடனே, கங்காமயியிடம், 'நான் இங்கே தங்கமாட்டேன். நான் போகிறேன்' என்று சொல்லிவிட்டேன். ஆனாலும் பிருந்தாவனச் சூழலை நான் மிகவும் விரும்பினேன். பிருந்தாவனம் அழகான இடம். புதிதாகப் பயணிகள் சென்றால் பிருந்தாவனத்துக் குழந்தைகள் 'ஹரிபோல், மனதின் முடிச்சை அவிழ்த்துவிடு' என்று கூவுகின்றனர்."

பகல் பதினொரு மணி. காளி கோயில் பிரசாதம் குருதேவரின் அறைக்கு வந்தது. குருதேவர் அதைப் பகல் உணவாக உண்டார். சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொண்ட பிறகு பக்தர்களுடன் உரையாடத் தொடங்கினார். பேச்சுக்கிடையில் அடிக்கடி "ஓம், ஓம்" என்றும் "ஹா! சைதன்யம்" என்றும் கூறினர்.

சூரியன் மறைந்ததும் கோயிலில் மாலை வழிபாடு ஆரம்பமாயிற்று. அன்று விஜயதசமி நாளானதால் குருதேவர் காளி கோயிலுக்குச் சென்றிருந்தார். பக்தர்கள் அனைவரும் அன்னை காளியை வணங்கிவிட்டுப் பிறகு குருதேவரின் திருவடிகளில்

வீழ்ந்து வணங்கினர். அவருடைய பாததூளியைத் தலையில் அணிந்துகொண்டனர். ராம்லால் அன்னை காளிக்கு ஆரதி எடுத்தார். குருதேவர் ராம்லாலை அழைத்தார். 'ஓ ராம்லால்! நீ எங்கே இருக்கிறாய்?' என்று வினவினார். அன்னைக்கு 'சித்தி' பானம் நைவேத்யம் செய்திருந்தனர். குருதேவர் அந்த பானகப் பிரசாதத்தைத் தொட விரும்பினார். அதற்காகத்தான் ராம்லாலை அழைத்தார். பக்தர்கள் எல்லோருக்கும் அப் பிரசாதத்தில் சிறிது கொடுக்கும்படி ராம்லாலிடம் கூறினார்.

## செவ்வாய்க்கிழமை, அக்டோபர் 24, 1882

பிற்பகல் மூன்று அல்லது நான்கு மணி இருக்கும். ஸ்ரீராமகிருஷ்ணர் தமது அறையில் இனிப்பும், பழமும் வைக்கப்படும் அலமாரியின் அருகில் நின்றுகொண்டிருந்தார். ம-வும், பலராமும் கல்கத்தாவிலிருந்து வண்டியில் வந்துசேர்ந்தனர். அறையுள் நுழைந்து குருதேவரை அவர்கள் வணங்கினர். ஸ்ரீராமகிருஷ்ணர் புன்னகையோடு அவர்களிடம், "அலமாரியிலிருந்து கொஞ்சம் இனிப்பு எடுக்கலாம் என்று சென்றேன். இனிப்பின்மேல் கையை வைத்தேனோ இல்லையோ, பல்லி ஒன்று என்மேல் விழுந்தது. உடனே கையை எடுத்துக் கொண்டேன்." (எல்லோரும் சிரிக்கிறார்கள்)

"இத்தகைய சகுனங்களையும் கடைப்பிடிக்க வேண்டும். இதோ பார்! ராக்கால் உடம்பு நலமில்லாமல் இருக்கிறான். எனக்கும் உடம்பு வலிக்கிறது. இதற்குக் காரணம் என்ன தெரியுமா? இன்று காலை நான் படுக்கையை விட்டு எழுந்தபோது ஒருவன் இங்கு வந்தான். அவனை ராக்கால் என்று எண்ணி நான் அவன் முகத்தைப் பார்த்துவிட்டேன். அதுதான்! (எல்லோரும் சிரிக்கிறார்கள்)

"ஒருவனுடைய அங்க அடையாளங்களையும் கவனிக்க வேண்டும். அன்றொரு நாள் நரேந்திரன் ஒன்றரைக் கண்ணனை தன் நண்பன் ஒருவனை இங்கே அழைத்துவந்தான். அவனைப் பார்த்ததும் எனக்குள், 'என்ன வேதனை! நரேந்திரன் இவனைப்போய் அழைத்துக்கொண்டு வந்திருக்கிறானே?' என்று நினைத்துக்கொண்டேன்.

"ஒரு குறிப்பிட்ட ஆள் இங்கு அடிக்கடி வருவான். அவன் கொடுக்கும் தின்பண்டங்களை என்னால் உட்கொள்ள முடியவில்லை. அவன் ஓர் அலுவலகத்தில் இருபது ரூபாய்க்கு வேலை பார்க்கிறான். திருட்டுக் கணக்கு எழுதி, இன்னொரு

இருபது ரூபாய் மாதந்தோறும் சம்பாதிக்கிறுன். அவனிடம் நான் அதிகம் எதுவும் பேசமாட்டேன். ஏனென்றுல், அவன் பொய்யே பேசுவான். சில நேரங்களில் அவன் வேலைக்குப் போகாமல் இரண்டு, மூன்று நாட்கள் இங்கேயே தங்குவான். அவன் ஏன்அப்படி தங்குகிருன் தெரியுமா? வேறு எங்காவது நல்ல வேலைக்கு நான் இங்குவரும் பெரிய மனிதர் யாரிடமாவது சிபாரிசு செய்வேன் என்று தான்."

பலராம் பரம வைதிக வைணவக் குடும்பத்தில் பிறந்தவர். வயதான அவருடைய தந்தை ஒரு பெரிய ஆசாரசீலர். அவர் தலையில் குடுமி வைத்திருந்தார். கழுத்தில் துளசிமாலை, கையில் ஜபமாலைகளோடு எப்போதும் அவர் காட்சி யளிப்பார். தன் நேரம் முழுவதையும் ஜபத்திலேயே கழித்து வந்தார். அவருக்கு ஒரிசாவில் ஏராளமான சொத்துக்கள் உண்டு. கோட்டார், பிருந்தாவனம் போன்ற பல இடங்களில் ராதாகிருஷ்ணருக்குக் கோயில்கள் கட்டியிருந்தார். சத்திரங்களும் கட்டிச் சாதுக்களுக்கு இலவச உணவு தர ஏற்பாடு செய்திருந்தார். குருதேவர் பேச்சு வார்த்தைகள் மூலம் பலராமுக்குப் பல உபதேசங்களைத் தரத் துவங்கினுர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அன்றொரு நாள் ஒருவன் இங்கே வந்திருந்தான். அவன் ஒரு 'பெண்டாட்டி தாசன்' என்பதை அவனைப் பார்த்ததும் புரிந்துகொண்டேன்! மனிதர்களால் ஏன் கடவுளைப் பார்க்க முடியவில்லை? பெண்ணும் பொன்னு மாகிய தடைகளால்தான். அன்றைக்கு அவன் உன்னிடம் எவ்வளவு திமிரோடு வெட்கமில்லாமல் பேசினுன்? 'ஒரு பரமஹம்ஸர் என் தந்தையிடம் வந்திருந்தார். என் தந்தை அவருக்கு நன்ருகக் கோழிக்கறியைச் சமைத்து விருந்து படைத்தார்' என்ருனே! (பலராம் சிரிக்கிருர்)

"இப்போதுள்ள என் மனநிலையில், அன்னை காளிக்குப் பிரசாதமாகப் படைக்கப்பட்டிருந்தால் கொஞ்சம் மீன் குழம்பை மட்டும் உட்கொள்ள முடிகிறது. காளிக்குப் படைத் திருந்தாலும் கூட இறைச்சியை என்னுல் சாப்பிட முடிவதில்லை. ஆனுல், காளிக்குக் கோபம் வந்துவிடும் என்பதால், விரலால் தொட்டுக் கொஞ்சம் வாயில் வைத்துக் கொள்வேன். (எல்லோ ரும் சிரிக்கின்றனர்)

"நல்லது. என்னுடைய இந்த மனநிலைக்கு நீங்கள் விளக் கம் சொல்லுங்களேன். ஒருமுறை நான் பர்த்வானிலிருந்து கமார்புகூருக்கு மாட்டுவண்டியில் போய்க் கொண்டிருந்தேன். அப்போது பெரிய புயற்காற்று வீசத் தொடங்கிற்று. சிலர் என் வண்டியருகே வந்து நின்றுர்கள். என்னுடன் இருந்த

வர்கள் அவர்களைக் கொள்ளைக்காரர்கள் என்றனர். அதைக் கேட்டதும் நான் கடவுளின் பெயர்களை உச்சரிக்க ஆரம்பித்தேன். கொஞ்ச நேரம் 'ராம்!, ராம்!' என்றேன். பிறகு 'காளி, காளி' என்றேன். பிறகு 'அனுமான், அனுமான்' என்றும் உச்சரித்தேன். இப்படி எல்லாப் பெயர்களையும் கூவி அழைத்தேன். இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

ஒருவேளை குருதேவர் 'கடவுள் ஒருவரே. அவருடைய நாமங்கள் கணக்கற்றவை. அப்படியிருக்க, வேறு மதத்தவர்கள் (பல சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள்)வெறும் வாக்குவாதம் செய்து சண்டைபோட்டு மடிகின்றனரே' என்பதைச் சுட்டிக் காட்டுகிறாரோ?

ஸ்ரீராமகிருஷ்ணர் : (பலராமிடம்) "மாயை என்பது வேறு எதுவும் அல்ல. பெண்ணும், பொன்னும்தான். இவைகளின் நடுவே நீண்ட நாள் வாழும் மனிதன் தன் ஆன்மிகத்தைப் படிப்படியாக இழந்து விடுவான். அதோடு, தான் நன்றாக இருப்பதாக வேறு நினைத்துக் கொள்வான். தோட்டி ஒருவன் மலக்கூடையைத் தன் தலைமீது தூக்கிக்கொண்டு போகிறான். முதலில் அதன் துர்நாற்றம் பொறுக்காமல் வெறுக்கும் அவன் மூக்கு, நாளாக நாளாக வெறுப்பதையே விட்டுவிடும். அந்த நாற்றம் அவனுக்கு மிகவும் பழக்கமாகி இயல்பாகவே ஆகிவிடும்.

"கடவுளின் பெயரையும், புகழையும் பாடுவதன் மூலம் ஒருவன் அவரிடம் பக்தியைப் பெறுகிறான். (ம-விடம்) கடவுளின் புனிதமான நாமத்தைப் பாட நாணக்கூடாது. ஒரு பழமொழி உண்டு. **ஒருவனிடம் மூன்று இருக்கும் வரை ஆன்மிக வாழ்வில் முன்னேற முடியாது என்று அது கூறுகிறது. அந்த மூன்று—வெட்கம், வெறுப்பு, பயம்.** கமார்புகூரில் கீர்த்தனங்களை மிக நன்றாகப் பாடுவார்கள். ஹரிநாம சங்கீர்த்தனம் அருமையாகச் செய்வார்கள். பக்திப் பாடல்களைப் பக்க வாத்தியங்களோடு பாடுவார்கள். (பலராமிடம்) பிருந்தாவனத்தில் இறைவன் வழிபாட்டிற்கு ஏதாவது ஏற்பாடு செய்திருக்கிறீர்களா?"

பலராம் : "ஆம் ஐயா! கிருஷ்ணர் வணங்கப்படும் இடத்தில் ஒரு பூஞ்சோலை வீடு உண்டு. சியாம சுந்தருக்கு நித்திய வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்துள்ளோம்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நான் பிருந்தாவனத்திற்குப் போயிருந்தேன். நிதுவனம் மிக அழகான இடம்!"

# குருதேவரும் கேசவரும்

**வெள்ளிக்கிழமை, அக்டோபர் 27, 1882**

இலட்சுமி பூஜை நாள். மாலை நான்கு மணி இருக்கும்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரோடு படகில் உல்லாசப் பயணம் போவதற்குக் கேசவர் அன்றைய தினம் ஏற்பாடு செய்திருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் தம்முடைய அறையில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தார். விஜயகோசுவாமியும், ஹரலாலும் அவர்முன் அமர்ந்திருந்தனர். அச்சமயம் கேசவரின் பிரம்மோ பக்தர்கள் சிலர் அறைக்குள் நுழைந்து குருதேவரின்முன் நெடுங்கிடையாக வீழ்ந்து வணங்கி, "ஐயா! நீராவிக்கப்பல் வந்துவிட்டது. 'கேசவர் தங்களையும், மற்றவர்களையும் கப்பலுக்கு அழைத்துவரச் சொன்னார்'' என்று கூறினார்கள்.

கப்பல் கோயில் படித்துறைக்குச் சற்றே தள்ளிக் கங்கையிலேயே நிறுத்திவைக்கப்பட்டிருந்தது. குருதேவர் கொஞ்சதூரம் நாட்டுப்படகின் மூலம் ஆற்றைக் கடந்து, நீராவிப் படகில் ஏறினார். அப்போது அவர் வெளியுலக உணர்வை முற்றிலும் இழந்து சமாதிநிலை அடைந்தார். அவருடன் விஜயகோசுவாமியும் இருந்தார்.

கப்பலில் கேசவர் முதலிய பிரம்மோ பக்தர்களோடு ம—வும் இருந்தார். அவர் இக்கப்பலில் கல்கத்தாவிலிருந்து வந்திருந்தார். கப்பலில் நின்றுகொண்டிருந்த அவர் குருதேவரின் நிலையைக் கவனித்தார். ம— சுமார் மூன்று மணிக்குக் கல்கத்தாவிலிருந்து கேசவருடன் கப்பலில் புறப்பட்டார். தமது நற்குணங்களாலும், பேச்சுத் திறமையாலும் ம— போன்ற பல வங்க இளைஞர்களின் மனங்களைக் கொள்ளை கொண்டவர் கேசவர். எனவே, குருதேவர் — கேசவர் இருவருடைய மாபெரும் சந்திப்பைக் காணவும் அவர்களுடைய உரையாடல்களைக் கேட்கவும் ம— அளவிலா ஆர்வம் கொண்டிருந்தார். அநேகர் கேசவரைத் தமது நெருங்கிய உறவினரை நேசிப்பதுபோல் நேசித்தனர். கேசவர் ஆங்கிலம் கற்றவர். மேல்நாட்டுத் தத்துவ சாஸ்திரங்களிலும், இலக்கியங்

களிலும் பெரும் புலமை வாய்ந்தவர். உருவ வழிபாட்டைச் சிறிதும் ஏற்றுக் கொண்டதில்லை. மாருகப் பொம்மை வழிபாடு என்று பல முறை அதைக் கேலி செய்ததுண்டு.

இத்தகைய ஒருவர், சிலையைச் சின்மயம் என்று முழக்க மிட்டு, அதை வழிபட்டுவரும் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிக்க வந்திருக்கிருர்; அவரை உள்ளன்போடு நேசிக்கிருர்; அவருக்கு அளவற்ற மரியாதை காட்டுகிருர். இது வியப்பாகவன்ருே இருக்கிறது? "வேறு வேருன கொள்கைகளையுடைய இந்த இருவருடைய இதயங்களும் எந்த விஷயத்தில், எப்படி ஒன்று சேர்ந்தன?" இந்த இரகசியத்தை அறிய ம- போன்ற பல இளைஞர்களுக்கு ஆவல் ஏற்பட்டிருந்தது. "குருதேவர் உருவமற்ற கடவுளை வணங்குபவர். அதே நேரத்தில் உருவமுடைய கடவுளையும் வணங்குகிருர். உருவமற்ற பிரம்மத்தைச் சிந்திக்கிருர். அப்படி இருந்தும் தேவ தேவியர் களின் சிலைகளை மலர் தூவி, சந்தனம் அணிவித்து அர்ச்சனை செய்து வழிபட்டு ஆடிப் பாடிக் களிக்கிருர். இல்லறத்தார்போல் கட்டிலில் படுக்கிருர். சிவப்புக்கரை வேட்டியை உடுத்து கிருர். பளபளப்பான செருப்புக்களை அணிகிருர். எனினும், அவர் உலகரீதியில் இல்வாழ்க்கை நடத்தவில்லை. அவருடைய செயல்களும் பாவனைகளும் துறவியைப்போல இருக்கின்றன. அதனுல் மக்கள் அவரைப் பரமஹம்ஸர் என்று அழைக் கின்றனர்.

"கேசவரோ இதற்கு முற்றிலும் மாருக இருக்கிருர். அவர் உருவமற்ற பரம்பொருளை வணங்குகிருர். மனைவி, மக்களோடு மனைவாழ்க்கை நடத்துகிருர். ஆங்கிலத்தில் அரிய சொற்பொழிவுகள் ஆற்றுகிருர். செய்தித்தாள் ஒன்றை நடத்திவருகிருர். பல்வேறு உலகியல் காரியங்களில் ஈடு பட்டிருக்கிருர்." இப்படியாக ம-வின் சிந்தனைகள் விரிந்தன.

கேசவரும் பிரம்மசமாஜ அன்பர்களும் கப்பலில் இருந்த படியே எதிரேயுள்ள காளி கோயிலின் எழிலைப் பருகினர். கிழக்கே செல்லும் படிக்கட்டுகளும், வாயில் மண்டபமும் அவர்கள் கண்களுக்கு அழகாகத் தெரிந்தன. கோயிலின் மதிலும், வாயில் மண்டபத்திற்கு வலது பக்கம் உள்ள ஆறு சிவன் கோயில்களும், இடது பக்கம் உள்ள ஆறு சிவன் கோயில்களும் அவர்கட்குத் தெளிவாகத் தெரிந்தன. பவதாரிணி காளி கோயிலின் மிக உயர்ந்த வெண்மையான

கோபுரமும்,பஞ்சவடியின் வானளாவி வளர்ந்துள்ள மரங்களின் உச்சியும், குளிர்காலத்து நீலவானப் பின்னணியில் அற்புதப் பேரழகோடு பொலிந்து தோன்றின. கோயிலின் இரு வாத்திய மண்டபங்கட்கு நடுவே விளங்கும் மணம் வீசும் மலர்த் தோட்டங்களும், கங்கையின் கரையோரம் வளர்ந்து படர்ந் துள்ள மலர்க்கொடிகளும், வரிசை வரிசையாக உள்ள மலர் மரங்களும் கைதேர்ந்த ஓவியன் வரைந்த கவினுறு சித்திரம் போல் காட்சியளித்தன.

குளிர்கால வானத்தின் தூய நீல நிறம், கங்கையின் வெளிறின மஞ்சள் நீரில் பிரதிபலித்தது. காணும் புறஉலகம் ஆனந்தமயமாகக் காட்சியளித்தது. பிரம்மோ பக்தர்களின் மனம் இந்த இனிய அமைதியில் திளைத்து இன்ப ஊஞ்ச லாடிற்று. மேலே அழகான விரிந்த விண்வெளி! எதிரே தெய்விகம் நிலவும் ஆலயம்! கீழே ஓடும் புனிதமான கங்கை நதி! இதே கங்கைத் துறையில் நம் நாட்டு முனிவர்கள் எத் துணையோ பேர்கள் காலங் காலமாக இறைவனைக் குறித்துத் தவம் செய்து வந்திருக்கின்றனர். உன்னதமான இச் சூழ் நிலையில் ஒரு மகாபுருஷர் தோன்றி வாழ்ந்து வருகிறார். அவரே அழியாத தருமத்தின் உண்மை அவதாரம். இத்தகைய உயர் காட்சியைக் காண, இந்த உத்தம புருஷரைத் தரிசிக்க, மனிதன் எவ்வளவு தவம் செய்திருக்க வேண்டும்! எவ்வளவு புண்ணியம் செய்திருக்க வேண்டும்! இந்த இடத்தில் அந்த மகாபுருஷரைச் சமாதி நிலையில் காணுங்கால், எவருக்குத்தான் பக்தி பெருக்கெடுத்து ஓடாது? எந்தக் கல் நெஞ்சந்தான் கரையாது?

குருதேவர் ஏறியிருந்த படகு நீராவிக் கப்பலை அடைந்தது. கப்பலில் உள்ள அனைவரும் குருதேவரைக் காணப் பரபரப் புடன் ஓடிவந்து மேல்தளத்தில் கூட்டமாக நின்றனர். குரு தேவருக்கு எந்தவிதத் துன்பமும் நேராமல் கப்பலில் ஏற்றக் கேசவர் கவலையோடு முயன்றுகொண்டிருந்தார். அதிகச் சிரமத்தின் பேரில் குருதேவருக்கு வெளியுலக நினைப்பூட்டி, கைத்தாங்கலாகக் கப்பலின் உள்அறைக்கு அழைத்துச் சென்றார் கேசவர். இன்னும் குருதேவருக்கு பாவநிலை கலைய வில்லை. குருதேவரின் கால்கள் மட்டுமே இயந்திரம்போல் நகர்ந்து செயல்பட்டன.

கப்பலில் வசதிமிக்க அறையொன்றிற்குக் குருதேவரை அழைத்துச்சென்றார்கள். கேசவர் முதலான பக்தர்கள்

அவரை வணங்கினர்கள். குருதேவர் எதையும் உணரவில்லை. அறையில் சில நாற்காலிகளும், மேஜைகளும் போடப்பட்டிருந்தன. ஒரு நாற்காலியில் ஸ்ரீராமகிருஷ்ணர் அமர்ந்து கொள்ள, வேறு இரண்டு நாற்காலிகளில் கேசவரும் விஜய கோசுவாமியும் அமர்ந்தனர். இதர அன்பர்கள் தரையில் தங்கள் சௌகரியம் போல் அமர்ந்து கொண்டார்கள். அதிகம் பேருக்கு அறையில் உட்கார்ந்து கொள்ள இடம் போதவில்லை. எனவே அவர்கள் அறைக்கு வெளியே நின்று கொண்டு சன்னல் வழியாக ஆர்வத்தோடு உள்ளே எட்டிப் பார்த்த வண்ணம் நின்றனர். ஸ்ரீராமகிருஷ்ணர் மீண்டும் சமாதியில் மூழ்கிப் புறஉலக நினைவை முற்றிலுமாக இழந்தார். வைத்தகண் வாங்காமல் ஒரே பார்வையாக அனைவரும் குருதேவரை நோக்கியவண்ணம் இருந்தனர். நெருக்கமான கூட்டத்தால் காற்று அடைபட்டு அறை புழுக்கமாக இருந்தது. குருதேவரைப் பார்த்த கேசவர் அறையின் எல்லாச் சன்னல்களையும் திறந்தார். ஒரு சன்னல் அருகே விஜயர் அமர்ந்து கொண்டிருப்பதைக் கண்டு மிகவும் குழப்பமும், சங்கடமும் அடைந்தார். விஜயரும் கேசவரும் ஆரம்ப காலத்தில் ஒரே சமாஜத்தில் அங்கத்தினர்களாக இருந்தவர்கள். கேசவருடைய மகளின் திருமணத்தாலும் இன்னும் சில செயல்களாலும் இருவருக்கும் கருத்து வேறுபாடு தோன்றி, விஜயர் கேசவரின் பிரம்மசமாஜத்தை விட்டுப்பிரிந்து, மற்றொரு பிரம்ம சமாஜத்தில் அப்போது சேர்ந்திருந்தார். பல கூட்டங்களில் கேசவரைத் தாக்கிப் பேசியிருந்தார். ஆகவே அங்கே விஜயரைப் பார்த்ததும் கேசவர் குழப்பமும் சங்கடமும் அடைந்தார்.

பிரம்மோ பக்தர்கள் குருதேவரை மிக்க ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தனர். குருதேவருக்குப் படிப்படியாக உலகநினைவு திரும்பத் தொடங்கியது. தெளிவற்ற குரலில் மெல்லத் தமக்குள் பேசிக் கொண்டார். "தாயே! என்னை ஏன் இங்கு அழைத்து வந்தாய்? இவர்கள் வேலிக்குள் தாமாகவே அடைபட்டிருக்கிறார்கள் என்றால், இவர்களை விடுவிக்க என்னால் முடியுமா என்ன?"

அங்குக் கூடியிருந்த மக்கள் அனைவரும் உலகம் என்னும் வேலிக்குள் அடைபட்டுக்கிடந்ததைச் குருதேவர் தம் கண்களால் கண்டார் போலும். அவர்களின் கைகளும் கால்களும் உலக விவகாரங்களில் கட்டுப்பட்டுக் கிடந்தனவா? இந்த மனிதர்கள் உடலைப் பற்றிய நினைவு, உலக ஆசைகளைப் பற்றிய

நினைவு, பொன், பெண் இவை பற்றிய நினைவு என்ற பல நினைவுப் பித்துக்களைக் கொண்டவர்களாய், அவற்றை அடைவதே தங்கள் வாழ்க்கையின் இலட்சியம் என்று எண்ணி வாழ்ந்து வருபவர்கள். இந்த உலகச் சிறையில் அடைபட்டு வெளியே வர முடியாது திண்டாடும் இவர்களின் பரிதாப நிலை தான் குருதேவரை அன்னை காளியிடம் மேற்கண்டவாறு முறையிடவைத்ததோ, என்னவோ?

குருதேவர் வெளியுலக உணர்வைச் சிறிது சிறிதாகப் பெற்றார். காஜிப்பூரைச் சேர்ந்த நீலமாதவபாபுவும், பிரம்மோ பக்தர் ஒருவரும், பவஹாரிபாபாவைப் பற்றித் தங்களுக்குள் பேசிக் கொண்டிருந்தனர். மற்றொரு பிரம்மோ பக்தர் குருதேவரிடம் அதுபற்றி விளக்கினார். "சுவாமி! இவர்கள் பவஹாரி பாபாவைப் பார்த்துவிட்டு வந்திருக்கிறார்கள். அவர் காஜிப்பூரில் வசிக்கிறார். அவரும் தங்களைப் போல் ஒரு சாது."

குருதேவரால் பேச முடியவில்லை. எனவே புன்னகை பூத்தார். பக்தர் தொடர்ந்து பேசினார். "சுவாமி! பவஹாரிபாபா தங்கள் புகைப்படம் ஒன்றைத் தம் அறையில் வைத்திருக்கிறார்." குருதேவர் தம் உடம்பைக் காட்டிப் புன்னகை புரிந்த வண்ணம் "இந்த உறையையா?" என்றார்.

'தலையணையும் அதன் உறையும்: தலையணை என்பது ஜீவன்; அதாவது உயிர். உறை என்பது வாழும் உடல். உடல் அழிவது; நிலையில்லாதது. உடலுக்குள்ளே இருக்கும் உயிர் அழியாதது. ஆகவே, அழியும் உடலைப் புகைப்படம் பிடிப்பதால் என்ன பயன்? அதன்மீது கவனம் செலுத்துவதால் என்ன இலாபம்? மனிதன் தன் இதயத்திற்குள் மறைந்துநிற்கும் இறைவனைக் காண்பதுதான் சிறப்பு'. குருதேவரின் சிந்தனை இவ்வாறு விரிந்தது போலும்! குருதேவருக்குச் சற்று அதிகமாக உலக உணர்வு திரும்பியது. இப்போது குருதேவர் பேசத்தொடங்கினார்.

"ஆனால் ஒன்று, பக்தனின் உள்ளம் ஆண்டவனின் இருப்பிடம். இதை நீங்கள் உணர வேண்டும். அவர் அனைத்துயிர்களிலும் உறைகின்றார். இதில் ஐயமே இல்லை. ஆயினும் பக்தனின் இதயத்தில்தான் அவர் தம்மை மிக நன்றாக வெளிப்படுத்திக்கொள்ளுகிறார். பரந்த நிலபுலன்களை உடைய ஒரு ஜமீன்தார் தனக்குச் சொந்தமான இடத்தில் எங்குவேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால், மக்கள்

அவரைக் காணவேண்டுமாயின் 'நிச்சயமாக வரவேற்பறையில் காணலாம்' என்று கூறுவார்கள். அதுபோல, பக்தனுடைய மனம் பகவானுடைய வரவேற்பறையாகும். (இதைக் கேட்டு எல்லோரும் ஆனந்தமடைந்தனர்)

"ஞானிகள் யாரைப் பிரம்மம் என்று கூறுகிறார்களோ, யோகிகள் யாரை ஆத்மா என்று அழைக்கிறார்களோ, அவரையே பக்தர்கள் பகவான் என்று அழைக்கிறார்கள்.

"ஒருவன் பூஜை செய்யும்போது அவனைப் பூசாரி என்கிறோம்; சமையல் செய்யும்போது சமையல்காரன் என்கிறோம். ஞானி, ஞானநெறியைப் பின்பற்றி உலகப்பொருட்களில் எது உண்மையானது என்பதைக் கண்டறிய 'இதுவல்ல, இதுவல்ல' என்ற 'நேதி நேதி' முறையைப் பின்பற்றி ஆராய்ச்சி செய்கிறான். 'பிரம்மம் இதுவல்ல, அதுவல்ல, உலகமும் அல்ல, உலகில் உள்ள உயிர்களும் அல்ல.' இவ்வாறு விசாரணை செய்வதால் மனம் உறுதியடைகிறது, தெளிவடைகின்றது. பிறகு அந்த மனம் மறைந்து சமாதிநிலை கிட்டுகிறது. அப்போது பிரம்மஞானம் உதிக்கிறது.

"பிரம்மம் மட்டுமே மெய், பிரபஞ்சம் பொய். காணுகின்ற இவ்வளவு பொருட்களும், இவற்றின் பெயர்களும் கனவு போன்றவை. பிரம்மம் என்னவென்பதை வாயால் விளக்கிச் சொல்லமுடியாது. அதன் வடிவம் என்ன என்பதைக் கூற இயலவே இயலாது. இது ஞானிகளின் கொள்கையாகும்.

"ஆனால், பக்தி நெறியைப் பின்பற்றும் அன்பர்களோ எல்லா நிலைகளையும் ஏற்றுக்கொள்கின்றனர். விழிப்பு நிலையை உண்மை என ஏற்றுக்கொள்ளுகிறார்கள். அவர்கள் இந்த உலகத்தைக் கனவு என்று நினைப்பதில்லை. இவ்வுலகமும், இதில் உள்ள பொருட்களும் இறைவனின் செல்வங்கள் என்று கூறுகின்றனர். வானம், நட்சத்திரம், சந்திரன், சூரியன், மலை, கடல், மனிதர்கள், விலங்குகள் அனைத்தையுமே ஆண்டவன் படைத்திருக்கிறார். இவைகள் யாவும் அவருடைய செல்வங்கள். அவர் நம் இதயத்திற்குள்ளும் இருக்கிறார், வெளியிலும் இருக்கிறார். ஒன்றான அவரே, இருபத்து நான்கு தத்துவங்களாகவும், உயிர்த்தொகுதிகளாகவும், உலகமாகவும் ஆகியுள்ளார் என்று கூறுகின்றனர். பக்தர்கள் சர்க்கரையைச் சுவைக்க விரும்புகிறார்களேயன்றி, சர்க்கரையாக மாற விரும்புவதில்லை. (எல்லோரும் சிரிக்கிறார்கள்)

"பக்தன் கடவுளை எப்படி உணர்ந்துகொள்கிறான் என்பது உங்களுக்குத் தெரியுமா? 'பகவானே! நீ தலைவன், நான் தொண்டன். நீயே என் தாய், என் தந்தை, நான் உன் குழந்தை. நீ முழுமையானவன். நான் உன்னில் ஒரு பகுதி' என்கிறான். நான் பிரம்மம் என்று சொல்வதைப் பக்தன் ஒருநாளும் விரும்புவதில்லை.

"யோகியர் பரமாத்மாவைத் தரிசிக்கப் பாடுபடுகிறார்கள். அவர்களுடைய இலட்சியம் உடம்பில் அடைபட்டுள்ள ஜீவாத்மா, பரமாத்மாவோடு இரண்டறக் கலக்க வேண்டும் என்பதுதான். யோகி உலக நினைவிலிருந்து தன் மனத்தை விடுபடச் செய்து பரமாத்மாவில் நிலைக்கச்செய்ய முயலுகிறான். அதனால் தன்னுடைய சாதனையின் ஆரம்ப காலத்தில் தனிமையான இடத்திற்குச் சென்று அசைவில்லாத ஓர் ஆசனத்தில் அமர்ந்து மனத்தை மற்ற எண்ணங்களிலிருந்து விடுவித்து, தியானம் பழகுகிறான்.

"ஆனால், என்றுமுள்ள பொருள் ஒன்றுதான். பெயரளவில் தான் வேற்றுமை. எது பிரம்மமோ அதுவே ஆத்மா, அதுவே பகவான். ஞானியின் பிரம்மம், யோகியின் பரமாத்மா, பக்தனின் பகவான் எல்லாமே ஒன்றுதான்."

கப்பல் கல்கத்தாவை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர்மீது வைத்த கண் வாங்காமல் அவரையே நோக்கியபடி, அவருடைய சொல்லமுதத்தைப் பருகிக் கொண்டிருந்த பக்தர்களுக்குக் கப்பலின் இயக்கம் பற்றிய நினைவே இல்லை. மலரில் அமர்ந்த தேனீ, தேனை மறந்துவிட்டு வேறு நினைவுகளில் மனத்தைத் திருப்புமா? கப்பல் இப்போது தட்சிணேசுவரத்தைக் கடந்துசென்றது. ஆலயத்தின் அழகான காட்சியும், மலர்த்தோட்டங்களும் கண் பார்வையிலிருந்து படிப்படியாக மறைந்துசென்றன. கப்பலின் துடுப்புகள் கங்கை நீரைத் துழாவும் ஓசை பெரிதாகக் கேட்டது. இந்த ஓசைகூடப் பக்தர்களின் காதுகளில் விழவில்லை. இவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஒரு நினைவில் சூழ்நிலையை மறந்திருந்தனர், ஆனந்தத்தில் மூழ்கியிருந்தனர். தெய்விகப் புன்சிரிப்பால் ஒளிகெழுமிய முகமும், ஆனந்தம் சுடர்விடும் கண்களும், அன்புப் பழம் எனத்தகும் தோற்றமும் கொண்ட ஸ்ரீராமகிருஷ்ண யோகியை, கடவுளுக்காக அனைத்தையும் துறந்து, இறைவனையன்றி வேறு எதையும் அறியாத, அந்தப் புனிதமே வடிவெடுத்த பரமஹம்சரைப்

பார்த்தபடி அசைவற்றிருந்தனர். எவ்விதத் தடையின்றி ஞான மொழிகள் குருதேவருடைய இதழ்களிலிருந்து அமுதவெள்ளம் போல் பெருக்கெடுத்து வரலாயின. குருதேவர் தொடர்ந்து பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய செயல்கள், உலகம், அதில் வாழும் ஜீவராசிகள், இவை எல்லாம் சக்தியின் விளையாட்டு (மாயை) என்று வேதாந்த மார்க்கத்தில் செல்லும் ஞானிகள் கூறுகிறார்கள். இவைகளை நாம் ஆராய்ந்து பார்க்கும்போது நமக்கு இத் தோற்றங்களெல்லாம் கனவு போன்றவையே என்பது நன்குப் புலனாகிவிடும். பிரம்மம் ஒன்றே நிலையான பொருள்; மற்றவையெல்லாம் பொருளல்ல. சக்தியும் கனவைப்போல் பொருளற்றதுதான். நீ ஆயிரம் தடவை விசாரம் (ஆராய்ச்சி) செய்தாலும் சமாதிநிலையை அடையும்வரை உன்னால் சக்தியின் எல்லையை விட்டு விலகி வெளியேவர முடியாது. நான் தியானம் செய்கிறேன், நான் சிந்தனை செய்கிறேன் என்பனகூடச் சக்தியின் எல்லைக்கு உட்பட்டவையே. ஆகவே, பிரம்மமும், சக்தியும் வேறல்ல. ஒன்றை ஏற்றுக்கொண்டால் மற்றொன்றையும் ஏற்றேயாக வேண்டும். நெருப்பும் அதன் சூட்டையும்போல. நெருப்பை ஏற்றுக்கொண்டால் அதன் வெப்பத் தன்மையையும் ஏற்றுக்கொள்ளவேண்டும். சூட்டை விட்டுவிட்டு நெருப்பை நினைக்க முடியாது. நெருப்பை விட்டுவிட்டு அதன் சூட்டை நினைக்க முடியாது. கதிர்களை நினைக்காமல் சூரியனையோ, சூரியனை விட்டுவிட்டுக் கதிர்களையோ நினைக்க முடியாது.

"பால் எப்படியிருக்கிறது என்று கேட்டால், 'ஓ! அது வெண்மையாக இருக்கிறது' என்பீர்கள். பாலின் வெண்மை நிறத்தை விட்டுவிட்டுப் பாலை நினைக்க முடிவதில்லை. அது போல் பாலை விட்டுவிட்டு அதன் வெண்மை நிறத்தை மட்டும் நினைக்கமுடியாது. இதுபோன்றே பிரம்மத்தை விட்டுவிட்டுச் சக்தியையோ, சக்தியை விட்டுவிட்டுப் பிரம்மத்தையோ நினைக்கஇயலாது. நிலையாக இருப்பதை விட்டுவிட்டு இயங்குவதை மட்டுமோ அல்லது இயங்குவதை விட்டுவிட்டு நிலையானதை மட்டுமோ நினைக்கமுடியாது.

"சக்தி இயங்குபவள். அசைவே இயல்பானவள். ஆட்டமே அவள் தொழில். அவள் படைக்கிறாள், காக்கிறாள், அழிக்கிறாள். முத்தொழில் புரியும் அவளுடைய

பெயர்தான் காளி. காளிதான் பிரம்மம், பிரம்மமே காளி. இரண்டும் ஒன்றே. ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய வற்றைச் செய்யாமல் தன்னைத்தானே அனுபவித்துக்கொண்டு செயலற்று இருக்கும்போது, அதைப் பிரம்மம் என்கிறோம். படைத்தல் முதலான தொழில்களைச் செய்யும்பொழுது அதே பிரம்மத்தைச் சக்தி என்கிறோம்; காளி என்று அழைக்கிறோம். அவ்வளவே வித்தியாசம். உள்ளது ஒன்றுதான். பெயராலும் வடிவாலும் பிரம்மம் பலவாகத் தோன்றுகிறது.

"தண்ணீர் ஒரு பொருள்தான். அதை ஜலம், பானி என்று பல்வேறு மொழிகளில் பல்வேறு பெயர்களினால் அழைக்கிறோம். பிரம்மமும் இது போன்றதுதான். ஒரு குளத்துக்கு நான்கு படித்துறைகள். ஒரு துறையில் இந்துக்கள் நீர் அருந்துகிறார்கள். அவர்கள் அதைத் 'தண்ணீர்' என்று அழைக்கிறார்கள். மற்றொரு படித்துறையில் முகம்மதியர்கள் நீர் அருந்துகிறார்கள். அவர்கள் அதைப் 'பானி' என்கிறார்கள். இன்னொரு துறையில் ஆங்கிலேயர்கள் நீர் அருந்துகிறார்கள். அவர்கள் அதை 'வாட்டர்' என்று கூறுகிறார்கள். மூன்று பெயர்களும் ஒரே பொருளைத்தான் குறிக்கின்றன. அழைக்கும் சொல்லில்தான் வேறுபாடு. இறைவனைச் சிலர் 'அல்லா' என்கிறார்கள். இன்னும் சிலர் 'காட்' (God) என்கின்றனர். வேறு சிலர் 'பிரம்மம்' என்கிறார்கள். இன்னும் சிலர் காளி, இராமர், ஹரி, ஏசு, துர்க்கை என்று பலவாறான நாமங்களால் அழைக்கின்றனர்."

கேசவர்: (புன்முறுவலுடன்) "சுவாமி! காளி எத்தனை வடிவங்கள் எடுத்து இந்த உலகில் லீலை புரிகிறாள்? இதை எங்களுக்குத் தெளிவாகச் சொல்லுங்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : (புன்னகையோடு) "ஆமாம், ஆமாம்! அவள் பல்வேறு உருவங்களில் லீலை புரிகிறாள். **மகாகாளி, நித்யகாளி, ஸ்மசானகாளி, ரக்ஷாகாளி, சியாமாகாளி** என்று பல நாமங்களில், பல உருவங்களில் அன்னை தன் காரியத்தை நடத்துகிறாள். மகாகாளி, நித்யகாளி பற்றிய செய்திகளைத் தந்திர சாஸ்திரங்களில் விரிவாகக் காணலாம். படைப்புத் தொழில் தொடங்காத காலத்தில், சூரியன் சந்திரன், அண்டங்கள், பூமி முதலானவை தோன்றாமல், எங்கும் ஒரே இருள்மயமாக இருந்த காலத்தில் அன்னை மட்டும் உருவமின்றி மகாகாளியாக—மகாகாலனுடன் விளங்குகிறாள்.

**சியாமா காளியின்** வடிவம் கருணையும் சாந்தமும் கூடியது. இவளை இல்லங்களில் வைத்துப் பூஜிப்பார்கள். இவள் வரம் அளிப்பவள்; அச்சமெல்லாம் களைபவள்.

**ரக்ஷா காளி** மக்களைக் காப்பாற்றும் சக்தி. பஞ்சம், தொற்று நோய், வெள்ளம், பூகம்பம் முதலிய துயர காலங்களில் இவளை மக்கள் வணங்குவார்கள்.

**ஸ்மசான காளி** அழிக்கும் சக்தியின் வடிவம். பிணம், கழுகு, ஓநாய்கள், பயங்கரமான பெண்பிசாசுகள் முதலியவை சூழச் சுடுகாட்டில் திரிபவள். அவளுடைய வாயிலிருந்து இரத்தம் வெள்ளம் போல் பெருக்கெடுத்து வெளியே பாய்ந்துகொண் டிருக்கும்; அவளுடைய கழுத்தில் வெட்டப்பட்ட மனிதத் தலைகள் மாலையாகத் தொங்கும். அவளுடைய இடையைச் சுற்றி வெட்டப்பட்ட மனிதக் கைகால்கள் மாலையாகக் கோத்து அணியப்பெற்றிருக்கும்.

"அண்ட சராசரங்கள் அனைத்தும் பிரளயத்தில் அழிந்த பிறகு அடுத்த படைப்புக்கு வேண்டிய விதைகளை இவள்தான் சேகரித்து வைக்கிறாள். குடும்பத்தின் வயது முதிர்ந்த எஜமானி போன்றவள் இவள்." (கேசவரும் மற்றவரும் சிரிக்கின்றனர்)

குருதேவரும்: (சிரித்துக்கொண்டே) "ஆமாம். அப்படித் தான். வீட்டுக் கிழவியிடம் பொதுவாக இப்படி ஒரு பானை இருக்கும். கடல்நுரை, நீல மாத்திரைகள், சுரை, வெள்ளரி, பூசணி விதைகள் ஆகியவற்றைத் துணியில் சிறுசிறு முடிச்சுக்களாக முடிந்து, அந்தப் பானையில் போட்டு வைத்திருப் பாள். தேவைப்படும் போது அவைகளை வெளியே எடுக்கிறாள். இதுபோலவே அண்ட சராசரங்கள் அனைத்தும் பிரளயத்தில் அழிந்த பின்னர், பிரம்மத்தின் வடிவாக – பிரம்மமயியாக விளங்கும் என் அன்னை காளியும் அடுத்த படைப்பிற்கான விதைகளைச் சேகரித்து வைக்கிறாள். படைப்பிற்குப் பிறகு ஆத்யாசக்தி தான் படைத்த அந்த உலகத்திற்குள்ளேயே தங்குகிறாள்.

"இந்த உலகத்தை அவளே ஈன்றெடுக்கிறாள், அவளே அதற்குள்ளும் உறைகிறாள். வேதம் காளியின் இந்த உலகப் படைப்பைச் சிலந்தியோடும், அது பின்னுகிற வலை யோடும் ஒப்பிட்டுக் கூறுகிறது. சிலந்தி தனக்குள்ளிருந்து நூலைத் தோற்றுவித்து ஒரு பெரிய வலையைப் பின்னுகிறது. பிறகு

தான் உண்டாக்கிய அந்த வலைக்குள்ளேயே தங்கி அது வாழ்கிறது. கடவுள் உலகத்தைத் தாங்குபவராகவும் இருக்கிறார். அதே நேரத்தில் உலகத்தால் தாங்கப்படுபவராகவும் இருக்கிறார்.

"என் அன்னை காளியின் நிறம் உண்மையில் கருப்பாகவா இருக்கிறது? நெடுந்தொலைவிலிருந்து பார்க்கப்படுவதால் அவள் கருப்பாகத் தோன்றுகிறாள். அவளை மிக மிக நெருங்கிப் பார்க்கும் போது அவளுக்கு நிறமே இல்லாதது தெரியும். தொலைவிலிருந்து பார்க்கும்போது வானம் நீலவண்ணமாகத் தெரிகிறது. மிக அருகில் சென்றுபார். அதற்கு நிறமே இல்லாததைக் காண்பாய். தொலைவிலிருந்து பார்க்கும்போது கடல் நீரும் நீலமாகத்தான் காட்சி தருகின்றது. அருகில் சென்று கையில் எடுத்துப்பார்த்தால் அந் நீருக்கு நிறமே இல்லை."

இவ்வாறு கூறிய குருதேவர் தெய்விகப் பித்துப்பிடித்தவராய்ப் பாடத்தொடங்கினார்.

என்னை ஆளும் அன்னை காளியின்
உருவம் கருப்போ? உண்மையும் அதுவோ?
கன்னங் கரியவள், கௌரி, திகம்பரி,
உள்ளக் கமலம் ஒளிபெறும் பொருட்டுத்
திருவிளக் கேற்றும் தெய்வமும் அவளே.

குருதேவர் மீண்டும் பேசத் தொடங்கி... உலகினோடு நம்மைப் பிணிக்கும் பந்தமும், அதை வி... தோன்றும் முக்தியும் ஆகிய இரண்டையும் படைத்தவ... காளி. அவளுடைய மாயையால்தான் உலகப்பற்றுடைய மக்கள் மேலும், மேலும் காமினி காஞ்சன, ஆசைகளில் மூழ்குகிறார்கள். அவளுடைய கருணையினாலேயே மறுபடியும் அவர்கள் அவற்றிலிருந்து விடுபடுகிறார்கள். அன்னையே பாசபந்தங்களை அறுத்தெறிகிறாள். அவளே காப்பாற்றுகிறாள்." இவ்வாறு கூறிக்கொண்டே கந்தர்வர்களின் குரலையும் பழிக்கும் இனிய குரலில் குருதேவர் இராமப்பிரசாதரின் பாட்டைப் பாடலானார்.

பட்டம் பறக்க விடுகின்றாய் பவசம் சாரச் சந்தையிலே;
திட்டம் தீட்டி அற்புதமாய்த் தேவி, லீலை புரிகின்றாய்!

நரம்பும், எலும்பும் கூடாக்கி நயமாய் மாயை நூல்கோத்து,
விரும்பும் ஆசைக் காற்றினிலே விடுவாய் பட்டம் பலகோடி!

சாந்தம், வீரம், சோம்பலெனச் சாற்றும் குணங்கள் மூன்றினையும்
ஏந்தி இணைப்பாய், பகட்டாக இழைப்பாய், பட்டம் எழிலுறவே!

மையல் என்னும் மாஞ்சாவை வழித்துப் பூசி முறுக்கேற்றிக்
கையில் பிடித்த காற்றாடிக் கயிற்றில் கடுமை சேர்க்கின்றாய்!

விண்ணில் மிதக்கும் பட்டத்தில் ஒன்றோ இரண்டோ விடுபட்டால்
கண்ணிற் கண்டு கைகொட்டிக் காளி நீயும் சிரிக்கின்றாய்!

அறுந்து செல்லும் காற்றாடி அன்புத் தென்றல் மீதூர்ந்து
பிறந்தபிறவிக் கடல்தாண்டிப் பேரா னந்த நிலைபெறுமே!

குருதேவர் தொடர்ந்து பேசினார்: "அன்னை காளி லீலை மயமானவள். அண்ட சராசரங்களின் ஆக்கம் அவள் திரு விளையாட்டு. எண்ணியதை இயற்றுபவள் அவள், இச்சை மயமானவள், ஆனந்த மயமானவள்! எப்போதும் தன் வழியிலேயே காரியங்களை நடத்திச் செல்பவள். இலட்சக் கணக்கான மக்களில் யாரோ ஒருவருக்குத்தான் அவள் முக்தியை அருளுகிறாள்."

ஏம்மோ பக்தர்: "ஐயா, அவள் விரும்பினால் ...ம முக்தி அளித்துவிட முடியும் அல்லவா? ... நம்மையெல்லாம் அவள் சம்சார பந்தத்தில் ...ருப்பது ஏன்?"

...கிருஷ்ணர்: "அது அவளுடைய விருப்பம். தான் ...த்த படைப்புக்களோடு அவள் தொடர்ந்து விளையாட விரும்புகிறாள். தொட்டு விளையாடும் கண்ணாமூச்சி ஆட்டத்தில் கண்ணை மூடிவிடும் தாய்ச்சியை ஒரு குழந்தை தொட்டு விட்டால் விளையாட்டு எப்படித் தொடர்ந்து நடக்கும்? அப்படித் தொட்டுவிடுவது அந்தத் தாய்க்கு எரிச்சலைத் தரும். விளையாட்டு தொடர்ந்து நடப்பதில்தான் அவளுக்கு மகிழ்ச்சி. அதனால்தான் இராமப்பிரசாதர்—

விண்ணில் மிதக்கும் பட்டத்தில் ஒன்றோ இரண்டோ விடுபட்டால்
கண்ணிற் கண்டு கைகொட்டிக் காளி நீயும் சிரிக்கின்றாய்!

என்று பாடுகிறார். (எல்லோரும் கேட்டு எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தனர்.)

"அன்னை மனத்திடம் இரகசியமாகக் கண்சிமிட்டி, 'போ! போய் உலகத்தை அனுபவி' என்று கூறுகிறாள். மனம் உலக இன்பத்திற்கு வருகிறது. எனவே, மனத்தைக் குறைகூறி என்ன பயன்? அவளே அருள் கூர்ந்து உலகப் பொருட்களிலிருந்து மனத்தை விடுவித்தால், மனம் அப் பற்றுக்களிலிருந்து விடுதலை பெறுகிறது. அதன் பிறகுதான் மனம், கடவுளின் தாமரைத் திருவடிகளை நாடிச் செல்கிறது."

உலகில் உள்ள இல்லறத்தார் அனைவருடைய உள்ளக் குமுறல்களைத் தம்மிடம் வாரிவைத்துக் கொண்டவர்போல் அன்னையிடம் எல்லையில்லா வருத்தத்தோடு குருதேவர் முறையிட்டுப் பாடத்தொடங்கினார்:

அன்னைநீ அருகே நிற்க அடியனேன் விழித்தி ருக்க
என்மனை நுழைந்தார் கள்வர் இடர்தரத் துணிந்தார் அந்தோ!

நின்பெயர் துதிக்கும் ஆசை நெஞ்சிலே இருந்தும், ஏனோ
பன்முறை நழுவ விட்டேன்? பதமலர் மறந்து நின்றேன்!

மறதியும், பிழையும், என்னை வருத்திய திருட்டும் எல்லாம்
இறைவிநின் சூழ்ச்சி என்னும் உண்மையை இன்று கண்டேன்!

தந்திர வலையை வீசித் தமியனைத் திகைக்க வைத்தாய்!
அந்தரி, உணர்ந்தேன்; உன்றன் ஆடலை அறிந்து கொண்டேன்!

கொடுத்திலை; அதனால் நானும் கொடுத்திலன்; உணவு நாடிப்
படைத்திலை; எனவே ஏழை படைத்திட அடிசில் உண்டோ?

நினைவுறும் இன்ப துன்பம், நெடும்பழி, இனிய கீர்த்தி,
எனமுரண் எய்தி நிற்கும் இயல்பெலாம் உனக்கே சொந்தம்!

ஆயினும் தாயே நீதான் அவனியில் பேதம் செய்யும்
மாயமும் ஏதோ? உன்தன் திருவிளை யாடல் மாண்போ?

முன்னமே நன்மை தீமை அளவினை முடிவு பண்ணி
என்மனம் அமைத்தாய்; உன்றன் இச்சைபோல் அச்சில் வார்த்தாய்!

அருள்விழிச் சாடை காட்டி அனுமதி அளித்தாய்; நீபோய்
இருநில இன்ப மெல்லாம் அனுபவித் திடுக என்றாய்!

ஆகவே பவசம் சாரம் ஆகிடும் உருளை சிக்கி
வேகமாய்ச் சுழலு கின்றேன்; மீளவும் வழியைக் காணேன்!

பொய்யினை மெய்ம்மை என்றும் நஞ்சினைப் புதுத்தேன் என்றும்
மையலில் மயங்கி வீழ்ந்து வாழ்விலாப் பேதை ஆனேன்!

பிறகு குருதேவர் பேசத் தொடங்கினர் : "மனிதர்கள் அன்னையின் மாயையில் மயங்கி, சம்சாரிகளாக ஆகியுள்ளனர். இதைத்தான் இராமப்பிரசாதர் பின்வருமாறு பாடினர். 'தாயே! எனக்கு நீ இந்த மனத்தை அளித்திருக்கிருய். உண்மை தான். ஆனல், அதே நேரத்தில் குறும்பாகக் கண்சிமிட்டி நீ போய் இந்த உலகத்தை நன்ருக அனுபவித்துவிட்டு வா' என்றும் கூறியிருக்கிருய்."

பிரம்மோ பக்தர்கள் : "ஐயா! முற்றும் துறக்காமலே இறைவனை அடைய முடியாதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : (சிரித்துக் கொண்டே) "அடைய முடியும். எல்லாவற்றையும் துறக்கவேண்டிய அவசியம் ஏது? நீங்கள் இப்போது இருக்கும் இந்த நிலையே போதுமானது. அதாவது கட்டி வெல்லமாகவும் இல்லாமல், கரைத்த வெல்லமாகவும் இல்லாமல், கொஞ்சம் கட்டி, கொஞ்சம் நீர் சேர்ந்த வெல்லப்பாகாக இருக்கிறீர்கள். நீங்கள் இப்படியே இருங்கள். (எல்லோரும் சிரிக்கிருர்கள்)

"நஸ்கா என்னும் சீட்டாட்டம் ஒன்று உண்டு. உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். அதில் யார் அதிக எண்ணிக்கை எடுக்கிருர்களோ, அவர்களை ஆட்டத்திலிருந்து விலக்கிவிடுவார்கள். நான் முதலிலேயே அதிக எண்ணிக்கை எடுத்து ஆட்டத்திலிருந்து விலகிவிட்டேன். அதனல் விளையாட்டை ரசிக்க முடியவில்லை. நீங்கள் மிகவும் புத்திசாலிகள். பத்து சீட்டிலும், ஆறு சீட்டிலும், ஐந்து சீட்டிலுமாகவே இருந்துகொண்டு இருக்கிறீர்கள். ஆட்டத்திற்குள் இருப்பதற்கு எத்தனை சீட்டுக்கள் வேண்டுமோ அவ்வளவே வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். என்னைப்போல் ஆட்டத்தைவிட்டு நீங்கள் வெளியே வரவில்லை. உங்கள் ஆட்டம் நடந்து கொண்டே இருக்கிறது. மிக நன்ருக ஆடிக்கொண்டு இருக்கிறீர்கள். (எல்லோரும் சிரிக்கிருர்கள்)

"உண்மையாகத்தான் சொல்லுகிறேன். நீங்கள் உலக வாழ்க்கை நடத்துவதில் தவறேதும் இல்லை. ஆனல் ஒன்று, உள்ளத்தை ஆண்டவன்பால் திருப்பவேண்டும். அதுவே நீங்கள் செய்யவேண்டியது. இல்லாவிடில், வாழ்வதில் பயன் ஏதுமில்லை. ஒரு கையால் உலகக் கடமைகளைச் செய்து கொண்டு வாருங்கள். மற்ருெரு கையால் கடவுளை நன்ருகப்

பற்றிக் கொள்ளுங்கள். உங்கள் உலகக் கடமைகள் முடிந்ததும் இரண்டு கைகளாலும் இறைவனைப் பிடித்துக் கொள்ளுங்கள்.

"எல்லாமே மனத்தைப் பொறுத்ததுதான். பந்தம் என்பதும் மனத்தினுடையதே. விடுதலை என்பதும் மனத்தினுடையதே. மனம் வண்ணானிடத்திலிருந்து வெளுத்து வந்திருக்கிற நல்ல வெள்ளைத் துணியைப் போன்றது என்பேன். எந்தச் சாயத்தில் அதைத் தோய்த்து எடுக்கிறோமோ அந்த நிறமாக அது மாறுகிறது. சிவப்புச் சாயத்தில் தோய்த்தால் சிவப்பாகி விடுகிறது. நீலச் சாயத்தில் தோய்த்தால் நீலம். பச்சையில் தோய்த்தால் பச்சை. நீ எந்தச் சாயத்தில் தோய்க்கிறாயோ அந்த நிறம் துணிக்கு வந்துவிடுகிறது. அதுபோலத்தான் மனமும். நீங்கள் கவனித்துப்பார்ப்பதில்லை. ஒருவன் கொஞ்சம் ஆங்கிலம் படித்துவிட்டால் போதும். உடனே 'பட், பாட், இட், மாட்' என்று பேச ஆரம்பித்து விடுகிறான். (எல்லோரும் சிரிக்கிறார்கள்) அதோடு விட்டானா! காலில் பூட்ஸ் அணிவது, வாயில் ஓர் ஆங்கிலப் பாட்டைச் சீட்டி அடிப்பது, இப்படி ஒன்றன்பின் ஒன்றாக எல்லாமே வந்துவிடுகின்றன. இது போலவே ஒரு சம்ஸ்கிருத பண்டிதர் எதற்கும் வடமொழிச் சுலோகங்களைச் சொல்ல ஆரம்பித்துவிடுகிறார். நீ கெட்டவர் களோடு சேர்ந்திருந்தால் அந்தச் சகவாசத்தினால் அவர்களைப் போலவே கெட்டதைப் பேசவும், செய்யவும் தொடங்கிவிடு கிறாய். நல்லவர்களோடு, மெய்யன்பர்களோடு பழக ஆரம் பித்தால், ஆண்டவனை எண்ணுவதும் அவனுடைய திரு நாமத்தை உச்சரிப்பதும் எளிதாகி விடுகின்றன.

"மனிதனுக்கு உள்ளம்தான் எல்லாம். அவன் ஒரு பக்கத்தில் உள்ள தன் மனைவி, இன்னொரு பக்கத்தில் உள்ள தன் மகள் ஆகிய இருவரிடமும் இரண்டு விதமான அன்பைச் செலுத்துகிறான். ஆனால், அவனிடம் உள்ளதோ ஒரு மனம் தான்.

"பந்தத்தை உண்டுபண்ணுவதும், அப்பந்தத்தை அகற்றி விடுதலை அளிப்பதும் மனம்தான். ஒருவன் உறுதியாக எப்போதும் 'நான் விடுதலை பெற்றவன். இல்லறத்தில் வாழ்ந்தா லும் சரி, துறவியாகக் காட்டில் இருந்தாலும் சரி, நான் விடு தலை பெற்றவன். பந்தத்தை அறுத்தவன். நான் ஈசுவரனின் குழந்தை. யார் என்னைக் கட்டுப்படுத்த முடியும்?' என்று நினைத் துக் கொண்டிருந்தாலே போதும். விடுதலை பெற்றுவிடுவான்.

“பாம்பு ஒருவனைக் கடிக்கிறது. அவன் மிக மிக உறுதியாக, ‘என் உடம்பில் விஷம் ஏருது, ஏறவே ஏருது என்று நினைப்பானேயானால், உடம்பில் விஷம் ஏறி இருந்தாலும் இறங்கிவிடும். அதுபோல மிகுந்த மன உறுதியோடு ஒருவன் ‘நான் விடுபட்டவன், கட்டுண்டவன் அல்ல, விடுபட்டவனே’ என்று உறுதியாகத் திரும்பத் திரும்பக் கூறுவானுயின், அவன் உண்மையில் விடுபட்டு முக்தனுகி விடுகிருன்.

“ஒருநாள் கிருத்துவர்களின் பைபிள் ஒன்றை யாரோ ஒருவர் என்னிடம் கொடுத்தார். நான் அதை ஒருவரிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னேன். பாவம், பாவம் என்ற வார்த்தைகளைத் தவிர அதில் வேறு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. (கேசவரிடம்) உங்களுடைய பிரம்ம சமாஜத்தில்கூடப் பாவம், பாவம் என்ற பேச்சுதான். எவன் நான் பந்தப்பட்டவன், நான் பந்தப்பட்டவன் என்று சொல்லி வருகிருனே அவன் உண்மையில் பந்தப்பட்டவனுகவே ஆகி விடுகிருன். நான் பாவி, பாவி என்று இடைவிடாமல் ஒருவன் சொல்லிக்கொண்டுவந்தால் அவன் நிச்சயம் பாவியாகவே ஆகிவிடுகிருன்.

“பகவானுடைய நாமத்தில் தீவிர நம்பிக்கை வேண்டும். ‘நான் கடவுளுடைய பெயரைத் திரும்பத் திரும்பச் சொல்லுகிறேன். என்னிடம் இன்னமும் பாவம் எப்படி இருக்கமுடியும்? நான் எப்படிப் பந்தத்தில் சிக்கமுடியும்?’ என்று எண்ணுகிற உறுதியான நம்பிக்கை நமக்கு வரவேண்டும்.

“கிருஷ்ணகிஷோர் தீவிரமான, கண்டிப்பான, ஆசாரசீலர். வைதிகப் பிராமணர். அவர் ஒருமுறை பிருந்தாவனம் சென்றிருந்தார். ஒருநாள் அங்கும் இங்கும் அலைந்து திரிந்ததால் அவருக்கு மிகுந்த தாகம் எடுத்தது. ஒரு கிணற்றருகே சென்ருர். அங்கே ஒருவன் நின்றுகொண்டிருந்தான். அவனிடம் ‘எனக்குத் தாகமாயிருக்கிறது. ஒரு செம்புத் தண்ணீர் கொடுக்க முடியுமா?’ என்று கேட்டார். அதற்கு அவன், ‘ஐயா! நான் தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவன். சக்கிலியன் ஆயிற்றே?’ என்ருன். அதற்குக் கிருஷ்ணகிஷோர், ‘பரவாயில்லை. நீ ‘சிவா, சிவா’ என்று ஒரு முறை சொல். பிறகு எனக்குத் தண்ணீர் இறைத்துக்கொடு” என்ருர்.

“இறைவனுடைய நாமத்தை இடைவிடாது உச்சரித்தால் மனிதனுடைய மனம், உடல் எல்லாமே பரிசுத்தமாகின்றன.

"ஒருவன் ஏன் பாவம், நரகம் என்ற வார்த்தைகளையே எப்போதும் பேச வேண்டும்? 'இறைவா! தீய செயல்களை நான் புரிந்தது உண்மைதான். ஆனால், இனிமேல் அவற்றை மறந்தும் நான் செய்ய மாட்டேன்' என்று ஒருமுறை சொன்னாலே போதும். இறைவனது நாமத்தில் எல்லையில்லாத நம்பிக்கை வையுங்கள்."

பிரேமைப் பித்துப் பிடித்தவராகக் குருதேவர் இறைவனுடைய நாம மகிமையைக் குறித்துப் பாடத் தொடங்கினார்:

"தேவி,நின் பெயரைக் காளிமா காளி
என்றுநான் செப்பிய வண்ணம்
ஆவியை விடுத்தால், ஏழையேன் என்னை
அணுகுமோ தீவினைக் கூட்டம்?

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நான் அன்னை காளியிடம் தூய்மையான பக்தியை மட்டுமே வேண்டிப் பிரார்த்தனை செய்தேன். அவளுடைய திருவடித்தாமரைகளில் மலர்களை இட்டு, 'தாயே, இதோ இருக்கிறது நீ படைத்த புண்ணியம், இதோ நீ ஆக்கிய பாவம், இந்த இரண்டையும் நீ எடுத்துக் கொள். எனக்குத் தூய பக்தியை மட்டும் கொடு இதோ உன் ஞானம், இதோ உன் அஞ்ஞானம் இந்த இரண்டையுமே நீ எடுத்துக் கொள். அதற்குப் பதிலாக உன் திருவடிகளில் எனக்குத் தூய்மையான பக்தியை மட்டும் கொடு. இதோ உன் தூய்மை, இதோ உன் மாசு, இவை இரண்டையும் எடுத்துக்கொள். அவற்றிற்குப் பதிலாக உன் திருவடிகளை வணங்கும் தூய பக்தியை மட்டும் கொடு இதோ உன் தர்மம், இதோ உன் அதர்மம் இரண்டையும் எடுத்துக்கொள். உன் கமலப் பாதங்களைப் பணியும் தூய பக்தியை மட்டும் பதிலாகக் கொடு' என்றெல்லாம் வேண்டினேன்.

(ஒரு பிரம்மோ பக்தரிடம்) இராமப்பிரசாதர் பாடிய பாட்டொன்றைப் பாடுகிறேன் கேள்—

மனமே,வா காளியெனும் கற்பகத்தின் கீழே
மதுர நிழற் குளுமையிலே உலவிவரச் செல்வோம்;
கனிநான்கு கண்டெடுப்போம்; நல்லறமும் பொருளும்
காதல்வழி இல்வாழ்வும் பரகதியும் பெறுவோம்!

பாருலகில் மனைவியர்கள் உனக்கிருவர் வாய்த்தார்!
பற்றுடைமை என ஒருத்தி! பற்றின்மை என்னும்
சீருடையாள் மற்றொருத்தி; விவேகம்எனப் போற்றும்
செல்வமகன் ஒருவனையும் ஈன்றெடுத்த நல்லாள்!

அன்னவளைத் துணையாக நீஅழைத்துக் கொள்வாய்;
அருமைமகன் உரிமையுடன் பின்தொடர்ந்து வருவான்!
இன்னமுதக் கற்பகத்தின் ஏரார்ந்த நிழலில்
இருள்நீக்கும் தத்துவங்கள் அவனறியச் சொல்வாய்!

தூய்மைஒரு புறமாக, மாசுமறு புறமாய்த்
துரிவெளி மனையில்நீ துயிலுவதும் என்றோ?
ஆயஇரு துணைவியரை ஒருங்கிணைய வைக்கும்
அந்நாளே அம்பிகையை நீஅடையும் நாளாம்!

அறியாமை, அகங்காரம் எனும்அன்னை தந்தை
அணுகாமல் தடைசெய்து விரட்டுகஎன் மனமே;
உறவாடி மோகம்உனைப் படுகுழியில் சாய்த்தால்
உறுதியெனும் கம்பத்தை நீபிடித்துக் கொள்வாய்!

நல்வினை, தீ வினையென்னும் ஆடுகளைக் கட்டி
நகராமல் துச்சமெனும் சிறுதூணில் சேர்ப்பாய்!
சொல்லும்உரை கேளாமல் துள்ளிஎதிர் வந்தால்
சுடர்ஞான வாள்வீசிப் பலியாக்கி விடுவாய்!

பற்றுடைமை என்கின்ற முதல்மனைவி ஈன்று
பயிலுவித்த மைந்தர்களை 'ஒழிக'வெனச் சொல்வாய்!
மற்றுனது கட்டளையை மதியாமல் நின்றால்
வளர்ஞான நதியினிலே வாரியெடுத் தெறிவாய்!

என்விருப்பம் இத்தனையும் நிறைவேற்றி வைத்தால்
இறுதியிலே காலனையும் ஏறெடுத்துப் பார்ப்பாய்!
நன்மதிப்பும் எதிர்காலச் சந்ததியார் கூறும்
நல்வாழ்த்தும் நீபெறுவாய் நானும்உனைப் புகழ்வேன்!

"குடும்ப வாழ்வில் இருந்துகொண்டே ஒருவர் கடவுளைக் காணமுடியாதா என்ன? ஜனகர் அவ்வாறு இல்லறநெறி நின்று வாழ்ந்து காட்டிக் கடவுட் காட்சியைப் பெற்றிருக்கிறார். இராமப் பிரசாதர் இந்த உலகை 'வெறும் மாய மாளிகை' என்று தம் பாட்டில் குறித்திருக்கிறார். ஆனால், இறைவனுடைய புனிதமான பாதங்களில் அன்புவைக்கும் போது, பக்தி பூணும் போது, உலகம் 'ஆனந்த மாளிகை' யாகிவிடுகிறது.

"இந்த மாளிகையில் உண்டு உறங்கி இன்புறுகிறேன் என்றார் ஜனகர். ஜனகரின் ஆற்றல் அளவு கடந்தது! உலக வாழ்விலோ, ஆன்மிகத்திலோ என்ன குறை அவருக்கு? உலக வாழ்வையும் ஆன்மிக வாழ்வையும் ஒருசேர இணைத்து ஆனந்தமாக அன்புக் கிண்ணத்தில் ஞானப் பாலை நிரப்பிக் குடித்தவர் ஜனகர். (எல்லோரும் சிரித்தனர்)

"ஆனால், திடீரென்று ஒருவர் ஜனகராகி விடமுடியாது. ஜனகர் முதன்முதலில் தனிமையில் நீண்ட காலம் மிக மிகக் கடினமான தவங்களைச் செய்தார்; சாதனை பழகினார்.

"ஒருவன் இல்லறத்தில் உழன்ற போதிலும் அப்போதைக் கப்போது தனிமையை நாட வேண்டும். மூன்று நாட்களுக் கேனும் ஒருவன் தன் குடும்பத்தைவிட்டுத் தனிமையில் அமர்ந்து இறைவனைப் பெற அழுது அரற்றுவானானால், மிக நல்லதுதான். இது முடியவில்லை என்றால், ஒருநாளாவது தனி மையில் இருந்து கடவுளைப் பற்றி நினைத்தால் அதுவும் நல்லது. உலகமக்கள் மனைவிக்காகவும், பிள்ளைகளுக்காகவும் குடங்குடமாகக் கண்ணீர் விடுகிறார்கள். ஆனால், கடவுளுக் காக யார் ஒரு சொட்டுக் கண்ணீர் வடிக்கிறார்கள்? ஒருவன் அடிக்கடி தனிமையைத் தேடிச் செல்ல வேண்டும். அங்கு ஆன்மிகச் சாதனைகளைப் பயில வேண்டும். இல்லறத்தில் வாழ்ந்து பலவகையான கடமைகளில் சிக்கிக்கொண்டிருக்கும் சாதகர்களுக்குத் தொடக்க காலத்தில் ஆன்மிக வாழ்வைக் கடைப்பிடிப்பது, தியானம் செய்வது ஆகியவற்றிற்குப் பல் வேறு இடையூறுகள் ஏற்படலாம். நடைபாதையில் சின்னஞ் சிறு செடி நடப்பட்டதும் அதற்கு உடனடியாக வேலி கட்டி விட வேண்டும். இல்லையேல் ஆடுமாடுகள் அழித்துவிடும். வளர்ந்து பெரிய மரமாகி விட்டால், யானையைக்கூட அதில் கட்டலாம்.

"உலக ஆசை என்பது டைபாய்டு காய்ச்சலைப் போன்றது. ஒரு டைபாய்டு நோயாளியின் அறையில் பெரியகுடம் நிறையத் தண்ணீரும், காரமான ஊறுகாயும் உள்ளன. நோயாளி குண மடைய வேண்டுமானால், அந்த அறையிலிருந்து முதலில் அவனை அப்புறப்படுத்த வேண்டும். இல்லையென்றால், அவனால் மனத்தை அடக்க முடியாது. அவைகளைச் சாப்பிட்டுவிட்டு அடியோடு அழிந்து போவான். குடும்பத்தில் உள்ள மனிதன் தான் டைபாய்டு நோயாளி. அவன் விரும்பும் உலகப் பொருட்கள்தாம் குடத்தில் உள்ள தண்ணீர். உலக ஆசைதான்

நீர் வேட்கை. ஊறுகாயைப் பற்றிய நினைப்பே நாக்கில் தண்ணீரை ஊறவைக்கிறது. நீ ஊறுகாயை அருகில் கொண்டுவரத் தேவையில்லை. அது இருந்த இடத்தில் இருந்தாலே போதும். பெண்ணின் உறவுதான் இந்த ஊறுகாய். எனவே, சிகிச்சை தனிமையில் தரப்படவேண்டும்.

"விவேகம், வைராக்கியம் இவைகளை அடைந்த பின்னரே ஒருவன் உலக வாழ்வில் இறங்கவேண்டும். இல்லற வாழ்வு என்னும் கருங்கடலில் காமம், கோபம் முதலான ஆறு பயங்கர முதலைகள் உள்ளன. மஞ்சளை உடம்பில் பூசிக்கொண்டு கடலில் இறங்கினால் அம் முதலைகளைக் குறித்து அஞ்சவேண்டியதில்லை. விவேக, வைராக்கியம்தான் மஞ்சள். விவேகம் என்பது, உலகில் அழியாத நிலைத்த பொருள் எது? நிலையில்லாத அழியும் பொருள் எது? என்று பகுத்துக்காணும் அறிவு. கடவுள் ஒருவர்தான் நிலையானவர், மாறாதவர், என்றும் இருப்பவர். மற்றவையெல்லாம் நிலையற்றவை, மாறிக் கொண்டு இருப்பவை, அழிபவை. இவ்வாறு தெளிவதுதான் ஞானம். கடவுளிடம் பேரார்வத்தை நாம் வளர்த்துக்கொள்ள வேண்டும். காந்தத்திடம் இரும்பு ஒட்டிக் கொள்வதைப் போல அவரிடத்தில் கொள்கிற அளவற்ற அன்பினால் நாம் ஈர்க்கப்பெற வேண்டும். கோபியர்கள் கண்ணனிடம் இத்தகைய கவர்ச்சியும், அளவற்ற காதலையும் பெற்றிருந்தார்கள். இந்தப் பாட்டைக் கேள். உணர்ந்து கொள்வாய்.

காட்டின் நடுவே கனிவாகக் கண்ணன் ஊதும் குழலோசை
வீட்டில் புகுந்து விளையாட விண்ணில் மிதந்து வருகிறதே!

வழியில் விமலன் காத்திருப்பான் மழைமா முகிலை நேர்எதிரே
விழிகள் குளிரக் காணாமல் வீணே காலம் கழிப்பேனோ?

பெருகும் மதுர இசைகேட்டும் பேசா திருந்தீர், தோழியரே!
மருவும் பெருமான் எழில்காண வருவீர், என்னைத் தொடர்வீரே?

மாயோன் என்றால் பொருள்இல்லா வார்த்தை என்றே மதிக்கின்றீர்!
ஓயா இதயத் துடிப்பாகி ஒளிர்வான் இறைவன் என்னுள்ளே!

கண்ணன் குழலை நீங்களெலாம் காதால் மட்டும் கேட்கின்றீர்;
எண்ணம் முழுதும் இசைபாய எளியேன் உயிரும் சிலிர்க்கின்றேன்!

வருவாய் ராதை நீஇல்லா மலர்ப்பூம் பொழிலும் பொழிலாமோ?
விரைவாய்; எனவேய்ங் குழலோசை மீண்டும் என்னை அழைக்கிறதே!

கண்கள் நீர் சுரந்து வழிய இந்தப் பாடலைப் பாடிய குரு தேவர்,கேசவர் முதலிய பிரம்மோ பக்தர்களை நோக்கி "நீங்கள் ராதையையும், கிருஷ்ணனையும் ஏற்றுக்கொண்டாலும் சரி, ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் சரி, அதுபற்றிக் கவலையில்லை. ஆனால், அவர்கள் இருவருக்கிடையே நிலவிய அளவற்ற காதலையும், கவர்ச்சியையும் மட்டும் ஏற்றுக்கொண்டேயாக வேண்டும். இத்தகைய காதலும், கவர்ச்சியும், ஏக்கமும் இறைவனிடம் பெற முயலுங்கள். கடவுளைக் காண வேண்டும் என்கின்ற ஏக்கம், துடிதுடித்துக் கதறி அலையும் மனநிலை இவை இருந்தால் இறைவனை அடையமுடியும்" என்று பகர்ந்தார்.

இந்நேரத்தில் கங்கையாற்றில் நீர்ப்பெருக்கு கடலேற்றத் தால் திசை மாறி முன் நோக்கிச் செல்லக் கடல்நீர் கங்கை ஆற்றுக்குள் வரத் தொடங்கியது. எனவே, கப்பல் கல்கத்தா நோக்கி விரைந்து செல்லலாயிற்று. ஹௌரா பாலத்தைஎளிதில் கடந்துவிட்டது. எதிரே தாவரக்கூடம் (Botanical garden) தெரியலாயிற்று. ஆற்றில் இன்னும் சிறிது தூரம் செல்லுமாறு கப்பல்தலைவனுக்குக் கூறினர். கப்பலினுள் அனைவரும் குருதேவரின் வார்த்தைகளிலே சொக்கிப்போய் மெய்ம்மறந்து உட்கார்ந்து கொண்டிருந்தனர். நேரத்தைப் பற்றியோ, கப்பல் கடந்து செல்லும் தொலைவு பற்றியோ எந்தக் கவலையும் இல்லாதவர்களாக, எந்த நினைப்பும் அற்றவர்களாக அவர்கள் இருந்தனர்.

பொரியும், தேங்காயும் அவர்களுக்கு வழங்கப்பட்டன. கேசவர் இதற்கு ஏற்பாடு செய்திருந்தார். அவற்றை மேல் விரிப்பில் வாங்கிக் கொண்டு உண்ணத்தொடங்கினர். ஒவ் வொருவரும் இன்பத்தில் திளைத்திருந்தனர். ஒரே ஆனந்தச் சந்தைதான். கேசவரும், விஜயரும் இச்சந்தர்ப்பத்திலும் சங் கோஜமும் சங்கடமும் கொண்டவர்களாய் ஒருவர் மற்றவரைப் பார்க்கத் தவிர்க்க முயன்றதைக் குருதேவர் கவனித்தார். மனக் கசப்பை நீக்கி இருவரையும் மீண்டும் நண்பர்களாக்கத் திருவுளங் கொண்டார். உயிர்கள் அடையும் இன்பங் கண்டு, அதில் இன்பம் அடைபவர் அல்லவா நம் குருதேவர்?

ஸ்ரீராமகிருஷ்ணர் : (கேசவரைப் பார்த்து) "இதோ பார்! அங்கே விஜயர் அமர்ந்து கொண்டிருக்கிறார். உங்களுடைய இச்சண்டை சிவபெருமானுக்கும், இராமருக்கும் ஏற்பட்ட சண்டை போலத் தோன்றுகிறது.(சிரிப்பு) இராமருடைய குரு சிவபெருமான். சிவபெருமானுடைய குருவோ இராமர்.

அவர்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டார்கள்: என்றாலும் உடனே சமாதானமாகி விட்டார்கள். ஆனால், என்ன துரதிர்ஷ்டம்! சிவபெருமானுடைய பூதகணங்களின் முகச் சுளிப்பும், இராமருடைய குரங்குப் பட்டாளத்தின் கேலியும் கொஞ்சங்கூட நிற்கவில்லை. (உரத்த சிரிப்பு) இப்படிப்பட்ட சண்டை குடும்பங்களில் மிக மிக நெருங்கிய உறவினர்களுக்குள்ளேயும் உண்டாகிறது. இராமர் தமது சொந்தப் பிள்ளைகளான லவ குசர்களோடு போர் செய்யவில்லையா? சில குடும்பங்களில் நீங்கள் பார்த்திருக்கலாம். தாயும், மகளும் ஒன்றாக வசித்து வந்தாலும், ஒரே மாதிரியான சம்பிரதாயத்தை உடையவர்களாக இருந்த போதிலும், செவ்வாய்க்கிழமைகளில் ஏதோ தாங்கள் வேறானவர் போன்று தங்கள் நலனை உத்தேசித்து, தனித்தனியாக விரதம் இருப்பார்கள். ஒருவருக்கு வருகின்ற நன்மை மற்றவர்க்கும் ஆகிறது. அதுபோல நீங்கள் ஒரு சமாஜத்தைப் பின்பற்றிவர, விஜயர் தனக்கும் அதுபோல் ஒன்று வேண்டும் என்று நினைக்கிறார். (அனைவரும் சிரித்தல்) ஒவ்வொருவருக்கும் உலகில் இதெல்லாம் வேண்டியிருக்கின்றன. கடவுளின் அவதாரமான கிருஷ்ணர், பிருந்தாவனத்தில் கோபிகைகளோடு கொஞ்சி விளையாடிக் கொண்டிருக்கும் போது, அதைக் கெடுப்பதற்கு என்றே ஜடிலன், குடிலன் என்ற இரண்டு கயவர்கள் முளைத்தார்கள். இது ஏன், எப்படி? என்று நீங்கள் கேட்கலாம். ஜடிலன், குடிலன் இல்லாமல் விளையாட்டு சுவைக்காது. (எல்லோரும் சிரிக்கிறார்கள்) ஜடில, குடிலர்கள் இல்லாவிட்டால் தமாஷா ஏது? (உரக்கச் சிரிக்கிறார்கள்)

"விசிஷ்டாத்துவைதக் கொள்கையைப் பெருமைப்படுத்தியவர் இராமானுஜர். இவருடைய குருவோ ஒரு அத்வைதி. இரண்டு பேருக்கும் கருத்து வேறுபாடுதோன்றியது. அதனால் ஒருவர் மற்றவர் கருத்தைக் கண்டிக்க ஆரம்பித்தனர். இவ்வாறு உலகில் பொதுவாகச் சண்டை ஏற்பட்டுவிடுகிறது. எப்படி இருந்தாலும், குருவிற்குச் சீடன் தன்னுடையவன் தானே என்ற எண்ணம் வேண்டும்."

குருதேவரின் வார்த்தைகளாலும், கூட்டுறவாலும் அனைவரும் மனமகிழ்ந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (கேசவரைப் பார்த்து) "நீங்கள் சீடர்களைச் சேர்த்துக்கொள்ளும்போது அவர்களை நன்றாக ஆராய்ந்து பார்த்த பிறகே சேர்த்துக்கொள்ளவேண்டும். நீங்கள் அப்படிச் செய்வதில்லை. அதனால்தான் இப்படிப் பிரிந்து பிரிந்து அவர்கள் இஷ்டம் போல் செல்லுகிறார்கள்.

"காண்பதற்கு எல்லா மனிதர்களும் ஒரே மாதிரியாகத்தான் காட்சியளிக்கிறார்கள். ஆனால், குணமோ மனிதருக்கு மனிதர் வேறுபடுகிறது. சிலரிடம் சத்துவ குணம் மிகுதியாக இருக்கும். சிலரிடம் ரஜோகுணம், சிலரிடம் தமோகுணம். கொழுக்கட்டைகள் யாவும் பார்ப்பதற்கு ஒரே மாதிரியாகத்தான் இருக்கின்றன. ஆனால், அவைகளுக்கு உள்ளே பல்வேறு சுவைப் பொருட்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. ஒன்றில் திரட்டுப்பால் இருக்கும், மற்றொன்றில் தேங்காய் இருக்கும், இன்னும் சிலவற்றில் வேகவைத்த உளுத்தம்பருப்பு இருக்கும். (எல்லோரும் சிரிக்கிறார்கள்)

"என்னுடைய மனப்போக்கு என்ன தெரியுமா? உண்பது, உறங்குவது, கவலையற்று ஆனந்தமாக இருப்பது. அவ்வளவே! மற்றவையெல்லாம் அன்னை காளி அறிவாள். மூன்று சொற்களை நான் கேட்கும்போது உண்மையாகவே என் உடம்பில் முள் தைத்ததைப்போல் துடித்துப்போகிறேன். 'குரு, எஜமான், தந்தை' என்று மக்கள் என்னை அழைக்கும் சொற்களே அவை.

"**ஒரே ஒருவர் தான் குரு. அவரே சச்சிதானந்தம்.** அவர் மட்டுமே உபதேசிக்கிறார். கடவுளிடம் நான் கொள்ளும் மனநிலை தாயிடம் குழந்தை கொண்டிருக்கும் மனநிலைதான். இலட்சக்கணக்கில் மனித குருக்களைப் பெறலாம். எல்லோருமே குருவாக இருக்க விரும்புகிறார்களேயொழிய, சீடராக இருப்பதற்கு யார் விரும்புகிறார்கள்?

"பிறருக்கு உபதேசம் புரிவது என்பது மிகமிகக் கடினமான காரியம். கடவுளே தன் காட்சியைத் தந்து, உபதேசிக்கும்படி கட்டளையிட்டால்தான் ஒருவனால் உபதேசம் செய்ய முடியும். நாரதர், சுகதேவர் இன்னும் இவர்களைப் போன்ற முனிவர்கள் அத்தகைய கட்டளையைப் பெற்றவர்கள். சங்கரரும் இத்தகைய ஆணையை பெற்றிருந்தார். ஆண்டவனின் ஆணை கிடைக்கவில்லையென்றால், உங்கள் பேச்சை யார் கேட்பார்கள்?

"கல்கத்தா வாசிகளின் உறுதியற்ற மனநிலையைப் பற்றி நீ அறியாயோ? அடுப்பில் நெருப்புள்ள வரைக்கும் பாத்திரத்திலுள்ள பால் கொதித்துப் பொங்குகிறது. நெருப்பை அப்பால் எடுத்துவிட்டால், எல்லாமே அடங்கிப் போகிறது. இது போன்றதுதான் கல்கத்தா மக்கள் அடையும் உற்சாகமும், உணர்ச்சி வசப்படுதலும்.

"ஒரு குறிப்பிட்ட இடத்தில் தண்ணீருக்காகக் கிணறு தோண்டத் தொடங்குவார்கள். பாறை தட்டுப்பட்டால் உடனே தோண்டுவதை நிறுத்திவிட்டு வேறோர் இடத்திற்குச் சென்று மீண்டும் தோண்ட ஆரம்பித்துவிடுவார்கள். இங்கே மணல் தட்டுப்படும். வேலையை நிறுத்திவிட்டு, மற்றோர் இடத்திற்குச் சென்று மூன்றுவது கிணறு வெட்ட ஆரம்பிப்பார்கள். இப்படிக் கிணறு தோண்டும் வேலை முடிவில்லாமல் போய்க்கொண்டேயிருக்கும்.

"இறைஆணை கிடைத்துவிட்டதாக மனத்தில் எண்ணிக் கொண்டால் போதாது. உண்மையில் அவன் நமக்குக் காட்சிதந்து அருளுகிறான், நம்மோடு பேசுகிறான். அப்பொழுது அவன் கட்டளை பிறக்கும். அச்சொற்கள் எத்தகைய சக்தியைப் பெறும் தெரியுமா? அசைக்க முடியாத மலையே புரண்டுவிடும். வெறும் சொற்பொழிவால் வரும் பயன் என்ன? சில நாட்களே மக்கள் கேட்பார்கள்; பிறகு அவற்றை மறந்து விடுவார்கள். அதை வாழ்வில் பின்பற்ற மட்டார்கள்.

"கமார்புகூரில் ஹல்தார்புகூர் என்றொரு குளம் இருக்கிறது. சிலர் தினமும் அதன் கரையில் மலங்கழித்து, அசுத்தம் செய்துவந்தார்கள். காலையில் குளிப்பதற்காக வரும் ஊர் மக்கள் அவர்களைக் கண்டபடி உரக்கத் திட்டிவிட்டுப் போனார்கள். மறுநாளும் இதே கதை தான். அசுத்தம் செய்வது நின்றபாடில்லை. (எல்லோரும் சிரிக்கிறார்கள்) ஊர்க்காரர்கள் கடைசியில் அரசாங்கத்திடம் புகார் செய்தனர். அரசாங்கம் ஒரு காவல்காரனை அனுப்பிவைத்தது. அவன் குளக்கரையில், 'இங்கு யாரும் மலம், சிறுநீர் கழிக்கக் கூடாது' என்று எழுதப் பட்டிருந்த ஓர் அரசாங்க ஆணைப் பலகையை மாட்டினான். அவ்வளவுதான். மலம், சிறுநீர் கழிப்பது நின்றுவிட்டது. (எல்லோரும் சிரிக்கிறார்கள்)

"மக்களுக்குப் போதிப்பதற்கு இறைவனுடைய அதிகார முத்திரை வேண்டும். இல்லா விட்டால் போதனை கேலிக் கூத்தாகிவிடும். போதிய அறிவாற்றல் இல்லாதவன் போதிக்க முற்படுவது, **குருடன், குருடனை வழிநடத்திச் செல்வதைப் போல ஆகிவிடும்.** நல்லது விளைவதற்குப் பதிலாக மனித சமுதாயத்திற்குப் பெருந்தீங்கே விளையும். கடவுட் காட்சி பெற்றவனுக்கு அகக்காட்சி கிட்டுகிறது. பிறரை ஊடுருவிப் பார்க்க அவனால் இயலும். இதன் காரணமாக ஒவ்வொரு மனிதனுடைய ஆன்மிக நோயையும் அவன் கண்டுபிடிக்கி

றுன். பின்னர் அந் நோய்க்கேற்ற மருந்தாகிய அறிவுரையைத் தருகிறுன்.

"கடவுளிடம் ஆணையைப் பெருமல் ஒருவன் உபதேசிக்கத் துவங்கிஞல் ஆணவம் தலைக்கேறிவிடும். அவன் தனக்குள் 'நான்தான் மக்களுக்கு உபதேசம் செய்கிறேன்' என்று நினைக்கிருன். இந்த ஆணவம் அறியாமையிலிருந்து தோன்றுவது. ஏனென்ருல், ஞானமற்றவன்தான் நான் செய்கிறேன் என்று நினைக்கிருன். 'கடவுள்தான் எதற்கும் கர்த்தா. அவர்தான் எல்லாவற்றையும் செய்பவர், சர்வவல்லமை படைத்தவர். நான் வெறும் கருவிதான்' என்ற ஞானம் ஒருவனுக்கு ஏற்படுமாஞல் அவன் ஜீவன்முக்தன். அதாவது உயிரோடு இருந்து கொண்டே ஆண்டவனைக் கண்டவனுகிருன். 'நானே செய்பவன், நானே செய்பவன்' என்னும் இடைவிடாத நினைப்பிலிருந்துதான் எல்லாத் துயரங்களும் பீறிட்டுக்கொண்டு எழுகின்றன.

(கேசவர் முதலிய பக்தர்களைப் பார்த்து) "ஏதோ உலகத்திற்கு நல்லது செய்து பெரிதாகச் சாதித்து விடுவதைப்போல, நீங்கள் எல்லோரும் பேசுகிறீர்களே? அவ்வளவு சாமான்யப் பட்டதா இந்த உலகம்? உலகத்தைக் கடைத்தேற்ற நீங்கள் யார்? முதலில் இறைவனை அறிந்துகொள்ளுங்கள். ஆன்மிகச் சாதனைகள் பழகி அவரைக் காண முற்படுங்கள். பெரியதோர் ஆற்றலை அவர் பெருங்கருணையுடன் தந்தால்தான் நீங்கள் எல்லோருக்கும் உதவி செய்ய முடியும். இல்லையென்ருல் துளியளவும் முடியாது."

பிரம்மோபக்தர் : "அப்படியென்ருல் கடவுளுடைய காட்சி கிட்டாதவரை நாம் எந்தக் காரியமும் செய்யக் கூடாதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஏன் செய்யக்கூடாது? நீங்கள் அவசியம் செய்ய வேண்டும். கடவுளைச் சிந்தித்தல், அவர் திருப்பெயரையும் புகழையும் பாடுதல் ஆகிய அன்ருடப் பக்திப் பணிகளை யெல்லாம் செய்ய வேண்டும்."

பிரம்மோபக்தர் : "அப்படியென்ருல் குடும்பத்திற்குச் செய்ய வேண்டிய எங்கள் அன்ருட அலுவல்கள், குடும்பத்தைக் காக்கப் பணம் சம்பாதிப்பது போன்ற உலகியல் காரியங்கள் என்ன ஆவது?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அவைகளையும் செய்துதான் தீர வேண்டும். உங்கள் குடும்பத்தை நடத்த எந்த அளவு காரியங்களைச் செய்ய வேண்டுமோ, எந்த அளவு பொருள் ஈட்டவேண்டுமோ அந்த அளவுக்குமட்டும் செய்தால் போதுமானது. அதே நேரத்தில் அந்தக் காரியங்களைச் சுயநலமில்லாமல் செய்வதற்கான ஆற்றலை அளிக்குமாறு இறைவனிடம் அகமுருகி இருவிழிகளிலும் கண்ணீர் பெருக மிகக் கசிந்து கசிந்து பிரார்த்தனை செய்தல் வேண்டும். 'ஆண்டவனே, அதிகமாகப் பணிகளில் ஈடுபடும்போது நான் உன்னை மறந்து போவதைக் காண்கிறேன். எனவே, என் உலகக் காரியங்களைச் சிறிது சிறிதாகக் குறைத்துவிடு. தன்னலமின்றிச் செயல்புரிவதாகத்தான் எண்ணுகின்றேன். ஆனால், எப்படியோ சுயநலம் கலந்து விடுகிறது.' இவ்விதமாகப் பிரார்த்தனை செய்துகொள். மக்கள் அளவுக்கு அதிகமாக இப்படி அன்னதானம், பிச்சையிடல் முதலிய தரும காரியங்களைச் செய்ய ஆரம்பித்தால் கடைசியில் பேருக்கும் புகழுக்கும் பலியாகி விடுகிற நிலை தோன்றிவிடுகிறது.

"சம்புமல்லிக் ஒருமுறை மக்களுக்கு மருத்துவச்சாலை கட்டுவது, பள்ளிக்கூடங்கள் கட்டுவது, சாலைகள் போடுவது, குளம் வெட்டுவது முதலிய தரும காரியங்களைப் பற்றி என்னிடம் பேசினார். அப்போது நான் 'வேண்டுமென்று நீயாகப் போய் இந்தக் காரியங்களில் ஈடுபடாதே. தவிர்க்கமுடியாமல் உன்னிடம் வரும் வேலைகளை மட்டுமே செய். அவைகளையும் தன்னலமின்றிப் பயன் கருதாமல் செய். அளவுக்கதிகமான வேலைகளில் ஒருவர் ஈடுபடுவது நல்லதல்ல. அது கடவுளை மறக்கச் செய்து விடும், என்றேன். காளிகாட்[1] கோவிலுக்குக் காளியைத் தரிசனம் செய்ய வருபவர்கள் நாள் முழுவதையும் அங்குள்ள பிச்சைக்காரர்களுக்குப் பிச்சை போடுவதிலேயே கழித்துவிட்டால் கோயிலுக்குள்ளே போய்க் காளியை எப்படிக் காண முடியும்? முதலில் எப்படியாவது இடித்துத் தள்ளிக் கொண்டு கோயிலுக்குள் போய்க் காளியின் தரிசனத்தைக் கண்டு விட வேண்டும். அதன் பிறகு சாதுக்களுக்குப் பிச்சை கொடுக்கலாம்; கொடுக்காமலும் போகலாம்; அல்லது உங்கள் மனம் ஆசைப் பட்டால் அந்த ஆசை தீரும்வரை நீண்ட நேரம் தானம் செய்துகொண்டேயும் இருக்கலாம். காரியங்கள் என்பன கடவுளைக் காண்பதற்கான வழிகள்தாம். சம்புவிடம் நான் கூறினேன்: 'கடவுள் திடீரென்று உன்முன் காட்சி

1. காளிகாட் கல்கத்தாவின் தென் பகுதியில் உள்ள புகழ்பெற்ற காளிகோயில்.

யளிக்கிறார் என்று வைத்துக்கொள். அவரிடம் எனக்குப் பெரிய மருத்துவ சாலைகளையும் மருந்தகங்களையும் கட்டிக் கொடு என்று கேட்பாய்?' (சிரிப்பு) உண்மையான பக்தன் ஒருபோதும் இவ்வரம் கேட்க மாட்டான். 'ஓ பகவானே! உன்னுடைய தாமரைத் திருவடிகளையே நினைக்கும் மனத்தைக் கொடு. எப்போதும் என்னை உன் அருகிலேயே வைத்துக் கொள். உண்மையான, தூய்மையான பக்தியை எனக்குக் கொடு' என்றுதான் வேண்டுவான்.

"கருமயோகம் மிகவும் கடினமானது. இக் கலியுகத்தில் சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ள கருமங்களையெல்லாம் செய்வது என்பது முடியாத காரியம். இந்த யுகத்தில் உயிரானது உணவைப் பற்றுக்கோடாகக் கொண்டுள்ளது. மனிதர்களிடம் இருக்கும் சக்தி மிகக் குறைவானது. எனவே சாஸ்திரம் விதிக்கும் காரியங்கள் பலவற்றை அவனால் செய்ய முடியாது. ஒரு மனிதன் காய்ச்சலில் படுத்துக்கொண்டான் என்று வைத்துக் கொள்வோம். நிதானமாகப் பழைய காலத்து முறைப்படி நாட்டு மருந்தும் பத்தியமும் என்று ஆரம்பித்தால், அவன் நோய்தீர நீண்ட நாட்களாகும். அல்லது அதற்குள் அவன் இறந்துபோனாலும் போகலாம்.

"உடனடியாக வேலைசெய்யும், நோய்நீக்கும் கொய்னா[1] மருந்துதான் இப்போதைக்குச் சரியானது. இந்தக் கலியுகத்தில் பகவானுடைய பெயரையும் புகழையும் பாடுவது, பிரார்த்தனை செய்வது என்ற **பக்தி யோகமே மிகச் சிறந்த வழியாகும். இந்த யுகத்தின் தர்மம் பக்தி யோகம்தான்.**

(பிரம்மோ பக்தர்களைப் பார்த்து) "உங்களுக்குப் பக்தி யோகம்தான் உகந்தது. நீங்களெல்லாரும் பாக்கியசாலிகள். அதனால் ஹரிநாமத்தைப் பாடுகிறீர்கள். அன்னை காளியின் புகழைப் பாடுகிறீர்கள். உங்கள் மனநிலையை நான் பாராட்டுகிறேன். நீங்கள் வேதாந்திகளைப்போல் இந்த உலகம் ஒரு கனவு போன்றது என்று கூறுவதில்லை. நீங்கள் வேதாந்திகளைப் போன்ற பிரம்மஞானிகள் இல்லை. நீங்கள் பக்தர்கள்; ஆண்டவன் அடியார்கள். இறைவனைக் குணங்களோடு கூடியவராக நினைக்கிறீர்கள். அவரை உண்மையாகவும், உள்ளத் துடிப்போடும் அழைத்தீர்களானால், நிச்சயம் அவரைக் காண்பீர்கள்."

கப்பல் கய்லாகாட் என்னும் நீர்த்துறையை அடைந்தது. எல்லோரும் இறங்குவதற்குத் தயாரானார்கள். கப்பல் அறையை

1. புதிதாகக் கொய்னா கண்டு பிடித்த காலம் அது.

விட்டு வெளி வந்ததும் வானத்தில் முழுநிலா தோன்றியிருப்பதையும், கங்கை நீரே நிலவின் ஒளியில் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருப்பதையும் கண்டு களி கொண்டனர். குருதேவர் தட்சிணேசுவரம் செல்வதற்காக வண்டி ஒன்றைக் கொண்டு வரச் சொல்ல வண்டி வந்து நின்றது. குருதேவரும் ம-வும் மற்றும் சில பக்தர்களும் அதில் ஏறிக் கொண்டனர். குருதேவரை வழியனுப்பக் கொஞ்ச தூரம் செல்லுவதற்காகக் கேசவரின் தம்பி மகனும் வண்டியில் அமர்ந்தார். வண்டியில் அனைவரும் அமர்ந்ததும் குருதேவர் 'எங்கே? எங்கே? அவர் எங்கே?' என்று கேசவரைப் பற்றி வினவினார். அப்படி கேட்டுக்கொண்டிருக்கும் போதே சிரித்த முகத்துடன் கேசவர் அங்கே வந்து குருதேவர் தட்சிணேசுவரம் செல்லுவதற்காகச் செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகளைப் பற்றிக் விவரமாகக் கேட்டார். அவைகள் சரியாக இருக்கவே குருதேவரை மிகவும் தாழ்ந்து வணங்கி அவருடைய பாததூளியை ஏற்று விடை பெற்றார். குருதேவரும் அன்போடு விடை தந்தார்.

வண்டி ஆங்கிலேயர்களின் குடியிருப்பு வழியாகப் போய்க்கொண்டிருந்தது. சாலையின் இரு மருங்கிலும் ஆங்கிலேயர்களின் மாளிகைகள் விசாலமான இடத்தில் வெகு அழகாகக் கட்டப்பட்டிருந்தன. வானத்தில் உதித்தெழுந்த குளிர்நிலவில் இம்மாளிகைகள் இரவில் ஓய்வு கொண்டு உறங்குவது போலத் தோன்றின. வீட்டு வாசல்களில் 'காஸ்' விளக்குகள், இரவை ஒளிமயமாக்கிக் கொண்டு எரிந்தன. மாளிகைகளின் அறைகளுள்ளும் விளக்குகள் ஒளி வீசின. பல இடங்களில் ஆங்கிலேயப்பெண்கள் ஆர்மோனியம், பியானோ முதலியவைகளை வாசித்தபடி பாடிக்கொண்டிருந்தனர்.

குருதேவர் இந்தக் காட்சிகளை யெல்லாம் பார்த்துக் கொண்டு ஆனந்தமாக வண்டியில் போய்க்கொண்டிருந்தார். திடீரென்று "எனக்குத் தாகமாக இருக்கிறது. என்ன செய்வது?" என்றார். கேசவரின் தம்பி மகன் நந்தலால் இந்தியா கிளப்பின்முன் வண்டியை நிறுத்தி மேல்மாடிக்குச் சென்று கண்ணாடிக் குவளையில் தண்ணீர் கொண்டுவந்து தந்தார். குவளை நன்றாகக் கழுவப்பட்டதா என்பதைக் கேட்ட பிறகு குருதேவர் நீர் பருகினார்.

வண்டி நகர்ந்தது. குருதேவர் சிறு குழந்தையைப்போல் வண்டிக்கு வெளியே தலையை நீட்டிப் பாதையில் செல்லுகின்ற மக்கள், வண்டிகள், குதிரை முதலியவற்றையும், தெருவையும்

பார்த்து மகிழ்ந்தார். மகிழ்ச்சியான மனநிலையில் விளங்கினார் குருதேவர்.

வண்டி குருதேவரின் சிறந்த பக்தரான சுரேஷ்மித்ரரின் வீட்டின்முன் போய் நின்றது. சுரேஷ்மித்ரர் குருதேவரிடம் மிகுந்த பக்தி கொண்டவர். குருதேவர் அவரைச் சுரேந்திரர் என்று மிகுந்த அன்போடு அழைப்பார். அப்போது அவர் வீட்டில் இல்லை.

வீட்டில் இருப்பவர்கள் அறையொன்றைச் திறந்து குருதேவரையும், மற்ற பக்தர்களையும் உட்கார வைத்தனர். வண்டிக்காரனுக்கு இப்போது வாடகை கொடுக்க வேண்டுமே! யார் கொடுப்பது? சுரேந்திரர் இருந்திருந்தால் அந்தப் பொறுப்பை உடனே ஏற்றிருப்பார்.

(குருதேவர் ஒரு பக்தரிடம்) "வீட்டுத் தலைவியிடம் போய் வண்டி வாடகையைக் கேள். அவளுடைய கணவர் தட்சிணே சுவரத்திற்கு அடிக்கடி வருவது அவளுக்குத் தெரியாதா என்ன? நான் அவர்களுக்கு ஒன்றும் அறிமுகமில்லாதவனல்ல." (எல்லோரும் சிரிக்கிறார்கள்)

நரேந்திரரின் வீடும் இந்தப் பகுதியில்தான் இருந்தது. எனவே அவரை அழைத்து வர ஆளை அனுப்பினார்கள். இதற்கிடையே ஸ்ரீராமகிருஷ்ணரும், பக்தர்களும் மேல்மாடியில் உள்ள வரவேற்பறைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். தரையில் கம்பளம் விரிக்கப்பட்டு அதன்மேல் வெண்மையான விரிப்பினைப் போர்த்தியிருந்தார்கள். மெத்தையும், திண்டுகளும் ஆங்காங்கே போடப்பட்டிருந்தன. சுரேந்திரர் விருப்பப்படி சிறந்த முறையில் வரையப்பட்ட கண்கவர் ஓவியம் ஒன்று சுவர்மீது மாட்டப்பட்டிருந்தது. அந்தப் படத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் கேசவருக்கு இந்துசமயம், இஸ்லாம், கிருத்துவம், சைவம், வைணவம், சாக்தம் முதலிய சமயங்களின் ஒருமைப்பாட்டை விளக்கிக்கொண்டிருந்தார். கேசவர் ஒருமுறை அந்தப் படத்தைப் பார்த்துவிட்டு 'இத்தகைய கற்பனை யார் உள்ளத்தில் உதித்ததோ அவர் உண்மையில் பாக்கியசாலி' என்றார்.

குருதேவர் மெத்தையில் உட்கார்ந்துகொண்டு சிரித்தபடி மகிழ்ச்சி ததும்ப உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது நரேந்திரர் உள்ளே நுழைந்தார். இது குருதேவரின்

ஆனந்தத்தை இரண்டு மடங்காக்கிற்று. தம் அருமை சிஷ்ய இளைஞனைப் பார்த்து 'இன்று கேசவரோடு படகில் உல்லாச உலாப் போய்வந்தோம். விஜயரும், மற்றும் பல பிரம்மோ பக்தர்களும் உடன் வந்திருந்தனர். கேசவர், விஜயர் இருவருக்கும் செவ்வாய்க்கிழமைகளில் விரதமிருக்கும் தாய்—மகள் இருவரைப் பற்றியும், வேறு வேறாக விரதம் இருந்தாலும் பெறுகின்ற பயன் ஒன்றுதான் என்பதை எப்படி விளக்கிக் கூறினேன் என்பதையும் (ம-வைசுட்டிக்காட்டி) இவனிடம் கேட்டுப்பார், கேசவரிடத்தில் ஜடில குடிலர்கள் என்ற தீயவர்கள் இல்லாவிட்டால் விளையாட்டில் சுவை இருக்காது என்றும் கூறினேன்.'

(ம-விடம்): "அப்படித்தானே?"

ம : "ஆம் சுவாமி".

இரவு வெகு நேரமாகி விட்டது. மணி பத்தரை. சுரேந்திரர் இன்னும் வந்தபாடில்லை. குருதேவர் தட்சிணேசுவரம் செல்ல வேண்டியிருந்ததால் வண்டி கொண்டு வர ஆள் அனுப்பப் பட்டது. வண்டி வந்ததும் ம-வும், நரேந்திரரும் வணங்கி விடை பெற்றனர். ஸ்ரீராமகிருஷ்ணர் வண்டியில் ஏறி அமர்ந்தவுடன் வண்டி நிலவொளி வீசும் வீதிகள் வழியாகத் தட்சிணேசுவரம் நோக்கிச்சென்றது.

---

# பிரம்மசமாஜ பக்தர்களுடன் குருதேவர்

**அக்டோபர் 28, 1882:**

**அ**ன்று சனிக்கிழமை. ஒவ்வொரு மழைக்காலத்திலும் இளவேனிற்காலத்திலும் கொண்டாடப்பெறும் பிரம்மசமாஜத்தின் அரையாண்டு விழா அன்றும் வேணிமாதவபால் என்பவரின் பூந்தோட்ட மாளிகையில் கொண்டாடப்பட்டது. கல்கத்தாவிற்கு மூன்றுமைல் தொலைவில் உள்ள சிந்தி என்ற கிராமத்தில் இத் தோட்டமாளிகை அமைந்திருந்தது. ஓர் ஒதுக்குப்புறமான இடத்தில் அமைந்திருந்த இம்மாளிகை, தியானத்திற்கும் வழிபாட்டிற்கும் ஏற்றதாக இருந்தது. மலர் நிரம்பிய மரங்களும், செயற்கைக் குளங்களும், புல் அடர்ந்த குளக்கரைகளும், பச்சைப்பசேல் என்ற கொடிமண்டபங்களும் அந்த இடத்திற்குத் தனிப்பொலிவைத் தந்தன. வானத்தில் ஊர்ந்து கொண்டிருந்த மேகக்கூட்டங்கள், மேற்கு வானில் விழுந்து கொண்டிருந்த சூரியனின் ஒளிபட்டுத் தங்கம்போலத் தகதகத்துக் கொண்டிருந்த மிக ரம்மியமான அந்த மாலை நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் வண்டியில் வந்து இறங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் பிரம்மசமாஜத்திடமும், பிரம்ம பக்தர்களிடமும் தனித்த பேரன்பு கொண்டிருந்தார். பிரம்மசமாஜ பக்தர்களுக்கும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் பக்தியும், மதிப்பும், மரியாதையும் இருந்தன.

காலையில் நடைபெற்ற வழிபாட்டிற்குப் பக்தர்கள் ஏராளமாக வந்திருந்தனர். இந்த மாலைக்கால வழிபாட்டில் கலந்துகொள்வதற்காகப் பக்கத்துக் கிராமங்களிலிருந்தும், கல்கத்தாவிலிருந்தும் அன்பர்கள் திரளாக வந்து கூடியிருந்தனர். குருதேவரின் அன்பிற்கும் அபிமானத்திற்கும் பாத்திரமாயிருந்த பிரம்மசமாஜ பக்தரான சிவநாத் என்பவர் சமாஜ அங்கத்தினர்களுடன் வந்திருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரின் வரவை ஆவலுடன் அவர் எதிர்பார்த்திருந்தார். ஒருசிலர் கொடிமண்டபங்களின் நிழலில் போடப்பட்டுள்ள பெஞ்சு

களில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தனர். வேறுசிலர் ஏரிக்கரையோரமாக உறவினர்களுடன் உலவிக் கொண்டிருந்தனர். இன்னும் சிலர் குருதேவரின் அமுதமொழிகளைச் செவிமடுக்க வசதியான இடங்களில் அமர்ந்து கொண்டிருந்தனர்.

"இம்மாலை வழிபாட்டிற்கு அம் மகாபுருஷர் வருவார்; இன்பமே உருவெடுத்தாற்போன்ற அம் மகானைக் கண்குளிரப் பார்க்கலாம்; மனத்தைக் கவரும் அவருடைய அமுத மொழிகளைக் கேட்கலாம்; இனிமை ததும்பும் தெய்வப் பாடல்களை அவர் பாடக் கேட்கலாம்; பகவத் பிரேமை மீதூர அவர் ஆடும் அற்புத நடனத்தைக் காணலாம்; களி கொள்ளலாம்" என்றெல்லாம் எண்ணமிட்டபடி பக்தர்கள் அனைவரும் ஸ்ரீராமகிருஷ்ணரின் வரவை எதிர்நோக்கியிருந்தனர்.

விழாமண்டபம் வெகுநேர்த்தியுடன் அலங்கரிக்கப் பட்டிருந்தது. பூஞ்சோலையின் வாயிற்புறத்தே ஒரு வெற்றிலை பாக்குக் கடை இருந்தது. உள்ளே நுழைந்தவுடன் காணப் பட்ட மண்டபத்தின் தோற்றம் ஒரு பெரிய பூஜை நடைபெறப் போவதை அறிவிப்பதாக இருந்தது. ஆனந்தமயமான சூழ்நிலை எங்கும் காணப்பட்டது. முன்மழைக்காலமாதலால் (ஆவணி-புரட்டாசி) இந்த ஆனந்தம் மேலேயும் சென்று எட்டியது போன்று நீலவானம் பளிச்சென்று நிர்மலமாக இருந்தது. மரஞ்செடி கொடிகள், மலர்கள் இவைகளிலிருந்து மணத்தை அள்ளிக்கொண்டு காற்று பரமானந்தமாக வீசத்தொடங்கியது. மேலே தெரியும் வானம், கீழே இருக்கும் விலங்குகள், பறவைகள், மரஞ்செடி கொடி முதலான தாவர சங்கமங்கள் அனைத்தும் ஒரே சுருதியில் ஏதோ இன்ப இசை எழுப்பிக் கொண்டிருப்பது போல் அந்த இடம் அற்புதமாகக் காட்சியளித்தது. செங்கதிர்த் தேவனின் சிவந்த ஒளிக் கற்றைகளுடன் தெய்விக உணர்ச்சிகள் எழுப்பும் ஈசனின் மங்கள அருட்கதிர்களும் வீசிக்கொண்டிருக்க, நாடக அரங்கைப் போன்ற ஜோடனையுடன் அந்த இடம் மாட்சிமையுடன் விளங்கியது. காளிமாதா இன்று இரவு இங்கே எந்த நாடகத்தை நடத்துவதற்கு இப்படி ஜோடித்திருக்கிறாள்? யாரை அரங்கேற்றப் போகிறாள்?

பரமஹம்சரையும் அவருடைய பக்தர்களையும் ஏற்றிக் கொண்டு குதிரைவண்டி மண்டப வாயிலில் வந்துநின்றது. நீர் வேட்கையால் வருந்துகின்றவன் நீரைக் கண்ட அளவில்

ஓடிவருவது போன்று பரமஹம்சரைக் கண்டவுடன் "அதோ! அவர் வந்துவிட்டார்" என்று கூவிக்கொண்டு நாலா பக்கங்களிலிருந்தும் மக்கள் விரைந்து வந்து வண்டியைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டனர்.

குருதேவர் சிரித்தபடியே இறங்கி விழாமண்டபத்தின் நடுவே போடப்பட்டிருந்த உயரமான ஆசனத்தில் சென்று அமர்ந்தார். அப்போது ஒரே அமைதி. நாடக அரங்கில் நாடகம் ஆரம்பிப்பதற்குமுன் போவதும் வருவதும், பேச்சும் சிரிப்புமாக அரங்கம் அமர்க்களப்படும்; இரைச்சல் செவிடுபடும். மணியடித்துத் திரை விலகியதுதான் தாமதம். கூச்சல் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். அனைவரும் தங்கள் இடத்தில் சரியாக உட்கார்ந்து கொண்டு கண்ணும் கருத்துமாக நாடகம் பார்க்க ஆரம்பித்துவிடுவர். அதுபோன்ற சூழ்நிலையே இப்போது உருவாகியிருந்தது. மலர்களைத் தேடி நானு பக்கங்களில் அலையும் வண்டுக் கூட்டம் தாமரையைக் கண்டவுடன் மற்ற மலர்களை மறந்துவிட்டுத் தாமரையை நோக்கி விரைவது போல, பக்தர்கள் குருதேவர் இருந்த பக்கம் நோக்கி விரைந்தனர்.

குருதேவர் சிரித்த முகத்தோடு சிவநாத் முதலான அடியவர்கள் அமர்ந்துகொண்டிருந்த பக்கம் திரும்பினர். "இதோ பார் சிவநாத்! நீங்கள் எல்லோரும் உண்மையான பக்தர்கள். உங்களைப் பார்ப்பதில் எனக்கு மட்டற்றமகிழ்ச்சி. ஒரு கஞ்சா குடிப்பவன் மற்றொரு கஞ்சா குடிப்பவனைப் பார்த்து அளவற்ற ஆனந்தம் கொள்கிறான். சில சமயம் ஒருவன் மற்றொருவனைக் கட்டித் தழுவிக்கொள்கிறான்." (சிவநாதரும் மற்றவர்களும் சிரிக்கின்றனர்)

ஸ்ரீராமகிருஷ்ணர் : "காளி கோவிலைக் காண்பதற்காகப் பல மக்கள் தட்சிணேசுவரத்திற்கு வருகிறார்கள். என்னிடம் வருபவர்களிடத்தில் இறை சிந்தனையில்லாதவர்கள் யார் என்று அறிந்ததும், அந்தக் கணமே அவர்களிடம் 'நீங்கள் சற்று போய் அங்கே உட்காருங்கள்' என்பேன், அல்லது 'காளி கோவில் மற்றும் இந்த அழகான கட்டிடங்கள் எல்லாவற்றையும் சுற்றிப்பார்த்துவிட்டு வாருங்களேன்' என்பேன். (எல்லோரும் சிரிக்கின்றனர்)

"அடியார்களுடன் சில சமயங்களில் வீணர்கள் சிலரும் வருவார்கள். உலக விவகாரங்களில் மூழ்கிக்கிடக்கும் இவர்

களுக்கு ஈசனைப்பற்றிய பேச்சு சிறிதும் பிடிப்பதில்லை. என்னிடம் பக்தர்கள் நீண்ட நேரம் ஈசுவரனைக் குறித்துப் பேசிக் கொண்டிருக்கும்போது உலகப்பற்று மிகுந்த இந்த மனிதர்கள் அதைக் கேட்க விருப்பமில்லாமல் தத்தளித்துக் கொண் டிருப்பார்கள். கடைசியில் பொறுமையிழந்து பக்தர்களுடைய காதில் மெதுவாக, 'எப்பொழுது போகலாம்? எப்பொழுது போகலாம்?' என்று தொணதொணக்கத் தொடங்கிவிடு வார்கள். அதற்குப் பக்தர்கள் 'கொஞ்சம் பொறுங்கள், இதோ போகலாம், இப்பொழுது போகலாம்' என்பார்கள். மேலும் சலிப்படைந்தவர்களாக, 'நல்லது, நீங்கள் பேசிக்கொண்டி ருங்கள். நாங்கள் படகில் உங்களுக்காகக் காத்துக் கொண் டிருக்கிறோம்' என்பார்கள். (எல்லோரும் சிரிக்கின்றனர்)

"இல்லறத்தாரிடம் 'நீங்கள் எல்லாவற்றையும் துறந்து விட்டு இறைவனிடம் முழுமனத்தோடு உங்களை அர்ப்பணித்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னால், அதை ஒருபோதும் காதில் வாங்கிக் கொள்ளமாட்டார்கள். ஒரு சமயம் கௌராங்கரும், நித்தியானந்தரும் நன்கு ஆலோசித்து உலக விஷயங்களில் நாட்டமுள்ளவர்களைக் கடவுளிடம் இழுக்க ஓர் ஏற்பாடு செய்தார்கள். அதன்படி பாமர மக்களிடம் சென்று, 'மாகூர் என்ற மீன்குழம்பு சாப்பிடுங்கள், இளம் பெண்களைத் தழுவுங்கள், ஹரியினுடைய நாமத்தைச் சொல்லுங்கள்' என்று உரக்கக் கூவினார்கள். முதல் இரண்டின் ஆசையினால் பலர் ஹரிநாம சங்கீர்த்தனத்தில் பங்கு கொண்டனர். ஹரிநாம அமுதத்தில் சிறிது ஆனந்தம் பெற்றதும், மாகூர்மீன்குழம்பு என்பது ஹரிப்பிரேமையினால் ஏற்படக்கூடிய ஆனந்தக் கண்ணீர் என்றும், இளம் பெண்களைத் தழுவுதல் என்பது ஹரிப்பிரேமை மீதூரப் பூமியில் விழுந்து புரளுவது என்றும் தெரிந்துகொண்டனர்.

"மகான் நிதாயி மக்களை எப்படியாவது ஹரிநாமத்தைச் சொல்ல வைத்து விடுவார். 'ஈசுவரனுடைய பெயரைச் சொல்லு வதில் விசேஷ மகிமை இருக்கிறது' என்று சைதன்ய தேவர் கூறியிருக்கிறார். அதன் பயன் உடனே கிடைக்காவிட்டாலும் என்றாவது ஒருநாள் கண்டிப்பாகக் கிடைத்துவிடும் என்பதில் ஐயமில்லை. வீட்டுச் சுவரின்மேல் யாரோ ஒருவன் ஒரு சமயம் ஒரு விதையைப் போட்டுவிட்டுப் போனான். பல நாட்களுக்குப் பிறகு ஒருநாள் வீடு இடிந்து விழுந்துவிட்டது. அப்பொழுது அந்த விதை மண்ணில் விழுந்து செடியாக முளைத்துப் பிறகு பலனும் கொடுத்தது.

"உலகப் பற்றுடையவர்களிடத்தில் சத்துவம், ராஜசம், தாமசம் என்ற முக்குணங்கள் அமைந்திருப்பது போலப் பக்தர்களிடமும் இந்த மூன்று குணங்கள் உள்ளன.

"சத்துவ குணம் அதிகமாக உள்ள உலக மக்கள் எப்படி இருப்பார்கள் தெரியுமா? அவர்களுடைய வீடு அங்கும் இங்கும் இடிந்து கிடக்கும். ஆனால் அதைப் பழுது பார்க்க மாட்டார்கள், வீட்டில் இருக்கும் கோயிலின் உட்பிரகாரத்தைப் புறக்கள் அசுத்தம் செய்யும். தாழ்வாரத்தில் பாசி படிந்திருக்கும். ஆனால் அவைகளைப் பற்றி நினைக்கவே மாட்டார்கள். மேசை நாற்காலி முதலியன பழையனவாக இருக்கும். அவற்றை அழகாக வைக்க வேண்டும் என்று முயற்சி செய்ய மாட்டார்கள். அணிந்துகொள்ளும் ஆடைகளிலும் கவனம் செலுத்தமாட்டார்கள். ஏதோ துணி என்று இருந்தால் போதும் என்றிருப்பார்கள். இத்தகைய மனிதன் மிகவும் சாந்த குணம் உடையவனாகவும், அடக்கமும் கருணையும் நிறைந்தவனாகவும், கபடமற்றவனாகவும் இருப்பான். எவருக்கும் எவ்விதத் தீங்கும் இழைக்கமாட்டான்.

"ராஜசகுணம் நிறைந்தவர்களிடம் சில இலக்கணங்கள் உண்டு. கையில் நல்ல கடிகாரம், அதற்குத் தங்கச்சங்கிலி, கைவிரலில் இரண்டு மூன்று மோதிரங்கள் இவற்றோடு காட்சியளிப்பார்கள். அவர்கள் வீட்டு மரச்சாமான்கள் பார்க்கப் பளபளப்பாக இருக்கும். சுவர்களில் இராணியின்[1] உருவப் படமும், இளவரசனின் படமும், பெரிய மனிதர்களின் படங்களும் மாட்டப்பட்டிருக்கும். வீடு சுண்ணாம்பு அடித்து ஒரு கீறல்கூட இல்லாமல் பளிச்சென்று இருக்கும். அவர்களுடைய அலமாரிகளில் பலவிதமான அழகிய துணிகள் வரிசை வரிசையாக அடுக்கிவைக்கப்பட்டிருக்கும். அவர்களின் வீட்டு வேலைக்காரர்கள்கூட நல்ல உடைகளை உடுத்தியிருப்பார்கள். இவ்வகையான இலக்கணங்களுடன் இருப்பார்கள் ரஜோகுணம் மிக்க மக்கள்.

"தாமசகுணம் நிறைந்த இல்லறத்தாரின் இயல்புகள் நித்திரை, காமம், குரோதம், அகங்காரம் என்பன.

---

1. அது ஆங்கில ஆட்சிக் காலம். அப்போது விக்டோரியா மஹாராணி, இளவரசர் முதலியோரின் படங்களைப் பலர் பெருமையோடு வீடுகளில் மாட்டி வைத்திருந்தார்கள்.

"பக்தி செய்வதிலும் சத்துவம், ராஜசம், தாமசம் என்று மூன்று வகைகள் இருக்கின்றன. சத்துவகுணம் மிகுந்த பக்தன் இரகசியமாகத் தியானம் செய்வான். சில சமயம் கொசுவலைக்குள் உட்கார்ந்து கொண்டு தியானம் செய்வான். மற்றவர்கள் 'இவன் தூங்குகிறான். ஒரு வேளை இரவெல்லாம் தூக்கம் இல்லையோ? என்னவோ? எனவே தான் இன்னும் படுக்கையிலேயே இருக்கிறான்' என்று நினைப்பார்கள். பசி தீரும் அளவுக்குத்தான் தன் உடலின் மீது கவனம் செலுத்துவான். இவனுக்குச் சோறும் கீரையும் கிடைத்தாலே போதும். சுவையாகச் சாப்பிடவேண்டும் என்ற விருப்பம் சற்றும் இருக்காது. உடுத்தும் உடையிலும் ஆடம்பரம் இருக்காது. இவனுடைய வீட்டுச் சாமான்களும் சாதாரணமாகத்தான் இருக்கும். சத்துவகுண பக்தன் மற்றவர்களை முகத்துதி செய்து பணம் சம்பாதிக்க ஒருபோதும் முயலமாட்டான்.

"ராஜசகுண பக்தன் நெற்றியில் பெரிதாகச் சந்தனப் பொட்டு வைத்துக்கொள்வான். அவனுடைய கழுத்திலே உருத்திராட்சமாலைகள் தொங்கும். இடையிடையே தங்கமணிகள் அவற்றில் கோக்கப்பட்டு இருக்கும். (எல்லோரும் சிரிக்கின்றனர்) பூஜை செய்யும்போது பட்டு வஸ்திரம் அணிந்துகொள்வான்.

"தாமசகுண பக்தனிடமும் தீவிரமான பக்தி கொழுந்து விட்டு எரியும். இந்த பக்தன் ஈசுவரனிடம் எவ்வளவு வரங்கள் கேட்கமுடியுமோ, அவ்வளவையும் கேட்டு வற்புறுத்துவான். பணத்தைப் பிடுங்கிக்கொண்டு, 'அடி உதை, கட்டு' என்று சொல்கிற கொள்ளைக்காரனது வழியே இந்த பக்தனிடம் காணப்படும்.

குருதேவர் மேல்நோக்கிப் பார்த்தவராய்ப் பரவசப் படுத்தும் இனிய குரலில் பாடத்தொடங்கினர் :

"அன்னைபெயர் நாவோத அந்திமத்தில் என்னுபிர்தான் அகலு மாயின்
சின்மயஞ்சார் கங்கைகயை கச்சிகாசி பிரபாசஞ் செல்வ தேனே?

நன்மைமிகும் முப்போதும் நாமஜபம் முறையாக நடக்கு மாகில்
பன்மைபெறுங் கிரியைகளால் பணிவொடுசெய் பூசையினால் பயனும் யாதோ?

விரைந்தணுகும் கிரியைகளம் மேலோனே ஒருகாலும் மேவ மாட்டா!
வரைந்தபல விரதமொடு மாதரும தானமுமே மதனன் ஒப்பான்!
திருந்துபலி பிரார்த்தனையும் திருவடியாம் நாமவலி தெரிவார் யாரோ?
இருந்தேவர்க் கிறைசிவனின் முகமைந்தும் அன்னைபுகழ் இயம்பு மாதோ!

[மதனன் என்பார் இப் பாட்டைப் பாடியவர், மாதரும-பெரிய தருமம், வலி-வலிமை, இரும்-பெரிய]

குருதேவர் பித்துப் பிடித்தவர்போல் மேலும் பக்திக் கனல் பறக்கப் பாடினர் :

தேவி, நின் பெயரைக் காளிமா காளி
என்றுநான் செப்பிய வண்ணம்
ஆவியை விடுத்தால் ஏழையேன் என்னை
அணுகுமோ தீவினைக் கூட்டம்?......

பாடி முடித்ததும் குருதேவர் கூறலானார்:

"பக்தனிடம் அசையாத மனவுறுதி இருக்க வேண்டும் என்னது? நான் ஈசுவரனது திருநாமத்தை உச்சரிக்கும் பக்தனாயிற்றே எனக்காவது பாவமாவது! என்னைப் பாவம் தொடர்ந்து பற்றுவதாவது? நான் அவளுடைய குழந்தை; தேவி பராசக்தியின் ஆற்றல்களுக்கும், புகழுக்கும் வாரிசு அல்லவா நான்? இப்படிப்பட்ட திடமான நம்பிக்கை இருக்க வேண்டும்.

"பக்தன் தன் தமோ குணத்தை இறைவனிடம் ஞான வழியில் திருப்பினால் ஈசுவரனை அடைய முடியும். ஈசுவரனிடம் அடம்பிடி. தேவைகளை விடாப்பிடியாகக் கேள். அவன் வேற்று மனிதன் அல்ல. அவன் நமக்கு மிகவும் வேண்டியவன். நம் உறவினன். இன்னும் கேள். இத் தமோ குணத்தை மற்றவர்கள் நன்மைக்காகவும் பயன்படுத்தலாம்.

முதல்தர மருத்துவன், இடைப்பட்ட மருத்துவன், கடைப்பட்ட மருத்துவன் என மருத்துவர்கள் மூவகையினர். எந்த மருத்துவன் நோயாளியைப் பரிசோதித்துவிட்டு 'மருந்து சாப்பிடு' என்று மட்டும் சொல்லிவிட்டுப் போய்விடுகிறானோ அவன் கடைப்பட்ட மருத்துவன். நோயாளி மருந்து சாப்பிட்டானா இல்லையா என்பதைப்பற்றி அவன் விசாரிப்பதில்லை; கவலைப்படுவதுமில்லை.

"ஆனால் நோயாளியை மருந்து சாப்பிடும்படியாகப் பல முறை கேட்டுக்கொள்கிற மருத்துவன் இடைப்பட்டவன். இந்த மருத்துவன் இனிய வார்த்தைகளால் நோயாளியிடம் 'இதோ பார், மருந்து சாப்பிடு, இல்லாவிட்டால் நீ எவ்வாறு குணமடைவாய்? நீ மிகவும் நல்லவன் ஆயிற்றே! சாப்பிடு பார்க்கலாம். இது நானே என் கையினால் தயாரித்த மருந்து என்றெல்லாம் கூறி நோயாளியை மருந்து சாப்பிடச் செய்வான். எவ்வளவு வற்புறுத்தியும், இதமாகக் கூறியும் நோயாளி மருந்துண்ண மறுக்கிறான் என்பதைக் கண்டதும் அவனைக் கீழே தள்ளி மார்பில் முட்டியை ஊன்றிக் கட்டாயப்படுத்தி, மருந்து சாப்பிட வைக்கிறவன் முதல்தர மருத்துவன். இதனால் நோயாளிக்கு நன்மை ஏற்படுகிறது; எவ்விதத் தீமையும் ஏற்படுவதில்லை.

"மருத்துவர்களைப் போலவே ஆசாரியர்களும்[1] மூன்று வகையினர். சீடர்களுக்கு உபதேசம் மட்டும் செய்து விட்டுச் சீடர்களின் நிலையைப் பற்றி எவ்விதமான அக்கறையும் கொள்ளாதவர் கடைத்தரமான ஆசாரியர். எந்த ஆசாரியர் சீடர்களின் நன்மைக்காகத் திரும்பத் திரும்பத் தாம் செய்த உபதேசங்களை விளக்குகிறாரோ, அவ்வாறு விளக்குவதன் மூலம் உபதேசங்களின் உட்கருத்துக்களைத் தெளிவாகச் சீடர்கள் அறிந்துகொள்ளும் வண்ணம் செய்கிறாரோ, பலவகையாக அவர்களோடு நெருங்கிப் பழகி அன்பு காட்டுகிறாரோ அவர் இடைப்பட்ட ஆசாரியர் ஆவர். சீடர்களில் எவரேனும் எந்த விதத்திலும் உபதேசங்களை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதை அறிந்ததும் அவனைக் கட்டாயப்படுத்திக் கண்டிப்புடன் வற்புறுத்துகிறவர் எவரோ அவர் முதல்தரமான ஆசாரியர் ஆவர்."

ஒரு பிரம்ம சமாஜ பக்தர்: "கடவுள் உருவம் உடையவரா? உருவம் அற்றவரா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "கடவுள் இப்படிப்பட்டவர் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. அவர் உருவம் இல்லாதவர். அதே நேரத்தில் அவர் உருவம் உடையவருங்கூட. அவர் பக்தர்களின் பொருட்டு உருவம் தாங்குகிறார். ஞானிகள் இந்த உலகத்தைக் கனவைப் போலக் காண்பவர்கள். இவர்கள் இறைவனை உருவம் அற்றவராகக் கொள்வர். பக்தன், தான் தனிப்பட்ட ஒருவன் என்றும், உலகம் தன்னிலும் வேறுபட்ட

1. மதகுரு, ஆசான்.

மற்றென்று என்றும் அறிகிறான். எனவே ஈசுவரன் பக்தனுக்கு அவனுடைய இஷ்ட தெய்வமாக, உருவத்தோடு கூடியவனாகக் காட்சி அளிக்கிறான். ஞானி ஒரு வேதாந்தவாதி. அவன் கடவுள் 'இது அல்ல, இது அல்ல' என்று நீக்கி, நீக்கி ஆராய்ச்சி செய்கிறான். இவ்வாறு ஆராய்ச்சி செய்து 'நான்' என்பதே பொய், உலகம் கனவு போலப் பொய் என்பதை உறுதியாக உணர்கிறான். ஞானி பிரம்மத்தை உறுதியாக அறிகிறான். ஆனால், அது என்ன என்பதைச் சொற்களால் சொல்ல அவனுக்கு முடிவதில்லை.

"அது எப்படி தெரியுமா? சச்சிதானந்தமாகிய கடல் கரை இல்லாதது. பக்தி என்னும் குளிர்ச்சியினால் பல இடங்களில் உறைந்து பனிக்கட்டியாகி விடுகிறது. பெரிய பெரிய பனிக் கட்டிப் பாறைகளாக உருவம் அடைகிறது. பக்தர்களுக்கு இறைவன் சில சமயம் உருவம் உடையவராக, மனித வடிவோடு வணங்குபவர்களின் விருப்புத்திற்கேற்ற தெய்வமாகக் காட்சி தருகிறார். ஞானம் என்னும் சூரியன் தோன்றியதும் பனிக்கட்டி உருகிவிடுகிறது. அப்பொழுது ஈசுவரனை உருவமாகக் காண முடிவதில்லை. அவருடைய உருவக் காட்சி கிடைப்பதில்லை. அவர் யார் என்பதை வாயினால் சொல்ல முடியாது. யார் சொல்லுவது? யார் சொல்லுவாரோ அவனே இல்லை. அதாவது 'நான்' என்பது தேடினாலும் கிடைப்பதில்லை.

"உண்மையை ஆராய்ச்சி செய்யச்செய்ய 'நான்' 'நீ' என்பதெல்லாம் இருப்பதில்லை. வெங்காயத்தின் சிவப்பான முதல் தோலை உரித்துவிட்டால், அதன் பிறகு வெண்மையான தோல் தென்படுகிறது. ஒவ்வொன்றையும் உரித்துக்கொண்டே போனால் உள்ளே ஒன்றையுமே காண முடிவதில்லை.

"எந்த நிலையில் 'நான்' என்பதையே தேடிப் பிடிக்க முடியாதோ அந்த நிலையில் தேடுபவர் யார்? அந்த நிலையில் பிரம்மத்தை அறிவது எவ்வாறு என்று சொல்பவர் யார்?

"ஓர் உப்புப் பொம்மை கடலை அளக்கச் சென்றது. கடலில் இறங்கியதுமே கரைந்துவிட்டது. பிறகு கடலின் ஆழத்தைப்பற்றி அளவிட்டுத் திரும்பி வந்து சொல்வது யார்?

"பூரண ஞானத்தின் இலக்கணம் என்ன? பூரண ஞானம் ஏற்படும்போது மனிதன் மௌனியாகி விடுகிறான். அப் பொழுது 'நான்' என்ற உப்புப் பொம்மை, சச்சிதானந்தம்

என்ற கடலில் கரைந்து ஒன்றாகிவிடுகிறது. அப்போது உப்புப் பொம்மைக்கும் கடலுக்கும் வேற்றுமை துளியும் இருப்பதில்லை.

"நான் யார் என்ற ஆராய்ச்சி முடியாதவரை மனிதர்கள் திரும்பத் திரும்ப வாதம் செய்து கொண்டிருக்கின்றனர். அது முடிவுற்ற அளவில் மௌனியாகி விடுகின்றனர். குடம் நிறைந்து வழிந்து, குடத்துத் தண்ணீரும் குளத்துத் தண்ணீரும் ஒன்றாகிவிட்டால், அப்போது குடம் நிரம்பும்போது எழும் சப்தம் ஏற்படுவதில்லை. குடம் நிரம்பாதவரை ஓசை இருந்துகொண்டே இருக்கும்.

"கடலில் கருப்புத் தண்ணீர் இருக்கும் இடத்தைக் கப்பல் அடைந்தால் அது திரும்பி வராது என்று பழங்காலத்து மக்கள் கூறுவது வழக்கம். 'நான்' எளிதில் மறைவதில்லை. 'நான்' இறந்தால் எல்லாத் துன்பங்களும், தொல்லைகளும் நசிந்து போகும் (சிரிப்பு). ஆயிரம் விசாரம் செய்தாலும் 'நான்' தொடர்ந்து இருந்துகொண்டே இருக்கிறது. உன்னையும் என்னையும் போன்ற சாதாரண மக்கள் விஷயத்தில் 'நான் பக்தன்' என்ற அளவில் இந்த 'நான்' பாவிக்கப்படுவது நல்லது.

"பக்தர்கள் விஷயத்தில் பிரம்மம் சகுணம். அதாவது இறைவன் குணங்களோடு கூடியவன். மனிதக் கோலங்களில் அவர் வந்து தம்மைக் காட்டி அருள்வதாக பக்தன் நம்புகிறான். நமது பிரார்த்தனைகளைச் செவிமடுப்பவரும் அவரே. நமது வேண்டுதல்கள் அவரை நோக்கியே அமைகின்றன. பிரம்ம சமாஜத்தவர்களாகிய நீங்கள் பக்தர்களே ஒழிய, ஞானிகளோ வேதாந்திகளோ அல்ல. எனவே இறைவனுக்கு உருவம் உண்டா, இல்லையா என்பதைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. இறைவன் நம்மைப் போன்றவர்; அவர் நம் பிரார்த்தனைகளுக்குச் செவி சாய்க்கிறார்; அளவற்ற ஆற்றல்களைப் பெற்றவர்; இந்தப் பிரபஞ்சத்தைப் படைப்பதும், காப்பதும், இறுதியில் அழிப்பதும் அவரே. இப்படி நம்புவதே நமக்குப் போதுமானது. பக்தி நெறியைப் பின்பற்றிப் பரமனை அடைவது எளிதானது."

ஒரு பிரம்மோ பக்தர் :"சுவாமி! ஈசுவரனைக் காண முடியுமா? அப்படியாயின், நாம் எல்லோரும் ஏன் அவரைப் பார்க்க முடிவதில்லை?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவனைக் காணமுடியும். கண்டிப்பாகக் காணலாம், அவரை உருவத்தோடும் பார்க்கலாம்; உருவம் இல்லாமலும் நிச்சயமாகப் பார்க்கலாம். இதை எப்படி உனக்கு நான் விளக்குவேன்?"

பிரம்மோ பக்தர் : "சுவாமி! இறைவனைக் காண வேண்டின் அதற்குரிய வழிகள் யாவை?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஈசனைக் காண வேண்டும் என்ற தீவிரமான ஆசையால் அவனுக்காகக் கண்ணீர் மல்கிக் கசிந்து உருகி உன்னால் அழ முடியுமா?"

"மக்கள் குழந்தைகளுக்காகவும், மனைவிக்காகவும், பணத்துக்காகவும் குடம் குடமாகக் கண்ணீர் வடிக்கின்றனர். ஆனால் இறைவனுக்காக யார் அழுகிறார்கள்? பொம்மைகளோடு ஒன்றிப்போய் விளையாடிக்கொண்டிருக்கும்வரை குழந்தை தாயை நினைப்பதில்லை. அதுவரை தாய் சமைத்தல் போன்ற வீட்டுப் பணிகளில் ஈடுபட்டிருக்கின்றாள். விளையாட்டுப் பொம்மைகளில் உள்ள ஆர்வம் குறைந்து சலிப்பு மேலிடும் போது, குழந்தை அவைகளை வீசியெறிந்துவிட்டு 'அம்மா' என்று தாயை நினைத்துக் கதறுகிறது. அடுப்பிலிருந்து சோற்றுப் பானையை இறக்கிக்கொண்டிருக்கும் தாய் அவசரமாக அதை இறக்கிக் கீழே வைத்துவிட்டு, ஓடோடி வந்து, குழந்தையைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொள்ளுகிறாள்."

பிரம்மோ பக்தர் : "சுவாமி! இறைவனின் இயல்பு குறித்துப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றனவே, அது ஏன்? கடவுளுக்கு உருவம் உண்டு என்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலரோ கடவுள் அருவமானவர் என்கின்றனர். உருவம் உண்டு என்று பேசுபவர்கள்கூடப் பல உருவங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். ஏன் இவ்வளவு மாறுபாடுகள்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அவனவன் தான் பார்க்கின்றபடி இறைவனை நினைக்கிறான். எந்த பக்தன் எந்த உருவத்தைப் பார்க்கிறானோ அதையே தன் உள்ளத்தில் பதியவைத்துக் கொள்கிறான். உண்மையில் இதில் எந்த விதமான குழப்பமும் இல்லை. எப்படியோ இறைவனை ஒருமுறை கண்டுவிட்டால் போதும். அவரே நமக்கு எல்லாவற்றையும் விளக்கிவிடுவார். அந்தப் பக்கமே நீ காலடி எடுத்து வைக்காதபோது ஆண்டவனைப் பற்றிய அனைத்தையும் அறிந்துவிடவேண்டும் என்று எப்படி நீ எதிர்பார்க்க முடியும்? ஒரு கதை சொல்கிறேன் கேள்.

"ஒரு காட்டுக்குள் ஒரு மனிதன் நுழைந்தான். அங்கிருந்த மரத்தில் ஒரு சிறு பிராணி அமர்ந்திருப்பதைப் பார்த்த அவன், திரும்பி வந்ததும் மற்றொருவனிடம் 'இதோ பார், நான் ஒரு மரத்தில் அழகிய சிவப்பு நிறமுள்ள ஒரு பிராணியைக் கண்டேன்' என்முன். மற்ற மனிதன் 'நானும் அங்கே சென்றிருந்தேன். நீர் கூறிய அந்தப் பிராணியைப் பார்த்தேன். அது எவ்வாறு சிவப்பு நிறமாக இருக்க முடியும்? அது பச்சை நிறம் ஆயிற்றே!' என்முன். வேறு ஒருவன் 'இல்லை, இல்லை. நானும் அதைப் பார்த்திருக்கிறேன். அது மஞ்சள் நிறமுடையது' என்முன். இவ்வாமுகப் பலர் சாம்பல் நிறம், ஊதா நிறம், நீல நிறம், ஆரஞ்சு நிறம் என்றெல்லாம் கூறிப் பலவிதமாக அப் பிராணி இருந்ததாகச் சொன்ஞர்கள். கடைசியாக அவர்களுக்குள் சண்டை மூண்டது. அவர்கள் எல்லோரும் அந்த மரத்தின் அருகில் சென்றனர். அங்கே ஒருவர் உட்கார்ந்திருந்தார்.

"இதுபற்றி அவரைக் கேட்டபோது அவர், 'நான் இந்த மரத்தடியில் வசித்து வருபவன்தான். இந்தப் பிராணியை எனக்கு நன்முகத் தெரியும். நீங்கள் ஒவ்வொருவர் சொல்லுவதும் உண்மைதான். சிலசமயம் அது சிவப்பாகவும், சில சமயம் பச்சையாகவும், வேறு சில சமயம் நீலமாகவும் இருக்கிறது. இன்னும் எவ்வளவோ நிறங்களும் அதற்கு உள்ளன. அது பல நிறங்களைக் கொண்ட ஒரு பச்சோந்தி. சில சமயம் நிறம் இல்லாமலும் அதை நான் பார்த்திருக்கிறேன். சில சமயம் நிறத்தோடும் வேறு சில சமயம் நிறங்கள் இன்றியும் இருப்பது அது' என்முர்.

"அதுபோல எக்காலமும் இடைவிடாது இறைவனை நினைத்துக் கொண்டிருப்பவனுக்கே அவருடைய உண்மையான உருவம் என்னவென்பதைத் தெரிந்துகொள்ள இயலும். ஈசுவரன் தம் பக்தர்களுக்கு வெவ்வேறு வடிவங்களில் காட்சி தருகிமுர். அவருக்குக் குணம் உண்டு, குணம் இல்லை என்பதை அவன் ஒருவனே அறிகிமுன். மரத்தடியில் இருப்பவனுக்குப் பச்சோந்தி பல நிறங்களைக் கொண்டது என்பதும் சில சமயம் நிறமற்றது என்பதும் புலனுகும். மற்றவர்களோ கடவுளைப்பற்றி வீண்வாதமும், சண்டையும் செய்து பெருந்துன்பங்களுக்கு உள்ளாகின்றனர்.

"அருவமான நிர்க்குண பிரம்மம் என் தந்தை; உருவமுடைய சகுண பிரம்மம் என் தாய்' என்று கபீர் கூறுகிமுர்.

"பக்தன் எந்த உருவத்தைப் பெரிதும் விரும்புகிறனே, அந்த உருவத்தில் கடவுள் அவனுக்குக் காட்சி அளிக்கிறர். அவர் பக்தவத்சலன் ஆயிற்றே! அடியார்கள்மீது அவன் காட்டும் பரிவிற்கு எல்லை ஏது? வீர பக்தனை அனுமாருக்குக் காட்சி கொடுக்கப் பகவான் இராம உருவத்தை மேற்கொண்டார் என்று புராணம் கூறுகிறது.

"வேதாந்த ரீதியாகப் பகுத்துப் பகுத்து அணுகும்போது இறைவனின் இந்தக் குணங்களெல்லாம் மறைந்தொழிகின்றன. வேதாந்தத்தின் முடிவு எதுவெனில், பிரம்மம் ஒன்றே உண்மையானது; நாம ரூபங்களோடு கூடிய இந்த உலகம் சத்யம், மித்யை என்பதே. 'நான் பக்தன்' என்ற நினைப்பு இருக்கும்வரைதான் கடவுளை உருவமாகக் காணவும் உருவத்தோடு நினைக்கவும் முடியும். தத்துவ ரீதியாக நினைக்கும்போது பக்தன் கொள்ளுகின்ற 'நான்' என்ற எண்ணம் அவனைப் பிரம்மத்தினின்றும் தொலைவில் கொண்டுபோய் நிறுத்திவிடுகிறது.

"காளி, கண்ணன் சிலைகள் மூன்றரை அடி உயரமே இருப்பதன் காரணம் என்னவென்று தெரியுமா? தூரத்திலிருந்து அவர்களைப் பார்ப்பதாலேயே. வெகு தொலைவில் இருப்பதால் சூரியன் நம் கண்ணுக்குச் சிறியவனுகத் தெரிகிறன் அல்லவா? அருகில் செல்லச்செல்ல எண்ணிப்பார்க்க முடியாத அளவிற்கு அவன் எவ்வளவு பெரியவன் என்பதை அறிந்துகொள்ளலாம். காளியின் நிறம் என்ன? கருப்பு. கண்ணன் ஏன் கருநீலமாகத் தோன்றுகிறன்? தொலைவு காரணமாகத்தான். தொலைவிலிருந்து ஏரியைப் பார்க்கும் பொழுது அதன் நீர் பச்சையாகவோ, நீலமாகவோ, கருப்பாகவோ காணப்படுகிறது. அருகில் சென்று கையில் ஏந்திப்பார்த்தால், எந்த நிறமும் அதற்கு இல்லை என்பது தெளிவாகிறது. தூரத்தில் இருந்து பார்ப்பதினுலேயே ஆகாயம் நீல நிறமாகத் தோன்றுகிறது. அருகில் சென்று பார்த்தால் அதற்கு எந்த நிறமும் இல்லை என்பது புலனுகின்றது.

"ஆகவே, வேதாந்த விசாரப்படி பிரம்மம் நிர்க்குணமானது (குணமற்றது) என்கிறேன் நான். அதன் உண்மையான தன்மை என்னவென்பதைச் சொற்களால் விவரிக்க இயலாது. ஒன்று மட்டும் உறுதி. நீ இருப்பது எதுவரை உண்மையோ அதுவரை இந்த உலகமும் உண்மை. கடவுளுடைய பலவடிவங்களும் உண்மை. கடவுளை உருவம் உடையவராக நினைப்பதும் உண்மை.

"உங்களுக்குரிய வழி பக்தி மார்க்கமே. இது மிகவும் நல்லது; எளிய வழியும்கூட. எல்லையற்ற அகண்டாகார மான இறைவனை முழுமையாக அறியமுடியுமா என்ன? அறிய வேண்டிய அவசியம்தான் என்ன? பெறுதற்கரிய மானிடப் பிறவியைப் பெற்ற நமக்கு வேண்டியதெல்லாம் இறைவனின் பாத கமலங்களில் பக்தியை வளர்த்துக் கொள்ளுவதேயாகும்.

"ஒரு குவளைத் தண்ணீரினால் என் தாகம் தீர்ந்துபோகும் போது ஏரித் தண்ணீரின் அளவைப்பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்? அரைப்புட்டி கள் குடித்தாலே எனக்குப் போதை ஏற்பட்டுவிடும் என்கின்றபோது கடைக்காரனிடம் எவ்வளவு கள் இருக்கிறது என்று தெரிந்துகொள்ளும் கணக்கினால் எனக்கு என்ன இலாபம்? அகண்டமான பிரம்மத்தினைத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியம்தான் எங்கே இருக்கிறது?

"வேதங்களில் பிரம்ம ஞானிகளுடைய பலவகையான நிலைகள் வருணிக்கப்பட்டுள்ளன. ஞான மார்க்கம் மிக மிகக் கடுமையானது. ஒருவனிடம் உலகப் பற்றுக்களின் ஒரு சிறு சாயல் காணப்பட்டாலும், காமினி காஞ்சனங்களில் எள்ளளவு ஆசை இருந்தாலும் ஞானத்தை அடைய முடியாது. எனவே, இக் கலியுகத்திற்கு ஏற்ற மார்க்கம் இதுவல்ல.

"வேதங்களில் மனத்தின் ஏழு நிலைகளைப் பற்றிய வருணனைகள் கூறப்பட்டுள்ளன. இவை மனத்தின் வெவ்வேறு நிலைகளாகும். உலக விவகாரங்களில் மனம் ஆழ்ந்து கிடக்கும்போது, ஜனனேந்திரியம், மூலம், நாபி என்னும் கீழ் இடங்களில் மனம் வாழ்கிறது. அப்போது மேல்நோக்கிய பார்வை மனத்திற்கு உண்டாவதில்லை. இந்நிலையில் உள்ளம் அதன் உயர்ந்த காட்சிகளை இழந்துவிடுகிறது. காமினி காஞ்சனங்களிலேயே அது சஞ்சரித்துக்கொண்டிருக்கும். இதயம் மனத்தின் நான்காவது பூமி. மனம் இந்த நிலைக்கு வரும்பொழுது முதன் முதலாக ஆத்மிக ஒளி ஏற்படுகிறது. ஜோதிக் காட்சியை ஒரு கணம் பெறுகின்றது. ஒளிமயமான காட்சி கிட்டுகிறது. மனிதன் ஈசுவர ஜோதியைக் கண்டு பேசும் சக்தி இழந்து ஆச்சரியத்தோடு, 'ஹா! இது என்ன! இது என்ன! இது என்ன!' என்று மட்டும் கூவுகிறான். இதற்குப் பிறகு அவன்மனம் கீழ் நோக்கி அதாவது உலகப் பொருட்களையும் சம்சாரத்தையும் நோக்கிப் போவதில்லை. மனத்தின் ஐந்தாவது நிலை தொண்டை (கண்டம்). மனம் தொண்டையை அடைந்ததும் அவித்யை,

அஞ்ஞானம் எல்லாம் நீங்கிய நிலையில் விடுதலை அடைகிறது. கடவுளைப்பற்றிய பேச்சைத் தவிர, வேறு எந்தப் பேச்சையும் அவன் கேட்பதற்கோ, பேசுவதற்கோ விரும்புவதில்லை. அப்படி வேறு யாராவது அவனிடம் பேசினால் அவன் அப்போதே அவ்விடத்தைவிட்டு எழுந்து போய்விடுவான்.

"மனத்தின் ஆறாவது நிலை அதாவது பூமி (கபாலம்) புருவ மத்தியாகும். மனம் அந்த நிலையை அடைந்து அங்கு தங்கும் பொழுது, இரவு பகலாக இறைவனின் உருவக் காட்சியைப் பார்க்கிறது. அந்த நிலையிலும் 'நான்' என்பது சிறிது இருக்கிறது. ஈடு இணையற்ற அந்த உருவத்தின் அழகைக் கண்டு சாதகன் பித்தனாகிறான்; அந்த உருவத்தைத் தொடவும், அணைக்கவும் பெரிதும் விரும்புகிறான்; ஆனால், அது முடிவதில்லை. லாந்தர் விளக்குக்குள்ளே சுடர் இருக்கிறது. அதைத் தொட முடியும் என்று மனம் நினைக்கிறது. கண்ணாடித் தடுப்பு இருப்பதனால் தொட முடிவதில்லை.

"உச்சந்தலை, அதாவது தலையின் உச்சியில் மனத்தின் ஏழாவது பூமி யுள்ளது. மனம் அந்த இடத்தை அடையும்போது சமாதி ஏற்படுகிறது. பிரம்ம தரிசனம் கிடைக்கிறது. நேரே பிரம்மத்தைக் காண்கிறான். ஆனால், அந்த நிலையில் அவன் உடல் அதிகநாள் நீடிப்பதில்லை. புற உலகை மறந்தவனாகிறான். எப்பொழுதும் சுய நினைவு அற்ற நிலை அது. அந்த நிலையில் சாதகனால் உண்ண முடிவதில்லை. வாயில் பால் ஊற்றினாலும் வெளியே வழிந்துவிடுகிறது. இந்த நிலையில் ஒருவன் இருந்தால் இருபத்தொரு நாட்களில் அவன் உடலை விட்டுவிடுவான். இதுவே பிரம்ம ஞானியின் நிலை. எனவே, உங்களுக்குரிய வழி பக்தி நெறியே. அது மிகவும் நல்லது; சுலபமானது. ஒரு சமயம் என்னைப் பார்த்து ஒருவன், 'சுவாமி! நீங்கள் எனக்குச் சமாதி நிலையைக் கற்றுக்கொடுக்கிறீர்களா?' என்று கேட்டான். (எல்லோரும் சிரிக்கின்றனர்)

"சமாதி நிலையை அடைந்துவிட்டால் எல்லாக் காரியங்களும் நம்மைவிட்டு விலகி விடுகின்றன. பூஜை, ஜபம் முதலிய பக்தி சம்பந்தமான காரியங்களும், விஷயப் பற்றுள்ள செயல்களும் விலகி விடுகின்றன. ஆரம்ப காலங்களில் ஒருவனிடம் கடவுட் காரியங்களை ஆடம்பரமாகச் செய்வது பற்றிய பேச்சு பெரிதாக அடிபடும். எவ்வளவு தூரம் இறைவனை நோக்கி முன்னேறுகிறோமோ அவ்வளவு தூரம் காரியம் செய்யும் ஆடம்பரமும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துகொண்டு வரும். சொல்லப்போனால், கடவுளுடைய

பெயரையும், புகழையும்கூடப் பாட முடியாத அளவுக்கு வந்துவிட நேரும். (சிவநாதரைப் பார்த்து) இந்தக் கூட்டத்திற்கு நீங்கள் வராதவரையில் உங்களுடைய பெயரையும் புகழையும் பற்றி எல்லோரும் பேசிக்கொண்டிருந்தனர். நீங்கள் வந்தவுடனே அந்தப் பேச்சுக்களெல்லாம் நின்றுவிட்டன. உங்களைப் பார்ப்பதே மக்களுக்கு ஆனந்தம்! இப்போது மக்கள், 'இதோ பார் சிவநாதபாபு! இங்கு வந்துவிட்டார்' என்று மட்டும் சொல்லுகின்றனர். உங்களைப் பற்றிய மற்றப் பேச்சுக்களெல்லாம் அடங்கிவிட்டன.

"இந்தத் தெய்விகநிலை ஏற்பட்ட பின்னர், நான் கங்கையில் தர்ப்பணம் செய்ய முயன்றேன். முடியவில்லை. கை விரல்களின் வழியே நீர் வழிந்துவிட்டது. அப்போது அழுதுகொண்டே ஹலதாரியிடம், 'அண்ணா, ஏன் இப்படி? இது என்ன நிலை?' என்று கேட்டபோது இதைக் 'கலிதஹஸ்தநிலை' என்பர் என்று ஹலதாரி சொன்னார். ஈசுவர தரிசனத்திற்குப் பிறகு தர்ப்பணம் முதலிய கர்மாக்கள் தாமாகவே விலகிவிடுகின்றன.

"பக்திப் பரவசமான பாடல்களில் ஆரம்பத்தில், 'நிதாயி ஆமார் மாதா ஹாதி'[1] என்று முழுதாகக் கூறுகிறார்கள். பாவம் முதிர முதிர வெறும் 'ஹாதி ஹாதி' என்றுதான் வரும். அதற்குப் பிறகு 'ஹாதி' என்ற சொல் மட்டும் வாயில் வரும். கடைசியில், 'ஹா! ஹா!' என்று சொல்லிக்கொண்டே பாவ சமாதி ஏற்பட்டு விடுகிறது. இவ்வளவு நேரம் கீர்த்தனங்கள் பாடிக்கொண்டிருந்தவன் இப்பொழுது மௌனமாகி விடுகிறான்.

"விருந்து ஆரம்பிப்பதற்குமுன் எல்லோரும் பேசுவதால் பெரிய ஆரவாரம் ஏற்படுகிறது. உண்பதற்காக இலையின்முன் உட்கார்ந்ததும் ஆரவாரம் அநேகமாகக் குறைந்துவிடுகிறது. 'பூரி கொண்டு வா, பூரி கொண்டு வா!' என்ற சப்தம் மட்டும் கேட்கிறது. பூரியையும் கறியையும் உண்ண ஆரம்பித்தவுடன் முக்கால் பங்கு சப்தம் குறைந்துவிடுகிறது. தயிர் வந்தவுடன் 'தப் தப்' என்ற சப்தம் மட்டும் கேட்கிறது. (எல்லோரும் சிரிக்கிறார்கள்) ஓசையே இருப்பதில்லை என்றுகூடச் சொல்லலாம். உண்ட பின்போ உறக்கம்! அப்பொழுது நிலவுவது ஒரே அமைதி!

---

[1] 'பக்திப்பாடல் ஒன்றின் முதல் வரி. நிதாயி என்னுடைய அன்புக்குரியவன்' என்பது இதன் பொருள்.

"ஆகவே, முதலில் செயல்கள் செய்வதைப் பற்றிப் பெருத்த ஆரவாரம். கடவுளைக் காணும் வழியில் எவ்வளவுக்கு முன்னேறுகிறோமோ அவ்வளவுக்குக் காரியம் செய்வது குறைந்துவிடுகிறது. முடிவில் வருவது கருமத் தியாகம். இந்தச் செயல் தியாகத்தை அடுத்து, சமாதிநிலை உண்டாகின்றது.

"மருமகள் கர்ப்பவதியானதும் மாமியார் அவள் வேலைகளைக் குறைத்துவிடுகிருள். பத்து மாதம் நெருங்கியதும் அவள் எந்த வேலையும் செய்ய வேண்டியதில்லை. குழந்தை பிறந்த பின்பே ஒரேயடியாக வீட்டு வேலைகள் அனைத்தும் அவளிடமிருந்து விலகிவிடுகின்றன. குழந்தையைச் சீராட்டித் தாலாட்டுவதில் மட்டுமே அவள் கவனம் செலுத்துகிருள். வீட்டு வேலையை அவள் மாமியார், நாத்தனுர் ஆகியோர் செய்கிருர்கள்.

"சமாதிநிலையை அடைந்த பிறகு அநேகமாக உடலில் உயிர் நிலைத்திருப்பதில்லை. இந்த விதிக்கு விலக்காக இருந்தவர்கள் நாரதரைப் போன்ற மகரிஷிகளே. ஆன்மிக ஒளியினை மக்களுக்கு அளிப்பதற்காகவே இவர்கள் உடலை வைத்துக் கொள்கிருர்கள். கிணறு வெட்டிய பிறகு சிலர் மண்வெட்டி கூடை முதலியவற்றைத் தூக்கி எறிந்துவிடுகிருர்கள். ஆனல், சிலர் அவை வேறு யாருக்காவது உபயோகப்படும் என்று பத்திரமாக வைக்கின்றனர். மகாபுருஷர்கள் இத்தகையவர்கள். மக்கள் படும் துயரங்களைப் பார்த்துப் பார்த்து மனம் பொருது அவர்களிடம் இரக்கம் கொள்கின்ற இந்த மகான்கள் மக்களின் துன்பத்தைப் போக்கவே உடலை வைத்துக் கொள்ளுகின்றனர்.

"தாம் ஞானஒளி பெற்றதோடு திருப்தி அடைகின்ற சுயநலம் இவர்களிடம் இல்லை. தாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறவேண்டும்,' என்ற பெருநோக்கு உடையவர்கள். தன்னலம் படைத்தவர்களைப் பற்றிய விவரம் யாவருக்கும் தெரிந்ததுதானே? ஒரு குறிப்பிட்ட இடத்தைச் சுட்டிக்காட்டி 'இங்கே துப்புங்கள்' என்று கூறினல், இத்தன்னலவாதிகள் இதனல் ஏதேனும் நன்மை இவனுக்கு வந்துவிட்டால் என்ன செய்வது என்றஞ்சி அங்கே துப்பமாட்டார்கள். கடையிலிருந்து ஒரு பைசாவுக்கு இனிப்புப் பண்டம் வாங்கி வருமாறு அவர்களிடம் சொன்னல், அதை வாங்கித் திரும்பிவரும் வழியில் கொஞ்சம் நாவால் சுவைத்துப்பார்க்காமல் வரமாட்டார்கள். (அனைவரும் சிரித்தல்)

"ஞானிகளிலும், அவர்களிடம் உள்ள தெய்விக ஆற்றலுக்கு ஏற்ப வேறுபாடுகள் உண்டு. சாதாரண நிலையில் உள்ள ஞானிகள் மக்களுக்குப் போதிக்க அஞ்சுகின்றனர். வலுவற்ற ஒரு மரக்கட்டை தான்மட்டுமே எப்படியோ நீரில் மிதந்து சென்றுவிடும். அதன்மீது ஒரு சிறு பறவை உட்கார்ந்தாலும் போதும். அதன் பாரம் தாங்கமாட்டாது முழுகிவிடுகிறது. நாரதர் போன்ற முனிபுங்கவர்களோ உறுதியான கனரக மரங்களைப் போன்றவர்கள். இம்மரங்கள் தாங்கள் மிதப்பது மட்டுமல்லாமல் தங்கள்மேல் அமரும் எவ்வளவோ மனிதர்களையும், பசுக்களையும், யானைகளையும்கூடத் தாங்கிக்கொண்டு செல்லும் சிறப்புடையன."

(சிவநாத் முதலிய பிரம்ம சமாஜ பக்தர்களைப் பார்த்து) "நீங்கள் எப்போதும் ஈசுவரனுடைய ஆற்றல்கள், பெருமைகள் இவைகளைப் பற்றியே வற்புறுத்திப் பேசி வருகிற காரணம் என்ன? இதே கேள்வியை முன்னர் கேசவரிடமும் கேட்டிருக்கிறேன். ஒருநாள் கேசவரும் அவருடைய சிஷ்ய கோடிகளும் காளிகோயிலுக்கு வந்தனர். கேசவரிடம், 'நீங்கள் எப்படி சொற்பொழிவு ஆற்றுகிறீர்கள் என்பதைக் கேட்க நான் ஆசைப்படுகிறேன்' என்று சொன்னேன். கங்கைக் கரையில் உள்ள வாயில் மண்டபத்தில் கூட்டம் கூடிற்று. கேசவர் பேசத் தொடங்கினர். மிக நன்ருகப் பேசினர். எனக்கு பாவ நிலை ஏற்பட்டது. பேச்சு முடிந்ததும் நான் கேசவரிடம் 'நீங்கள் ஏன் கடவுளின் படைப்புச் செல்வங்களான மலை, கடல், விண்மீன் முதலியவைகளைப்பற்றிப் பேசுகிறீர்கள்? 'ஓ ஈசனே! நீ எவ்வளவு அழகான மலர்களைப் படைத்திருக்கிருய்! வானத்தைப் படைத்திருக்கிருய்! அதில் நட்சத்திரங்களையும் படைத்திருக்கிருய்! கடலையும் பிறவற்றையும் படைத்திருக்கிருய்! என்று பல முறை இப்படியே ஏன் சொல்கிறீர்கள்?' என்று கேட்டேன். செல்வத்தை யார் விரும்புகிருர்களோ, பெருமையில் விருப்பம் உடையவர்களாக யார் இருக்கிருர்களோ, அவர்களே ஈசுவரனுடைய பெருமையையும், ஐசுவரியத்தையும் வருணிக்க விரும்புகின்றனர்.

"ஒரு சமயம் ராதாகாந்தர் கோயிலில் நகைகள் களவு போயின. அப்போது மதுரபாபு கோயிலுள் சென்று, 'இறைவா! இதென்ன அவமானம்? உமது நகைகளையே உம்மால் காப்பாற்றிக்கொள்ள முடியவில்லையே?' என்று கூறியபோது, எனக்குக் கோபம் வந்தது. 'எவ்வளவு அற்ப புத்தி உங்களுக்கு? உலகச் செல்வங்கள் அனைத்திற்கும் தேவதையாகிய

இலட்சுமிதேவியே அவருக்குப் பணிப்பெண்ணாகப் பாத சேவை செய்கிறாள். அப்படிப்பட்டவருக்குச் செல்வத்திற்கு என்ன குறைவு? இந்த நகைகள் உமக்கு மதிப்புடையவையாக இருக்கலாம். 'இறைவனுக்கு இவை வெறும் மண் கட்டிகளே! சீ! சீ! இவ்வளவு இழிவாகப் பேச வெட்கமில்லையா? தரக்குறைவான பேச்சை இனி ஒருபோதும் பேசாதீர்கள். இறைவனது பெருமைக்கு ஏற்றவண்ணம் உங்களால் எதைக் கொடுக்கமுடியும்?' என்றேன். ஆகவே, நான் சொல்லுகிறேன். ஒருவனுக்கு எவரிடத்தில் ஆனந்தம் உண்டாகிறதோ அவரையே அவன் நாடுகிறான். அவருடைய வீடு எங்கே இருக்கிறது? இதுபோல எத்தனை வீடுகள்? எத்தனை தோட்டங்கள்? அவருக்கு எவ்வளவு பணம்? அவரிடம் எத்தனை வேலைக்காரர்கள்? இந்த விவரங்களைக் கேட்பதற்கு அவனுக்கு அவசியம் ஏது? இந்த விவரங்களால் அவனுக்கு என்ன இலாபம்? நான் நரேந்திரனைப் பார்க்கும்போது எல்லாவற்றையும் மறந்துவிடுகிறேன். அவன் வீடு எங்கே? அவன் தந்தை என்ன செய்கிறார்? அவனுக்கு எத்தனை சகோதரர்கள்? இவைகளை எல்லாம் நான் மறந்தும் அவனிடம் கேட்பதில்லை. ஈசுவரனுடைய ஆனந்தத்தில் ஆழ்ந்து மூழ்கிவிடு! அவருடைய படைப்பு எல்லையற்றது! பரந்தது! அவருடைய செல்வம் வரம்பற்றது! இத்தகைய விவரங்கள் நமக்கு எந்த விதத்திலும் அவசியமில்லாதவை."

கந்தர்வர்களையும் பழிக்கும் இனிய குரலில் குருதேவர் ஆனந்தம் ததும்பப் பாட ஆரம்பித்தார் :

ஆழ்ந்து மூழ்குக அருமை நெஞ்சே!
ஆழ்ந்துநீ ஈசன் அழகெனும் கடலிடை
அடிவரை சென்றிடில் அன்பெனும் மணியைக்
கடிதினில் ஆங்கே காணுவை மனமே!
நாடுக மனமே! நாடுக நெஞ்சுளே
பிருந்தா வனத்தை; விமலன் கண்ணன்
அரும்பெறல் அடியா ரொடும்சதா ஆடல்
புரியுமோர் இடத்தைப் பரிவுடன் நாடுக!
ஏற்றுக மனமே! ஏற்றுக ஞானச்
சுடர்விளக் கதனைத் தூய நெஞ்சினில்
தொடர்ந்தெந் நாளும் துலங்கி யொளிரவே!

[கடிதினில்— விரைவில். அரும் பெறல்— பெறற்கு அரிய]

"இறைக்காட்சி ஏற்பட்ட பிறகு பக்தனுக்கு அவருடைய விளையாட்டுக்களைப் பார்க்கும் ஆசை ஏற்படுகிறது. இராமச்சந்திரர் இராவணனைக் கொன்றபின் அரக்கரின் நகரத்துக்குள் நுழைந்தார். கிழவியான 'நிகஷா' என்பவள் அவரைக் கண்டு அஞ்சி மிக வேகமாக ஓடத் தொடங்கினாள். இலட்சுமணன் இராமனைப் பார்த்து, 'இந்த நிகஷா எவ்வளவு வயதான கிழவி! எத்தனையோ பிள்ளைகளைப் போரில் இழந்து மாபெரும் வேதனையடைந்திருக்கிறாள். அப்படியிருந்தும் இவளுக்கு உயிரைப் பற்றி ஏன் இவ்வளவு பயம்? இப்படி ஓடுகிறாளே' என்றார். இராமச்சந்திரர் உடனே நிகஷாவுக்கு அபயம் அளித்து, அவளைத் தம் முன்னால் வரவழைத்து இலட்சுமணன் கேட்ட கேள்வியை அவளிடம் சொன்னார். அதற்கு நிகஷா, 'இராமா! நான் இவ்வளவு நாள் பிழைத்திருந்ததால் உன்னுடைய இவ்வளவு லீலைகளைப் பார்க்க முடிந்தது. இன்னமும் உயிர் வாழ்ந்தால் எத்தனையோ லீலைகளைப் பார்ப்பேனே' என்றாள் (எல்லோரும் சிரிக்கின்றனர்). (சிவநாதரைப் பார்த்து)' உம்மைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு எவ்வளவு ஆசை ஏற்படுகிறது. பரிசுத்தமானவர்களைப் பார்க்காமல் வேறு எவரைப் பார்த்துக்கொண்டு வாழ்வது? தூய்மையான ஆத்மாக்களை நான் பார்க்கும்போது அவர்கள் முந்திய பிறவியில் எனது உறவினர், நண்பர்கள் என்ற எண்ணம் எழுகிறது."

ஒரு பிரம்மோ பக்தர் : "சுவாமி! தங்களுக்கு மறுபிறவியில் நம்பிக்கை உண்டா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆம். மறுபிறவி உண்டு என்று கூறக் கேட்டிருக்கிறேன். நமது சிற்றறிவைக் கொண்டு இறைவனுடைய செயல்களை எப்படி அறிந்துகொள்ள முடியும்? பலர் மறுபிறவியைப் பற்றிப் பேசி இருக்கிறார்கள். ஆகவே, இதை நம்பாமல் எப்படி இருப்பது?

"பீஷ்மர் உடலை உகுக்கும் நேரம். அம்புப் படுக்கையில் படுத்திருக்கிறார். பாண்டவர்கள் கிருஷ்ணனுடன் நின்றுகொண்டிருக்கிறார்கள். பீஷ்மரின் கண்களில் கண்ணீர் பெருகுகிறது. இதைப் பாண்டவர்கள் பார்க்கின்றனர்.

"அர்ஜுனன் கிருஷ்ணனிடம், 'கண்ணா, இது என்ன விந்தை! பீஷ்மர் சத்தியமே உருவானவர்; புலன்களை வென்றவர்; மகாஞானி; அஷ்ட வசுக்களில் ஒருவர். மாயையில் அகப்பட்டு அழுகிறாரே!' என்றான்.

"பீஷ்மரிடம் கிருஷ்ணர் இதைத் தெரிவித்தார். அதைக் கேட்ட பீஷ்மர், 'கிருஷ்ணு! நான் எதற்காக அழுகிறேன் தெரியுமா? பகவானுகிய நீயே பாண்டவர்களுக்குச் சாரதியாக இருந்தும், அவர்கள் பட்ட துன்பங்களுக்கு எல்லேயே இல்லே. இதை எண்ணித்தான் 'பகவானுடைய காரியங்கள் எதையும் புரிந்துகொள்ள முடிவதில்லேயே' என்று அழுகிறேன் என்ருர்."

இரவு எட்டரை மணியாயிற்று. திருவிழா மண்டபத்தில் மாலே வழிபாடு தொடங்கியது. நிலவொளி எங்கும் பரவியிருந்தது. தோட்டத்துச் செடி கொடிகள், மரங்கள் எல்லாமே நிலவொளி வெள்ளத்தில் மிதந்துகொண்டிருந்தன. சமாஜ அறையில் பக்தர்கள் கீர்த்தனம் பாடத் தொடங்கினர். பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் பக்திப் பெருக்கு மேலிட்டவராக நடனமாடத் தொடங்கினுர். பிரம்ம சமாஜ பக்தர்கள் மத்தளம் முதலிய வாத்தியங்களே வாசித்தபடி அவரைச் சுற்றிச்சுற்றி நடனம் ஆடினர். ஈசனது காட்சியைக் கண்டவர்கள் போல எல்லோரும் பாவ நிலேயில் மூழ்கிக்கிடந்தனர். பகவானின் நாமாவளியைப் பாடும் குரல்கள் தொடர்ந்து ஒலித்துக் கொண்டிருந்தன. நாலா பக்கங்களிலிருந்தும் வந்துள்ள கிராமவாசிகள் பகவானின் திருநாமத்தைக் கேட்டவர்களாக, அந்தப் பூஞ்சோலேயின் சொந்தக்காரரான பக்தர் வேணிமாதவருக்கு மனத்துக்குள் நன்றி செலுத்திய வண்ணம் நின்றுகொண்டிருந்தனர்.

கீர்த்தனம் முடிந்ததும் குருதேவர், தரையில் விழுந்து அன்னே காளியை வணங்கினுர். "பாகவதம், பக்தன், பகவான், ஞானிகள் இவர்களின் திருவடிகளே வணங்குகிறேன். அடியார்களின் திருவடிகளே வணங்குகிறேன். உருவக் கடவுளே வழிபடுவோரின் பாத மலர்களே வணங்குகிறேன். அருவக் கடவுளேத் தொழுவோரின் அடிமலர்களே வணங்குகிறேன். முற்காலத்துப் பிரம்ம ஞானிகளின் திருவடிகளிலும், இக்காலத்துப் பிரம்ம சமாஜிகளின் திருவடிகளிலும் விழுந்து வணங்குகிறேன்" என்று கூறி, வணங்கி எழுந்தார்.

வேணிமாதவர் பலவிதமான காய்கறிகளேச் சமைத்து நல்ல அறுசுவை விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். கூடியிருந்த பக்தர்கள் எல்லோருக்கும் வயிறும் மனமும் நிறைய விருந்தளித்து மகிழ்ந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் பக்தர்களோடு கூடி, ஆனந்தமாக உணவை உட்கொண்டார்.

## புதன்கிழமை, நவம்பர் 15, 1882

இன்று ஸ்ரீராமகிருஷ்ணர் சியாம்புகூரில் ம- பணியாற்றி வந்த வித்யாசாகரின் பள்ளிக்கூடத்திற்கு ஒரு வண்டியில் வந்து சேர்ந்தார். அப்பொழுது மாலை மூன்று மணி இருக்கும். பள்ளியிலிருந்து ம-வையும் தம்மோடு அழைத்துக் கொண்டார். வண்டியில் ராக்காலும், இரண்டொரு பக்தர்களும் இருந்தனர். வண்டி சித்பூர் சாலை வழியாகக் கல்கத்தா மைதானத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. குருதேவர் மைதானத்தில் நடக்கும் வில்சன் சர்க்கஸைப் பார்க்கச் சென்றுகொண்டிருந்தார்.

வண்டியில் செல்லும் குருதேவர் மது அருந்தியவனைப்போல் ஆனந்த போதையில் மிதந்துகொண்டிருந்தார். ஒரு சிறு குழந்தையைப் போல, முகத்தை வண்டிக்கு வெளியே நீட்டிக் கொண்டு, அந்தப் பக்கமும், இந்தப் பக்கமும் வேடிக்கை பார்த்துக்கொண்டும், அதே சமயம் வீதியில் சென்று கொண்டிருந்த பாதசாரிகளைக் குறித்து அன்பர்களிடம் பேசிக் கொண்டும் சென்றார். நடு நடுவே ம-வைப் பார்த்து "எனக்கு இந்த மக்களுடைய பார்வையெல்லாம் கீழ்நோக்கியபடி உலகப் பொருட்களின்மீது படிந்து கிடப்பதாகவே தெரிகிறது. வயிற்றுப் பிழைப்பைத் தேடி ஓடுகிறார்களேயொழிய, இவர்களில் யாரும் கடவுளைச் சிந்திப்பதாகத் தெரியவில்லை" என்றார்.

வண்டி சர்க்கஸ் மைதானத்தை அடையவே எல்லோரும் இறங்கினர். பக்தர்கள் உயர் கட்டணமாகிய எட்டணா[1] டிக்கட் வாங்கினர். குருதேவரை உள்ளே அழைத்துச்சென்று, ஓர் உயர்ந்த இடத்தில் பெஞ்சின்மீது அமர்த்தினர்கள். மிக்க மகிழ்ச்சியோடு உட்கார்ந்துகொண்ட குருதேவர், 'ஆஹா! இந்த இடம் அருமையாக இருக்கிறது. சர்க்கஸ் காட்சிகள் எல்லாவற்றையும் நன்றாகப் பார்க்க முடிகிறது' என்று கூறிப் பூரிப்படைந்தார்.

நீண்ட நேரம் பல சாகசக் காட்சிகள் செய்து காட்டப் பட்டன. ஒரு வளைவுப் பாதையில் ஒரு குதிரை மிக வேகமாக ஓடியது. வளைவுப் பாதையில் இரும்பு வளையங்கள் பொருத்தப் பட்டிருந்தன. குதிரை பாதையில் வேகமாக ஓடிக்கொண்டிருக்

1. தற்போது 50 காசு.

கும்போது, அதன்மீது சவாரி செய்த ஆங்கில மாது, வளையங்கள் வரும்போது அவற்றுள் நுழைந்தும், வெளிவரும்போது குதிரையின்மீது ஒரு காலை ஊன்றிக்கொண்டும் சாகசங்கள் பலவற்றைச் செய்து காட்டினாள். குதிரைமீது குறி தப்பாமலும், நிதானத்தை இழக்காமலும் அந்த மாது வட்டத்துக்குள் நுழைந்து குதிரைசவாரி செய்தது அருமையாக இருந்தது.

சர்க்கஸ் முடிந்ததும் குருதேவர் பெஞ்சிலிருந்து இறங்கி, பக்தர்களோடு மைதானத்தில் இருந்த வண்டியின் அருகே வந்துநின்றார். நல்ல குளிர். ஒரு பச்சைக் கம்பளிப் போர்வையை எடுத்துப் போர்த்திக்கொண்டார். ஒரு பக்தனுடைய கையில் வெற்றிலைப் பாக்குப்பெட்டி ஒன்று இருந்தது. பக்தர்கள் சூழ மைதானத்தில் நின்றுகொண்டே பேசலானார் குருதேவர்.

குருதேவர் : (ம-வைப் பார்த்து) "குதிரை மின்னல் வேகத்தில் ஓடிக்கொண்டிருந்தபோது அந்தப் பெண் எவ்வளவு சாமர்த்தியமாகக் குதிரையின்மீது ஒரு காலில் நின்றுகொண்டிருந்தாள் பார்த்தாயா? அவள் புரிந்த இச்சாகசம் எவ்வளவு கடினமானது! நீண்ட காலமாகப் பழகி வந்திருக்க வேண்டும். கொஞ்சம் கவனக் குறைவு இருந்தால் போதும், காலோ கையோ ஒடிந்துபோயிருக்கும். ஏன்? உயிரே போயிருக்கலாம். இல்லறத்தில் ஈடுபட்டு வாழ்பவருடைய நிலையும் இதுபோன்றதே. பல சாதனங்கள் பழகி ஈசனுடைய அருளைப் பெற்ற ஒருசிலரால்தான் உலகத்தில் சரிவர வாழ முடிகிறது. பெரும்பான்மையான மக்களால் முடிவதில்லை. உலக வாழ்க்கையில் உழல்பவர்கள் அதில் கட்டுண்டவர்களாய் மேலும் மேலும் அதிலேயே மூழ்கி மரண வேதனை அனுபவிக்கின்றனர். ஜனகர் போன்ற ஏதோ ஒருசிலர் கடுமையான தவத்தின் வலிமையினால் இல்லறத்தில் தங்கியிருந்தும் வாழ்க்கையைச் சரிவர நடத்துகின்றனர். எனவே சாதனைகள் பழகுவது மிக மிக அவசியம். இல்லையென்றால், எவராலும் உலக வாழ்க்கையைச் சரிவர நடத்தமுடியாது. (அதாவது இறைவனிடம் மனதை வைத்துப் பற்றற்ற நிலையில் வாழ்க்கை நடத்துவது என்பது சாதனை பழகாவிட்டால் அமையவே அமையாது.)

ஸ்ரீராமகிருஷ்ணர் பக்தர்களோடு வண்டியில் ஏறி அமர்ந்தார். வண்டி போஸ்பாராவில் உள்ள பலராம் போஸின் வீட்டின்முன் வந்து நின்றது. குருதேவர் வண்டியிலிருந்து இறங்கி, பக்தர்களுடன் மாடி அறையை அடைந்தார்.

மாலை வேளையானதால் விளக்குகள் ஏற்றப்பட்டிருந்தன. பக்தர்கள் பலர் கூடியிருக்க, குருதேவர் சர்க்கஸில் தாம் கண்ட காட்சிகளைப் பற்றிப் பேசினார். விரைவில் அவர் மனம் தெய்விகச் சிந்தனையில் மூழ்கிவிடவே பிறகு, இறைவனையன்றி வேறு எந்தப் பேச்சும் அவர் வாயிலிருந்து வரவில்லை.

ஜாதி வேற்றுமை குறித்துப் பேச்சு திரும்பியது. குருதேவர் விளக்கத் தொடங்கினார். "ஒரே ஒரு வழியின் மூலம்தான் இந்த ஜாதி வேற்றுமையை நீக்க முடியும். பக்திதான் அந்த வழி. பக்தர்களுக்கு எவ்வித ஜாதியுமில்லை. தெய்வ பக்தியினால் உடல், மனம், ஆத்மா அனைத்தும் தூய்மை அடைந்து விடுகின்றன. கௌராங்கரும், நித்தியானந்தரும் ஹரியின் நாமத்தை ஜாதி வித்தியாசம் பாராமல் எல்லா மக்களுக்கும் வாரி வழங்கினர். பகவத் சங்கீர்த்தனத்தில் கலந்துகொள்ளச் சண்டாளர்களுக்கும் வாத்தியக் கருவிகளை வழங்கினர். பக்தி இல்லாத அந்தணன் அந்தணனே அல்ல. பக்தியுடைய பறையன் பறையனும் அல்ல. தீண்டப்படாதவர்களிடமும் பக்தி இருக்குமாயின் அவர்கள் புனிதமடைந்து உயர்ந்து விடுகின்றனர்."

உலக பந்தங்களில் கட்டுண்ட இல்லறத்தார்களைப்பற்றிக் குருதேவர் இப்போது பேசத் தொடங்கினார். "இல்லறத்தார்கள் பட்டுப்பூச்சியைப் போன்றவர்கள். இவர்கள் விரும்பினால் உலகப் பற்று மிக்க இந்த வாழ்க்கை என்னும் கூட்டைக் கிழித்துக்கொண்டு வெளியே வரமுடியும். இப்படி வருவது இவர்களால் தாங்க முடியாத ஒன்று. காரணம், அன்போடும் அக்கறையோடும் தாங்களாகவே கட்டிக்கொண்ட கூடு அல்லவா அது? பட்டுப்பூச்சியைப் போலக் கூட்டுக்குள்ளேயே மடிந்து போகிறார்கள். இல்லையெனில், இவர்களை வலையில் சிக்குண்ட மீனைப் போல வாழ்கிறார்கள் எனலாம். எந்த வழியாக வந்து மாட்டிக்கொண்டதோ, அந்த வழியாகவே மீன் தப்பிவிடலாம். மாறாக அது மற்ற மீன்களோடு கும்மாளமடித்தும், ஓடிக்கொண்டிருக்கும் நீரின் சலசலவென்ற இனிய ஒலியைக் கேட்டு மகிழ்ந்துகொண்டும் இருக்கிறதேயொழிய வேறு எதைப் பற்றியும் நினைப்பதில்லை. அதுபோல வலையிலிருந்து தம்மை விடுவித்துக்கொள்கிற சிறு முயற்சியைக் கூட இல்லறத்தார்கள் செய்வதில்லை. குழந்தைகளின் மழலை மொழிகளே நீரின் சலசல ஓசை; வலையில் சிக்கியிருக்கும் மற்ற மீன்களே உறவினர்களும் நண்பர்களும். இந்த வலைதான் குடும்பம். எங்கோ ஒன்றிரண்டு மீன்கள் நல்லபடியாகத் தப்பி ஓடிவிடுகின்றன. இம் மீன்களே விடுதலை பெற்ற ஜீவன் முக்தர்கள்.

குருதேவர் பாடத் தொடங்கினர் :

மாயையின் சக்தியை மதிப்பிடப் போமோ?
ஆயும்நல் லறிவையும் அழித்திடும் அன்ரோ?
அயன்அரி இருவரும் அசேதனர் ஆகி
தயம்இழந் தார்எனில் நார்ஒரு பொருட்டோ?
பெரிஎன நீரினில் பொருத்திவைக் கின்ற
குறுகிய கூடையில் குதிக்குமாம் மீன்கள்.
விரும்பினுல் வெளிப்புறம் திரும்பலாம் எனினும்,
நிரம்புமாம் கூடையில் நெளியுமாம் மீன்கள்.

குருதேவர் தொடர்ந்து பேசலானர்: "மனிதனைப் பருப்புக்கு நிகராகச் சொல்லலாம். மாவு அரைக்கும் இயந்திரக் கற்களின் இடையில் அகப்பட்டுக் கொண்ட பருப்பைப் போல அவன் இருக்கிறான். இயந்திரத்தில் விழும் தானியங்கள் எல்லாம் அரைபட்டு விடுகின்றன. ஆனல் மையக் குச்சியாகிய அச்சின் அருகில் விழும் தானியங்கள் அவ்வளவாக அரைபடுவதில்லை. குச்சியை அடைந்த பருப்பைப் போலக் கடவுளிடம் தஞ்சம் அடைய வேண்டும். அவரைக் கூவி அழை. அவருடைய திருப்புகழைப் பாடு. அப்பொழுது நீ முக்தனுகலாம். இல்லையெனில், எமனுகவுள்ள இயந்திரக் கற்களின் நடுவே அரைபட்டு அழிந்து போவாய்." பிறகு குருதேவர் பாடத் துவங்கினர் :

அம்மாவே! அன்புமிகும் அம்மாவே! என்படகு
சம்சாரக் கடலினிலே மூழ்கிடுதே! என்செய்வேன்?
இம்மோகப் புயற்காற்றே எண்திசையின் பாலிருந்தும்
இரைச்சலுடன் வீசிடுதே எனைவீழ்த்தும் முனைப்புடனே!

என்மனமாம் படகோட்டி எத்திறனும் அற்றுளனே!
என்னுறு உட்பகையாம் துடுப்பாலே எனையெதிர்ப்பர்!
இம்மியுமே இரக்கமிலா இச்சூரு வளியூடே
என்படகைச் செலுத்திட்டேன், அதுமூழ்கிக் கொண்டுளதே!

என்பக்தி எனும்சுக்கான் தானதுவும் பிளந்ததுவே!
என்நம்பிக் கையெனும்பாய் கந்தலாய்க் கிழிந்ததுவே!
என்படகுள் கடல்நீரும் முக்குளித்துப் பாய்கிறதே!
என்செய்வேன் என்னம்மா? வழிகாட்டு! வழிகாட்டு!

என்மங்கும் பார்வையதால் இருள்தனையே காணுகிறேன்!
இன்னல்தரும் அலையூடே நான்நீந்தி வந்திடுவேன்!
உன்பேராம் தெப்பமதை உறுதியுடன் நான்பற்றி
உய்யுமவைத்தே அக்கரையில் எனைச்சேர்ப்பாய் என்னம்மா!

இத்தனை நேரமும் அந்த அறையில் உட்கார்ந்து கொண்டிருந்த விஸ்வாஸ் இப்போது எழுந்து சென்றார். ஒரு காலத்தில் பெருஞ்செல்வராக விளங்கிய இம்மனிதர் தீயவழிகளில் சென்று பணத்தை வாரியிறைத்தார். கடைசியில் வறுமை வாய்ப்பட்டு, தற்போது மனைவி, மக்களையும் கவனிப்பதில்லை. விஸ்வாஸைப் பற்றிய பேச்சைப் பலராம் எழுப்பியபோது குருதேவர் கூறினார்:

"அவன் ஓர் அதிர்ஷ்டம் கெட்ட உதவாக்கரை. இல்லறத்தானுக்குச் சில கடமைகள் உண்டு. தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும், ரிஷிகளுக்கும் ஆற்ற வேண்டிய கடமைகள் அவனுக்கு உண்டு. மேலும் மனைவி, மக்களுக்குக் கடன்பட்டவன். கற்புடைய மனைவியாயிருந்தால் அவளை அவன் கடைசிவரை காப்பாற்ற வேண்டும். குழந்தைகள் தக்க வயது அடையும்வரை அவர்களையும் காப்பாற்றித் தீர வேண்டும்.

"சாதுக்கள் மட்டுமே பொருளைச் சேமித்து வைக்கக்கூடாது. பறவையும், துறவியும் நாளைக்கென்று ஒன்றும் சேகரித்து வைப்பதில்லை. இருந்தும் பறவை தன் குஞ்சுகளைக் காப்பாற்றச் சேகரித்து வருகிறது. தன் குஞ்சுக்காக வாயில் உணவைக் கவ்விக்கொண்டு வந்து அதற்கு ஊட்டுகிறது."

பலராம்: "இப்பொழுது விஸ்வாஸ் சாதுக்களோடு இருப்பதை விரும்புகிறான்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: (புன்சிரிப்போடு) "ஒரு சாதுவின் கமண்டலம் (சுரைக்குடுக்கை) எல்லாப் புண்ணியத் தலங்களுக்கும் அவரோடு சென்று நான்கு திக்குகளையும் சுற்றி வருகிறது. ஆயினும் அந்தச் சுரைக்குடுக்கையிடம் உள்ள இயல்பான கசப்பு நீங்குவதில்லை.

"மலயமாருதம் எனப்படும் தென்றல் வீசும்போது மரங்களெல்லாம் சந்தன மரங்களாக மாறி விடுகின்றன. ஆனால் பருத்தி, அரசு, சுக்கங்காய் போன்ற மரங்கள் சந்தன மரங்களாக மாறுவதில்லை. சிலர் கஞ்சா பிடிப்பதற்காகச் சாதுக்களோடு உறவு வைத்துக்கொள்கிறார்கள் (சிரிப்பு). குளிர் தேசத்தில் சாதுக்கள் புகை பிடிக்கிறார்கள் அல்லவா? அப்போது இந்த இல்லறத்தார்கள் அவர்கள் அருகில் அமர்ந்து கொண்டு புகைக் குழாயில் கஞ்சாவை நிரப்புவார்கள். பிறகு மீதியிருப்பதைப் பிரசாதமாகப் பிடிப்பார்கள்." (எல்லோரும் சிரிக்கின்றனர்)

### வியாழக்கிழமை, நவம்பர் 16, 1882

சர்க்கஸ் பார்த்த மறுநாள். அன்று குருதேவர் மீண்டும் கல்கத்தாவிற்கு வந்தார். வைஷ்ணவ சாதுக்களின் மடம் ஒன்று நிம்தோலா பகுதியில் இருந்தது. அதன் தலைவர் ஸ்ரீகிரிதாரிதாஸ் என்பவர். மாலையில் குருதேவர் இங்கு விஜயம் செய்து ஆறு கரங்களைக் கொண்ட கௌராங்க மஹாப் பிரபுவைத் தரிசித்தார். வெகு நாட்களாக அங்குக் கௌராங்கருக்கு ஆராதனை தொடர்ந்து நடைபெற்றுவந்தது.

பின்னர் குருதேவர் சமூலியா என்ற இடத்தில் வசித்துவந்த பிரம்ம சமாஜ உறுப்பினரான ராஜ்மோகன் என்பவருடைய வீட்டிற்கு வண்டியில் சென்றார். இவருடைய இல்லத்தில் நரேந்திரர் முதலான பிரம்ம சமாஜ இளைஞர்கள் ஒன்றுகூடி, காலை வேளைகளில் சமாஜ முறைப்படி வழிபாடுகள் நடத்து வதைப் பற்றிக் குருதேவர் கேள்விப்பட்டிருந்தார். இந்த வழி பாட்டு முறையினைக் காண விரும்பி, ம- முதலான பக்தர் களுடன் குருதேவர் இங்கு வந்து சேர்ந்தார். ராஜ்மோகன் நீண்ட நாளைய பிரம்ம சமாஜ பக்தர்.

அங்கு நரேந்திரரைக் கண்ட குருதேவர் மிக்க மகிழ்ச்சி யடைந்தார். அந்த இளைஞர்கள் எப்படி வழிபடுகிறார்கள் என்பதைத் தாம் பார்க்க விரும்புவதாக அவர் தெரிவித்தார். நரேந்திரர் பாடத்துவங்கினார். பிரியா முதலிய பக்தர்கள் அருகே இருந்தனர். இளைஞன் ஒருவன் வழிபாட்டைத் தொடங்கிப் பின் வருமாறு துதிக்கலாயினான் : "ஓ பகவான்! நாங்கள் அனைத்தையும் துறந்து, உம்மிடம் ஒன்றுபடு வோமாக!" குருதேவருடைய திருவருள் நோக்கினால் தூண்டப் பட்டு, துறப்பதைப் பற்றிப் பேசினான் போலும்! ம- குருதேவரின் வெகுஅருகில் அமர்ந்திருந்தார். அவர் மட்டும் கேட்கும்படி குருதேவர், 'இது நடக்கக் கூடியதா?' என்று கிசுகிசுத்தார். ராஜ்மோஹன் குருதேவரை வீட்டினுள் அழைத்துச் சென்று, தின்பண்டங்களை வழங்கினார்.

### ஞாயிற்றுக்கிழமை, நவம்பர் 19, 1882

ஜகத்தாத்ரி பூஜை கொண்டாடப்பெறும் புனிதத்திரு நாள். அன்று குருதேவரைக் கல்கத்தாவிலுள்ள தன் வீட்டிற்கு வருமாறு அழைத்திருந்தார் சுரேந்திரர்.

கல்கத்தாவிற்கு வந்த குருதேவர், முதலில் சுரேந்திரர் வீட்டிற்கு அருகிலுள்ள பக்தர் மனமோஹன் வீட்டிற்குச் சற்று ஓய்வெடுத்துக்கொள்ளச் சென்றார். ஓய்வுக்குப்பின் வீட்டுத் தாழ்வாரத்தில் அமர்ந்து சிறிது நேரம் உரையாடினார்.

குருதேவர் : "ஒன்றுமில்லாத ஏழை மக்களின் எளிய பக்தியில் இறைவன் பெருமகிழ்வு கொள்கிறான். பிண்ணாக்கோடு கலக்கப்பட்ட வைக்கோலைப் பசு ருசித்துச் சாப்பிடுகிறது.

"ஒரு சமயம் மன்னன் துரியோதனன் தன்னிடம் பெருகிக் கிடக்கும் பொருட்குவியலையும், செல்வ மாட்சியையும் கண்ண பிரானுக்குக் காட்டியபோது, கண்ணன் அங்குத் தங்காமல் ஏழை விதுரனின் விருந்தையே பெரிதும் உவந்து ஏற்றானல்லவா? தன் அடியவரிடத்தில் அளவுக்கு மீறிய அன்பைப் பொழிபவன் இறைவன். அவன் பக்தவத்சலன். கன்றைத் தேடி ஓடும் தாய்ப்பசுவைப் போல, பக்தர்களின் இருப்பிடம் நோக்கி ஓடுகிறான் இறைவன்."

காந்தம் இரும்பை ஈர்ப்பது போன்று பகவானுக்குப் பக்தனிடம் உள்ள கவர்ச்சியை விவரிக்கும்வகையில் குருதேவர் பாட்டு ஒன்றைப் பாடினார். அதன் பிறகு :

"கிருஷ்ண நாமத்தைக் கேட்ட அளவிலேயே சைதன்ய தேவரின் கண்கள் நீரைப் பெருக்கின. **இறைவனே என்றும் உளதாய பொருள். பிற அனைத்தும் இல்லாதவையே;** பொய்ப் பொருட்களே. மனிதர்கள் விரும்பினால் கடவுளைக் காணலாம். அவர்களோ அதற்கு மாறாகப் பெண், பொன் முதலிய ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதிலேயே காலத்தைக் கடத்துகின்றனர். பாம்பின் தலையில் அரியதொரு மாணிக்கமணி இருந்த போதிலும் கீழான தவளையைத் தின்று அது திருப்தி அடைகின்றது.

"**மனிதனுக்கு இன்றியமையாது வேண்டப் படுவது பக்தி ஒன்றுதான்.** பகுத்தறிவின் மூலம் பரமனை யாரால் அறிய முடியும்? எனக்கு வேண்டியதெல்லாம் இறைவனிடத்து நான் கொள்ளும் பக்தியே. அவனுடைய பெருமைகளை, கீர்த்திகளை அறிந்துகொள்வதால் எனக்கு ஆக வேண்டியது என்ன? போதை தருவதற்கு ஒரு கோப்பை மதுவே போதும் எனும் போது, கடையில் இருக்கும் சாராயத்தின் கணக்கைப் பற்றி

நான் ஏன் கவலைப்படவேண்டும்? ஒரு குவளைத் தண்ணீர் என் தாகத்தைத் தீர்த்துவிடும்போது இந்தப் பூமியில் கிடைக்கும் மொத்தத் தண்ணீரைப்பற்றி நான் அறிந்து ஆவதென்ன?"

குருதேவரின் வருகையை எதிர்பார்த்த வண்ணம் பக்தர் சுரேந்திரர் வீட்டில் மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தார். அப்பொழுது ம- உள்ளே நுழைந்தார். ம-வைக் கண்டதும் பரபரப்புடன் 'குருதேவர் எங்கே?' என்று கேட்க, அதைத் தொடர்ந்து குருதேவரின் வண்டி வீட்டு வாசலில் வந்து நின்றது.

வண்டியிலிருந்து இறங்கிய குருதேவர் சுரேந்திரரின் வீட்டிற்குள் நுழைந்தார். மாடி வரவேற்பறையில் பக்தர்கள் பலர் அமர்ந்திருந்தனர். சுரேந்திரருடைய சகோதரர் ஒரு நீதிபதி. அவரும் வந்திருந்தார். குருதேவர் சுரேந்திரரின் சகோதரனைப் பார்த்து, "நீ ஒரு நீதிபதி. அது நல்லதுதான். ஆனால் எல்லாம் ஈசனுடைய சக்தியால் நடக்கிறது என்பதை அறிந்துகொள். இந்த உயர்ந்த பதவியை அவர்தான் உனக்கு அளித்திருக்கிறார். அதனால்தான் உனக்கு இந்த உயர் பதவி கிடைத்திருக்கிறது. நாமே பெரியவர்கள் என்று மக்கள் நினைக்கின்றனர். வீட்டுக் கூரையில் பெய்யும் மழைநீர் திரண்டு குழாயின் மூலம் சிங்கம் போன்ற முகத்தின் வழியாகக் கீழே விழுகிறது. அது பார்ப்பதற்குச் சிங்கம் தன் வாய் வழியாகத் தண்ணீரை வெளியே கொட்டுவதுபோல் தோன்றுகிறது. ஆனால் தண்ணீர் எங்கிருந்து வருகிறது? எங்கோ ஆகாயத்தில் வந்து குவியும் மேகம் தண்ணீராக மாறுகிறது. மழையாக வீட்டின்மீது பொழிகிறது. அந்தத் தண்ணீர் நன்றாகச் சேமிக்கப்பட்டுக் குழாயின் மூலம் சிங்கமுக வாய் வழியாக வெளியே வருகிறது."

சுரேந்திரருடைய சகோதரர் : "ஐயனே, பெண்களின் உரிமை பற்றியும், ஜாதி வேற்றுமை ஒழிப்பைப் பற்றியும் பிரம்ம சமாஜம் பிரசாரம் செய்து வருகிறது. இவற்றைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவனிடம் முதன் முதலில் புதிதாக அன்பு ஏற்படும்பொழுது இப்படி எண்ணத் தோன்றுகிறது. பெரிய சுழற்காற்று அடிக்கும்போது புழுதி மேலே கிளம்பும். அப்பொழுது எது புளிய மரம், எது மாமரம் என்று அறிந்துகொள்ள முடிவதில்லை. காற்று நின்ற பிறகு எல்லாம் தெளிவாகத் தெரிகின்றன. கவர்ச்சி என்ற புயற்காற்று நின்று

விட்டால் சிறிது சிறிதாக இறைவன் ஒருவனே குணக்குன்று, என்றும் உளதான பொருள், மற்றவையெல்லாம் நிலையற்றவை என்பதை நன்றாக உணர்ந்துகொள்ள முடிகிறது. **சாதுக்களுடைய சங்கமும், தவமும் இல்லையாயின் இதைப் புரிந்து கொள்வது கடினம்.** மிருதங்க ஓசையைப் 'பம், பம்' என்று வாயினால் ஒலிப்பது என்ன பயனைத் தரும்? கையினால் அல்லவா வாசித்துக் காட்ட வேண்டும். இது மிகவும் கடினம். வெறும் சொற்பொழிவுகள் செய்வதனால் என்ன பயன்? தவம் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் அவைகளைப் புரிந்து கொள்ள முடியும்.

"ஜாதி வேற்றுமையைப் பற்றி நீங்கள் கேட்டீர்கள். ஒரே ஒரு வழியினால்தான் ஜாதி வேற்றுமையை ஒழித்துக்கட்ட முடியும். அதுதான் இறைபக்தி. அடியார்கட்குள்ளே ஜாதி வேற்றுமை கிடையாது. தீண்டப்படாத ஜாதியும் பக்தியால் தூய்மை யடைகிறது. சண்டாளனுக்குப் பக்தி ஏற்படுமானால், அவன் சண்டாளனே அல்ல. சைதன்யதேவர் சண்டாளர்களையும், தாழ்ந்த மக்களையும் கட்டி அணைத்துக் கொண்டார்.

"பிரம்ம சமாஜத்தவர்கள் ஹரிநாமத்தை உச்சரிக்கிறார்கள். இது மிகவும் நல்லது. மனத்துடிப்போடு இறைவனை அழைத்தால் அவனுடைய கருணைப் பார்வை நம்மீது படும். அவனுடைய காட்சி கிட்டும்.

"எல்லா வழிகளாலும் அவனை அடையலாம். ஒரே கடவுளைப் பல பெயர்களால் அழைக்கிறோம். ஒரு படித்துறையில் இந்துக்கள் தண்ணீர் பருகும்போது அதைத் 'தண்ணீர்' என்கின்றனர். மற்றொரு துறையில் கிறித்துவர்கள் 'வாட்டர்' என்கின்றனர். இன்னொரு துறையில் இஸ்லாமியர்கள் 'பானி' என்கிறார்கள்."

சுரேந்திரரது சகோதரர்: "ஐயா, 'தியாசபி'யைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அற்புதங்களை நிகழ்த்தக்கூடிய சக்தியை இவர்கள் பெறுவதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். பிசாசுகளைக் கட்டுப்படுத்தக்கூடிய ஒரு மனிதனை நான் ஒரு வீட்டில் பார்த்திருக்கிறேன். அந்தப் பிசாசு பல பொருட்களை அவனுக்குக் கொண்டு வந்து கொடுக்கும். இந்த அசாதாரண சக்திகளைப் பெறுவதனால் என்ன பயன்? இதனால் கடவுளைக்

காண முடியுமா? கடவுளை அடைய முடியாவிட்டால் எல்லாமே வீண்தான்."

### நவம்பர் 26, 1882

மாலை நான்கு மணியிருக்கும். கல்கத்தாவிலுள்ள சிந்தூரியாப்பட்டி என்ற இடத்தில் வசித்துவந்த, மணிலால் மல்லிக் என்பவருடைய வீட்டில் நடைபெற்ற பிரம்ம சமாஜ ஆண்டு விழாவில் கலந்துகொள்ள குருதேவர் பக்தர்களுடன் வந்திருந்தார். ம-வும், குருதேவருடைய மற்ற பக்தர்களும், விஜய கிருஷ்ண கோஸ்வாமியும், மற்றும் பல பிரம்ம சமாஜ பக்தர்களும், மல்லிக்கின் உறவினர்களும் ஏராளமாக அங்குக் குழுமியிருந்தனர். சிறந்த முறையில் விழாவைக் கொண்டாட ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. விஜயர் வழிபாட்டைச் செய்வதாக இருந்தார். மல்லிக் பக்தர்களை உபசரிக்க வேண்டி, அனைத்துவித ஏற்பாடுகளையும் செய்திருந்தார். பிரகலாத சரித்திரம் பற்றிய கதாகாலட்சேபம் முடிந்ததும் அனைவருக்கும் பிரசாதம் வழங்கப்படும். பாகவதர், புராணத்திலிருந்து பிரகலாதர் சரித்திரத்தை விளக்கி வரலானார். பிரகலாதருடைய தந்தை இரண்யகசிபு ஹரியை நிந்திக்கிறான்; தனது மகன் பிரகலாதனை அடிக்கடித் துன்புறுத்துகிறான். கைகளைக் கூப்பிக் கொண்டு, பிரகலாதன் ஹரியிடம் பிரார்த்தனை செய்துகொண்டு கூறுகிறான்: 'ஏ ஹரி! என் தந்தைக்கு நல்ல புத்தியைக் கொடு!' இச்சொற்களைக் கேட்ட அளவில் குருதேவர் கண்களில் நீர் வழியலாயிற்று. விஜயர் முதலானோர் குருதேவரின் அருகில் உட்கார்ந்திருந்தனர். குருதேவருக்கு பாவநிலை ஏற்பட்டது.

சிறிது நேரத்திற்குப் பின் விஜயர் முதலிய பக்தர்களைப் பார்த்துப் பேசத் துவங்கினார் குருதேவர். "பக்தியே சாரமானது. பகவானின் நாமத்தையும், திருப்புகழையும் எப்போதும் பாடிக் கொண்டேயிருந்தால் பக்தி உண்டாகிறது. ஆஹா! சிவநாதருக்குத் தான் எத்தகைய பக்தி! சர்க்கரைப் பாகில் மூழ்கிய பாலாடை போல் அல்லவா பக்திப் பெருக்கில் தோய்ந்திருக்கிறார். ஒருவன் என்னுடைய மதம்தான் உண்மையானது; மற்ற மதங்களெல்லாம் தவறானவை என்று நினைப்பது சரியல்ல. எல்லாப் பாதைகள் வழியாகவும் அவரை அடைய முடியும். உண்மையான மனத்துடிப்பு இருந்தால் போதும். அவரை அடையக் கணக்கில்லாத பாதைகள், கணக்கில்லாத மதங்கள் இருக்கின்றன.

"இதோ பார். கடவுளை நிச்சயமாகக் காண முடியும். கடவுள் மனம், வாக்குக்கு எட்டாதவர். அதாவது விஷயப் பற்றுடைய மனத்திற்குப் புலப்படாதவர் என்று வேதங்கள் கூறுகின்றன. இது உலக ஆசை கொண்டவன் மனத்திற்கு அவர் புலப்படாதவர் என்பதையே கூறுவதாகும். வைஷ்ணவ சரணர் கூறுவதுண்டு: 'தூயமனம், தூயபுத்தி இவற்றிற்குக் கடவுள் புலப்படுகிறார்'.[1] சாதுக்களின் சேர்க்கை, இறைவனிடம் பிரார்த்தனை, குருவின் உபதேசம் முதலியவை பக்திக்கு மிகவும் அவசியமானவை. அப்பொழுதுதான் மனம் தூய்மையடையும். பிறகு கடவுட் காட்சி கிட்டும். படிகாரம் அழுக்குத் தண்ணீரைத் தூய்மை செய்கிறது. அதன் பிறகு நமக்கு அதில் நம் முகத்தைப் பார்க்க முடிகிறது. தூசு படிந்த கண்ணாடியில் முகத்தைப் பார்க்க முடியாது.

"மனம் தூய்மை அடைந்தபின், இறைவனிடம் பக்தி ஏற்பட்டு, ஈசனுடைய அருளினால் அவருடைய காட்சி கிட்டுகிறது. காட்சி கிடைத்த பிறகு, அவருடைய ஆணை கிடைக்கும். ஆணை கிடைத்த பிறகு, மக்களுக்கு உபதேசம் செய்யலாம். ஆரம்பத்திலேயே பிரசங்கங்கள், உபதேசங்கள் செய்வது நல்லதல்ல. ஒரு பாட்டு இருக்கிறது. அதைப் பாடுகிறேன் கேளுங்கள்" இவ்வாறு கூறி அப்பாட்டைப் பாடினார் குருதேவர். அதன் பொருள் :

"மனமெனும் கோயிலை முதலில் தூய்மைப்படுத்த வேண்டும். பிறகு இறைவனுடைய வடிவத்தை அங்குப் பதித்துப் பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். இந்த ஏற்பாடுகளைச் செய்யாமல் வெறும் சங்கை மட்டும் ஊதி ஆர்ப்பாட்டம் செய்வதில் என்ன இலாபம்?"

பிறகு விஜயகோசுவாமி உயர்ந்த பீடத்தில் அமர்ந்து கொண்டு பிரம்ம சமாஜ முறைப்படி வழிபாட்டைச் செய்ய ஆரம்பித்தார். வழிபாடு முடிந்ததும் அவர் குருதேவர் அருகில் சென்று அமர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (விஜயரை நோக்கி) "ஒன்றுமட்டும் எனக்குத் தெரிய வேண்டும். நீங்கள் ஏன் அடிக்கடி பாவம் பாவம் என்று கூறுகிறீர்கள்? 'நான் பாவி', 'நான் பாவி' என்று நூறு முறை ஒருவன் சொன்னால், அவன் அப்படியே பாவி ஆகி விடுகிறான். 'இறைவனுடைய பெயரைக் கூறுகிறேன். என்னிடம் பாவம் எங்கிருந்து வரும்?' என்ற திடமான நம்பிக்கை

[1] மைத்ரேயி உபநிஷதம்.

இருக்க வேண்டும். கடவுளே நம்முடைய தாயும் தந்தையும். எனவே அவரிடம் 'நான் பாவம் செய்துவிட்டேன், இனி இது போல் செய்யமாட்டேன்' என்று முறையிடுங்கள். அவருடைய பெயரைக் கூவி அழையுங்கள். அப்படிக் கூறுவதனுல் உடல், மனம் அனைத்தும் பரிசுத்தமடைகின்றன. நாவும் பரிசுத்தமடைகிறது."

**டிசம்பர், 1882**

பிற்பகல் வேளை. குருதேவர் தட்சிணேசுவரத்துக் கோவிலில் தம் அறையை ஒட்டினாற் போன்ற மேற்குத் தாழ்வாரத்தில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தார். பாபுராம், ம-ராம்தயாள் முதலானோர் அங்கே இருந்தனர். அவர்கள் இரவைக் கோவிலில் கழிப்பதாக இருந்தனர். ம-விற்குப் பள்ளி விடுமுறை தொடங்கிவிட்டது. எனவே ம- நாளைய தினமும் கோவிலிலேயே தங்குவதாக இருந்தார். பாபுராம் அப்பொழுதுதான் புதிதாக வரத் தொடங்கியிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (பக்தர்களைப் பார்த்து) "எல்லாம் ஈசன் செயல் என்ற அறிவு உண்டானல், அதுவே ஜீவன் முக்த நிலை. ஒருமுறை கேசவர் சம்புமல்லிக்குடன் இங்கு வந்திருந்தார். நான் அவரிடம் சொன்னேன், 'இறைவனின் விருப்பமின்றி ஓர் இலையும் அசைவதில்லை'. அப்படியிருக்க என் சொந்த விருப்பம் என்பது எங்கே இருக்கிறது? எல்லோரும் இறைவனுக்குக் கட்டுப்பட்டவர்களே.

"தோதாபுரி ஒரு பெரிய ஞானியாய் இருந்தும் ஒருமுறை தண்ணீரில் மூழ்கி இறப்பதற்காகக் கங்கைக்குச் சென்றார். இங்கு பதினெரு மாதங்கள் தங்கியிருந்தார். அப்போது ஒரு முறை அவருக்குப் பொறுக்க முடியாத வயிற்றுநோய் கண்டது. நோயின் வேதனை தாங்க முடியாமல் கங்கையில் மூழ்கி இறப்பதற்காகச் சென்றார். கங்கையில் குளிக்கும் துறைக்கு அருகே ஒரு மடு. அங்கு ஆழம் அதிகம். ஆனால், என்ன ஆச்சரியம்! அவர் கங்கையில் இறங்கி எவ்வளவு தூரம் சென்றாலும் முழங்காலுக்குமேல் தண்ணீர் இருக்கவில்லை. மறுபடியும் முயன்றார். கடைசியாக இது காளியின் சோதனை என்பதை அறிந்து திரும்பிவந்தார். ஒருமுறை எனது உடல் நிலை நோயால் மிகவும் பாதிக்கப்பட்டிருந்தது. வேதனை தாளாமல் என் கழுத்தை வெட்டிக்கொள்ள எண்ணினேன். அதனல்தான் நான் அன்னையிடம், 'தாயே நான் இயந்திரம்,

நீ அதை இயக்குபவள். நான் தேர், நீ அத்தேரை ஓட்டுபவள் (சாரதி). நீ ஆட்டுவிக்கிறாய், நான் ஆடுகிறேன். எப்படிச் செய்விக்கிறாயோ அப்படி நான் செய்கிறேன், என்று கூறினேன்". குருதேவருடைய அறையில் பக்தர்கள் பக்திப் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தனர்.

அப்போது நந்தன்தோட்டம் என்ற இடத்திலிருந்து ஸ்ரீநாத்மித்ரா என்பவர் தமது நண்பர்களுடன் வந்து கலந்து கொண்டார். குருதேவர் அவரைச் சுட்டிக்காட்டியபடி 'இதோ, இவனுடைய கண்களின் வழியாக, இவனுடைய உள்ளத்தின் நிலையை என்னால் பார்க்க முடிகிறது. கண்ணாடி அலமாரியிலுள்ள பொருட்களைக் கண்ணாடி வழியாகப் பார்ப்பதுபோல் இவன் மனத்தில் உள்ளதை அப்படியே பார்க்கிறேன்' என்றார்.

ஸ்ரீநாத், யக்ஞநாத் ஆகிய இருவரும் நந்தன்தோட்டத்தைச் சேர்ந்த பிரம்ம பக்தர்களின் உறவினர்கள். ஒவ்வோர் ஆண்டும் இவர்கள் ஒவ்வொருவருடைய வீட்டிலும் பிரம்ம சமாஜ ஆண்டு விழா நடப்பது வழக்கம். இந்த விழாவிற்கு ஒரு முறை குருதேவர் சென்றபோது இவர்களைக் கண்டிருக்கிறார்.

இரவு வேளை. கோவிலில் பூஜையும் ஆரத்தியும் நடந்து முடிந்தன. குருதேவர் தம் அறையில் சிறிய கட்டிலின்மீது உட்கார்ந்து தியானத்தில் ஆழ்ந்திருந்தார். சிறிது நேரத்தில் பரவச நிலையை அடைந்தார். இந்த நிலை சற்றே தணிந்ததும், 'தாயே, அவனையும் உன்னிடம் இழுத்துக்கொள். அவன் எவ்வளவு பணிவுடையவனாக இருக்கின்றான்! உன்னைப் பார்க்க வந்து போய்க் கொண்டிருக்கிறான்' என்று மெதுவாகக் கூறிக் கொண்டார். குருதேவர் பாவ நிலையில் ஒருவேளை பாபுராமைப் பற்றிக் கூறுகிறார் போலும்! பிற்காலத்தில் குருதேவரின் முதன்மையான சீடர்களுள் பாபுராமும் ஒருவர் ஆனார்.

பாபுராம், ம-, ராம்தயாள் முதலியோர் உட்கார்ந்திருந்தனர். இரவு எட்டு அல்லது ஒன்பது மணி இருக்கும். குருதேவர் பல வகைப்பட்ட சமாதித் தத்துவங்களை விளக்கிக் கொண்டிருந்தார். ஜட சமாதி, சேதன சமாதி, ஸ்தித சமாதி, உன்மனா சமாதி என்று பலவகைப்பட்ட சமாதி நிலைகளைப் பற்றி விளக்கிக்கூறினார். பிறகு இல்வாழ்க்கையின் இன்ப துன்பங்களைப் பற்றிப் பேச்சு திரும்பியது. உலகில் இவ்வளவு துன்பங்களை இறைவன் படைத்தது ஏன்? என்பதைப் பற்றிய பேச்சு அது.

"ம- ஒருமுறை என்னிடம் வித்யாசாகர் மனம் புண்பட்டவராய்ப் பின்வருமாறு கூறினர். 'இறைவனிடத்தில் போய் நாம் ஏன் முறையிட வேண்டும்? முறையிடுவதால் என்ன பயன்? நான் கூறும் இந்த நிகழ்ச்சியைச் சிந்தித்துப் பாருங்கள். அப்போது தெரியும். ஒரு காலத்தில் நம் நாட்டின்மீது படையெடுத்த செங்கிஸ்கான் நாட்டைக் கொள்ளையடித்ததோடு மட்டுமின்றி கணக்கற்ற மக்களைச் சிறையில் அடைத்தான். சிறையில் அடைபட்ட மக்களின் தொகை ஒரு இலட்சத்துக்கு எட்டிவிட்டது. சேனைத் தலைவன் செங்கிஸ்கானிடம் சென்று, "அரசே! இவர்கட்கு யார் உணவிடுவது? இவர்களை நம்மோடு வைத்திருப்பதும் ஆபத்தானது; விடுவிப்பதோ அதைவிட ஆபத்தானது. நான் என்ன செய்வது?" என்று கேட்டபோது, அந்தக் கொள்ளைக்காரன், "உண்மை தான். இப்போது என்ன செய்யலாம்? சரி, எல்லோரையும் கொன்றுவிடு" என்றான். அவர்களைக் கண்டதுண்டங்களாக்க ஆணையும் பிறப்பித்தான். இப்போது கவனியுங்கள். இறைவன் இந்தப் படுகொலையைப் பார்த்துக் கொண்டிருந்தானல்லவா? ஏன் இதைத் தடுக்கவில்லை? எந்த விதத்திலும் தடுத்ததாகத் தெரியவில்லையே? கடவுள் உண்டா? இல்லையா? என்பது பற்றி எனக்குத் தேவையில்லை. எந்த நன்மையும் எனக்கு அவரிடமிருந்து ஆக வேண்டியது இல்லை' என்று கூறி வருத்தப்பட்டார்".

ஸ்ரீ ராமகிருஷ்ணர் : "இறைவன் எதை, எக்காரணத்தினால் செய்கிறான் என்பதை நம்மால் அறிய முடியுமா என்ன? அவர் படைக்கிறார், காக்கிறார், அழிக்கிறார். அவர் ஏன் அழிக்கிறார் என்பதை நம்மால் என்றேனும் அறியக் கூடுமா? நான் அன்னையிடம், 'தாயே, நான் உன்னுடைய செயலை அறிய வேண்டிய அவசியம் இல்லை. எனக்கு உன் பாத கமலங்களைப் பணியும் பக்தியை அளிப்பாய்' என்று கேட்கிறேன். மானிட வாழ்க்கையின் குறிக்கோள் இப்பக்தியைப் பெறுவதே. மற்றவைகளைப் பற்றித் தேவி அறிவாள்.

"தோட்டத்திற்கு நான் வந்தது பழம் சாப்பிடவேயன்றி தோட்டத்தில் எவ்வளவு மரங்கள், எவ்வளவு கிளைகள், எவ்வளவு இலைகள் என்று கணக்குப் பார்ப்பதற்கல்ல. நான் கனியுண்ண வேண்டும். அதுதான் முக்கியம். இலைகள் முதலியவற்றைக் கணக்கிடுவதால் என்ன பயன்?"

குருதேவரின் அறையில் விரிப்பினை விரித்து, அன்றிரவு பாபுராம், ம-, ராம்தயாள் மூவரும் உறங்கினார்கள்.

இரவு இரண்டு, மூன்று மணியிருக்கும். குருதேவரின் அறையில் விளக்கு அணைக்கப்பட்டிருந்ததால் ஒரே இருட்டாக இருந்தது. அவர் தம் படுக்கையில் உட்கார்ந்தபடியே பக்தர்களோடு நடுநடுவே பேசிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (ம-முதலியவர்களை நோக்கி) "கருணையும், மாயையும் இருவேறு பொருட்கள். மாயை என்றால் உடன் பிறந்தவர்களிடம் ஏற்படும் பாசம்; தாய், தந்தை, சகோதரர், சகோதரி, மனைவி, மக்கள் என்று உற்றார் உறவினர் மீது ஏற்படும் அன்பு; அவர்களை நம்மவர்கள் என்று பாவித்துக்கொள்ளுதல். எல்லா உயிர்களிடமும் அன்பு செலுத்துவது—அதாவது எல்லோரையும் தன் உறவினராகப் பார்ப்பது கருணை, சம தரிசன நிலை. வித்யாசாகரிடம் இருப்பதைப் போல் யாரிடம் கருணை இருக்கிறதோ, அது இறைவனுடைய கருணையில் வந்தது என்பதை அறிந்து கொள். கருணையினால்தான் எல்லா உயிரினங்களுக்கும் சேவை செய்ய முடியும். மாயையும் இறைவனிடமிருந்தே வருகின்றது. மாயையின் வழியாக இறைவன் சுற்றத்தார்களுக்குச் சேவை செய்யும் மனோநிலையைத் தருகிறான். ஆனால் ஒன்று; மாயையால் நம்மை அறியாமையில் மூழ்கவைத்து, உலக பாசங்களில் கட்டுப்பட்டவனாகச் செய்கிறான். கருணையின் மூலம் மனத்தூய்மையை உண்டாக்குகிறான். நாளடைவில் தளைகளிலிருந்து விடுபடுகிறோம்.

"மனத்தூய்மை ஏற்படாவிட்டால் இறைக் காட்சி ஒரு போதும் கிட்டாது. ஆசை, கோபம், பேராசை எனும் பகைகளை வெற்றி கண்டால் கடவுளின் கருணை சுரக்கும். அப்போது அவருடைய காட்சி கிட்டும். உங்களுக்கு மிக இரகசியமான செய்தி ஒன்றைக் கூறுகிறேன். காமத்தை வெல்ல நான் பல சாதனைகள் புரிந்திருக்கிறேன். 'ஜெய்காளி, ஜெய்காளி' என்று கூறிக்கொண்டு ஆனந்தாசனத்தைப் பலமுறை சுற்றிச் சுற்றி வந்திருக்கிறேன். எனக்குப் பத்துப் பதினொரு வயதிருக்கும்போது கமார்புகூர் கிராமத்தில் சமாதிநிலை ஏற்பட்டது. வயல் வரப்பின் வழியாகச் சென்று கொண்டிருந்த பொழுது ஏற்பட்ட ஒரு காட்சி என்னைச் சுய நினைவு இழக்கச் செய்தது. ஈசனது காட்சியைக் காண்கிறோம் என்பதற்குச் சில அறிகுறிகள் இருக்கின்றன. ஜோதியைத் தரிசிப்பது, ஆனந்தக் களிப்பு ஏற்படுவது, மார்பில் வாணம் வெடித்தாற்போல் வாயு வேகமாக மேற்கிளம்புவது போன்ற உணர்ச்சி ஏற்படுவது முதலியவை அத்தகைய அறிகுறிகள் ஆகும்."

மறுநாள் பாபுராமும், ராம்தயாளும் தத்தம் வீட்டிற்குச் சென்றனர். ம – அன்று பகலும், இரவும் குருதேவருடன் தங்கியிருந்தார். அன்று அவர் கோவிலில் பிரசாதம் உட்கொண்டார்.

பிற்பகல் ம–வும், ஓரிரண்டு பக்தர்களும் உட்கார்ந்திருக்க, சில மார்வாரி பக்தர்கள் வந்து குருதேவரை வணங்கினர்கள். கல்கத்தாவில் வியாபாரம் செய்யும் அவர்கள் குருதேவரிடம், "நீங்கள் எங்களுக்கு ஏதாவது உபதேசம் செய்யுங்கள்" என்று வேண்டிக்கொள்ள குருதேவர் சிரித்துக்கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (மார்வாரி பக்தர்களைப் பார்த்து "இதோ பாருங்கள், 'யான்', 'எனது' இவ்விரண்டும் அறியாமையின் வெளிப்பாடுகள். 'ஈசனே! நீ கர்த்தா. இவ்வுலகம் உன்னுடையது.' இவ்வாறு நினைப்பது ஞானம். இது என்னுடையது என்று எப்படிக் கூற முடியும்? தோட்டத்தின் மேற்பார்வையாளன், 'இது என்னுடைய தோட்டம்' என்று சொல்கிருன். ஏதாவது குற்றத்திற்காக அவன் வேலையிலிருந்து நீக்கப்பட்டால் தன்னுடைய மரப்பெட்டியைக் கூடத் தோட்டத்திலிருந்து வெளியே எடுத்துச் செல்லத் தைரியம் வருவது இல்லை. காமம், கோபம் முதலியவைகள் நம்மை விட்டு அகலா. ஆகவே அவைகளை இறைவனை நோக்கித் திருப்பி விடுங்கள். காமம், பேராசை முதலியன உங்களிடம் இருந்தால், ஈசனை அடைய வேண்டும் என்ற காமமாக மாற்றிக் கொள்ளுங்கள்; அவனிடம் பேராசை கொள்ளுங்கள். தீர ஆராய்ந்து பற்றுகளை அகற்றுங்கள். யானை அடுத்த வீட்டுக்காரரின் வாழை மரங்களைத் தின்னச் செல்லும்போது யானைப் பாகன் அங்குசத்தினல் ஓங்கி அடிக்கிருன்.

"நீங்கள் வியாபாரிகள். படிப்படியாகத் தான் வியாபாரத்தை உயர்த்திக்கொள்ள முடியும் என்பது உங்களுக்குத் தெரிந்ததே. சிலர் முதலில் எண்ணெய் வியாபாரம் செய்கின்றனர். பணம் சிறிது சம்பாதித்த பிறகு துணி வியாபாரம் செய்யத் தொடங்குகின்றனர். அதுபோலவே இறைவனுடைய வழியில் முன்னேறிச் செல்ல வேண்டும். இடையிடையே சில தினங்கள் தனிமையிலிருந்து அதாவது ஏகாந்தமாக நீண்ட நேரம் இறைவனைக் கூவி அழைக்க வேண்டும். ஆனல் உண்மை என்ன தெரியுமா? தக்க சமயம் வரவேண்டும். இல்லாவிட்டால் ஒன்றும் நடக்காது. சிலருக்கு இன்னும் உலக இன்பங்களும், பல காரியங்களும் நிறைவேருமல் இருக்கின்றன. ஆகவேதான் அவர்களுக்கு, ஆத்மிக விஷயத்தில் முன்னேறத் தாமதம் ஏற்படுகிறது. பழுக்காத கட்டியை அறுத்

தால் தீமைதான் ஏற்படும். அதனால் நன்றாகப் பழுத்தப் பின்னரே வைத்தியன் அதற்கு அறுவைச் சிகிச்சை செய்கிறான்.

"குழந்தை தாயிடம், 'அம்மா நான் இப்போது தூங்கப் போகிறேன். நான் சிறுநீர் கழிக்க வேண்டிய நேரம் வந்ததும் என்னை எழுப்பிவிடு' என்று கூறியது. அதற்குத் தாய், 'குழந்தாய்! அப்படிப்பட்ட நேரம் வந்தால் நீயாகவே எழுந்து விடுவாய். நான் உன்னை எழுப்ப வேண்டிய அவசியம் ஏற்படாது' என்றாள்". (எல்லோரும் சிரித்தனர்)

மார்வாரி பக்தர்கள் அடிக்கடி குருதேவருக்குகாக இனிப்புகள் பழங்கள், வெல்லம், கற்கண்டு முதலியவற்றை எடுத்து வருவார்கள். வெல்லம், கற்கண்டு முதலியவற்றில் பன்னீர் வாசனை நிறைந்திருக்கும். அநேகமாக குருதேவர் அவைகளைச் சாப்பிடுவதில்லை. காரணம், அவர்கள் பல பொய்பித்தலாட்டங்களைக் கூறிப் பணம் சம்பாதிக்கின்றனர் என்பதால் தான். அவர் மார்வாரி பக்தர்களுக்குப் பேச்சின் இடையில் மீண்டும் உபதேசம் செய்யலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இதோ பாருங்கள்! வியாபாரத்தில் இறங்கினால் உண்மை கூறுவதில் தளர்ச்சி ஏற்படுகிறது. வியாபாரத்தில் இலாபநஷ்டங்கள் ஏற்படும். குருநானக், 'நன்னடத்தையில்லாதவனுடைய உணவையுண்ணச் சென்ற போது, அவைகள் இரத்தத்தில் தோய்ந்து கிடப்பதைக் கண்டேன்' என்று கூறியிருக்கிறார். சாதுக்களுக்குப் பரிசுத்த மான பொருட்களைக் கொடுக்க வேண்டும். தீய வழியில் ஈட்டிய பொருட்களைக் கொடுக்கக் கூடாது. உண்மையைக் கடைப்பிடித்தால் இறைவனை அடையலாம்.

"எப்பொழுதும் இறைவனது திருப்பெயரைச் சொல்ல வேண்டும். காரியங்களில் ஈடுபட்டிருக்கும்போது கூட மனத்தை அவனிடம் வைத்திருக்க வேண்டும்.

"எனக்கு முதுகில் ராஜபிளவை வந்தது என்று வைத்துக் கொள்ளுங்களேன். நான் எந்தக் காரியத்தில் ஈடுபட்டிருந் தாலும் மனம் கட்டியையே நினைத்துக் கொண்டிருக்கிறது. இராம நாம பஜனை நல்லது. 'தசரதனுடைய பிள்ளை எவரோ, அவரே, அந்த இராமரே இந்த உலகத்தைப் படைத்திருக்கிறார்; அவரே எல்லா ஜீவ ராசிகளுடைய மனத்திலும் வீற்றிருக்கிறார்; நமக்கு மிக அருகில் இருப்பவரும் அவரே; நம் உள்ளும் புறமும் நிறைந்திருப்பவரும் அவரே!'

வஹி ராம் தசரத் கி பேடா
வஹி ராம் கட்கட் மே லேட்டா
வஹி ராம் ஜகத் பசேரா
வஹி ராம் சப்சே ந்யாரா.

# குருதேவரும் விஜயகிருஷ்ணகோஸ்வாமியும்

வியாழக்கிழமை, டிசம்பர் 14, 1882

பிற்பகல் வேளை. தட்சிணேசுவரக் கோயில். ஸ்ரீராம கிருஷ்ணரின் அறை. உச்சிப்பொழுதில் சற்று இளைப்பாறிய பின் ஸ்ரீராமகிருஷ்ணர் கட்டிலின் மீது உட்கார்ந்திருந்தார், அப்பொழுது விஜயகிருஷ்ண கோஸ்வாமி குருதேவரைக் காண வந்தார். இரண்டு, மூன்று பிரம்ம சமாஜ அன்பர்களும் உடன் வந்தனர். இவர்கள் கல்கத்தாவிலிருந்து ஒரு படகில் குருதேவரின் மிகச் சிறந்த பக்தரான பலராமோடு வந்தார்கள்.

பெரும்பாலும் ஞாயிற்றுக் கிழமைகளில்தான் பக்தர்கள் பேரெண்ணிக்கையில் குருதேவரைக் காண வருவார்கள். குருதேவருடன் தனித்துப் பேச விரும்புபவர்கள் மற்ற நாட்களில் வருவது வழக்கமாயிருந்தது.

பரமஹம்ஸர் கிழக்குத் திசையைப் பார்த்தவண்ணம் கட்டிலின் மீது உட்கார்ந்திருந்தார். விஜயர், பலராம், ம- மற்றும் பல அடியார்கள் குருதேவரை நோக்கியவண்ணம் தரையில் அமர்ந்து கொண்டிருந்தனர். பாயின் மீது சிலர் அமர்ந்திருந்தார்கள். அந்த அறையிலிருந்து மேற்கு வாயில் வழியாகக் கங்கையைக் காணலாம். குளிர்காலத்துக் கங்கை அமைதியுடனும், தெளிவான தண்ணீரைக் கொண்டும் காட்சியளித்தாள். குருதேவருடைய அறையின் மேற்குப் புறக் கதவை யடுத்து அரை வட்டத் தாழ்வாரம் இருந்தது. அதை யடுத்துப் பூந்தோட்டம். பின்னர் தடுப்புச் சுவர். அதற்கும் அப்பால் புவியோரின் பாவத்தைப் போக்கும் புண்ணிய கங்கை காளிகோயிலின் பாதங்களை வருடியவாறு ஆனந்தமாக ஓடிக் கொண்டிருந்தாள்.

குளிர்காலத்திற்குரிய கம்பளிப் போர்வையினை அனைவரும் போர்த்திக் கொண்டிருந்தார்கள். வயிற்றுப் பிணி காரணமாக மிகுந்த வேதனைப்பட்ட விஜயர், தக்க மருந்தைக் கூடவே கொண்டு வந்திருந்தார். மருந்து அருந்த வேண்டிய வேளை வந்ததும் மருந்தை எடுத்துக் குடித்தார்.

விஜயர் சாதாரண பிரம்ம சமாஜத்தில் ஒரு சம்பளம் பெறும் பிரசாரகர். அவருக்கு பிரம்ம சமாஜக் கொள்கைகள் பலவற்றைக் குறித்துக் கருத்து வேறுபாடு இருந்தது. ஊதியம் பெற்றுப் பணியாற்றும் அவரால் தம் கருத்தைக் கூறவோ, தம் விருப்பம் போல் செயலாற்றவோ இயலவில்லை.

விஜயர் கண்ணியமான குடும்பத்தில் உதித்தவர். அத்வைத கோஸ்வாமியின் சந்ததியில் வந்தவர். அத்வைத கோஸ்வாமி ஒரு ஞானி. அவர் உருவமற்ற அருவப் பரம்பொருளைத் தியானித்தவர். அதே சமயத்தில் மிகச் சிறந்த பக்தராகவும் விளங்கியவர். ஸ்ரீசைதன்ய மகாப்பிரபுவுடன் வந்தவர்களில் நெருக்கமானவர். ஹரியிடம் பிரேமப் பித்துப் பிடித்தவராகத் தம்மை மறந்து நடனமாடுவாராம். அப்படி ஆடும்பொழுது உடலின் மீதிருந்து துணி கூட நழுவி விழுந்து விடுமாம். இப்படி அவரைப் பற்றிக் கூறுவதுண்டு. விஜயர் பிரம்ம சமாஜத்தில் சேர்ந்திருந்தார். அந்த சமாஜக் கொள்கைப்படி கடவுளை அருவமாகத் தியானித்து வந்தார். தம்முடைய முன்னோரான அத்வைத கோஸ்வாமியைப் போல் சிறந்த பக்த ராகவும் இருந்தார். அந்தப் புனிதப் பரம்பரையைச் சேர்ந்தவ ரல்லவா? அந்த இரத்தம் இவர் உடலிலும் ஓடிற்று. அவர் உள்ளத்தில் இருந்த ஹரிப்பிரேமை என்னும் விதை முளைத்து எழுவதற்கான அரிய சந்தர்ப்பத்தை எதிர் நோக்கி இருந்தது. ஆகவே தான் தேவர்களுக்கும் காணக் கிடைக்காத ஸ்ரீராமகிருஷ்ணரது ஹரிப்பிரேமையாம் பித்துப் பிடித்த நிலையைக் கண்டு அதில் ஒன்றிப்போனார்.

படமெடுத்தாடும் பாம்பு பாம்பாட்டியின் மகுடி இசைக்கும், மந்திரத்திற்கும் கட்டுப்படுவதுபோல் குருதேவரின் திருவாக்கி லிருந்து வெளிவரும் கடவுள் மயமான அமுத மந்திரப் பேச்சைக் கேட்க மனம் விரிந்தவராய் விஜயர் உட்கார்ந்திருந்தார். பரமஹம்சர் ஹரிப்பிரேமையில் மூழ்கிக் குழந்தைபோல் நடனம் செய்யும்பொழுது விஜயரும் அவருடன் சேர்ந்து நடனம் ஆடுவார்.

தட்சிணேசுவரத்துக்கு அருகில் உள்ள ஏடேதா ஹா என்ற ஊரில் வாழ்ந்துவந்த விஷ்ணு என்ற சிறுவன் சில நாட்களுக்கு முன் கத்தியால் தன் கழுத்தை வெட்டிக்கொண்டு மாண்டான். அவனைப் பற்றிப் பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (விஜயர், ம- முதலியவர்களைப் பார்த்து) "அந்தப் பையன் மாண்டான் என்று கேள்விப்பட்டதிலிருந்து என் மனம் வருந்திக் கொண்டிருக்கிறது. அவன் இங்கு அடிக்கடி வருவான். பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தான். உலக வாழ்க்கை தனக்குப் பிடிக்கவில்லை என்று சொல்லுவான். மேற்குப் பிரதேசத்திற்குப் போய் அவன் தன் உறவினர் வீட்டில் சில நாட்கள் தங்கியிருந்தான். அப் போது அங்கே திறந்தவெளியிலும், காட்டிலும், மலைகளிலும் தனிமையில் உட்கார்ந்து கொண்டு தியானம் பழகுவான். பல தெய்விகக் காட்சிகளைக் கண்டதாகக் கூறியிருக்கிறன். ஒருவேளை அவனுக்கு இதுவே கடைசிப் பிறப்பாக இருக்கலாம் என்று நினைக்கிறேன். முற்பிறவியில் அதிகமாகச் சாதனைகள் செய்திருக்க வேண்டும். சிறிது பாக்கியிருந்து, அதுவும் இம் பொழுது தீர்ந்துவிட்டது என்று நினைக்கிறேன்.

"பூர்வ ஜன்ம வாசனையை ஒப்புக்கொள்ளத்தான் வேண் டும். ஒரு சமயம் அடர்ந்த காட்டில் ஒருவன் பிணத்தின் மேல் அமர்ந்தவாறு தேவியைக் குறித்துச் சாதனை செய்து கொண்டிருந்தான். அவன் கண்முன் பல பயங்கரக் காட்சிகள் தோன்றின. கடைசியில் புலி ஒன்று அருகே வந்து அவனைக் கொன்றுவிட்டது. அந்த இடத்துக்குப் பக்கத்தில் ஒருவன் இந்தப் புலிக்குப் பயந்துகொண்டு மரத்தின்மேல் உட்கார்ந்திருந்தான். பூஜைக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் அங்கே இருப்பதைக் கண்டு அவன் கீழே இறங்கி வந்து அந்தப் பிணத்தின்மேல் உட்கார்ந்து சாதனை செய்யத்தொடங்கினன். சற்று நேரம் ஜபம் செய்த மாத்திரத்திலேயே தேவியின் தரிசனம் அவனுக்குக் கிடைத்தது. தேவி அவனிடம், 'உன்னைக் கண்டு நான் மகிழ்ச்சி அடை கிறேன். வேண்டும் வரம் கேள்!' என்றுள், அவன் அன்னை யின் திருவடிகளில் வீழ்ந்து 'தாயே! முதலில் உன்னை ஒன்று கேட்க விரும்புகிறேன். உன் செயலைக் காண எனக்கு வியப்பாக இருக்கிறது. அந்த மனிதன் எவ்வளவு துன்பப் பட்டுப் பல பொருட்களைச் சேகரித்து, உன்னைக் குறித்து இவ்வளவு நாட்கள் சாதனை செய்து வந்தான். அவனிடம் உனக்குக் கருணை பிறக்கவில்லையே! எனக்கோ ஒன்றும்

தெரியாது. நான் சாதனைகளைப் பற்றிக் கேள்விப்பட்டது கூட இல்லை. நான் பூஜையே செய்யாதவன்; சாதனை புரியாதவன்; ஞானம் அற்றவன்; பக்தி இல்லாதவன். அப்படியிருந்தும் என்மேல் உனக்கு இவ்வளவு கருணை ஏன்?' என்றான். அன்னை சிரித்துக் கொண்டே, 'மகனே! உன்னுடைய முற்பிறவிகளைப் பற்றிய நினைவு உனக்கில்லை. நீ பல பிறவிகளாக என்னைக் குறித்துத் தவம் செய்து வந்திருக்கிறாய். அந்தத் தவத்தின் வலிமையால் உனக்கு இந்த வாய்ப்புக் கிட்டியுள்ளது. ஆகவே, என்காட்சியைப் பெற்றாய். இப்பொழுது கேள் என்ன வரம் வேண்டும் என்று' என்றாள்."

ஒரு பக்தர்: "தற்கொலையைப் பற்றிக் கேட்கவே எனக்கு நடுக்கமாயிருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "தற்கொலை செய்துகொள்வது பெரும் பாவம். அப்படிச் செய்வதால் திரும்பத் திரும்பப் பிறவி எடுக்க வேண்டும். வாழ்க்கையின் வேதனைகளை மீண்டும் அனுபவிக்க வேண்டும்.

"ஆனால், கடவுளது காட்சியைப் பெற்ற பிறகு எவனாவது உடலை விட்டு விடுவானேயானால் அதைத் தற்கொலை என்று கூற முடியாது. உடலை இவ்வாறு விடுவதால் எந்தவிதத் தவறும் இல்லை. ஞானம் அடைந்த பிறகு சிலர் உடலை விட்டு விடுகின்றனர். மண்ணினால் செய்த அச்சில் பொன்னைக் காய்ச்சிச் சிலையாக வார்க்கிறார்கள். அதன் பிறகு வேண்டு மானால் அந்த அச்சை வைத்துக் கொள்ளலாம், இல்லா விட்டால் உடைத்தும் விடலாம்.

"பல ஆண்டுகளுக்கு முன்பு வராக நகரிலிருந்து என்னைக் காண ஓர் இளைஞன் அடிக்கடி வருவான். அவனுக்கு வயது இருபது இருக்கும். கோபால்சென் என்பது அவனுடைய பெயர். இங்கே வந்தால் போதும், அவனுக்குப் பரவசநிலை அதிகமாக உண்டாகிவிடும். அவன் கீழே விழுந்து கைகால்களை ஒடித்துக் கொள்ளாமல் இருப்பதற்காக ஹிருதயன் அவனைப் பிடித்துக் கொள்வான். அந்த இளைஞன் ஒரு நாள் என் காலைப் பிடித்துக் கொண்டு, 'நான் இனிமேல் இங்கே வரமுடியாது. நான் போகிறேன்' என்று சொல்லிவிட்டுச் சென்றான். சில தினங் களுக்குப் பிறகு அந்த இளைஞன் உடலை விட்டு விட்டான் என்று கேள்விப்பட்டேன்.

"மக்களில் நான்கு வகை உண்டு என்று சொன்னேன் அல்லவா? அவர்கள் பத்தர்கள், முமுட்சுகள், முக்தர்கள், நித்தியர்கள் எனப்படுவர். உலக வாழ்க்கை ஒரு வலை போன்றது. மக்கள் மீனுக்கு ஒப்பானவர்கள். ஈசுவரன் (மாயையைப் படைத்தவன்) மீன் பிடிப்பவன். செம்படவனுடைய வலையில் மீன்கள் வந்து விழும் போது சிலமீன்கள் வலையிலிருந்து தப்பிக்க, அதாவது முக்திபெற முயல்கின்றன. இவர்கள் முமுட்சுகள். தப்ப முயல்பவர்கள் எல்லோருமே தப்புவதில்லை. இரண்டொரு மீன்கள் 'தபாங்' என்ற சப்தத்தோடு தப்பி ஓடுகின்றன. அப்பொழுது அருகிலுள்ளவர்கள், 'பார்த்தாயா! அந்தப் பெரிய மீன் தப்பிவிட்டது!' என்று பேசிக்கொள்கின்றனர். இப்படி இரண்டொருவர் தப்பித்து முக்தி அடைகிறார்கள். சில மீன்கள் இயல்பாகவே எச்சரிக்கையாக இருக்கும். அவை ஒரு பொழுதும் வலையில் அகப்பட்டுக் கொள்வதில்லை. நாரதர் போன்ற மகான்கள் இத்தகைய நித்தியர்கள். இவர்கள் ஒருபொழுதும் சம்சார வலையில் அகப்பட்டுக் கொள்வதில்லை. பொதுவாகப் பெரும்பான்மையான மீன்கள் வலையில் விழுந்து விடுகின்றன. 'நாம் வலையில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம். நாம் இறக்க நேரிடும்' என்ற எண்ணமே இவைகளுக்கு இருப்பதில்லை. வலையில் அகப்பட்டுக் கொண்ட இந்த மீன்கள் வலைக்கயிற்றைப் பற்றிக்கொண்டே இங்குமங்கும் ஓடுகின்றன. மேலும் தண்ணீரின் அடியில் சென்று தம்மைச் சேற்றில் மறைத்துக் கொள்ள முயல்கின்றன. தப்புவதற்கு எந்த முயற்சியும் செய்வதில்லை. சொல்லப்போனால், இன்னமும் நன்றாகச் சேற்றில் அழுந்திக் கொள்ளுகின்றன. இத்தகையவர்களே பத்த மனிதர்கள். உலக வலையில் பிடிபட்டிருந்தும் தாங்கள் அங்கே சுகமாக இருப்பதாக நினைத்துக் கொள்கின்றனர்.

"கட்டுண்ட மனிதர்கள், குடும்பத்தில், அதாவது காமினி காஞ்சனத்தில் பற்றுக் கொண்டிருக்கின்றனர். அழுக்குக் கடலில் மூழ்கிக் கிடக்கின்றனர். ஆனால், சுகமாக இருப்பதாக நினைக்கின்றனர். முமுட்சுக்களும், முக்தர்களும், இந்த சம்சாரத்தைப் பாழுங் கிணறாக நினைக்கிறார்கள். சம்சாரம் அவர்களுக்குப் பிடிப்பதில்லை. ஆகவே சிலர் ஞானமடைந்த பிறகு, ஈசனது காட்சி கிட்டிய பிறகு, உடலை விட்டு விடுகின்றனர். ஆனால் இப்படி உடலை விடுவது என்பது எளிதான காரியமல்ல. பத்த மனிதர்கள், அதாவது சம்சாரத்தில் சிக்கியவர்கள் எளிதில் ஞான விழிப்பினைப் பெறுவதில்லை. எத்தனையோ துன்பங்கள், துயரங்கள், ஆபத்துக்கள் இவைகளில் அகப்பட்டுக் கொண்ட பிறகும் அவர்களுக்குப் புத்தி வருவதில்லை.

"ஒட்டகம் முட்செடியை விரும்பித் தின்கிறது. அப்படித் தின்னும்போது, முட்கள் குத்திக் கிழிக்க வாயிலிருந்து இரத்தம் பீறிடுகிறது. இருந்தாலும் அது முட்களைத் தின்னுவதை விடுவதில்லை. இதுபோல் சம்சாரிகள் எத்தனையோ துக்கங்களுக்கு உள்ளாகின்றனர். இருந்தாலும் சில நாட்களுக்குள் அவற்றையெல்லாம் மறந்து அவர்கள் முன்போலவே ஆகி விடுகிறார்கள்.

"ஒருவனுடைய மனைவி இறந்து விடுகிறாள் அல்லது அவனுக்குத் துரோகம் செய்து விடுகிறாள். இதைக்கண்ட பிறகும் அவன் மீண்டும் வேறு மணம் செய்து கொள்கிறான். குழந்தை இறந்து விட்டாலோ எவ்வளவு துக்கம்! ஆனால் சில நாட்களுக்குப் பிறகு அவை எல்லாவற்றையும் மறந்து விடுகின்றனர்! எந்தத் தாய் குழந்தையை இழந்தாளோ அவளே சில நாட்களுக்குப் பிறகு தலையை வாரிக்கொண்டு நகைகளைப் போட்டுக் கொள்கிறாள். இப்படிப்பட்ட மனிதர்கள் தங்கள் பெண்ணின் திருமணம் காரணமாகச் சொத்துக்கள் எல்லாவற்றையும் இழந்துவிடுகின்றனர். அப்படியிருந்தும் ஆண்டுதோறும் பெண்குழந்தைகளைப் பெற்றெடுக்கின்றனர். நீதிமன்றத்தில் வழக்காடி எல்லாச் சொத்துக்களையும் இழக்கின்றனர். ஆனால் மறுபடியும் வழக்குத் தொடர்கின்றனர். ஏற்கெனவே பிறந்திருக்கின்ற குழந்தைகளுக்கே சோறு போட வழியில்லை. படிக்க வைக்க முடிவதில்லை. நல்ல வீட்டில் அவர்களை வாழவைக்க முடிவதில்லை. ஆனாலும் ஆண்டுதோறும் குழந்தைகளைப்பெற்றுக் கொள்வதில் குறைச்சலில்லை.

"சில சமயங்களில் பாம்பு பெருச்சாளியை விழுங்க முயல்கிறது. உலக ஆசை கொண்டவர்களின் வாழ்க்கை இதைப் போன்றதுதான். பாம்பினால் பெருச்சாளியை விழுங்கவும் முடிவதில்லை. விட்டுவிடவும் முடிவதில்லை. பத்த மனிதர்கள், வாழ்க்கையில் எந்த விதப்பயனும் இல்லை என்பதை அறிந்து கொள்கிறார்கள். ஆனாலும் அவர்கள் வாழ்க்கையை விடுவதில்லை. 'ஆம்டா' என்ற ஒரு வகைப் பழம் இருக்கிறது. அதில் இருப்பதெல்லாம் வெறும் தோலும் கொட்டையும்தான். இருந்தாலும் அதை யாரும் எறிந்துவிடுவதில்லை. சாப்பிடுகிறார்கள். அதுபோல பத்த ஜீவனால் வாழ்க்கையை உதறிவிட முடிவதில்லை.

"கேசவ சேனருடைய உறவினர் ஒருவருக்கு ஐம்பது வயது இருக்கும். நான் அவரைப் பார்த்தபோது சீட்டு ஆடிக் கொண்டிருந்தார். இன்னமும் கடவுளின் நாமத்தை உச்சரிக்க அவருக்குச் சமயம் வரவில்லைபோலும்! பத்த ஜீவனை அறிந்து கொள்வதற்கு மற்றொரு அடையாளமும் இருக்கிறது. அவனைச் சம்சார வாழ்விலிருந்து பிரித்து, வேறு நல்ல இடத்தில் வைத்தால், மூச்சுத் திணறி ஏக்கத்தால் இறந்து போவான். மலத்தில் இருக்கும் பூச்சி, அங்கேதான் இன்பம் காண்கிறது. அந்த மலத்தையே உண்டு கொழுத்து வளர்கின்றது. அந்தப் பூச்சியைச் சோற்றுப் பாத்திரத்தில் எடுத்து வைத்தால், அது இறந்து விடுகிறது" (எல்லோரும் அமைதியாக அசைவற்று அமர்ந்திருந்தனர்.)

விஜயர்: "இந்த பத்த ஜீவர்கள் எத்தகைய மனநிலையை அடைந்தால் முக்தி பெறலாம்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஈசனின் கருணையால் தீவிர வைராக்கியம் உண்டானால், காமினி காஞ்சனப் பற்றுக்களிலிருந்து இவர்கள் விடுதலை பெறமுடியும். தீவிர வைராக்கியம் என்றால் என்ன? 'எல்லாம் காலக்கிரமத்தில் நடக்கும், இப்போதைக்குக் கடவுளின் பெயரை மட்டும் சொல்லுவோம்' என்றெல்லாம் இருப்பது மந்த வைராக்கியம். ஆனால் தீவிர வைராக்கியம் ஏற்பட்டிருக்கிற ஒருவனுடைய பிராணன், ஒரு தாயின் மனம் தன் கைக்குழந்தைக்காக ஏங்கித் துடிப்பதைப்போல இறைவனுக்காக ஏங்கித்துடிக்கும். தாங்க முடியாத மனவேதனையை அனுபவிக்கும். தீவிர வைராக்கியம் உள்ளவன் இறைவனைத் தவிர, வேறு எதையும் வேண்டுவதில்லை. அவன் இல்லறத்தை ஒரு பாழுங் கிணறாகப் பார்க்கிறான். 'அதில் மூழ்கி விடுவேனோ' என்று அஞ்சுகிறான். உறவினர்களைக் கருநாகமாகக் காண்கிறான்; அவர்களின் அண்மையிலிருந்து விலகித் தொலைவில் ஓடிவிட விரும்புகிறான்; ஓடியும் விடுகிறான். முதலில் வீட்டுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வோம்; பிறகு இறைவனைச் சிந்திப்போம் என்ற எண்ணம் அவனிடம் தோன்றவே தோன்றாது. அவன் உறுதியான நம்பிக்கையும் தீவிர வைராக்கியமும் உடையவன்.

"எதைத் தீவிர வைராக்கியம் என்று சொல்வது? ஒரு கதை சொல்லுகிறேன் கேளுங்கள். ஓர் ஊரில் நீண்ட காலமாக மழை பெய்யவில்லை. மிகுந்த வறட்சி ஏற்பட்டது. குடியானவர்கள் வெகு தொலைவிலிருந்து வாய்க்கால் வெட்டித் தண்ணீர்

கொண்டுவந்தனர். ஒரு குடியானவன் உறுதியான மனம் கொண்டவன். 'கால்வாயை ஆற்றில் இணைத்து வயலுக்குத் தண்ணீர் கொண்டு வரும்வரை நான் கால்வாய் வெட்டும் வேலையை விட்டு விலகமாட்டேன்' என்று சத்தியம் செய்து கொண்டான். கால்வாயை வெட்டும் பணியில் மும்முரமாக ஈடுபட்டான். குளிக்கும் நேரம் வந்தது. அவன் மனைவி, தன் மகளிடம் அவன் எண்ணெய் தேய்த்துக் குளிப்பதற்காக எண்ணெயை அனுப்பி வைத்தாள். மகள் அவனிடம் வந்து 'அப்பா, நேரம் ஆகிவிட்டது. எண்ணெய் தேய்த்துக் குளியுங்கள்' என்று சொன்னாள். அவன், 'எனக்கு இப்பொழுது வேலை இருக்கிறது, நீ போ' என்று எரிந்து விழுந்தான். பிற்பகல் வந்தது. மணி இரண்டும் ஆயிற்று. அப்பொழுதும் குடியானவன் வயலில் வேலை செய்வதை நிறுத்தவில்லை. குளிக்கவேண்டும் என்ற நினைவே அவனுக்குத் தோன்றவில்லை. அப்பொழுது அவனுடைய மனைவி அங்கே வந்து, 'என்ன இன்னும் குளிக்காமல் இருக்கிறீர்களே! உணவு ஆறிப்போகிறதே. நீங்கள் எல்லாவற்றையும் பெரிதாக்கிக் கொள்ளுகிறீர்கள். அளவுக்கு மிஞ்சியே எதையும் செய்கிறீர்கள். இன்று இல்லா விட்டால் இவ்வேலையை நாளைக்குச் செய்து கொள்ளலாமே அல்லது சாப்பிட்டுவிட்டுச் செய்யலாமே' என்றாள். குடியான வனோ பெருங்கோபத்துடன் அவளைப் பார்த்து, 'புத்தி கெட்டவளே! மழையோ பெய்யவில்லை. இருப்பது இந்தக் கொஞ்சம் பயிர்தான். இதுவும் வாடிப் போனால் குழந்தைகள் எதைச் சாப்பிடும்? சோறில்லாமல் சாகவேண்டுமா? இன்று வயலுக்குத் தண்ணீர் கொண்டுவந்த பிறகுதான் குளியல், சாப்பாடு எல்லாம் என்று சத்தியம் செய்திருக்கிறேன்.' என்று கூறி மண்வெட்டியை ஓங்கியபடியே அவளை அடிக்க ஓடினான். மனைவி அங்கிருந்து ஓடிவிட்டாள். குடியானவன் நாள் முழுவதும் முதுகு எலும்பு ஒடிய உழைத்து, மாலை வேளையில் ஆறு வரை கால்வாயை வெட்டி வயலோடு இணைத்து விட்டான். தண்ணீர் 'சலசல' என்று வாய்க்கால் வழியாக ஓடி வயலுக்குள் பாய்வதை வரப்பின் மேல் உட்கார்ந்து கொண்டு மகிழ்ச்சியுடன் பார்க்கலானான். அவன் மனம் அளவற்ற ஆனந்தத்தில் மூழ்கியது. வீட்டிற்குச் சென்று தன் மனைவியைக் கூப்பிட்டான். 'இந்தா! இப்பொழுது குளிக்க எண்ணெய் கொண்டுவா. ஹுக்காவுக்கு ஏற்பாடு செய்' என்றான். பிறகு கவலையற்றுக் குளித்துச் சாப்பிட்டான். படுத்து குறட்டை விட்டு நன்றாகத் தூங்கினான். இத்தகைய மனநிலைதான் தீவிர வைராக்கியத்திற்கு உதாரணம்.

"மற்ருெரு குடியானவன். இவனும் தன் வயலுக்குத் தண்ணீர் கொண்டுவர முயன்று கொண்டிருந்தான். அவனுடைய மனைவி வயலுக்குப் போய், 'பொழுது போய் விட்டதே. வீட்டிற்கு வாருங்கள். இன்று அதிகமாக அலட்டிக் கொள்ள வேண்டாம்' என்ருள். அவனும் உடனே மண் வெட்டியை எறிந்துவிட்டு, 'சரி, நீ கூப்பிடும்போது என்ன செய்வது? இதோ நான் வருகிறேன்' என்று வந்துவிட்டான். (எல்லோரும் சிரிக்கின்றனர்). வயலுக்கு இந்தக் குடியானவனுல் தண்ணீர் கொண்டு வர இயலவில்லை. இது மந்த வைராக்கியத்திற்கு உதாரணம். ஒருமித்த சித்தத்துடன் காரியத்தை முடிக்கக்கூடிய வலிமை வேண்டும். இல்லையேல், எப்படி இந்தக் குடியானவனுக்கு வயலுக்குத் தண்ணீர் கொண்டுவர முடியவில்லையோ அப்படியே மனிதனுக்கும் ஈசுவரனது காட்சியைப் பெறுவதற்கு முடியாது போகும்".

(விஜயரைப் பார்த்து) "முன்பெல்லாம் நீங்கள் அடிக்கடி வருவீர்கள் இப்பொழுது ஏன் வருவதில்லை?"

விஜயர்: "இங்கே வர மிகவும் விருப்பம்தான். ஆனுல், எனக்குச் சுதந்திரம் இல்லை. பிரம்ம சமாஜத்தில் சம்பளத்திற்கு வேலை செய்கிறேன் அல்லவா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: (விஜயரைப் பார்த்து) "காமினியும் காஞ்சனமும் மனிதர்களைக் கட்டுப்படுத்துகின்றன. மனிதர்களின் சுதந்திரம் போய் விடுகிறது. பெண்ணிற்காகத்தான் பொன் தேவைப்படுகிறது. அதற்காக மற்றவர்களுக்கு அடிமையாக நேரிடுகிறது. சுதந்திரம் போய்விடுகிறது. விருப்பம்போல் பணி புரிய முடிவதில்லை.

"ஜய்பூரிலுள்ள கோவிந்தஜீயின் கோயிலுக்கு முதலில் பிரம்மசாரிகளே அர்ச்சகர்களாக இருந்தார்கள். அப்பொழுது அவர்கள் பெரும் ஒளி படைத்தவர்களாக இருந்தார்கள். ஒரு தடவை அரசன் அவர்களைக் கூப்பிட்டு அனுப்பினுன். அவர்கள் போகவில்லை. 'அரசனை இங்கே வரச்சொல்' என்ருர்கள். சில நாட்கள் கழிந்தன. அரசனும் மற்றவர்களும் கலந்து ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தனர். அதன்படி அவர்களுடைய திருமணத்துக்கு ஏற்பாடு செய்தார்கள். அதன் பிறகு அந்த அர்ச்சகர்களைக் கூப்பிட்டனுப்ப வேண்டிய தேவையே அரசனுக்கு ஏற்படவில்லை. அவர்கள் தாமாகவே அங்கே போய் நின்ருர்கள். 'அரசரே! ஆசீர்வாதம் செய்ய வந்திருக்கிறோம். இதோ, அர்ச்சித்த மலர்களைப் பெற்றுக்

கொள்ளுங்கள்' என்று சொன்னார்கள். இப்படி அவர்களுக்கு அடிக்கடி அரசனிடம் வரவேண்டிய தேவை ஏற்பட்டு விட்டது. 'வீடு கட்ட வேண்டும். குழந்தைக்கு உணவு ஊட்டும் விழாச் செய்ய வேண்டும். படிப்புத் துவங்கும் சடங்கு செய்ய வேண்டும்' என்றெல்லாம் பணத்துக்காக அடிக்கடி அரசனிடம் வரவேண்டிய தேவை ஏற்பட்டுவிட்டது!

"இன்னொரு கதை உங்களுக்குத் தெரியுமா? '1300 நேடாக்களும் 1200 நேடிகளும்' என்ற கதை. நேடா என்பது மழித்த மொட்டைத் தலையைக் குறிக்கும். நித்தியானந்த கோஸ்வாமியின் சீடரான வீரபத்திரருக்கு மழித்த தலை கொண்ட சீடர்கள் 1300 பேர் இருந்தனர். அவர்கள் அனைவரும் தியானம் செய்து சித்தர்களாக மாறியதும் வீரபத்திரருக்குப் பயம் உண்டாயிற்று. 'இவர்கள் சித்தி அடைந்துள்ளார்கள். எவரையாவது பார்த்து ஒன்றைச் சொன்னால் அது அப்படியே நடந்துவிடும். இவர்கள் எந்தத் திசைக்குப் போனாலும் அங்கே பயம் நிலவும். மனிதர்கள் அறியாத்தனமாக இவர்களுக்குத் தீங்கு செய்து, அவமரியாதை செய்துவிட்டால் அவர்களுக்கெல்லாம் துன்பம் ஏற்பட்டு விடும்' என்று தனக்குள் நினைத்தார். இவ்வாறு நினைத்த வீரபத்திரர் அவர்களைக் கூப்பிட்டு, 'நீங்கள் கங்கைக்குப் போய் சந்தியாவந்தனம் முதலியவற்றை முடித்துக் கொண்டு வாருங்கள்' என்றார். அதிக காந்தியோடு கூடிய இந்தச் சீடர்கள் கங்கைக்குப் போய் தியானம் செய்துகொண்டே சமாதி நிலையை அடைந்தனர். இந்த நிலையில் பெருத்த அலைகள் அவர்கள் தலைமேல் அடித்துச் சென்றதையும் அவர்கள் உணரவில்லை. சற்று நேரத்திற்குப் பிறகு தண்ணீர் வற்றி விட்டது. அப்போதும் அவர்கள் தியானம் கலையவில்லை. அவர்களுள் நூறு சீடர்கள் தமது குரு வீரபத்திரர் என்ன சொல்லப் போகின்றார் என்பதைத் தியானத்தில் அறிந்து கொண்டார்கள். குருவின் கட்டளையை மறுக்கக் கூடாது என்பதற்காக அவர்கள் அவ்விடத்தை விட்டு ஓடி விட்டனர். பிறகு வீரபத்திரரை அவர்கள் சந்திக்கவே இல்லை. மற்ற ஆயிரத்து இருநூறு சீடர்களும் வீரபத்திரரை சந்தித்தனர். வீரபத்திரர் அவர்களைப் பார்த்து, 'இந்த ஆயிரத்து இருநூறு சிஷ்யப் பெண்கள் உங்களுக்குச் சேவை செய்வார்கள். நீங்கள் இவர்களை மணம் புரிந்துகொள்ளுங்கள்' என்று சொன்னார். சீடர்கள் குருவைப் பார்த்து, 'உங்கள் ஆணைப்படியே ஆகுக; ஆனால் எங்களுள் நூறு சீடர்கள் எங்கேயோ

போய்விட்டார்கள்' என்றனர். பிறகு இந்த ஆயிரத்து இருநூறு சீடர்கள் ஒவ்வொருவரும் தமக்கு சேவை புரியும் பெண்ணுடன் தங்கினர். இதற்குப் பிறகு முன்பிருந்த ஒளி அவர்களிடம் இல்லை. தவவலிமையும் இல்லை. அவர்களுடன் பெண்கள் இருந்தபோது அவர்களுடைய பலம் போய் விட்டது. ஏனென்றால் அவர்கள் பெண்களின் கூட்டுறவால் சுயேச்சையை இழந்து விட்டனர்.

(விஜயரைப் பார்த்து) "உங்கள் ஒவ்வொருவருக்குமே இது தெரியும். பிறரிடம் வேலை செய்வதால் உங்கள் நிலை எப்படித் தாழ்ந்து போய் விட்டது! இன்னும் பாருங்கள். எவ்வளவோ 'பாஸ்'[1] செய்திருந்தும், ஆங்கிலத்தில் பெரும் புலவனாக இருந்தும் ஆங்கிலேய அதிகாரிகளிடம் வேலை செய்து அவர்களுடைய பூட்ஸ் காலால் இரண்டு வேளைகளிலும் உதை படுகிற நிலை. இது தான் பிறரிடம் வேலை பார்க்கும் மக்களுடைய நிலை. இவற்றிற்கெல்லாம் காரணம் காமினிதான். கலியாணம் செய்து கொண்டு, மனைவி மக்களுடன் சந்தைக் கடை விரித்த பிறகு அதைத் திரும்பக் கட்டிக் கொண்டுபோகத் திறன் இல்லை. ஆகவே, இவ்வளவு அவமானமும், அடிமைத்தனமும், மனவேதனையும் படவேண்டி இருக்கிறது.

"முன்பு கூறிய வாய்க்கால் வெட்டிய குடியானவனைப் போன்று தீவிர வைராக்கியம் ஒரு முறை ஏற்பட்டு ஈசுவரனை அடைந்து விட்டால், பிறகு பெண்ணிடம் பற்று ஏற்படுதில்லை. குடும்பத்தில் தங்கியிருந்தாலும் பெண்ணிடம் மயக்கம் வருவதில்லை. அவர்களால் எவ்விதப் பயமும் இல்லை. ஒரு காந்தம் பெரியதாகவும் மற்றொன்று சிறியதாகவும் இருந்தால் அவற்றுள் எது முதலில் இரும்பைக் கவரும்? பெரியதுதான் முதலில் வேகமாக இழுத்துக் கொள்ளும். ஈசுவரன் பெரிய காந்தக் கல். அவன் எதிரில் பெண் ஒரு சிறிய காந்தம். பெண் என்ன செய்ய முடியும்?"

ஒரு பக்தர் : "சுவாமி! அப்படியானால் நாம் பெண்களை வெறுப்பதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "கடவுட் காட்சியைப் பெற்றவன், எந்தப் பார்வையைக் கொண்டு பெண்களைப் பார்த்தால் பயம் ஏற்படுமோ, அந்தப் பார்வையைக் கொண்டு பெண்களைப்

1. படித்துப் பட்டம் பெற்றிருந்தவர்களை குருதேவர் இவ்வாறு குறிப்பிடுவார்.

பார்க்கமாட்டான். அதாவது பெண்களைக் காமப் பார்வையோடு பார்க்கமாட்டான். பெண்கள் அன்னை பராசக்தியின் வெவ்வேறு விதமான தோற்றங்கள் என்ற உண்மையான காட்சியையே அவன் காண்பான். பெண்கள் எல்லோரையும் அவன் தேவியென்றே வழிபடுவான். (விஜயரைப் பார்த்து) நீங்கள் அடிக்கடி இங்கு வாருங்கள். உங்களைப் பார்க்க நான் மிகவும் ஆசைப்படுகிறேன்."

விஜயர் : "பிரம்ம சமாஜ வேலைகளைச் செய்ய வேண்டியிருப்பதால் அடிக்கடி வர முடிவதில்லை. சமயம் கிடைக்கும் போது கண்டிப்பாக வருகிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : (விஜயரிடம்) "இதோ பாருங்கள்! ஆசாரியனுடைய வேலை மிகவும் கடினமானது. ஈசுவரனுடைய நேர்முக ஆணை இல்லாவிட்டால் மக்களுக்குப் போதிக்க முடியாது.

"கடவுளின் ஆணை பெறாமல் நீங்கள் போதிப்பீர்களானால் மனிதர்கள் கேட்கமாட்டார்கள். அந்த உபதேசத்தில் எந்த விதச் சக்தியும் இருக்காது. முதலில் சாதனைகள் புரிந்தோ மற்றெந்த விதத்திலோ ஈசுவரனுடைய காட்சியைப் பெற வேண்டும். அவனுடைய ஆணையைப் பெற்ற பின்னரே பிரசங்கங்கள் செய்ய வேண்டும்.

"கமார்ப்புகூரில் ஒரு குளம் இருக்கிறது. அதன் பெயர் ஹால்தார்புகூர். அதன் கரையில் சிலர் தினமும் மலம் கழித்து வைப்பார்கள். காலை வேளையில் குளிக்கச்செல்வோர் அவ்வாறு அசுத்தம் செய்தவர்களைப் பலவாறாகத் திட்டிக் கூக்குரல் இடுவர். ஆனால், அவ்வாறு திட்டியதனால் எந்தப் பயனும் ஏற்படவில்லை. மறுநாளும் வழக்கம்போல் அதே நிலைதான். கடைசியாகக் கம்பெனி[1] ஆள் ஒருவன் வந்து இங்கு எவரும் இப்படிப்பட்ட காரியத்தைச் செய்யக்கூடாது. செய்தால் தண்டனைக் குள்ளாவார்கள் என்ற அறிக்கைப் பலகையைத் தொங்கவிட்டான். அவ்வளவுதான். குளக்கரையில் அசுத்தம் செய்வது நின்றுவிட்டது.

"ஆண்டவனுடைய ஆணை கிடைத்தபின் எங்கு வேண்டுமானாலும் ஒருவன் ஆசாரியனாக இருக்கலாம், பிரசங்கங்கள்

1 ஸ்ரீராமகிருஷ்ணருடைய காலத்தில் கிழக்கிந்திய கம்பெனி இந்தியாவை ஆட்சி செய்தது.

செய்யலாம். ஆண்டவனுடைய ஆணையை எவன் பெறுகிருனே அவன் அவரிடமிருந்து அதற்கான சக்தியையும் பெறுகிருன். அப்பொழுது தான் இந்தக் கடினமான ஆசாரிய வேலையைச் செய்ய முடியும்.

"ஒரு பெரிய ஜமீன்தாருக்கு எதிராக ஒரு சாதாரண மனிதன் வழக்குத் தொடுத்திருந்தான். அதைக் கண்ட மக்கள் இந்தச் சாதாரண மனிதனுக்குப் பக்க பலமாகப் பலவான் யாரோ ஒருவன் இருக்கிருன் என்பதை அறிந்துகொண்டார்கள். மற்ருெரு பெரிய ஜமீன்தார் அவனுக்குப் பின்னுல் இருந்து கொண்டு வழக்கை நடத்தக் கூடும் அல்லவா? மனிதன் சாதாரணமானவன். ஈசுவரனுடைய நேர்முகச் சக்தியைப் பெருவிட்டால், ஆசாரியனுக இருக்கும் கடினமான வேலையை அவனுல் ஒரு போதும் செய்ய முடியாது".

விஜயர்: "சுவாமி, பிரம்ம சமாஜத்தில் போதனைகள் முதலியன தரப்படுகின்றனவே. அவற்ருல் மக்களுக்கு பயன் ஏதும் ஏற்படுவதில்லையா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உலக பந்தத்திலிருந்து ஒரு மனிதனை விடுவிக்க மற்ருெரு மனிதனுக்கு என்ன சக்தி இருக்கிறது? இந்த புவனமோகினியான[1] மாயை யாருடையதோ, அவர் தான் இந்த மாயையிலிருந்து மனிதர்களை விடுவிக்க முடியும். சச்சிதானந்த குருவைத் தவிர, வேறு கதியில்லை. யார் ஈசுவரனது காட்சியைப் பெறவில்லையோ, யாருக்கு அவருடைய ஆணை கிடைக்கவில்லையோ, யார் ஈசுவரனுடைய சக்தியால் ஆற்றல் உடையவராக ஆகவில்லையோ, அவருக்கு மக்களை இவ்வுலக பந்தத்திலிருந்து, பற்றிலிருந்து விடுவிக்க என்ன திறமை இருக்க முடியும்?

"ஒரு நாள் நான் பஞ்சவடியின் அருகே உள்ள சவுக்குத் தோப்பின் வழியாக மலம் கழிக்கப் போய்க்கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு தவளை உரக்கக் கத்துவதைக் கேட்டேன். ஒரு பாம்பு, தவளையைப் பிடித்துக்கொண்டிருக்கிறது என்பதை அறிந்துகொண்டேன். நீண்ட நேரத்திற்குப் பிறகு திரும்பி வந்தேன். அப்போதும் தவளை கத்துவதைக் கேட்டேன் என்ன நடக்கிறது என்று ஒரு முறை எட்டிப் பார்த்தேன். ஒரு தண்ணீர்ப் பாம்பு தவளையைக் கவ்விக் கொண்டிருந்தது. அதனுல் தவளையை விடவும் முடியவில்லை, விழுங்கவும் முடிய

1. உலகப் பொருட்களின் ஆசையைத் தூண்டிவிடும் சக்தி.

வில்லை. தவளையின் வேதனையும் குறைந்தபாடில்லை. அப்பொழுது நான் நினைத்துக் கொண்டேன்: 'ஒரு நல்ல ஜாதிப் பாம்பு பிடித்திருந்தால் மூன்று குரலுக்குப் பிறகு இந்தத் தவளை மடிந்து போயிருக்கும். ஒரு தண்ணீர்ப் பாம்பல்லவா தவளையைப் பிடித்துக் கொண்டிருக்கிறது! ஆகவேதான் பாம்புக்கும் வேதனை, தவளைக்கும் வேதனை!'

"சத்குரு ஒருவர் வாய்ப்பாரேயானால், சீடனின் அகங்காரம் மூன்று குரலிலேயே அடங்கிவிடும். பக்குவப்படாத குருவாக இருந்தால் குருவுக்கும் வேதனை; சீடனுக்கும் வேதனை. சீடனுடைய அகங்காரம் மறைவதே இல்லை. இல்லறக் கட்டுப்பாடு அறுபடுவதும் இல்லை. பக்குவப்படாத குருவிடம் அகப்பட்டுக் கொண்டால் சீடன் முக்தனாக மாட்டான்".

விஜயர்: "சுவாமி, நாம் ஏன் இவ்வாறு பந்தப்பட்டவர்களாக இருக்கிறோம்? ஏன் ஈசனைக் காண இயலுவதில்லை?"

ஸ்ரீராமகிருஷ்ணர். "மனிதர்களின் அகங்காரம் தான் மாயை. இந்த அகங்காரமான மாயை எல்லாவற்றையும் திரையிட்டு வைத்திருக்கிறது. 'நான்' இறந்தால்தான் எல்லாத் துயரங்களும் விலகும். கடவுளின் கருணையால் 'நான் அகர்த்தா' அதாவது செயலற்றவன் என்ற உணர்வு ஒருவனுக்கு உண்டாகுமேயானால் அவன் ஜீவன் முக்தனாகி, உடலோடு இருக்கும் போதே விடுதலை அடைந்தவனாகிறான். பிறகு அவனுக்குப் பயமில்லை.

"இந்த மாயை, அதாவது 'நான்' என்பது, மேகத்தைப் போன்றது. ஒரு சிறு மேகம் மறைத்து விடுவதால், நம்மால் சூரியனைப் பார்க்க முடிவதில்லை. மேகம் சற்று விலகிவிட்டால் உடனே சூரியனைப் பார்க்க முடிகிறது. குரு கிருபையால் ஒரு முறை 'நான்' என்ற உணர்வு அழிந்து போய்விட்டால், உடனே ஈசுவரனது காட்சி கிடைக்கிறது.

"உண்மையில் ஈசுவரனான இராமச்சந்திரர் இரண்டரை முழம் தூரத்தில் தான் இருக்கிறார். சீதை என்ற மாயைத் திரை நடுவில் இருப்பதனால், இலட்சுமணனாகிய ஜீவனுக்கு, அந்த ஈசுவரனைப் பார்க்க முடியவில்லை. இதோ பார்! இந்தச் சிறு துணியை நான் என் முகத்துக்கு எதிரே பிடிக்கிறேன் இப்போது உங்களால் என்னைப் பார்க்கமுடிவதில்லை. ஆனால், நான் வெகு அருகில்தான் இருக்கிறேன். இவ்வாறு இறைவன் எல்லாவற்றையும் விட நமக்கு மிக அருகில் இருக்கிறான்

இருந்தாலும் இந்த மாயையாகிய திரை இருப்பதால் அவனைப் பார்க்க முடிவதில்லை.

"மனிதன் என்பவன் சச்சிதானந்த சொருபியான கடவுள் தான். ஆனால், மாயை அல்லது அகங்காரத்தினால் பல விதமான உபாதிகள் (தளைகள்) அவனுக்கு ஏற்பட்டிருக்கின்றன. இதனால் அவன் தன் உண்மையான இயல்பை மறந்துவிட்டான்.

"உபாதிகள் ஒவ்வொன்றாக வரவர மனிதன் தன் இயல்பை மாற்றிக்கொள்கிறான். கறுப்புக்கரை வேட்டியை அணிந்திருப்பவனுக்கு நிதுபாபுவின் காதல் கீதங்களும், சீட்டாட்டமும், உலாவச் செல்லும்போது கையில் பிரம்பைச் சுற்றிக் கொண்டே நடப்பதும் போன்ற செயல்கள் தாமாகவே வந்து சேருவதை நீங்கள் பார்த்திருக்கலாம். ஒல்லியாக இருப்பவனும் கூடக் காலில் பூட்ஸ் அணிந்துகொண்டால் அவனை அறியாமலே சீட்டி அடிக்க ஆரம்பித்துவிடுகிறான். படிக்கட்டில் ஏறிச்செல்லும்போது ஆங்கிலேயத் துரைகளைப்போல் குதித்துக் குதித்துச் செல்லுகிறான். மனிதனுடைய கையில் பேனா ஒன்று இருக்கும்போது ஒரு காகிதம் கிடைத்துவிட்டால் போதும், அதன்மீது கிறுக்கிக்கொண்டே இருப்பான். பேனாவின் இயல்பு அப்படிப்பட்டது!

"பணமும் ஒரு கெட்ட உபாதி. பணம் வந்துவிட்டாலே மனிதன் மாறி விடுகிறான். முன்னைய மனிதனாக இருப்பதில்லை. இங்கே ஒரு பிராமணன் அடிக்கடி வந்து செல்வான். அவன் பார்ப்பதற்கு மிகவும் பணிவுள்ளவனாக இருந்தான். சில நாட்களுக்குப் பிறகு நாங்கள் கொன்னகர் என்ற ஊருக்குப் போய்க்கொண்டிருந்தோம். ஹிருதயனும் என்னுடன் வந்தான். நாங்கள் படகை விட்டு இறங்கிய உடனே அந்தப் பிராமணன் கங்கைக் கரையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தோம். அவன் அங்கே காற்று வாங்கிக்கொண்டிருந்தது போல் தோன்றியது. அவன் எங்களைப் பார்த்து, 'பூசாரி எப்படி இருக்கிறாய்? சௌக்கியமா' என்றான். அவனுடைய பேச்சின் தோரணையைக் கேட்டு நான் ஹிருதயனிடம் 'ஹிருதயா, இவனுக்குப் பணம் கிடைத்திருக்கிறது. அதனால் தான் இப்படிப் பேசுகிறான்' என்றேன். ஹிருதயன் சிரித்தான்.

"ஒரு தவளையிடம் ஒரு ரூபாய் இருந்தது. அதனுடைய வளையில் அந்தப் பணம் இருந்தது. ஒரு யானை அந்த வளையைத் தாண்டிச்சென்றது. அதைக் கண்ட தவளை மிகுந்த கோபத்தோடு, வளையிலிருந்து வெளியே வந்து யானையை எட்டி உதைப்பது போல் காலை ஆட்டியது. யானையைப் பார்த்து 'உனக்கு இவ்வளவு துணிச்சலா? என்னைத் தாண்டிச் செல்கிறாயே!' என்று கூறியது. பணத்துக்கு இவ்வளவு அகங்காரம்.

"ஞானம் கிட்டியவுடன் அகங்காரம் போய்விடுகிறது. ஞானம் கிடைத்துவிட்டால் சமாதிநிலை உண்டாகிறது. சமாதி நிலையில் அகங்காரம் அழிந்துபடுகிறது. ஆனால், அத்தகைய ஞானத்தை அடைவது மிகக் கடினம்.

"ஏழாவது நிலையை மனம் அடைந்தால் சமாதி ஏற்படுகிறது என்று வேதம் சொல்லுகிறது. சமாதிநிலை ஏற்பட்டால் 'அஹம்' நான் என்பது போய்விடும். மனம் அங்கும் இங்கும் அலைவது எப்போது? முதல் மூன்று பூமிகளிலேதான். அவை லிங்கம், குஹ்யம், நாபி என்று கூறப்படும். அப்பொழுது மனம் வெறும் சம்சாரத்தில் அதாவது காமினி, காஞ்சனத்தில்தான் இருக்கும். இதயத்தில் மனம் தங்கும்போது ஈசுவர ஜோதியின் தரிசனம் கிடைக்கிறது. ஜோதி தரிசனம் பெற்றவன் வியப்படைந்து, 'இது என்ன! இது என்ன!' என்கிறான். அடுத்த பூமி, கண்டம், அதாவது தொண்டை. மனம் அங்கே தங்கும்போது ஒருவனுக்கு ஈசுவரனைப் பற்றிப் பேசவும் கேட்கவுமே ஆசை எழுகிறது. மனம் புருவத்தின் நடுவே சென்றால் சச்சிதானந்தத்தின் தரிசனம் கிடைக்கிறது. அந்த சச்சிதானந்தத்தைத் தொடவும் ஆலிங்கனம் செய்துகொள்ளவும், விருப்பம் உண்டாகிறது. ஆனால், அவ்வாறு செய்ய முடிவதில்லை. இலாந்தர் விளக்கின் உள்ளே இருக்கும் ஜோதியைப் பார்க்க முடியுமே தவிரத் தொடமுடிவதில்லை. தொடலாம், தொடமுடியும் என்ற எண்ணம் ஏற்படுகிறது. ஆனால், தொடமுடிவதில்லை. ஏழாவது பூமிக்கு மனம் செல்லும் போது, 'நான்' இருப்பதில்லை, சமாதி ஏற்படுகிறது."

விஜயர்: "அந்த நிலையை அடைந்த பிறகு, அதாவது பிரம்மஞானம் ஏற்பட்டபின் மனிதன் எதைப் பார்க்கிறான்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஏழாவது பூமியை மனம் அடைந்த பிறகு, என்ன ஏற்படும் என்பதை வாயினால் சொல்ல முடியாது.

"கப்பல் ஒரு முறை கருப்புத் தண்ணீரை அதாவது கரிய கடல் நீரை அடைந்துவிட்டால் திரும்பி வருவதில்லை. கப்பலைப் பற்றிய செய்தி கிடைப்பதில்லை. கடலைப் பற்றிய செய்தியும் கப்பலிடமிருந்து கிடைப்பதில்லை. உப்புப் பொம்மை ஒன்று கடலை அளக்கச்சென்றது. ஆனால், கடலில் இறங்கின உடனே அது கரைந்து போய்விட்டது. பிறகு கடலின் ஆழத்தை யார் வந்து சொல்வது? எது வந்து சொல்ல வேண்டுமோ அதுவே கரைந்து போய்விட்டது. ஏழாவது பூமியில் மனம் நாசம் அடைகிறது; சமாதிநிலை வாய்க்கிறது. எத்தகைய அனுபவம் அங்கு ஏற்படுகிறது என்பதைச் சொற்களால் விளக்க இயலுவதில்லை.

"எந்த 'நான்' நம்மைச் சம்சாரிகளாக ஆக்குகிறதோ, காமினி,காஞ்சனத்தில் பற்றுவைக்கச்[செய்கிறதோ அந்த'நான்' கெடுதலானது. இந்த 'நான்' இடையில் இருக்கும் காரணத்தால் தான் ஜீவனுக்கும் ஆத்மாவுக்கும் வேறுபாடு ஏற்பட்டிருக்கிறது. தண்ணீரின்மேல் ஒரு கோலை வைத்தால் தண்ணீர் இரண்டு பிரிவாகத் தென்படுகிறது. உண்மையில் தண்ணீர் ஒன்றுதான். கோலின் காரணமாக அது இரண்டாகத் தெரிகிறது. நான் என்பதுதான் இந்தக்கோல். கோலை எடுத்து விடு. ஒரே தண்ணீர் தான் இருக்கும்.

"விலக்கவேண்டிய 'நான்' எது? 'என்னை உனக்குத் தெரியாதா? என்னிடம் எவ்வளவு பணம் இருக்கிறது? என்னை விடப் பெரியவன் யார் இருக்கிறான்?' என்றெல்லாம் பேசச் செய்கிறதே அந்த 'நான்' தான் அது. ஒரு திருடன் பத்து ரூபாயைத் திருடினால் அந்த 'நான்' முதலில் அவனிடமிருந்து பணத்தைப் பிடுங்கிக்கொள்ளும். பிறகு திருடனை நன்றாக அடிக்கும். அத்துடன் நிற்காமல் அக்கம்பக்கத்தவர்களைக் கூப்பிட்டு, அவனைப் போலீசாரிடம் ஒப்படைத்துச் சிறைக்கு அனுப்பும். 'இவன் என்னுடைய பத்து ரூபாயை எடுத்துக் கொண்டு விட்டான்! இவனுக்கு என்னைப் பற்றித் தெரியாதா? இவனுக்கு அவ்வளவு தைரியமா?' என்று கூறும். இதுவிலக்கப் படவேண்டிய 'நான்'.

விஜயர்: "அகங்காரம் அழியாவிட்டால் சம்சாரப் பற்று நீங்காது. சமாதிநிலையும் ஏற்படாது. அதனால் சமாதிநிலையை அடையும் பிரம்ம ஞானி, ஞான மார்க்கத்தைக் கடைப் பிடிப்பதே நல்லதாகும்அல்லவா? பக்தி யோகத்தில் 'நான்' என்பது அழியாமல் இருக்குமானால், 'நான்' அழிந்து போகிற ஞான யோகமே நல்லது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஏதோ இரண்டொருவருக்குச் சமாதி நிலை ஏற்பட்டு, 'நான்' போய்விடுகிறது என்பது உண்மைதான். ஆனாலும், அநேகமாக 'நான்' மறைவதே இல்லை. ஆயிரம் முறை ஆராய்ச்சி செய்தாலும் 'நான்' என்பது எப்படியோ சுற்றி வளைத்துக்கொண்டு மீண்டும் வந்து நிற்கிறது. அரச மரத்தை இன்று வெட்டிவிடு. நாளைக் காலையில் மறுபடியும் வேரில் துளிர் விட்டிருக்கும். ஆதலால் அடியோடு 'நான்' மறையா விட்டால் அந்த 'நான்' எனும் போக்கிரிப் பயல், 'அடிமை நானாக' இருந்து ஒழியட்டும். 'இறைவா, நீ தலைவன். நான் அடிமை' என்னும் இந்த எண்ணத்தில் இரு. 'நான் அடிமை, நான் பக்தன்' இப்படிப்பட்ட, 'நானில்' எந்தவிதத் தவறும் இல்லை. இனிப்பை உட்கொண்டால் அஜீரணம் உண்டாகிறது. ஆனால், கற்கண்டு அத்தகைய இனிப்பு இல்லை.

"ஞான யோகம் மிகக் கடினமானது. 'நான் உடம்பு' என்னும் உணர்வு மறையாவிட்டால் ஞானம் ஏற்படாது. கலியுகத்தில் பிராணனுக்கு அன்னம் ஆதாரமாக உள்ளது. தேகாத்ம புத்தி அதாவது 'தேகம் நான்' என்ற அறிவு மறைவதில்லை. ஆகவே, கலியுகத்துக்குப் பக்தியோகம் ஏற்றது. பக்தி மார்க்கம்தான் எளிய மார்க்கம். மனம் மிக ஏங்கி இறைவனுடைய பெயரையும் புகழையும் பாடு. பிரார்த்தனை செய். இறைவனை அடைவாய். அதில் எவ்வித ஐயமும் இல்லை.

"தண்ணீரின்மேல் மூங்கிலை வைக்காமல் வெறும் கோடு ஒன்று மட்டும் கிழிக்கிறோம். அப்போது தண்ணீர் இரண்டு பட்டது போல் தோன்றுகிறது. ஆனால், அந்தக் கோடு அதிக நேரம் தங்குவதில்லை. அதே போல், 'நான் அடிமை', 'நான் பக்தன்', 'நான் குழந்தை' என்பன வெறும் நீர்க் கோடுகள் மாத்திரமே ஆகும்!"

விஜயர் : (குருதேவரைப் பார்த்து) "சுவாமி, 'நான்' என்பதை விலக்க வேண்டும் என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். 'நான் அடிமை' என்று சொல்வதில் குற்றம் இல்லையா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இல்லை. 'நான் அடிமை', அதாவது 'நான் ஆண்டவனின் அடிமை; நான் அவனுடைய பக்தன்' என்ற அகங்காரத்தில் எவ்வகைத் தவறும் இல்லை. சொல்லப் போனால், இதனால் ஈசுவரனின் காட்சி கிடைக்கிறது."

விஜயர் : "அது சரி, 'நான் அடிமை' என்பதில் உள்ள 'நான்' என்பதை வைத்திருப்பவரின் காமம், வெகுளி முதலியவை என்ன ஆகும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சரியான பாவ நிலை ஏற்படுமானால், காமம் வெகுளி எல்லாமே வெறும் பெயரளவில்தான் இருக்கும், இறைவனுடைய காட்சிக்குப் பின்னர் 'நான் அடிமை', 'நான் பக்தன்' என்ற உணர்வு ஒருவனுக்கு இருக்குமானால், அவனால் யாருக்கும் கெடுதல் செய்யமுடியாது. பரிசமணி தீண்டியதும் இரும்புவாள் பொன் வாளாக மாறுகிறது. வாள் உருவத்தில் பழையது போலவே இருக்கிறது. ஆனால், அது யாருக்கும் துன்பம் செய்யாது. அதனால் வெட்ட முடியாது.

"தென்னை மட்டை உலர்ந்து மரத்திலிருந்து பெயர்ந்து விழுந்துவிட்டால், மரத்தில் வெறும் சுவடு மட்டுமே காணப் படுகிறது. அந்தச் சுவட்டின் மூலம் அந்த இடத்தில் தென்னை மட்டை முன்பு இருந்தது என்பதை அறிய முடிகிறது. அது போல, இறைக் காட்சி பெற்றவனிடம் பெயரளவில் மட்டுமே அகங்காரம் இருக்கிறது. காமம், வெகுளி என்று சொல்லப் படுபவை வெறும் பார்வை அளவில் மட்டுமே இருக்கின்றன. குழந்தையின் நிலை அவனுக்கு ஏற்பட்டு விடுகிறது. குழந்தைக்கு சத்துவம், ராஜசம், தாமசம் என்ற மூன்று குணங்களிலுமே பிடிப்பு இல்லை. குழந்தைக்கு ஒரு பொருள் மேல் ஆசை வைக்க எவ்வளவு நேரம் பிடிக்கிறதோ அதே நேரத்தில் அந்த ஆசையையும் அது விட்டுவிடும்.

"ஐந்து ரூபாய் விலை உள்ள ஒரு துணியை இரண்டு பைசா விலையுள்ள பொம்மையைக் கொடுத்து நீ குழந்தையிடமிருந்து சுலபமாக வாங்கி விடலாம். முதலில் குழந்தை பிடிவாதமாக; 'இல்லை, நான் கொடுக்க மாட்டேன். அப்பா எனக்கு இதை வாங்கிக் கொடுத்தார்' என்று தான் சொல்லும். குழந்தைக்கு எல்லோரும் சமம். இவன் உயர்ந்தவன், இவன் தாழ்ந்தவன் என்ற பேத உணர்ச்சி அதற்கு இல்லை. அதற்கு ஜாதி வித்தியாசமும் இல்லை. தாயார் ஒருவனைக் காட்டி 'இவன்தான் உன் அண்ணன்' என்று சொன்னால் குழந்தை அதை அப்படியே நம்பிவிடும். அவன் தீண்டத்தகாதவனாக இருந்தாலும் அவனுடன் ஒரே தட்டில் சோறு சாப்பிடும். குழந்தையிடம் எவ்வித வெறுப்பும் இல்லை. சுத்தம், அசுத்தம் என்ற எண்ணமும் இல்லை. மலம் கழித்துவிட்டுக் குழந்தை அதைக் கழுவாமலேயே வந்துநிற்கும்.

"சிலர், சமாதிநிலையை அடைந்த பிறகும், 'நான் தாசன், நான் பக்தன்' என்ற பாவனையை மனத்தில் இருத்திக்கொள்ளுகின்றனர். 'நான் அடிமை, நீ தலைவன்; நான் பக்தன், நீ பகவான்' என்ற இந்த அகங்காரம் பக்தர்களிடம் இருக்கும். ஈசுவரனது காட்சியைப் பெற்ற பின்பும், இந்த 'நான்' தொடர்ந்து பக்தனிடம் இருக்கிறது. 'நான் அடியோடு மறைவதில்லை. இத்தகைய அகங்காரத்தைப் பழகப் பழக ஈசுவரனது காட்சி கிட்டுகிறது. இதுதான் பக்தி யோகம்.

"பக்தி மார்க்கத்தில் சென்றால் பிரம்ம ஞானத்தையும் அடையலாம். பகவான் எல்லா ஆற்றலும் படைத்தவர். அவர் விரும்பினால் பிரம்ம ஞானத்தையும் கொடுக்கமுடியும். பக்தர்கள் அநேகமாகப் பிரம்ம ஞானத்தை விரும்புவதில்லை. 'நான் அடிமை, நீ பிரபு, நான் குழந்தை, நீ தாய்' இத்தகைய அகங்காரத்தை வைத்துக்கொள்ளவே விரும்புகின்றனர்."

விஜயர் : "வேதாந்த விசாரம்செய்பவர்களும் இறைவனைத் தானே அடைகிறார்கள்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆமாம். விசார மார்க்கத்தின் வழியாகவும் அவனை அடைய முடியும்' இதைத்தான் ஞான யோகம் என்கின்றனர். ஆனால், விசாரமார்க்கம் மிகக் கடினமானது. உனக்கு மனத்தின் ஏழு நிலைகளைப் பற்றிச் சொல்லியிருக்கிறேன். மனம் ஏழாவது நிலையை அடையும்போது சமாதி ஏற்படுகிறது. 'பிரம்மம் சத்தியம், ஜகத்மித்யை' —இந்த உணர்வு சரியாக ஏற்படும்போது மனம் நாசமடைகிறது. சமாதி நிலை கிட்டுகிறது. ஆனால், கலியுகத்தில் மக்களின் உயிருக்கு உணவே ஆதாரம். 'பிரம்ம சத்தியம், ஜகத் மித்யை' என்பதை எவ்வாறு அவர்களால் உணர முடியும்? உடலைப் பற்றிய நினைவு அடியோடு மறைந்தால் ஒழிய இந்த உணர்வு ஏற்படுவதில்லை. 'நான் உடல் அல்ல; நான் மனம் அல்ல; இருபத்து நான்கு தத்துவங்களும் அல்ல; நான் இன்ப துன்பங்களைக் கடந்தவன்; எனக்கு நோய், துக்கம், மூப்பு, சாவு எதுவும் இல்லை.' இத்தகைய எண்ணங்கள் கலியுகத்தில் ஏற்படுவது கடினம். எவ்வளவுதான் விசாரம் செய்தாலும் தான் உடல் என்னும் புத்தி எங்கிருந்தோ எப்படியோ வந்துவிடுகிறது. அரச மரத்தை வேரோடு வெட்டி வீழ்த்தி விட்டோம் என்று எண்ணுகிறோம். ஆனால், அடுத்த நாள் காலையிலேயே அது புதிதாகத் துளிர் விட்டிருப்பதைக் காண்கிறோம். தேகாபிமானம் அழிவதில்லை. ஆகவே, கலியுகத்துக்குப் பக்தி யோகம் தான் உகந்தது; சுலபமானதும் கூட.

"நான் சர்க்கரையாக இருக்க விரும்புவதில்லை. சர்க்கரையை ருசிக்கவே விரும்புகிறேன். நான் பிரம்மம் என்று சொல்ல எனக்கு ஒரு பொழுதும் ஆசை எழுந்ததில்லை. 'நீ பகவான், நான் உனது அடிமை' என்று சொல்லவே விரும்புகிறேன். ஐந்தாவது, ஆருவது மனநிலைகளின் இடையே தங்கிப் படகைப் போல் மேலும் கீழும் சென்று விளையாடுவது நல்லது. ஆருவது நிலையைக் கடந்து ஏழாவது நிலையில் அதிக நேரம் தங்கியிருக்க எனக்கு நாட்டம் இல்லை. இறைவனுடைய திருநாமத்தையும் திருப்புகழையும் பாடுவதில்தான் எனக்கு ஆனந்தம். 'ஆண்டான்—அடிமைநிலை' மிகவும் ஏற்றது. அலை கங்கைக்குச் சொந்தம். ஆனல், அலைக்குக் கங்கை சொந்தம் என்று யாரும் சொல்லுவதில்லை. 'நானே அவன்' என்ற பாவம் நல்லதல்ல. தான் உடல் என்று நினைக்கும் புத்தி இருக்கும்பொழுது இப்படி எண்ணுவது தீமையைத் தரும். மேல்நோக்கிச் செல்ல முடியாது. படிப்படியாக வீழ்ச்சி ஏற்பட்டுவிடும். இப்படிப்பட்ட தன்மை கொண்டவர்கள் மற்றவர்களை ஏமாற்றுகின்றனர். தம்மையும் ஏமாற்றிக் கொள்ளுகின்றனர். தங்களுடைய உண்மை நிலையை அவர்களால் அறியமுடிவதில்லை.

"ஆனல், வெறும் பக்தியினல் மட்டும் கடவுளைக் காண முடியாது. பிரேம பக்தி ஏற்படாவிட்டால் கடவுளைக் காண முடியாது. பிரேம பக்திக்கு மற்ருெரு பெயர் ராக பக்தி. பிரேமையும் அனுராகமும் உண்டாகாவிட்டால் கடவுளைக் காணமுடியாது. ஈசுவரனிடம் உண்மை அன்பு ஏற்படாவிட்டால் அவனை அடையமுடியாது.

"மற்ருெரு வகையான பக்தி உண்டு. அது சாதாரண பக்தி. அதற்கு வைதிக[1] பக்தி என்று பெயர். இவ்வளவு ஜபம் செய்ய வேண்டும், இவ்வளவு உபவாசம் இருக்க வேண்டும், இவ்வளவு யாத்திரை செய்ய ண்டும், இவ்வளவு உபசாரங்களுடன் பூஜை செய்ய வேண்டும் என்பவை சாதாரண பக்தியின் இலக்கணங்கள். இவைகளைத் தொடர்ந்து செய்யச் செய்ய நாளடைவில் ராகபக்தி உண்டாகிறது. ஆனல், ராகபக்தி உண்டாகாதவரை கடவுளின் காட்சி கிட்டுவதில்லை. அவனிடம் அன்பு வேண்டும். சம்சாரபுத்தி அடியோடு மறைய வேண்டும். இறைவனிடம் இதயம் நூற்றுக்கு நூறு பதிய

1. விதிகளுக்குக் கட்டுப்பட்ட பக்தி.

வேண்டும். அப்பொழுது இறைவனைக் காணலாம்; அவனை அடையலாம்.

"ஆனால், ஏதோ ஒரு சிலருக்கு ராகபக்தி தானாகவே உண்டாகிறது. அவர்கள் இயல்பிலேயே சித்தர்கள். குழந்தைப் பருவத்திலிருந்தே அவர்கள் இவ்வாறு இருப்பார்கள். சிறுவர்களாக இருக்கும்போதே அவர்கள் கடவுளுக்காகப் பிரகலாதனைப்போல் ஏங்கி அழுவார்கள். வைதிக பக்தி எப்படிப்பட்டது தெரியுமா? காற்றுக்காக விசிறிக்கொள்கிறோம். காற்றுக்காக விசிறி வேண்டியிருக்கிறது. அதைப் போன்றே கடவுளிடம் பக்தி தோன்ற ஜபம், தபம், உபவாசம் முதலியவை வேண்டும். ஆனால், தென்றல் காற்று வீசத் தொடங்கியதும் விசிறியை மக்கள் எறிந்துவிடுகின்றனர். அதுபோல் ஈசுவரனிடம் அனுராகம், பிரேமை முதலியவை ஏற்படும்பொழுது ஜபம் முதலிய செயல்கள் தாமாகவே விடுபடுகின்றன. ஹரிப்பிரேமையில் மூழ்கியிருக்கும்பொழுது யார்தான் வைதிகக் கர்மங்களைச் செய்வார்கள்?

"ஈசுவரனிடம் ஆழ்ந்த அன்பு உதிக்காதவரை, ஒருவரிடமுள்ள பக்தி பக்குவமாகாத பக்தியே. ஈசுவரனிடம் ஆழ்ந்த அன்பு உண்டாகும்போதுதான் ஒருவரிடமுள்ள பக்தியைப் பக்குவப்பட்ட பக்தி என்கிறோம்.

"கனியாத பக்தி உடையவர்களால் கடவுள் தத்துவத்தின் உட்பொருளை உணர முடிவதில்லை. பக்தி பழுத்தால் அந்த உட்கருத்தை எளிதில் அறிய முடிகிறது. புகைப்படத்தின் கண்ணாடியில் ரசாயனப் பொருள் பூசியிருந்தால்தான் எடுக்கின்ற படம் அதில் தெரியும். ஆனால், வெறும் தட்டின்மீது ஆயிரக் கணக்கான உருவங்கள் விழுந்தாலும் அவைகளுள் ஒன்றுகூடப் பதிவதில்லை. உருவங்கள் தட்டைவிட்டு நகர்ந்ததும், தட்டு முன்பு எப்படி இருந்ததோ அப்படியேதான் இருக்கும். ஆண்டவனிடம் ஆழ்ந்த அன்பு உண்டாகாவிட்டால் உபதேசங்களின் உட்கருத்தை உணர முடியாது."

விஜயர் : "சுவாமி, ஈசுவரனை அடைவதற்கும் அவரது காட்சியைப் பெறுவதற்கும் பக்தி ஏற்பட்டாலே போதுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆமாம். பக்தியினால் அவனை அடைய முடியும். ஆனால் கனிந்த பக்தி, அதாவது பிரேம பக்தி, ராக பக்தி வேண்டும். அத்தகைய பக்தி உண்டாகும்போது, அவ

னிடம் ஆழ்ந்த அன்பு பிறக்கிறது. குழந்தைக்குத் தாயிடமும் மனைவிக்குக் கணவனிடமும் எப்படி இயல்பாக ஆழ்ந்த அன்பு தோன்றுகிறதோ அத்தகைய அன்பு கடவுளிடம் தோன்ற வேண்டும். இப்படிப்பட்ட ஆழ்ந்த அன்பு, இப்படிப்பட்ட ராகபக்தி ஈசனிடம் உண்டாகும் பொழுது கணவன், மனைவி குழந்தை, உற்றார், உறவினர் முதலியவர்களிடம் மாயை காரணமாக எழும் கவர்ச்சி, உடலைப் பற்றிய கவர்ச்சி சிறிதும் ஏற்படுவதில்லை. எல்லா உயிர்களிடத்திலும் கருணை மட்டும் உண்டாகிறது. இந்த ஆழ்ந்த அன்புநிலை ஏற்பட்டால் சம்சாரம் என்பது வேருனதோர் உலகம் என்பது புரிகிறது. அது கர்ம பூமி மட்டுமே என்ற உணர்வு ஏற்படுகிறது. கிராமத்தில் வீட்டை வைத்திருப்பவன் பட்டணத்தில் வேலை பார்க்கும்போது அங்கும் அவனுக்கு ஒரு வீடு வாடகைக்குத் தேவைப்படுகிறது. ஈசுவரனிடம் அன்பு பிறக்கும் போது உலகின்மீதும் உலகப் பொருட்களின் மீதுமுள்ள பற்று அடியோடு மறைகிறது.

“உலகப் பொருட்கள்மீது ஒரு சிறிதளவு பற்று இருந்தாலும் ஆண்டவனுடைய காட்சி கிட்டாது. தீக்குச்சி ஈரமாக இருக்கும்போது ஆயிரம் முறை கிழித்தாலும் பற்ருது. பல குச்சிகள் வீணுகும். உலகப் பற்றுக் கொண்ட மனம் ஈர நெருப்புக் குச்சியைப் போன்றது.

“ராதை, ‘நான் எல்லாவற்றையும் கிருஷ்ண மயமாகப் பார்க்கிறேன்’ என்று சொன்ன பொழுது தோழிகள், ‘எங்கே? நாங்கள் அப்படிக் காணவில்லையே! என்ன உளறுகிருய்!’ என்ருர்கள். அதற்கு ராதை, ‘தோழிகளே, கண்ணில் பக்தி என்னும் மையைத் தீட்டிக் கொண்டு பாருங்கள். அப்போது காண முடியும்’ என்று சொன்னுள். (விஜயரைப் பார்த்து) உங்களது பிரம்ம சமாஜத்தின் பாட்டே இருக்கிறதே. ‘பிரபு! அனுராகம் இல்லாமல் யாகம், யக்ஞம் வளர்க்கின்றனர். இவற்ருல் உன்னை அறிய முடியுமா என்ன!’ என்ற அந்தப் பாட்டைத்தான் சொல்லுகிறேன். இப்படிப்பட்ட ஆழ்ந்த அன்பு ஒரு முறை உண்டானுல், உருவக் கடவுள், அருவக் கடவுள் என்ற இரண்டினுடைய காட்சியும் கிட்டும்.”

விஜயர் : “ஈசுவர தரிசனம் எவ்வாறு கிட்டுகிறது?”

ஸ்ரீராமகிருஷ்ணர் : “மனத்தூய்மை உண்டாகாவிட்டால் அது கிட்டாது. காமினி, காஞ்சனத்தால் மனத்தில் மாசு படிகிறது; தூசு படிகிறது. ஊசியைக் களிமண் மூடியிருக்கும்

பொழுது காந்தம் அதைக் கவராது. சேற்றைக் கழுவிவிட்டால் காந்தம் ஊசியை இழுக்கும். அதேபோல் மனத்தின் அழுக்கைக் கண்ணீரினுல் கழுவலாம். 'இறைவா, இனியொரு போதும் இப்படிப்பட்ட செயலை மீண்டும் நான் செய்ய மாட்டேன்' என்று பச்சாத்தாபத்துடன் இறைவனிடம் முறையிட்டுக் கண்ணீர் வடித்தால் அந்த அழுகை மன அழுக்கைத் துடைத்துவிடும். அப்பொழுது ஈசுவரனுகிய காந்தக்கல் மனமாகிய ஊசியைத் தன்னிடம் இழுத்துக்கொள்ளும். அப்பொழுது சமாதிநிலை உண்டாகிறது; இறைக்காட்சியும் கிட்டுகிறது.

"ஆனல், ஆயிரம் பாடுபட்டாலும் கடவுளின் கருணையில்லாமல் ஒன்றும் நடக்காது. அவனுடைய கருணை இல்லாவிட்டால், அவனைக் காண முடியாது. கருணை என்பது சுலபமாகக் கிடைக்கக்கூடியதா என்ன? அதற்கு அகங்காரத்தை அடியோடு விட்டுவிட வேண்டும். 'நான் கர்த்தா' என்ற எண்ணம் இருக்கும்வரை ஒருக்காலும் ஈசுவரக் காட்சி கிட்டாது. பண்டக சாலையில் ஒருவன் இருக்கும்பொழுது வீட்டுத் தலைவனிடம் யாரேனும், 'பண்டங்களை எடுத்துத் தாருங்கள்' என்று கேட்டால், தலைவன் 'பண்டகசாலையில் ஏற்கனவே ஒருவன் இருக்கிருனே, நான் வந்து செய்வது என்ன?' என்பான். 'நான் கர்த்தா' என்ற எண்ணம் எவன் கொண்டிருக்கிருனே அவனுடைய உள்ளத்தில் ஆண்டவன் எளிதில் தோன்றுவதில்லை.

"பகவத் கிருபை உண்டானலே பகவத் காட்சி கிட்டுகிறது. இறைவன் ஞான சூரியன். அவனது ஒளிக்கிரணங்களுள் ஒன்றே ஒன்றுதான் இந்த உலக முழுதிற்கும் ஞான ஒளியைக் கொடுக்கிறது. ஒருவர் மற்றொருவரை அறிய முடிவதும் உலகில் பல விதக் கலைகளை அறிய முடிவதும் இதனுல்தான். அவரே தமது முகத்தின்மீது தமது ஒளியை ஒரு முறை திருப்புவாரானுல் அவருடைய காட்சி கிடைக்கிறது. போலீஸ்காரன் இரவு வேளையில் கையில் லாந்தரை வைத்துக்கொண்டு இங்கும் அங்கும் திரிகிருன். அவனுடைய முகத்தை யாரும் பார்க்க முடிவதில்லை. ஆனுல், அவன் அந்த விளக்கின் உதவியால் மற்றவர்களின் முகத்தைப் பார்க்கமுடிகிறது. மற்றவர்களுடைய முகத்தைப் பார்க்கவும் எல்லோருக்கும் முடிகிறது.

"யாராவது போலீஸ்காரனைப் பார்க்க விரும்பினுல், போலீஸ்காரனிடம், 'ஐயா, அருள் கூர்ந்து விளக்கை ஒரு முறை உங்களுடைய முகத்தின் பக்கமாகத் திருப்புங்கள். உங்களை ஒரு முறை பார்க்க விரும்புகிறேன்' என்று கேட்க வேண்டும்.

'பகவானே! ஞான ஒளியைக் கருணை கூர்ந்து உங்கள் முகத்தின்மேல் ஒரு முறை திருப்புங்கள். நான் உங்களைப் பார்க்கிறேன்' என்று வேண்டிக்கொள்.

"வீட்டில் விளக்கேற்றி வைக்காவிட்டால், அது தரித்திரத்தின் அடையாளமாகும். ஆகவே, இதயமாகிய வீட்டில் ஞானமாகிய விளக்கை ஏற்றிவைக்க வேண்டும். 'அகத்தில் ஞானமயமான விளக்கேற்றிப் பிரம்மமயியின் முகத்தைப் பார்'.

விஜயர் தம்முடன் கொண்டுவந்திருந்த மருந்தைப் பரமஹம்சரின் எதிரிலேயே உண்டார். அந்த மருந்து தண்ணீரோடு கலந்து சாப்பிட வேண்டியது. குருதேவர் அதற்காகத் தண்ணீர் கொண்டுவரச் சொன்னார். குருதேவர் காரணம் இல்லாமலே கருணையைப் பொழியும் கடல். வறுமை காரணமாக விஜயரால் வாடகைப் படகிலோ, வாடகை வண்டியிலோ தட்சிணேசுவரம் வரமுடியவில்லை. குருதேவரே அடிக்கடி அவரைக் கூப்பிட்டு அனுப்புவார். அப்போது பலராமரிடம் அவரை அழைத்து வருமாறு கூறுவார். பலராமரே வண்டி வாடகைக் கொடுத்து அவரை அழைத்து வருவதுண்டு. தற்போது பலராமருடன்தான் விஜயர் வந்திருந்தார்.

மாலைவேளை வந்தது. விஜயரும், நவகுமாரும், விஜயருடைய மற்ற நண்பர்களும் பலராமருடைய படகில் ஏறிக்கொண்டனர், பலராமர் பாக்பஜார் என்ற பகுதியில் கங்கைக் கரையில் அவர்களை இறக்கிவிடுவதாக இருந்தார். ம-வும் அந்தப் படகில் ஏறிக்கொண்டார்.

படகு, பாக் பஜாரின் அன்னபூர்ணாத் துறையை அடைந்தது. பலராமர் பாக் பஜார் பகுதியில்அவர்களை இறக்கிவிட்டபொழுது சந்திரன் வானத்தில் தோன்ற ஆரம்பித்துவிட்டான். குளிர் காலம். அதனால் மெல்ல மெல்லக் குளிர ஆரம்பித்தது. குருதேவரின் அமுதமயமான உபதேசங்களைச் சிந்தித்துக் கொண்டும், அவருடைய ஆனந்தமயமான வடிவத்தை இதயத்தில் இருத்திக்கொண்டும் விஜயர், பலராமர், ம- முதலியோர் தத்தம் இருப்பிடம் நோக்கித் திரும்பினர்.

## திங்கட்கிழமை, ஜனவரி 1, 1883

காலை மணி எட்டு. தட்சிணேசுவரக் 'காளிகோயிலில் எல்லோருக்கும் தெரிந்த அந்த அறையில், ஸ்ரீராமகிருஷ்ணர் பக்தர்கள் புடைசூழ உட்கார்ந்திருந்தார். அவர் இரவு பகலாக ஹரிப்பிரேமையில், அன்னையின் அன்பில் மூழ்கியிருந்தார்.

தரைமீது விரிக்கப்பட்டப் பாயில் ஸ்ரீராமகிருஷ்ணர் அமர்ந்து கொண்டிருந்தார். குளிர் காலமாதலால் கம்பளிப் போர்வையைப் போர்த்திக்கொண்டிருந்தார். பிராணகிருஷ்ணரும், ம-வும் அவர் எதிரே அமர்ந்திருந்தனர். ராக்காலும் அங்கிருந்தார். ஹாஸ்ரா மட்டும் எப்போதும் போல, அறைக்கு வெளியே தென்கிழக்குத் தாழ்வாரத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தார்.

குருதேவரின் நெருங்கிய பல பக்தர்களும் அங்குக் கூடியிருந்தனர். ஏறக்குறைய ஒருவருட காலமாக நரேந்திரர், ராக்கால், பவநாத், பலராம், ம-, பாபுராம், லாட்டு முதலியோர் குருதேவரைப் பார்க்க அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தனர். மனமோகன், சுரேந்திரர், கேதார் முதலிய பக்தர்கள் ஒரு வருடத்துக்கும் அதிகமாகவே குருதேவரிடம் வந்து போய்க் கொண்டிருந்தனர்.

ஐந்து மாதங்களுக்குமுன் பரமஹம்ஸர், வித்யாசாகரை அவரது வீட்டில் பார்த்துவிட்டு வந்தார். இரண்டு மாதங்களுக்கு முன் விஜயர் முதலான பிரம்மோ பக்தர்கள் பின்தொடரக் கேசவருடன் குருதேவர், நீராவிப் படகில் தட்சிணேசுவரத்திலிருந்து கல்கத்தாவரை ஆனந்தமாக உலவிவந்தார்.

பிராணகிருஷ்ணர் என்னும் பக்தர் கல்கத்தாவில் சியாம்புகூர்ப் பகுதியில் வாழ்ந்துவந்தார். அவர் ஜனாயி என்னும் கிராமத்தைச் சேர்ந்தவர். அரசாங்கப் பொருட்களை ஏலம் விடும் அதிகாரியாக, அரசாங்கத்தில் உயர்பதவி வகித்து வந்தார். அவருக்கு முதல் மனைவியிடம் பிள்ளை இல்லாததால், அவளுடைய அனுமதியுடன் இரண்டாம் திருமணம் செய்து கொண்டிருந்தார். அம்மனைவியிடம் அவருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. பிராணகிருஷ்ணருக்குக் குருதேவரிடம் அளவு கடந்த பக்தியும், மரியாதையும் உண்டு. பருத்த சரீரத்தை உடையவராதலால், குருதேவர் அடிக்கடி அவரைத் தடித்த பிராமணர் என்று அன்போடு அழைப்பார். மிகவும்

நல்லவர். குருதேவர் ஏறக்குறைய ஒன்பது மாதங்களுக்கு முன்பு அன்பர்களுடன் அவருடைய வீட்டிற்கு விருந்தினராகச் சென்றிருந்தார். பிராணகிருஷ்ணர் அறுசுவை உணவோடு இனிப்புகளையும் பரிமாறி அவர்களுக்குச் சிறந்ததொரு விருந்து அளித்தார்.

தரையில் அமர்ந்துகொண்டிருந்த குருதேவரிடம் பக்தர் ஒருவர் கூடை நிறைய ஜிலேபி கொண்டுவந்து அருகே வைத்தார். குருதேவர் அதிலிருந்து ஒருசிறு துண்டை எடுத்து உட்கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (பிராணகிருஷ்ணர் முதலானவர்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே)"பார்த்தாயா! நான் அன்னை காளியின் பெயரைக் கூறுகிறேன். அதனால் இத்தகைய இனிய பொருட்கள் எனக்குக் கிடைக்கின்றன.

"ஆனால் அன்னை, பூசணிக்காய், சுரைக்காய் போன்ற சாதாரணப் பொருட்களை அளிப்பதில்லை. ஞானம், அன்பு, விவேகம், வைராக்கியம் முதலான அமுதம் போன்ற அருமையான பழங்களையே அளிக்கிறாள்!"

அப்போது ஆறு அல்லது ஏழு வயதுடைய ஒரு சிறுவன் அறையினுள் நுழைந்தான். அவனைப் பார்த்ததும் ஸ்ரீராமகிருஷ்ணரும் ஒரு சிறுவனின் மனஇயல்பை அடைந்தார். எப்படி ஒரு சிறுவன் மற்றொரு சிறுவனைப் பார்த்ததும், தன்னிடமுள்ள தின்பண்டங்களை ஒளித்துவைத்துக்கொள்வானோ, அப்படியே அவரும் ஜிலேபி நிறைந்த கூடையை ஒரு கையால் மூடி மறைத்தபடி, அதை ஒரு பக்கமாக மெல்லத் தள்ளினார்.

பிராணகிருஷ்ணர் இல்லறம் மேற்கொண்டவர். இருந்தும் வேதாந்த விஷயங்களை நன்கு கற்றிருந்தார். 'பிரம்மம் ஒன்றே உண்மை, உலகம் பொய். அவனே நான்' போன்ற வேதாந்த வாக்கியங்களை அடிக்கடி சொல்லுவார். பதிலுக்கு குருதேவர் "கலியுகத்தில் மனிதனின் உயிர் உணவை நாடியிருக்கிறது. ஆகவே இக்கலியுகத்திற்கு நாரதர் போதித்த பக்தி மார்க்கமே சிறந்தது" என்பார். "பரவசத்தின் பொருளாக இருப்பவன் பகவான். பரவசமற்ற நிலையில் அவனைப் பிடிக்க யாரால் முடியும்?"

கையினால் ஜிலேபிக் கூடையை மூடியபடியே குருதேவர் சமாதிநிலையை அடைந்தார்.

நீண்டநேரம் சமாதிநிலையில் ஆழ்ந்து, குருதேவர் அப்படியே உட்கார்ந்திருந்தார். உடல் அசையாமல் இருந்தது. கண்கள் திறந்தவண்ணம் நிலைகுத்திப் போயிருந்தன. மூச்சுவிடுவதும் தெரியவில்லை. நீண்ட நேரம் கழித்து ஆழ்ந்த பெருமூச்சு ஒன்று அவரிடம் எழுந்தது. உலக நினைவு திரும்புகிறது என்பதற்கு இது ஓர் அடையாளம்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: (பிராணகிருஷ்ணரிடம்) "என் அன்னை காளி உருவமற்றவள் மட்டுமல்ல, உருவமுடையவளும்கூட. அவளுடைய உருவத்தைப் பார்க்க முடியும். பக்தி மூலமும், பரவசத்தின் மூலமும் ஒருவர் அவளது ஈடு இணையற்ற அழகைப் பார்க்க முடியும். தன் பக்தர்களுக்கு அன்னை பல வடிவங்களில் காட்சி அளிக்கிறாள். நேற்று நான் அன்னையைக் கண்டேன். கரையில்லாத காவிநிறச் சட்டை அணிந்திருந்தாள். விரிந்த கூந்தலோடு என்னுடன் பேசிக்கொண்டிருந்தாள். மற்றொரு நாள் ஒரு முஸ்லிம் பெண்ணின் வடிவில் என் அருகே வந்தாள். ஆறு அல்லது ஏழு வயதிருக்கும். நெற்றியில் பொட்டு வைத்திருந்தாள். ஆடையில்லாமல் நிர்வாணமாக இருந்தாள். என்னிடம் கிண்டல் செய்தபடியே துள்ளிக் குதித்துக் கொண்டு ஓடிவந்தாள்.

"ஹிருதயனுடைய வீட்டில் இருந்தபொழுது ஒரு நாள் கௌராங்கரின் காட்சி எனக்குக் கிட்டியது. அவர் கருப்புக் கரை வேட்டியை அணிந்திருந்தார்.

"கண்ணுக்குப் புலப்படும் நிலை, புலப்படாத நிலை (**பாவம், அபாவம்**) ஆகிய இரண்டு நிலைகளையும் கடந்தவர் இறைவன் என்று ஹலதாரி கூறுவதுண்டு. இதைக் கேட்டதும் நான் 'தாயே! ஹலதாரி இப்படிக் கூறுகிறானே, இது உண்மையா? உண்மையென்றால், நான் காணும் உன் தெய்விக வடிவம் கற்பனையா?' என்று முறையிட்டேன். அப்போது அன்னை, ரதியின்[1] தாய் வடிவத்தில் என்முன் தோன்றி, '**நீ பாவ நிலையிலேயே (பரவச நிலை) இரு**' என்று கூறினாள். நான் ஹலதாரியிடம் இதைக்கூறினேன்.

---

1. ஒரு பக்தை

"சில சமயம் நான் அன்னை கூறியபடிப் பரவச நிலையில் இருக்க மறந்துவிடுகிறேன். அதனால் பெருந்துன்பம் நேரிடுகிறது. பரவச நிலையில் இல்லாத காரணத்தினால் ஒருமுறை பற்களை உடைத்துக்கொள்ள நேர்ந்தது. நான் அன்னையின் நேரான காட்சி கிடைக்கும் வரையிலோ அல்லது அவளிடமிருந்து அசரீரி வாக்கு கேட்கும் வரையிலோ பரவச நிலையிலேயே இருப்பேன்! பக்திமார்க்கத்தையே கடைப்பிடிப்பேன்! நீ என்ன சொல்கிறாய்?"

பிராணகிருஷ்ணர் : "ஆம், ஐயனே."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆமாம். இதையெல்லாம் நான் ஏன் உன்னைக் கேட்கிறேன்? யாரோ ஒருவர் என்னுள் இருக்கிறார். அவர் என்னை இப்படியெல்லாம் செய்யத் தூண்டுகிறார். சில சமயம் தெய்விகநிலை என்னிடம் வெளிப்படுகிறது. அந்த நேரங்களில் நான் பூஜையில் ஈடுபடாவிட்டால் என் மனம் அமைதி அடைவதில்லை.

"நான் இயந்திரம்; இறைவன் என்னை இயக்குபவர். அவர் எப்படி ஆட்டுவிக்கிறாரோ, அப்படியே நான் பேசுகிறேன்.

"காளி பக்தர் இராம்பிரசாதர், 'பிறவிக் கடலின் கரையில் இருக்கும் நான் பேரலை அடித்தால் அத்துடன் உயரே செல்வேன். அலை கீழே வரும்பொழுது அத்துடன் கீழே வருவேன்' என்று கூறுகிறார்.

"புயற்காற்றில் அடித்துச் செல்லப்படும் எச்சில் இலையைப் போன்றது நம்நிலை. காற்று எப்படியெல்லாம் அடிக்கிறதோ, அப்படியெல்லாம் சிலநேரங்களில் நல்ல இடங்களிலும், சில நேரங்களில் அசுத்தமான இடங்களிலும் இலைபோய் விழுகிறது.

"ஒரு கதையில் நெசவாளி கூறினான் : 'கொள்ளையும் இராமரின் விருப்பப்படி தான் நடந்தது. இராமரின் விருப்பப்படியேதான் போலீசாரால் நான் கைது செய்யப்பட்டேன். அதே இராமரின் விருப்பப்படிதான் என்னை விடுதலை செய்தார்கள்' என்று.

"ஒருமுறை அனுமார் இராமனிடம், 'உன்னிடம் சரணடைகிறேன். உன்னுடைய திருவடித் தாமரையில் எனக்கு உண்மையான பக்தியைத் தருவாய். உலகத்தையே மயக்கி விடும்

உனது மாயை வலையில் நான் சிக்கி மயங்காமல் என்னைக் காப்பாற்றுவாய்' என்று வேண்டினர்.

"ஒரு சமயம் சாகும் தறுவாயில் இருந்த ஒரு பெரிய தவளை இராமரைப் பார்த்து, 'இராமா! பாம்பு என்னைப் பிடிக்கவந்தால் இராமா என்னைக் காப்பாற்று, இராமா என்னைக் காப்பாற்று' என்று உரக்கக் கூவுவேன். ஆனால், இப்பொழுதோ உன்னுடைய அம்பின் கூரிய முனையே என்னை நசுக்கும்போது நான் யாரிடம் என்னைக் காப்பாற்றும்படி முறையிடுவேன்? அதனால்தான் வாய் பேசாமல் சும்மா இருக்கிறேன்' என்றது.

"உன்னை நேருக்குநேர் பார்ப்பது போல் முன்பெல்லாம் இந்த ஊனக் கண்களால் நான் கடவுளைக் காண்பேன். இப்பொழுது பரவச நிலையில் மட்டுமே நான் கடவுளைக் காண்கிறேன். கடவுளின் காட்சி கிடைத்ததும் மனிதனுக்குச் சின்னஞ் சிறிய ஒரு சிறுவனின் மனோநிலையே ஏற்படுகிறது. யார் எதன் மீது தியானம் செய்கிறார்களோ, அவர்கள் அந்தப் பொருளாகவே ஆகிறார்கள். பகவானின் இயல்பு குழந்தையைப் போன்றது. குழந்தைகள் விளையாட்டாக மணலில் வீடு கட்டி விளையாடிய பிறகு, அதை அழித்து விடுவதுபோல் கடவுளும் உலகங்களைப் படைக்கிறார்; காக்கிறார்; விளையாடுகிறார்; பிறகு அழித்துவிடுகிறார். குழந்தை எப்படி எந்தவிதமான குணத்திற்கும் கட்டுப்பட்டதாக இருப்ப தில்லையோ, அதேபோல் கடவுளும் சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களுக்கும் கட்டுப்படாமல் அவற்றைக் கடந்தவராக விளங்குகிறார். எனவேதான் குழந்தையின் இத்தகைய இயல்பைத் தாங்களும் அடையவேண்டும் என் பதற்காகப் பரமஹம்சப் பிரிவைச் சேர்ந்த சந்நியாசிகள் எப்போதும் ஐந்து அல்லது பத்து வயதுச் சிறுவர்களைத் தங்களுடன் வைத்திருப்பது வழக்கம்."

அகர்பாரா என்ற இடத்தைச் சேர்ந்த இருபது வயது இளைஞன் ஒருவன் குருதேவரின் அறையில் அப்போது உட்கார்ந்துகொண்டிருந்தான். அவன் புதிதாக வர ஆரம்பித் திருந்தான். அவன் தட்சிணேசுவரக் கோயிலுக்கு வரும் போதெல்லாம் குருதேவருக்குச் சைகை காட்டித் தனி இடத்திற்கு அழைத்துச்செல்வான். அங்குத் தன் எண்ணங்களை இரகசியமாகத் தெரிவிப்பான். தரையில் உட்கார்ந்து கொண்டிருந்த அந்தச் சிறுவனைப் பார்த்தவாறு, ஸ்ரீராம கிருஷ்ணர்: "ஒரு மனிதன் மற்றொரு மனிதனைப்போல்

நினைக்கவும், நடக்கவும் ஆரம்பித்தால் அவனுடைய மனோ பாவம் மாறிவிடுகிறது. தன்னை ஒருபெண்ணாக ஒருவன் நினைக்க ஆரம்பித்தானானால், பெண்மீது அவனுக்கு எழும் காமம் முதலிய நினைப்புக்கள் அகன்றுவிடும். படிப்படியாக அவன் பெண்களைப் போலவே நினைக்கவும், நடக்கவும் ஆரம்பித்து விடுவான். நாடகங்களிலே பெண்வேடம் போடுபவர்களை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் குளிக்கப் போகும்போது பெண்களைப்போலப் பேசவும், பல்தேய்க்கவும் செய்கிறார்கள். நீ செவ்வாய்க்கிழமையோ, சனிக்கிழமையோ மறுபடியும் இங்கே வா.''

(பிராணகிருஷ்ணரைப் பார்த்து) : ''பிரம்மமும் சக்தியும் பிரிக்க முடியாதவை. சக்தியை ஒப்புக்கொள்ளவில்லை யென்றால் உலகம் முழுவதுமே பொய்யாகி விடுகிறது. நான், நீ, வீடு, என்சுற்றம் எல்லாமே பொய் என்றாகின்றன. பராசக்தி அடிப்படையாக இருப்பதால் தான், உலகம் நிமிர்ந்து நிற்கிறது. ஓர் அழகான துர்க்காதேவியின் சிலையைச் செய்ய வேண்டுமானால், அதைத் தாங்கிநிற்பதற்கு மூங்கிலும் சட்டமும் வேண்டும். தாங்குவதற்கு எதுவும் இல்லையானால் துர்க்கையின் சிலை நிமிர்ந்து நிற்காது.

**''உலக ஆசையைத் துறந்தாலன்றி, ஆன்மிக விழிப்பு உண்டாவதில்லை. கடவுட் காட்சியும் கிட்டுவதில்லை. உலக ஆசை மனத்தில் இருக்கும்வரை வஞ்சக மனப்பான்மையும் உண்டாகிறது. கள்ளம் கபடமற்ற மனோநிலை தோன்றி னாலன்றி இறைவனைக் காணமுடியாது.**

மனத்தால் இறைவனை மகிழ்வுடன் நேசி!
மாசெனும் கபடம் வஞ்சகம் நீக்கிடு!
சுயநல மற்றே சுடரொளி ஈசனை
எளிய உளத்துடன் என்றும் வழிபடு!
செய்திடும் புண்ணிய சேவையால் பணிவால்
இனிய இராமன் எளிதில் கிடைப்பான்!

''உலகக் காரியங்களில் ஈடுபட்டிருக்கின்றவர்கள், குறிப் பாக வியாபாரிகள், அலுவலகங்களில் பணிபுரிவோர்கள் போன்றோரும் உண்மையைக் கடைப்பிடித்து வரவேண்டும். இந்தக் கலியுகத்தில் உண்மையைக் கடைப்பிடிப்பதே பெரிய தவமாகும்.''

பிராணகிருஷ்ணர்: "ஆம் ஐயனே. மகாநிர்வாண தந்திரம் என்ற நூலில், 'ஓ தேவதையே! இந்தக் காலத்தில் உண்மை பேசுதல், புலன் அடக்கம், கலக்கமின்மை, கட்டுப்பாடு, பிறர் நலம் பேணல், கருணை, இரக்கச் சிந்தனை முதலிய பண்புகளை ஒரு சாதகன் பெற்றாக வேண்டும்' என்ற கட்டளை காணப்படுகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆமாம். இந்தக் கருத்துக்கள் மனிதனுடைய இரத்தத்தில் ஊறிவிட வேண்டும்."

சிறிய கட்டிலின்மீது இப்போது குருதேவர் உட்கார்ந்திருந்தார். பரவசநிலையில் இருந்தபடி ராக்காலை உற்றுப் பார்த்தார். அப்படிப் பார்த்துக்கொண்டிருக்கும்போதே தம் சிஷ்யப்பிள்ளையான அந்த ஆன்மிகக் குழந்தையின் மீது பெற்றோர்க்குத் தங்கள் குழந்தைமீது எழுவது போன்ற அளவற்ற பாச உணர்வு திடீரென்று அவர் மனத்தில் பொங்கிப் பெருகி வழிந்தது. உடல்சிலிர்த்தது. அப்படியே மீண்டும் சமாதிநிலையை அடைந்தார். அறையில் உள்ள பக்தர்கள் பேச்சிழந்து, மூச்சுவிடவும் மறந்தவர்களாக, வியப்புடன் குருதேவரையே பார்த்துக்கொண்டிருந்தனர். இத்தகைய உணர்வோடுதான் யசோதை குழந்தை கோபாலனைக் கண்டாளோ?

சமாதிநிலையிலிருந்து சிறிது நினைவு பெற்றவராய் குருதேவர் ராக்காலைப் பார்த்து, "உன்னைப் பார்த்ததும் எனக்கு இந்தத் தெய்விக ஆவேசநிலை ஏன் ஏற்படுகிறது? எந்த அளவுக்கு இறைவனை நோக்கி முன்னேறுகிறோமோ அந்த அளவுக்கு அவருடைய செல்வம், புகழ்-இவைகளைப் பேசுவதில் நாட்டம் குறைந்துவிடுகிறது. சாதனை செய்யும் காலத்தில் சாதகர்கள் முதலில் பத்துக் கரங்களை உடைய துர்க்கையைப் பார்க்கிறார்கள். இந்த வடிவத்தில் எல்லையற்ற சக்தியின் வெளிப்பாடு தோன்றுகிறது. அதன் பிறகு பத்துக் கைகளும் அதிலுள்ள ஆயுதங்களும் மறைந்துவிடுகின்றன. இரண்டு கைகளைக் கொண்ட உருவத்தைக் காண்கிறார்கள். பிறகு குழந்தை கோபாலனின் காட்சி. இதில் சக்தியின் எந்தவித அடையாளமும் இல்லை. இருப்பதெல்லாம் மென்மையே உருவான ஒரு குழந்தையின் எளிய வடிவம்தான். இதற்குப் பின்னால் பல காட்சிகள் ஏற்படுகின்றன. அதன் பிறகு சாதகன் ஜோதி தரிசனம் ஒன்றை மட்டுமே காண்கிறான். கடவுளிடம் மனம் லயித்து, சமாதி ஏற்பட்ட பிறகு, கடவுளைக்

குறித்துச் செய்யும் ஞான ஆராய்ச்சிகளும் மறைந்து விடுகின்றன.

"எவ்வளவு காலத்திற்குத்தான் ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பது? உலகம், நான், நீ, மக்கள், உயிர்கள் என்ற உணர்வுகள் இருக்கின்ற வரைக்கும்தான் இந்த ஆராய்ச்சியெல்லாம். எல்லாம் ஒன்று என்னும் அத்வைத அறிவு ஏற்பட்டதும் எல்லாம் ஒடுங்கி விடுகின்றன. திரைலிங்க சுவாமி[1] யின் நிலையும் இதுதான்.

"விருந்து நடக்கும்பொழுது நீ கவனித்திருக்கிறாயா? முதலில் ஒரே பேச்சு, ஆரவாரம். விருந்து சாப்பிடத்தொடங்கி வயிறு கொஞ்சம் கொஞ்சமாக நிறைய ஆரம்பித்ததும் ஓசை சிறிது சிறிதாகக் குறைந்துவிடுகிறது. கடைசியாகத் தயிர்ச் சோறும், இனிப்பும் பறிமாறியதும் 'சுப் சுப்' என்ற ஓசை மட்டுமே கேட்கிறது. வேறு பேச்சு வார்த்தை கிடையாது. பிறகு உறக்கம் அதாவது சமாதி; ஆழ்ந்த அமைதி. ஓசை என்பது அடியோடு அற்றுப்போன நிலை!"

(ம-, பிராணகிருஷ்ணர் இருவரையும் பார்த்தபடி)" பலர் பிரம்ம ஞானத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால், அவர்களுடைய மனமோ தாழ்ந்த விஷயங்களிலேயே ஈடுபட்டிருக்கிறது. வீடு, வாசல், பணம், காசு, பெயர், புகழ் இவற்றிலேயே அமுந்திக் கிடக்கிறது. கல்கத்தா மைதானத்திலுள்ள ஓங்கி உயர்ந்து காணப்படும் நினைவுச் சின்னத்தின் அடியில் நின்று கொண்டிருக்கும்வரை அங்குச் செல்லும் வண்டி, குதிரை, ஆங்கிலேயன், ஆங்கிலேயப் பெண், வீடுகள் முதலியனவற்றில் மனம் ஒன்றிப்போகிறது. அதன் உச்சிக்குச் சென்று நின்றாலோ எல்லையற்ற ஆகாயத்தையும், சமுத்திரத்தையும் பார்க்கிறோம். வீடு, வண்டி, குதிரை, மனிதர்கள் எல்லாம் சின்னஞ்சிறு எறும்புகள் போலக் காணப்படுகின்றன. அவற்றைப் பார்க்கவேண்டும் என்ற விருப்பம் அப்போது ஏற்படுவதில்லை.

"பிரம்ம ஞானத்தை அடைந்த பிறகு உலகப்பற்று, அதாவது பெண்ணாசை, பொன்னாசை முதலியவற்றில் உள்ள ஆர்வமெல்லாம் மறைந்துவிடுகின்றன. எல்லா விதமான

1. குருதேவர் இந்த முனிவரைக் காசியில் சந்தித்தார். இத் துறவி மௌன நிலையிலிருந்தார்.

ஆசைகளும் அழிந்துவிடுகின்றன, எங்கும் அமைதி. விறகு எரியும்போது விறகு உடையும் 'கடமுட' சப்தம் உண்டாகிறது. தீப்பொறிகள் தெறிக்கின்றன. விறகு முழுதும் எரிந்து முடிந்ததும் சாம்பல் ஒன்றே மிஞ்சுகிறது. எவ்வித சப்தமும் இல்லை. பற்று மறைந்தால், ஆசையும் மறைகிறது. பிறகு முடிவற்ற அமைதி.

''இறைவனை நோக்கி நாம் எவ்வளவுக்கெவ்வளவு அருகில் செல்லுகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு அமைதி, அமைதி, அமைதி, அளவற்ற அமைதி. கங்கையின் அருகில் செல்லச் செல்லக்குளிர்ச்சியின் அனுபவத்தைப் பெறுகிறோம். கங்கையில் மூழ்கியதும் உடம்பு முழுதும் குளிர்ந்துவிடுகிறது.

''ஈசன் இருப்பதனால்தான் உலகமும், மனிதர்களும், இருபத்துநான்கு தத்துவங்களும் இருக்கின்றன. அவரை எடுத்துவிட்டால், எதுவும் இல்லை. ஒன்றுக்குப் பக்கத்தில் எத்தனை பூஜ்யங்கள் போடுகிறோமோ, அந்த அளவுக்கு அந்த ஒன்றின் மதிப்புப் பெருகுகிறது. ஆனால், அந்த ஒன்று என்ற இலக்கத்தை நீக்கிவிட்டால், பூஜ்யங்களுக்கு எந்தவித மதிப்பும் கிடையாது.''

*பிராணகிருஷ்ணருக்குக் குருதேவர் தம்முடைய நிலையையே மறைமுகமாக வருணிக்கிறாரா என்ன?*

''பிரம்ம ஞானம் அடைந்த பிறகு அதாவது சமாதிநிலையை எட்டிய பிறகு சிலர் அங்கிருந்து கீழே இறங்கி 'நான் பக்தன்', 'நான் ஞானி' என்ற உணர்வோடு உலகில் வாழ்கிறார்கள். சந்தைக்கடை முடிந்துவிட்டது. இருந்தும் சிலர் தங்கள் சொந்த விருப்பப்படி அங்குத் தங்குகிறார்கள் அல்லவா? அது போல. நாரதர் முதலானவர்கள் உலக மக்களுக்கு உபதேசிப்பதற்காக 'நான் பக்தன்' என்னும் நினைப்பை மனத்தில் வைத்துக்கொண்டார்கள். சங்கராச்சாரியார் 'நான்' என்னும் ஞான உணர்வை மனத்தில் வைத்திருந்தார். பொருட்கள்மீது சிறிதளவு பற்றிருந்தாலும் கடவுளை அடையமுடியாது. நுண்ணிய நூலின் நுனியில் ஒரு சிறு இழை பிரிந்திருந்தால் கூட அது ஊசியின் காதுக்குள் நுழையாது.

''கடவுட் காட்சியைக் கண்டவனிடம் காமம், வெகுளி முதலியவை எல்லாம் பெயரளவில்தான் இருக்கும். எரிந்து

போன கயிறு பார்ப்பதற்குக் கயிற்றைப் போன்று தோன்றுகிறது. ஊதினால் பறந்துவிடும்! அதுபோலத்தான்.

"மனம் பற்றற்ற நிலையை அடைந்த அளவிலேயே ஈசனைக் காண முடியும். தூய்மையான உள்ளத்தில் தோன்றும் எண்ணங்கள் எல்லாம் இறைவனின் குரலே. தூய்மையான புத்தி, தூய்மையான ஆத்மா எல்லாம் ஒன்றுதான். ஏனெனில், இறைவனைத் தவிர்த்து, வேறு எதுவும் தூய்மையானது அல்ல.

"கடவுளை அடைய வேண்டுமானால் நன்மை, தீமை இரண்டையும் கடந்து அப்பால் செல்ல வேண்டும்." இவ்வாறு கூறிக்கொண்டே குருதேவர் தமது இனிய குரலில் இராமப் பிரசாதருடைய பாடலைப் பாடத் தொடங்கினார்.

மனமே,வா, காளியெனும் கற்பகத்தின் கீழே
மதுரநிழற் குளுமையிலே உலவிவரச் செல்வோம்;
கனிநான்கு கண்டெடுப்போம்; நல்லறமும் பொருளும்
காதல் வழி இல்வாழ்வும் பரகதியும் பெறுவோம்;
பாருலகில் மனைவியர்கள் உனக்கிருவர் வாய்த்தார்;
பற்றுடைமை என ஒருத்தி; பற்றின்மை என்னும்
சீருடையாள் மற்றொருத்தி; விவேகம் எனப் போற்றும்
செல்வ மகன் ஒருவனையும் ஈன்றெடுத்த நல்லாள்;
அன்னவளைத் துணையாக நீஅழைத்துக் கொள்வாய்;
அருமைமகன் உரிமையுடன் பின்தொடர்ந்து வருவான்;
இன்னமுதக் கற்பகத்தின் ஏரார்ந்த நிழலின்
இருள்நீக்கும் தத்துவங்கள் அவனறியச் சொல்வாய்!

பிராணகிருஷ்ணர் முதலிய பக்தர்களுடன் ஸ்ரீராமகிருஷ்ணர் தென்கிழக்குத் தாழ்வாரத்திற்கு வெளியே வந்து அமர்ந்தார். ஹாஸ்ராவும் அங்கே உட்கார்ந்திருந்தார். குருதேவர் சிரித்துக் கொண்டே (பிராணகிருஷ்ணரிடம்) "ஹாஸ்ரா ஒரு சாதாரண மனிதன் அல்ல. (தன்னைச் சுட்டிக் காட்டி) இது ஒரு பெரிய புண்ணியத் தலமானால் ஹாஸ்ரா ஒரு சிறிய புண்ணியத் தலம்." (எல்லோரும் சிரிக்கின்றனர்)

அப்போது நவகுமார் என்பவன் அங்கு வந்து கதவருகில் நின்றான். பக்தர்களைக் கண்டதும் உடனே அங்கிருந்து நீங்கினான். குருதேவர் அவனைக் குறித்து 'ஓ! இவன் ஆணவமே வடிவெடுத்தவன்' என்றார்.

மணி ஒன்பதரை ஆயிற்று. பிராணகிருஷ்ணர் குருதேவரை வணங்கி விடைபெற்ருர். சிறிது நேரத்திற்குள் ஒரு பைராகி சாது குருதேவரின் அறைக்கு வந்து தன் கையிலுள்ள தம்புராவை மீட்டியபடி பல பாடல்களைப் பாடினர்.

அவர் கடைசியாகப் பாடிய பாட்டு :—

மனித வேடத்தில் ஹரிவந்தாய்!
மனிதர் போல் ஹரிஹரி என்ருய்!
மனிதர் தன்மையில் தனிநின்ருய்!
மயங்கும் பரவச நிலைகொண்டாய்!

குருதேவர் மெய் மறந்து பாட்டைக் கேட்டுக்கொண்டிருந்தார். அப்போது கேதார் சட்டர்ஜி அலுவலக உடையோடு குருதேவர்முன் வந்து நின்று வணங்கினர். அவர் ஒரு சிறந்த பக்தர். கோபிகளைப் போன்ற உயர்ந்த பிரேமை பக்தி கொண்டவர். இறைவனைப் பற்றிய பேச்சுக்களைக் கேட்டாலே அவருடைய கண்களில் ஆனந்தக் கண்ணீர் தாரைதாரையாக வழியும்.

கேதாரைப் பார்த்ததும் குருதேவரின் உள்ளத்தில் கிருஷ்ணரின் பிருந்தாவனக் காட்சிகள் கிளர்ந்தெழுந்தன. இறை ஆனந்தத்தில் மூழ்கியவராய் எழுந்துநின்று கேதாரைப் பார்த்துப் பாடத் துவங்கினர்.

அந்த வனமெங்கே? தோழி, நீசொல்!
பிருந்தா வனமெங்கே? தோழி, நீசொல்!
நந்த கோபால கிருஷ்ணனெங்கே? சொல்! - ஆசைக்
கோபால கிருஷ்ணனெங்கே? சொல்!
எந்தன் காலோ நடக்கவில்லை நில்!

ராதையின் பாவநிலையை அடைந்தவராய்ப் பாடிக் கொண்டே குருதேவர் சமாதிநிலை அடைந்தார், ஒரு துணியில் வரையப்பட்ட ஓவியம்போல ஆடாது, அசையாது நின்ருர். அவருடைய கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. குருதேவரை இந்நிலையில் கண்டதும் கேதார் தரையில் வீழ்ந்து வணங்கினர். குருதேவரின் திருவடித் தாமரைகளைப் பற்றிக்கொண்டு தோத்திரம் செய்யத் தொடங்கினர்.

ஹ்ருதயகமல மத்யே நிர்விசேஷம் நிரீஹம்,
ஹரிஹரவிதி வேத்யம் யோகிபிர்த்யானகம்யம்;
ஜனனமரணபீதிப்ரம்சி ஸச்சித்ஸ்வருபம்,
ஸகலபுவனபீஜம் ப்ரஹ்மசைதன்யமீடே.

(மும்மூர்த்திகளால் அறியப்படுவதும், தியானத்தில் யோகிகளால் அடையப்படுவதும், வேறுபாடற்றதும், செயலற்றதும், பிறப்பு, இறப்பு பயத்தைப் போக்குவதும், எல்லா உலகங்களுக்கும் வித்தாயிருப்பதும் ஆகிய பிரம்ம சைதன்யத்தை இதயத் தாமரையில் வழிபடுவோமாக.)

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் சுய நினைவுபெற்றார். கேதார் 'ஹாலிசஹர்'[1] என்ற இடத்திலிருந்து தமது அலுவலகத்துக்குச் செல்லும் வழியில் அமைந்திருந்த காளி கோயிலில் குருதேவரைக் காண்பதற்காக வந்திருந்தார். சிறிது நேரம் தங்கிய பிறகு கேதார் விடைபெற்று அலுவலகம் சென்றார். இவ்வாறு இறைவனது பேச்சில் நேரம் போனதே தெரியவில்லை. நடுப்பகல் நேரம். ராம்லால் ஒரு தட்டில் குருதேவருக்காகக் காளி கோயில் பிரசாதத்தை ஏந்திக்கொண்டு வந்தார். தம் அறையில் தெற்கு முகமாக அமர்ந்தபடி குருதேவர் பிரசாதத்தை உட்கொண்டார். சிறிய குழந்தையைப் போல் ஒவ்வோர் உணவுப் பண்டத்திலும் கைவைத்துக் கைவைத்துச் சிறிது எடுத்துண்டார். உணவிற்குப் பிறகு ஓய்வு கொள்ளச் சிறிய கட்டிலில் படுத்துக்கொண்டார்.

பிற்பகல் மூன்று மணி. மார்வாரி பக்தர்கள் சிலர் குருதேவரைக் காண வேண்டி அறைக்குள் நுழைந்தனர். தரைமீது உட்கார்ந்துகொண்டு குருதேவரிடம் அவர்கள் கேள்விகள் கேட்கலாயினர். அப்போது ம-, ராக்கால், மற்ற அன்பர்களும் அறையில் இருந்தனர்.

மார்வாரி பக்தர் : "ஐயா, இறைவனை அடைய என்ன வழி?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று விசாரம் செய்து அறிகின்ற அறிவு மார்க்கம். மற்றொன்று

1. தட்சிணேசுவரத்திற்கு வட திசையில் 25 மைல் தூரத்தில் உள்ள ஊர். கேதார் அங்கு வசித்து வந்தார். அது ஒரு புண்ணியத் தலம். காளி பக்தர் ராம்பிரசாத் பிறந்த இடம் அது.

ஆழ்ந்த அன்பு, அனுராகம் அதாவது பக்தி மார்க்கம். விசாரம் என்பது நிலையான பொருட்களுக்கும், நிலையற்ற பொருட்களுக்கும் உள்ள வித்தியாசத்தை அறிவது. ஈசன் ஒருவனே உண்மை; அவன் என்றும் இருக்கக்கூடியவன்; மற்றவை யாவும் பொய்; அழியக்கூடியவை. வித்தை காட்டுபவன் மட்டுமே உண்மை; அவனுடைய ஜால வித்தைகள் எல்லாம் பொய். இவ்வாறு பாகுபடுத்தி அறியும் வழியை அறிவு மார்க்கம் என்பர்.

"விவேகம், வைராக்கியம் என்ற இரண்டு நிலைகள் உள்ளன. எது உண்மை? எது பொய்? என்று அறிவது விவேகம். உலகப் பொருட்களிடம் வெறுப்பு உண்டாக வேண்டும். இது வைராக்கியம். இது எளிதில் உண்டாவதில்லை. இதற்குத் தினமும் பயிற்சி செய்யவேண்டும். பெண், பொன் மீதுள்ள ஆசைகளை முதலில் நினைவிலிருந்து அகற்ற வேண்டும். பிறகு கடவுளைப் பற்றிக் கொண்டு அவர் அருளால் அவைகளைச் சிந்தையாலும், செயலாலும் துறக்கவேண்டும். அகத்துறவு, புறத்துறவு இரண்டும் வேண்டும். கல்கத்தா மக்களிடம், 'கடவுளுக்காக எல்லாவற்றையும் துறந்து விடு' என்று கூறுவது முடிகிற காரியமில்லை. அதனால் நினைவு அளவிலாவது துறந்து விடுங்கள் என்று கூறவேண்டி இருக்கிறது.

"அப்பியாச யோகத்தின் மூலமாகப் பெண், பொன் மீதான பற்றை விட்டு விடமுடியும். இந்த முறை கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. சாதனம் செய்வதன் மூலம் ஒருவன் அளவற்ற சக்தியைப் பெறுகிறான். அப்பொழுது ஐம்புலன்களையும் வென்று, காமம், வெகுளி மயக்கம் முதலியவற்றை அடக்குவது கடினமான காரியம் அல்ல. அத்தகைய மனிதன் ஆமைபோல் ஆகிவிடுகிறான். ஆமை தனது கை, கால்களை உள்ளே இழுத்துக்கொண்டால் பிறகு வெளியே நீட்டுவதில்லை. கத்தியால் அதை நான்காக வெட்டினாலும்கூட அது தனது கை, கால்களை வெளியே நீட்டாது".

மார்வாரி பக்தர் : "ஐயா, இரண்டு வழிகள் என்று கூறினீர்களே, மற்றொரு வழி என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அனுராகம் அல்லது மிகத் தீவிரமான பக்தி மார்க்கம். தனிமையில் உள்ளம் உருகி ஏக்கத்துடன் கடவுளிடம் 'ஒரு முறை எனக்கு உன்னைக் காட்டியருள்' என்று கதறி அழவேண்டும்.

அழைக்கும் விதத்தில் அழைத்தால்
அன்னை சியாமா எவ்வாறு நம்மை விட்டிருப்பாள்?''.

மார்வாரி பக்தர் : "ஐயா, உருவ வழிபாடு என்ருல் என்ன? குணமற்ற, உருவமற்ற வழிபாடு என்ருல் என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர் : "தந்தையின் புகைப்படம் எப்படி உன் தந்தையை நினைவிற்குக் கொண்டுவருகிறதோ, அதுபோல நீ தொடர்ந்து வடிவங்களை வழிபட்டுவந்தால் உண்மை இறைவனை உணர்வாய்.

"பரந்துபட்ட நீர்ப்பரப்பிலே எழும் நீர்க்குமிழிகளைப் போன்றது உருவ வழிபாடு. எல்லையற்றுப் பரந்து விரிந்து கிடக்கும் மஹா சிதாகாசமாம் (அறிவு ஆகாய வெளியில்) ஞான வெளியில் பல்வேறுவகைப்பட்ட தெய்வ வடிவங்கள் உதிப்பதைக் காண்கிருேம். கடவுள் அவதாரமும் இப்பல வடிவங்களில் ஒன்றே. இத்தகைய அவதார புருஷர்கள் செய்து வரும் தெய்விக லீலைகள் வாயிலாகப் பராசக்தி தன் விளையாட்டை விளையாடி வருகிருள். வெறும் நூலறிவில் என்ன இருக்கிறது? உள்ளம் உருகி அழுது அழைத்தால்தான் ஈசனைப் பெற முடியும். அப்படியிருக்கப் பல விஷயங்களை அறிந்து கொள்ள வேண்டிய அவசியம்தான் என்ன?

"யார் மக்களுக்கு உபதேசங்கள் வழங்குதற்குரிய ஆசானே அவர்மட்டுமே பல விஷயங்களை அறிய வேண்டும். அடுத்தவனேடு போராடி அவனைக் கொல்லவேண்டுமென்ருல், வாள், கேடயம் முதலியவை அவசியமாகின்றன. ஆனுல், தங்களையே மாய்த்துக்கொள்ள விரும்புகிறவர்களுக்கு ஒரு சிறு ஊசி அல்லது கத்தி போதுமானது.

"நான் யார்? என்பதை ஒருவன் தேடிக்கொண்டு செல்லும் போது இறுதியில் இறைவனை அடைகிருன். நான் என்பது என்ன? மாமிசமா? உடலில் உள்ள எலும்பா? இரத்தமா? சதையா? மனமா? புத்தியா? இவ்வாறு ஆராய்ந்துகொண்டே போனுல் கடைசியில் 'நான்' என்பது இவை எதுவும் அல்ல என்பதை அறிகிருன். இந்த முறை 'இது அல்ல, இது அல்ல' என்று கூறப்படும். ஆத்மாவைப் பற்றி அறிந்துகொள்ளவோ அதைத் தொடவோ ஒருவரால் முடியாது. அது குணமற்றது; உருவமும் உபாதிகளும் அற்றது.

"ஆனல், பக்தி மார்க்கத்திலோ கடவுள் குணங்களோடு கூடியவர். அவர் உணர்வு மயமானவர். —'சின்மய சியாம், சின்மய தாம்'. அவரைப் பற்றிய எல்லாமே உணர்வுமயம்; தெய்விகமயம்."

மார்வாரி பக்தர்கள் குருதேவரை வணங்கி விடைபெற்றுச் சென்றனர்.

மாலை நெருங்கிக்கொண்டிருந்த சமயத்தில் குருதேவர் வெளியே வந்து கங்கையைத் தரிசித்தார். அறையில் விளக்கேற்றப்பட்டது. ஸ்ரீராமகிருஷ்ணர் காளிதேவியின் புனிதமான நாமத்தை உச்சரித்தபடியே கட்டிலில் அமர்ந்து கொண்டு தியானத்தில் ஈடுபட்டார்.

காளிகோயிலில் மாலை ஆராதனை ஆரம்பமாயிற்று. கங்கைக் கரையிலும், பஞ்சவடியிலும் இருந்த பக்தர்கள் தொலைவில் இருந்தவண்ணம் ஆராதனையின் இனிய ஓசைகளைக் கேட்டு நின்றனர். நீர்ஏற்றம் காரணமாகக் கங்கை சல சலவென்ற சத்தத்தோடு வடதிசை நோக்கிப் பாய்ந்து சென்றது. மாலை ஆராதனைக்குரிய இனிய மணியோசை காற்றில் மிதந்து சென்று கங்கைநீரின் சலசலத்த ஓசையில் கலந்து மேலும் இனிமையைக் கூட்டிற்று. இந்த அருமையான சூழ்நிலையில், பிரேமைப் பித்துக் கொண்ட பரமஹம்ஸர் இறைவனை நினைத்த வண்ணம் தம் அறையில் வீற்றிருந்தார். இதயம் இன்பமயம்! எல்லாம் இனிமை! இன்பம்! இன்பம்! இன்பம்!

# தட்சிணேசுவரத்தில் குருதேவரின் பிறந்த தின விழா

**ஞாயிற்றுக்கிழமை, பிப்ரவரி 18, 1883**

காலை மணி ஏழு அல்லது எட்டு இருக்கும். பெல்கேரியா விலுள்ள கோவிந்தமுகோபாத்யாயர் வீட்டிற்கு ஸ்ரீராம கிருஷ்ணர் சென்றிருந்தார். நரேந்திரர், ராம் மற்றும் பல பக்தர்களும், அக்கம் பக்கத்து வீட்டார்களும் அங்குக் குழுமி யிருந்தனர். பஜனை நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது குருதேவர் பக்திப் பரவசத்துடன் நரேந்திரர் முதலியவர்களோடு சேர்ந்து நடனமாடினர்.

பஜனை முடிந்த பின்னர் அனைவரும் அமர்ந்தனர். பலர் ஸ்ரீராமகிருஷ்ணரை வணங்கினர். அப்போது அவர்களிடம் "கடவுளை வணங்கு, கடவுளை வணங்கு" என்று குருதேவர் இடையிடையே கூறினர். "கடவுள் ஒருவரே எல்லாமாக இருக்கிறார். சில இடங்களில் சில மனிதர்களிடத்தில் அவருடைய வெளிப்பாடு அதிகம். உதாரணத்திற்குத் துறவிகளைக் கூறலாம்.

"தீயவர்களிடத்தே இறைவனின் வெளிப்பாடு எப்படி? என்று நீங்கள் கேட்கலாம். உண்மைதான். புலி, சிங்கம் முதலிய கொடிய விலங்குகளும் உலகில் இருக்கின்றன. ஆனால், புலியாகிய நாராயணனை அணைத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. தொலைவிலிருந்து வணங்கி அகன்றுவிட வேண்டும். புலியின் அருகேகூடப் போகக்கூடாது. தண்ணீரை எடுத்துக்கொள்ளுங்கள். சில தண்ணீரைக் குடிக்கலாம், சில தண்ணீரைக் கொண்டு பூஜை செய்யலாம். சிலவற்றில் குளிக்கலாம். சிலவற்றில் வெறும் கை, கால்களை மட்டுமே கழுவிக்கொள்ள முடியும்."

அண்டை வீட்டான்: "ஐயா, வேதாந்த மதம் என்பது என்ன? அதன் கோட்பாடுகள் யாவை?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "வேதாந்திகள் 'ஸோஹம்' என்பர். அவர்களுடைய கருத்துப்படி பிரம்மம் ஒன்றே உண்மை. காணப்படும் இந்த உலகம் பொய். நானும் பொய். இருப்ப தெல்லாம் அந்தப் பரம்பொருள் ஒன்றுதான். ஆனால், 'நான்' என்பது மறைவதே இல்லை. ஆகையால் 'நான் அவனது அடிமை, நான் அவனுடைய குழந்தை, நான் அவனுடைய பக்தன்' என்று எண்ணுவது மிகவும் நல்லது.

"கலியுகத்திற்கு பக்தி யோகமே சிறந்தது. பக்தியின் மூலமும் அவனை அடைய முடியும். உடலைப் பற்றிய உணர்வு இருக்கும்வரை விஷயப்பற்றும் இருந்துவரும். சுவைப்பது, காண்பது, உணர்வது, கேட்பது என்பவைகளே விஷயங்கள். விஷயப்பற்றை நீக்குவது மிகக் கடினம். விஷயப் பற்று இருக்கும்போது 'ஸோஹம்' என்ற உணர்வு தோன்ருது.

"துறவு மேற்கொண்டவர்களிடம் விஷயப்பற்று மிகக் குறைவு. இல்லறத்தான் எப்போதும் விஷயப் பற்ருேடு கூடிய எண்ணங்களிலேயே மூழ்கியிருப்பான்[1]. ஆதலால் இல்லறத் தார் 'நான் ஈசனது அடியான்' என்ற நிலையைக் கொள்வது நல்லது."

பக்தன் : "நாங்கள் பாவிகள். எங்களுக்குக் கதி மோட்சம் உண்டா? எங்கள் நிலை என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பகவானுடைய பெயரையும் புகழை யும் பாடுகின்ற அளவில் எல்லாப் பாவங்களும் பறந்து விடுகின்றன. உடலாகிய மரத்தில் பாவப் பறவைகள் அமர்ந்துள்ளன. அவன் பெயரையும் புகழையும் பாடுவது என்பது கைகளைக் கொட்டுதல். கைகளைத் தட்டினுல் எப்படி மரத்திலுள்ள பறவைகள் பறந்து விடுகின்றனவோ, அப்படி அவனது பெயரையும் புகழையும் பாடினுல் எல்லாப் பாவங்களும் பறந்துவிடுகின்றன.[2]

"மேலும் கேள். குளத்தில் இருக்கும் தண்ணீர் வெப்பத் தால் ஆவியாகி மேலே செல்கிறது. அதேபோல் இறைவனது பெயரையும் புகழையும் பாடுவதனுல் பாவக் குளத்தின் தண்ணீர் தானுகவே வற்றிவிடுகிறது. தினமும் இப்படிப் பழக வேண்டும். சர்க்கஸ் வித்தையில் வேகமாக ஓடுகிற ஒரு

1. கீதை 12-5. 2. கீதை 18-66.

குதிரையின்மேல் ஒரு பெண் ஒரே காலில் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தேன். அதற்கு எவ்வளவு பயிற்சி வேண்டியிருந்தது.

"மேலும் கடவுளைக் காண வேண்டுமென்று ஒரு முறையாவது அழவேண்டும். கடவுளைக் காண இரண்டு வழிகள். ஒன்று அப்பியாசம்–சாதனை பழகுதல். மற்றொன்று, அனுராகம்–கடவுளைக் காண வேண்டும் என்ற ஆழ்ந்த மன ஏக்கம்."

பிறகு வீட்டின் மேன்மாடியில் உள்ள அறையை அடுத்தாற் போன்ற தாழ்வாரத்தில் குருதேவர், பக்தர்களோடு பிரசாதம் உட்கொண்டார். அப்போது பகல் ஒருமணி. விருந்து நடந்து கொண்டிருந்தது. குருதேவர் சாப்பிட்டுக்கொண்டிருக்கும் போது வீட்டின் தாழ்வாரத்தில் இருந்து ஒரு பக்தர் உள்ளம் உருகி, பக்தி ததும்ப அன்னையைப் பற்றிய பாட்டொன்றைப் பாட ஆரம்பித்தார்.

குருதேவர் பாட்டைக் கேட்டு சமாதிநிலை அடைந்தார். உடல் அசைவற்றிருக்க, கை பிரசாதத் தட்டைத் தொட்டபடி எழுதியசித்திரம்போல் அசைவற்றுஅப்படியே அமர்ந்திருந்தார். அவரால் மேற்கொண்டு உணவு உட்கொள்ள இயலவில்லை. நீண்ட நேரத்திற்குப் பிறகு அவருடைய சமாதி நிலை சிறிது சிறிதாகக் கலையத் துவங்கியது. அப்போது குருதேவர், "நான் கீழே செல்ல வேண்டும், நான் கீழே செல்லவேண்டும்" என்று கூற, ஒரு பக்தர் மிகவும் எச்சரிக்கையுடன் அவரைக் கீழே அழைத்துச்சென்றார்.

காலையில் பக்தர்களுடன் குருதேவர் ஆனந்தமாக ஆடியும் பாடியும் களித்த தாழ்வாரத்தில் தரையின் மேல் விரித்த ஜமுக்காளம் இன்னமும் விரித்தபடியே இருந்தது. குருதேவர் பரவச நிலையில் பாடகரின் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார். பாடகர் ஒரு கணம் பாட்டை நிறுத்தியபோது, குருதேவர் பாடகனைப் பார்த்துப் பணிவோடு, 'ஐயா, இன்னொரு முறை தேவியைப் பற்றிய பாட்டைப் பாடுங்கள். கேட்க விரும்புகிறேன்' என்றார். பாடகர் மீண்டும் பாடத்துவங்கினார்.

அன்னையே, விழித்தெழு! அன்னையே, விழித்தெழு!
மூலத் துறங்கும் முதல்வியே, விழித்தெழு!
நாட்பல கழிந்தன; நாயகீ, விழித்தெழு!
குலகுண்டலினி நலத்தாய், விழித்தெழு!

பழகிய சாதனை பலன்நல் கிடவே
என்சிரம் நோக்கி இற்றைவீ, செல்க!
ஆயிரம் இதழ்கள் அமைந்த தாமரை
ஆசனத் தமர்ந்த அருட்சி வனுடனே
இணைந் தொன்றுகிட இனிதே செல்க!
சாற்றும் கமலச் சக்கரம் ஆறினைப்
பிளந்து செல்க பேரருள் அன்னையே!
அறிவெனும் வடிவுறும் அம்மையே! நெஞ்சின்
ஏக்கம் நீக்குக இன்பத் தாயே!

## ஞாயிற்றுக்கிழமை, பிப்ரவரி 25, 1883

மதிய உணவிற்குப் பிறகு குருதேவர் தமது அறையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்.

ராக்கால், ஹரிஷ், லாட்டு, ஹாஸ்ரா, முதலானோர் இப்பொழு தெல்லாம் குருதேவருடன் வசித்து வரலாயினர். ராம், கேதார், நித்தியகோபால், ம- முதலிய பக்தர்கள் கல்கத்தாவிலிருந்து வந்திருந்தனர். சௌதுரி என்பவரும் வந்திருந்தார்.

சௌதுரியின் மனைவி சமீபத்தில் காலமாகிவிடவே, மன ஆறுதல் பெற வேண்டி அவர் குருதேவரைக் காண அடிக்கடி இங்கு வருவதுண்டு. அவர் படித்துப் பட்டம் பெற்றவர். அரசாங்க அலுவலில் இருப்பவர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (ராம் முதலிய பக்தர்களைப் பார்த்து) "ராக்கால், நரேந்திரன், பவநாத் இவர்கள் நித்திய சித்தர்கள். அதாவது பிறவியிலிருந்தே ஞானம் படைத்தவர்கள். மக்களுக்குப் போதிக்கவே இவர்கள் உடல் தரித்துள்ளனர்.

"கிருபாசித்தர்கள் என்ற மற்றொரு பிரிவினர் உண்டு. இவர்கள் உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவர்களிடம் திடீரென்று கடவுளின் கருணை பிறக்கிறது. உடனே இறைக் காட்சி கிட்டுகிறது. அதன் பயனாக ஞானம் பிறக்கிறது. ஆயிரம் ஆண்டுகளாக இருள் மூடிக்கிடக்கும் ஓர் அறையில் விளக்கினை எடுத்துச்சென்ற மாத்திரத்திலேயே எப்படி இருள் அகன்று ஒளி பெறுகின்றதோ, அதுபோன்றது இவர்கள் நிலை. அறையில் விளக்கு வைத்தவுடன் வெளிச்சம் சிறிது சிறிதாக வருவதில்லை.

"இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டு இருப்பவர்கள் சாதனை கள் பழகுவது அவசியம். தனிமையில் சென்று உள்ளத் துடிப் போடு இறைவனைக் கூவி அழைக்க வேண்டும். (சௌதுரியைப் பார்த்து) கல்வி அறிவினால் கடவுளை அடைய முடியாது.

"ஈசனை அறிவால் ஆராய்ந்து அறிவது எப்படி முடியும்? முடியாது. அவனுடைய திருவடித் தாமரைகளில் பக்தி பூணுவதற்கான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். இறைவனுடைய எல்லையற்ற மகிமைகளை அறிந்தவர் யார்? அவருடைய படைப்பைத்தான் யாரால் புரிந்துகொள்ள முடியும்?

"எட்டு வசுக்களில் ஒருவரான பீஷ்மர் அம்புப் படுக்கை யில் படுத்திருந்தபோது அழத் துவங்கினார். அவருடைய அழு கைக்குக் காரணம் கேட்டபொழுது 'என்ன ஆச்சரியம்? பகவான்கிருஷ்ணன் பாண்டவர்களுடன் எப்போதும் இருந்து கொண்டே இருக்கிறார். அப்படி இருந்தும் பாண்டவர்கள் பட்ட துன்பங்களுக்கும், துயரங்களுக்கும் அளவில்லையே! கடவுளுடைய செயலை யாரால் அறிய முடியும்? இதுதான் என் அழுகைக்குக் காரணம்' என்றார்."

சௌதுரி : "கடவுளைக் காண்பது எப்படி?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இந்த ஊனக் கண்களால் அவரைக் காண முடியாது. தெய்விகக் கண்களை ஈசனே அளித்தால்தான் அவரைக் காணமுடியும். விசுவரூப தரிசனத்தை அர்ஜுனனுக் குக் காட்டியபோது கிருஷ்ணன் அவனுக்குத் தெய்விகக் கண்களைக் கொடுத்தார்.

"உங்களுடைய தத்துவ சாஸ்திர நூல்கள் கூறுவனவெல் லாம், 'இருப்பதெல்லாம் இதுவாக இருக்கும், அதுவாக இருக் கும்' என்ற வெறும் ஊகங்கள்தாம். அவை வீண்வாதங்கள். இவைகளால் இறைவனை அடைய முடியாது.

"உங்களிடம் 'ராகபக்தி' ஏற்பட்டால் அதாவது 'கடவுளைக் காண வேண்டும்' என்ற ஆழ்ந்த அன்புத் துடிப் போடு கூடிய பக்தி ஏற்பட்டால் இறைவனால் அதை அமைதி யாகப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. பக்தி அவனுக்கு எவ்வளவு விருப்பமானது தெரியுமா? பிண்ணாக்கு கலந்த தீனி யில் பசுவுக்கு எவ்வளவு விருப்பமோ, அவ்வளவு விருப்பம்

அவனுக்குப் பக்தனிடம். அந்தத் தீனியைப் பசு 'கப்' 'கப்' என்று தின்றுவிடுகிறது.

"ராகபக்தி என்பது சுத்த பக்தி, அஹேதுக பக்தி. அதாவது எதையும் எதிர்பார்க்காத பக்தி. பிரகலாதனிடம் இருந்தது இது போன்ற பக்தி.

"ஒரு பெரிய மனிதனை நீ மிகவும் விரும்புகிறாய். அவனைப் பார்க்கத் தினமும் போகிறாய். ஆனால் அவனிடம் எதையும் நீ விரும்புவதில்லை. 'உனக்கு ஏதாவது வேண்டுமா' என்று அந்தப் பெரிய மனிதன் கேட்டாலும், 'ஐயா எனக்கு ஒன்றும் வேண்டாம். உங்களைப் பார்க்க வருகிறேன். அதுவே போதும்' என்று கூறுகிறாய். இதைத்தான் எதையும் எதிர்பாராத பக்தி என்று கூறுவார்கள். இத்தகைய பக்தி உள்ளவர்கள் எதையும் விரும்புவதில்லை. வெறும் அன்பை மட்டும் விரும்புகிறார்கள்."

இவ்வாறு கூறிக்கொண்டே குருதேவர் பாடத் தொடங்கினார்.

நான் முக்தி அளிக்கத் தயங்குவதில்லை,
ஆனால் சுத்த பக்தி அளிக்கத் தயங்குகிறேன்.

"சுருக்கமாகச் சொன்னால், நமக்கு வேண்டியதெல்லாம் ஈசனிடம் ஆழ்ந்த பக்தி, விவேகம், வைராக்கியம் எனும் இவைதாம்".

சௌதுரி : "ஐயா, குரு இல்லாவிட்டால் ஆத்மிக வாழ்க்கை பலனளிக்காதா?"

ஸ்ரீராமகிஷ்ருணர் : "சச்சிதானந்தம்தான் குரு. மயானத்தில் சவசாதனம்[1] செய்தபிறகு இஷ்ட தேவதையின் காட்சி கிடைக்கும் வேளையில், குரு சாதகன்முன் தோன்றி 'இதோ பார்! இஷ்ட தெய்வம்' என்று கூறுகிறார். பிறகு இஷ்ட தேவதையில் அவர் மறைந்துவிடுகிறார். குரு யாரோ அவரேதான் இஷ்ட தெய்வம். குருவே இஷ்ட தெய்வத்தை நமக்கு அறிமுகப் படுத்துகிறார்.

"பெண்கள் அனந்த விரதம் என்னும் பூஜையைச் செய்கின்றனர். ஆனால் விஷ்ணுவின் உருவையே அவர்கள் பூஜிக்கின்றனர். அவரிடம் ஈசனது அளவற்ற உருவங்கள் அடங்கியுள்ளன.

1. பிணத்தின் மேல் அமர்ந்துகொண்டு செய்யும் தந்திர சாதனை.

(ராம் முதலிய பக்தர்களை நோக்கி) "எந்தத் தெய்வத்தின் உருவத்தைத் தியானிக்கவேண்டும் என்று கேட்டால், 'எந்தத் தெய்வத்தை நீங்கள் மனமார நேசிக்கிறீர்களோ அந்தத் தெய்வத்தைக் குறித்துத் தியானம் செய்யுங்கள்' என்பேன். ஆனால் எல்லாம் ஒரே ஈசனுடைய வடிவம் என்பதை அறிந்துகொள்ளுங்கள். எதையும் வெறுக்கக்கூடாது. சிவன், காளி, ஹரி இவைகள் எல்லாம் ஒன்றான உண்மையின் பல்வேறு வடிவங்கள். எவன் எல்லாவற்றையும் ஒன்றாகக் காண்கின்றானோ அவனே உண்மையில் பேறு பெற்றவன். புறத்திலே சிவன், அகத்திலே காளி, வாயிலே ஹரி நாமம். சிறிது காமம், வெகுளி முதலியவை இல்லாவிடில் உடல் நிலைக்காது. ஆகவே சாதனை புரியும் நிலையில் நீங்கள் இவைகளைக் குறைக்க மட்டுமே முயல வேண்டும்.

குருதேவர் : (கேதாரைப் பார்த்து) "இவர் நன்கு உணர்ந்தவர். நித்தியத்தையும் ஒப்புக்கொள்ளுகிறார். லீலையையும் ஒப்புக்கொள்ளுகிறார். ஒருபுறம் பிரம்மம், மற்றொருபுறம் தெய்விக லீலைகள், மானிட லீலைகள் என்று இவற்றை நம்புகிறார்."

கேதாருடைய கருத்துப்படி, ஸ்ரீராமகிருஷ்ணர் மனித உடல் தாங்கிய ஓர் அவதார புருஷர்.

நித்தியகோபாலைக் குறித்து, குருதேவர் பக்தர்களிடம் 'இவன் உயர்ந்த நிலையில் இருக்கிறான்' என்றார். (நித்தியக் கோபாலை நோக்கி) "நீ அந்த இடத்திற்கு அடிக்கடி போகக் கூடாது. வேண்டுமானால் எப்போதாவது ஒருமுறை போகலாம். அவள் பக்தையாக இருக்கலாம். ஆனால் அவள் ஒரு பெண். ஆகவே எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

"சந்நியாசிகள் மிக மிகக் கடுமையான விதிகளைப் பின்பற்றவேண்டும். பெண்களுடைய படத்தைக்கூடப் பார்க்கக் கூடாது. ஆனால், சம்சாரிகள் விஷயத்தில் அப்படி அல்ல. இவ்வளவு கடுமையான விதிகள் அவர்களுக்கு வேண்டியதில்லை.

"பெண்கள் எவ்வளவுதான் பக்தி உடையவர்களாக இருந்தாலும் ஒரு துறவி அவர்களோடு நெருங்கிப் பழகக்கூடாது. மனத்தை எவ்வளவுதான் கட்டுப்படுத்தியவராக இருந்தாலும் உலக மக்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்க வேண்டுமென்பதற்காக இந்த விதிகளைத் துறவி பின்பற்ற வேண்டும்.

"துறவியின் முழுத் துறவைக் கண்டு, உலக மக்கள் துறக்கக் கற்றுக் கொள்வார்கள். இல்லையெனில், உலகப் பற்றுக்களில் மேலும் மேலும் மூழ்கிப்போவார்கள். துறவி உலகத்திற்கே பெரும் ஆசான் ஆவான்".

அப்பொழுது குருதேவரும் பக்தர்களும் எழுந்து நடக்கத் துவங்கினர். ம-, பிரகலாதருடைய படத்தின்முன் நின்று அதை உற்றுப்பார்த்தார். பிரகலாதருடைய எதையும் எதிர்பாராத பக்தியைப் பற்றிக் குருதேவர் குறிப்பிட்டார் அல்லவா?

## வெள்ளிக்கிழமை, மார்ச் 9, 1883

காலை எட்டு அல்லது ஒன்பது மணி இருக்கும். தட்சிணேசுவரத்தில் குருதேவர் தமது அறையில் ராக்கால், ம- முதலிய பக்தர்களுடன் அமர்ந்திருந்தார். அன்று அமாவாசை. வழக்கம் போல் குருதேவர் அடிக்கடி அன்னையை எண்ணியவண்ணம் பரவசத்தில் ஆழ்ந்திருந்தார். அந்த நிலையில் இருந்தபடியே பேசத் தொடங்கினர். "கடவுள் ஒருவர்தான் உண்மை; மற்ற எல்லாமே பொய். அன்னை காளி எல்லோரையும் தனது மாயா சக்தியால் அஞ்ஞானத்தில் ஆழ்த்திவைத்திருக்கிருள். மனிதர்களைப் பாருங்கள். பெரும்பாலோர் அறியாமையில் மூழ்கிக் கிடக்கிருர்கள். வாழ்க்கையில் பெண், பொன் இவைகளால் மிகவும் துன்பத்துக்குள்ளாகின்றனர். என்ருலும் அவர்களுக்கு அவைகளின்மீது இருக்கும் பற்று விட்டபாடில்லை. ஒட்டகம் முட்செடிகளை உணவாகத் தின்னும். முட்செடியைத் தின்பதால் முள் கிழித்து ஒட்டகத்தின் வாயிலிருந்து இரத்தம் பீறிட்டுக்கொண்டுவரும். இருந்தாலும் முட்செடி மீது கொண்ட பற்ருல் மேலும் மேலும் அதையேத் தின்கிறது. குழந்தையைப் பெற்றெடுக்கும்போது பெண் மிகுந்த வேதனைப் படுகிருள். அந்த வேதனை தாங்காமல் அவள் 'இனிக் கணவன் முகத்தையே பார்க்கமாட்டேன்; எவ்வளவு கொடும் வேதனை' என்று கூக்குரலிடுகிருள். பிறகு எல்லாவற்றையும் மறந்துவிடுகிருள்.

"இதோ பார்! உண்மையில் கடவுளை யாரும் தேடுவதில்லை. சில மனிதர்கள் இருக்கிருர்கள். அவர்கள் அன்னுசிச் செடியின் சுவையான பழங்களைச் சாப்பிடமாட்டார்கள், தழைகளையே தின்கிருர்கள்."

பக்தர்: "ஐயா! உலக வாழ்வில் இறைவன் ஏன் நம்மை வைத்திருக்கிருர்?".

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இவ்வுலகம் ஒரு கர்மபூமி. செயல் புரிந்துகொண்டே சென்றால் ஞானம் உதிக்கிறது. 'இந்தக் காரியங்களைச் செய். இவைகளைச் செய்யாதே' என்று குரு எடுத்துரைக்கிறார். பிறகு அவரே பயன் கருதாமல் சில காரியங்களைச் செய்யுமாறு உபதேசிக்கிறார்.[1] காரியம் புரிவதன் மூலம் மனத்தில் உள்ள மாசுகள் மறைகின்றன. ஒரு நல்ல மருத்துவன் வாய்த்து விட்டால் அவன் தரும் மருந்தை உட்கொள்ள உட்கொள்ள, நோய் நீங்கி, நாளடைவில் குணமடைவது போன்றது இது.

"கடவுள் நம்மை ஏன் உலக வாழ்க்கையிலிருந்து விடுவிக்க வில்லை? வியாதி குணமடைந்தால்தானே நம்மை விடுவிப்பார்! பெண், பொன் இன்பம் நுகரும் விருப்பம் நம்மை விட்டு எப்போது அடியோடு மறைகிறதோ, அப்போதுதான் அவர் நம்மை இந்த வாழ்விலிருந்து விடுவிப்பார். ஒருவன் மருத்துவ நிலையத்தில் தன் பெயரைப் பதிவு செய்து கொண்டபின், அவனால் அங்கிருந்து தன் விருப்பம்போல் ஓடி வந்துவிடமுடியாது. நோய் குணமடையாவிட்டால் மருத்துவர் நம்மை எவ்வாறு விடுவிப்பார்?"

இப்பொழுதெல்லாம் குருதேவர் அன்னை யசோதையைப் போல் எப்போதும் தாயன்பில் மூழ்கியிருந்தார். ஆகவே ராக்காலைத் தம்முடன் வைத்துக்கொண்டிருந்தார். ராக்காலும் குருதேவரிடம் இருக்கும்போது ஒரு சின்னஞ்சிறு குழந்தை தன் தாயிடம் எப்படி இருக்குமோ அப்படி இருப்பார். குழந்தை பால் குடிக்க தாயின் மடிமீது சாய்ந்து உட்கார்ந்து கொள்வது போல் ராக்காலும் குருதேவரது மடிமீது சாய்ந்து உட்கார்ந்து கொள்வார்.

இவ்வாறு குருதேவர் ராக்காலுடன் உட்கார்ந்து கொண்டிருக்கும்பொழுது ஒரு பக்தர் அங்கு வந்தார். கடல்நீர் கங்கை நதியுடன் மோதி உள்ளே வருவதால், கங்கையில் மிக உயரமான பயங்கர அலைகள் தோன்றியிருப்பதைக் கூறினார். அதைக் கேட்டதும் குருதேவர், ராக்கால், ம— முதலிய அனைவரும் அதைக் காணப் பஞ்சவடிக்கு விரைந்தனர். அலைகள் மிக மிகப் பயங்கரமாக வெகு உயரத்தில் எழுந்து சீறிப்பாய்ந்து வந்தன. அப்போது கங்கையில், அந்தப் பயங்கர அலையில் ஒரு படகு சிக்கிக்கொண்டதைக் குருதேவர் கண்டார். "ஓ! அதோ பார்! ஒரு படகு பயங்கர அலையில் மாட்டிக்கொண்டது.........

1 கீதை 2-47

நல்ல வேளை. ஒன்றும் ஆகவில்லை. தப்பித்துக் கொண்டது!" என்று அப்படகைச் சுட்டிக் காட்டிக் கூறினர். பிறகு எல்லோரும் பஞ்சவடியில் உட்கார்ந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (ம-வைப் பார்த்து) "இவ்வளவு உயரமான அலைகள் எப்படிக் கிளம்புகின்றன என்பதை எனக்கு விளக்கிச் சொல்."

ம-, தரையில் படம் வரைந்து, பூமியின் இழுப்பாற்றல், கடலில் உயரமான அலைகள் தோன்றல், அலைகள் தோன்ருமல் தண்ணீர் மட்டம் குறைவது, அமாவாசை, பௌர்ணமி, கிரகணம் முதலியவற்றைச் சூரியன், சந்திரன், பூமி இவற்றின் உருவங்களோடு சேர்த்து விளக்கத் தொடங்கினர். சிறிது நேரம் ம- சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்த குருதேவர் அவரிடம்: "நிறுத்து, இவற்றையெல்லாம் என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. தலை சுற்றுகிறது. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொள்கிறது. ஆமாம், மிகத் தொலைவில் இருக்கின்ற சூரியன், சந்திரன், கிரகணம் இவைகளைப் பற்றியெல்லாம் இவர்கள் எவ்வாறு தெரிந்து கொள்ளுகிருர்கள்?

"சிறு வயதில் நான் நன்ருகச் சித்திரம் வரைவேன். ஆனுல் கணக்கு என்ருலே தலைவலி. கணக்குப் போட எனக்குக் கொஞ்சங்கூட வராது."

இவ்வாறு கூறிக்கொண்டே குருதேவர் தமது அறைக்குத் திரும்பினர். அங்குச் சுவர்மீது மாட்டப்பட்டிருந்த யசோதையின் உருவப்படத்தை உற்று நோக்கி, "இது நன்ருக வரையப்படவில்லை. ஒரு பூக்காரியைப்போல் யசோதையை வரைந்திருக்கிருர்கள்" என்று வருத்தம் மேலிடக் கூறினர்.

பகல் உணவிற்குப் பிறகு குருதேவர் சிறிது ஓய்வெடுத்துக் கொண்டார். ஒவ்வொருவராக அதரும் மற்ற பக்தர்களும் வந்து சேர்ந்தனர். அதர்சென் குருதேவரைப் பார்க்க வருவது இதுவே முதல் தடவை. கல்கத்தாவில் 'பேனேடோலா' என்ற இடத்தில் இவருடைய வீடு இருக்கிறது. இவர் துணை நீதிபதியாக இருந்தார். வயது இருபத்தொன்பது, அல்லது முப்பது இருக்கும்.

அதர் (ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்து) : "ஐயா, நான் உங்களை ஒன்று கேட்க விரும்புகிறேன். பலி இடுவது நல்லதா? இது உயிர்களைத் துன்புறுத்துவது ஆகாதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "சில விசேஷ காலங்களில் பலி இடுவதை சாஸ்திரம் அனுமதிக்கிறது. சாஸ்திரம் சொல்லுகின்ற சமயங்களில் பலி இடுவது பாவமல்ல. அஷ்டமித் திதியில் அன்னை காளிக்கு ஆடு பலியிடுவதைத் தந்திர சாஸ்திரம்[1] அனுமதிக்கிறது. ஆனால், மற்ற காலங்களில் இப்படிப் பலி கொடுப்பதைத் தந்திர சாஸ்திரம் அனுமதிப்பதில்லை. என்னுடைய இப்போதைய மனநிலையில் நான் பலியிடுவதைக் கண்ணால் பார்க்கக் கூடமுடியாது. அன்னைக்குப் படைத்து நைவேத்தியம் செய்த மாமிசத்தைக்கூட என்னால் தொட முடிவதில்லை. பிரசாதமாகையால் அன்னை என்னைக் கோபித்துக் கொள்வாளோ என்ற அச்சத்தால் கையால் தொட்டுத் தலையில் வைத்துக் கொள்வேன்.

"சில சமயம் நான் பார்க்குமிடமெங்கும் பரம்பொருளைக் காணும் நிலையை அடைகிறேன். ஓர் எறும்பிலும் அவனைக் காண்கிறேன். இந்த நிலையில், ஏதாவது ஒரு பிராணி இறந்து கிடந்தால் அதனுடைய உடல்தான் அழிந்தது; ஆத்மாவிற்கு அழிவில்லை என்று ஆறுதல் ஏற்படுகிறது.[2]

"அறிவால் அதிக விசாரம் செய்து ஒன்றை அறிய முற்படுவது நல்லதல்ல. தேவியின் பாதகமலங்களில் பக்தி உண்டானால் அதுவே போதுமானது. எப்பொழுதும் உண்மை, பொய் இவற்றைக் குறித்துப் பாகுபடுத்தி அறிய முற்படுவது குழப்பத்தை உண்டாக்கும். குளத்தின் மேல்மட்டத்தில் தண்ணீர் தூய்மையாக இருக்கும். அதைக் குடிக்கலாம். அதை விட்டுவிட்டு அடிமட்டத்தில் கையைவிட்டுக் கலக்கினால் தண்ணீர் கலங்கிக் குடிக்க இயலாமற் போய் விடும். அது போல, அன்னையிடம் பக்திக்காகப் பிரார்த்தனை செய். துருவனுடைய பக்திக்குப் பின்னால் ஆசை இருந்தது. தன் தந்தையின் நாட்டை அடைய அவன் தவம் புரிந்தான். ஆனால் பிரகலாதனுடைய பக்தி கருதாதது."

பக்தர்: "ஐயா, இறைவனை அடைவது எப்படி?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பக்தியின் மூலம் அடையலாம். 'நீ காட்சி தராவிட்டால் என் கழுத்தை வெட்டிக் கொள்வேன்' என்று இறைவனிடம் வற்புறுத்த வேண்டும். இது தமோ குண பக்தி."

---

1 வங்காளத்தில் தந்திர சாஸ்திரம் பரவலாகப் பின்பற்றப் படுகிறது. தந்திர சாஸ்திரப்படி அன்னை காளிக்கு மாமிச உணவு படைப்பர்.

2. கீதை 2-20

பக்தர் : "கடவுளைக் காண முடியுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆம். கண்டிப்பாகக் காணலாம். உருவக் கடவுள், அருவக் கடவுள் இரண்டையும் காணலாம். உருவக் கடவுளை உணர்வோடு கூடிய சின்மயமாகக் காண லாம். மனித வடிவிலும் இறைவனைக் காணலாம். எப்படி யெனில் **அவதார புருஷரைக் காண்பது ஆண்டவனையே காண்பதாகும்.** ஒவ்வொரு யுகத்திலும் இந்த உலகில் கடவுள் மனித வடிவில் தோன்றுகிறார்."[1]

**ஞாயிற்றுக்கிழமை, மார்ச் 11, 1883**

இன்று பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் பிறந்தநாள். அவரது சீடர்களும், நெருங்கிய பக்தர்களும், தட்சிணேசுவரத்துக் காளிகோவிலிலுள்ள அவருடைய அறையில் அந்தப் புனிதமான நாளைக் கொண்டாட விரும்பினர்.

அதிகாலையிலிருந்தே பக்தர்கள் ஒவ்வொருவராகவும், கூட்டமாகவும் தட்சிணேசுவரத்திற்கு வரத் தொடங்கினர். பவதாரிணி கோவிலில் மங்கள ஆரதி நிறைவுற்றபின், வாத்திய மண்டபத்திலிருந்து இனிய சங்கீதம் ஒலிக்க ஆரம்பித்தது. அது வசந்தகாலமாதலால், மரங்களும், செடிகொடிகளும் புத்தம் புதிய இலைகளோடும், மலர்களோடும் காட்சி அளித்தன. சூழ்ந்து வீசிய காற்றும், ஆனந்தத்தைச் சுமந்து வந்தது போல் தோன்றிற்று. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் பிறந்தநாள் என்பதனால், அந்த மங்களநாளில், பக்தர்களின் இதயங்களில் ஆனந்தப் பூரிப்புக் குடிகொண்டிருந்தது.

அதிகாலையிலேயே குருதேவரின் அறைக்கு வந்துசேர்ந்த ம-, அங்கு பவநாத், ராக்கால், பவநாத்தின் நண்பரான காளி கிருஷ்ணர் ஆகியோர் முன்னதாகவே வந்திருந்ததைக் கவனித்தார். குருதேவர் புன்முறுவல் தவழ, தாழ்வாரத்தில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தார். அங்கு வந்த ம-, தரையில் வீழ்ந்து குருதேவரை வணங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (ம-விடம்) "நீ வந்து விட்டாயா? மிக்க மகிழ்ச்சி. (பக்தர்களை நோக்கி) வெட்கம், பொறுமை, பயம்; இம் மூன்றும் ஒருவனிடம் இருக்கும்வரை, அவன் ஞானம் பெற இயலாது. இன்று நீங்கள் எல்லோரும் ஒன்றுகூடி, ஆடிப்பாடி எவ்வளவு ஆனந்தம் அடையப் போகிறீர்கள்!

---

1 கீதை 4-8

ஆனால், ஹரிநாமம் ஓதுவதில் பித்தேறி ஆடவும் பாடவும் இயலாத மூடர்களுக்கு, ஒருநாளும் கடவுள் தரிசனம் கிட்டாது. பகவானது நாமங்களைப் பாடுவதற்கு வெட்கமோ, பயமோ ஏன் கொள்ள வேண்டும்? இப்போது நீங்கள் எல்லோரும் பாடுங்கள்."

பவநாத்தும், அவரது நண்பர் காளிகிருஷ்ணரும் சேர்ந்து பாடினார்கள் :

ஆனந்தம்! ஆனந்தம்! வெற்றி! வெற்றி!
அனைவரும் கூடுவோம்! பாட்டி சைப்போம்!
வான்வரை முழங்குவோம்! தூயதர்மம்
வளர்கவே பாரதத்தில் என்று ரைப்போம்!
ஒவ்வொரு நெஞ்சமும் உனது கோயில்!
ஒவ்வொரு திசையிலும் உனது நாமம்!
செவ்விதழ் இசைப்பது உனது கீதம்!
சேர்ந்தது உன்புகழ் பாடத் தானே?
பணம்பெயர், புகழேதும் தேவை யில்லை!
பரமனே! எமக்கதில் நாட்ட மில்லை!
கணந்தொறும் உன்பதம் சரண மென்றோம்!
காலனைக் கண்டும்நாம் அஞ்சமாட்டோம்!
ஆனந்த அமிர்தமாம் சுரங்க மொன்றை
அடைந்துளோம்! ஆகையால், எம்மிறைவா,
ஏனினிப் பயமெலாம்? வெற்றி! வெற்றி!
என்றுமுன் நாமமே வெல்வ தாக!

குருதேவர் கூப்பிய கரங்களுடன் அமர்ந்து, முழுமனதுடன் பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தார். பாட்டைக் கேட்கக் கேட்க, அவருடைய மனம், ஒரேயடியாக மேற்சென்று ஏதோ ஒரு தெய்விக உலகில் ஆழ்ந்து விட்டது. உலர்ந்த நெருப்புக் குச்சி போன்ற அவருடைய மனத்தில் ஒரு தடவை உரைத்தால் போதும். ஞானத்தீ, குபீரென்று பற்றி எரிய ஆரம்பித்துவிடும். சாதாரண மக்களின் மனமோ ஈரத்தீக்குச்சியைப் போன்றது. எவ்வளவு உரைத்தாலும் அதில் நெருப்புப் பற்றிக்கொள்ளாது. காரணம், அவர்களது மனம் உலக ஆசைகளாகிய ஈரத்தில் மூழ்கியிருப்பது தான்.

குருதேவர் நீண்டநேரம் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். பவநாத்தின் காதில் காளிகிருஷ்ணர் ஏதோ மெதுவாகக் கூறினர். பின்பு அவர் குருதேவரின் முன்பு வீழ்ந்து வணங்கியெழுந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் வியப்புடன், 'நீ எங்கே போகிறாய்?' என்று அவரைக் கேட்டார்.

பவநாத் : "சுவாமி! அவனுக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "என்ன வேலையாகப் போகிறான்?"

பவநாத் : "அவன் பராநகரிலுள்ள தொழிலாளர் நிறுவனத்திற்குச் செல்ல வேண்டும்." (காளிகிருஷ்ணர் புறப்பட்டு விட்டார்)

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அவனது துரதிஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும். இன்று இங்குப் பாடப்படும் ஹரி நாமத்தால், எவ்வளவு ஆனந்தம் பெருகியோடப் போகிறது தெரியுமா? அதை அனுபவிக்க அவனுக்குக் கொடுத்து வைக்க வில்லை! அவன் தலையெழுத்து அப்படி!"

ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அன்று உடல் நலம் சரியாக இல்லை. அதனால் அவர் கங்கையில் நீராடச் செல்லவில்லை நேரம் சுமார் எட்டரை அல்லது ஒன்பது மணி இருக்கும். குருதேவரின் அறைக்குக் கிழக்கேயுள்ள தாழ்வாரத்தில் கங்கைநீரைச் சில குடங்களில் கொண்டு வந்து வைத்தார்கள். குருதேவர் குளித்தார். சில பக்தர்கள் அதற்கு உதவி செய்தனர். குளித்துக் கொண்டிருந்த குருதேவர் 'ஒரு செம்பு நீரைத் தனியாக வையுங்கள்' என்று பணித்தார். கடைசியில் அந்நீரைத் தமது தலையில் ஊற்றிக் கொண்டார். தம் உடல் நலம் குறித்து அன்று மிக எச்சரிக்கையுடன் இருந்தார் குருதேவர். ஒரு செம்பு நீருக்கு மேல் அவர் தம் தலையில் ஊற்றிக் கொள்ள வில்லை.

நீராடிய பிறகு குருதேவர் தமது இனிய குரலில் பகவானுடைய நாமங்களை ஓதிக் கொண்டே புதிய ஆடை ஒன்றை அணிந்து கொண்டார். இரண்டொரு சீடர்கள் உடன் செல்ல, அவர் தென்திசையில் முற்றத்தின் வழியாகக் காளி கோவிலை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். அப்போது அவருடைய வாய், உலக அன்னையின் திருநாமத்தை இடை

விடாது ஓதிக் கொண்டிருந்தது. அவரது விழிகள், உள் நோக்கிய பார்வை கொண்டனவாயிருந்தன. அது, ஒரு அடைகாக்கும் பறவையின் பார்வையை ஒத்திருந்தது.

காளிதேவியின் ஆலயத்தினுள்ளே சென்ற குருதேவர் தேவியின் திருவுருவை வணங்கியபின், தேவியைப் பூஜித்தார். ஆனல் பூஜைக்குரிய விதிமுறைகளை அவர் அறவே பின்பற்ற வில்லை. ஒரு சமயம் அவர் காளிதேவியின் திருவடிகளில் மலரையும், சந்தனத்தையும் இட்டார்; மறு சமயம் அவற்றைத் தமது தலை மீது இட்டுக்கொண்டார். கடைசியாக அவர், காளிதேவிக்குச் சமர்ப்பித்திருந்த மலர்களைத் தம் தலையில் வைத்துக் கொண்டு பவநாத்திடம், 'இங்குள்ள இளநீரை எடுத்துக் கொள். இது தேவியின் பிரசாதம்' என்று கூறினர்.

மறுபடியும் முற்றத்தின் வழியாகக் குருதேவர் தமது அறைக்குத் திரும்பினர். ம-வும், பவநாத்தும் அவருடன் சென்றனர். பவநாத் கையில் இளநீருடன் வந்தார். வழியில் ஸ்ரீராதாகாந்தரின் கோவில் இருந்தது. குருதேவர் அந்தக் கோவிலை விஷ்ணு கோவில் என்றழைப்பது வழக்கம். அங்குச் சென்று ராதை, கிருஷ்ணன் இருவருடைய திருவுருவங்களையும் தரிசித்தார். இடப்புறத்தில் பன்னிரு சிவாலயங்கள் இருந்தன. சிவபெருமானை நெஞ்சில் நினைத்துக் கொண்டு, அத்திருக் கோவில்களை ஸ்ரீராமகிருஷ்ணர் வணங்கினர்.

இவை அனைத்தையும் முடித்துக் கொண்டு குருதேவர் தமது அறைக்குத் திரும்பியதும் அங்கே பக்தர்கள் பலர் வந்திருந்ததைக் கண்டார். ராம், நித்திய கோபால், கேதார் சட்டர்ஜி ஆகிய மூவரும் அதில் இருந்தனர். அடியார்கள் அனைவரும் குருதேவரைக் கண்டதும் வீழ்ந்து வணங்கினர். ஸ்ரீராமகிருஷ்ணர் அவர்களை அன்புடன் வரவேற்று அவர்களின் நலன்களைக் குறித்து விசாரித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர், 'நீ ஏதாவது சாப்பிடுகிருயா?' என்று நித்திய கோபாலை அன்புடன் வினவினர். குழந்தை இயல் புடைய நித்தியகோபால், 'உம், சாப்பிடுகிறேன்' என்ருர். அவர் பேசியது ஒரு குழந்தையின் பேச்சைப் போன்றிருந்தது. இருபத்து மூன்று அல்லது இருபத்து நான்கு வயதாகியிருந்த அவருக்கு இன்னும் திருமணமாகவில்லை. அவர் எப்போதும் மிக உயர்ந்த ஆத்மிக நிலையில் இருந்து வந்தார். சில சமயங்களில் தனியாகவும், சில சமயங்களில் ராம் என்ற

அன்பருடன் சேர்ந்தும் அவர் அடிக்கடி ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிக்க வருவது வழக்கம். நித்திய கோபாலின் மிகவுயர்ந்த ஆன்மிக நிலையைக் கண்டு, குருதேவர் அவரைப் பெரிதும் நேசித்தார். 'நித்திய கோபால், பரமஹம்ச நிலையை எய்தியவன்' என்று குருதேவரே அடிக்கடி கூறுவதுண்டு. நித்தியகோபாலை அவர் 'பிருந்தாவன கோபால்' என்றே கருதினர்.

நித்திய கோபால் சாப்பிட்டு முடிந்ததும், குருதேவர் கங்கையை நோக்கியிருந்த தமது அறையின் அரைவட்டத் தாழ்வாரத்திற்கு அவரை அழைத்துச் சென்று அவருடன் பேச ஆரம்பித்தார்.

பரமபக்தையான ஒரு பெண். அவளுக்குச் சுமார் முப்பத்தொன்று அல்லது முப்பத்திரண்டு வயது இருக்கும். அவள் அடிக்கடி வந்து ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிப்பது வழக்கம். ஆழ்ந்த பக்தி கொண்டவள். அவள் நித்திய கோபாலின் அற்புதமான தெய்விகப் பரவச நிலையைக் கண்டு, அவரைத் தன் குழந்தையாகப் பாவித்து அன்பு செலுத்தினள். நித்திய கோபாலை அவள் அடிக்கடி தன் வீட்டுக்கு அழைத்துச் செல்வதும் உண்டு.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீ அங்கே போகிறாயா?"

நித்தியகோபால்: (ஒரு குழந்தையைப் போல) "ஆமாம், அவள் என்னை அழைத்துச் செல்கிறாள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: **"ஏ சாது! ஜாக்கிரதையாக இரு!** எப்போதாவது ஓரிருமுறை சென்று வரலாம். அதிகமாகப் போகாதே. வழுக்கி விழுந்து விடுவாய். காமினி, காஞ்சனம் இவைதான் மாயை. சாதுக்கள் பெண்களிடமிருந்து மிகமிகத் தொலைவில் விலகியிருக்க வேண்டும். ஏனெனில் பெண் எனும் சுழலில் சிக்கி எல்லோருமே மூழ்கிப் போய்விடுகிறார்கள். அந்தச் சுழலிலே பிரம்மாவும், விஷ்ணுவும் கூட வீழ்ந்து திணறுகிறார்கள்."

இவ்விதம் குருதேவர் சொல்வதனைத்தையும் நித்திய கோபால் மிகக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

ம-, (தனக்குள்) "என்ன ஆச்சரியம்! 'நித்திய கோபால் பரமஹம்ச நிலையை அடைந்தவர்' எனறு குருதேவரே அடிக்கடி கூறுகிறார். அப்படியிருக்க, அத்தகைய உயர்ந்த

நிலையை எட்டியிருப்பவருக்கும் கூட ஆபத்து ஏற்படுமா? சந்நியாசிகள் விஷயத்தில் தான் குருதேவர் எவ்வளவு கடினமான நியமங்களை விதித்திருக்கிறார்! பெண்களுடன் நெருங்கிப் பழகுவதால் துறவிகளும் தங்கள் குறிக்கோளினின்று நழுவி, வீழ்ச்சியடைவதற்கு வாய்ப்பு ஏற்பட்டு விடும் போலும்! சாதுக்கள் இத்தகைய உயர்ந்த இலட்சியங்களைத் தங்கள் வாழ்க்கை மூலம் எடுத்துக் காட்டாவிட்டால், பாமர மக்கள் கடைத்தேறுவதற்கு வேறு வழி ஏது? அந்தப் பெண்மணியோ மிகவும் பக்தி வாய்ந்தவளாக இருக்கிறாள். எனினும் பெண் என்பதால் ஆபத்திற்கு அங்கே இடமுண்டு.

"ஸ்ரீகிருஷ்ண சைதன்யர் தமது சீடரான சின்னஹரிதாஸ் என்ற பக்தருக்கு ஏன் அவ்வளவு கடுமையான தண்டனை விதித்தார் என்பது இப்போது எனக்குப் புரிகிறது. ஸ்ரீசைதன்ய தேவர் தடை விதித்திருந்தும், சின்னஹரிதாஸ் பக்தையான ஒரு விதவையுடன் பேசிவிட்டார். ஆனால், ஹரிதாஸ் ஒரு துறவி ஆயிற்றே! அதனால் தான் கிருஷ்ணசைதன்யர் ஹரிதாஸை அறவே புறக்கணித்து விட்டார்! எப்படிப்பட்ட கடுமையான தண்டனை! சந்நியாசிக்குத்தான் எவ்வளவு கடுமை யான கட்டுப்பாடுகள்! குருதேவருக்குத்தான் நித்திய கோபால் மீது எத்தகைய ஆழ்ந்த அன்பு! வருங்காலத்தில் நித்திய கோபாலுக்கு ஏதாவது ஆபத்து விளைந்துவிடுமோ என் றெண்ணி, முன்கூட்டியே அல்லவா அவரை எச்சரிக்கிறார்!"

குருதேவர் சொன்னதைக் கேட்டுக் குழுமியிருந்த பக்தர்கள் வியப்புமேலிடப் பேச்சற்றிருந்தனர். '**ஏ சாது! ஜாக்கிரதையாக இரு!**' என்ற குருதேவரின் எச்சரிக்கை மொழிகள், இடிமுழக்கம் போல் பக்தர்களின் காதுகளில் ஒலித்துக் கொண்டே இருந்தன.

பின்னர் குருதேவர் பக்தர்களுடன் தமது அறையின் வட கிழக்குத் தாழ்வாரத்திற்குச் சென்றார். அந்த பக்தர்களுள் தட்சிணேசுவரத்தைச் சேர்ந்த ஓர் இல்லற பக்தரும் இருந்தார். அவர் வேதாந்த நூல் ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருந்தார். குருதேவர் முன்னிலையில் அவர் கேதார்சட்டர்ஜியுடன் சப்த பிரம்மம் எனப்படும் 'ஓம்' பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

பக்தர் : "இந்த அனாஹத சப்தமானது, எப்போதும் உள்ளும் புறமும் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "வெறும் சப்தத்தைக் கேட்டால் மட்டும் போதாது. அந்த சப்தம் குறிப்பிடும் உட்பொருள் ஒன்று இருக்க வேண்டும். உன் பெயர் மட்டுமே எனக்கு மகிழ்ச்சியைத் தந்து விடுமா என்ன? உன்னை நேரில் பார்க்கா விட்டால், எனக்குப் பரிபூரண மகிழ்ச்சி ஏற்படாது அல்லவா?"

பக்தர் : "இந்த அனாஹத ஒலியே பிரம்மம்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : (கேதாரை நோக்கி) "உனக்குப் புரிகிறதா? இவர் பழங்காலத்து முனிவர்களுடைய கொள்கைகளைச் சிறப்பித்துப் பேசுகிறார். இவர் பேசுவது பண்டைய ரிஷிகளுடைய மதம். தவமுனிவர்களாகிய அவர்கள் ஒரு சமயம் இராமபிரானைப் பார்த்து, 'ஏ இராமா! பரத்வாஜர் போன்ற முனிவர்கள் உன்னைக் கடவுளின் திரு அவதாரமாக எண்ணி பக்தி செய்யட்டும். ஆனால் நாங்கள் உன்னைத் தசரதசக்கரவர்த்தியின் திருமகனாகவே காண்கிறோம். நாங்கள் அடைய விரும்புவதெல்லாம் அகண்ட சச்சிதானந்தப் பிரம்மத்தையே என்றார்கள். இம்முனிவர்களின் சொற்களைக் கேட்ட' இராமபிரான் புன்முறுவலித்தபடி அங்கிருந்து அகன்றார்."

கேதார் : "இராமரை அவதார புருஷர் என்று அறிந்து கொள்ள இயலாத அம்முனிவர்கள் மூடர்களாகத்தான் இருந்திருக்க வேண்டும்!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : (கடுகடுத்த குரலில்) "இது மாதிரி நீ பேசாதே. அவரவருடைய மனப்பக்குவத்தைப் பொறுத்தும், அவரவருடைய ஜீரணிக்கின்ற சக்திக்கு ஏற்பவும் இவையெல்லாம் அமைகின்றன. தாய் ஒருத்தி, ஒரே மீனைப் பல்வேறு முறைகளில் சமைத்துப் பக்குவப்படுத்திக் குழந்தைகளுக்குத் தருகிறாள். சிலருக்குப் புலவு சமைத்துத் தருகிறாள். அதை, எல்லாக் குழந்தைகளாலும் ஜீரணிக்க முடியாது. ஆகவே ஒரு சிலருக்கு மீனை வேக வைத்துத் தருகிறாள். யாருக்கு எது ஜீரணமாகுமோ, அதற்கேற்றவண்ணம் சமைத்துத் தருகிறாள். சிலர் வறுத்தமீன், மீன் சட்டினி போன்ற வகைகளை விரும்புகின்றனர் (அனைவரும் சிரித்தனர்). ஒவ்வொருவரும் தமக்கு எது பிடிக்குமோ அதை எடுத்துக் கொள்கிறார்கள்.

"இராமருடன் பேசிய அந்த முனிவர்கள் ஞானிகள். எனவே அவர்கள் அகண்ட சச்சிதானந்தத்தை விரும்பினர். ஆனால் பக்தர்களோ அவதார புருஷர்களையே விரும்புகின்

றனர். பக்தியை அனுபவிக்க வேண்டியே, அவ்வாறு அவதார புருஷர்களை நாடுகின்றனர். ஆண்டவனின் காட்சி பெறும் போது அக இருள் முழுவதும் விலகி விடுகிறது. 'ஸ்ரீராமபிரான் சபைக்குள் நுழைந்த போது நூறு சூரியர்கள் உதித்தது போலச் சபையில் பிரகாசம் சூழ்ந்தது' என்று புராணம் கூறுகிறது. அப்படியானால், 'அவையிலிருந்த மக்கள் ஏன் எரிந்து சாம்பலாகவில்லை?' என்று கேட்கலாம். அதற்குப் பதில்: 'ஸ்ரீராமரின் அந்தப் பிரகாசம், நாம் அன்றாடம் காணும் பௌதிகமான சூரியனின் பிரகாசம் போன்றதல்ல. சூரியன் உதித்தால் தாமரை மலர்கிறதல்லவா? அதுபோலச் சபையில் இருந்த எல்லோருடைய இதயத் தாமரைகளும் உடனே மலர்ந்தன."

இவ்விதம் குருதேவர் பக்தர்கள் முன் நின்று கொண்டு பேசிக் கொண்டிருக்கும் போதே அவருடைய மனம் ஒரேயடியாகப் புற உலக நினைவினின்றும் விடுபட்டு உள்முகமாகத் திரும்பியது. 'இதயத் தாமரை மலர்ந்தது' என்ற சொல்லைச் சொன்னாரோ இல்லையோ உடனே சமாதியில் முற்றிலும் ஆழ்ந்து விட்டார்.

குருதேவர் சமாதியிலேயே மூழ்கியிருந்தார். இறைவனுடைய தரிசனத்தைப் பெற்று அவருடைய இதயத் தாமரை மலர்ந்து விட்டது போலும்! அவர், முன்பு நின்று கொண்டிருந்த அதே நிலையில் புறவுலக நினைவற்றுச் சமாதியில் தோய்ந்திருந்தார். சித்திரத்தில் வரையப்பட்ட உருவம் போல அசைவற்ற நிலையில் வெகுநேரம் நின்று கொண்டிருந்தார். அவருடைய முகம் ஒளி வீசியது. அதில் புன்னகை தவழ்ந்தது. அடியார்களுள் ஒரு சிலர் நின்றுகொண்டும், மற்றும் சிலர் அமர்ந்து கொண்டுமிருந்தனர். முன்பு எப்போதுமே கண்டிராத, குருதேவரின் அற்புதமான இந்தச் சமாதிநிலையை அவர்கள் அனைவரும் மௌனமாகத் தரிசித்துக் கொண்டிருந்தார்கள்.

நீண்ட நேரத்திற்குப் பிறகு குருதேவரின் சமாதி கலைந்தது. அவர் நீண்ட பெருமூச்சு விட்டபடியே 'ராம், ராம்' என்று பல முறை உச்சரிக்க ஆரம்பித்தார். அவர் சொன்ன அந்த ஒவ்வொரு சொல்லும் பக்தர்களின் உள்ளங்களில் அமுதத்தைப் பொழிவது போல் இருந்தது. பிறகு குருதேவர் உட்கார்ந்து கொண்டார். நான்கு பக்கங்களிலும் பக்தர்கள் அவரைச் சுற்றி அமர்ந்து கொண்டு அவரையே நோக்கியவண்ணம் இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (பக்தர்களை நோக்கி) "அவதார புருஷர் உலகில் தோன்றும்போது சாதாரண மக்களால் அவரை அறிந்து கொள்ள முடிவதில்லை. அவர் இரகசியமாகவே வந்து போகிறார். அவருடைய அந்தரங்கச் சீடர்களில் ஒரு சிலரால் மட்டுமே அவரை அறிந்து கொள்ள முடிகிறது. ஸ்ரீராமபிரான் பரிபூரணப் பிரம்மமாகவும், மனித உருக் கொண்ட பூர்ணாவதார மாகவும் விளங்கியதைப் பன்னிரு முனிவர்கள் மட்டுமே அறிந் திருந்தார்கள். மற்ற முனிவர்களோ அவரிடம் 'ராமா, உன்னைத் தசரத குமாரன் என்று மட்டுமே நாங்கள் அறிவோம்' என்றனர்.

"அகண்ட சச்சிதானந்தப் பொருளை அனைவராலுமே அறிந்து கொள்ள முடியுமா என்ன? நித்திய நிலையை அடைந்த பிறகு, பேரானந்தத்தைச் சுவைக்கும் பொருட்டுத் தெய்விக லீலையாகிய உலகில் யார் தங்கியிருக்கிறாரோ, அவர் மட்டுமே பழுத்து முற்றிய பக்தியை அடைந்தவர் ஆவார். ஒருவன் இங்கிலாந்து அரசியை நேரிற்சென்று பார்த்து விட்டுத் திரும்பி வந்திருந்தால்தான், அந்த அரசியின் பேச்சு, செயல்கள் ஆகிய வற்றை நன்கு வருணிக்க இயலும். அப்போதுதான் அந்த வருணனைகள் அழகாக அமைய முடியும். பரத்வாஜர் முதலிய முனிவர்கள் இராமரைத் துதித்து, 'ராமா, அந்த அகண்ட சச்சிதானந்தப் பொருள் நீயே ஆவாய். நீ எங்களிடையே மனித உருவில் அவதரித்திருக்கிறாய். உண்மையில் நீ உன் மாயையை வசமாக்கிக் கொண்டு மனித வடிவில் காணப் படுகிறாய்' என்று கூறினர். பரத்வாஜர் முதலிய முனிவர்கள் இராமபிரானின் பரம பக்தர்களாக விளங்கினார்கள். அவர்களுடைய பக்தி நன்றாகக் கனிந்த பக்தி ஆகும்."

பக்தர்கள் இந்த அவதார தத்துவத்தை மிகவும் வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தனர். 'வேதம் எதை அகண்ட சச்சி தானந்தம் என்கிறதோ, எதை மனம் வாக்குகளுக்கு எட்டாதது என்று கூறுகிறதோ, அந்தப் பொருள் மனித வடிவில் நம்மிடம் வருகிறது.' அவதாரத்தைப் பற்றிக் குரு தேவர் இவ்விதம் கூறியபோது, "ஆண்டவன் மனிதனாக அவ தரிக்கிறார் என்பது உண்மையாகத் தானிருக்க வேண்டும்; இல்லாவிடில் 'ராம், ராம்' என்று இவர் உச்சரிக்கும்போது நம் உள்ளங்களில் அமுததாரை பொழிகின்றதே! குருதேவர் தமது இதயத் தாமரையில் ஸ்ரீராமபிரானைத் தரிசித்திருக்கிறார்" என்று தங்களுக்குள் ஒருசில பக்தர்கள் நினைத்துக்கொண்டனர்.

அந்தச் சமயத்தில் கொன்னகரிலிருந்து சில பக்தர்கள் மிருதங்கம், தாளம் ஆகிய பக்க வாத்தியங்களுடன் கீர்த்தனம் பாடிக் கொண்டே வந்தனர். மனமோகன், நவாய் இன்னும் பல பக்தர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரது அறையின் வடகிழக்குத் தாழ்வாரத்தை அடைந்ததும், குருதேவர் தாமும் கீர்த்தனத்தில் கலந்து கொண்டு, தெய்விகப் பித்தேறிய நிலையில் அவர்களுடன் சேர்ந்து, பிரேமை பொங்கப் பாடவும் ஆடவும் தொடங்கினர். கீர்த்தனத்தின் போது அடிக்கடி சமாதி நிலை அடைந்து, ஒரு சிலையைப் போல அசைவற்று நின்றார். அவர் அவ்வாறு தம்மை மறந்து பரவச நிலையில் ஆழ்ந்திருந்த போது பக்தர்கள் மலர் மாலைகளை அணிவித்து அவரை அலங்கரித்தனர். அவரது கழுத்தைச் சுற்றிக் கனமான, பெரிய பெரிய மல்லிகை மாலைகளை இட்டு மகிழ்ந்தனர். கடவுள் அவதாரமான ஸ்ரீகௌராங்கரே தங்கள் எதிரில் நின்று கொண்டிருப்பதாகப் பக்தர்கள் கண்டனர்.

குருதேவர் பக்திப் பரவசத்தால் ஏற்படும் பாவ சமாதி நிலைகள் மூன்றின் வழியாகவும் மாறி மாறிச் சென்றார். அவை யாவன: சில சமயங்களில் அவர் புற உலக உணர்ச்சியை முற்றும் இழந்து, மனம் உள்முகப்பட்டுச் சிலைபோல் அசைவற்றிருந்தார். வேறு சில சமயங்களில் பாதி வெளியுணர்வு தங்கியிருந்த நிலையில் பக்திப் பரவசத்தில் ஆட்கொள்ளப்பட்டவராய் அன்பர்களுடன் சேர்ந்து ஆடினார். ஸ்ரீகௌராங்கரைப் போன்று புறஉணர்வு கொண்டிருந்த நிலையில் பக்தர்களுடன் சேர்ந்து உரத்த குரலில் பாடினார்.

சமாதியில் ஒன்றிய குருதேவர் மேற்குத் திசையை நோக்கியவாறு நின்று கொண்டிருந்தார். அவர் கீழே விழுந்து விடுவாரோ என்றஞ்சி, பக்தர்களில் ஒருவர் அவரைத் தாங்கிப் பிடித்துக் கொண்டார். குருதேவரின் பார்வை அசைவற்றுக் குத்திட்டு நின்றது. கழுத்திலிருந்து நறுமணம் வீசும் மலர்மாலைகள் தொங்க, மதிமுகம் பக்திப் பரவசத்தினால் ஒளிவீச, பக்தர்கள் மிருதங்கம் முதலிய தாளக் கருவிகளுடன், அவரைச் சுற்றிப் பெருமகிழ்வுடன் கீர்த்தனைகளைப் பாடி, ஆடிவர, குருதேவர் சமாதிநிலையில் அப்படியே அசைவற்று நின்றிருந்தார். இக்காட்சி உண்மையில் தேவர்களும் காணற்கரிய கண்கொள்ளாக் காட்சியாகும்.

பரமஹம்சரின் தெய்விகம் ததும்பும் இந்தத் தோற்றத்தைப் பக்தர்கள் வைத்தகண் வாங்காமல் நீண்ட நேரம் பார்த்துக்

கொண்டிருந்தனர். அவரது சமாதி கலைந்தது. நேரம் அதிகமாகி விட்டது. சிறிது நேரத்தில் கீர்த்தனமும் முற்றுப் பெற்றது. குருதேவரின் மதிய உணவுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் அன்பர்கள் முனைந்தனர். சிறிதுநேர ஓய்வுக்குப் பிறகு, ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு புது மஞ்சள் ஆடையை அணிந்து கொண்டு, சிறிய கட்டிலில் வந்தமர்ந்தார். அவரது பொன்னிறம், ஆடையின் மஞ்சள் நிறத்தோடிணைந்து ஒன்றான காட்சிப் பொலிவு அடியார்களின் கண்களைக் கவர்ந்தது.

குருதேவர் மதிய உணவு உட்கொள்ள அமர்ந்தார். பக்தர்களும் மகிழ்ச்சியுடன் அவருடன் பிரசாதம் உண்டனர். உணவு உண்ட பிறகு, குருதேவர் சிறிய கட்டிலில் சற்று ஓய்வு எடுத்துக் கொண்டார். அறையில் கொஞ்சம் கொஞ்சமாக மக்கட்கூட்டம் பெருகிக் கொண்டிருந்தது. வெளித்தாழ்வாரங்களிலும் மக்கள் நிறைந்திருந்தார்கள். அறையில் குழுமியிருந்த பக்தர்கள் தரைமீது உட்கார்ந்து குருதேவரையே பார்த்துக் கொண்டிருந்தனர். கேதார், சுரேஷ், ராம், மனமோகன், கிரீந்திரர், ராக்கால், பவநாத், ம- முதலிய அன்பர்கள் அறையில் இருந்தனர். ராக்காலின் தந்தையும் அந்த அறையில் இருந்தார். வைஷ்ணவ கோசுவாமி ஒருவரும் அந்த அறையில் அமர்ந்திருந்தார். குருதேவர் அவரைப் பார்த்தபடிப் பேச ஆரம்பித்தார். கோசுவாமிகளைக் கண்டால் குருதேவர் சிரந்தாழ்த்தி வணக்கம் செய்வது வழக்கம். நேருக்கு நேராகப் பார்க்க நேர்ந்தால் சில சமயம் அவர்களின் முன்பு தரையில் வீழ்ந்தும் வணங்குவார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நல்லது. நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? உய்வதற்கு எது வழி?"

கோசுவாமி : "ஐயா! பகவானின் திருநாமத்தை உச்சரிப்பதே மேலானது. கலியுகத்திலே நாம ஜபத்திற்கு அளவற்ற மகிமை இருப்பதாகச் சாஸ்திரங்கள் வற்புறுத்திக் கூறுகின்றன."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆம். பகவானது நாமத்தின் புனிதத் தன்மையைப் பற்றி எந்த ஒரு சந்தேகமும் இல்லை. ஆனால், நாமம் மட்டும் போதுமா? கடவுளிடம் ஆழ்ந்த பற்று இல்லாத போது அது என்ன பயனைத் தரும்? இறைவனுக்காக ஏங்கி ஏங்கி மனம் துடிதுடிக்க வேண்டும். வெறுமனே வாய்மட்டும் ஆண்டவனின் நாமத்தை உச்சரிக்க, மனமோ காமினி காஞ்சனத்தில் பற்றுக் கொண்டிருக்குமானால் என்ன பயன் ஏற்படும்?

தேளோ, குளவியோ கொட்டி விட்டால், மந்திரத்தை ஓதினல் மட்டும் பயன் ஏற்படாது. அத்துடன் எரியும் வறட்டியின் புகையையும் கொட்டிய இடத்தின்மீது படும்படியாகச் செய்ய வேண்டும்''.

கோசுவாமி : ''அப்படியானல், அஜாமிளனைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்? அஜாமிளன் பெரும்பாதகன். அவன் செய்யாத பாவம் இல்லை. ஆனல், மரணத்தறுவாயில் அவன் 'நாராயணு' என்று தன் மகனைக் கூப்பிட்டான். அது காரண மாக அவனுக்கு நற்கதி கிடைத்ததே!''

ஸ்ரீராமகிருஷ்ணர் : ''ஒரு வேளை அஜாமிளன் முற்பிறவி களில் பல புண்ணியச் செயல்களைச் செய்திருக்கக்கூடும். 'அவன் ஒரு சமயம் தவம் செய்தான்' என்றும் கூறப்பட்டிருக் கிறது. அதையே இப்படி வேறு விதமாகவும் சொல்லலாம்; அவன் நாராயணன் பெயரைச் சொன்னபோது அதுவே அவனது கடைசிக் காலமாக இருந்தது என்றும் சொல்லலாம். யானையை நீராட்டி அப்படியே விட்டுவிட்டால் என்ன ஆகும்? அது மறுபடியும் தலையில் மண்ணைப் போட்டுக் கொண்டு முன் போலவே அசுத்தமாக இருக்கும். ஆனல், யானையை மண்ட பத்திற்குள் அனுப்புவதற்கு முன் அதனுடைய அழுக்கைப் போக்கிக் குளிப்பாட்டி விட்டால், அது தூய்மையாகவே இருக்கும். யானையை, குளிப்பாட்டி மண்டபத்திற்குள் அனுப்புவதைப் போல,அஜாமிளன் 'நாராயணு' என்று கூவிய போது, மீண்டும் பாவம் செய்ய இயலாத வகையில் அது அவனுடைய இறுதிக் காலமாக இருந்தது என்றும் கூறலாம்.

''இறைவனின் புனித நாமத்தை ஓதி ஒருவன் தூய்மை அடைந்ததாகவும், ஆனல் அதன் பின்னர் அவன் உடனே பல பாவச் செயல்களில் ஈடுபட்டதாகவும் வைத்துக் கொள்வோம். அப்படிப்பட்டவனிடம் மனவுறுதி இல்லை. அவன் 'நான் இனிமேல் பாவம் செய்யமாட்டேன்' என்று பிரதிக்ஞை எடுத்துக் கொள்வதில்லை. கங்கையில் நீராடுவதால் ஒருவனு டைய பாவங்கள் யாவும் போய் விடும் என்பதில் சந்தேகமே இல்லை. அதனல் என்ன பயன்? அவன் நீராடும் போது கங்கைக்கரையிலுள்ள மரக்கிளைகளின்மீது அவனுடைய எல்லாப் பாவங்களும் அமர்ந்திருக்கின்றன என்று மக்கள் கூறுகிறார்கள். அவன் குளித்து விட்டுக் கரைக்கு வந்தால், உடனே அந்தப் பழைய பாவங்கள் முழுவதும் மரக்

கிளைகளிலிருந்து அவன் தோளின்மீது குதித்து, அவனைப் பற்றிக் கொள்கின்றன. (எல்லோரும் சிரித்தனர்) குளித்துவிட்டு ஓரிரு அடிகள் நடந்து வந்ததும் அப்பழைய பாவங்கள் மறுபடியும் அவனைப் பிடித்துக் கொள்கின்றன!

"ஆதலால் நான் சொல்வது: ஆண்டவனுடைய நாமத்தை யும்ஜபித்து வாருங்கள். அத்துடன், பக்தி உண்டாக வேண்டும் என்று அடிக்கடி அவரிடம் பிரார்த்தனையும் செய்யுங்கள். செல்வம், புகழ், உடல் இன்பங்கள் ஆகிய அனைத்தும் இரண் டொரு நாள் மட்டுமே இருக்கக் கூடியவை. இந்த நிலையில்லாப் பொருட்களின் மீதுள்ள பற்று நாளுக்கு நாள் குறைந்து கொண்டு வரவேண்டும் என்று ஈசனிடம் பிரார்த்தனை செய்யுங்கள். (கோசுவாமியிடம்) இறைவனிடம் உண்மை யான ஈடுபாடு இருக்குமானால், எல்லா மதங்களின் மூலமாகவும் அவனை அடையலாம். வைணவர்களும் பகவானை அடைவார் கள்; சாக்தர்களும் அடைவார்கள்; வேதாந்திகளும், பிரம்ம சமாஜத்தவரும் அடைவார்கள். அவர்களைப் போலவே முகமதி யர்களும், கிறிஸ்தவர்களும், ஆண்டவனை அடைவார்கள். எனவே, வேண்டுவதெல்லாம் உண்மையான ஈடுபாடுதான். அந்நிலையில் எல்லோரும் ஈசனை அடைவது திண்ணம்.

"ஆனால், சிலர் மதத்தின் பெயரால் சண்டையிடுகின்றனர். எங்களுடைய ஸ்ரீகிருஷ்ணனை வணங்கினாலன்றி ஒருவனுக்கு எதுவும் கிடைக்காதென்றும், எங்களுடைய அன்னை காளியை வணங்காவிட்டால் எதையும் அடைய முடியாதென்றும் எங்களுடைய கிருத்துவ மதத்தைப் பின்பற்றாவிட்டால் எவனுமே கடைத்தேற முடியாது என்றும் அந்தந்த மதத்த வர்கள் கூறுகிறார்கள். இது வெறும் மத வெறியே ஆகும். அதாவது 'என்மதம் மட்டும்தான் மெய்; மற்றவர்களின் மதம் பொய்' என்று மத வெறியன்தான் மொழிவான். இவ்வாறு எண்ணுவது தீய மன நிலையாகும். பல்வேறு பாதைகளாலும் பரமனை அடைய முடியும்.

"மேலும் சிலர் 'பகவானுக்கு உருவம் உண்டு' என்றும், 'அவர் உருவம் இல்லாதவர்' என்றும் சொல்கிறார்கள். இப்படிக் கூறுவதன் மூலம் மீண்டும் சண்டையிடத் தொடங்கி விடுகின் றனர். வைணவபக்தர் வேதாந்தியுடன் சண்டையிடுகிறார். இறைவனது காட்சியைப் பெற்ற பிறகுதான் அவரைப் பற்றிச் சரியாகப் பேச முடியும். அவ்வாறு இறைவனது காட்சி பெற் றவனுக்கு, இறைவன் உருவமும் ஆவார், அருவமும் ஆவார்

என்பது நன்ருகத் தெரியும். வர்ணனைக்கு அப்பாற்பட்ட எத்தனையோ நிலைகளும் அவருக்கு உள்ளன என்பதையும் அவன் அறிந்து கொள்கிறன்.

"ஒரு நாள் சில குருடர்கள் ஒரு யானையிடம் சென்ருர்கள். யாரோ ஒருவன் அவர்களிடம் 'இம்மிருகத்தின் பெயர் யானை' என்று தெரிவித்து, 'இந்த யானை எப்படி இருக்கிறது?' என்று கேட்டான். குருடர்கள் யானையின் உடலைத் தொட்டுப்பார்க்கத் தொடங்கினர்கள். குருடர்களில் ஒருவன், 'யானை ஒரு தூணைப் போல் இருக்கிறது' என்ருன். அவன் யானையின் காலை மட்டும் தொட்டவன். இன்னெரு குருடன், 'யானை ஒரு முறம் போன்றது' என்று சொன்னன். அவன் அதன் காதை மட்டுமே தொட்டுக் கொண்டிருந்தான். இதைப் போலவே இதர குருடர்களும் துதிக்கையையும், வயிற்றையும் தொட்டுப் பார்த்து விட்டுத் தாங்கள் அறிந்தபடியே தெரிவித்தார்கள். இறைவனைப்பற்றிய விஷயமும் இது போன்றதுதான். யார் யார் எவ்வளவு தூரம் புரிந்து கொண்டிருக்கிருர்களோ அதற்கேற்ற படி, 'பகவான் இப்படிப்பட்டவர்தாம். வேறு எப்படிப்பட்டவராகவும் அவர் இருக்க முடியாது' என்று எண்ணிக் கொண்டு விடுகிருர்கள்.

"வெளியே சென்று திரும்பிய ஒருவன் 'மரத்தடியில் அழகான செந்நிறமுள்ள ஓர் பிராணியைப் பார்த்தேன்' என்று சொன்னன். வேறெருவனே, "நான் உனக்கு முன்பே அந்த மரத்தடிக்குச் சென்றிருந்தேன். அந்தப் பிராணி சிவப்பு நிறமாகவா இருக்கிறது? பச்சை வண்ணமாகவன்றே இருந்தது! பச்சை நிறத்தில் இருந்ததை என் இருகண்களால் கண்டேனே!' என்றுதெரிவித்தான். மற்றெருவன் 'உங்களுக்கெல்லாம் முன்னதாகவே நான் அங்குச் சென்று வந்தவன். அந்த ஓணானை நானும் பார்த்தேன். அது சிவப்பாகவும் இல்லை, பச்சையாகவும் இல்லை, நீலநிறமாக இருந்தது' என்று கூறினன். மேலும் அங்கிருந்த இருவர், 'அது மஞ்சள் நிறத்தில் இருந்தது' என்றும், 'கருப்பு நிறத்தில் இருந்தது' என்றும் கூறினர்கள். இதுபோலவே பலரும் அந்தப் பிராணி பல்வேறு நிறங்களில் இருந்ததைக் கண்டதாகக் கூறினர்கள். இறுதியில் அவர்களுக்கிடையே சச்சரவு எழுந்தது. 'நான் எதைப் பார்த்தேனே அதுதான் சரியானது' என்று ஒவ்வொருவருமே நினைத்தார்கள். அவர்களுடைய சண்டை சச்சரவுகளை ஒருவன் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். பிறகு அவர்களைப்பார்த்து, 'உங்களுடைய

சச்சரவுகளுக்குக் காரணம் என்ன?' என்று வினவினான். அவர்கள்கூறிய விவரங்களைக் கேட்டுவிட்டு, 'நான் இந்த மரத் தடியிலேயே வசித்து வருபவன். நீங்கள் அனைவரும் குறிப் பிடும் பிராணியை நான் மிக மிக நன்றாக அறிவேன். நீங்கள் ஒவ்வொருவரும் என்னென்ன நிறங்களைக் கூறினீர்களோ அவை யாவுமே உண்மைதான். இப்பிராணி ஒரு பச்சோந்தி. ஒரு சமயம் பச்சையான நிறத்தில் இருக்கும், மற்றொரு சமயம் நீல நிறத்தில் இருக்கும். இதைப் போலப் பல்வேறு சமயங்களில் பல்வேறு நிறங்களுடன் அது தோன்றுகிறது. மற்றும் சில சமயங்களில் எந்த நிறமும் இல்லாமல் வண்ணமற்று நிர்க் குணமாக அது இருந்ததையும் நான் பார்த்திருக்கிறேன்' என்று விளக்கினான்.

(கோசுவாமியிடம்) ''இறைவன் உருவம் உடையவன் என்பதொன்று மட்டுமே அவரைப் பற்றிய உண்மை என்று நீங்கள் எவ்வாறு சொல்ல முடியும்? அவர் மனித வடிவம் தாங்கி இப்பூமியில் ஸ்ரீ கிருஷ்ணரைப் போல் அவதரிக்கிறார் என்பதும் உண்மைதான். பற்பல உருவங்களைத் தாங்கித் தம் பக்தர்களுக்கு அவர் காட்சி தருகிறார் என்பதும் உண்மையே. ஆனால், அதே சமயம் அவர் உருவமற்றவர் (நிராகாரம்), அகண்ட சச்சிதானந்தமாக விளங்குபவர் என்பதும் உண்மை தான். வேதங்கள் அவரை, 'உருவமற்றவர், உருவமுள்ளவர்' என்ற இரண்டு நிலைகளிலும் விளக்கியுள்ளன. சகுணமாகவும் நிர்க்குணமாகவும் அவர் இருப்பதாக அவைகள் பேசுகின்றன

''அது எப்படி என்பது தெரியுமா? சச்சிதானந்தம் என்பது எல்லையற்ற மிகப்பெரிய கடலைப் போன்றது. குளிர்ச்சியின் காரணமாகக் கடல்நீர் பனிக்கட்டியாக உறைந்து போகிறது. பல உருவங்களோடு பனிக்கட்டிகள் கடல்நீரில் மிதக் கின்றன. அது போலவே பக்தி என்னும் குளிர்ச்சியின் காரண மாக சச்சிதானந்தக் கடலில் உருவக் கடவுளின் தோற்றம் எழுகிறது. பக்தர்களின் பொருட்டே இறைவன் உருவம் தாங்கு கிறார். ஞானமாகிய கதிரவன் உதயமாகும் போது பனிக் கட்டி உருகி மீண்டும் தண்ணீராகி விடுகிறது. பிறகு எங்கே பார்த்தாலும் ஒரே தண்ணீர் மயம்.

''ஆகவேதான் 'பிரபுவே! தாங்கள் உருவம் கொண்டவர். அத்துடன் உருவம் இல்லாதவராகவும் திகழ்கிறீர்கள். தாங்கள் மனித வடிவம் தரித்து, எங்கள்முன் நடமாடுகிறீர்கள். வேதம்

தங்களை வாக்கிற்கும் மனத்திற்கும் அப்பாற்பட்டு விளங்கு பவர்' என்பதாக ஸ்ரீமத் பாகவதத்தில் ஒரு பிரார்த்தனை இருக்கிறது.

"ஆனால் சில அடியார்கள் விஷயத்தில் 'இறைவன் எப் போதுமே உருவம் கொண்டவராக, நித்திய சாகாரமாக இருக்கிறாரே! அது எப்படி?' என்று கேட்கலாம். சிலஇடங்களில் பனிக்கட்டி உருகுவதே இல்லை. அங்குப் படிகம் போன்ற உருவத்துடன் எப்போதும் பனிக்கட்டி இருக்கும்."

கேதார்: "வியாசர் தாம் இழைத்த மூன்று குற்றங்களுக் காகக் கடவுளிடம் மன்னிப்பு வேண்டி பிரார்த்திப்பதாக ஸ்ரீமத் பாகவதம் கூறுகிறது. அந்தப் பிரார்த்தனையாவது: "பிரபுவே! நீர் உருவம் இல்லாதவர். ஆனால் எனது தியானத்தில் உம்மை உருவத்தோடு கூடியவராக பாவித்திருக்கிறேன். நீர் மனம் வாக்குகளுக்கு எட்டாதவர்; ஆனால் நானே உம் மீது தோத்திரங்கள் பாடியிருக்கிறேன். நீர் எங்கும் பரந்திருப்பவர். நானோ பல தலங்களுக்கும் யாத்திரை செய்திருக்கிறேன். என் பால் கருணை கூர்ந்து என் குற்றங்களாகிய இம்மூன்றையும் மன்னித்தருள்க!" என்பதாகும்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆம்! கடவுள் உருவமுடையவர்; உருவம் இல்லாதவரும் ஆவர். அதுமட்டுமின்றி அவர் உருவம், அருவம் இரண்டையும் கடந்தவரும் ஆவர். இப்படிப்பட்ட வர் தாம் என்று யாராலும் அறுதியிட்டுச் சொல்லமுடியாதவர்."

ராக்கால் அப்போதெல்லாம் குருதேவருடன் தங்கியிருந் தார். ராக்காலின் தாய் காலமான பின்னர், அவரது தந்தை மறுமணம் செய்து கொண்டார். ராக்கால் குருதேவருடன் தங்கியிருந்ததன் காரணமாக அவருடைய தந்தையார் மகனைக் காண அடிக்கடி தட்சிணேசுவரம் வருவது வழக்க மாக இருந்தது. ராக்கால் ஸ்ரீராமகிருஷ்ணருடன் வாழ்ந்து வந்தது குறித்து அவர் அவ்வளவாகத் தடை செய்யவில்லை. அவர் ஒரு பெருஞ்செல்வந்தர். வழக்கு, விசாரணை என்று ஓய் வின்றி எப்போதும் அவற்றில் ஈடுபட்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிக்க வரும் பக்தர்களில் வழக்கறி ஞர்கள், நீதிபதிகள் போன்றவர்களும் இருந்தார்கள். ராக்கா லின் தந்தை அவர்களுடன் கலந்து பேசி ஆலோசிப்பதற்கென அடிக்கடி அங்கு வருவார். அவர்களிடம் தமது வழக்கு

விசாரணைகளைப்பற்றிப் பல யோசனைகளைக் கேட்பார். அன்றும் அவர் வந்திருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரின் பார்வை மீண்டும் மீண்டும் ராக்காலின் தந்தைமீது பதிந்தது. ராக்கால் தம்முடனே தட்சிணேசுவரத்தில் இருந்துவர வேண்டுமென்பது குருதேவரின் விருப்பமாகும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (ராக்காலின் தந்தையையும் மற்ற அடியார்களையும் பார்த்து) "ஹா! இப்போதெல்லாம் ராக்காலின் இயல்பு எப்படி இருக்கிறது தெரியுமா? அவனுடைய முகத்தைப் பாருங்கள்! மீண்டும் மீண்டும் அவனுடைய உதடுகள் அசைவதைக் காண்பீர்கள். உள்ளுக்குள்ளேயே பகவானின் திருநாமத்தை ஜபித்துக் கொண்டிருக்கிறான். அதன் காரணமாகவே அவன் உதடுகள் அசைந்தவண்ணம் இருக்கின்றன.

"ராக்காலைப் போன்ற இவ்விளைஞர்கள் அனைவரும் 'நித்திய சித்தர்' வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவர்கள் பிறக்கும் போதே இறை ஞானத்துடன் பிறக்கிறார்கள். இல்லற பந்தத்தில் சிக்கிக் கொண்டால் அதனின்றும் தப்ப வழியில்லை என்பதை அவர்கள் கொஞ்சம் வளர்ந்தவுடன் மிக நன்றாக அறிந்து கொண்டு விடுகிறார்கள். வேதத்தில் 'ஹோமா' என்ற பறவையைப் பற்றிய குறிப்பு ஒன்று உண்டு. அப்பறவை வெகு தூரத்தில் ஆகாயத்திலேயே இருக்குமாம். தரைக்கு ஒருபோதும் அது வருவதில்லை. ஆகாயத்திலேயே முட்டையும் இடுகிறது. முட்டை தரையை நோக்கி விழ ஆரம்பிக்கும். தாய்ப் பறவை விண்ணில் வெகு உயரத்தில் வாழ்வதனால், முட்டை கீழே வரும்போதே குஞ்சு பொரித்து விடுகிறது. அப்போது முட்டையைத் திறந்துகொண்டு குஞ்சு வெளியே வரும். அந்தக் குஞ்சும் பல நாட்கள் தரையை நோக்கி வந்துகொண்டிருக்கும். ஆனால் ஆகாயத்தில் மிக உயரத்திலேயே இதெல்லாம் நிகழ்வதனால், குஞ்சுப் பறவை கீழே வந்து கொண்டிருக்கும் போதே அதற்கு இறக்கை முளைத்து விடுகிறது. கண்கள் திறந்து கொள்ளுகின்றன. 'நான் தரையை நோக்கி அல்லவா விழுந்து கொண்டிருக்கிறேன். தரைமீது மோதினால் எனக்கு மரணம் நிச்சயம்!' என்று அது அறிந்து கொள்ளுகிறது. தரையைப் பார்த்ததுமே தன் தாய் இருக்கும் இடத்தை நோக்கி மேலே கிளம்பி விடுகிறது. ஒரேயடியாக மேல் நோக்கியே பறந்து சென்று தாய்ப்பறவை இருக்கும் இடத்தை அடைந்து விடுகிறது. அன்னையிடம் திரும்பிச் செல்வதுதான் அதன் ஒரே இலட்சியமாக விளங்குகிறது. ராக்காலைப் போன்ற இவ்விளைஞர்கள் அனைவரும்

அந்த 'ஹோமா'ப் பறவையைப் போன்றவர்கள். சிறுவயது முதற்கொண்டே உலகியல் நெறியிற் சிக்கிக்கொண்டு உழன்று விடுவோமோ என்று நினைத்து அஞ்சுகிறார்கள். 'எப்படி ஜகன்மாதாவைச் சென்றடைவோம்? எப்படி இறைவனை தரிசிப்போம்?' என்னும் சிந்தனை ஒன்றே அவர்களிடம் மேலோங்கி நிற்கிறது.

"உலகப் பற்றுடையவர்களிடையே பிறந்தும், அவர்களிடையே வாழ்ந்துவந்த போதிலும்கூட, இந்தப் பையன்கள் எப்படி இத்தகைய உயர்ந்த பக்தியையும், பெருஞானத்தையும் கொண்டிருக்க முடியும் என்று நீங்கள் கேட்கலாம். அதற்கு விளக்கம் உள்ளது: சாணக்குவியலில் அவரை விதை விழுந்தால், அவரைக்கொடி தானே முளைக்கும்! அந்த விதையிலிருந்து எவ்வளவு அழகிய கொடி வெளிவருகிறது. அவரை விதை சாணக்குவியலில் விழுந்து விட்டதனால் வேறு ஏதாவது கொடி முளைத்து விடுகிறதா என்ன?

"ஆஹா, ராக்காலின் மனநிலை இப்போதெல்லாம் எவ்வளவு இனிமை வாய்ந்ததாக இருக்கிறது! ஏன் அவ்வாறு இருக்காது? விதை நல்லதாக இருந்தால், அதன் முளையும் நல்லதாகத் தானே இருக்க வேண்டும்? (அனைவரும் சிரித்தனர்) அப்பாவைப் போலத்தானே பிள்ளையும் இருப்பான்.

ம (தனிமையில் கிரீந்திரரிடம்): "உருவக்கடவுள், அருவக்கடவுள் இவற்றைக் குறித்து குருதேவர் எத்துணை அழகாக எடுத்தியம்பினார் பார்த்தீர்களா? வைஷ்ணவர்கள் உருவக்கடவுளை மட்டும்தான் ஒப்புக் கொள்கிறார்களா?"

கிரீந்திரர்: "ஆம்; அப்படித்தான் நினைக்கிறேன். அவர்கள் ஒரு சார்பான கருத்துடையவர்கள்".

ம: "இறைவனின் 'நித்திய வடிவம்' என்பதைப் பற்றி குருதேவர் கூறியதைத் தாங்கள் புரிந்து கொண்டீர்களா? அந்தப் படிகத்தின் உதாரணம்......அதை என்னால் சரிவரப் புரிந்து கொள்ளமுடியவில்லை".

ஸ்ரீராமகிருஷ்ணர்: (ம-வைப் பார்த்து) "குழந்தைகளே! நீங்கள் உங்களுக்குள் மெதுவாக என்ன பேசிக் கொள்ளுகிறீர்கள்?"

ம-வும், கிரீந்திரரும் புன்சிரிப்போடு மௌனமாக அமர்ந்திருந்தனர்.

வேலைக்காரி பிருந்தை (ராம்லாலிடம்): "இப்பொழுது இவருக்கு முதலில் உணவு கொடு; எனக்குப் பிறகு கொடுத்தால் போதும்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என்ன பிருந்தை இன்னும் உணவு உட்கொள்ளவில்லையா?"

பிற்பகலில் பக்தர்கள் பஞ்சவடியில் பாடிக் கொண்டிருந்தனர். அவர்களுடன் சேர்ந்து குருதேவரும் ஜகன்மாதாவின் புகழைப் பாடிப்பாடி, ஆனந்தக் கடலில் திளைத்தார். அன்பர்கள் பின்வரும் பாடலைப் பாடலானார்கள்:—

அன்னையெனும் சியாமாவின் அருட்பாத விண்வெளியில்
என்னுடைய மனப்பட்டம் எழுந்துயர்ந்து பறந்ததம்மா!

அழுக்கான பாவமெனும் அடுஞ்சூறு வளியாலே
இழுக்காகி மனப்பட்டம் இத்தரைமேல் வீழ்ந்ததம்மா!

தலைகீழாய் வீழ்ந்தபட்டம் தான்செல்ல வழியில்லை
நிலைகீழாம் மாயையினால் நெடும்பட்டம் கனத்ததம்மா

பிணித்துவிட்ட மனைமக்கட் பெரும்பாசக் கயிற்றாலே
பணி ஞானச் சிரம்அறவே பட்டமதும் பறப்பதெங்கே?

தலையறுந்த காரணத்தால் தரைவீழ்ந்த பட்டமதும்
தலை யின்றி மேல்நோக்கித் தானெழும்ப முடிவதெங்கே?

வீழ்த்துதற்குத் துணைபுரிந்த விரோதிகளாம் ஆறுபேர்
வீழ்ந்த மனப் பட்டத்தால் வெற்றிமிகக் கண்டனரே!

பக்தியெனும் கயிற்றினிலே பலமுறவே பிணித்திருந்தும்
சக்தி யின்றிப் பட்டமதும் தரையினிலே சாய்ந்ததுவே!

விளையாட்டாய்ப் பட்டம்விட விரும்பிமிக விரைந்துவந்தேன்
விளை யாட விரைந்ததுதான் வினையாகிப் போனதுவே!

உரியஇதன் தத்துவத்தை உணர்ந்தவர்போல், தெளிந்தவர்போல்
சிரிக்கின்றார், அழுகின்றார் சீர்நரேஷ் சந்திரரே!

பாட்டுடன் தாளக்கருவிகளும் சேர்ந்து ஒலித்துக் கொண்டிருந்தன. குருதேவர் பக்தர்களுடன் கலந்து மகிழ்ந்து ஆடினார், பக்தர்கள் பாடலைத் தொடர்ந்து பாடிக் கொண்டிருந்தனர்.

அன்னை சியாமாவின் அருள்நீல வண்ண
அரும்பதக் கமலத்தே ஆழ்ந்ததென் மனவண்டு!
மன்னும் ஆசையெனும் மலர்தனில் நிறைந்திருக்கும்
மது வெனும் இன்பத்தேன் மகிழ்சுவை யற்றதுவே!

மலர்ப்பதம் கருநிறமே! வண்டும் கருநிறமே!
மருவிடும் கருமையொடு கருமையும் கலந்ததுவே!
ஐம்பூதத் தத்துவத்தே அடங்கிய நிறங்கண்டே
அதன்வெளித் தோற்றத்தே அகம்,மிக மயங்கியதே!

நாடின சுகம்,துக்கம் கூடின சமமெனவே!
நாள்பல காத்திருந்த நற்கமலா காந்தரின்
ஈடிலா மனத்தாசை இன்றுகைக் கூடியதே!
இன்பக் கடல்பொங்கி எழுந்திசை பாடியதே!

கீர்த்தனம் தொடர்ந்து ஒலித்தது. பக்தர்கள் பாடினர்.

என்னவோர் இயந்திரம் [1] என்தாய்நீ படைத்தாய்?
அன்னையே சியாமாவே அருட்காளித் தேவியே!
எண்சாண் அளவாகும் இயந்திரத்துள் இருந்தே
என்னென்ன விந்தைகள் அன்னை நீ நிகழ்த்துகின்றாய்?
இயந்திரத்தை நீயே இயக்கிட இயங்கிடுதே!
இயந்திரமோ அதனை இனிதறிதல் இலையே!
இயங்குதல் தானென்றே எண்ணுது இயந்திரமே!
இவ்விதம் எண்ணிடுதல் எத்துணை மதியீனம்?
இயந்திரத்துள் அன்னையை எளிதிற் கண்டுகொள்வோர்
இயந்திர மாகஇனி இயங்கிட வேண்டாமே!
இதுவன்றிச் சிலபேர் இனிய பக்தியெனும்
இசைக்கயிற்றால் மாயை இயந்திரத்திற் பிணிப்பார்!

பாடல் மேலும் தொடர்ந்தது. பக்தர்கள் மகிழ்ச்சியில் திளைத்திருந்தனர் பிறகு அவர்கள் பாடுவது சிறிது நேரம் நின்றது. குருதேவர் அங்கிருந்து எழுந்தார். அவரது அறையிலும் அதைச் சுற்றியுள்ள இடங்களிலும் அடியார்கள் குழுமியிருந்தனர்.

பகவான்ஸ்ரீராமகிருஷ்ணர் பஞ்சவடியிலிருந்து தமது அறையை நோக்கி வந்துகொண்டிருந்தார். அவருடன் ம-வும் சென்றார். சிறிது தூரம் வந்ததும் வகுள மரத்தடியில்

1. மனித உடல்,

திரைலோக்கியரை குருதேவர் சந்தித்தார். திரைலோக்கியர் குருதேவரை முழந்தாளிட்டுப் பணிந்து வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (திரைலோக்கியரிடம்) : "பஞ்சவடியில் அவர்கள் பாடிக்கொண்டிருக்கிறார்கள். நீ ஒருமுறை அங்கே சென்றுவா."

திரைலோக்கியர் : "நான் அங்கே சென்று என்ன செய்யப் போகிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஏன்? பாட்டைக் கேட்டு மகிழலாமே!"

திரைலோக்கியர் : "நான் முன்னமே ஒரு முறை அங்கே சென்று வந்துவிட்டேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அப்படியா? நல்லது, நல்லது."

மாலை ஐந்தரை அல்லது ஆறு மணி இருக்கும். ஸ்ரீராம கிருஷ்ணர் தமது அறையின் தென்கிழக்குத் தாழ்வாரத்தில் பக்தர்களோடு அமர்ந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (கேதார் முதலிய பக்தர்களிடம்) "உலக வாழ்க்கையைத் துறந்துவிட்ட துறவி ஒருவர் ஆண்டவனின் நாமஜபத்தில் ஈடுபட்டிருக்கத்தானே செய்வார்? அது அவருக்கு இயல்புதானே? அதைத்தவிர அவருக்கு வேறு என்ன வேலை? அவர் இறைவனைக் குறித்து தியானம் செய்தால் அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. மாறாக அவர் கடவுளை தியானம் செய்யாமலோ அல்லது இறைவனின் தூய நாமத்தைப் பாடாமலோ இருந்தால்தான் மக்கள் அவரைப் பற்றிக் கேவலமாக நினைப்பார்கள்!

"ஆனால், இல்லறத்தான் ஒருவன் இறைவன் நாமத்தை மனத்தில் ஓதிவந்தாலே அது பாராட்டத்தக்க விஷயந்தான். ஜனக மன்னரைப் பாருங்கள். உண்மையாகவே அவரிடம் எவ்வளவு துணிவு இருந்தது! ஞானம் என்னும் வாள், கர்மம் என்னும் மற்றொரு வாள் ஆகிய இரண்டு வாட்களையும் அவர் சுழற்றிக் கொண்டிருந்தார். ஒருபுறம் அவரிடம் பிரம்ம ஞானம் பரிபூரணமாக நிறைந்திருந்தது. மற்றொருபுறம் உலகக் கடமைகளைச் செய்வதில் பெரிதும்

ஈடுபட்டிருந்தார். ஒழுக்கம் தவறிய ஒரு பெண் வீட்டுவேலைகள் எல்லாவற்றையும் நுணுக்கமாகக் கவனித்து நன்ருகவே செய்கிருள். ஆனுல், அவளுடைய மனம் எக்காலமும் தன் ஆசை நாயகனையே நினைத்துக்கொண்டிருக்கிறது.

"சாது சங்கம் (நல்லாரோடு இணங்கியிருத்தல்) எப்போதும் ஒருவருக்கு இன்றியமையாதது. சாதுவானவர் நம்மை இறைவனிடம் அறிமுகப் படுத்திவைக்கிருர்."

கேதார் : "ஆமாம். மகாபுருஷர்கள் உலக மக்களை ஈடேற்றுவதற்காகவே அவதரிக்கின்றனர். தனக்குப் பின்னுல் இணைக்கப்பட்டுள்ள பல பெட்டிகளை ஒரு ரெயில் எஞ்சின் இழுத்துச்செல்வதையும், ஆறும், குளமும் பலருடைய தாகத்தைத் தீர்த்துவைப்பதையும் போன்றது இவர்கள் செயல்."

நீண்ட நேரமாகிவிடவே பக்தர்கள் தத்தம் இல்லங்கட்குத் திரும்பச் சித்தமாயினர். அவர்கள் அனைவரும் ஒருவர்பின் ஒருவராக ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்து தரையில் வீழ்ந்து வணங்கி அவருடைய பாததூளியை ஏற்றனர். குருதேவர் பவநாதரிடம், 'நீ இன்று இங்கிருந்து சென்றுவிடாதே. உன்னைக் கண்ட மாத்திரத்திலேயே என்னுடைய ஆன்மிக உணர்வு கிளர்ந்தெழுகிறது' என்று கூறினுர்.

பவநாதருக்கு இன்னும் திருமணம் ஆகவில்லை. அவருக்கு வயது பத்தொன்பது அல்லது இருபது இருக்கும். அவர் பொன்னிற மேனியர். அழகான உடற்கட்டமைந்தவர். பகவானது திருநாமத்தைக் கேட்ட அளவில் அவருடைய கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் ஆருகப் பெருகும். குருதேவர் அவரை நாராயணனின் வடிவமாகவே கருதிவந்தார்.

### வியாழக்கிழமை, மார்ச் 29, 1883

கோடைக்காலம். பகல் இரண்டு மணி. தட்சிணேசுவரக் கோவிலில் குருதேவரின் அறை. பகல் உணவிற்குப் பிறகு குருதேவர் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார். அறையின் எதிரில் மேற்குத் திசையில் கங்கை ஓடிக்கொண்டிருந்தது. அப்போதுதான் கங்கையில், கடலேற்றம் காரணமாக நீர்ப் பிரவாகம் ஆரம்பித்திருந்தது. பிரம்மசமாஜ பக்தர்கள் சிலர் வந்திருந்தனர். அவர்களில் திரைலோக்கியரும் ஒருவர். அவர்

மிக இனிமையான குரலைக் கொண்டவர். பிரம்மசமாஜத்தில் பலமுறை இறைவனின் திருவிளையாடல்களையும், குணங்களை யும் பாடி, பெரியவர்கள், சிறியவர்கள், எல்லோருடைய நெஞ்சங்களையும் கவர்ந்திழுத்துப் பரவசப்படுத்தியவர்.

ராக்காலுக்கு உடல்நலமில்லை. இது குறித்துப் பெரிதும் கவலையுற்றவராய் குருதேவர் பக்தர்களிடம் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இதோ பாருங்கள்! ராக்காலுக்கு உடல்நிலை சரியில்லை. சோடா குடித்தால் சரியாகி விடுமா? என்ன ஆகுமோ தெரியவில்லையே! அப்பா ராக்கால்! நீ பூரி ஜகந்நாதரின் பிரசாதத்தைச் சாப்பிடு."

இப்படிச் சொல்லிக் கொண்டே இருந்த குருதேவர், ராக்காலைப் பார்த்தபடியே அதிசயமானபாவ நிலையில்ஆழ்ந்தார் சாட்சாத் நாராயணனே ராக்கால் உருவத்தில் சிறுவனாக உடல் எடுத்து எதிரில் வந்திருப்பதுபோல் அவருக்குத் தோன்றியது. காமினி, காஞ்சன ஆசைகளைத் துறந்த தூய ஆத்மாவான, ராக்காலோ இளம்பக்தன். இரவு பகலாகப் பிரேமைப்பித்தில் ஆழ்ந்திருந்த ஸ்ரீராமகிருஷ்ணரோ பிரேமை மயமான மனம் படைத்தவர். எனவே மிக எளிதில் வாத்ஸல்ய பாவம் அவரிடம் தோன்றிற்று. அவர், இளைஞன் ராக்காலைத் தாயன்புடன் பார்த்தபடியே 'கோவிந்தா கோவிந்தா' என்று அன்பு ததும்ப உச்சரிக்கத் தொடங்கினார். ஸ்ரீகிருஷ்ணரிடம் யசோதைக்கு எந்த பாவம் தோன்றியதோ, அதே பாவம் தான் இதுவும். அடியார்கள் இந்த அற்புதமான நிகழ்ச்சியை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

கோவிந்த நாமத்தை உச்சரித்துக் கொண்டே, அன்பர் களைக் காக்க வந்த குருதேவர் திடீரென்று அசைவற்றவரானார். சமாதி நிலையை அடைந்தார். வரைந்த ஓவியம்போல், அவ ருடைய உடல் இயக்கமற்றிருந்தது. அவருடைய நினைவுகள் எங்கோ போய்விட்டனபோல் தோன்றியது. அவருடைய பார்வை மூக்கு நுனியில் நிலைகுத்திநின்றது. மூச்சு விடுகிறாரா, இல்லையா என்பதுகூடத் தெரியவில்லை. உடல் இவ்வுலகில் உள்ளது. உயிரெனும் பறவை அறிவு வெளியில்(சிதாகாசத்தில்) பறந்து திரிந்து கொண்டிருந்தது! இவ்வளவு நேரம் தாயைப் போல் பக்தர்களுக்காக எவர் கவலை கொண்டிருந்தாரோ, அவர் இப்போது எங்கே? இந்த அற்புதமான நிலைதான் சமாதியோ?

இவ்வேளையில், காவியுடை தரித்த முன்பின் அறியாத ஒருவர் வந்து அமர்ந்தார்.

குருதேவரின் சமாதிநிலை படிப்படியாகக் கலையத் தொடங்கியது. பரவச நிலையில் இன்னும் இருப்பவராகவே தோன்றினர். அவ்வாறு இருந்தும் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (காவி உடை அணிந்தவரைப் பார்த்து) "எதற்காக இந்தக் காவி உடை? ஏதோ ஆசைக்காக என்ருலும் இந்த உடையையா அணிவது? ஒருவன் கூறினன் : 'சண்டியை[1] விட்டுவிட்டு அதற்குப் பதிலாக மத்தளம் அடிக்கிறேன்' என்று. முன்பெல்லாம் சண்டியின் பாடல்களைப் பாடி வந்தான். இப்பொழுது மத்தளம் அடித்து வருகிருன். (எல்லோரும் சிரிக்கின்றனர்)

"வைராக்கியம் மூன்று அல்லது நான்கு வகைப்படும். சம்சார நெருப்பில் வெந்து, அதிலிருந்து விடுபடக் காவியுடை அணிந்து கொள்வது ஒரு வகையான வைராக்கியம். இந்த வைராக்கியம் நீண்ட நாள் நிலைப்பதில்லை. வேலை கிடைக்கவில்லை என்று காவியுடை அணிந்து ஒருவன் காசிக்குப் போய்விட்டான். மூன்று மாதம் கழிந்ததும், 'எனக்கு வேலை கிடைத்திருக்கிறது. சில நாள் கழித்து வீட்டுக்கு வருகிறேன். நீங்கள் கவலைப்பட வேண்டாம்' என்று வீட்டுக்குக் கடிதம் எழுதுகிருன். இது இன்னெரு வகையான வைராக்கியம். வாழ்க்கையில் எல்லாம் நிறைவாக உள்ளன. எதற்கும் குறைவு என்பதே இல்லை. அப்படியிருந்தும் எதிலும் பற்றில்லை. ஆண்டவனுக்காகத் தனிமையில் அழுகிருன். இதுதான் உண்மையான வைராக்கியம்.

"எந்த நிலையிலும் பொய் ஏற்றதல்ல. நல்ல காரியத்திற்காகப் பொய்யாக நடிப்பதுகூட நல்லதல்ல. மனப்பக்குவம் அடையாமல் காவியுடை மட்டும் அணிந்திருந்தால் நாளடைவில் எல்லாவிதத்திலும் கெடுதல் ஏற்படுகிறது. அடிக்கடிப் பொய் பேசுவதாலும், பொய்யான செயல்களை மீண்டும் மீண்டும் செய்வதனுலும் பாவச் செயல்களைச் செய்வதில் உள்ள பயம் படிப்படியாக நீங்கி விடுகிறது. இதைவிட இல்லறத்தானுக்குரிய வெள்ளையுடை அணிவது மேல். மனத்தில் பற்று சேர்ந்

1. சண்டி என்பது அன்னை பராசக்தியைப் பற்றிய தோத்திரம். இது மார்க்கண்டேய புராணத்தில் உள்ளது.

திருக்கிறது; சிலமுறை குறிக்கோள்களிலிருந்து வழுக்கி விழுந்து விடுகிறான். இந்நிலையில் காவியுடை அணிவது மிக மிகப் பயங்கரமானது; கொடுமையானது.

"சொல்லப்போனால், நல்லவர்கள் விளையாட்டுக்காகக் கூடப் பொய் சொல்வதோ, பொய்யான செயல்களைச் செய்வதோ சரியல்ல. நவ பிருந்தாவனம் என்ற நாடகத்தைப் பார்க்கக் கேசவருடைய பிரம்ம சமாஜத்துக்கு நான் சென்றிருந்தேன். ஒருவன் மேடைமீது சிலுவையைக் கொண்டுவந்தான். மற்றொருவன் அதன்மீது நீரைத் தெளித்தான். அதைச் 'சாந்தி ஜலம்' என்றார்கள். இன்னொருவன் குடிகாரனைப்போல் வேடம் போட்டுக்கொண்டு தள்ளாடி நடந்துவந்தான்."

பிரம்ம சமாஜ பக்தர் : "அவர் கு—பாபு"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பக்தன் ஒருவன் அத்தகைய பாத்திரங்களில் நடிப்பது நல்லதல்ல. நீண்ட நேரம் இத்தகைய தீய பண்புகளில் ஈடுபட்டிருப்பது மனத்திற்கு நல்லதாகாது. வண்ணானிடம் கொடுத்துள்ள துணியைப் போன்றது மனம். அவன் அதை எந்த நிறத்தில் தோய்த்து எடுக்கிறானோ, அந்த நிறத்தைப் பெறுகிறது. பொய்யான எண்ணங்களில் உள்ளத்தை நீண்ட நேரம் விட்டு வைத்திருந்தால் பொய்யே மனத்தில் படிந்து விடுகிறது.

"மற்றொரு நாள் 'நிமாய் சந்நியாசம்' என்ற நாடகத்தைப் பார்க்கக் கேசவருடைய வீட்டிற்குப் போயிருந்தேன். கேசவரை முகஸ்துதி செய்யும் சீடர்கள் சிலர் சேர்ந்து அந்த நாடகத்தைக் கெடுத்துவிட்டனர். கேசவரைக் 'கலியுகத்தின் சைதன்யதேவர் நீங்கள்!' என்று ஒருவன் சொன்னான். கேசவர் அதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே முகத்தை என் பக்கம் திருப்பி என்னைப் பார்த்து, 'அப்படியானால் இவர் யார்?' என்று கேட்டார். உடனே நான், 'உங்களுடைய தாசனுக்கும் தாசன்; கால் தூசிக்கும் தூசி' என்று சொன்னேன். கேசவருக்குப் பேர், புகழ் இவற்றில் அதிக ஆசை இருக்கிறது.

(அமிர்தரையும் திரைலோக்கியரையும் பார்த்து) "நரேந்திரன், ராக்கால் முதலிய சிறுவர்கள் நித்திய சித்தர்கள். இவர்கள் பிறவிதோறும் இறையடியார்களாகவே இருப்பார்கள். சாதாரண மக்கள் சாதனைகள் பல புரிந்து ஓரளவு பக்தியைப் பெறுகின்றனர். இந்த நித்திய சித்தர்களோ பிறப்

பிலிருந்தே இறைவனின் அடியார்கள். தானகவே பூமியில் தோன்றுகிற சிவலிங்கம் (சுயம்பு லிங்கம்) போன்றவர்கள் இவர்கள். அது மனிதன் உருவாக்கியது அல்ல; மனிதன் கைபடாதது அந்தச் சிவலிங்கம். நித்திய சித்தர்கள் ஒரு தனி வகுப்பினர். எல்லாப் பறவைகளும் வளைந்த அலகைப் பெற்றிருப்பதில்லை. இவர்கள் ஒரு பொழுதும் சம்சாரத்தில் பற்றுக் கொள்வதில்லை. பிரஹலாதனைப் போன்றவர்கள் இவர்கள்.

"சாதாரண மனிதர்கள் சாதனை செய்கின்றனர். இறைவனிடம் பக்தியை வளர்த்துக் கொள்கின்றனர்; அதே நேரத்தில் சம்சாரத்தில் ஆழ்ந்த பற்றுக்கொண்டு காமினி, காஞ்சனத்திலும் மூழ்குகின்றனர். பூவிலும், இனிப்புப் பண்டத்திலும் ஈ உட்காருகிறது. அதே ஈ மலத்திலும் உட்காருகிறது. அது போன்றவர்கள் இவர்கள்" (எல்லோரும் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தனர்)

"நித்திய சித்தர்கள் தேனீக்களைப் போன்றவர்கள். அவை பூவில் மட்டுமே அமர்ந்து மது அருந்தும். நித்திய சித்தர்கள் ஹரிரசத்தை மட்டுமே பருகுகின்றனர். அவர்கள் உலக இன்பம் உள்ள திசையில் தலை வைத்துக் கூடப் படுக்க மாட்டார்கள்.

"சாதனைகள் செய்வதன் மூலம் கிடைக்கும் பக்தி அல்ல இவர்களுடைய பக்தி. 'இவ்வளவு தியானம் செய்ய வேண்டும், இவ்வளவு ஜபம் செய்ய வேண்டும், இவ்வளவு பூஜை செய்ய வேண்டும்' என்று கணக்குப் போடுவது சாதாரண விதிகளுக்கு உட்பட்ட பக்தியாகும். வயலில் பயிர் வளர்ந்திருக்கும் போது வயலைக் கடக்க, அதன் வரப்பு வழியாகச் சுற்றிச் செல்ல வேண்டும். அல்லது அருகில் உள்ள கிராமத்தை அடைய வேண்டுமானல், வளைந்தோடும் நதி வழியாகப் படகினைச் சுற்றி வளைத்துக் கொண்டு செல்ல வேண்டும். இது போன்றது இந்த பக்தி.

"இறைவனிடத்தில் ராகபக்தி, பிரேமபக்தி ஏற்படுமானல் எந்த விதிமுறைகளும் வேண்டியதில்லை. அறுவடை முடிந்த வயலில் குறுக்காக இறங்கிப் போவது போல் இறைவனிடம் நேராகப் போய்விடலாம். வரப்பு வழியாகச் சுற்றிக் கொண்டு போக வேண்டியதில்லை. ஒரே சீராக நேராகப் போய்ச் சேர்ந்து விடலாம்.

"ஆற்றில் வெள்ளம் வரும்போது, நிலத்தின் மீது மூங்கிலளவு நீர்உயர்ந்து நிற்கும். அப்போது நதியின்வழியாகச் சுற்றி வளைத்துச் செல்ல வேண்டிய அவசியம் இல்லை. படகைக் குறுக்கே செலுத்திச் சென்று விடலாம். அதுபோல ராகபக்தி தோன்றும் போது இறைவனை நேராக அடைந்து விடலாம். இந்த ராகபக்தி ஏற்படாவிட்டால் இறைவனுடைய காட்சி கிட்டுவதில்லை."

அமிருதர் : "சுவாமி, சமாதி நிலையில் நீங்கள் என்ன உணருகிறீர்கள்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "குளவியை எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்கும் புழு, கடைசியில் குளவியாகவே மாறிவிடுகிறது என்பதை நீ கேட்டதில்லையா? சிறு குடத்தில் அடைபட்ட மீனைக் கங்கையில் விட்டால், எப்படியோ, அது போலத்தான் சமாதியில் என் நிலையும்."

அமிருதர் : "அப்போது 'நான்' என்ற எண்ணம் கொஞ்சம் கூட இருப்பதில்லையா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "கொஞ்சம் இருக்கிறது. ஒரு பொன் கட்டியைச் சாணைக்கல்லில் எவ்வளவுதான் தேய்த்தாலும் ஒரு சிறு துணுக்குப் பொன் கடைசியில் தங்கி விடுகிறது. ஒரு பெரிய நெருப்பும் அதன் ஒரு சிறு பொறியும் போன்றது. வெளி உணர்வு மறைந்து விடுகிறது, ஆனால், அவருடைய விளையாட்டை அனுபவிக்கவும், ஆனந்தத்தைத் துய்க்கவும் சிறிது 'நான்' என்னும் உணர்வை விட்டு வைக்கிறான் இறைவன். 'நான்', 'நீ' என்னும் உணர்வு சிறிது இருந்தால்தான் அதை அனுபவிக்க முடியும். சில சமயம் இறைவன் இந்த 'நான்' என்பதையும் நீக்கி விடுகிறான். இதற்கு ஜடசமாதி அல்லது நிர்விகல்ப சமாதி என்பது பெயர். அந்த நிலையில் என்ன ஏற்படுகிறது என்பதைச் சொல்ல முடியாது. உப்புப் பொம்மை கடலை அளக்கக் கடலில் இறங்கிய கதைதான். இறங்கியதும் கரைந்து கடலோடு ஒன்றாகி விட்டது. அந்நிலையில் கடல் எவ்வளவு ஆழம் என்ற செய்தியை யார் கரைக்கு வந்து சொல்வது?

தூய்மைப்படுத்துவதால் என்ன பயன்? மேலும் ஒருவர் விவேகம், வைராக்கியம் முதலியவற்றைப் பழகி வர வேண்டும். 'வாழ்க்கை நிலையற்றது' என்ற எண்ணம் உள்ளத்தில் உதயமாக வேண்டும்."

பிரம்ம பக்தர் : "இல்லறத்தைத் துறப்பது நல்லதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அது எல்லோராலும் முடியாது. தங்கள் ஆசைகளை நிறைவேற்றிக்கொள்ளாதவர்களால் வாழ்க்கையைத் துறக்க இயலாது. ஏதோ சிறிது மது குடித்தவனை முழுக் குடிவெறியில் மூழ்கிக்கிடக்கிருன் என்று சொல்ல முடியுமா?"

பிரம்ம பக்தர் : "அப்படியானல் இவர்கள், இல்லறத்திலேயே இருக்க வேண்டியதுதானு?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆம். இவர்கள் பயன் கருதாது பணிபுரிய முயற்சி செய்ய வேண்டும். கையில் எண்ணெயைப் பூசிக்கொண்டு பலாப்பழத்தை அறுக்க வேண்டும். அப்போதுதான் அதன்பால் கையில் ஒட்டாது. வீட்டு வேலைக்காரி தன் எஜமானன் வீட்டில் எல்லா வேலைகளையும் செய்கிறுள். ஆனல், அவளது மனமோ தன் வீட்டையே எண்ணிக்கொண்டிருக்கும். இப்படிப்பட்ட மனப்பான்மையைத்தான் 'பயன் கருதாமல் பணி செய்வது' என்பார்கள். இதை 'மனத் துறவு' என்றும் கூறலாம். இல்லறத்தார்களாகிய நீங்கள் மனத்தால் துறக்க வேண்டும். முற்றும் துறந்த துறவிகளோ மனத்தாலும், செயலாலும் இரண்டு விதமாகத் துறந்து விடுவார்கள்..

பிரம்ம பக்தர் : "ஆசை தீர்வது என்பதன் பொருள் என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பெண், பொன் இவைகளின் மேலுள்ள கவர்ச்சிதான் ஆசை. டைபாய்டு நோயாளியை ஊறுகாயும், தண்ணீரும் உள்ள இடத்தில் வைப்பது ஆபத்தானது. மக்களுக்குப் பணம், பொன், புகழ், பெண், போகம் இவற்றின் மேலுள்ள ஆசைக்ள் நிறைவேருவிட்டால் —இந்த ஆசைகளை அனுபவித்துத் தீர்த்துக்கொள்ளாவிட்டால் இறைவனுக்காக இதயம் உருகித் துடிக்கும் மனநிலை ஏற்படுவதில்லை"

பிரம்ம பக்தர் : "பெண்கள் கெட்டவர்களா? அல்லது ஆண்கள் கெட்டவர்களா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "உலகில் நற்குணங்கள் (வித்யா சக்தி) வாய்ந்த பெண்களும் உள்ளனர்; தீய குணங்கள் (அவித்யா சக்தி) வாய்ந்த பெண்களும் இருக்கின்றனர். இறைவனிடம் பக்தி கொண்டுள்ள பெண்மணி அவனை அடையும் நெறியில் நம்மை அழைத்துச்செல்கிருள். தீய குணமுடைய பெண்ணே தெய்வத்தை நாம் மறக்கும்படிச் செய்துவிடுகிருள்—உலக வாழ்க்கையில் நம்மை மூழ்கடிக்கிருள்.

"இறைவனுடைய மஹாமாயையால் இவ்வுலக வாழ்க்கை நடந்து வருகிறது. இந்த மாயை இருவகைப்படும். ஒன்று வித்யா மாயை; மற்ருென்று அவித்யா மாயை. வித்யா மாயையிடம் சரணடைந்தால் நல்லார் இணக்கம், ஞானம், பக்தி, அன்பு, வைராக்கியம் ஆகியவை உண்டாகின்றன. அவித்யா மாயை என்பது நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களும், அவற்றின் அடிப்படையில் தோன்றும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பனவுமாகும். அதாவது, பொறிகளின் இன்பத்திற்குக் காரணமாக இருக்கும் பொருட்கள். இவைகள் நம்மிடம் ஈசனை மறக்கும்படிச் செய்கின்றன."

பிரம்ம பக்தர் : "அறியாமையை உண்டாக்கும் அவித்யா மாயையை இறைவன் ஏன் படைத்திருக்கிருன்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அது அவனுடைய விளையாட்டு. இருள் இல்லாவிட்டால் ஒளியின் பெருமையை அறிய முடியாது. துன்பமில்லாவிட்டால் இன்பத்தின் அருமையை அறிய முடியாது. அஞ்ஞானமாகிய அவித்யை இருப்பதனுல்தான் ஞானத்தின் பெருமையை அறிய முடிகிறது.

"தோல் இருப்பதனுல்தான் மாங்காய் பழுக்கிறது. பழம் பழுத்ததும் வெளித்தோலின் உபயோகம் முடிந்துவிடுகிறது. நாம் தோலை அகற்றிவிடுகிருேம். மாயை என்னும் தோல் மூடியிருப்பதால்தான் பிரம்மஞானத்தை அடைய முடிகிறது. வித்யாமாயை, அவித்யா மாயை இரண்டும் மாம்பழத்தின் தோலுக்குச் சமம். இரண்டுமே தேவை.

பிரம்ம பக்தர் : "களிமண்ணுல் செய்யப்பட்ட கடவுளின் உருவத்திற்குப் பூஜை செய்வது நல்லதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பிரம்மசமாஜிகளாகிய நீங்கள் உருவ வழிபாட்டை நம்புவதில்லை; அது நல்லதுதான்; நீங்கள்

உருவங்களை வழிபட வேண்டியதில்லை. ஆனால், உருவத்தை வழிபடுபவர்கள் அந்த சைதன்ய வடிவத்திடம் கொண்டுள்ள ஆழ்ந்த பக்தியை, ராதை கண்ணனிடம் கொண்டது போன்ற பக்தியை மட்டும் கற்றுக்கொள்ள வேண்டும். உருவ வழிபாட்டில் நம்பிக்கை உள்ளவர்கள் அன்னைகாளி, துர்க்கை ஆகிய தெய்வங்களின் வழிபாட்டில் எவ்வளவு அன்பும், பக்தியும் கொண்டிருக்கிறார்கள்! 'அம்மா, அம்மா' என்று உள்ளம் உருகி எக்காலமும் அவர்கள் தேவியை அன்புடன் கூவியவண்ணமிருக்கிறார்கள். அந்த மனநிலையை நீங்கள் பெற வேண்டும். உருவத்தை ஒப்புக்கொள்ளா விட்டால் என்ன? அதில் தவறு ஒன்றும் இல்லை.''

பிரம்ம பக்தர் : ''வைராக்கியம் எப்படி உண்டாகிறது? அது ஏன் எல்லோருக்கும் உண்டாவதில்லை?''

ஸ்ரீராமகிருஷ்ணர் : ''ஆசைகள் நிறைவேறாவிட்டால் வைராக்கியம் தோன்றாது. உதாரணத்திற்கு, ஒரு சிறுகுழந்தையை எடுத்துக்கொள்வோம். அதற்கு விளையாட்டுச் சாமான்களைக் கொடுத்தோ அல்லது தின்பண்டங்களைக் கொடுத்தோ தாயை அதிக நேரம் மறந்திருக்கச் செய்யலாம். விளையாட்டுச் சாமான்களைக் கொண்டு விளையாடுவது, தின்பண்டங்களைத் தின்பது இவையெல்லாம் தீர்ந்தவுடன், 'அம்மாவிடம் போக வேண்டும்' என்று குழந்தை அடம் பிடிக்கிறது. அன்னையிடம் அழைத்துச்செல்லா விட்டால் விளையாட்டுச் சாமான்களை வீசி எறிந்துவிட்டு, உரத்த குரலில் அழத் தொடங்குகிறது.''

பிரம்மசமாஜ பக்தர்கள் குருவாதத்தின் பகைவர்கள். அதாவது குரு பரம்பரையை எதிர்ப்பவர்கள். ஆகவே பிரம்ம பக்தர் இது விஷயமாகப் பேசத்துவங்கினார்.

பிரம்ம பக்தர் : ''ஐயா! குரு இல்லாமல் ஞானம் பெற முடியாதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் : ''சச்சிதானந்தம்தான் குரு. மனித வடிவம் தாங்கிய குரு, சாதகனுடைய மனத்தில் ஞானத்தைத் தட்டி எழுப்புவாரேயானால், அது சச்சிதானந்தத்தின் செயலே என்று அறிந்துகொள். சீடனின் கையைப் பிடித்து, இறைவனைக் காணும் வழியில் குரு அவனை அழைத்துச்செல்கிறார். இறைவனுடைய காட்சிக்குப்பின், 'குரு, சீடன்' என்ற வேறுபாடு இருவரிடமும் மறைந்துவிடுகிறது. 'இது மிகக் கடின

மான நிலை. குரு, சீடன் என்று பிரித்துப்பார்க்க முடியாது.' அதனால்தான் ஒருமுறை ஜனகர் சுகதேவரைப் பார்த்து, 'நீ பிரம்ம ஞானத்தை அடையவேண்டுமானால், முதலில் குருதட்சிணையைக் கொடுத்துவிடு' என்றார். பிரம்மஞானம் அடைந்த பின்னர் குரு, சீடன் என்னும் வேற்றுமையே இராது. இறைவனைக் காணாத வரையில்தான், 'குரு, சீடன்' என்ற உறவு."

இரவு வேளை நெருங்கிக் கொண்டிருந்தது. அப்போது சில பிரம்மசமாஜ அன்பர்கள் குருதேவரைப் பார்த்து, 'நீங்கள் மாலை வழிபாடு செய்ய வேண்டிய நேரம் வந்து விட்டதுபோல் இருக்கிறதே' என்று கேட்டனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இல்லை. அப்படியொன்றுமில்லை. ஆரம்ப காலங்களில் ஒருவர் சந்தியாவந்தனம் முதலிய கடமைகளைச் செய்தே ஆக வேண்டும். ஆனால், உண்மையான பக்தி உதித்த பிறகு பூஜை, வழிபாடு போன்றவைகள் அவ்வளவு முக்கியமல்ல."

அந்திப் பொழுது நெருங்கிக்கொண்டிருந்தது. ஸ்ரீபேசாராம் வழிபாட்டு மேடையில் அமர்ந்து பிரசங்கம் செய்ய ஆரம்பித்தார். இடையிடையே பிரம்மோ சங்கீதமும், உபநிடத மந்திரங்களை ஓதுதலும் நடந்தேறின. சொற்பொழிவு முடிந்ததும் பண்டிதர் ஸ்ரீராமகிருஷ்ணருடன் அமர்ந்து பல்வேறு பொருள் குறித்துப் பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நல்லது. உருவக்கடவுளும் அருவக் கடவுளும் உண்மை என்று எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

பண்டிதர் : "அருவக்கடவுள் மின்சார ஓட்டத்தைப் போன்றவர். கண்களினால் மின்சார ஓட்டத்தைக் காண முடியாது. ஆனால், உணர முடிகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆம், உண்மைதான். உருவக் கடவுள் எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மை அருவக் கடவுளும். அருவக்கடவுளை மட்டும் ஏற்றுக்கொள்வது எதைப் போன்றது எனில், பின்னணிப் பாடகன் ஒருவன் புல்லாங்குழலின் ஒரு துளையை மட்டும் பயன்படுத்தித் தொடர்ந்து ஒரே விதமான 'ஒலியை எழுப்புவது போன்றது.

"மற்றொரு பாடகனோ ஏழு துளைகளையும் உபயோகித்துப் பல ராகங்களில் பலவிதமான பாடல்களை அதே கருவியில் இசைக்கின்றான். அது போல உருவக்கடவுளை வழிபடுவோர் இறைவனை எத்தனை எத்தனை விதங்களில் அனுபவிக்கின்றனர்? சாந்தம், தாஸ்யம், சக்யம், வாத்சல்யம், மதுரம் முதலிய பல விதமான பாவனைகளில் கடவுளோடு உறவு கொள்கின்றனர்.

"இந்த பாவனைகளின் நோக்கமென்ன? எப்படியாவது அமுதக் கடலில் அமிழ்ந்துவிடுவதுதான். பூஜை, துதி முதலிய வற்றாலோ அல்லது வேறு ஒருவர் உன்னைப் பிடித்துத் தள்ளுவ தாலோ எப்படியோ அந்தக் கடலில் விழுந்தால் போதும். எப்படி விழுந்தாலும் எய்தும் பயன் ஒன்றுதான். இருவித உபாசகர்களும் இறுதியில் சாகாநிலையை எய்துவர்.

"பிரம்மசமாஜ அடியார்கள் விஷயத்தில் தண்ணீர், பனிக் கட்டி உவமை பொருத்தமானது. சச்சிதானந்தக் கடல் என்பது ஓர் எல்லையற்ற நீர்ப்பரப்பு. இப் பெருங்கடலில் சில இடங்களில் குளிரின் காரணமாகத் தண்ணீர், பனிக்கட்டி உரு வத்தில் காணப்படுகிறது. அதே போல் 'பக்தி' என்னும் குளிர்ச்சியின் காரணமாகச் சச்சிதானந்த பிரம்மம் (உருவமற்ற பிரம்மம்) பக்தர்கட்குக் கருணை பொழியும் நிமித்தம், உருவ முள்ளதாகக் காட்சி அளிக்கிறது. நம் முனிவர்கள் பொறி, புலன்கட்கு எட்டாத அந்த ஒளிமயமான உருவத்தைக் கண் டார்கள். அதனுடன் பேசினார்கள். பக்தர்களோ பிரேமை மயமான உடலைப் பெற்று, (பாகவதிதனு) அந்த ஒளி மயமான இறைக் காட்சியைப் பெறுகின்றனர்.

"மற்றொரு நிலை இருக்கிறது. மனம், வாக்கிற்கு எட்டாதது பிரம்மம். ஞானக் கதிரவனின் ஒளிக்கதிர்கள் உருவம் தரித்த பனிக்கட்டியை உருகவைக்கின்றன. பிரம்மஞானத் திற்குப் பிறகு, அதாவது நிர்விகல்ப சமாதியடைந்த பின்னர் மனம், வாக்கிற்கு எட்டாத எல்லையற்ற உருவமற்ற பிரம்மம் என்ற நிலை!

"பிரம்மத்தின் நிலையை வார்த்தைகளால் வருணிக்க இயலாது வாய் மௌனமாகிவிடும். வரையற்ற பரம்பொருளை, ஆனந்த மயமான பொருளை வார்த்தைகளால் எப்படி பிரித்துக் கூற இயலும்? பறவை எவ்வளவுதான் உயர உயரப் பறந் தாலும் அதற்கும் மேல் ஆகாயம் உயர்ந்து விளங்குகிற தல்லவா? நீ என்ன நினைக்கிறாய்?"

பண்டிதர்: "ஆம் ஐயா! வேதாந்தத்தில் இத்தகைய கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன".

ஸ்ரீராமகிருஷ்ணர்; "உப்புப் பொம்மை ஒன்று கடலின் ஆழத்தை அளக்கச் சென்றிருந்தது. ஆனால் திரும்பி வந்து செய்தியைச் சொல்ல அதனால் முடியவில்லை. காரணம், தண்ணீரிலேயே அது கரைந்து விட்டது. சுகதேவர் போன்ற முனிவர்கள் அப்பரம்பொருளாகிய கடலைக் கண்டும், தொட்டுமே இருந்தார்கள். அவர்களும் அதில் மூழ்கிக் கரையவில்லை. இது ஒரு சாரார் கருத்து.

"எல்லாப் பொருட்களும் நாவினால் பேசப்பட்டு எச்சிலாகி விட்டன. ஆனால், 'பரம்பொருள் ஒன்றே எச்சிலாக்கப்படவில்லை. வாயினால் ஒன்றைச் சொல்லிய மாத்திரத்திலேயே அது எச்சில் ஆகி விடுகிறது என்று ஒருமுறை வித்யாசாகரிடம் கூறினேன். இதைக் கேட்டு வித்யாசாகர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். அவர் ஒரு பெரிய பண்டிதர்.

"கேதாரேஸ்வரத்தில் எப்பொழுதும் பனிமூடிய பகுதி உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன். மலைமேல் நெடுந்தூரம் ஏறிச்சென்றவர்களால் திரும்பிவர இயலாது. 'மலையின் உச்சி எப்படி இருக்கிறது? அங்குள்ள நிலைமை என்ன?' என்று அறிய ஆவல் கொண்டு மலைமேல் சென்றவர்கள் திரும்பிவந்து செய்தியைத் தர முடிவதில்லை என்பார்கள்.

"இறைவனைக் கண்டபின், மனிதன் ஆனந்த பரவசத்தில் தன்னை இழக்கிறான். மௌனியாகிறான். அதன் பிறகு அந்த இறைஅனுபவத்தை யார் சொல்லுவார்கள்? அவரைப் பற்றி யார் நமக்கு எடுத்து விளக்குவார்கள்?

"ஏழு வாயில்கட்கு அப்பால் அரசர் வீற்றிருக்கிறார். ஒவ்வொரு வாயிலிலும் ஒரு பெரிய செல்வந்தன் அமர்ந்துள்ளான். சீடன் தன்னை அழைத்து வந்த குருவைப் பார்த்து 'இவரா அரசர்?' என்று ஒவ்வொரு வாயிலிலும் வினவுகிறான். குரு 'இல்லை' என்றும் 'இவரல்ல, இவரல்ல' என்றும் கூறுகிறார். பிறகு ஏழாவது வாயிலை அடைந்ததும் அங்கே கண்ட காட்சியினால் சீடன் அடியோடு பேச்சற்று, ஆனந்தத்தில் அப்படியேமூழ்கி விடுகிறான். 'இவர்தான் அரசரா?' என்று கேட்கவேண்டிய அவசியம் அவனுக்கு ஏற்படவில்லை. பார்த்த மாத்திரத்திலேயே அவனுடைய ஐயமெல்லாம் பறந்து விட்டன".

பண்டிதர்: "ஆம் ஐயா. வேதாந்தமும் அப்படித்தான் கூறுகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆக்கல், அளித்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களைப் புரியும்போது ஆண்டவனைச் சகுண பிரம்மம், ஆத்யா சக்தி என்றெல்லாம் கூறுகிறோம். முக்குணங்களைக் கடந்த நிலையில் இறைவனைக் குணமற்றவன், மனம் வாக்கு இவற்றிற்கு எட்டாதவன் என்று கூறுகிறோம். இதுதான் பரப்பிரம்மம்.

"மாயையின் வலையில் விழுந்து மனிதன் தன் நிலையை மறந்துவிடுகிறான். தந்தையாகிய இறைவனின் எல்லையற்ற செல்வத்திற்குத் தான் தான் வாரிசு என்பதையும் மறந்துவிடுகிறான். இறைவனுடைய மாயை முக் குணங்களைக் கொண்டது. இம்மூன்று குணங்களையும் மூன்று கள்வர்கள் என்பேன். இவர்கள் எல்லாவற்றையும் கவர்ந்துகொள்கின்றனர். உண்மை நிலையை மறக்கச்செய்கின்றனர். சத்துவம், ரஜஸ், தமஸ் என்பவை தான் அந்த மூன்று குணங்கள். இவற்றுள் சத்துவ குணம் மட்டுமே இறைவனை அடையும் வழியைக் காட்டும் ஆயினும் சத்துவ குணத்தால்கூட இறைவனிடம் நம்மை சேர்ப்பிக்க முடியாது.

"பணக்காரன் ஒருவன் காட்டு வழியாகச் சென்றுகொண்டிருந்தான். அவனை மூன்று திருடர்கள் சுற்றி வளைத்து அவனிடம் இருந்த பொருட்களையெல்லாம் பறித்துக் கொண்டனர். அவர்களுள் ஒரு திருடன் 'இவனை விட்டு வைப்பதால் என்ன இலாபம்? இவனைக் கொன்றுவிடுவோம்' என்று கூறி, அவனை வெட்ட அவன் அருகில் வந்தான். இரண்டாவது திருடன், இவனைவெட்டுவதனால் எந்தப் பயனும் இல்லை. நன்றாகக் கட்டி இவ்விடத்திலேயே விட்டு விடலாம். இவனால் போலீசாருக்குத் தகவல் கொடுக்க முடியாது!' என்றான். இவ்வாறுகூறி அம்மனிதனை நன்றாகக் கட்டிப்போட்டுவிட்டுக் கள்வர்கள் அவ்விடத்தை விட்டு அகன்றனர். சிறிது நேரத்திற்குப் பிறகு மூன்றாவது திருடன் தனியாக அந்த இடத்திற்குத் திரும்பி வந்தான். அவன் பணக்காரன் அருகில் வந்து 'ஐயோ பாவம்! உனக்கு அதிகத் துன்பம் ஏற்பட்டுவிட்டது அல்லவா? நான் உன் கட்டை அவிழ்த்து விடுகிறேன்' என்று கூறி கட்டை அவிழ்த்துப் பின் அம்மனிதனைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு அவனுக்கு வழியைக் காட்டிக் கொண்டே முன் சென்றான். காட்டுவழியைக் கடந்தபின், நெடுஞ்சாலை

வந்தது. உடனே இம் மூன்ருவது திருடன் அந்த நெடுஞ் சாலையைப் பணக்காரனுக்குக் காட்டி, 'நீ இந்த வழியாகச் சென்ருல் சுலபமாக உன் இருப்பிடத்தை அடைய முடியும்' என்ருன். உடனே பணக்காரன் மிகுந்த அன்புடன் 'நீங்களும் என்னுடன் வாருங்கள். நீங்கள் எனக்கு எவ்வளவு பெரிய உதவி செய்திருக்கிறீர்கள்? எங்கள் வீட்டிற்கு வந்தால் நாங்கள் மிகவும் ஆனந்தமடைவோம்' என்ருன். அதைக் கேட்டு அத் திருடன் 'நான் அங்கே வரமுடியாது. நான் வந்தால் போலீசார் பிடித்துக் கொள்வார்கள்' என்ருன். இவ்வாறு கூறி, அத்திருடன் வழி காட்டி விட்டு மறைந்தான்.

"இவனை விட்டு வைப்பதால் என்ன இலாபம்? இவனைக் கொன்று விடு' என்ற முதல் திருடன் தான் தமோகுணம். தமோ குணம் அழிவைத் தருவது. இரண்டாவது திருடன் ரஜோ குணம். ரஜோகுணம் நிறைந்த மனிதன் வாழ்க்கையில் கட்டுண்டவனுக வாழ்கிருன். பலவிதமான காரியங்களில் அகப் பட்டுக்கொண்டு தவிக்கிருன். ரஜோ குணம் இறைவனை மறக்கச்செய்யும் இயல்புள்ளது. கருணை, பக்தி, அன்பு முதலானவை சத்துவகுணத் திலிருந்துதான் தோன்றுகின்றன. மாடியை அடையும் படிக்கட்டுக்களில் கடைசிப்படி சத்துவகுணம். அதற்குப் பிறகு மாடி. **மனிதனின் உண்மை யான இருப்பிடம் பரப்பிரம்மம்.** முக்குணங்களைக் கடக்கா விடில் பிரம்மஞானம் கிடைக்காது."

பண்டிதர் : "தங்கள் அருளால் இன்று நல்ல போதனைகளை நான் கேட்க முடிந்தது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : (சிரித்துக் கொண்டே) "பக்தனுடைய தன்மை எப்படிப்பட்டது தெரியுமா? ஒரு பக்தன் மற்ருெரு பக்தனைப் பார்க்கும்போது, 'நான் சொல்கிறேன், நீ கேள்; பிறகு நீ சொல், நான் கேட்கிறேன்!' என்பான். நீங்கள் பண்டிதர்கள். எவ்வளவு பேருக்கு நீங்கள் உபதேசம் செய்து வருகிறீர்கள்? ஆசாரியர்களாகிய நீங்கள் பெரிய கப்பல் போன்றவர்கள். நாங்கள் மீன்பிடிக்கும் சிறு படகுகள்." (எல்லோரும் சிரிக்கின்றனர்).

### புதன்கிழமை, மே 2, 1883

மாலை ஐந்து மணி. நந்தன்பகான் என்ற இடத்திலுள்ள பிரம்மசமாஜக் கோயிலில் குருதேவர் பக்தர்களுடன் அமர்ந் திருந்தார். பிரம்மசமாஜ அன்பர்களும் உடனிருந்தனர்.

அவருடன் ராக்கால், ம- முதலியோரும் இருந்தனர். அங்கு காசீஸ்வர்மித்ரா என்ற பக்தரின் இல்லம் இருந்தது. இவர் உயர்பதவி வகித்தவர். ஆதிபிரம்மசமாஜத்தைச் சேர்ந் தவர். இவர் தன் இல்லத்தின் இரண்டாவது மாடியிலுள்ள பெரிய மண்டபத்தில் வழிபாட்டுக் கூடம் ஒன்று அமைத் திருந்தார். அடிக்கடி பக்தர்களை அழைத்துத் தனது வீட்டில் திருவிழா நடத்துவார். இப்போது அவர் உயிருடன் இல்லை. அவருடைய பிள்ளைகள் ஸ்ரீநாத், யஜ்ஞநாத் இருவரும் சிறிது காலம் திருவிழாக்களைத் தொடர்ந்து நடத்தி வந்தனர். இவர்களே இப்பொழுது குருதேவரை அன்பும் மரியாதையும் காட்டித் தங்கள் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வந்திருந்தனர்.

வீட்டிற்கு வந்ததும் குருதேவர் முதலில் ஓர் அறையில் சென்று அமர்ந்தார். பிரம்மசமாஜ பக்தர்கள் ஒவ்வொருவராக அங்கு வந்து குருதேவரின் அருகில் அமரலாயினர். இரவீந்திரநாத்தாகூர் முதலிய தாகூர் வம்சத்தைச் சேர்ந்த அடியார்களும் அங்கு வந்திருந்தனர்.

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் மேல்மாடியிலுள்ள வழிபாட்டுக் கூடத்திற்குப் பக்தர்கள் புடைசூழ அழைத்துச் செல்லப்பட்டார். இக் கூடத்தின் கிழக்குப் பாகத்தில் விழா விற்காக மேடை அமைக்கப்பட்டிருந்தது. தென்மேற்குப் பக்கத்தில் ஒரு பியானோ இசைக்கருவி வைக்கப்பட்டிருந்தது. வட பகுதியில் சில நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. அதற் கடுத்து வீட்டினுள் செல்லும் வழி இருந்தது.

மாலை விழா ஆரம்பமாயிற்று. ஆதிபிரம்மசமாஜத்தைச் சேர்ந்த பைரவ வந்தோபாத்யாயர் ஓரிரு பக்தர்களுடன் மேடைமீது வீற்றிருந்தார். மே மாதமாகையால், கோடைக் காலமாக இருந்தது. கூடியிருக்கும் பக்தர்கள் வீட்டின் கீழ் மண்டபத்திலும் சுற்றியுள்ள முற்றத்திலும் இங்குமங் குமாக உலவிக் கொண்டிருந்தனர். ஜானகி கோஷால் என்பவரும் மற்றும் சில பக்தர்களும் குருதேவரின் அருகில் உட்கார்ந் திருந்தனர். ஆண்டவனைப் பற்றிய அருள்வாக்கைக் குரு தேவரிடம் கேட்க அனைவரும் ஆவல் கொண்டிருந்தனர். விழாப் பந்தலில் நுழைந்த குருதேவர் மேடைக்குத் தமது வணக்கத்தை முதற்கண் தெரிவித்துவிட்டு அமர்ந்தார். பின்னர் ராக்கால் ம- முதலியோரை நோக்கிப் பின்வருமாறு கூறத் தொடங்கினர். "விழா மேடைக்கு வணக்கம் செலுத்துவதால் என்ன பயன்?' என்று நரேந்திரன் ஒரு சமயம் என்னைக் கேட்டான்.

"கோயிலைக் கண்டால் இறைவனைப் பற்றிய எண்ணம் மனத்தில் தோன்றுகிறது. இறைவனிடம் அன்பு உண்டாகிறது. எங்கு அவனைப் பற்றிய சொற்பொழிவு நடக்கிறதோ, பேச்சு வார்த்தை நிகழ்கிறதோ, அங்கு அவன் எழுந்தருளுகிறான். அந்த இடம் புண்ணியத் தலமாக அமைகிறது. இப்படிப்பட்ட இடங்களைப் பார்க்கும் பொழுது நமது மனத்தில் இறைவனைப் பற்றிய எண்ணங்கள் எழுகின்றன.

"ஒரு பக்தன் 'பாப்லா' என்ற மரத்தைக் கண்டதும் பரவச நிலையை அடைந்தான்! அதற்குக் காரணம் அந்த மரத்தின் கட்டையைக் கொண்டுதான் விஷ்ணு ஆலயத்தின் தோட்டத்தைச் சரிப்படுத்த உதவும் மண்வெட்டியின் மரப்பிடி தயாரிக்கப்பட்டிருந்தது. மற்றொரு பக்தன் தனது குரு வசிக்கும் பகுதியைச் சேர்ந்த மக்களைக் கண்ட மாத்திரத்திலேயே பரவச நிலையை அடைந்துவிடுவான். அவ்வளவு குருபக்தி!

"ராதை மேகத்தையோ, நீலநிற ஆடையையோ, கிருஷ்ணனுடைய உருவப் படத்தையோ கண்டதும் கிருஷ்ணனுடைய எண்ணத்தில் மூழ்கிவிடுவாள். பித்துப் பிடித்தவளைப் போன்று 'எங்கே என் கிருஷ்ணன்?' என்று இங்குமங்கும் ஓடித் தேடி அழுவாள்."

ஜானகி கோஷால்: "பித்துப் பிடிப்பது நல்லதல்லவே!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என்ன அப்படிச் சொல்லுகிறாய்? அது என்ன சாதாரணப் பொருட்களை நினைப்பதால் ஏற்படும் பித்தா? இறைவனை இடைவிடாது எண்ணுவதால் ஏற்படுகிற பித்து இது! பிரேமைப்பித்து, ஞானப்பித்து என்ற வார்த்தைகளை நீ கேட்டதில்லையா?"

பிரம்ம சமாஜ பக்தர்: "இறைவனை எவ்வாறு அடையலாம்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனிடம் அளவற்ற பக்தி கொள்ள வேண்டும். நிலையானது எது, நிலையற்றது எது என்பதை இடைவிடாது பகுத்து அறிய வேண்டும். இறைவன் ஒருவன்தான் உண்மை; இந்த உலகம் பொய்; அரச மரம்தான் உண்மை; அதன் பழமோ தோன்றி மறைவது."

பிரம்ம சமாஜ பக்தர்: "காமம், வெகுளி முதலிய விரோதிகள் நம்மிடம் உள்ளனரே! என்ன செய்வது?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அந்த ஆறு விரோதிகளின் போக்கையும் இறைவனிடம் திருப்பிவிடு. ஆத்மாவோடு சேர்ந்து, களித்து, ஆனந்தம் அடை. இதுதான் காமம். இறைவனை அடையும் வழியில் நம்மைச் செல்லவிடாது தடுப்பவர்களிடம் கோபம் கொள். அவனை அடைய வேண்டும் என்ற பேராசை கொள். 'நான், எனது' என்று கூறவேண்டுமானால், கடவுளையே அதற்கு அடிப்படையாக்கிக்கொள். 'எனது இராமன், எனது கிருஷ்ணன்' என்று சொல்லிக்கொள். ஆணவமிருக்குமேயானால், அது விபீஷணனிடம் இருந்ததுபோல் இருக்கட்டும். 'நான் இராமனை வணங்குகின்றவன். அதனால் இந்தத் தலை வேறு எவரையும் வணங்காது' என்றான் விபீஷணன்."

பிரம்மசமாஜ பக்தர்: "எல்லாம் இறைவன் செயலாகுமானால், பாவத்திற்கு மட்டும் நான் எவ்விதம் பொறுப்பாளியாவேன்? அதுவும் அவன் செயல் அல்லவா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே): "துரியோதனன், 'ஹே ரிஷிகேச! என் மனத்தில் வீற்றிருப்பவரே! நீர் எவ்வாறு என்னை செய்விக்கின்றீரோ, அவ்வாறே நான் செய்கிறேன்' என்று கூறினான்.

'ஈசன்தான் செயல் புரிபவன்; நான் எவ்விதச் செயலும் புரிவதில்லை,' என்ற திடநம்பிக்கை இருக்குமேயானால், பாவச் செயல்கள் நடக்கமாட்டா. நாட்டியக் கலையை நன்கு பயின்ற ஒரு பெண் ஆடும்போது ஒருபொழுதும் தவறான அடி எடுத்து வைக்கமாட்டாள். உள்ளத் தூய்மை ஏற்படாவிட்டால், இறைவன் ஒருவன் இருக்கிறான் என்றத் திடமான நம்பிக்கை ஏற்படுவதில்லை."

பிறகு விழா மண்டபத்தில் கூடியிருக்கும் மக்களைப் பார்த்த வண்ணம் குருதேவர் பேசலானார்:

"இடையிடையே இவ்வாறு கூட்டமாகக் கூடி இறைவனைக் குறித்துப் பேசுவதும், அவனுடைய பெயரையும் புகழையும் பாடுவதும் மிகவும் நல்லது. ஆனால், இல்லறத்தில் உழல்பவனுடைய பக்தி தாற்காலிகமானது. நீண்ட நேரம் நிலைப்பதில்லை. நன்றாகச் சூடாக்கப்பட்ட இரும்பின்மேல் தண்ணீர்த் துளி விழுந்தால் அது எவ்வளவு நேரம் தங்கும்? ஒரு நொடியில் ஆவியாகி மறைந்துவிடும்."

அப்பொழுது பிரம்மசமாஜப் பிரார்த்தனை ஆரம்பமாயிற்று. பிரம்மசமாஜ பக்தர்கள் மண்டபத்தில் விழா மேடைக்கருகில் கூடியிருந்தனர். சில பிரம்மசமாஜப் பெண்கள் நாற்காலிகளில் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் கைகளில் பிரம்மசமாஜப் பாட்டுப் புத்தகங்கள் இருந்தன.

ஆர்மோனியம், பியானோ இவற்றின் இசையுடன் பிரம்ம சங்கீதம் எழலாயிற்று. குருதேவர் பாட்டைக் கேட்டு அளவிலா ஆனந்தமடைந்தார். வரவேற்பு, வணக்கம், பிரார்த்தனை என்றிவ்வாறு விழா துவங்கலாயிற்று. மேடைமீது அமர்ந்திருந்த பண்டிதர் வேத மந்திரங்களை ஓதத் தொடங்கினர்.

'ஓம் பிதா நோ அஸி. பிதா நோ போதி, நமஸ்தே அஸ்து, மா மா ஹிம்ஸீ :— நீ எங்கள் தந்தை. எங்களுக்கு நல்ல புத்தியைத் தருவாயாக. உனக்கு எங்கள் வணக்கம். எங்களை அழித்துவிடாதே!'

பிரம்மசமாஜ பக்தர்கள் பண்டிதருடன் ஒன்றாகச் சேர்ந்து ஓதினார்கள்.

ஓம் சத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம!
ஆனந்த ரூபம் அம்ருதம் யத்விபாதி.
சாந்தம் சிவமத்வைதம் சுத்தமபாபவித்தம்!

இப்பொழுது பண்டிதர்கள் துதிபாடத் துவங்கினர்.

ஓம் நமஸ்தே சதே தே ஜகத் காரணாய
நமஸ்தே சிதே சர்வ லோகாஸ்ரயாய......

துதி முடிந்ததும் பண்டிதர்கள் பிரார்த்தனை செய்தனர்.

அஸதோமா ஸத்கமய, தமஸோமா ஜ்யோதிர்கமய,
மிருத்யோர்மா அம்ருதம் கமய, ஆவிராவிர்ம ஏதி,
ருத்ரயத்தே தக்ஷிணம் முகம், தேனமாம் பாஹி நித்யம்.

துதி, பிரார்த்தனை முதலியவற்றைக் கேட்டு, குருதேவர் பரவசம் அடைந்தார். பின்னர் பண்டிதர் பிரசங்கம் நிகழ்த்தினர்.

உபாசனை முடிவடைந்தது. வந்திருந்த பக்தர்களுக்குப் பூரி, இனிப்பு முதலிய பிரசாதங்கள் வழங்க ஏற்பாடு நடைபெற்றுக்கொண்டிருந்தது. இதற்கிடையில் பல பிரம்மசமாஜ பக்தர்கள் கீழே தாழ்வாரத்திற்குச் சென்று சற்று ஓய்வெடுத்துக் கொண்டிருந்தனர்.

இரவு ஒன்பது மணி. குருதேவர் தட்சிணேசுவரத்திற்கு திரும்பிச் செல்ல வேண்டும். ஆனால், விழாவிற்கு ஏற்பாடு செய்தவர்கள் வந்திருந்த பக்தர்களை உபசரிப்பதில் ஈடுபட்டவர்களாக இருந்ததனால், குருதேவரை அடியோடு மறந்து விட்டனர். அவருக்கும் அவரோடு வந்தவர்களுக்கும் பிரசாதம் வழங்கிச் உபசரிக்க வேண்டும் என்பதை அவர்கள் மறந்து விட்டார்கள் போல் தோன்றுகிறது.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (ராக்கால் முதலியவர்களைப் பார்த்து) "என்னடா, யாரும் நம்மைக் கவனிக்க மாட்டார்கள் போலிருக்கிறதே! யாரும் நம்மைக் கூப்பிடவில்லையே!"

ராக்கால் : (கோபத்துடன்) "சுவாமி, வாருங்கள் தட்சிணேசுவரத்திற்குத் திரும்பிப் போய்விடலாம்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : *(சிரித்துக் கொண்டே)* "சற்றுப் பொறு. வண்டி வாடகை மூன்று ரூபாய் இரண்டணா. அதை யார் கொடுப்பது? கோபப்பட்டால் முடியாது. கையில் பணமில்லை. வெறும் கோபம் இருந்து என்ன பயன்? இந்த இரவில் எங்கே போய்ச் சாப்பிடுவது?"

நீண்ட நேரத்திற்குப் பிறகு சாப்பிட இலை போட்டிருப்பதாகச் செய்தி கிடைத்தது. பக்தர்கள் அனைவரையும் சாப்பிடக் கூப்பிட்டனர். இந்தக் கூட்டத்தில் குருதேவர், ராக்கால் முதலியவர்களுடன் இரண்டாவது மாடிக்கு உணவு உட்கொள்ளச் சென்றார். அக் கூட்டத்தில் குருதேவருக்கு உட்கார இடம் கிடைக்கவில்லை. கடைசியில் கஷ்டப்பட்டு ஒரு மூலையில் இடம் பிடித்தனர். ஆனால், அந்த இடம் அசுத்தமாக இருந்தது. ஒரு சமையற்காரி உணவு பரிமாற ஆரம்பித்தாள். குருதேவரால் அந்த உணவை உட்கொள்ள முடியவில்லை. சிறிது இனிப்பும், பூரியும் உட்கொண்டு எப்படியோ ஆகாரத்தை முடித்துக் கொண்டார்.

குருதேவர் கருணைக்கடல். வீட்டுச் சொந்தக்காரர்கள் சிறுவர்கள். 'இவர்கள் இறைவனது பூஜையைச் சரிவர நடத்தவில்லை' என்று குருதேவர் அவர்களிடம் கோபம் கொள்ளவில்லை. குருதேவர் அந்த வீட்டில் உணவு உட்கொள்ளாமல் போவாரானல், அது அவர்களுக்குத் துன்பமாக முடியும். மேலும் 'அவர்கள் இறைவனைக் குறித்தே இந்த பூஜைக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். ஆகவே, அதில் ஏற்பட்ட குறை

பாடுகளை நினைக்கக் கூடாது' என்று குருதேவர் கூறிக்கொண்டிருந்தார்.

உணவு முடிந்ததும் குருதேவர் வண்டியில் ஏறி உட்கார்ந்தார். இப்பொழுது வண்டி வாடகை கொடுப்பவர் யார்? வீட்டுச் சொந்தக்காரரைத் தேடிப் பிடிக்க முடியவில்லை. பல நாட்களுக்குப் பிறகு குருதேவர் இதை பற்றிப் பக்தர்களிடம் சிரித்துக் கொண்டே கூறினர்: "வண்டி வாடகையைக் கேட்கச் சென்றார்கள். முதலில் பணம் வெளியே வரவில்லை. கஷ்டப்பட்டு மூன்று ரூபாய் கிடைத்தது. மீதி இரண்டணு கொடுக்கவில்லை. அதைக் கேட்ட பொழுது, 'இது போதும். இதிலேயே சமாளித்துக் கொள்ளுங்கள்' என்றார்கள்."

## ஞாயிற்றுக்கிழமை, மே 13, 1883

கல்கத்தாவில் காசாரிபாடா என்னும் இடத்தில் ஹரிபக்தி பிரதாயினி என்ற சபையின் ஆண்டு விழாவிற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பக்தர்கள் பக்திப் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தனர். குருதேவர் அங்கே சென்றிருந்தார்.

கிருஷ்ணனின் பிருந்தாவன லீலையைக் குறித்துப் பாடல்கள் பாடப்பெற்றன. அந்தப் பாடல்களின் கருத்து:

சந்திராவளி என்ற இன்னொரு கோபியின் இல்லத்திற்குக் கிருஷ்ணன் சென்றது குறித்து ராதை கோபம் கொள்கிறாள். ராதையின் தோழிகள் அவளைப் பார்த்து 'நீ ஏன் கோபம் கொள்கிறாய்? கிருஷ்ணன் சுகமாக இருப்பதும் ஆனந்தமடைவதும் உனக்குப் பிடிக்கவில்லையா?' என்று கேட்கின்றனர். அதைக் கேட்டதும் ராதை 'கிருஷ்ணன் அவள் வீட்டிற்குச் செல்வதில் நான் கோபம் கொள்ளவில்லை. ஆனால், கிருஷ்ணனுக்கு எவ்விதம் சேவை செய்ய வேண்டும் என்பது அவளுக்குத் தெரியாது. ஆகவே, கிருஷ்ணன் ஏன் அங்கே செல்ல வேண்டும் என்று தான் கோபப்படுகிறேன்,' என்றாள்.

## ஞாயிற்றுக்கிழமை, மே 20, 1883

குருதேவர் கல்கத்தாவில் ராமச்சந்திரர் என்ற பக்தர் வீட்டிற்குச் சென்றிருந்தார். இங்கும் பக்திப் பாடல்கள் பாடப்பெற்றன. அந்தப் பாடல்கள் ராதை—கிருஷ்ணனின் பிரிவுத் துன்பத்தைப் பற்றியவையாக இருந்தன. ராதை தனது தோழிகளிடம் கூறுகிறாள்:

"சிறு வயதிலிருந்தே நான் கிருஷ்ணனைப் பார்க்க ஆசைப் பட்டேன். நாட்களை எண்ணியெண்ணி என் கைகளின் நகங்கள் கூடத் தேய்ந்துவிட்டன. ஒரு சமயம் அவர் எனக்கு ஒரு மாலை கொடுத்திருந்தார். இதோ பார்! அது வாடி உலர்ந்து விட்டது. இருந்தாலும் அதை நான் தூக்கி எறிந்து விடவில்லை.

"கிருஷ்ணனாகிய சந்திரன் இன்னும் தோன்றவில்லையே! ஏனோ? என்னுடைய கோபம் என்ற இராகுவிற்குப் பயந்து சந்திரன் மறைந்து விட்டானோ? ஐயோ! அந்தக் கிருஷ்ணன் என்ற கருமேகத்தை எப்பொழுது பார்ப்பேன்? இனிப் பார்க்க முடியுமா? எனது அருமைக் கிருஷ்ணனே! உன்னை நான் எனது மனங்குளிர ஒருபொழுதும் பார்க்க முடியவில்லையே! என்னிட மிருப்பதெல்லாம் இரண்டு கண்களே. அவைகள் இமைத்து, இமைத்து என் பார்வையைக் கெடுக்கின்றன. மேலும், கண் ணீர் கசிந்துகொண்டே இருப்பதால், என் அருமைக் கண்ணனைக் காண முடியவில்லை. அவனது கொண்டையி லுள்ள மயிலிறகோ மின்னலைப்போல் தோன்றிய அளவி லேயே மறைந்து விடுகிறது. கிருஷ்ணனுடைய கருமை நிறத்தைக் கண்ட மயில்கள் தங்கள் தோகையை விரித்து ஆனந்தமாக ஆடுகின்றன. என் ஆருயிர்த் தோழிகளே! என்னால் இனி உயிர் வாழ முடியாது. நான் இறந்த பிறகு என் உடலைத் தமால மரத்தின்மேல் வைத்து விடுங்கள். எனது உடலின்மேல் கிருஷ்ணனின் இனிமையான பெயரை எழுதுங்கள்".

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவனும் அவனது பெயரும் இணை பிரியாதவை. இரண்டும் ஒன்று தான். அதனால்தான் ராதை தன் உடம்பின்மீது கிருஷ்ணனுடைய பெயரை எழுது மாறு கூறுகிறாள். இராமனும் அவன் பெயரும் ஒன்றுதான்." என்று கூறியபடி குருதேவர் பரவசநிலை அடைந்தார். வைண வப் பாடகர் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தார். அடுத்த ஞாயிற்றுக்கிழமை தட்சிணேசுவரத்தில் இந்தப் பாடல்களை மீண்டும் பாடுவார். அதற்கடுத்த சனிக்கிழமை அதர்சென் என்ற பக்தரது வீட்டிலும் அவர் பாடுவதாக இருந்தது.

## ஞாயிற்றுக்கிழமை, மே 27, 1883

காலை சுமார் ஒன்பது மணி. தட்சிணேசுவர ஆலயம். குருதேவர் தமது அறையில் பக்தர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார். பக்தர்கள் ஒவ்வொருவராக வந்துகொண் டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: (ம- முதலிய பக்தர்களைப் பார்த்து) வெறுப்பு மனப்பான்மை நல்லதல்ல. சாக்தர்கள், வைணவர்கள், வேதாந்திகள் முதலானோர் ஒருவருக்கொருவர் வாதிடுகின்றனர். இது நல்லதல்ல. பத்மலோசன் என்பவர் ஒரு பெரிய பண்டிதர். ஒரு சமயம் சபையில் வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது. சிவன் பெரியவரா? பிரம்மா பெரியவரா? என்பதுதான் அங்கு நடந்த வாதம். பத்மலோசன் சரியான பதில் கொடுத்தார். 'எனக்கு யார் பெரியவர் என்று தெரியாது. நான் சிவனையும் சந்தித்ததில்லை பிரம்மாவையும் சந்தித்ததில்லை' என்றார். (எல்லோரும் சிரித்தனர்).

"இறைவனை அடைய வேண்டும் என்ற உள்ளத் துடிப்பு இருக்குமானால், எல்லா வழிகளாலும் அவனை அடையலாம். ஆனால் நிஷ்டை, அதாவது குறிப்பிட்ட ஒரு கடவுளிடம் பக்தி கொள்வது நல்லது. இந்த நிஷ்டா பக்தியை அவ்யபிசாரிணீ பக்தி என்பர். மாற்றமில்லாத பக்தி என்பது இதன் பொருள். ஒரு மரம் கிளைகள் இல்லாமல் நேராக மேல் நோக்கிச் செல்வது போன்றது நிஷ்டா பக்தி. மரம் பல்வேறு கிளைகளுடன் இருப்பது வியபிசாரிணீ பக்தி. கோபிகள் கிருஷ்ணனிடம் நிஷ்டாபக்தி கொண்டிருந்தனர். இவர்கள் பிருந்தாவனக் கிருஷ்ணனைத் தவிர, வேறு எதையும் பொருட்படுத்தியதில்லை. கழுத்தில் மஞ்சள் நிற மாலை அணிந்து தலையில் மயிலிறகு சூடிய இடைச் சிறுவன் கிருஷ்ணனையே அவர்கள் வணங்கினர். அரச கோலத்தில் கிருஷ்ணனைக் கண்டதும் கோபியர்கள் உடனே தங்களது முகத்தை மூடிக்கொண்டனர். 'இவன் யார்?' இவனுடன் பேசி நாம் விபச்சாரமடைந்தவர்களாகி விடுவோமோ' என்று அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டனர்.

"மனைவி கணவனுக்குச் செய்யும் சேவையும் நிஷ்டாபக்தியாகும். அவள் தனது மைத்துனனுக்கும் மற்ற உறவினர்களுக்கும் உணவு பரிமாறுகிறாள்; கை கழுவத் தண்ணீர் கொடுக்கிறாள் என்றாலும் கணவனிடம் அவள் கொண்டுள்ள அன்பும், உறவும் தனிப்பட்டவையாகும். இதுபோன்றே ஒருவனுடைய சமய வாழ்க்கையிலும் நிஷ்டை ஏற்படுகிறது. அதற்காக மற்ற சமயங்களைத் தூற்ற வேண்டும் என்பதில்லை. மாறாக மற்ற சமயத் தலைவர்களுடன் இனிய முறையில் நடந்துகொள்ள வேண்டும்."

பின்னர் குருதேவர் கங்கையில் நீராடிவிட்டுக் காளிதேவியைத் தரிசிக்கச் சென்றார். ம-வும் உடன் சென்றார். குருதேவர் தேவியின்முன் அமர்ந்து அவளது திருப்பாதங்களில் மலர்களை இட்டார். இடையிடையே தம் தலைமீதும் மலர்களை வைத்துக் கொண்டார். பிறகு தியானத்தில் ஆழ்ந்தார்.

நீண்ட நேரத்திற்குப் பிறகு குருதேவர் எழுந்து நின்றார். பரவச நிலையில் ஆனந்தம் மேலிட ஆடத் துவங்கினார். தேவியின்பெயரை உச்சரித்தபடியே ஆடலானார். இடை இடையே 'அன்னையே! ஆபத்தைப் போக்குபவளே! ஆபத்தைப் போக்குபவளே! உடல் தரித்தாலே துன்பங்கள்!' என்று மொழிந்தார்.

உடல் தரித்தாலே துன்பங்கள்தாம். அதனால்தான் ஜீவர்கள் துன்பத்திலிருந்து விடுபட 'விபத் நாசினி', ஆபத்தைப் போக்குபவள் என்ற மந்திரத்தை மனம் விட்டு உச்சரிக்குமாறு நமக்குக் கற்பிக்கிறாரோ?

குருதேவர் தம் அறையின் மேற்குப் பகுதியிலுள்ள தாழ்வாரத்தில் வந்து உட்கார்ந்தார். இன்னும் பரவச நிலையிலேயே அவர் இருக்க, அருகில் ராக்கால்,ம-, நகூட் வைஷ்ணவர் முதலியோர் இருந்தனர். இருபத்தெட்டு, இருபத்தொன்பது வருடங்களாக நகூட் வைணவர் குருதேவரை அறிவார். கமார்புகூரிலிருந்து கல்கத்தாவிற்கு வந்து ஜாமாபுகூரில் தங்கி, பல இல்லங்களுக்குச் சென்று பூஜை செய்து வந்த காலத்திலிருந்தே குருதேவர் நகூட் வைஷ்ணவரை அறிவார். இவருக்கு ஒரு கடை இருந்தது. குருதேவர் இந்தக் கடைக்கு அடிக்கடி சென்று அவருடன் பேசி மகிழ்வார். ஒவ்வொரு வருடமும் பெனேடி என்ற இடத்தில் இராகவ பண்டிதரின் திருவிழாவிற்கு வரும்போதெல்லாம் நகூட் குருதேவரைச் சந்திப்பார். நகூட் நல்ல வைஷ்ணவ பக்தர். அடிக்கடி இவரும் விழாக் கொண்டாடுவார். ம-வின் வீட்டிற்கு அருகே தான் நகூட் வசித்தார். ஜாமாபுகூரில் இருந்த காலத்தில் குருதேவர் கோவிந்த சட்டர்ஜி என்பவரின் வீட்டில் வசித்தார். அந்தப் பழைய வீட்டை நகூட் ஒரு சமயம் ம-விற்குக் காட்டினார்.

பரவச நிலையில் குருதேவர் பாடினார் :

ஆனந்த மயமான அன்னையே, காளியே
அரனுளம் கவர்ந்த தேவீ!

அறிவுதடு மாறிடும் மகிழ்விலுல் உன்கைகள்
கொட்டிநீ ஆடுகின்றாய்!

தான் அந்த மில்லாத ஆதிகா ரணி! சூன்ய
ஆடையே புனேந்து கொண்டாய்!

சந்திரன் அவனையுன் புருவத்தின் மீதிலே
தக்வுறச் சூடி நின்ருய்!

நீணிலம் உருவாகும் முன்னமே நீஎங்கு
தலேகளின் மாலே கொண்டாய்?

நீ அல்ல வோ இங்கு அசைகின்ற பொருட்களே
நிதம் அசைத் தாட்டு கின்ருய்!

ஏனென்று கேளாது நின்கரப் பொம்மைகள்
என்றுயாம் வாழு கின்ருேம்!

எந்தவிதம் எம்மைநீ ஆட்டிவைத் திடுவையோ
அந்தவிதம் ஆடுகின் ருேம்!

எங்களே எவ்வாறு பேசவைத் திடுவையோ
அவ்வாறு பேசு கின்ருேம்!

எனினும்நெஞ் சமைதியே இல்லாது வாழ்கின்ற
நற்கமலா காந்தன் உன்னேப்

பொங்கி வரும் அன்புடன் வைதுகொண் டேசில
வார்த்தைகள் புகலு கின்ருன்;

பொலிவுடன் மின்னிடும் நின்னுடை வாளினல்
புத்தியில் கருதி டாது

பங்கமுற என்னுடைப் பண்பறம் தன்னேயும்
பாவமும் கொன்று விட்டாய்!

பரிவருளும் அன்னேயே மறுபடியும் எங்களேப்
பாலித்து நிற்பவள் நீ!

அதை அடுத்து:

தங்குமிட மாகமுக் குணங்களும் உன்றனேச்
சார்ந்திடப் பரம்க டந்தாய்!

தாயுனது நற்கருணே ஏழைகட் கருளுவாய்
என்பதை நான நிகுவேன்.

துன்பங்கள் வந்துற்ற வேளேயில் யாவையும்
துடைத்துநீ போக்கி வைப்பாய்!

தூயநற் சந்தியா, காயத்ரிஆகஇப்
புவியினேத் தாங்கி நிற்பாய்!

தண்ணீரில் தரையினில் அனேத்துக்கும் மூலத்தில்
சகலநெஞ் சினிலும் உள்ளாய்!

தாயுன்னே அன்றியோர் துணேயுமே இல்லார்க்குத்
தக்கதுணே யாயி ருப்பாய்!

என்னிலே வாழ்கிருய்! இப்பெரிய பூமியில்
இருக்குமுயிர் எதிலு முள்ளாய்!

எழில்நடம் ஆடிடும் சிவன் மனம் கொள்ளையிட்
டென்றும் நிலவு கின்றாய்!

கண்ணிலே தெரிந்திடும் நல்லுருவம் எய்தி நீ
காட்சியே தந்த போதும்

காணாத பேருண்மை யாகவே உள்ளனே,
காளியே! வாழி தாயே!

குருதேவர் தேவியைக் குறித்து இன்னும் பல பாடல்களைப் பாடினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: (பக்தர்களிடம்) "வாழ்க்கையின் துன்பங்களைப் பற்றி இல்லறத்தாரிடம் கூறுவது நல்லதல்ல. ஆனந்தம் வேண்டும். ஏழை எளியோர்களால் இரண்டு நாட்கள் கூடப் பட்டினி இருக்க முடியும். ஆனால், உணவு உட்கொள்வதில் ஒரு சிறிது தாமதம் ஏற்பட்டாலும் உடல்நிலை எவர்களுக்குப் பாதிக்கப்படுகிறதோ, அவர்களிடம் கஷ்டங்களையும் துன்பச் செய்திகளையும் கூறுவது நல்லதல்ல. 'எப்பொழுதும் பாவம், பாவம் என்று சொல்லிக்கொண்டிருப்பது? ஆனந்தமாக இரு' என்று வைஷ்ணவ சரணர் கூறுவது உண்டு."

குருதேவர் மதிய உணவிற்குப்பின் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த போது மனோகர்கோஸ்வாமி என்ற பிரபல பாடகர் வந்து சேர்ந்தார்.

கோசுவாமி, கௌராங்கரது பக்தியைப் பற்றியும் பிருந்தாவன லீலை பற்றியும் ஒரு காலட்சேபம் நிகழ்த்தினார். அதைக் கேட்ட சிறிது நேரத்திற்கெல்லாம் குருதேவர் ராதையின் மனோநிலையில் மூழ்கினார். கோசுவாமி பாடினார்:

கைகட்டிக் கொண்டு—ஆழ்ந்த எண்ணம்
இன்று ஏன் இப்படிப்பட்ட நிலை— ராதையின்
நிலையில் மனது மூழ்கி இருக்கிறது போலும்.

கோசுவாமி மேலும் பாடினார்:

வீட்டின் வெளியில் அடிக்கடி வந்து பார்க்கிறாய்.
மனத்தில் என்ன அங்கலாய்ப்பு! பெருமூச்சு! கதம்ப
வனத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறாய்
(ஏன் இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது?)

பாட்டின் இந்த வரியைக் கேட்டதும் குருதேவர் மகாபாவத்தில் ஆழ்ந்தார். உடலின்மீது அணிந்திருந்த சட்டையைக் கிழித்தெறிந்தார்.

பாடகர் தொடர்ந்து பாடினர்:

உனது உடல் குளிர்ச்சியாய் இருக்கிறது.
உடலைத் தொட்டால், உணர்ச்சி யற்று இருக்கிறது.

குருதேவரின் உடல் சிலிர்த்தது. குருதேவர் (கேதாரைப் பார்த்து) அதே ராதையின் பாவத்தில், அதே ஸ்வரத்தில்,

'எனதாருயிர் கிருஷ்ணனைக் கொண்டு வாருங்கள்.
நீங்கள் என்னுடைய தோழியரல்லவா!
என்னை அங்கு எடுத்துச் செல்லுங்கள்.
நான் உங்களுக்கு என்றும் அடிமையாக இருப்பேன்' என்றார்.

பாடகர் குருதேவரின் மகாபாவ நிலையைக் கண்டு ஆச் சரியமடைந்தார். 'பொருளாசையை என்னிடமிருந்து அகற்ற மாட்டீர்களா?' என்று பாடகர் கூப்பிய கரங்களுடன் குரு தேவரை வேண்டினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: (சிரித்துக் கொண்டே) "முதலில் இடத்தைப்பிடித்துக் கொண்டு அதன் பிறகு நகரத்தைச் சுற்றி பார்க்கச் சென்ற பக்தனை ஒத்தவர் நீர். நீர் மிகவும் இனிமை யான மனிதர். பல நல்ல கருத்துக்களை உம்பாடலில் பாடினீர்."

பாடகர்: "நான் சர்க்கரை மூட்டையைச் சுமக்கும் எருது. சர்க்கரையின் இனிப்பை எங்கே சுவைத்தேன்?"

பாடல் தொடர்ந்து நடந்தது. ராதையின் மனோநிலையை வருணித்துப் பாடகர் பாட ஆரம்பித்தார் :

'குயில் கூட்டங்கள் பாடுகின்றன. குயிலின் குரல் வஜ்ராயுதத்தின் பயங்கர ஓசையாக ராதைக்குத் தோன்றியது. ஆகவே தான் ஜைமினியின் பெயரை நினைத்துக் கொண்டாள். மேலும், 'தோழி ,கிருஷ்ணனைக் காணாமல் இந்த உயிர் உடலில் தங்காது இந்த உடலைத் தமால மரத்தின் கிளையில் வைத்துவிடு' என்று தழுதழுத்த குரலில் கூறினாள்.

கடைசியாக, ராதை கிருஷ்ணனை அடையும் பாட்டைப் பாடிக் காலட்சேபத்தை முடித்தார் பாடகர்.

**சனிக் கிழமை, ஜூன் 2, 1883**

பலராம், அதர், இராமச்சந்திர தத்தர் முதலானோர் தத்தம் வீடுகளுக்கு வருகை தருமாறு குருதேவரை அழைத்திருந்தனர். அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி குருதேவர் தட்சிணேசு வரத்திலிருந்து கல்கத்தாவிற்கு வந்தார். முதலில் பலராமின்

வீட்டிற்கும் பிறகு அதர் வீட்டிற்கும் கடைசியாக இராமச் சந்திர த்த்தர் வீட்டிற்கும் செல்வதாக இருந்தார்.

குருதேவர் வண்டியில் வந்துகொண்டே உடனிருந்த ராக் கால், ம-முதலியவர்களிடம்: "இதோ பாருங்கள். இறைவனிடம் அன்பு பிறந்தால் சூரியனுடைய வெப்பத்தினுல் குளத்துத் தண்ணீர் வற்றி விடுவதுபோல் பாவம், தவறு எல்லாம் பறந்து ஓடிவிடுகின்றன.

"பொருட்பற்று, அதாவது காமினி காஞ்சனங்களில் ஆசை வைப்பது கூடாது. பொருட் பற்றுள்ளவன் துறவு பூண்டாலும் பயனில்லை. இது வாந்தியெடுத்ததை மீண்டும் எடுத்து உட்கொள்வதற்குச் சமமாகும்!"

சிறிது நேரம் சென்றதும் குருதேவர் மீண்டும் வண்டியில் இருந்தபடியே பேசத் தொடங்கினுர்:"பிரம்மஞானிகள் உருவக் கடவுளை ஒப்புக்கொள்வதில்லை. (சிரித்துக் கொண்டே) நரேந்திரன் உருவக்கடவுளைப் 'பொம்மை' என்றும், என்னைக் குறித்து 'அவர் இன்னமும் காளி கோயிலுக்குப் போகிறுர்' என்றும் கேலி செய்கிறுன்."

வண்டி பலராமருடைய வீட்டை அடைந்தது. அங்கு வந்த அளவில் குருதேவருக்கு திடீரென்று தெய்விகப் பரவசம் உண்டாயிற்று.'மனிதர்களாகவும், உலகமாகவும் இருப்பது அவனே. அவனே மனித உருவத்தில் நடமாடுகிறுன்' என்பதாகப் பார்த்தார் போலும்! அன்னையிடம் பின்வருமாறு முறையிடத் துவங்கினுர்:

"அன்னையே! இது என்ன? ராக்கால் முதலிய சிறுவர்கள் மூலம் என்ன காட்டுகிறுய்? உருவங்கள் மறைகின்றனவே.. போதும், நிறுத்து. மனிதன் என்பது வெறுந்தலையணை உறை தானே? சைதன்யம் (உயிர்) உன்னுடையதல்லவா!

"அன்னையே, நவீன பிரம்மஞானிகள் உனது பேரானந்தத்தைப் பெறவில்லை. கண்களில் ஒளி இல்லை. முகம் வாடியிருக்கிறது. பிரேம பக்தி உண்டாகாவிட்டால் எத்தகைய பயனுமில்லை!

"அம்மா! எனக்கு என்னைப் போன்ற ஒருவனைத் துணைவனுகக் கொடு' என்று ஒருமுறை உன்னிடம் முறையிட்டேன். அந்த வேண்டுகோளுக்கு இரங்கி ராக்காலைக் கொடுத்திருக்கிறுய் போலும்!"

குருதேவர் பின்னர் அதரின் வீட்டிற்குச் சென்றார். அப்போது மனோகர்கோசுவாமி பாடுவதற்குத் தயாராக இருந்தார். பல பக்தர்களும் அண்டை வீட்டார்களும் அதரின் வீட்டுத் தாழ்வாரத்தில் வந்து கூடியிருந்தனர். குருதேவரைத் தரிசித்து மகிழவே இவர்கள் வந்திருந்தனர். 'குருதேவர் பகவானைப் பற்றி ஏதாவது பேசுவார். அதைக் கேட்கலாம்' என்று எல்லோரும் ஆவலோடு எதிர்பார்த்தவண்ணமிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: (பக்தர்களை நோக்கி) "உலக வாழ்க்கை நடத்துவது, வீடுபேற்றை அடைவது இந்த இரண்டும் இறைவனது விருப்பப்படி நடப்பன. நம்மை வாழ்க்கையாகிய அறியாமையில் வைத்திருப்பதும் அவனே. நம்மைத் தன்பால் அழைத்து முக்தி அளிப்பதும் அவனே. குழந்தை விளையாடச் சென்றுள்ளது. சாப்பிடும் நேரம் வந்ததும் அன்னை அதை அழைக்கிறாள். அதுபோல அவள் முக்தி அளிக்கும் பொழுது ஒருவனுக்குச் சாதுக்களின் சேர்க்கையை உண்டுபண்ணுகிறாள். தன்னை அடைய மனம் துடிதுடிக்கும்படிச் செய்கிறாள்."

பக்கத்துவீட்டுக்காரன் : "சுவாமி, இறைவன் எப்படிப்பட்ட மனத்துடிப்பு வருமாறு செய்கிறான்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஒரு குமாஸ்தாவிற்கு வேலை போய்விட்டால் எப்படி மனம் துடிதுடிக்குமோ அத்தகையத் துடிப்பு ஏற்படவேண்டும். தினமும் வேலைதேடி அவன் பல அலுவலகங்களுக்கு ஏறி இறங்குவான். ஊர் முழுதும் சுற்றிச் சுற்றி வருவான். 'வேலை காலி இருக்கிறதா?' என்று மீண்டும் மீண்டும் சென்று கேட்பான். மனம் அங்கும், இங்கும் அலையும்; துடிதுடிக்கும். அதுபோல பக்தனும் இறைவனை எப்படி அடையலாம் என்று ஏங்கி நிற்பான்.

"சிலர் மீசையை முறுக்கிவிட்டுக்கொண்டு, கால்மேல் கால் போட்டுக்கொண்டு அட்டகாசமாக உட்கார்ந்து கொண்டிருப்பார்கள். இவர்களால் இறைவனை அடையமுடியாது."

பக்கத்துவிட்டான் : "சாதுக்களது சேர்க்கையினால் இந்த மனத்துடிப்பு ஏற்படுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆம். கண்டிப்பாக ஏற்படும். ஆனால், வஞ்ச மனப்பான்மை உடையவனுக்கு ஏற்படாது. எப்படியெனில், சாதுக்களிடம் இருக்கும் 'கமண்டலம்' என்னும்

தண்ணீர்ப் பாத்திரமும் அவர்களுடன் நாட்டின் நான்கு மூலை களுக்கும் யாத்திரையாகச் சுற்றி வருகிறது. இருந்தாலும் அதன் இயல்பு மாறுவதில்லை. அதனுடைய கசப்புத்தன்மை போவ தில்லை. முன்பு இருந்ததுபோல் கசப்பாகத்தான் இருக்கிறது. அதுபோல!"

கதாகாலட்சேபம் ஆரம்பமாயிற்று. கோசுவாமி பிருந்தா வன லீலையைப் பற்றிய பாடல்களைப் பாடத் துவங்கினர்.

ராதை கூறுகிருள் : "தோழி, என் உயிர் போகிறது. என் கிருஷ்ணனை எனக்குக் கொண்டுவந்து கொடு!"

தோழி : "ராதையே! கிருஷ்ணன் என்ற மேகம் மழையைப் பொழிந்திருக்கும். ஆனுல், கோபம் என்ற உனது காற்று அதை அடித்துக்கொண்டு போய்விட்டது. நீ கிருஷ்ணனுடைய ஆனந்தத்தில் பங்கு கொள்பவளல்ல. கொள்பவளாயின், நீ ஏன் கோபம் கொள்கிருய்?"

ராதை : "தோழி, கோபம் என்னுடையதல்ல. கோபம் யாருக்குச் சொந்தமோ, அவரோடு அது சென்று விட்டது!"

பிறகு லலிதா என்ற தோழி ராதையின் சார்பாய்ப் பரிந்து பேசியதைப் பாடகர் பாடினுர். அதை அடுத்துத் தோழிகள் ராதா குண்டத்திற்கு அருகில் கிருஷ்ணனைத் தேடத் தொடங் கியது— யமுனைக் கரையில் கிருஷ்ணனைக் கண்டது—ஸ்ரீதாம், சுதாம், விருந்தை முதலியோருடன் கிருஷ்ணன் பேசியது—யோக நிலையில் கிருஷ்ணன், ஜடிலன் உரையாடல்—ராதை பிச்சை அளித்தல்—ராதையின் கைபார்த்து யோகிகள் குறிசொல்லுதல்—காத்யாயினி பூஜைக்கு வேண்டிய ஏற்பாடு கள் இப்படியாகப் பல பாடல்களைப் பாடிப் பாடகர் கதா காலட்சேபத்தை முடித்தார்.

பின்னர் குருதேவர் பக்தர்களைப் பார்த்துப் பேசினுர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "தோழியர்கள் காத்யாயினி பூஜை செய்தனர். எல்லோரும் மகாமாயைக்கு அடங்கியவர்கள். அவதார புருடர்கள்கூட மாயையின் துணையைக் கொண்டே தங்களது லீலைகளைப் புரிந்திருக்கின்றனர். ஆகவே, அவர்கள் ஆத்யாசக்தியாகிய மகாமாயையை வழிபட்டனர். இராமர்

சீதைக்காக எவ்வளவு அழுதார்! ஐம்பூதங்களில் அகப்பட்டுக் கொண்டு பிரம்மம் எப்படி அழுதது பார்த்தீர்களா?

"இரண்யாட்சனைக் கொன்றுவிட்ட பிறகும் விஷ்ணு பன்றி அவதாரத்தில் குழந்தை குட்டிகளைப் பெருக்கிக்கொண்டு இன்பத்தில் மூழ்கிக்கிடந்தார்! தேவர்கள் கலந்தாலோசித்து சிவபெருமானை அந்த இடத்திற்கு அனுப்பினர். சிவன் பன்றியாக இருக்கும் விஷ்ணுவிடம் சென்று, 'நீ ஏன் உன் உண்மைநிலையை மறந்து இருக்கிறாய்?' என்று கேட்டபோது, 'பன்றியாக இப்போது நான் சுகமாக இருக்கிறேன்' என்று விஷ்ணு பதில் கூறினார். சிவன் தனது சூலத்தினால் பன்றியின் உடலைக் கிழித்தார். அப்பொழுது விஷ்ணு அந்தப் பன்றியின் உடலிலிருந்து சிரித்துக்கொண்டே வெளியே வந்து தமது இருப்பிடமான வைகுண்டத்திற்குச் சென்றார்."

இராமச்சந்திரரின் வீடு சிமூலியா பகுதியில் உள்ள மதுராயர் என்ற சந்தில் இருந்தது.

இராமச்சந்திரர் மருத்துவக் கல்வி பயின்றவர். நாளடைவில் அவர் மருத்துவக் கல்லூரியில் உதவி இரசாயன பரிசோதகர் ஆனார். அத்துடன் விஞ்ஞானக் கழகத்தில் இரசாயனம் போதித்துவந்தார். அவர் தாமே சம்பாதித்த பணத்தில் வீடு கட்டிக்கொண்டு வாழ்ந்தார். அந்த வீட்டிற்கு ஏற்கெனவே பல தடவைகள் குருதேவர் விஜயம் செய்திருந்தார். அது காரணமாக பக்தர்கள் மிகவும் புனிதம் வாய்ந்ததாக அந்த இடத்தைக் கருதலாயினர்.

இராமச்சந்திரர் ஸ்ரீகுருதேவரின் அருளாசியினால், உலக வாழ்க்கையைப் பற்றற்ற முறையில் நடத்துவதற்கு முயற்சி செய்துவந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் இராமச்சந்திருடைய நல்லியல்புகளை வாயாரப் புகழ்வது வழக்கம்.

"ராம், தமது வீட்டில் பக்தர்கள் தங்குவதற்கு இடம் தருகிறார். அவர்கட்குத் தொண்டுகள் செய்கிறார். அவருடைய வீடு பக்தர்கள் ஒன்றுகூடும் நல்லதோர் இடமாக இருந்து வருகிறது. நித்தியகோபால், லாட்டு, தாரக் (சுவாமி சிவானந்தர்) ஆகியோர் ஒரு விதத்தில் இராமச்சந்திருடைய வீட்டினர் போன்றே (பல நாட்களாக) வசித்து வருகின்றனர். இராமச்சந்திருடைய வீட்டில் தினந்தோறும் நாராயண சேவை (பக்தர்களுக்கு உணவிடுவது) நடந்து வருகிறது" என்று குருதேவர்

இராமச்சந்திரரைப் பற்றிச் சிறப்பித்துக் கூறுவார். வைசாகப் பூர்ணிமை தினமான அந்த நன்னாளில் பூஜையில் கலந்து கொள்ளும் பொருட்டு குருதேவரைத் தமது வீட்டுக்கு இராமச்சந்திரர் அழைத்திருந்தார். அநேகமாக ஒவ்வொரு வருடமும் அதே நாளில். குருதேவரையும் மற்றும் பல பக்தர்களையும் அவர் தமது வீட்டிற்கு அழைத்து ஒரு திருவிழாவைப் போன்று விமரிசையாகக் கொண்டாடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். இராமச்சந்திரருடைய உற்றார் உறவினர்களும் சீடர்களும் இன்றும் அந்த நாளை விமரிசையாகக் கொண்டாடி வருகிறார்கள்.

அன்று குருதேவரின் வருகையைப் பெரியதொரு விழாவாகக் கொண்டாட ராம் ஏற்பாடு செய்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணதேவர் தமது வீட்டுக்கு வரும்போது, ஸ்ரீமத் பாகவதம் சொல்லப்படுவதை அவர் கேட்க வேண்டும் என்பதற்காக, அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்திருந்தார்.

இராமச்சந்திரருடைய வீட்டின் சிறிய தாழ்வாரத்தில் ஸ்ரீமத் பாகவதம் சொல்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த இடத்தை நன்கு அலங்கரித்திருந்தார்கள். அங்கிருந்த ஒரு சிறிய மேடைமீது பாகவத பண்டிதர் அமர்ந்திருந்தார். அரிச்சந்திர மகாராஜாவின் கதையைச் சொல்வதாக ஏற்பாடு. பலராமின் வீட்டிற்கும், அதருடைய வீட்டிற்கும் சென்றுவிட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் அப்போது அங்கு வந்து சேர்ந்தார். குருதேவரைக் கண்டதும் இராமச்சந்திரர் விரைந்து சென்று வணங்கி, அவருடைய பாததூளியைச் சிரசில் தரித்துக்கொண்டார். பிறகு குருதேவரைத் தம்முடன் அழைத்துச்சென்று மேடையின் முன்னால் ஏற்கனவே குருதேவருக்காகப் போடப்பட்டிருந்த இருக்கையில் அமரச் செய்தார். பக்தர்கள் பலர் குருதேவரைச் சுற்றி அமர்ந்துகொண்டனர். ம-வும் அருகில் வந்து அமர்ந்தார்.

பாகவத பண்டிதர் அரிச்சந்திர மகராஜனின் கதையைக் கூறத் தொடங்கினார்.

விசுவாமித்திர முனிவர் மன்னனிடம் சொல்கிறார் :

"அரசே! கடல் சூழ்ந்த பூமி முழுவதையும் நீங்கள் எனக்குத் தானமாகக் கொடுத்து விட்டீர்கள். எனவே, இந்த உலகில் உங்களுக்கு இனிமேல் இடம் கிடையாது, வேண்டுமானால்

சிவபெருமானுக்குச் சொந்தமான காசி க்ஷேத்திரத்தில் நீங்கள் தங்கியிருக்கலாம் புறப்படுங்கள். உங்களையும், உங்கள் மனைவி சந்திரமதியையும், மகன் லோகிதாசனையும் நான் காசி க்ஷேத்திரத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்கிறேன். அங்கே சென்று நீங்கள் எனக்குத் தரவேண்டிய தட்சிணையைச் சம்பாதித்துக் கொடுங்கள்". இவ்விதம் சொல்லிவிட்டு அரிச்சந்திரன், சந்திரமதி, லோகிதாசன் ஆகியோரை அழைத்துக் கொண்டு விசுவாமித்திரர் காசி நோக்கிப் பயணம் செய்தார். காசியை அடைந்ததும் அவர்கள் அனைவரும் காசி விசுவநாதரை வணங்கினார்கள்."

காசி விசுவநாதரைத் தரிசித்த வரலாறு சொல்லப்பட்டவுடனே, குருதேவர் ஒரேயடியாகத் தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்தார். அந்த நிலையில் அவர் 'சிவ, சிவ' என்று உச்சரித்தார். ஆனால், பரவச நிலையில் இருந்தது காரணமாக அவரால் சிவநாமத்தைத் தெளிவாக உச்சரிக்க இயலவில்லை.

பாகவத பண்டிதர் மேலே தொடர்ந்தார்.

"காசிக்குச் சென்ற பிறகும், அரிச்சந்திர மன்னனால் தட்சிணையைக் கொடுக்க முடியவில்லை. எனவே, சந்திரமதியை ஒரு அந்தணனுக்குப் பணிப்பெண்ணாக விற்று விட்டான். இளவரசன் லோகிதாசனும் தாயுடன் சென்றான்".

ஒருநாள் அந்த எஜமானரின் வீட்டில் லோகிதாசன் பூப் பறித்துக் கொண்டிருந்த போது, அவனைப் பாம்பு தீண்டிய வரலாற்றைப் பாகவதர் விரிவாகக் கூறத் தொடங்கினார்.

"இருள் சூழ்ந்த அந்த நள்ளிரவில் குழந்தை இறந்துபோய் விட்டான். ஈமக்கடன் செய்வதற்கு ஒருவரும் இல்லை. அந்தண எஜமானராகிய கிழவரோ இன்னும் படுக்கையைவிட்டு எழுந்திருக்கவில்லை. சந்திரமதி தன்னந்தனியளாக மகனுடைய உடலை கைகளில் ஏந்திக் கொண்டு மயானத்தை நோக்கிச் சென்றாள். மீண்டும் மீண்டும் மேகம் இடிஇடித்து, முழங்கிக் கொண்டிருந்தது. காரிருளைப் பிளந்துக் கொண்டு திடீர் திடீரென்று மின்னல்கள் தோன்றி மறைந்தன. இந்தப் பயங்கரச் சூழ்நிலையில் பெரிதும் பயந்தவளாக, மகனை இழந்த சோகத்தில் மூழ்கியவளாகச் சந்திரமதி அழுதுகொண்டே மயானத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள்.

"விசுவாமித்திரருக்குத் தட்சிணை செலுத்தவேண்டிய பணம் முழுவதும் சம்பாதிக்கப்படாமலேயே இருந்தது. ஆகவே, அரிச்சந்திர மகாராஜா தம்மையே மயானம் காக்கும் வெட்டியான் ஒருவனுக்கு விற்றார். இப்போது மன்னர் வெட்டியானாக மயானத்தில் வேலை பார்த்துவந்தார். மயானத்தில் இருந்துகொண்டு பிணங்களை எரிப்பதற்கு உரிய தொகையை வசூல் செய்வதும், அப்படி வசூல் செய்யப்பட்ட பிணங்களை மட்டுமே எரிப்பதும் அவருடைய இப்போதைய தொழில். மயானத்தில் பல பிணங்கள் தகதகவென்று எரிந்துகொண்டிருந்தன. பல பிணங்கள் எரிந்து சாம்பலாகி யிருந்தன. அந்தக் காரிருளில் மயானம் பயங்கரமாகக் காட்சி யளித்துக்கொண்டிருந்தது. சந்திரமதி அந்த இடத்தை அடைந்து அழுது புலம்பினாள்."

சந்திரமதி மயானத்தில் கதறி அழுத வருணனையைக் கேட்கும் யாருடைய இதயம்தான் உருகாமல் இருக்கும்? பாகவதத்தைப் பண்டிதர் தத்ரூபமாக விளக்கிக்கொண்டிருந்த தைக் கேட்டுவந்த பக்தர்கள் உணர்ச்சிவசப்பட்டு அழலா யினார்.

அப்போது குருதேவர் என்ன செய்துகொண்டிருந்தார்? பண்டிதர் சொல்லும் விளக்கங்களை உறுதி கலையாமல் நிதா னத்தோடு கேட்டுக்கொண்டிருந்தார். ஒரே ஒரு சமயத்தில் மட்டும் அவருடைய விழியோரத்தில் கண்ணீர் துளிர்த்தது. அதை அவர் துடைத்துக்கொண்டார்.

இறுதியாக, விசுவாமித்திரர் வருவது, லோகிதாசன் உயிர்ப் பெற்றெழுவது, அனைவரும் சேர்ந்து காசி விசுவநாதரைத்தரிசிப் பது, அரிச்சந்திரன் மீண்டும் அரசாட்சியைப் பெறுவது ஆகிய வற்றை விளக்கமாகச் சொல்லி, பாகவதர் கதையை முடித்தார்.

மேடையின்முன் அமர்ந்திருந்த குருதேவரும் நீண்ட நேரம் பாகவதக் கதையை ஒன்றுவிடாமல் கேட்டுக்கொண்டி ருந்தார். அரிச்சந்திரன் கதை சொல்லி முடித்த பிறகு குரு தேவர் வெளியே இருந்த அறைக்குச் சென்று அமர்ந்துகொண் டார். அவரைச் சுற்றிலும் பக்தர்கள் வந்து குழுமினார்கள். பாகவத பண்டிதரும் குருதேவரின் அருகில் வந்து உட்கார்ந் தார். குருதேவர் பாகவத பண்டிதரிடம், 'உத்தவரின் உரை யாடலைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள்' என்று கேட்டுக் கொண்டார். அதற்கிணங்கப் பாகவதர் சொல்ல ஆரம்பித்தார்.

பாகவத பண்டிதர்: "உத்தவர் பிருந்தாவனத்திற்கு வந்தார். அப்போது அவரைத் தரிசிப்பதற்காகப் பிருந்தாவனத்து இடைச்சிறுவர்களும் கோபியரும் கூட்டமாக விரைந்தோடி வந்தார்கள். அனைவரும் அவரிடம், "ஸ்ரீகிருஷ்ணர் எப்படி இருக்கிறார்? அவர் எங்களை மறந்தேபோய்விட்டாரா? அவருக்கு எங்களுடைய பெயராவது நினைவிருக்கிறதா?" என்று பேராவலுடன் சரமாரியாகக் கேள்விகளைத் தொடுத்தனர். அவ்விதம் கேள்விகளைக் கேட்டுக்கொண்டே வந்த சிலர் கூடவே அழுதார்கள். வேறு சிலர் உத்தவரை அழைத்துச் சென்று பிருந்தாவனத்தின் பல இடங்களையும் அவருக்குக் காட்டிக்கொண்டே, "இந்த இடத்தில்தான் ஸ்ரீகிருஷ்ணர் கோவர்த்தன மலையைத் தூக்கிப் பிடித்தார். இந்த இடத்தில்தான் அவர் தேனுகாசுரனை வதம் செய்தார். இந்த இடத்தில்தான் சகடாசுரனைக் கொன்றார். இந்தப் புல்வெளியிலேதான் மாடுகளை மேய்த்தார். இதோ, இந்த யமுனை நதி தீரத்தில்தான் அவர் விளையாடி மகிழ்ந்தார். இந்த இடத்தில் இடைச்சிறுவர்களோடு விளையாடினார். இதோ, இங்குள்ள இந்தப் பூந்தோட்டங்களிலெல்லாம் அவர் கோபியருடன் பேசி மகிழ்ந்தார்" என்றெல்லாம் விளக்கினார்கள்.

அவர்கள் சொன்னதைக் கேட்ட உத்தவர், "நீங்கள் ஏன் ஸ்ரீகிருஷ்ணருக்காக இந்த அளவுக்கு ஏங்கி மனவேதனைப்படுகிறீர்கள்? அவர்தாம் எல்லா உயிர்களிலும் இருப்பவராயிற்றே! அவர் சாட்சாத் பகவானே அல்லவா? அவர் இல்லாத பொருள் எதுவும் இருக்க முடியாது!" என்றார்.

கோபியர்கள் அதற்குப் பதிலாக, "இதெல்லாம் எங்களுக்குத் தெரியாது. நாங்கள் எழுதப் படிக்கச் சிறிதுகூட அறியாதவர்கள். நீங்கள் சொல்வதை எங்களால் புரிந்துகொள்ள முடியாது. எங்களுக்கு எங்களோடு இருந்த பிருந்தாவனத்துக் கிருஷ்ணனைத்தான் தெரியும். இந்த இடங்களிலெல்லாம் எங்களோடு பல விதங்களிலும் விளையாடிய கிருஷ்ணனைத்தான் நாங்கள் அறிவோம்" என்று சொன்னார்கள்.

அது கேட்ட உத்தவர் மீண்டும் அவர்களிடம் "ஸ்ரீகிருஷ்ணர் சாட்சாத் பகவானே. அவரைத் தியானித்து வந்தால் மறுபடியும் இந்தப் பிறப்பும் இறப்புமாகிய சம்சாரத்தில் சிக்க வேண்டியிருக்காது. ஜீவன்முக்தர்களாக ஆகிவிடுவீர்கள்" என்று உபதேசித்தார்.

கோபியர்கள் "நீங்கள் சொல்கிற முக்தி என்ற பெரிய பெரிய விஷயங்களெல்லாம் எங்களுக்குப் புரியாது. நாங்கள் எங்களுடைய உயிருக்கு உயிராகிய கிருஷ்ணரைப் பார்க்கத் தான் துடிக்கிறோம்" என்று பதில் சொல்லிவிட்டார்கள்.

இதையெல்லாம் ஆழ்ந்த கவனத்துடன் கேட்டு அதிலேயே லயித்திருந்த குருதேவர், "ஆம். கோபியர் கூறியது சரிதான்" என்று குறிப்பிட்டார்.

பின்பு அவர் தமது இனிய குரலில் பாடினார்:

எல்லோர்க்கும் முக்தியினைத் தயக்கம் இன்றி
எளிதினிலே அளித்தாலும் தூய்மை மிக்க
நல்லதொரு பக்தியினை அளிப்ப தற்கு
நான்தயக்கம் கொள்கின்றேன்; பக்தி கொண்டோன்
வல்லமைகள் உடையவனாய் அனைத்தும் தாண்டி
வாழ்கின்றான்! உலகத்து மாந்தர் எல்லாம்
சொல்லடுக்கிப் புகழ்மாலை சூட்டி நிற்கத்
துணிவோடு மூவுலகும் வெல்லு கின்றான்,

பக்தியினைக் குறிப்பிட்டுச் "சந்திர வல்லி
பகர்கின்றேன், கேட்பாய்நீ; ஒருக்கா லிங்கே
முக்தியது கிடைத்து விடும்; ஆனால் பக்தி
முயன்றாலும் கிடைக்காது! தூய தான
பக்தியதன் காரணமாய்ப் பாதா ளத்தில்
மாபலியின் வாயினிலே காவல் காத்தேன்.
சித்தமதில் பரிசுத்த பக்தி கொண்டார்
சிலபேர்கள் மட்டும்தான் உலகில் உள்ளார்.

பேருலகில் உயர் பிருந்தா வனத்தில் வாழும்
பேருடைய கோபகோ பியர்கள் அன்றி
யாரொருவர் பரிசுத்தமான பக்தி
அறிந்திடுவார்? எவருமிலை! தூய பக்தி
காரணமாய் நந்தனவன் வீட்டில் வாழ்ந்தேன்!
கருத்தினிலென் தந்தையென ஏற்றுக் கொண்டேன்!
நேரடியாய் அவனுடைய பாரம் முற்றும்
நெஞ்சார என்தலையில் தாங்க மந்தேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாகவதரிடம்): "கோபியர் கொண்டிருந்த பக்தி, பிரேமை பக்தியாகும். அது அவ்யபிசாரிணீ பக்தி எனப்படும். 'நிஷ்டா பக்தி' என்றும் அதைச் சொல்வதுண்டு. இதற்கு மாறாக உள்ள வியபிசாரிணீ பக்தி என்பது எது? ஞானம் கலந்த பக்தியேயாகும். 'கிருஷ்ணரே எல்லாமுமாக ஆகியிருக்கிறார். அவரே பரப்பிரம்மம், அவரே ராமர், அவரே சிவன், அவரே சக்தி' என்ற மனநிலை ஞானம் கலந்த பக்தியில் இருக்கும். ஆனால், இது போன்ற ஞான உணர்வு பிரேமை பக்தியில் கலந்திருப்பதில்லை.

"ஒரு சமயம் துவாரகைக்கு ஆஞ்சநேயர் வந்தார். அவர் சீதாராமனைத் தரிசிக்க விரும்பினார். பகவான் கிருஷ்ணர் ருக்மிணியிடம், 'நீ சீதையாக மாறி அமர்ந்துகொள். இல்லாவிட்டால், ஆஞ்சநேயரிடமிருந்து தப்பமுடியாது' என்றார்.

"பாண்டவர்கள் ராஜசூய யாகம் செய்தார்கள். எல்லா அரசர்களும் யுதிஷ்டிரரைச் சிம்மாசனத்தில் உட்காரவைத்து அவரை வணங்கினார்கள். அங்கு வந்திருந்த விபீஷணர், 'நான் நாராயணர் ஒருவரைத்தான் வணங்குவேன். வேறு எவரையும் வணங்கமாட்டேன்' என்று சொல்லிவிட்டார். அப்போது பகவான் ஸ்ரீகிருஷ்ணர் தமது உடல் தரையில் படிய யுதிஷ்டிரருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார். அதைப் பார்த்த பிறகுதான் விபீஷணரும் தமது கிரீடத்துடன் யுதிஷ்டிரரைச் சாஷ்டாங்கமாக வீழ்ந்து பணிந்தார்.

"இந்த வகை பக்திக்கு ஒன்றை உவமையாகச் சொல்லலாம். ஒரு வீட்டிலுள்ள மருமகளின் மனநிலையைப் போன்றது அது. மைத்துனன், மாமியார், மாமனார், கணவர் என்று வீட்டிலுள்ள எல்லோருக்குமே அவள் வேண்டிய பணிவிடைகளைச் செய்கிறாள். கால் கழுவுவதற்குத் தண்ணீர் கொண்டு வந்து தருகிறாள்; துண்டு எடுத்துத் தருகிறாள்; உட்காருவதற்கு ஆசனம் போடுகிறாள். இது போன்று அவள் பல பணிவிடைகளையும் செய்கிறாள். ஆனால், தன் கணவனிடமே பிரத்தியேக அன்பு கொண்டிருக்கிறாள்.

"இந்த வகை பிரேமை பக்திக்கு இரண்டுவித இலட்சணங்கள் உண்டு. ஒன்று 'நான்' என்ற உணர்வு. மற்றொன்று 'என்னுடையது' என்ற உணர்வு. 'நான் பார்த்துக்கொள்ளாவிட்டால் கோபாலனை வேறு யார் பார்த்துக்கொள்வார்கள்?

நான் அவனுக்கு வேண்டியதைச் செய்யாவிட்டால் அவனுடைய உடல் நலம் அல்லவா கெட்டுப்போய்விடும்!' என்று யசோதை நினைப்பது வழக்கம். கிருஷ்ணன் கடவுள்தான் என்ற எண்ணம் அவளிடம் சிறிதும் இருக்கவில்லை. அவளிடம் 'என்னுடையது' என்ற எண்ணமும் தலைதூக்கி இருந்தது. அதாவது கடவுள் என்னுடையவர், எனக்கே சொந்தமானவர் என்று பக்தன் நினைப்பதுபோல. 'என்னுடைய கோபாலன்' என்ற எண்ணம் யசோதையிடம் ஊறியிருந்தது.

"உத்தவர் யசோதையிடம் 'அம்மா, உன்னுடைய கிருஷ்ணர் இருக்கிறாரே, அவர் சாட்சாத் பகவானேதான். அவர் ஜகத் சிந்தாமணி (பிரபஞ்சத்திற்கே தலைவர்) ஆவார். அவர் சாதாரண மனிதர் அல்ல' என்று சொல்லத்தான் சொன்னார். ஆனால், யசோதையோ "ஹா! நான் உங்களுடைய சிந்தாமணியைப் பற்றிக் கேட்கவில்லை. என்னுடைய கோபாலன் எப்படி இருக்கிறான் என்றுதான் கேட்கிறேன். ஆம், நான் கேட்பது சிந்தாமணியைப் பற்றி அல்ல, என் கோபாலனைப் பற்றித்தான்' என்று உறுதியாகச் சொல்லிவிட்டாள்.

"கோபியரிடம்தான் எப்படிப்பட்ட நிஷ்டை (இஷ்ட தெய்வத்திடம் மட்டுமே கொள்ளும் மாறாத எல்லையற்ற அன்பு) இருந்தது! மதுரா நகரத்தின் அரண்மனை வாயிற்காப்போன் அவர்களைக் கிருஷ்ணரிடம் அழைத்துச்சென்றான். ராஜசபையில் மகுடம் தரித்து வீற்றிருந்த ஸ்ரீகிருஷ்ணரைக் கண்டதுமே கோபியர்கள் தலைகுனிந்து கொண்டார்கள். அவர்கள் (ஒருவருக்கொருவர்) தங்களுக்குள்ளாக 'மகுடம் தரித்துள்ள இந்த மனிதன் யார்? கிருஷ்ணரின் அன்புக்கு உரிய நாம், கடைசியில் மகுடம் தரித்த வேற்று ஆளாகிய இவனுடன் பேசி விபசாரியர் ஆவதா? பீதாம்பரம் அணிந்து, மோகனக் கொண்டையில் மயில்தோகையுடன் சோபிக்கும் நம்முடைய அந்தப் பிராண வல்லபராகிய கிருஷ்ணர் எங்கே?' என்று கேட்டுக்கொண்டார்கள்.

"கோபியரின் நிஷ்டைதான் எப்படிப்பட்டது பார்த்தீர்களா? அவர்களின் மனநிலை அலாதியான மகிமையுடன் திகழ்ந்தது. துவாரகைப் பகுதியில் வாழ்கின்ற மக்கள் அர்ஜுனனின் தோழனை கிருஷ்ணனைப் பூஜிக்கிறார்கள் என்றும், அவர்கள் ராதையை ஏற்பதில்லை என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன்."

ஒரு பக்தர் : "ஞானம் கலந்த பக்தியா, அல்லது பிரேமை பக்தியா? இவற்றில் எது சிறந்தது சுவாமி?"

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** "பகவானிடம் ஆழ்ந்த அன்பு உண்டானாலன்றிப் பிரேமை பக்தி ஏற்படாது. மேலும் பகவான் எனக்குச் சொந்தமானவர்தாம் என்ற உணர்ச்சியும் தீவிரமாக இருக்க வேண்டும்.

"ஒரு கதை சொல்கிறேன், கேளுங்கள். மூன்று நண்பர்கள் சேர்ந்து காட்டு வழியாகச் சென்றுகொண்டிருந்தார்கள். திடீரென்று ஒரு புலி வந்துவிட்டது. அவர்களில் ஒருவன், 'சகோதரர்களே, நாம் செத்தொழிந்தோம்!' என்று சொன்னான். இரண்டாவது நண்பன், 'நீங்கள் ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? நாம் எதற்காகச் செத்தொழிய வேண்டும்? வாருங்கள் நாம் அனைவரும் சேர்ந்து பகவானிடம் பிரார்த்தனை செய்யலாம்' என்று சொன்னான். மூன்றாவது நண்பனோ 'வேண்டாம் பகவானை நாம் ஏன் கஷ்டப்படுத்த வேண்டும்? வாருங்கள். இந்த மரத்தின்மீது ஏறிக்கொள்ளலாம்' என்றான்.

'நாம் செத்தொழிந்தோம்' என்று சொன்னவன் 'பகவான் இருக்கிறார். அவர் நம்மைக் காப்பாற்றுவார்' என்ற உண்மையை அறிந்திருக்கவில்லை. 'வாருங்கள். நாம் அனைவரும் சேர்ந்து பகவானிடம் பிரார்த்தனை செய்யலாம்' என்று சொன்னவன் ஞானி ஆவான். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் செய்பவர் இறைவன்தான் என்பதை அவன் அறிந்திருந்தான்.

'பகவானை நாம் ஏன் கஷ்டப்படுத்த வேண்டும்? வாருங்கள். இந்த மரத்தின் மீது ஏறிக்கொள்ளலாம்' என்று சொன்னவன் இருக்கிறானே, அவனுடைய உள்ளத்தில்தான் பிரேமை பக்தி உதித்திருந்தது. தன் அன்புக்கு உரிய பகவானைவிடத் தனக்கு அதிக வலிமை இருப்பதாகக் கருதுவது பிரேமை பக்தியின் இயல்பாகும். தன் அன்புக்கு உரிய பகவானுக்கு எந்த விதக் கஷ்டமும் ஏற்படக்கூடாது என்று எச்சரிக்கையுடன் பார்த்துக்கொள்ளும் இயல்பு அது. தான் அன்பு செலுத்தும் பகவானின் காலில் ஒரு சிறிய முள்கூடத் தைத்துவிடாமல் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது ஒன்றுதான் பிரேமை பக்தி கொண்டவனுக்கு வாழ்க்கையிலுள்ள ஒரே ஆசையாகும்."

இராமச்சந்திரதத்தர் குருதேவரையும் அங்குக் குழுமியிருந்த மற்றும் பல பக்தர்களையும் மாடிக்கு அழைத்துச் சென்று பலவிதமான இனிப்பு வகைகளை அவர்களுக்கு வழங்கினார். பக்தர்கள் மகிழ்ச்சியுடன் பிரசாதம் உண்டனர்.

# 11

# தட்சிணேசுவரக் கோயிலில் பக்தர்களுடன்

**திங்கட்கிழமை, ஜுன் 4, 1883**

அமாவாசை நாள். பலஹாரிணி[1] காளி பூஜை கொண்டாடப் பெறும் தினம். இரவில் காளிக்கு விசேஷ பூஜை நடைபெறும்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரக் காளி கோயிலில் தம் அறையில் அமர்ந்திருந்தார். பக்தர்கள் அவரைத் தரிசிப்பதற்கு வந்த வண்ணம் இருந்தனர்.

பலஹாரிணி காளி பூஜைக்கு முதல் நாளாகிய ஞாயிற்றுக் கிழமையன்றே ம-, குருதேவரைத் தரிசிக்கத் தட்சிணேசுவரம் வந்துவிட்டார். ஞாயிற்றுக்கிழமை இரவு காத்யாயனி பூஜை நடைபெற்றது.

அன்றிரவு முழுதும் குருதேவர் தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்திருந்தார். தெய்விகப் பரவசத்தில் லயித்தபடியே, பவதாரிணி தேவியின் சந்நிதிக்கு எதிரேயுள்ள மண்டபத்தில் நின்றுகொண்டிருந்தார். அந்த மண்டபமே தெய்விக மயமாகக் காட்சியளித்தது. அவர் ஜகன்மாதாவிடம் ;

"அம்மா! நீயே பிருந்தாவனத்தில் காத்யாயனி தேவியாக இருக்கிறாய். நீயே சுவர்க்கம்,. நீயே பூலோகம். நீயே பாதாள லோகம். உன்னிடமிருந்தே ஹரியும், பிரம்மாவும், பன்னிரெண்டு ஆதித்தியர்களும் தோன்றியிருக்கிறார்கள். உன்னிடமிருந்தே தசமஹா வித்யைகளும், தசாவதாரங்களும் தோன்றியுள்ளன. அம்மா! இப்போது உன்னுடைய எந்த வடிவத்தைக் கொண்டு என்னைக் கரையேற்றுவதாக இருக்கிறாய்?" இப்படிப் பலவாறு பேசிக் கொண்டிருந்தார்.

---

1. கர்மபலனை (வினைப்பயனை) அழித்து ஆட்கொள்ளும் காளி அன்னையை பலஹாரிணி என்று வழிபடுவர்.

இவ்விதம் பாடிக்கொண்டும், ஜகன்மாதாவுடன் பேசிக் கொண்டும் ஒரேயடியாகத் தெய்விகப் பிரேமையில் மூழ்கி யிருந்தார் குருதேவர். அதே நிலையில் அவர் தமது அறையை அடைந்து கட்டிலில் அமர்ந்துகொண்டார்.

காத்யாயனி பூஜையின்போது, இரவு இரண்டாம் ஜாமம் வரையிலும் பக்தர்கள் ஜகன்மாதாவின் புகழைப் பாடிக் கொண்டும், நாமஜபம் செய்துகொண்டும் இருந்தனர்.

திங்கட்கிழமை காலையில் பலராமும் மற்றும் பல பக்தர் களும் குருதேவரைத் தரிசிக்க வந்தனர். அப்போது பலஹாரிணி காளிபூஜை நடைபெற இருந்ததை முன்னிட்டு, திரைலோக்கியரும்[1] மற்றும் காளி கோவில் சொந்தக்காரர் களும் தங்கள் குடும்பத்தோடு தட்சிணேசுவரம் வந்து சேர்ந் தனர்.

காலை ஒன்பது மணி, குருதேவர் புன்னகை பொங்கக் கங்கையை நோக்கியிருக்கும் அஃறவட்டத் தாழ்வாரத்தில் ம- வுடன் அமர்ந்திருந்தார். அப்போது குருதேவர் விளையாட்டாக ராக்காலின் தலையைத் தம் மடிமீது வைத்துக் கொண்டார். ராக்காலும் ஒன்றும் பேசாமல் அப்படியே படுத்திருந்தார். கடந்த சில நாட்களாகக் குருதேவர், ராக்காலை பால கிருஷ்ணனாகக் கருதி வந்தார்.

திரைலோக்கியர் காளிதேவியை வணங்கும் பொருட்டுக் கோவிலுக்குச் சென்றுகொண்டிருந்ததையும், வேலையாள் ஒருவன் அவருக்குக் குடை பிடித்தபடி சென்றுகொண்டிருந்த தையும் கண்ட குருதேவர் ராக்காலிடம் "ஏய் ராக்கால், எழுந் திரு, எழுந்திரு!" என்றார். அப்போது திரைலோக்கியர் குரு தேவர்முன் வந்து வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (திரைலோக்கியரிடம்): "என்னப்பா, நேற்றிரவு கோவிலில்ஏன் கதாகாலட்சேபம் நடைபெறவில்லை?

---

1. திரைலோக்கியர், மதுர் பாபுவின் மகனும், ராணி ராஸமணியின் பேரனும் ஆவார். மதுர்பாபுவின் மறைவுக்குப் பிறகு, 1871 ஆம் ஆண்டு முதல் அவர் தட்சிணேசுவரக் காளி கோவிலின் நிர்வாகத்தை மேற்கொண்டிருந்தார்.

2. காத்யாயனி பூஜை நடைபெறும் இரவில் காளி கோவிலில் கதா காலட்சேபத் திற்குக் கோவில் நிர்வாகிகள் ஏற்பாடு செய்வது வழக்கம்.

திரைலோக்கியர் : "ஆமாம். ஏற்பாடு செய்ய இயலாது போய்விட்டது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சரி. போனது போகட்டும். இனி மேலாவது இதுபோல் நடக்காமல் பார்த்துக்கொள். ஆண்டு தோறும் வழக்கத்தில் இருந்துவரும் நடைமுறைகளை விடாமல் பின்பற்றுவது நல்லது".

இதற்கேற்ற பதிலளித்துவிட்டு திரைலோக்கியர் அங்கிருந்து அகன்றார். சிறிது நேரத்திற்குப் பிறகு விஷ்ணு கோவிலின் அர்ச்சகர் ராம் சட்டர்ஜி அங்கு வந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ராம்! திரைலோக்கியரிடம் 'நேற்று கதாகாலட்சேபம் நடைபெறாமல் போய்விட்டது. திரும்பவும் இவ்வாறு தவறு நிகழாமல் பார்த்துக்கொள்' என்று கூறினேன். இவ்விதம் நான் சொன்னதில் தவறு ஏதாவது இருக்கிறதா?"

ராம் சட்டர்ஜி : "இதில் என்ன தவறு இருக்கிறது? கோவில் வழக்கம் எதுவோ அதை வருடா வருடம் நடத்துவது தானே முறை?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : (பலராமிடம்) "இன்று நீ இங்கேயே பகல் உணவை உட்கொள்."

பகல் உணவிற்கு முன்பு குருதேவர் சிறிது நேரம் தாம் முன்பு தெய்விகப்பித்துக் கொண்டிருந்த நாட்களைப் பற்றிய செய்திகளைப் பக்தர்களிடம் விளக்கினார். ராக்கால், பலராம், ம-, ராம்லால் ஆகியோரும், மற்றும் சில பக்தர்களும் அவர் சொல்வதைக் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இப்போதெல்லாம் ஹாஸ்ரா அடிக்கடி எனக்கு உபதேசம் செய்ய ஆரம்பித்துவிடுகிறான். 'நீ ஏன் இந்த இளைஞர்களைப் பற்றி இவ்வளவு கவலைப்படுகிறாய்?' என்று கேட்கிறான். ஒரு நாள் நான் பலராம் வீட்டிற்கு வண்டியில் சென்றுகொண்டிருந்தபோது, வழியில் ஹாஸ்ரா சொல்வதை நினைத்து மிகவும் வேதனைப்பட்டேன். அப்போது நான் ஜகன்மாதாவிடம், 'அம்மா! நரேந்திரன் முதலிய இளைஞர்களைப் பற்றி ஏன் இந்த அளவுக்கு நான் கவலைப்பட வேண்டும் என்று ஹாஸ்ரா என்னைக் கேட்கிறான். பகவானைப் பற்றிச் சிந்திப்பதை விட்டுவிட்டு ஏன் இந்தப் பையன்களையெல்லாம்

நினைத்துக்கொண்டிருக்கிருய்? என்கிருன்': என்று சொல்லி முறையிட்டுக்கொண்டேன்.

"இவ்விதம் நான் ஜகன்மாதாவிடம் சொல்லி முறையிட்டேனே இல்லையோ, மறு விநாடியே ஜகன்மாதா தானே மனிதளுக ஆகியிருப்பதை எனக்குக் காட்டியருளினுள். தூய்மையான பாத்திரத்தில் பிரகாசம் தெளிவாக இருக்கும். அதே போல் பரிசுத்தமான ஆத்மாவில் அவள் தன்னை மிகவும் தெளிவாக வெளிப்படுத்துகிருள். தேவியின் அந்தக் காட்சியைப் பெற்ற பிறகு, என் சமாதிநிலை சிறிது கலைந்ததும், ஹாஸ்ராவின் மீது எனக்குக் கோபம் ஏற்பட்டது. 'இந்தப் போக்கிரி என் மனதை வேதனைபடச் செய்தானே' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். ஆனல் மறுகணமே 'அந்த அப்பாவிப் பயலைக் குற்றம் சொல்லி என்ன பயன்? அவனுக்கு எப்படி உண்மை தெரிய முடியும்?' என்று நினைத்துக்கொண்டேன்.

"நான் இந்த இளைஞர்களிடம் நாராயணனையே பார்க்கிறேன். நரேந்திரனை முதன்முதலில் சந்தித்தபோது அவனுக்குத் தன் உடலைப் பற்றிய உணர்வே இல்லாமல் இருந்ததைக் கண்டேன். என் கையினல் அவன் மார்பைத் தொட்டதுமே அவன் புறஉணர்வை இழந்துவிட்டான். மீண்டும் அவனுக்குச் சுயநினைவு வந்ததும், 'ஐயா, என்னை நீங்கள் என்ன செய்தீர்கள்? எனக்கு அப்பா, அம்மா இருக்கிருர்களே!' என்று கூறினன். இதே போலத் தான் யதுமல்லிக்கின் வீட்டிலும் நிகழ்ந்தது. அதன் பிறகு நாளடைவில் அவனைப் பார்க்க வேண்டும் என்ற ஏக்கம் என்னுள் சிறிது சிறிதாக வளர்ந்து அதிகமாயிற்று. பிறகு என் உயிரே அவனைப் பார்ப்பதற்குத் துடியாகத் துடித்தது. அந்தச் சமயத்தில் காளி கோவிலில் வேலை செய்துவந்த, போலாநாத் என்பவரிடம் 'இதோ பார். என் மனம் எப்படித் துடிதுடித்துக் கலங்குகிறது? நரேந்திரன் என்ற காயஸ்த ஜாதியைச் சேர்ந்த இளைஞன் ஒருவன் இருக்கிருன். அவனைப் பார்க்க என் மனம் ஏன் இப்படி அலைபாய்ந்து தத்தளிக்கிறது?' என்று வினவினேன். அதற்கு போலாநாத், 'தங்கள் மனநிலைக்கு உரிய விளக்கம் மகாபாரதத்தில் இருக்கிறது. சமாதியில் நிலைத்த மஹாபுருஷர் ஒருவரின் மனம் அந்தச் சமாதி நிலையிலிருந்து கீழே இறங்கிவரும்போது சத்துவ குணம் நிறைந்த மக்களுடன் சேர்ந்திருக்க ஆசைப்படுகிறது. சத்துவ குணம் கொண்டவர்களைப் பார்த்தால்தான் அத்தகைய மஹா-

புருஷரின் மனம் குளிரும்' என்று விளக்கமாகப் பதில் கூறினார். அவர் சொன்னதைக் கேட்ட பிறகுதான் என் மனம் அமைதி அடைந்தது. நரேந்திரனைப் பார்க்க வேண்டும் என்ற ஏக்கத்தின் காரணமாக நான் அடிக்கடி தனிமையில் உட்கார்ந்து அழுதிருக்கிறேன்.

"ஆஹா! என் மனம் எத்தகைய தெய்விக நிலைகளிலெல்லாம் அப்போது இருந்தது! எனக்குக் கடவுட் பித்துப் பிடித்து முதன் முதலாகத் தெய்விக அனுபவம் ஏற்பட்டபோது, பகலும் இரவும் எப்படிக் கழிந்தன என்பது எனக்குத் தெரியாது. எனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்றுதான் எல்லோரும் சொன்னார்கள். ஆகவேதான் எனக்குத் திருமணம் செய்து வைத்தனர். நான் அப்போது தெய்விகப் பித்துப் பிடித்த நிலையில் இருந்தேன். அந்த நிலையில் முதலில் நான் என் மனைவியைப் பற்றிக் கவலைப்பட்டேன். பிறகு அவளும் என்னைப் போன்றே வாழ்வாள், உண்பாள், உறங்குவாள் என்று எண்ணினேன்.

"ஒரு நாள் என் மாமனார் வீட்டுக்குச் சென்றிருந்தேன். அங்கு ஆடலும் பாடலும் நிகழ்ந்தன. எனக்குத் தெரிந்தவர்கள் பலர் அதில் கலந்துகொள்வதற்கு வந்திருந்தார்கள். அந்த நிகழ்ச்சி விமரிசையாக நடைபெற்றது. சில சமயங்களில், 'என் நிலை என்ன ஆகுமோ? என்று நினைத்தேன். ஜகன்மாதாவிடம் நான், 'அம்மா! இந்தக் கிராமப் பகுதிகளில் உள்ள பெரியவர்கள், ஜமீன்தார்கள் ஆகியோர் எனக்கு உண்மையான மரியாதை காட்டுவார்களேயானால், என் தெய்விக அனுபவங்களை நான் உண்மைதான் என்று நம்புவேன்' என்று கூறினேன். அவர்களும் அவ்வாறே மரியாதை காட்டி என்னிடம் வந்து பேசிவிட்டுச் சென்றார்கள்.

"என்னென்ன தெய்விக நிலைகளிலெல்லாம் நான் இருந்திருக்கிறேன்? மிகச் சிறிய தூண்டுதல்கூட என் உள்ளத்தில் ஆன்மிக உணர்வுகளைப் பொங்கிப் பெருகச் செய்துவிடும். ஓர் அழகிய பதினான்கு வயதுப் பெண்ணை அம்பிகையாக வழிபட்டேன். அந்தப் பெண்ணை நான் சாட்சாத் அம்பிகையாகவே பார்த்தேன். வழிபாடு முடிந்ததும் அந்தப் பெண்ணின் திருவடிகளில் பணத்தைக் காணிக்கையாக செலுத்தி வணங்கினேன்.

"ஒரு சமயம் 'ராம் லீலை' எனப்படும் தெருக்கூத்து நாடகத்தைப் பார்க்கச் சென்றிருந்தேன். அந்த நாடகத்தில் ராமர், லட்சுமணர், சீதை, அனுமன், விபீஷணனாக வேடம் தரித்த நடிகர்களை உண்மையான ராமர், லட்சுமணர், சீதையாக அப்படியே கண்கூடாகக் கண்டேன்' அப்போது அந்த வேடம்தாங்கி நடித்த எல்லோரையும் பூஜித்தேன்.

"அந்நாட்களில் நான் இங்கு சிறிய பெண்களை அழைத்துக் குமாரி பூஜை செய்வதுண்டு. அவர்களைச் சாட்சாத் ஜகன்மாதாவாகவே கண்டேன். ஒரு நாள் மகிழ மரத்தடியில் ஒரு பெண் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்தேன். அவள் நீலநிறப் புடவையை அணிந்து நின்றுகொண்டிருந்தாள். அவள் ஒரு விலை மகள். ஆனால், அவளைப் பார்த்ததுமே என் உள்ளத்தில் சீதையைப் பற்றிய நினைவுகளே மேலெழுந்தன. அதன்பிறகு அந்தப் பெண்ணைப் பற்றி அடியோடு மறந்துவிட்டேன். ஆனால், உண்மையாகவே சீதை இலங்கையிலிருந்து மீட்கப்பட்டு ராமரிடம் போய் சேர்வதைக் கண்டேன். நீண்ட நேரம் புறவுலக நினைவின்றிச் சமாதிநிலையில் ஆழ்ந்திருந்தேன்.

"மற்றொரு நாள் கல்கத்தாவிலுள்ள மைதானத்திற்குச் சற்று நேரம் உலவிவரச் சென்றிருந்தேன். அங்கு பலூன் மேலே கிளம்பி உயரப் பறக்க இருந்தது. அதைப் பார்ப்பதற்கு மைதானத்தில் பெருங்கூட்டம் கூடியிருந்தது. திடீரென்று ஓர் ஆங்கிலேயப் பையனின்மீது என் பார்வை விழுந்தது. அவன் மரத்தின்மீது சாய்ந்தபடி நின்றுகொண்டிருந்தான். அவன் அப்படி அங்கு நின்ற நிலையில் அவனது உடல் மூன்று இடங்களில் (திரிபங்கியாகி[1]) வளைந்திருந்தது. அவனை அவ்விதம் பார்த்தேனோ இல்லையோ, உடனே எனக்கு ஸ்ரீகிருஷ்ணரின் காட்சி கிட்டியது. நான் சமாதிநிலை அடைந்துவிட்டேன்."

"ஒருமுறை நான் சிஹோர் என்ற கிராமத்தைச் சேர்ந்த ஆயச் சிறுவர்கட்கு உணவளித்துவிட்டு அவர்களுடைய கைகளில் தண்ணீர் ஊற்றிப் பருகுமாறு செய்தேன். அவர்களைப் பிருந்தாவனத்து ஆயர் சிறுவர்களாகவே கருதினேன். அவர்கள் உண்டு எஞ்சியிருந்த உணவில், சிறிதளவு உட்கொண்டேன்.

1. ஸ்ரீகிருஷ்ணரின் (பங்கு விஹாரி) திருவுருவத்தில், அவரது உடல், கழுத்து இடுப்பு, கால் ஆகிய மூன்று இடங்களில் வளைந்திருப்பதைக் காணலாம்.

"அக்காலத்தில் எனக்குப் பெரும்பாலும் வெளியுலக நினைவே இல்லாமலிருந்தது. மதுர்பாபு தமது ஜான்பஜார் மாளிகைக்கு என்னை அழைத்துச் சென்று அங்கேயே சிறிது காலம் வைத்திருந்தார். அங்கே இருந்தபோது, என்னை ஜகன் மாதாவின் பணிப்பெண்ணுகவே கருதினேன். அந்த வீட்டுப் பெண்கள் என்முன் சிறிதும் கூச்சப்படவில்லை. சிறுவர்கள் முன்பு பெண்கள் எப்படி இருப்பார்களோ, அதுபோலவே அவர்கள் என்முன் இருந்தார்கள். இரவில் நான் ஒரு வேலைக் காரியைப்போல், மதுரநாதரின் மகளை அழைத்துக்கொண்டு போய் அவள் கணவனிருக்கும் அறையில் விட்டுவிட்டு வருவேன்.

"இப்போதும்கூட மிக மிக அற்பப் பொருளும் என்னிடம் இறைஉணர்வை எழுப்பிவிடுகிறது. ராக்கால் சில சமயங் களில் இறைநாமத்தைப் பாதி உரத்த குரலில் ஜபிப்பதுண்டு. அக்காலங்களில் அதைக் கேட்டதும் என்னை என்னுல் கட்டுப் படுத்திக்கொள்ள இயலாமற் போய்விடும். என் ஞான உணர்வு ஒரேயடியாக எழுந்து என்னைப் பரவசப்படுத்தும்."

குருதேவர் பக்தர்கட்குத் தம்முடைய நிலைகளைப் பற்றி மேலும் விளக்கினுர். "ஒரு சமயம் பாடகர் ஒருவருக்கு நான் ஒரு பாடகியின் அங்க அசைவுகள், நடையுடை பாவனைகளை யெல்லாம் நடித்துக்காட்டினேன். நடிப்பு அப்படியே கச்சித மாக இருந்ததாகப் பாடகர் புகழ்ந்தார். 'இதையெல்லாம் நீங்கள் எப்படிக் கற்றுக்கொண்டீர்கள்?' என்று என்னை ஆச் சரியத்தோடு கேட்டார்." இவ்வாறு கூறிய குருதேவர், குழுமி யிருந்த பக்தர்களின் முன்னுல் ஒரு பாடகியின் நடையுடை பாவனைகளையெல்லாம் அங்க அசைவுகளுடன் அப்படியே நடித்துக் காட்டினுர். இதைக் கண்ட பக்தர்களுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை.

குருதேவர் பகல் உணவை அருந்தியபின் சிறிது நேரம் இளைப்பாறினுர். உறக்கம் கொள்ளாது கண்மூடிப் படுத்திருந் தார். பிரம்மசமாஜத்தின் பழைய அங்கத்தினரான மணிலால் மல்லிக் அறைக்குள் நுழைந்து குருதேவரை வணங்கி விட்டு கீழே அமர்ந்தார். குருதேவர் அப்போதும் படுக்கையில் படுத் திருந்தார். மணிலால் அவரிடம் இடையிடையே கேள்விகள் கேட்க, குருதேவரும் அரைத் தூக்கத்தோடு ஒன்றிரண்டு வார்த் தைகளில் பதிலளித்தார்.

மணிலால் : "நித்யகோபாலின் ஆன்மிக மனநிலையைச் சிவநாத் மிகவும் புகழ்ந்து சொல்கிறார். நித்திய கோபாலின் ஆன்மிக மனநிலை மிகவும் உயர்ந்ததாக இருக்கிறது என்கிறார் அவர்."

குருதேவர் படுத்துக்கொண்டே இருந்தார். தூக்கம் முழுவதும் கலையவில்லை. "ஹாஸ்ராவைப் பற்றி எல்லோரும் என்ன சொல்கிறார்கள்?" என்று கேட்டார்.

இவ்விதம் கேட்டுவிட்டு, குருதேவர் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தார். அவர் மணிலாலிடம் பவநாத்தின் பக்தியைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆஹா! பவநாத்தின் ஆன்மிக மனநிலை எவ்வளவு உயர்ந்ததாக உள்ளது! இறைவனைக் குறித்துப் பாடத் தொடங்கிய உடனே அவன் கண்களிலிருந்து கண்ணீர் வழிய ஆரம்பித்துவிடுகிறது. ஹரீஷைப் பாாத்ததும் பவநாதனுக்குத் தெய்விகப் பரவசம் ஏற்பட்டுவிடுகிறது. ஹரீஷ் மிகவும் பாக்கியம் செய்தவன் என்று பவநாத் சொல்கிறான். ஏன் தெரியுமா? ஹரீஷ் வீட்டைவிட்டு அடிக்கடி இங்கு வந்து என்னுடன் தங்குகிறான் அல்லவா? அதனால்தான்."

"ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்) : "பக்தி ஏற்படுவதற்குக் காரணமாக இருப்பது எது? பவநாத்தைப் போன்ற இந்த இளைஞர்களிடம் இந்த அளவுக்கு உயர்ந்த ஆன்மிக எழுச்சி ஏற்பட்டிருப்பதற்கு என்ன காரணம்?"

குருதேவர் அவ்விதம் கேட்டதற்கு, ம- பதில் எதுவும் சொல்லாமல் மௌனமாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "என்ன் காரணம் தெரியுமா? மக்கள் எல்லோரும் பார்ப்பதற்கு ஒரேவிதமாகத்தான் இருக்கிறார்கள். ஆனால், சிலருக்குள்ளே 'திரட்டுப்பால்' இருக்கிறது. கொழுக்கட்டையின் உள்ளே உளுத்தம்பருப்பும் இருக்கலாம். அல்லது தேங்காய்ப் பூரணமும் இருக்கலாம். ஆனால், எல்லாக் கொழுக்கட்டைகளுமே வெளிப்பார்வைக்கு ஒரே மாதிரியாகத் தான் இருக்கும். இறைவனைக் காண வேண்டும் என்ற தீவிர ஆசைதான் திரட்டுப்பால் ஆகும். இறைவனிடம் கொள்ளும் பிரேமை பக்திதான் இந்த இனிப்பாகும்."

அபயம் அளிக்கும் வகையில் குருதேவர் பின்வருமாறு பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்) : "சிலர், 'நான் பந்தத்திற்கு உட்பட்டஜீவனுக இருந்து கொண்டிருக்கிறேன். நான் ஒரு நாளும் ஞானமும், பக்தியும் அடையப்போவதில்லை' என்று நினைக்கிறார்கள். ஆனல், ஒருவனுக்குக் குருவின் அருள் கிட்டி விடுமானல், அவன் எதற்கும் அஞ்சத் தேவையில்லை.

"ஒரு சமயம் சூல் கொண்ட ஒரு பெண்புலி, ஓர் ஆட்டு மந்தையைத் தாக்கியது. ஓர் ஆட்டின் மீது பாய்ந்தபோது, குட்டியை ஈன்றுவிட்டு, அந்தப் பெண்புலி அந்த இடத்திலேயே இறந்து விட்டது. அந்தப் புலிக்குட்டி ஆடுகளோடு சேர்ந்து வளரத் தொடங்கியது. ஆடுகள் புல்லைத் தின்றன; புலிக்குட்டியும் புல்லைத் தின்றது. ஆடுகள் மே, மே, என்று கத்தின; புலிக்குட்டியும் ஆடுகளைப் போலவே கத்தியது. அது நன்ருக வளர்ந்து பெரிய புலியாக ஆயிற்று.

"ஒரு நாள் இன்னொரு புலி அந்த ஆட்டு மந்தையைத் தாக்க வந்தது. ஆட்டு மந்தையில் ஆட்டோடு ஆடாகப் புல்லைத் தின்று கொண்டிருந்த புலியைப் பார்த்தது. புதிய புலிக்கு வியப்பு தாங்கவில்லை. உடனே ஆட்டுப்புலியைத் தொடர்ந்து ஓடி, அதைப் பிடித்தது. அப்போது புல் தின்று வளர்ந்த புலி மே, மே, என்று அச்சத்திஞல் கத்த ஆரம்பித்தது. காட்டுப்புலி ஆட்டுப்புலியை இழுத்துக்கொண்டு குளத்து நீரின் அருகில் சென்று, 'இதோ இந்த நீருக்குள் உன் முகத்தைப் பார். என் முகத்தைப் போலவே உன் முகமும் நன்கு அமைந்திருப்பதைக் கவனி. இதோ சிறிது இறைச்சி. இதைத் தின்று பார்' என்றது. இவ்விதம் சொல்லிக்கொண்டே ஆட்டுப் புலியின் வாய்க்குள் சிறிது இறைச்சியைத் திணித்தது. ஆனல், புல்லைத் தின்று பழகிய புலியோ அந்த இறைச்சியை விழுங்கப் பிடிக்காமல், மீண்டும் ஆடு போலவே மே,மே, என்று கத்திற்று. ஆனல், சிறிது நேரத்தில் மெல்ல இரத்தத்தின் ருசியைக் கண்டது. இறைச்சியின் சுவையையும் உணர்ந்து வாயில் பலவந்தமாகத் திணிக்கப்பட்டிருந்த இறைச்சியைச் சாப்பிட ஆரம்பித்தது. அப்போது காட்டுப்புலி ஆட்டுப்புலியைப் பார்த்து, 'இப்போது தெரிந்துகொண்டாயா? நான் எதுவோ அதுவே தான் நீயும். உனக்கும் எனக்கும் எந்தவிதமான வேறுபாடும் இல்லை, இனி நீயும் என்னுடன் வந்துவிடு' என்று சொல்லி, ஆட்டுப் புலியைத் தன்னுடன் காட்டிற்கு அழைத்துச் சென்று விட்டது.

''ஆகவே, குருவின் அருள் கிடைத்துவிட்டால், பிறகு எந்தவிதப் பயமும் இல்லை. நீ யார் என்பதையும் உனது உண்மை இயல்பு எத்தகையது என்பதையும் அவரே உனக்கு அறிவிப்பார்.

''சீடன் ஒரு சிறிது ஞான சாதனம் பழகினால் குரு அவனுக்கு ஒவ்வொன்றையும் தாமே விளக்குவார். அப்போது அந்த நிலையில் சீடன் எது சத் (மெய்ப்பொருள்) என்பதையும் எது அசத் (பொய்ப்பொருள்) என்பதையும் தானாகவே அறிந்துகொள்கிறான். இறைவன்தான் உண்மை. இவ்வுலகம் நிலையற்றது.

''ஒரு செம்படவன் ஒரு நாள் இரவு நேரத்தில் ஒரு தோட்டத்துக் குளத்தில் திருட்டுத்தனமாக மீன் பிடிப்பதற்காக வலை வீசியிருந்தான். அந்தத் தோட்டச் சொந்தக்காரனுக்கு இது எப்படியோ தெரிந்து விட்டது. அவன் தன் ஆட்களோடு அந்தச் செம்படவன் தப்பி ஓடாத வகையில், நான்கு பக்கங்களிலும் சுற்றி வளைத்துச் சூழ்ந்து கொண்டான். பிறகு தோட்டத்துச் சொந்தக்காரனின் ஆட்கள் கையில் தீப்பந்தங்களுடன் திருடனைத் தேட ஆரம்பித்தார்கள். இதற்குள் செம்படவன் தன் உடலில் சாம்பலை பூசிக் கொண்டு ஒரு மரத்தடியில் சாதுவைப் போல உட்கார்ந்து விட்டான்! திருடனைத் தேட வந்த ஆட்கள் அங்கும் இங்குமாகச் சுற்றியலைந்து நன்றாகத் தேடிப் பார்த்தனர். எவ்வளவு தேடிப் பார்த்தும் செம்படவன் எவனையும் கண்டு பிடிக்க முடியவில்லை. ஆனால் மரத்தடியில் திருநீறணிந்து, தியானம் செய்து கொண்டிருந்த ஒரு சாதுவைப் பார்த்தார்கள். மறு நாள் காலையில் ஒரு பெரிய மகான் அந்தத் தோட்டத்திற்கு வந்திருக்கிறார் என்ற செய்தி ஊர் முழுவதும் பரவியது. ஏராளமான மக்கள் மலர்கள், பழங்கள், இனிப்பு வகைகள் முதலியவற்றைக் காணிக்கையாக எடுத்துக் கொண்டு அந்தச் சாதுவைக் காண வந்தனர். சாதுவின் முன்னால் நாணயங்களையும் சொரிந்தனர். இவ்விதம் நிறையப் பணம் சாதுவின் முன்னால் குவிய ஆரம்பித்தது. அப்போது அந்தத் திருட்டுச் செம்படவனின் உள்ளத்தில் ''இது என்ன ஆச்சரியமாக இருக்கிறதே! நான் உண்மையான சாது அல்ல. என்றாலும் என் மீது மக்கள் எவ்வளவு பக்தி செலுத்துகிறார்கள்! நான் உண்மையான சாதுவாகவே ஆகிவிட்டேனானால், நிச்சயமாக நான் பகவானை அடைவேன். இதில் எந்த விதச் சந்தேகமும் இல்லை'' என்ற எண்ணம் மெல்ல எழுந்தது.

"ஆன்மிக வாழ்க்கையைப் போலித்தனமாக மேற்கொண்டதற்கே அந்தச் செம்படவனுக்கு இவ்வளவு ஆன்மிக எழுச்சி ஏற்பட்டது என்ருல் உண்மையாகவே ஆன்மிகச் சாதனைகளைப் பழகிவந்தால் எவ்வளவு பயன் விளையும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? ஆன்மிகச் சாதனைகளில் உண்மையாகவே ஈடுபடும் போது, எது சத் என்பதையும் எது அசத் என்பதையும் நிச்சயமாக அறிந்து கொள்வீர்கள். அதாவது ஆண்டவனே மெய்ப்பொருள், உலக வாழ்வு நிலையற்றது என்பது நன்கு தெளிவாகும்."

இவ்விதம் குருதேவர் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்த பக்தர் ஒருவர், தனக்குள், "அப்படியானுல் உலக வாழ்வு நிலையற்றதா? செம்படவன் என்னவோ பிற்காலத்தில் உலக வாழ்க்கையைத் துறந்து விட்டான். ஆனுல் உலக வாழ்க்கையில் இருப்பவர்களின் கதி என்ன ஆகும்? அவர்களும் உலக வாழ்க்கையைத் துறந்து விட வேண்டியதுதானு?" என்று நினைத்துக் கொண்டார்.

எவ்விதக் காரணமுமின்றி பக்தர்களுக்கு அருள் புரியக் கூடிய கருணைக் கடல் ஸ்ரீராமகிருஷ்ணர். அந்தப் பக்தர் அப்படி நினைத்த மறு விநாடியே, அவருக்கு விடை கூறுவதைப் போன்று பின் வருமாறு பகர்ந்தார். "ஒரு குமாஸ்தாவை ஏதோ ஒரு குற்றத்திற்காகச் சிறைச்சாலைக்கு அனுப்பியிருப்பதாக வைத்துக் கொள்வோம். அங்கு அவன் பலவிதத் துன்பங்களுக்கு உட்பட்டுக் கைதியாகத்தான் வாழ்ந்து கொண்டிருப்பான். இதில் சந்தேகமில்லை, ஆனுல், அவன் சிறையிலிருந்து விடுதலையாகி வெளியே வந்ததும் என்ன செய்கிருன்? நடுத் தெருவுக்கு வந்து 'தை, தை' என்று குதித்துத் திரிவானு? இல்லையே. மீண்டும் குமாஸ்தா வேலையைத் தேடிக் கொள்வான். முன்பு போலவே வேலையில் இருந்து கொண்டிருப்பான். குருவினருளால் மெய்ஞ்ஞானம் பெற்ற பின்பும், ஒருவன் உலக வாழ்க்கையில் இருந்தபடியே ஜீவன் முக்தனுக நன்கு வாழ முடியும்." இவ்விதம் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் இல்லறத்தார்களுக்கு அபயமளித்தார்.

மணிலால் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): "தினசரி பூஜை செய்யும்போது எவ்விடத்து இறைவனைத் தியானம் செய்யலாம்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இதயம் தான் தியானத்திற்கு மிகவும் சிறந்த இடமாகும். அங்கு தியானம் செய்."

மணிலால் பிரம்மசமாஜத்தைச் சேர்ந்தவர். அவர் கடவுளை அருவமாக வழிபடுபவர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மணிலாலிடம்): "உருவக் கடவுள் என் தாய்; அருவக் கடவுள் என் தந்தை. இவர்களுள் யாரை நான் பழித்துப் பேசுவது? யாரைப் போற்றி வணங்குவது? தராசின் இரண்டு தட்டுக்களுமே நிறைந்து இருக்கின்றன!" என்று கபீர் சொல்வார்.

"ஹலதாரி பகல் நேரங்களில் உருவக் கடவுளைப் பற்றிய எண்ணங்களிலும் இரவு நேரங்களில் அருவக் கடவுளைப் பற்றிய எண்ணங்களிலும் ஆழ்ந்திருப்பார். இந்த இரண்டில் எந்த வழிபாட்டு முறையைப் பின்பற்றினாலும் சரிதான். திடமான நம்பிக்கை மட்டும் கொண்டிருந்தால் போதும். நீ உருவக்கடவுளிடமோ அல்லது அருவக் கடவுளிடமோ எதில் வேண்டுமானாலும் நம்பிக்கை வைக்கலாம். ஆனால், உன்னுடைய அந்த நம்பிக்கை உண்மையானதாகவும், இதய பூர்வமானதாகவும், உறுதி வாய்ந்ததாகவும் இருக்க வேண்டும்.

"சம்புமல்லிக் கல்கத்தாவிலுள்ள பாக்பஜார் என்ற இடத்திலிருந்து தட்சிணேசுவரத்திலிருக்கும் தன் தோட்டத்திற்கு நடந்தே வருவது வழக்கம்.[1] ஒருநாள் அவரது நண்பர் ஒருவர், 'இப்படி நீண்ட தூரம் நடந்து வருகிறீர்களே! ஒரு வண்டி வைத்துக் கொண்டு வரக்கூடாதா? இவ்வளவு தூரம் நடந்து வரும்போது வழியில் ஏதாவது ஆபத்து ஏற்படலாம் அல்லவா?' என்று கேட்டார். அதைக் கேட்டதும் சம்பு மல்லிக்கின் முகம் கோபத்தில் சிவந்துவிட்டது. 'நீங்கள் என்ன பேசுகிறீர்கள்? நான் பகவானின் நாமத்தை ஜபித்தபடியல்லவா வெளியே கிளம்புகிறேன்! அப்படி இருக்கும்போது எனக்கு என்ன ஆபத்து ஏற்பட முடியும்?' என்று பதில் கூறினர்.

"கடவுளிடம் ஆழ்ந்த நம்பிக்கைக் கொள்வதனாலேயே எல்லாம் இனிது நிறைவேறும். நம்பிக்கையில் தான் எல்லாம் இருக்கிறது. 'இன்னாரை நான் பார்க்கும்படி நேர்ந்தால், அப்போது தான் என் தெய்விக அனுபவங்கள் யாவும் உண்மையானவை, அல்லது இங்கே கோவிலில் அதிகாரியாக இருக்கும் குறிப்பிட்ட இந்த நபர் என்னிடம் வந்து பேசுவாரானால், அப்

1. சுமார் 4, 5 மைல் தொலைவு.

போதுதான் என் தெய்விக அனுபவங்கள் அனைத்தும் உண்மையானவை' என்ற விதங்களில் எனக்குள் நான் நினைத்துக் கொள்வேன். அவ்விதம் நான் நினைத்தவை அனைத்தும் தவறாமல் அப்படியே நடந்தேறின."

ம- ஆங்கிலத் தர்க்க சாஸ்திரம் படித்தவர். அதில் 'விடியற்காலை நேரத்தில் காணும் கனவு பலிக்கும் என்பது மூட நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது' என்று அவர் படித்திருந்தார். ஆகவே, ம- பின்வருமாறு குருதேவரிடம் கேட்டார். நீங்கள் நினைத்து நடைபெறாமற் போன சம்பவங்கள் ஏதாவது உண்டா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இல்லவே இல்லை. அந்தச் சமயத்தில் நான் நினைத்தது நினைத்தபடியே நடந்தேறியது. அந்த நாட்களில் இறைவனின் நாமத்தை ஜபித்து, இன்னது நடைபெற வேண்டும் என்று எனக்குள் நினைத்துக் கொள்வேன். அவ்விதம் நினைத்தது தவறாமல் அப்படியே நடந்தது!

(மணிலாலிடம்) : "ஆனால் ஒன்று, கள்ளங்கபடமற்ற தன்மையும் உதாரகுணமும் இல்லாவிட்டால் இத்தகைய ஆழ்ந்த நம்பிக்கை ஏற்படுவதில்லை.

"எலும்புக்கூடு போன்ற உடல், குழி விழுந்த கண்கள், ஓரக்கண் பார்வை இவை போன்ற பல அறிகுறிகள் இருக்கின்றன. இத்தகைய இலட்சணங்களைக் கொண்டிருப்பவர்களுக்குச் சுலபத்தில் ஆழ்ந்த நம்பிக்கை ஏற்படுவதில்லை. 'தென் திசையில் வாழை மரம், வட திசையில் பனையோலை, அதோடு ஒரு கறுப்புப் பூனை என்று இப்படியெல்லாம் இருந்தால் நண்பனே நீ என்ன செய்வாய்?'[1] (எல்லோரும் சிரித்தனர்)

மாலை நேரம் நெருங்கிற்று. வேலைக்காரி ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்குள் நுழைந்து சாம்பிராணிப் புகைப் போட்டாள். மணிலால் முதலிய பக்தர்கள் விடை பெற்றுச் சென்ற பிறகும், அந்த அறையில் இன்னும் இரண்டொரு பக்தர்கள் இருந்தார்கள். அறையில் முழு அமைதி நிலவிக் கொண்டிருந்தது. சாம்பிராணிப் புகையின் வாசனை அறை முழுதும்

1. இது அபசகுனத்தைக் குறிப்பிடும் ஒரு வங்காளப் பழமொழி. அதன் கருத்து : தெற்கில் ஓர் அபசகுனம், வடக்கில் இன்னொரு தீய சகுனம், மற்றொரு பக்கத்தில் வேறு ஓர் அமங்கலக் காட்சி என்று எல்லா திசைகளிலும் அபசகுனங்களை தென்படுமானால் ஒரு மனிதன் என்னதான் செய்யமுடியும்?

கமழ்ந்து கொண்டிருந்தது. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிய கட்டிலின் மீது அமர்ந்தபடி ஜகன்மாதாவை ஆழ்ந்து தியானிப்பதில் ஈடுபட்டார். ம– தரையில் உட்கார்ந்திருந்தார், ராக்காலும் அங்கு அவருடன் இருந்தார்.

சிறிது நேரம் கடந்த பிறகு கோயில் சொந்தக்காரர் வீட்டில் முன்பு வேலை பார்த்த பழைய வேலைக்காரி பகவதி என்பவள் அங்கு வந்தாள். அவள் அறைக்குள் நுழைந்து மிகவும் தூரத்திலிருந்தே குருதேவரை வணங்கினாள். குருதேவர் அவளை உட்காரச் சொன்னார். பகவதி மிகவும் பழைய வேலைக்காரி. கடந்த பல ஆண்டுகளாக அவள் மதுர்பாபு குடும்பத்தினரின் வீட்டில் இருந்து வந்தாள். குருதேவருக்கு அவளை நீண்ட காலமாகத் தெரியும். இளமையில் அவளுடைய நடத்தை அவ்வளவு சரியாக இருக்கவில்லை. கருணைக் கடலான குருதேவர் பாவிகளையும் புனிதமாக்குபவர். அந்த வேலைக்காரியுடன் பல பழைய சம்பவங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இப்போது உனக்கு வயதாகி விட்டது. நீ சேர்த்து வைத்திருக்கும் பணத்தைக் கொண்டு சாதுக்களுக்கும், பக்தர்களுக்கும் உணவளிக்கிறாயா?"

பகவதி (புன் சிரிப்புடன்): "அதைப் பற்றி நான் எப்படிச் சொல்வது?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "காசி, பிருந்தாவனம் போன்ற புண்ணிய க்ஷேத்திரங்களுக்கெல்லாம் போய் வந்தாயா?"

பகவதி (கூச்சத்துடன் தலை கவிழ்ந்தபடி): அதைப் பற்றி நானே எப்படிச் சொல்வது? காசியில் மக்கள் நீராடுவதற்கு உரிய படித்துறை ஒன்று கட்டி வைத்திருக்கிறேன். அதில் என் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது".

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஓ! அப்படியா!"

பகவதி : "ஆமாம். 'ஸ்ரீமதி பகவதி அம்மாள்' என்று என் பெயர் செதுக்கப்பட்டுள்ளது."

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன் சிரிப்புடன்): "பேஷ்! பேஷ்!"

இதனால் பகவதி சிறிது தைரியம் கொண்டவளாய், ஸ்ரீகுருதேவரின் பாதங்களைத் தொட்டு வணங்கி விட்டாள்!

தேள் கொட்டி விட்டால் ஒரு மனிதன் எப்படி துடிதுடித்துக் குதித்தெழுந்து நிற்பானே, அதே போல் ஸ்ரீராமகிருஷ்ணர் "கோவிந்தா! கோவிந்தா! கோவிந்தா!" என்று பகவானின் நாமத்தை உச்சரித்தபடியே எழுந்து நின்று விட்டார். அறையின் ஒரு மூலையில் கங்கை நீர் கொண்ட ஜாடி வைக்கப்பட்டிருந்தது. மூச்சு திணறியபடி அவர் விரைந்து அந்த ஜாடி இருந்த இடத்தை அடைந்தார். பாதத்தில் எந்த இடத்தை பகவதி தொட்டாளோ, அந்த இடத்தைக் கங்கை நீரைக் கொண்டு கழுவ ஆரம்பித்தார்.

அறையில் இருந்த இரண்டொரு பக்தர்கள் இந்த நிகழ்ச்சியை வியப்புடன் பார்த்துக் கொண்டு இருந்தனர். பகவதியோ தன் உயிரே போய் விட்டதைப் போன்று அவமானத்தால் குன்றிப்போய் உட்கார்ந்து விட்டாள். கருணைக் கடல், பெரும் பாவிகளையும் புனிதப் படுத்தும் அருள் தெய்வம் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் பகவதியை நோக்கி கருணை பொங்க, "நீ அங்கிருந்தே வணக்கம் செய். அது போதும்" என்று அவளுக்கு ஆறுதல் தரும் வகையில் கூறினர். அவ்விதம் சொல்லி விட்டு, அவர் மீண்டும் பழையபடி சிறிய கட்டிலின் மீது அமர்ந்து கொண்டார். நடந்த நிகழ்ச்சியை மறந்து அவள் ஆறுதல் பெற வேண்டும் என்பதற்காக "பாட்டுப் பாடுகிறேன், கேள்" என்று கூறிச் சில பக்திப் பாடல்களைப் பாடிக் காட்டினர்.

### செவ்வாய்க்கிழமை, ஜூன் 5, 1883

அன்று அமாவாசை. ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரக் காளி கோவிலில் தமது அறையில் இருந்தார். ராக்கால் குருதேவருடன் தங்கி வந்தார். ஹாஸ்ராவும் அங்கே வாழ்ந்து வந்தார். ம- ஞாயிற்றுக்கிழமை அங்கே வந்தவர், இன்னும் வீடு திரும்பவில்லை. குருதேவருடன் தட்சிணேசுவரத்திலேயே தங்கியிருந்தார். அவர் இன்னும் சில நாட்கள் அங்கேயே தங்க உத்தேசித்திருந்தார். விடுமுறை நாட்களான ஞாயிற்றுக் கிழமைகளில் குருதேவரைத் தரிசிப்பதற்குப் பெருமளவில் பக்தர்கள் வருவது வழக்கம். செவ்வாய்க் கிழமை வேலை நாள் என்பதனல் பக்தர்கள் கூட்டம் அதிகமாக இல்லை.

திங்கட்கிழமை இரவு காளி கோவிலில் உள்ள மண்டபத்தில் கிருஷ்ண கதா காலட்சேபம் நடந்தது. குருதேவர் சிறிது நேரம் அதைக் கேட்டுக் கொண்டிருந்தார். இந்தக் கதா காலட்

சேபம் சென்ற ஞாயிற்றுக்கிழமை இரவே நடைபெற்றிருக்க வேண்டும். அன்று நடைபெறுமல் போனதால் திங்கட்கிழமை இரவு நடைபெற்றது.

மதிய உணவுக்குப் பின் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் தமது ப்ரேமைப் பித்து நிலையைப் பற்றிய பழைய அனுபவங்களைப் பக்தர்கட்குச் சொல்லிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம—விடம்): "ஆ! நான் அந்த நாட்களில் எப்படிப்பட்ட மனநிலைகளில் எல்லாம் இருந்திருக்கிறேன்! அப்போதெல்லாம் நான் இங்கே தட்சிணேசுவரக் கோவிலில் சாப்பிட மாட்டேன். வராக நகரத்திலோ, தட்சிணேசுவரக் கிராமத்திலோ, அரியதாஹா என்ற இடத்திலோ உள்ள யாராவது ஒரு பக்தர் வீட்டிற்குப் போவேன். அதுவும் கூட, சாப்பாட்டு வேளை கடந்த பிறகே போவேன். ஆனால், அங்கு வீட்டுக்குள் சென்று உட்கார்ந்து கொள்வேனே தவிர, வாயைத் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேச மாட்டேன். அந்த வீட்டைச் சேர்ந்தவர்கள் ஏதாவது கேட்டால், 'நான் இங்கே சாப்பிடுவேன்' என்று மட்டும் சொல்வேன். அதைத் தவிர வேறு ஒன்றுமே பேச மாட்டேன். சில சமயங்களில் ஆலம் பஜாரிலுள்ள ராம் சட்டர்ஜியின் வீட்டிற்குப் போவேன். வேறு சில சமயம் தட்சிணேசுவரத்திலுள்ள ஸாவர்ண செளதுரியின் வீட்டிற்குச் செல்வேன். அவர்கள் வீட்டில் அடிக்கடி சாப்பிடுவேன். ஆனாலும் அது எனக்கு அவ்வளவாகப் பிடிக்காது. அந்தச் சாப்பாட்டில் ஏதோ ஒரு விதமான துர்நாற்றம் வீசும்!

"ஒரு நாள் தேவேந்திரநாத் தாகூரின் வீட்டிற்கு என்னை அழைத்துச் செல்லும்படி மதுர்பாபுவிடம் கூறினேன். 'தேவேந்திரநாத் தாகூர் பகவானின் நாமத்தை ஜபிக்கிறாராம். நான் அவரைப் பார்க்க விரும்புகிறேன், நீ என்னை அவரிடம் அழைத்துப் போகிறாயா?' என்று கேட்டேன்.

"ஆனால், மதுர்பாபுவோ மிகவும் கௌரவம் பார்ப்பவர் ஆயிற்றே! அழைப்பு இல்லாமல் அவராகவே மற்றொருவர் வீட்டைத் தேடிப் போவாரா, என்ன? முதலில் சிறிது தயங்கினர். கடைசியில் ஒரு விதமாக இணங்கி 'தேவேந்திரனும் நானும் பள்ளியில் ஒன்ருகப் படித்தோம். வாருங்கள், நான் உங்களை அழைத்துப் போகிறேன்' என்ருர்.

"மற்ெருரு நாள் பாக்பஜாரில் உள்ள பாலத்தின் அருகில் தீனமுகர்ஜி என்ற நல்லவர் ஒருவர் வாழ்ந்து வருவதாகக் கேள்விப்பட்டேன். அவர் ஒரு சிறந்த பக்தர். 'அவரிடம் என்னை ஒரு நாள் அழைத்துச் செல்ல வேண்டும்' என்று மதுர் பாபுவிடம் தெரிவித்தேன். மதுர்பாபு என்ன செய்வார்? நான் விடாப்பிடியாக இருந்ததைக் கண்ட அவர், என்னைத் தமது பெரிய வண்டியில், தீனமுகர்ஜியின் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். தீனமுகர்ஜியின் வீடோ மிகச் சிறியது. ஒரு பெரிய வண்டியில் ஒருபெரிய மனிதர் அங்கே போய்ச் சேர்ந்தவுடன் அந்த வீட்டைச் சேர்ந்தவர்கள் பிரமித்து நின்று விட்டார்கள். நாங்களும் பிரமித்து நின்றோம். அன்றைய தினம் தீனமுகர்ஜி யின் மகனுக்கு உபநயன விழா நடந்து கொண்டிருந்தது. அந்தச் சிறிய வீடு முழுவதிலும் கூட்டம் நிரம்பி வழிந்தது. தீனமுகர்ஜி எங்களை வரவேற்று எங்கே உட்கார வைப்பார்? எங்கு உட்காருவது என்று திகைத்தோம். பிறகு நாங்களே வீட்டினுள் ஒரு பக்கமாக இருந்த அறைக்குள் நுழையப் போனோம். உடனே, 'அங்கே போகாதீர்கள்! அந்த அறை யில் பெண்கள் இருக்கிறார்கள்!' என்று யாரோ கத்தினார்கள். ஒரே குழப்பம். அந்தச் சூழ்நிலை உண்மையிலேயே எங்களுக் குப் பெரிதும் சங்கடத்தை உண்டுபண்ணியது.

"திரும்பி வரும் போது மதுர்பாபு என்னிடம், 'பாபா, இனி மேல் நான் உங்கள் பேச்சைக் கேட்கப் போவதே இல்லை!' என்று கூறினார். அவர் சொன்னதைக் கேட்டு நான் சிரித்தேன்.

"ஆகா! எப்படிப்பட்ட ஆன்மிக நிலைகளிலெல்லாம் நான் இருந்திருக்கிறேன்! குமார்சிங் ஒரு சமயம் சாதுக்களுக்கு விருந்து வைத்தார். என்னையும் அதில் கலந்து கொள்ள அழைத்திருந்தார். அதற்கிணங்கி நான் சென்றபோது சாதுக் க்ள் பலர் அங்கு வந்திருந்ததைக் கண்டேன். நான் சாப்பிடு வதற்கு அங்கு ஓரிடத்தில் உட்கார்ந்ததும் சாதுக்கள் சிலர் என்னைப் பற்றி தெரிந்து கொள்வதற்கு என்னிடம் பல கேள்வி களைக் கேட்டார்கள். இவ்வாறு அவர்கள் என்னை விசாரிக்க ஆரம்பித்ததும் அவர்களை விட்டுத் தனியாகப் போய் வேறு இடத்தில் உட்கார்ந்து கொண்டேன். என்னைப் பற்றித் தெரிந்து கொள்வதனால் அவர்களுக்கு என்ன லாபம் என்று நினைத்தேன்.

"அதன் பிறகு இலை போட்டு எல்லோரையும் சாப்பிடுவ தற்கு உட்கார வைத்தார்கள். 'சாப்பிடுங்கள்' என்று சொல்லி எல்லோரும் சாப்பிட ஆரம்பிப்பதற்கு முன்பாகவே, நான் சாப்

பிடத் தொடங்கி விட்டேன். அங்கிருந்த சாதுக்களில் சிலர் 'யார் இவன்?' என்று என்னைப் பற்றிப் பேசிக் கொண்டது என் காதில் விழுந்தது."

மாலை ஐந்து மணி இருக்கும். பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் தமது அறையை அடுத்த தாழ்வாரப் படிக்கட்டில் அமர்ந்திருந்தார். ராக்கால், ஹாஸ்ரா, ம- ஆகியோர் அவரருகில் உட்கார்ந்திருந்தார்கள். ஹாஸ்ராவின் மனநிலை 'ஸோஹம்—நானே அவன்' என்பதாக இருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹாஸ்ராவிடம்): "இறைவனே ஆஸ்திகன், அவனே நாஸ்திகன்; அவனே நல்லவன், அவனே கெட்டவன்; அவனே உண்மை, அவனே உண்மையற்றவன்; உறக்கம், விழிப்பு ஆகிய நிலைகளும் அவனுடையதே. மேலும், அவன் எல்லா நிலைகளையும் கடந்தவன் என்ற உண்மையைத் தெளிவாக அறிந்து கொண்டால் எல்லாக் குழப்பங்களும் தீர்ந்து போய்விடும்.

"ஒரு குடியானவனுக்கு வயதான காலத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. பெற்றோர் மிகுந்த கவனத்தோடும் பரிவோடும் அந்தக் குழந்தையை வளர்ந்து வந்தனர். ஒரு நாள் குடியானவன் வயலில் வேலை செய்து கொண்டிருந்தான். அப்போது ஓர் ஆள் அங்கு வந்து அவன் மகன் நோய் கண்டு இறந்து போகும் தறுவாயில் இருப்பதாகக் கூறினான். குடியானவன் வீட்டிற்கு வந்து பார்த்தபோது மகன் இறந்து கிடந்தான். குடியானவனுடைய மனைவி பரிதாபமாக விம்மி விம்மி அழுது புலம்பினாள். ஆனால், குடியானவனின் கண்களிலோ ஒரு சொட்டுக் கண்ணீர் கூட வரவில்லை. குடியானவனின் மனைவி அண்டை வீட்டாரிடம் மிகுந்த துக்கத்தோடு, 'எப்படிப்பட்ட அருமையான மகன் இறந்து போய் விட்டான்! ஆனால் இவர் கண்களிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர்கூட வரவில்லையே!' என்று சொல்லி அழுதாள். நீண்ட நேரத்திற்குப் பிறகு குடியானவன் மனைவியைக் கூப்பிட்டு, 'நான் ஏன் அழவில்லை என்று உனக்குத் தெரியுமா? நான் நேற்றிரவு ஒரு கனவு கண்டேன். அந்தக் கனவில் நான் ஓர் அரசனாகவும், ஏழு பிள்ளைகளுக்குத் தகப்பனாகவும் இருந்தேன். அந்தக் குழந்தைகள் அத்தனை பேருமே அழகிலும், குணத்திலும் ஒழுக்கத்திலும் மிகவும் சிறந்தவர்களாக இருக்கக் கண்டேன். நாளடைவில் அவர்கள் பெரியவர்களாக வளர்ந்து, அறிவாற்றலிலும் பல்வேறு

கலைகளிலும் சிறந்து விளங்கினர்கள். இந்த நேரத்தில் தூக்கம் கலைந்து விட்டது. இப்போது நான், உன்னுடைய ஒரு குழந்தைக்காக அழுவதா அல்லது என்னுடைய எழு குழந்தை களுக்காக அழுவதா? என்பது புரியாமல் திகைத்துக் கொண் டிருக்கிறேன்' என்ருன்.

''ஞானிகளுக்குக் கனவுநிலை எப்படிப் பொய்யானதோ, அந்த அளவுக்கு விழிப்பு நிலையும் பொய்யானது. இறைவன் ஒருவனே நம்மை நடத்துபவன் (தலைவன்). அவரது விருப்பப் படியே அனைத்தும் நடைபெறுகின்றன.''

ஹாஸ்ரா : ''ஆனல், இதை உணர்ந்து கொள்வது மிகவும் கடினம். உதாரணமாக, பூகைலாஸ் சாதுவின் விஷயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். மக்கள் அவருக்கு எவ்வளவு கஷ்டங் களைக் கொடுத்தார்கள்! ஒருவிதத்தில் மக்கள் அவரைச் சித்திர வதை செய்து கொன்றுவிட்டார்கள் என்று கூடச் சொல்ல லாம். அவர் தம்மையும் உலகத்தையும் மறந்து ஆழ்ந்த சமாதி நிலையில் இருந்ததை மக்கள் கண்டார்கள். அந்த நிலையில் முதலில் அவரைப் பூமிக்குள் பள்ளம் தோண்டிப் புதைத்து விட்டார்கள். பிறகு அவரைக் கொண்டு போய்த் தண்ணீரில் போட்டு மூழ்க அடித்தார்கள். சில சமயங்களில் அவரை அடித்தும், சில சமயங்களில் காய்ச்சிய இரும்பைக் கொண்டு அவரது உடலில் சூடு போட்டும் அவரைத் துன்புறுத்தினர்கள். இவ்விதமெல்லாம் செய்து மக்கள் அவருக்கு வெளி உணர்வு உண்டாக்க முயன்ருர்கள். ஆனல், இப்படிப்பட்ட சித்திர வதை காரணமாக முடிவில் அந்தச் சாது இறந்து போய் விட் டார். நீங்கள் சொல்வது போல் முடிவில் பகவானது இச்சைப் படி தான் அவர் இறந்து போனர் என்பது உண்மையானலும் மக்களால் சித்திரவதைகளுக்கு உட்படுத்தப்பட்டார் என்பதில் சந்தேகம் இல்லை''.

ஸ்ரீராமகிருஷ்ணர் : ''மனிதன் தன் கர்ம வினைக்கு ஏற்ற பலனை அனுபவித்தே ஆக வேண்டும். பூகைலாஸ் சாதுவின் விஷயத்தைப் பொறுத்தமட்டில் அவரது மரணம் பகவானின் இச்சைப்படிதான் நிகழ்ந்தது. 'கவிராஜ்' எனப்படும் வைத்தியர் ஒருவர் கண்ணுடிப்புட்டிக்குள் 'மகரத்வஜம்' என்ற மருந்தைத் தயாரிக்கிருர். அந்தப் புட்டியின் நான்கு புறமும் களிமண்ணைப் பூசி அதை நெருப்பில் இடுகிருர். அப்போது உள்ளே இருக்கும் தங்கம் சூட்டில் உருகிப் புட்டியில் போட்டிருக்கும் மற்ற மூலி கைகளோடு ஒன்று கலந்து 'மகரத்வஜம்' என்ற மருந்தாக ஆகி

றது. பிறகு கவிராஜர் புட்டியை வெளியே எடுத்து அதை மெல்ல மெல்ல உடைத்து, அதனுள் இருக்கும் மகரத்வஜத்தை எடுத்து வைத்துக் கொள்கிறார். அப்புறம் புட்டி இருந்தால் என்ன? உடைந்து போனால்தான் என்ன?

"அதுபோல சாதாரண மக்கள் சாதுவை அடித்துக் கொன்றுவிட்டார்கள் என்றுதான் நினைக்கக் கூடும். ஆனால் அவருக்குள் இருந்த உட்சத்து பக்குவமடைந்து தயாராகி இருக்கலாம். அதாவது அவருக்குப் பகவானைத் தரிசித்த பக்குவம் ஏற்பட்டிருக்கலாம். இறைவனின் காட்சி கிடைத்த பின்பு அவருடைய உடல் இருந்தால் என்ன, அழிந்து போனால்தான் என்ன?

"பூகைலாஸ் சாது சமாதியில் தான் இருந்தார். சமாதியில் பல வகைகள் உள்ளன. ஒரு சமயம் ரிஷிகேசத்தைச் சேர்ந்த மிகப் பெரிய சாது ஒருவர் இந்தக் கோவிலுக்கு வந்திருந்தார். அவர் சமாதியைப் பற்றித் தெரிவித்த கருத்துக்களெல்லாம் என் சொந்த ஆன்மிக அனுபவங்களுடன் ஒத்திருந்தன.

"சமாதி நிலையில் சில சமயங்களில் எனக்குள் இருக்கும் குண்டலினி சக்தி எறும்பைப் போல் ஊர்ந்து மேலே செல்வதாக உணர்கிறேன். மற்றும் சில சமயங்களில் அந்தச் சக்தி, குரங்கு ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்குத் தாவிச் செல்வதைப் போலக் குதித்துக் குதித்துச் செல்வதைப் போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது. மற்றொரு சமயம் மீன் நீரில் நீந்திச் செல்வது போல் அது மேலே செல்கிறது. யாருக்கு இந்த ஆன்மிக அனுபவங்கள் ஏற்படுகின்றனவோ அவரால் மட்டும் தான் இவற்றை உணர்ந்து கொள்ள முடியும். சமாதியில் ஒருவன் உலகத்தையே மறந்து விடுகிறான். அந்த உயர்ந்த நிலையிலிருந்து என் மனம் சிறிது கீழே இறங்கி வரும் போது, 'அம்மா, என்னைச் சரிப்படுத்தி அருள்வாயாக, நான் பக்தர்களுடன் பேச வேண்டும்' என்று ஜகன்மாதாவிடம் வேண்டிக் கொள்வேன்.

"ஈசுவரகோடிகளைத் தவிர (அவதார புருஷர்கள்) மற்றவர்களால் சமாதி நிலையை எட்டிய பிறகு கீழே இறங்கி வர முடியாது. சாதாரண மக்களில் சிலர் ஆத்ம சாதனைகளின் மூலம் சமாதி நிலையை அடையலாம்; ஆனால் அவர்களால் மறுபடியும் அந்த நிலையிலிருந்து கீழே இறங்கி வர முடியாது. ஆனால் கடவுள் மனித வடிவில் அவதார புருஷராக வரும் பொழுது மக்களுக்கு முக்தியைத் தரும் சாவியைத் தமது

கையில் வைத்திருக்கிறார். ஆதலால், அவர் சமாதி அடைந்த பிறகும் மனித குலத்தின் நன்மைக்காக அதிலிருந்து கீழே இறங்கி வருகிறார்."

ம- (தமக்குள்) "மனிதர்களின் முக்திக்கு உரிய சாவியைக் குருதேவர் தமது கையில் வைத்திருக்கிறாரா?"

ஹாஸ்ரா : "இறைவனைத் திருப்தி படுத்தினாலே போதும். கடவுள் அவதார புருஷராக இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்) : "ஆமாம், ஆமாம். விஷ்ணுபூரில் பத்திரங்களைப் பதிவு செய்யும் பெரிய பதிவாளர் அலுவலகம் இருக்கிறது. அங்கே பத்திரத்தைப் பதிவு செய்தாலே போதும். அதற்கு மேல் சிறிய கிராமத்தில் பதிவு செய்ய வேண்டிய அவசியம் இல்லை."

மாலை சாய்ந்து மெல்ல மெல்ல இருள் பரவ ஆரம்பித்தது. கோவிலில் மாலை ஆரதி நடந்து கொண்டிருந்தது. பன்னிரெண்டு சிவாலயங்களிலும், ராதாகாந்தர் கோவில், பவதாரிணி கோவில் ஆகியவற்றிலும் சங்கு, மணி ஆகியவற்றின் மங்கல ஒலி முழங்கத் துவங்கியது. இது வரையில் தமது அறைக்குள் அமர்ந்திருந்த குருதேவர், ஆரதி முடிந்த சில விநாடிகளுக்குப் பிறகு தமது அறையின் தென்புறத் தாழ்வாரத்திற்குச் சென்று அமர்ந்தார். நான்கு திசைகளிலும் இருள் சூழ்ந்திருந்தது. கோவிலில் மட்டும் அங்குமிங்கும் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. வானத்தில் அசைந்து செல்லும் கருமையான மேகத்தின் கருநிழல், பாகீரதியான புனித கங்கையின் மீது விழுந்து கொண்டிருந்தது.

பரமஹம்ஸர் இயல்பாகவே பாவநிலையில் லயித்திருப்பவர். இன்றோ அமாவாசை. அமாவாசையின் காரிருள் அவருக்குக் காளிதேவியின் கருநிறத்தை நினைவூட்டியது. அதனால் அவரது மனம் மிகமிக ஆழ்ந்த தெய்விகப் பரவசத்தில் தோய்த்திருந்தது. இடையிடையே அவர் ஓங்காரத்தையும் காளிதேவியின் திருநாமத்தையும் உச்சரித்தார். கோடைக்காலமாதலால் அறை அதிக வெப்பமாக இருந்தது. அதனால்தான் அவர் தாழ்வாரத்தில் அமர்ந்திருந்தார்.

பக்தர் ஒருவர் பரமஹம்சருக்கு அழகிய பாய் ஒன்றைக் கொடுத்திருந்தார். அது தாழ்வாரத்தில் விரிக்கப்பட்டிருந்தது.

இரவு பகல் எப்பொழுதும் குருதேவருக்கு ஜகன்மாதாவின் நினைவுதான். பக்தர் கொடுத்திருந்த அந்தப் பாயில் படுத்த வாறே, அவர் ம-வுடன் மெல்லிய குரலில் பேசிக் கொண் டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இதோ பார். **ஈசுவரனை நிச்சயம் தரிசிக்க முடியும்.** (குறிப்பிட்ட ஓர் அன்பரின் பெயரைச் சொல்லி) அவர் பகவானை நேரே தரிசித்திருக்கிறார். ஆனால், இதை எவரிடமும் சொல்லாதே. அது சரி, உனக்கு உருவக் கடவுளில் விருப்பமா? அல்லது அருவக் கடவுளிடம் விருப்பமா?"

ம : "ஐயா, இப்பொழுதெல்லாம் கடவுளை உருவம் இல் லாதவராக நினைப்பதே எனக்குப் பிடித்திருக்கிறது. பகவானே உருவம் உள்ளவராகவும், உருவம் இல்லாதவராகவும் இருப்பது எனக்கு விளங்க ஆரம்பித்திருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இதோ பார். பெல்கேரியாவில் இருக் கும் மதிசீல் என்பவரின் தோட்டத்திற்கு என்னை அழைத்துச் செல்கிறாயா? அங்கு ஒரு பெரிய குளம் இருக்கிறது. அதில் பொரியைத் தூவினால் மீன்களெல்லாம் மேலே ஓடி வந்து பொரியைத் தின்னும். ஆகா! மீன்கள் கூட்டம் கூட்டமாக நீரில் துள்ளி விளையாடித் திரிவதைக் காண எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படுகிறது! அந்தக் காட்சி உன் உள்ளத்திலும் ஆன்மிக விழிப்பை உண்டுபண்ணும். சச்சிதானந்தமாகிய கடலில் ஆத்மாவாகிய மீன் விளையாடுவது போல் அது தோன் றும். அது போலவே மிகவும் பரந்து விரிந்த ஒரு புல்வெளியில் நான் நிற்கும்போது என் உள்ளத்தில் தெய்விகப் பரவசம் பொங்குகிறது. சிறிய குடத்தில் அடைபட்டிருந்த ஒரு மீனை ஒரு பெரிய ஏரியில் விட்டு விட்டால் அந்த மீன் எப்படி ஆனந்தம் அடைகிறதோ அப்படிப்பட்ட ஆனந்தம் எனக்கு ஏற்படுகிறது.

"ஆண்டவனைத் தரிசிப்பதற்கு ஆன்மிகச் சாதனைகளை அவசியம் கடைப்பிடிக்க வேண்டும். நான் கடுமையான ஆத்ம சாதனைகள் பலவற்றைச் செய்ய வேண்டியிருந்தது. வில்வ மரத்தின் அடியில் எத்தனை எத்தனை ஆத்மசாதனைகளைச் செய் திருக்கிறேன்! 'அம்மா! அம்மா! எனக்கு உன் காட்சியைத் தந்தருள்' என்று ஜகன்மாதாவிடம் வேண்டி அழுதபடி பல நாட்கள் மரத்தடியில் விழுந்து கிடந்தேன். அவ்விதம் பெருக்

கொடுத்து வரும் கண்ணீரால் என் உடம்பு நனைந்து போயிருக்கிறது.”

ம : “நீங்களோ ஆண்டவனைத் தரிசிப்பதற்கு எத்தனையோ கடுமையான தவங்களை எல்லாம் செய்திருக்கிறீர்கள்! ஆனால், உலக மக்களோ சில விநாடிகளில் பகவானைத் தரிசித்துவிட வேண்டுமென்று எதிர்பார்க்கிறார்கள். விரலைச் சுற்றிக் காட்டுவதாலேயே வீட்டின் நான்கு புறத்திலும் சுவர்களை எழுப்பி விடமுடியுமா என்ன?”

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி) : “ஒருவன் நெருப்பை மூட்டினால், அதில் பத்து பேர் குளிர் காய்கிறார்கள் என்று அம்ருதன் சொல்கிறான். உனக்கு இன்னும் ஒரு முக்கியமான கருத்தைச் சொல்கிறேன். நித்தியத்தை அடைந்த பிறகு, லீலையில் தங்கியிருப்பது மிகவும் சிறந்தது.”

ம : “நித்தியத்தை அடைந்த ஒருவன் லீலைக்குத் திரும்பி வருவது தெய்விக நிலையை அனுபவிக்கும் பொருட்டு என்று தாங்கள் ஒருமுறைச் சொன்னீர்கள்.”

ஸ்ரீராமகிருஷ்ணர் : “அப்படியில்லை. லீலையும் உண்மை தான்.

“உனக்கு இன்னொன்று சொல்கிறேன். நீ இங்கே வரும்போது மிக அற்பமானதாக இருந்தாலும் கையில் ஏதாவது எடுத்துக் கொண்டு வா.[1] நானே இதைச் சொல்வது சரியாகத்தான் இல்லை. இவ்விதம் சொல்வது ஒரு வேளை ஆணவம் போலத் தோன்றும். ‘வரும் போது ஒரு பைசாவுக்கு எதையாவது வாங்கிக் கொண்டு வா’ என்று அதர்சேனிடமும் கூறினேன். பவநாத்திடம் ‘இங்கே வரும்போது ஒரு பைசாவுக்கு வெற்றிலை வாங்கி வா’ என்று சொன்னேன். பவநாத்திடம் எப்படிப்பட்ட பக்தி இருக்கிறது பார்த்தாயா? நரேந்திரனும் பவநாத்தும் ஆணும் பெண்ணும் போல் இருக்கிறார்கள். பவநாத் எப்போதும் நரேந்திரனைப் பின்பற்றி நடக்கிறான்.

“இனிமேல் நீ வரும்போது வண்டியில் உன்னோடு நரேந்திரனையும் அழைத்து வா. ஏதாவது திண்பண்டமும் சிறிது

1. குரு, சாது, மகாத்மாக்கள், பெரியோர் ஆகியோரைப் பார்க்கச் செல்லும் போது வெறும் கையோடு போகக் கூடாது என்று சாஸ்திரம் விதித்திருக்கிறது.

கொண்டு வா. இதனுல் உனக்கு மிகுந்த அளவில் நன்மை உண்டாகும்.

"ஞானம், பக்தி என்ற இரண்டு வழிகள் உண்டு. பக்தி வழியில் செல்பவர்கள் நியமம், நிஷ்டை முதலிய அனுஷ்டானங்களைச் சற்று அதிகமாகப் பின்பற்ரு விட்டாலும் அதில் ஒன்றும் தவறில்லை. அது அவனது ஆன்மிக வாழ்க்கையைப் பாதிக்காது. ஞானம் என்ற நெருப்பில் அந்தத் தவறுதல்கள் எரிந்து விடும். கொழுந்து விட்டு எரியும் நெருப்பில் வாழை மரத்தைப் போட்டாலும் எரிந்து சாம்பலாகி விடும்.

"ஞானி, உண்மை, உண்மையில்லாதது என்ற (நித்யாநித்ய) பொருள் பற்றிய விசாரமார்க்கத்தைப் பின்பற்றுகிருன். இவ்விதம் ஞான விசாரம் செய்யும் போது சிலருக்கு நாஸ்திக எண்ணம் சில சமயங்களில் தலையெடுக்கக்கூடும். உள்ளன்போடு கடவுளை அடைய வேண்டும் என்ற அருள் தாகத்துடன் ஏங்குபவன், சில நாஸ்திகக் கருத்துக்களால் பாதிக்கப்பட்டாலும், அவன் இறைவனைத் தியானிப்பதை விட்டு விடமாட்டான். பாட்டனும் தந்தையும் பரம்பரை பரம்பரையாக உழவுத் தொழிலை மேற்கொண்டிருந்த குடும்பத்தில் பிறந்த ஒருவன் ஒரு வருஷம் மழை இல்லாமல் பயிர் நாசமாகிவிட்டது என்பதற்காக, விவசாயத் தொழிலையே விட்டு விடுவானு என்ன? மாருக அதே பயிர்த் தொழிலைத்தான் தொடர்ந்து நடத்தி வருவான்."

குருதேவர் தலையணை மீது தலைவைத்துப் படுத்தவாறே ம-விடம் உரையாடிக் கொண்டிருந்தார். இடையில் குருதேவர் ம-விடம், "என் கால்கள் வலிக்கின்றன. அவற்றை இதமாகச் சிறிது பிடித்து விடு" என்று கேட்டுக்கொண்டார்.

எல்லையற்ற கருணைக் கடலான குருதேவரின் திருவடித் தாமரைகளுக்குச் சேவை செய்தவாறே அவர் திருவாயினின்றும் அமுதமென வந்த அருள் வாக்குகளைக் கேட்டுக் கொண்டிருந்தார் ம-.

### வெள்ளிக்கிழமை, ஜூன் 8, 1883

தட்சிணேசுவரக்கோவில். கோடைக்காலம். மாலைவேளை. மாலை ஆரதிக்குப் பிறகு குருதேவர் காளிகோயில் சன்னதியில் காளிதேவியின் முன் நின்று கொண்டு அன்னையைத் தரிசித்தபடியே அன்னைக்குச் சாமரம் வீசிக் கொண்டிருந்தார்.

வண்டியில் ராம், கேதார், தாரக் முதலியோர் குருதேவருக்கு, பழம், மலர்மாலைகள், இனிப்புப் பண்டங்கள் முதலியவற்றை எடுத்துக் கொண்டு வந்தனர்.

கேதாரின் வயது சுமார் ஐம்பது இருக்கும். முதலில் அவர் பிரம்மசமாஜத்தோடு தொடர்பு கொண்டிருந்தார். பிறகு கர்த பாஜா, நவரசிக் முதலிய பல சமய சம்பிரதாயங்களைப் பார்த்து விட்டுக் கடைசியாக குருதேவரிடம் புகல் அடைந்தார்.

தாரக்கிற்கு வயது சுமார் இருபத்திநான்கு இருக்கும். திருமணம் செய்து கொண்ட சில தினங்களிலேயே மனைவியை இழந்தார். இவருடைய வீடு பாராசாத் என்ற கிராமத்தில் இருந்தது. இவருடைய தகப்பனார் ஓர் உயர்ந்த சக்தி உபாசகர். குருதேவரைத் தாரக் சந்திப்பதற்கு முன்பே குருதேவர் இவருடைய தந்தையை பல முறை சந்தித்திருக்கிறார். தாரக்கின் தாய் மரணமடைந்த பிறகு அவர் இரண்டாவது திருமணம் செய்து கொண்டிருந்தார்.

இராமச்சந்திரருடைய வீட்டிற்குத் தாரக் அடிக்கடிச் செல்வதுண்டு. இவர் ராம், நித்தியகோபால் ஆகியவர்களோடு அடிக்கடி குருதேவரைச் சந்திக்கச் செல்வது வழக்கம். இவர் ஒரு காரியாலயத்தில் வேலை பார்த்து வந்தார். ஆயினும் இவருடைய மனம் எப்பொழுதும் பற்றற்ற நிலையிலேயே இருந்தது.

குருதேவர் காளிகோயிலிலிருந்து வெளியே வந்து தரையில் வீழ்ந்து காளியை வணங்கினார். அங்கே கேதார், ராம், தாரக், ம- முதலியோர் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தார்.

தாரக்கைப் பார்த்ததில் குருதேவருக்கு அளவு கடந்த ஆனந்தம். தாரக்கின் முகவாய்க்கட்டையைத் தொட்டுத்தமது அன்பை தெரிவித்தார். பொங்கும் தெய்விகச் சிந்தனைகளோடு தமது அறைக்குள் நுழைந்து இரண்டு கால்களையும் முன்னால் நீட்டிக் கொண்டு தரைமீது உட்கார்ந்தார். ராமும் கேதாரும், மலர்மாலைகளாலும், பூக்களாலும் குருதேவரின் பாதங்களை அலங்கரித்தனர். குருதேவர் சமாதியில் ஆழ்ந்தார்.

கேதார் தான் முன்பு தொடர்பு கொண்டிருந்த நவரசிக் என்ற சமய சம்பிரதாயத்தில் இன்னும் நம்பிக்கை வைத்திருந்தார். அதனால் குருதேவரின் கட்டை விரலைப் பிடித்துக் கொண்டு அமர்ந்திருந்தார். குருதேவரின் தெய்விகச் சக்தி இதன் மூலம் தனக்குள் புகும் என்ற நம்பிக்கை அவருக்கு. குருதேவர் சிறிது சுயநினைவு அடைந்ததும் அன்னையிடம்

'தாயே! விரலைப் பிடித்துக் கொண்டிருப்பதின் மூலம் இவன் என்ன செய்ய முடியும்?" என்று கூறினர். கேதார் குருதேவரின் விரலைவிட்டு விட்டுக் கைகளைக் கட்டிக் கொண்டு பணிவாக உட்கார்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேதாரை நோக்கி): "பெண்—பொன் இவற்றில் உன் மனம் இன்னமும் ஆசை கொண்டிருக்கிறது. அப்படியிருக்க நீ வெறும் வாயினல் மட்டும் அவைகளை விரும்பவில்லை என்று கூறுவதால் என்ன பயன்? முன் நோக்கிச்செல். சந்தனக் கட்டைகளுக்குப் பிறகு இன்னும் விலையுயர்ந்த பொருட்கள் இருக்கின்றன. வெள்ளிச் சுரங்கம், தங்கச் சுரங்கம், வைரம், மாணிக்கச் சுரங்கங்கள் இருக்கின்றன. சிறிது விழிப்பு ஏற்பட்டிருக்கிறது என்ற காரணத்தினல் உனக்கு எல்லாம் கிடைத்து விட்டது என்று எண்ணுதே!"

குருதேவர் அன்னை காளியிடம், 'தாயே! இவனை இங்கிருந்து அகற்று!' என்று வேண்டினர். இதைக் கேட்டதும் கேதாரின் தொண்டை உலர்ந்து விட்டது. நடுங்கிக் கொண்டே ராமிடம் 'குருதேவர் ஏன் இப்படிக் கூறுகிறர்?' என்று கேட்டார்.

ராக்காலைக் கண்டதும் குருதேவர் மறுபடியும் பரவசநிலை அடைந்தார். பரவசநிலையிலேயே ராக்காலைப் பார்த்து. 'நான் இங்கு வந்து பல நாட்களாகி விட்டன. உன்னைப் பார்க்கவே இல்லையே. நீ எப்பொழுது வந்தாய்? என்று வினவினர்.

'தாம் அவதார புருடர். ராக்கால் தமது நெருங்கிய சீடர்களில் ஒருவர், தெய்விகத் தோழர்' என்பதை இவ்வாறு குறிப்பாகக் குருதேவர் உணர்த்தினர் போலும்.

### ஞாயிற்றுக்கிழமை, ஜூன் 10, 1883

காலை சுமார் பத்துமணி. தட்சிணேசுவரக்கோயில். குருதேவர் தமது அறையில் சில சமயம் உட்கார்ந்து கொண்டும், சில சமயம் நின்று கொண்டும் பக்தர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். ராக்கால், ம- லாட்டு, கிசோரி, ராம்லால், ஹாஸ்ரா முதலியோர் அறையில் இருந்தனர்.

தம் இளமைக் கால நிகழ்ச்சிகளைப் பற்றிக் குருதேவர் கூறிக் கொண்டிருந்தார்.

குருதேவர் (பக்தர்களை நோக்கி): "சிறு வயதில் நான் கிராமத்தில் இருந்த பொழுது ஆண்களும், பெண்களும் என்னிடம் மிகுந்த அன்பு காட்டினர்கள். நான் பாடுவதை

மிகுந்த ஆவலுடன் கேட்பார்கள். ஊரில் உள்ள பல மனிதர்களின் நடை, உடை பாவனைகளை நான் அப்படியே நடித்துக் காட்டுவேன். அதைக் காண்பதற்குப் பலபேர் வருவார்கள். பல வீடுகளில் பெண்கள் எனக்குத் தருவதற்காகத் தின்பண்டங்களைத் தனியே எடுத்து வைத்திருப்பார்கள். எவரும் என் மேல் எவ்வித சந்தேகமும் கொள்ள மாட்டார்கள். என்னைத் தங்கள் வீட்டின் ஒருவனுகவே கருதுவார்கள்.

"அந்த நாட்களில் நான் ஆனந்த மயமான பறவையைப் போல் இங்குமங்கும் சுற்றியபடியே விளையாடிக் கொண்டிருப்பேன். நல்லொழுக்கமும் அன்பும் உள்ள வீடுகளுக்கு அடிக்கடிப் போய்வருவேன். ஆனல், எந்த வீட்டிலாவது துன்பம் துயரம் முதலியவற்றைக் கண்டால் அங்கிருந்து ஒரே ஓட்டமாக ஓடிவந்து விடுவேன்.

"ஓரிரு நல்ல பையன்களோடு நான் நெருங்கிய நட்புக் கொண்டிருந்தேன். ஆனல், இப்போது அவர்கள் உலக வாழ்க்கையில் மூழ்கியிருக்கின்றனர். அவர்களில் சிலர் இங்கு வருகிருர்கள். என்னைப் பார்த்ததும், 'ஓ! இவன் கிராமப் பள்ளிக் கூடத்தில் எப்படியிருந்தானே அப்படியேதான் இன்னும் இருக்கிருன்' என்று கூறுகிருர்கள். எனக்குக் கணக்கு வராது ஆனல், நன்ருகச் சித்திரம் வரைவேன். தேவ தேவியரின் பொம்மைகளை அழகாகச் செய்வேன். எங்கள் வீட்டிற்கு அருகிலுள்ள அன்ன சத்திரத்திற்குச் செல்வேன். நீண்ட நேரம் நின்றபடியே அங்கு நடப்பதைக் கூர்ந்து கவனிப்பேன்.

"இராமாயணம், பாகவதம் முதலிய புத்தகங்களைப் படிக்கும் இடங்களுக்குச் சென்று அவற்றை ஆவலுடன் உட்கார்ந்து கேட்பேன். படிப்பவர் அபிநயத்தோடு படித்தால் அதைக் கற்றுக் கொண்டு மற்றவர்களுக்கு அப்படியே செய்து காட்டுவேன். பெண்களின் நடை உடை பாவனைகளைக் கூர்ந்து கவனிப்பேன். அவர்கள் பேச்சு, குரல், செயல், நடை முதலியவற்றைப் பார்த்து அவற்றை அப்படியே செய்து காட்டுவேன். தீய நடத்தையுடைய பெண்களை நான் எளிதில் அறிந்து கொள்வேன். கெட்டுப் போன விதவைப் பெண்கள் தங்களைச் சிங்காரித்துக் கொள்வார்கள். அவர்களிடம் நாணம் என்பதே கிடையாது. அவர்கள் உட்காரும் விதமே தனி. சரி, சரி. இனிமேல் இவைகளைப் பற்றிப் பேச வேண்டாம்."

பிறகு ராம்லாலைப் பாடும்படி குருதேவர் கேட்டுக் கொண்டார். ராம்லாலும் பாடத் தொடங்கினர். முதலில் காளியைக்

குறித்து ஒரு பாட்டைப் பாடினார். அதை அடுத்து மண்டோதரியின் புலம்பல் பற்றிய பாட்டைப் பாடினார். இராவணன் மாண்டபோது மண்டோதரியின் மன வேதனையை விளக்குவது அந்தப் பாடல்.

இப்பாட்டைக் கேட்டுக் கண்ணீர் வடித்துக் கொண்டே குருதேவர் கூறலானார்.

"ஒருமுறை கங்கைக் கரையில் சவுக்கு மரத்தின் பக்கமாக வந்து கொண்டிருக்கும் பொழுது ஒரு படகோட்டி பாடிய இந்தப் பாடலைக் கேட்டு நீண்ட நேரம் அழுதபடியே நின்று விட்டேன். பிறகு என்னைக் கையைப் பிடித்து அறைக்கு அழைத்து வந்தனர்."

அடுத்து கோபிகைகள் கிருஷ்ணரிடம் கொண்டிருந்த அன்பைப்பற்றி ராம்லால் பாடினார். அக்ரூரர் கிருஷ்ணனைத் தேரில் ஏற்றிக் கொண்டு மதுரைக்குப் புறப்படத் தயாரானார். அதைக் கண்டதும் சில கோபிகைகள் தேரின் சக்கரத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர். இன்னும் சிலர் சக்கரத்தின் முன் படுத்துக் கொண்டனர். அக்ரூரரிடம் அவர்களுக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று. தம் விருப்பப்படியே கிருஷ்ணர் மதுரை செல்கிறார் என்பதை, பாவம், அவர்கள் எப்படி அறிவார்கள்?

ஓடிவரும் தேரின் உருள்கின்ற சக்கரத்தை
நாடிநீர் சென்று நடுவில் தடுக்காதீர்!
சக்கரங்க ளாலாஅத் தங்கரதம் செல்கிறது?
சக்கரங்கள் யாவைக்கும் சக்கரமே மாலன்றோ!
அவனுடைய சக்கரத்தால் அண்டம் சுழல்கிறது!
எவருமவன் தேரை எதிர்மறித்து நிற்காதீர்!

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்) : "கோபிகைகளுக்குத்தான் என்ன பக்தி! என்ன பிரேமை! ராதை கிருஷ்ணனைச் சித்திரமாக வரைந்தாள். கால்கள் இருந்தால் மதுரைக்கு ஓடி விடுவான் என்று பயந்து சித்திரத்தில் அவள் கிருஷ்ணனுக்குக் கால்களையே வரையவில்லை.

"இந்தப் பாடல்களை நான் சிறுவனாக இருந்தபொழுது அடிக்கடி பாடுவேன். இது போன்ற நாடகங்களை அப்படியே நடித்துக் காட்டுவேன். 'காளியதமன்' என்ற நாடகக் குழுவில் நானும் ஒருவனாக இருந்ததாகச் சிலர் சொல்கிறார்கள்."

பக்தன் ஒருவன் புதிய வேட்டியைப் போர்த்திக் கொண்டு அங்கு வந்தான். ராக்காலுக்குக் குழந்தை சுபாவம். ஒரு கத்தரிக்கோல் கொண்டு வந்து அந்த பக்தனுடைய மேல் வேட்டியின் நுனியிலுள்ள நூலைக் கத்தரிக்கப் போனான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராக்காலிடம்) : "ஏன் அதைக் கத்திரிக்கிறாய்? இருக்கட்டுமே. பார்ப்பதற்கு கம்பளிப் போர்வையில் இருப்பது போல நன்றாகத்தானே இருக்கிறது! (வேட்டி அணிந்தவனிடம்) இதன் விலை என்ன?"

பக்தன் : "இதன் விலை ஜோடி ஒரு ரூபாய் ஆறு அணா."

குருதேவர் : "என்ன சொல்கிறாய்! ஜோடி ஒரு ரூபாய் ஆறு அணாவா? அவ்வளவு விலையா?" (அப்போது வெளிநாட்டுத் துணிகளின் விலை மலிவாக இருந்தது.)

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் பக்தனிடம், "போ. போய் கங்கையில் குளித்துவிட்டு வா." (அருகிலிருப்பவரிடம்) "இவனுக்குக் கொஞ்சம் எண்ணெ கொடுங்கள்" என்றார். பக்தன் நீராடி விட்டு வந்தான். குருதேவர் அலமாரியிலிருந்து ஒரு மாம்பழத்தை எடுத்து அந்த பக்தனுக்குக் கொடுத்தார்.

"இவனுக்கு இந்தப் பழத்தைக் கொடுக்கிறேன். இவன் மூன்றில் தேர்வு [1]பெற்றிருக்கிறான். உன் சகோதரன் எப்படி இருக்கிறான்?" என்று கேட்டார்.

பக்தன் : "நல்ல மருந்து கொடுத்திருக்கிறார்கள். குணமடைய வேண்டும்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அவனுக்கு நீ ஒரு வேலை தேடிக் கொடுக்கக் கூடாதா? நீ கண்காணிப்பாளர். உனக்கு நிறையப் பேரைத் தெரியுமே?"

பக்தன் : "உடல் குணமடையட்டும். பிறகு அதற்கு ஏற்பாடு செய்யலாம்."

குருதேவர் மதிய உணவுக்குப் பிறகு சிறிய கட்டிலில் உட்கார்ந்து கொண்டிருந்தார். ஓய்வு எடுத்துக் கொள்ள இன்னமும் சமயம் வாய்க்கவில்லை. பக்தர்கள் வந்து கொண்டேயிருந்தனர். மணிராம்பூரிலிருந்து ஒரு பக்தர் கூட்டம் வந்தது. அரசாங்க வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பக்தர் ஒருவர் வந்

1. கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றவர்களைக் குருதேவர் இப்படிக் குறிப்பிடுவார்.

திருந்தார். அவர் ஓய்வு ஊதியம் பெற்று வந்தார். மற்றொரு பக்தர் அவரை அழைத்து வந்திருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு பெல்கோரியாவிலிருந்து பக்தர் கூட்டம் ஒன்று வந்தது. மணிமல்லிக் முதலிய பக்தர்களும் வந்து சேர்ந்தனர்.

மணிராம்பூர் பக்தர்கள் : "ஐயா! எங்களால் நீங்கள் ஓய்வு எடுக்க முடியாமல் போய்விட்டது!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அப்படியெல்லாம் இல்லை. நீங்கள் கூறுவது ரஜோகுணமுள்ளவர்களுக்குத் தான் பொருந்தும். அத்தகையவரைப் பற்றி மக்கள் 'அவர் இப்போது சுகமாகத் தூங்கிக் கொண்டிருக்கிறார்' என்பார்கள்."

சாணக்மணிபூர் என்ற பெயரைக் கேட்டதும் குருதேவருக்குத் தம் பால்ய நண்பன் ஸ்ரீராமின் நினைவு வந்தது. குருதேவர் கூறினார்: "ஸ்ரீராமினுடைய கடை உங்கள் கிராமத்தில் இன்னும் இருக்கிறது அல்லவா? கமார்ப்புகூரில் அவன் என்னுடன் படித்தான். சில நாட்களுக்கு முன்பு இங்கு வந்திருந்தான்."

மணிராம்பூர் பக்தன் : "இறைவனை எப்படி அடையலாம்? தயவு செய்து எங்களுக்குக் கூறி அருளுங்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சிறிது சாதனை பழக வேண்டுவது அவசியம். பாலில் வெண்ணெய் இருக்கிறது என்று சொன்னால் மட்டும் போதாது. பாலைத் தயிராக்கி, வெண்ணெயைக் கடைந்தெடுக்க வேண்டும். அடிக்கடித் தனிமையில் வாழ வேண்டும். சில தினங்கள் தனிமையிலிருந்து இறைவனிடம் பக்தியை வளர்த்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகு எங்கு வேண்டுமானாலும் தங்கலாம். காலில் செருப்பிருந்தால் முட்கள் நிறைந்த காட்டிலும் சுலபமாக நடந்து செல்லலாம். வேண்டியதெல்லாம் நம்பிக்கை ஒன்று தான். எண்ணத்திற்கு ஏற்ற பலன் விளையும். இதுதான் அடிப்படைக் கொள்கை. நம்பிக்கை ஏற்பட்டு விட்டால், பிறகு எந்தவித அச்சமும் இல்லை."

மணிராம்பூர் பக்தன் : "ஐயா, குரு அவசியமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆமாம். பலருக்குக் குரு அவசியம். அதை விட இன்றியமையாதது குருவின் வார்த்தைகளில் நம்பிக்கை வைப்பது. குருவைக் கடவுளாகக் காண்பவன் வெற்றி அடைவான். அதனால்தான் குரு, கிருஷ்ணர், வைஷ்ணவர் மூவரும் ஒன்று என்று வைஷ்ணவர்கள் கூறுகிறார்கள்.

"இறைவன் திருநாமத்தை இடைவிடாமல் ஓத வேண்டியது அவசியம். கலியுகத்தில் இறைவனுடைய நாமத்திற்கு மிக்க ஆற்றல் உண்டு. இந்த யுகத்தில் உயிர், உணவையே சார்ந்திருப்பதால் யோகம் பழகுவது கடினம். பகவானுடைய பெயரைக் கைதட்டிக் கூவினால் பாவம் என்னும் பறவை பறந்து ஓடி விடுகிறது.

"சாதுக்களின் சேர்க்கை மிக அவசியம். அதை இடைவிடாது அடைய முயல வேண்டும். கங்கையை நோக்கி எவ்வளவு அருகில் செல்கிறோமோ, அந்த அளவிற்கு நாம் குளிர்ந்த காற்றைப் பெறுகிறோம். நெருப்பின் அருகே எந்த அளவு நெருங்குகிறோமோ அந்த அளவுக்குச் சூட்டைப் பெறுகிறோம். சோம்பல், காரியங்களைத் தள்ளிப் போடுதல் இவைகளின் மூலம் எதையும் அடைய முடியாது. உலக வாழ்க்கையில் நாட்டம் உடையவர்கள், ஆத்மிக வாழ்வைப் பற்றிப் பேசும் பொழுது, 'என்றாவது ஒரு நாள் இறைவனை அடையத்தான் போகிறோம். எல்லாம் காலம் வரும்போது கிடைக்கும். இப்பொழுது ஏன் அதைப் பற்றிய கவலை?' என்பார்கள்.

"நான் ஒரு முறை கேசவரிடம், 'ஒரு மகன் தனக்குச் சேர வேண்டிய சொத்தைப் பெறத் தன் தந்தையை அதிகமாக வற்புறுத்தும் போது, தந்தை அவனது பிடிவாதத்தைத் தாங்கமாட்டாது, மூன்று[1] வருடங்கள் முன்கூட்டியே சொத்தைப் பிரித்துக் கொடுத்து விடுகிறார்' என்று கூறினேன்.

"மேலும் பச்சிளங் குழந்தை, விளையாட்டுப் பொம்மையை வாயில் வைத்துச் சப்பியவாறு படுத்துக் கொண்டிருக்கும் போது அன்னை உணவு சமைத்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் குழந்தை அந்தப் பொம்மையை எறிந்து விட்டு ஓவென்று அழும்போது, கொதித்துக் கொண்டிருக்கும் சோற்றுப் பாத்திரத்தை உடனே அடுப்பிலிருந்து கீழே இறக்கி வைத்து விட்டு ஓடோடி வந்து அதனைத் தூக்கி வைத்துப் பால் கொடுக்கிறாள். இதையெல்லாம் நான் கேசவருக்குச் சொல்லி இருக்கிறேன்.

"கலியுகத்தில் கடவுளுக்காக ஓர் இரவு, ஒரு பகல் அழுதாலே போதும். ஈசனது காட்சி கிட்டும் என்று கூறுவார்கள்.

1. சட்டப்படி சொத்தை அடைவதற்குரிய வயது வருமுன்

"கடவுளிடம் கோபப் படலாம். நீ என்னைப் படைத்திருக்கிருயே. கண்டிப்பாக உனது காட்சியைத் தர வேண்டும் என்று கேட்டுக் கோபிக்கலாம். இறைவன் உள்ளத்தைத்தான் பார்க்கிருன். நீ குடும்ப வாழ்க்கையிலாவது அல்லது வேறு எதிலாவது இரு. பொருளாசை கொண்ட மனம் ஈரமான நெருப்புக் குச்சிக்குச் சமம். எவ்வளவு உரசினுலும் அது எரிவதில்லை. ஏகலைவன் துரோணுச்சாரியரின் மண் உருவத்தைக் குருவாக வைத்தே வில் வித்தையில் மிகச் சிறப்பாகத் தேர்ச்சி பெற்ருன்.

"முன்னேறிச் செல். விறகு வெட்டி, காட்டில் முன்னேறிச் சென்றதனுல் முறையே, சந்தன மரங்கள், வெள்ளிச் சுரங்கம், தங்கச் சுரங்கம் முதலியவற்றைக் கண்டான். பிறகு மேலும் முன்னேக்கிச் சென்று வைரம், மாணிக்கம் முதலிய சுரங்கங்களையும் கண்டெடுத்தான்.

"அறியாமையில் இருப்பவர்களின் நிலைமை மண்சுவர்களைக் கொண்ட வீட்டில் வாழ்பவர்களுக்கு ஒப்பாகும். வீட்டிற்குள் போதிய வெளிச்சம் இல்லை; வெளிப்பொருள் ஒன்றையுமே பார்க்க முடிவதில்லை. ஞானத்தோடு இல்லறத்தில் வாழ்பவனின் நிலைமை கண்ணுடி வீட்டில் வாழ்வதற்குச் சமம். வீட்டின் உள்ளும் வெளிச்சம், வெளியிலும் வெளிச்சம். உள்ளே இருக்கும் பொருள்களையும் வெளியே இருக்கும் பொருள்களையும் அவனுல் பார்க்க முடிகிறது.

"இருப்பது ஒன்றே ஒன்று தான். அந்த ஒன்றைத் தவிர வேறு எதுவும் இல்லை. அதுதான் பரப்பிரம்மம். 'நான்' என்னும் எண்ணம் நம்மிடம் எவ்வளவு நாள் இருக்கிறதோ அதுவரை அந்தப் பரப்பிரம்மமே ஆதி சக்தியின் வடிவத்தில் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தொழில்களையும் புரிந்து வருவதாக நமக்குக் காட்டுகிறது.

"பிரம்மம் தான் ஆதிசக்தி. ஓர் அரசன் ஒரு யோகியிடம் 'எனக்கு ஒரே வார்த்தையில் ஞானம் அளிக்க வேண்டும்' என்று கேட்டான். அதற்கு யோகி, 'சரி! நீ ஒரே வார்த்தையில் ஞானம் பெற ஏற்பாடு செய்கிறேன்' என்ருர்.

"சிறிது நேரத்திற்குள் அரசனிடம் ஒரு மாயவித்தைக்காரன் வந்து நின்ருன். அவன் வந்ததும் இரண்டு விரல்களைச் சுற்றிக்கொண்டே அரசனிடம், 'இதோ பாருங்கள், இதோ

பாருங்கள்' என்ருன். அரசனும் ஆச்சரியத்துடன் அதைப் பார்த்தான். சிறிது நேரம் சென்றதும் இரண்டு விரல்கள் ஒரு விரலாக மாறின. மாய வித்தைக்காரன் அந்த ஒரு விரலைச் சுற்றியபடியே, 'அரசே! இதோ பாருங்கள், இதோ பாருங்கள்' என்ருன். இதன் பொருள் பிரம்மமும், ஆதிசக்தியும் முதலில் இரண்டாகத் தோன்றுகின்றன. ஆனல், பிரம்மஞானம் ஏற்பட்டபிறகு இரண்டு இருப்பதில்லை. வேறுபாடு இல்லை. இருப்பதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். இறைவன் இரண்டற்ற ஒன்று என்பதுதான்."

பெல்கோரியாவிலிருந்து கோவிந்த முகோபாத்யாயர் முதலிய பக்தர்கள் வந்திருந்தனர். முன்பு ஒருமுறை இவர் வீட்டிற்குக் குருதேவர் சென்றிருந்தார். அப்பொழுது ஒரு பாடகர், 'அன்னையே விழித்தெழு விழித்தெழு' என்ற பாட்டைப் பாடினர். அதைக்கேட்டதும் குருதேவர் சமாதி அடைந்துவிட்டார். கோவிந்தர் அந்தப்பாடகரையும் இப் பொழுது அழைத்து வந்திருந்தார். குருதேவர் பாடகரைப் பார்த்து ஆனந்தமடைந்தவராய் 'நீ சில பாட்டுகளைப் பாடு' என்ருர். பாடகர் அன்னையைக் குறித்துச் சில பாடல்களைப் பாடினர். அவற்றில் ஒன்று ஆறு சக்கரங்களையும், விழிப்புற்ற குண்டலினியையும் பற்றியது.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இப்பாட்டில் குண்டலினிசக்தி ஆறு சக்கரங்களைத் துளைப்பதுபற்றிய செய்தி இருக்கிறது இறைவன் உள்ளும் புறமும் இருக்கிருன். அவன் உள்ளிருந்து மனத்தில் பல நிலைகளை உண்டு பண்ணுகிருன். ஆறு சக்கரங்களைத் துளைத்துச் சென்ருல் மாயையைக்கடந்து ஜீவாத்மாவானது பரமாத்வாவோடு சேர்ந்து ஒன்ருகிவிடுகிறது. இதனை இறைவனைக் காணல் என்பர்.

"மாயை வழிவிடாவிட்டால் இறைவனது காட்சியைப் பெற இயலாது. இராமர், இலட்சுமணர், சீதை ஆகிய மூன்று பேரும் வனத்தில் சென்றுகொண்டிருந்தனர். முதலில் இராமர், அவருக்குப்பின்னல் சீதை அதையடுத்து இலட்சுமணர். சீதை நடுவிலிருந்தாள். இதனல் இலட்சுமணருக்கு இராமரைப்பார்க்க முடியவில்லை. அதே போல் நடுவில் மாயை இருப்பதால் ஜீவன் பரமனைக் காண முடிவதில்லை. (மணிமல்லிக்கைப் பார்த்து) கடவுளுடைய கருணை கிடைக்குமானல் மாயை வழி விட்டு விடும். எஜமானன் உத்தரவிட்டால் காவல்காரன் நம்மை உள்ளே போக விடுகிருன்.

"வேதாந்தம் காட்டும் வழிவேறு. புராணம் காட்டும் வழிவேறு. 'இந்த வாழ்க்கை ஒரு மாயமாளிகை போன்றது. உள்ளது போலத் தோன்றினும் உண்மையில் இல்லாதது, கனவைப் போன்றது' என்று வேதாந்தம் கூறுகிறது. ஆனால் புராணங்களும், பக்தி சாஸ்திரங்களும், இறைவனே இருபத்து நான்கு தத்துவங்களாக ஆகி இருக்கிறான் என்று கூறுகின்றன. அவனை உள்ளேயும் வெளியேயும் பூஜை செய். 'நான்' என்ற உண்மை இருக்கும்வரை வெளி உலகமும் உண்மை. அப்போது உலகம் கனவு போன்றது என்று கூற முடியாது. அடுப்பில் நெருப்பு எரிந்து கொண்டிருப்பதால், அடுப்பின் மேலுள்ள பாத்திரத்தில் அரிசி, பருப்பு, கிழங்கு முதலியவைகள் குதிக்கின்றன. அவைகள் குதிப்பது, 'நான் இருக்கிறேன், நான் இருக்கிறேன்' என்று கூறுவது போலத் தோன்றுகிறது. உடல் மட்பாண்டம். மனம், புத்தி என்பவை தண்ணீர். தீப்பொறிகள் உலக விஷயங்கள். அரிசி, பருப்பு, கிழங்கு முதலியன பற்றுக்கள். 'டங், டங்' என்று குதிப்பது 'நான்' எனும் எண்ணம். சச்சிதானந்தமே நெருப்பு.

"ஆகவேதான் பக்தி சாஸ்திரம் இந்த வாழ்க்கையை ஒரு களிப்படையும் 'விளையாட்டு மாளிகை' என்று குறிக்கின்றது. இராமப் பிரசாதர் ஒரு பாட்டில் இந்த உலகத்தை 'ஒரு மாய மாளிகை' என்று கூறுகிறார். அதற்கு விடையளிப்பது போல் மற்றொரு பக்தர் உலகை 'ஒரு விளையாட்டு மாளிகை' என்று அழைக்கிறார். காளியின் பக்தன், ஜீவன் முக்தன்; நித்யானந்த மயமானவன். இறைவனே மாயையாக இருப்பதை பக்தன் காண்கிறான். இறைவனே ஜீவர்களாகவும், உலகமாகவும் விளங்குகிறான். 'இறைவன், மாயை-உயிர்-உலகம்' எல்லாம் ஒன்றென்று பக்தன் காண்கிறான். சில பக்தர்கள் எல்லாவற்றையும் இராமமயமாகக் காண்கின்றனர். இராமரே எல்லாமாகியுள்ளார் என்பார்கள். வேறு சிலர் அனைத்தையும் இராதா கிருஷ்ண மயமாகக் காண்கின்றனர். கிருஷ்ணனே இருபத்து நான்கு தத்துவங்களாகத் திகழ்கிறான் என்பர். பச்சைக் கண்ணாடி அணிந்து கொண்டால் பார்ப்பதெல்லாம் பச்சையாகவே தெரியும்.

"பக்தி மார்க்கங்கள் பரமனுடைய சக்தியில் வேற்றுமை இருப்பதை ஒப்புக் கொள்கின்றன. உண்மையில் இராமனே எல்லாமாக இருக்கிறான். ஆனால், சில இடங்களில் அவனுடைய சக்தி அதிகமாக வெளிப்படுகிறது. வேறு சில இடங்களில் அவனுடைய சக்தி குறைவாக வெளிப்படுகிறது. அவதார

புருஷர்களிடம் வெளிப்படும் சக்தி ஒரு விதம். சாதாரண ஜீவர்களிடத்தில் வெளிப்படும் சக்தி மற்றொரு விதம். அவதார புருஷர்களிடமும் உடலைப்பற்றிய எண்ணமுண்டு. உடலை உண்டாக்கிக் கொள்வதே மாயை. சீதைக்காக இராமன் அழுது கதறினன். அவதார புருஷர்கள் வேண்டுமென்றே தங்களுடைய கண்களைக் கட்டிக் கொள்கின்றனர். இது குழந்தைகள் கண்ணுமூச்சி விளையாடுவதுபோல. அன்னை பராசக்தி அழைத்த மாத்திரத்தில் அந்த விளையாட்டு நின்று விடுகிறது. சாதாரண மனிதர்களின் நிலை வேறுவிதம், எந்தத் துணியால் கண் மூடப்பட்டு இருக்கிறதோ அதே துணி முதுகிலும் வைக்கப்பட்டு எட்டு ஆணிகளால் அறையப்படுகிறது. எட்டு ஆணிகள் என்பன எட்டு பந்தங்கள். அவை வெட்கம், வெறுப்பு, பயம், சாதிப்பெருமை, குலப்பெருமை, ஆணவம், துன்பம், இழிவு முதலியன. குருவின் துணையின்றி இவைகளை அவிழ்க்க இயலாது."

பக்தன் : "ஐயா, அருள் கூர்ந்து எங்களை ஆசிர்வதியுங்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "எல்லோரிடமும் இறைவன் இருக்கிறார். ஆனால், வீட்டில் எரிவாயு வேண்டுமென்றால் கம்பெனிக்கு விண்ணப்பிக்க வேண்டும். அப்பொழுதுதான் எரிவாயு சிலிண்டரை உன் வீட்டில் கொண்டு வந்து குழாயுடன் இணைப்பான்.

"மூவகைக் கவர்ச்சிகளை ஒன்று சேர்த்து இறைவனிடம் செலுத்தினல் அவனது காட்சி கிடைக்கும் என்று சொல்லப்படுகிறது. தாய்க்குக் குழந்தையிடம் இருக்கும் கவர்ச்சி, கற்புள்ள பெண் கணவனிடம் கொள்ளும் ஈர்ப்பு, கஞ்சனுக்குப் பொருள்களின் மேல் உள்ள பற்று, இவைகளே மூவகைக் கவர்ச்சிகளாகும்.

"உண்மையான பக்தனை அறிந்துகொள்வதற்கு அடையாளங்கள் உண்டு. மகுடியின் ஓசையைக் கேட்ட விஷப்பாம்பு கட்டுண்டு நிற்பதைப்போல, குருவின் உபதேசத்தைக் கேட்டதும் பக்தனின் மனம், சலனமின்றி ஒரே நிலையில் நிற்கிறது. விஷப் பாம்பு என்று நான் இங்கே நாகப்பாம்பைச் சொல்லவில்லை. மற்றோர் அடையாளம், உண்மையான பக்தன் குருவின் மொழியை நன்றாகப் புரிந்து கொண்டு, அதை வாழ்க்கையில் கடைப்பிடிக்கும் ஆற்றல் பெற்றிருப்பான். வெறும் கண்ணாடியின் மீது எந்த உருவத்தின்

அச்சினையும் பதிக்க முடியாது. ஆனால் கண்ணாடியின் மீது கருப்பு வர்ணம் தடவப்பட்டிருந்தால், புகைப்படம் பிடிப்பது போன்று உருவம் படியும். அந்தக் கருப்பு வர்ணம்தான் கடவுளிடம் கொள்ளும்பக்தி. இன்னொரு அடையாளம் சொல்கிறேன். உண்மையான பக்தன் ஐம்பொறிகளையும் அடக்கியவனாக இருப்பான். அவன் காமத்தை வென்றவன். கோபிகைகளிடம் காமஇச்சை சிறிதும் இருந்ததில்லை.

"நீங்கள் இல்லறவாழ்வில் இருப்பதைப்பற்றிக் குறிப்பிட்டீர்கள். அதில் தவறு ஒன்றுமில்லை. சொல்லப் போனால் சாதனைபுரிய, இந்த வாழ்க்கை மிகவும் உதவியாக இருக்கும். இது கோட்டைக்குள் இருந்துகொண்டு சண்டை செய்வது போலாகும். சவசாதனம்[1] செய்யும்போது பிணம் அடிக்கடி வாய்திறக்கும். அப்போது பச்சரிசி, பருப்பு அல்லது ஏதாவது ஒன்றை அதன் வாயில் அடிக்கடி போட வேண்டும். சவசாதனம் செய்பவர்கள் இத்தகைய பொருட்களைத் தங்களுடன் வைத்திருப்பார்கள். பிணம் வாய் திறக்காமல் அமைதி அடைந்தால்தான் கவலையில்லாமல் ஜபம் செய்ய முடியும். அதேபோல் இல்லறத்தில் வாழ்கிறவன் மனைவி, மக்களை அமைதியாக வைத்திருக்க வேண்டும். அவர்களுக்கு வேண்டிய உணவு, உடை முதலியவற்றுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அப்பொழுதுதான் அவனுக்குச் சாதனம் பழகுவதற்கு வேண்டிய சாதகமான நிலைமை உண்டாகும்.

"சில உலக இன்பங்களைச் சிறிதுகாலம் அனுபவிக்க விரும்பும் சாதகன், வாழ்க்கையில் இருந்து கொண்டே இறைவனை நாடவேண்டும். அதனால்தான் நித்தியானந்தர் இத்தகையவர்களுக்குச் சுவையான மாகுர் மீன் குழம்பு,[2] இளம் பெண்களின் தழுவல்,[3] ஹரிநாம சங்கீர்த்தனம் இசைத்தல் முதலியவற்றை வழிகளாக அமைத்தார்.

"ஆனால் உண்மையான துறவியின் நிலை முற்றிலும் வேறானது. தேனீ, மலரைத் தவிர வேறு எதன் மீதும் உட்காராது. சாதகப்பட்சி எந்த நீரையும் பருகாது. சுவாதி நட்சத்திரம் வானத்தில் உதிக்கும்போது பெய்யும் மழை நீருக்காக மட்டுமே எதிர்நோக்கி ஏங்கி நிற்கும். வேறு எந்த நீரையும் பருகாது. இது போல உண்மையான துறவி

1. பிணத்தின் மீது அமர்ந்து கொண்டு செய்யப்படும் ஒருவகை தாந்திரீக சாதனம்.
2. அன்புக்கண்ணீர்
3. பக்திப் பெருக்கீட்டால் பூமியில் புரளுவது. (இளம் பெண்-பூமி.)

இறைவனது ஆனந்தத்தைத்தவிர வேறுஆனந்தங்களை விரும்ப மாட்டான். தேனீ மலரில் மட்டுமே உட்காரும். உண்மை யான துறவி தேனீக்கு ஒப்பானவன், இல்லறபக்தர்கள் சாதாரண ஈ போன்றவர்கள். ஈ, இனிப்புப்பண்டங்களிலும் உட்காரும், மலத்திலும் உட்காரும்.

"நீங்கள் இவ்வளவு துன்பப்பட்டு இங்கே வந்திருக்கிறீர்கள். இறைவனைத் தேடி அலைகிறீர்கள். பெரும்பாலான மக்கள் தோட்டத்தைப் பார்த்தே ஆனந்தம் அடைகிறார்கள். ஏதோ ஓரிருவர் மட்டுமே தோட்டம் வைத்தவனைத் தேடு கின்றனர். உலகத்தில் நிறைந்திருக்கும் செல்வத்தை மட்டுமே மக்கள் பார்க்கின்றனர். அதன் சொந்தக்காரனைப் பார்க்க விரும்புவதில்லை. (பாடகரைச் சுட்டிக் காட்டி) கொஞ்ச நேரத்திற்கு முன்னால் இவர் ஆறு சக்கரங்களை விளக்கும் ஒரு பாடலைப்பாடினார். அவை யோகத்தைக் குறிப்பன. இரண்டு வகையான யோகங்கள் இருக்கின்றன. ஒன்று ஹடயோகம், மற்றொன்று ராஜயோகம். ஹடயோகி பலவிதமான உடற் பயிற்சி செய்கிறான். உடல் நீண்டநாள் உயிரோடு இருக்க வேண்டும் என்பது அவன் எண்ணம். ஆனால் ராஜயோகத்தின் நோக்கமே வேறு. அது பக்தி, அன்பு, ஞானம், வைராக்கியம் முதலியவைகளைத் தருகிறது. எனவே **ராஜயோகம் தான் சிறந்தது**.

"வேதாந்தத்தில் சொல்லப்படுகின்ற ஏழு பூமிகளுக்கும், யோகத்தில் சொல்லப்படும் ஆறு சக்கரங்களுக்கும் பல ஒற் றுமைகள் உள்ளன. வேதத்தின் மூன்று பூமிகளும், யோகத்தின் மூன்று சக்கரங்களான மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம் என்பனவாகும். இந்த மூன்று பூமிகள் அதாவது லிங்கம், குஹ்யம், நாபி என்பன மனத்தின் இருப்பிடங்களாகும். நான்காவது பூமியை மனம் அடையும் பொழுது, அதாவது அனாஹதச் சக்கரத்தை அடையும் பொழுது, அக்கினி ஜுவாலை போன்று ஜீவாத்மாவின் ஒளிமயமான காட்சி கிடைக்கிறது. அந்நிலையில் சாதகன், 'இது என்ன! இது என்ன!' என்று ஆச்சரியப் படுகிறான்.

"ஐந்தாவது பூமிக்கு மனம் செல்லும் பொழுது இறைவனைப் பற்றிய பேச்சுக்களைமட்டும் கேட்க மனம் ஆவல் கொள்ளும். இங்கு விசுத்த சக்கரம் இருக்கிறது. வேதாந்தத்தின் ஆறாவது பூமியும், யோகத்தின் ஆக்ஞா சக்கரமும் ஒன்று. அங்கு மனம் சென்றதும் இறைவனது காட்சி கிடைக்கிறது. ஆனால் அதைத்

தொடமுடியாது. இலாந்தர் விளக்கின் உள்ளே திரி எரிவது போன்றது இது. திரியைச் சுற்றி இலாந்தர் கண்ணாடி இருப்பதால் திரியைத் தொட முடியாது.

"ஜனகர் ஐந்தாவது பூமியிலிருந்து உபதேசம் அளித்தார். அவர் சில சமயம் ஐந்தாவது பூமியிலும், வேறுசில சமயம் ஆறாவது பூமியிலுமாகத் தங்குவார். ஆறு சக்கரங்களைத்துளைத்த பிறகு மனம் ஏழாவது பூமியை அடையும். மனம் அங்கே சென்றதும் அது தனது சுயவடிவத்தை இழந்து விடுகிறது. ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றாகி விடுகின்றன. சமாதிநிலை உண்டாகிறது; உடலைப்பற்றிய நினைவுகள் அனைத்தும் மறந்து விடுகின்றன. வெளிஉணர்வு நீங்கிவிடுகிறது; பல்வேறு பொருட்களை அறியவிரும்பும் அறிவு மறைகிறது; கேள்வி கேட்கும் மனநிலையும் மறைந்து போகிறது.

"திரைலிங்க சுவாமிகள் ஒரு முறை, 'விசாரம் அல்லது கேள்வி கேட்கும் மனநிலைகளால் ஒருவனுக்குப் பொருட்கள் பலவிதமாகத் தோற்றமளிக்கின்றன. அப்போது பல்வேறான பொருட்களை உணர்கிறான். சமாதி அடைந்ததும் இருபத்தியொருநாட்களில் உடலை விட்டு விடுகிறான்' என்று கூறினார். குண்டலினி சக்தி விழித்து எழுந்தாலன்றி தெய்விக உணர்ச்சி ஏற்படுவதில்லை.

"இறைவனுடைய காட்சியைப் பெற்றவர்களிடம் இன்னும் சில அடையாளங்களைக் காணலாம். அவர்கள் குழந்தையைப் போலவும், பைத்தியக்காரனைப் போலவும், அப்படியே நிற்கும் தூணைப் போலவும், அல்லது பிசாசைப் போலவும் ஆகிவிடுகிறார்கள். 'நான் இயந்திரம், இறைவன் அதை இயக்குபவன்' என்ற திடமான நம்பிக்கை அவர்களுக்கு ஏற்பட்டு விடுகிறது. செயல் புரிபவர் அவர் ஒருவரே, மற்றவர் யாவரும் செயலற்றவர்கள். 'இலை அசைவதும் இறைவனின் இச்சைப்படியே' என்று சீக்கியர்கள் கூறுவார்கள். இராமனின் விருப்பப்படியே எல்லாம் நடக்கின்றன என்ற எண்ணம் வேண்டும். நெசவாளன் ஒருவன் 'எல்லாமே இராமனின் விருப்பப்படிதான் நடக்கின்றன; இராமரது விருப்பப்படி துணியின் விலை ஒரு ரூபாய் நான்கு அணா. இராமரது விருப்பப்படித் திருடர்கள் வந்தார்கள். இராமரது விருப்பப்படி என்னைப் போலீஸார் பிடித்துக் கொண்டார்கள். கடைசியில் இராமரது விருப்பப்படியே என்னை விடுதலையும் செய்தார்கள்' என்றான். இந்த எண்ணம் நமக்கு வேண்டும்."

மாலைப்பொழுது நெருங்கிக் கொண்டிருந்தது. பகல் உண விற்குப் பிறகு குருதேவரால் ஓய்வு எடுத்துக் கொள்ள முடிய வில்லை. ஓய்வில்லாமல் பக்தர்களுடன் பேசிக் கொண்டே இருந்தார். இப்பொழுது மணிப்பூர், பெல்கோரியா முதலிய இடத்தைச் சேர்ந்த பக்தர்களும், மற்ற பக்தர்களும் குருதேவரைத் தரையில் விழுந்து வணங்கி விடைபெற்றனர். பிறகு காளிகோயிலில் தேவியை வழிபட்டு விட்டுத் தத்தம் இருப்பிடம் நோக்கிச் சென்றனர்.

## வெள்ளிக்கிழமை, ஜூன் 15, 1883

சுக்கில பட்சத் தசமிநாள். தசஹரா என்ற பண்டிகை காரணமாக விடுமுறை. பக்தர்கள் பகவான் ஸ்ரீராம கிருஷ்ணரைத் தரிசிப்பதற்காக தட்சிணேசுவரக் காளி கோயிலுக்கு வந்திருந்தார்கள். அதர், ம- இருவருக்கும் தசஹரா விழாவை முன்னிட்டு விடுமுறை கிடைத்திருந்ததால் அவர்களும் வந்திருந்தனர்.

ராக்காலின் தந்தை தம் மாமனுரோடு வந்திருந்தார். ராக் காலின் தந்தை இரண்டாவது திருமணம் செய்து கொண்டிருந் தார். அவரது மாமனுர் பல நாட்களுக்கு முன்பே குருதேவரின் பெயரைக் கேள்விப்பட்டிருந்தார். அவர் ஒரு சாதகர். ஆதலால் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிப்பதற்கென்றே வந்திருந் தார். உணவு உட்கொண்ட பிறகு குருதேவர் சிறிய கட்டிலின் மீது வந்து அமர்ந்தார். அவர் அடிக்கடி ராக்காலுடைய தந்தையின் மாமனுரைப் பார்த்துக் கொண்டிருந்தார். அடியார் கள் தரைமீது அமர்ந்திருந்தனர்.

மாமனுர்: "சுவாமி, இல்லறத்தில் இருப்பவர்களால் கடவுளை அடைய முடியுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்முறுவலுடன்): "ஏன் முடியாது? சேற்றுமீனைப் போல இவ்வுலகில் வாழ்ந்து வர வேண்டும். அது சேற்று நீரில் வாழ்ந்தாலும் அதன் உடலில் சேறு ஒட்டுவ தில்லை. கற்பிழந்த பெண்ணைப் போல இருந்து வா. அந்தப் பெண் வீட்டு வேலைகளைச் செய்துகொண்டிருப்பாள். ஆனால், அவளது உள்ளமோ தனது கள்ளக்காதலனையே நினைத்துக் கொண்டிருக்கும். இறைவனிடம் மனத்தை ஒப்படைத்துவிட்டு உலகக்கடமைகள் எல்லாவற்றையும் செய்துவா. ஆனால் இவ் விதம் இருப்பது மிகவும் கடினம்.

"ஒரு சமயம் நான் பிரம்ம சமாஜத்தவரிடம் 'எந்த அறையில் ஊறுகாய் ஜாடியும், குடிநீர்ப் பானையும் வைக்கப்பட்டுள்ளனவோ அந்த அறையில் விஷஜுரமுள்ள நோயாளி படுத்திருந்தால் எப்படி அவனது நோய் நீங்கும்? ஊறுகாய் என்ற நினைப்பு மனத்தில் எழுந்தாலே வாயில் நீர் ஊறுகிறதே?' என்று கூறினேன். ஆண்கள் விஷயத்தில், பெண்கள்தான் ஊறுகாய் நிறைந்த ஜாடி போன்றவர்கள். மனிதனிடம் லௌகிக ஆசை எப்போதும் இருந்து வருகிறது. இந்த உலக ஆசை காய்ச்சல் கொண்ட நோயாளியின் தணியாத நீர் வேட்கையைப் போன்றது. டைபாய்டு நோயாளி, 'நான் ஒரு குடம் தண்ணீர் குடிப்பேன்' என்று அடம் பிடிக்கிறான். அந்த அளவுக்கு நிலைமை மோசமாகி விடுகிறது.

"குடும்ப வாழ்க்கையிலோ பல வகையான குழப்பங்கள். இந்தப் பக்கம் சென்றால் கடப்பாரை அடி. அந்தப் பக்கம் சென்றால் துடைப்பத்தால் அடி, இன்னொரு பக்கம் சென்றால் செருப்படி படுகிறோம். எனவே மக்கள் நடமாட்டம் இல்லாத தனிமையான ஓர் இடத்தில் இருந்தாலன்றிக் கடவுள் சிந்தனை வருவதில்லை. நகைகள் செய்வதற்குத் தட்டான் பொன்னை உருக்குகிறான். பொன்னை உருக்கும் வேளையில் திரும்பத் திரும்ப அவனைக் கூவி அழைத்தால் அவன் பொன்னை எப்படி உருக்க முடியும்? குத்திய நெல்லிலிருந்து அரிசியையும் உமியையும் பிரிக்கும் போது தனியாக உட்கார்ந்து பிரிக்க வேண்டும்; அடிக்கடி அரிசியைக் கையில் எடுத்துச் சுத்தமாக இருக்கிறதா என்று சரி பார்க்க வேண்டும். இவ்விதம் குத்திய நெல்லைப் பிரிக்கும் போது வேலை செய்யும் ஆளைப்பல முறை கூப்பிட்டுக் கொண்டிருந்தால் சரிபார்க்கும் அந்த வேலை எப்படி நடைபெறும்?"

ஒரு பக்தர் : "சுவாமி, அப்படியானால் வழி என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "வழி இருக்கிறது. தீவிர வைராக்கியம் உண்டாகுமானால் வெற்றிக்கு வழி உண்டு. எது பொய்யான பொருள் என்று அறிகிறாயோ, அதை உறுதிப் படுத்திக் கொண்டு, அந்தக் கணமே அதைத் துறந்து விட வேண்டும். நான் ஒரு சமயம் கடும் நோய்வாய்ப் பட்டிருந்தேன். அப்போது கங்கா பிரசாத்சேனர் என்பவரிடம் என்னை அழைத்துச் சென்றார்கள். கங்கா பிரசாத் என்னிடம், 'நீங்கள் ஒரு மருந்து சாப்பிட வேண்டும். ஆனால் தண்ணீரே குடிக்கக் கூடாது. மாதுளை ரசம் வேண்டுமானால் பருகலாம்' என்று சொன்னார். நான் எப்

படித்தான் தண்ணீர் குடிக்காமல் இருக்கப் போகிறேனே என்று அனைவரும் நினைத்தனர். ஆனால் நானோ, 'என்னவானாலும் சரி தண்ணீர் குடிக்கப் போவதில்லை' என்ற தீர்மானித்துக் கொண்டேன். 'நான் பரமஹம்ஸம் அல்லவா! சாதாரண ஹம்ஸம் அல்லவே! ராஜ ஹம்ஸம் ஆயிற்றே! பாலை மட்டுமே பருகுவேன்' என்று நினைத்துக் கொண்டேன்.

(பாலிலிருந்து நீரைப் பிரித்து விட்டுப் பாலை மட்டுமே அருந்தக் கூடிய ஆற்றல் ராஜ ஹம்ஸத்திற்கு உண்டு.)

"சிறிது காலம் மக்கள் நடமாட்டமில்லாத தனிமையான இடத்தில் வசிக்க வேண்டும். குழந்தைகளின் விளையாட்டில் தாய்ச்சியைத் தொட்டு விட்டால், பிறகு பயத்திற்கு இடமில்லை. உன்னைப் புடம் போட்ட பொன்னாக மாற்றிக் கொள். பிறகு எங்கு வேண்டுமானாலும் வசிக்கலாம். மக்கள் நடமாட்டம் இல்லாத இடத்தில் தங்கிச் சாதனை புரிந்து பக்தியைப் பெற்று இறைவனது காட்சியைக் கண்ட பிறகு வேண்டுமானால் இல்லற வாழ்க்கையில் இருக்கலாம். (ராக்காலின் தந்தையிடம்) ஆகவே தான் நான் இளைஞர்களை இங்கு தங்கும்படிக் கூறுகிறேன். ஏனென்றால் சிறிது காலம் இங்கேயே தங்கி வாழ்வார்களானால், அவர்களுக்கு ஆண்டவனிடம் பக்தி ஏற்படும். அதன் பிறகு உலக வாழ்க்கைக்குச் சென்றாலும் அவர்களால் தாராளமாகப் பற்றின்றி வாழ முடியும்."

ஒரு பக்தர் : "எல்லாவற்றையும் இறைவன் தான் செய்கிறார் என்றால், பிறகு நல்லது கெட்டது, பாவம் புண்ணியம் என்றெல்லாம் ஏன் சொல்ல வேண்டும்? அப்படியென்றால் பாவமும்கூட இறைவனின் விருப்பப்படியே ஏற்படுகிறதல்லவா?"

மாமனார் : "ஆண்டவனின் விருப்பத்தை நாம் அறிந்து கொள்வது எப்படி?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "உலகில் பாவ புண்ணியங்கள் இருக்கின்றன என்பதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை. ஆனால் இவை எவற்றாலும் ஆண்டவன் பாதிக்கப்படுவதில்லை. காற்றில் நல்ல வாசனை, கெட்ட வாசனை என்று எல்லாவாசனைகளும் இருக்கின்றன. ஆனால், காற்று இவற்றால் ஒரு போதும் பாதிக்கப்படுவதில்லை. அது போலத்தான் இறைவனின்

படைப்பும். படைப்பில் நல்லதும் உண்டு, கெட்டதும் உண்டு; சத்பொருளும் உண்டு, அசத்தும் உண்டு; பலவகைப் பட்ட மரங்களில் சில மாமரங்களாக இருக்கின்றன. வேறுசில மரங்கள் ஆம்டா[1] எனப்படும் மட்டரக மரங்களாக இருக்கின்றன. அது போலத் தான் முரடர்களும்கூடச் சமுதாயத்தின் நடைமுறைக்குப் பயன்படுபவர்களாகவே இருப்பதை நீங்கள் கவனித்ததில்லையா? நாட்டின் ஒரு பகுதியில் மக்கள் விதிமுறைகளை மீறி நடந்து கொண்டால் நிர்வாகி அந்தப் பகுதிக்கு ஒரு முரடனை அனுப்பி வைக்கிறார். அதன் மூலம் அந்தப் பகுதிக்கு நல்ல பாடம் கற்பிக்கப்படுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''இல்வாழ்க்கையில் ஈடுபடுவதன் காரணமாக மனத்தின் ஆற்றல் வீணாக்கப்படுகிறது. இவ்விதம் சக்தி வீணாவதால் மனத்திற்கு ஏற்படும் இழப்பைத் துறவு மேற்கொள்வதன் மூலம் மீண்டும் ஈடு செய்து விடலாம். ஒருவனுக்குத் தன் தந்தையிடம் முதற்பிறவி கிடைக்கிறது. அதன் பின்னர் உபநயனம் நடைபெறும்போது இரண்டாவது பிறவி ஏற்படுகிறது. சந்நியாசம் மேற்கொள்ளும் போது மூன்றாவது பிறவி பெறப்படுகிறது. காமினியும் காஞ்சனமும், பெண்ணும் பொன்னும் ஆன்மிக வாழ்க்கைக்கு இரு பெருந் தடைகளாகும். மங்கையிடம் வைக்கும் பற்று மாதவனிடம் அழைத்துச் செல்லும் பாதையிலிருந்து நம்மைத் திருப்பி மாறான வழிக்கு இட்டுச் செல்கிறது. வீழ்ச்சியுறுவதற்குரிய காரணம் என்னவென்பதை மனிதனால் தெரிந்து கொள்ளமுடிவதில்லை. ஒரு சமயம் நான் கல்கத்தாவிலுள்ள கோட்டைக்குச் சென்றேன். அங்கே பாதை சரிந்து சரிந்து கீழே சென்று கொண்டிருந்தது. அப்போது எந்த அளவுக்குப் பாதை சரிந்து சரிந்து போய்க் கொண்டிருந்தது என்பதை ஆரம்பத்தில் கொஞ்சம் கூடப் புரிந்து கொள்ள முடியவில்லை. கோட்டையின் உட்பகுதிக்கு வண்டி சென்ற பின்புதான் எவ்வளவு தூரம் பள்ளத்தை நோக்கிக் கீழிறங்கி வந்திருக்கிறோம் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது. அந்தோ! விஷயத்தைத் தெரிந்து கொள்ளும்படி ஆண்களைப்பெண்கள் விடுவதேஇல்லை. தன்னுடைய மனைவியை ஒரு ஞானி என்று கேப்டன் சொல்கிறார்! பேய் பிடித்திருக்கும் ஒருவனுக்கு, தனக்குப் பேய் பிடித்திருக்கிறது என்ற விவரமே தெரியாது. 'நான் நன்றாகத் தானே இருக்கிறேன்' என்றுதான் அவன் சாதிப்பான்.'' எல்லோரும் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

---

1. மரிமாங்காய்.

"உலக வாழ்க்கையில் காமம் என்கிற ஆபத்து மட்டுமே இருக்கிறது என்பதல்ல, கோபமும் இருக்கிறது. ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதில் தடைகள் ஏற்படுமானால் கோபம் உண்டாகிறது."

ம: "நான் சாப்பிடும் சமயத்தில் பூனை ஒன்று மெதுவாக வந்து காலை நீட்டி எனது தட்டிலிருந்து மீன் துண்டை எடுக்க முயலும். நான் அதைத் தடுக்க முயலுவதில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஏன்? எப்போதாவது நீ அந்த பூனைக்கு ஒரு அடி கொடு! அதில் தவறு ஒன்றும் இல்லை. அதற்காக விஷத்தைக் கக்குவது சரியல்ல. செயல் அளவில் யாருக்கும் துன்பம் விளைவிக்கக் கூடாது. மற்றவர்களிடமிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ளப் புறத்தளவில் கோபமாக இருப்பதைப் போலக் காட்டிக் கொள்ளத்தான் வேண்டும். அவ்விதம் செய்யாவிட்டால் பகைவர்கள் நமக்குத் துன்பம் விளைவிக்க முற்பட்டு விடுவார்கள்! ஆனால் ஒரு துறவிக்குச் சீற வேண்டிய அவசியம் இல்லை."

ஒரு பக்தர்: "சுவாமி, இல்லற வாழ்க்கையில் இருந்து கொண்டு இறைவனை அடைவது என்பது மிக மிகக் கடினம் என்று தோன்றுகிறது. அப்படி ஆண்டவனை அடைந்தவர்கள் தாம் எத்தனை பேர் இருக்கிறார்கள்? ஒருவரைக் கூடக் காண முடியவில்லையே."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஏன் காண முடியாது? அந்தப் பகுதியில் ஒருவர் இருப்பதாக நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் ஓர் உதவி நீதிபதியாக இருக்கிறார். மிக நல்ல மனிதர். பிரதாப்சிங் என்பது அவருடைய பெயர். அவரிடம் தானம், தர்மம், தியானம், ஈசுவர பக்தி ஆகிய பல நல்ல குணங்கள் அமைந்திருக்கின்றன. அவர் என்னை ஒரு தடவைத் தன் வீட்டிற்கு அழைத்திருந்தார். இத்தகைய நல்ல மனிதர்கள் உலகில் இருக்கவே செய்கிறார்கள்.

"ஆத்ம சாதனை பழகுவது மிக மிக அவசியம். சாதனை பழகி வந்தால் வெற்றி எப்படிக்கிடைக்காமல் போகும்? ஆழ்ந்த கடவுள் நம்பிக்கை மட்டும் இருக்குமானால் அதிக அளவில் சாதனை பழக வேண்டிய அவசியம் இராது. குருவின் வாக்கியத்தில் ஆழ்ந்த நம்பிக்கை வேண்டும்!

"ஒரு சமயம் வியாச முனிவருக்கு யமுனை நதியைக் கடந்து மறு கரைக்குச் செல்ல வேண்டியிருந்தது. அப்போது கோபி யரும்அங்கு வந்துசேர்ந்தனர்.அவர்களுக்கும்ஆற்றைக் கடக்க வேண்டியிருந்தது. படகு எதுவும் கிடைக்கவில்லை. ஆகவே கோபியர் வியாசரிடம், 'சுவாமி, இப்போது என்ன செய்வது?' என்று யோசனை கேட்டனர். வியாசர் கோபியரிடம், 'சரி, நான் உங்களை ஆற்றின் மறு கரைக்கு அழைத்துச் செல்கிறேன். இப்போது எனக்கு மிகவும் பசியாக இருக்கிறது. சாப்பிடுவதற்கு உங்களிடம் ஏதாவது இருக்கிறதா?' என்று வினவினர். கோபியரிடம் பால், பாலேடு, வெண்ணை ஆகியவையெல்லாம் இருந்தன. வியாசர் அவர்களிடமிருந்து வாங்கி எல்லாவற்றையும் உண்டார். பிறகு கோபியர் அவரைப் பார்த்து, 'சுவாமி, ஆற்றைக் கடக்கும் விஷயம் என்னவாயிற்று?' என்றார்கள். உடனே வியாசர் யமுனைக் கரை ஓரத்தில் நின்று கொண்டு, 'யமுனை நதியே! நான் இன்று உணவு எதுவும் உண்ணமல் உபவாசம் இருப்பது உண்மையானல் வெள்ளம் இரு பகுதிகளாகப் பிரிந்து நிற்கட்டும்! நாங்கள் அனைவரும் அந்த இடைவெளிவழியாகச் சென்று மறு கரையை அடைகிறோம்' என்று கூறினர். இவ்விதம் வியாசர் சொன்னரோ இல்லையோ மறு கணமே யமுனை நதி இரு பிரிவாகப் பிரிந்து நின்றது. கோபியருக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. 'இந்த வியாசர் இப்பொழுது தானே வயிறு நிறைய உண்டார்! அப்படியிருக்க இன்று எதுவும் சாப்பிடாமல் உபவாசம் இருந்திருப்பேனனல் என்று சாதிக்கிறரே!' என்று வியப்படைந்தனர்.

"ஆழ்ந்த நம்பிக்கை என்பது இது தான். 'உண்டவன் நான் அல்ல. உள்ளத்தில் அந்தர்யாமியாக பகவான் நாராயணர் வீற்றிருக்கிறர். உணவு உட்கொண்டவர் அவரே தவிர, நான் அல்ல' என்ற ஆழ்ந்த நம்பிக்கை வியாசருக்கு இருந்தது.

"ஆதிசங்கரர் ஒரு பிரம்மஞானி. ஆரம்பத்தில் அவரிடம் வேற்றுமை பாராட்டும் மனநிலை இருந்தது. அப்போது அவருக்கு எல்லாம் பிரம்ம மயம் என்பதில் அவ்வளவாக நம்பிக்கை ஏற்படவில்லை. ஒரு சமயம் அவர் கங்கையில் நீராடி விட்டு வந்து கொண்டிருந்தபோது ஒரு சண்டாளன் தலையில் மாமிசச் சுமையைத் தூக்கிக் கொண்டு எதிரே வந்தான்.அந்தச் சண்டாளனின் உடல் சங்கரரின் மீது பட்டு விட்டது. 'டேய், நீ என்னைத் தீண்டி விட்டாயே!' என்று சங்கரர் தெரிவித்த போது, சண்டாளனே, 'சுவாமி, நீங்களும் என்னைத் தொட

வில்லை, நானும் உங்களைத் தொடவில்லை. சுத்தமான ஆத்மா என்பது உடல் அல்ல, பஞ்சபூதங்களும் அல்ல, இருபத்து நான்கு தத்துவங்களும் அல்ல, என்று பதில் கூறினன். அப்போது சங்கரருக்கு உண்மை விளங்கியது.

''ரகுகணன் என்ற அரசருடைய பல்லக்கை ஜடபரதர் சுமந்து சென்று கொண்டிருந்தார். அப்போது பல்லக்கைச் சுமந்தபடியே ஜடபரதர் ஆத்ம ஞானத்தைக் குறித்துப்பேசினர். உடனே அரசர் பல்லக்கை விட்டுக் கீழே இறங்கி வந்து 'தாங்கள் யார்?' என்று வினவினர். ஜடபரதரும் 'நான் இது அல்ல, இது அல்ல, நேதி நேதி, நான் சுத்த ஆத்மா' என்று பதில் கூறினர். தான் சுத்த ஆத்மா என்பதில் ஜடபரதருக்குப் பரிபூரண நம்பிக்கை இருந்தது.

'நானே அவன்' 'நான் சுத்த ஆத்மா' என்பது ஞானிகளின் கொள்கை. பக்தர்களோ, இவையெல்லாம் பகவானின் ஐசுவரியம் என்று சொல்லுவார்கள். ஐசுவரியம் அதாவது செல்வம் இல்லாமற் போனல் ஒருவரைச் செல்வந்தர் என்று யார் ஒப்புக் கொள்வார்கள்? சாதகனின் பக்தியைப் பார்த்து, பகவானே அந்தச் சாதகனிடம், 'நீயும் நானும் சமம்' என்று சொல்வாரானல், அப்போது விஷயமே முற்றிலும் வேருனதாகி விடுகிறது. ஓர் அரசர் சிங்காசனத்தில் அமர்ந்து கொண்டிருக்கிறர் என்று வைத்துக் கொள்வோம். அப்போது சமையற்காரன் ஒருவன் அங்கு வந்து அரசரின் ஆசனத்தில் அமர்ந்து கொண்டு, 'அரசே நீரும்நானும் சமம்' என்று கூறுவானனல், உலகம் அவனை ஒரு பைத்தியம் என்று தான் கூறும். ஆனல், சமையற்காரனின் சேவையைக் கண்டு மகிழ்ந்து அரசனே என்றுவது ஒரு நாள், 'அடே, நீ என்னருகில் வந்து அமர்ந்து கொள். அப்படி அமர்வதில் தவறு ஏதும் இல்லை. நீயும் நானும் சமம்' என்று கூறுவதாக வைத்துக் கொள்வோம். அப்போது சமையற்காரன் அரசனின் அருகில் சென்று அமர்ந்து கொண்டானனல், அதைத் தவறு எனக் கூற இயலாது. மக்கள் 'நான் அவனே, ஸோஹம்' என்று கூறுவதால் அவர்களுக்குச் சிறிது கூட நன்மை ஏற்படாது. அலை, தண்ணீரைச் சேர்ந்தது. தண்ணீர் அலையைச் சேர்ந்ததாகி விடுமா என்ன?''

''உண்மை இதுதான். உள்ளம் உறுதி (ஸ்திரம்) அடையாத வரையில் ஒரு போதும் யோகம் கைகூடாது. எந்த

வழியைப் பின்பற்றினால் என்ன? மனம் யோகியின் வசப்பட்டிருக்கும். யோகி மனத்திற்கு வசப்பட்டிருக்க மாட்டான்.

"மனம் அமைதியடைந்து விட்டால் பிராணன் ஸ்திரமடையும். அப்போது கும்பகம் கைகூடுகிறது. கும்பகம் என்ற நிலையைப் பக்தியோகத்தைப் பின்பற்றுவதின் மூலமும் அடையலாம். பக்தியின் முதிர்ச்சியில் வாயு ஸ்திரமடையும்.

'நிதாயி ஆமார் மாதா ஹாதீ' என்ற பாட்டின் வரியைச் சொல்லிக் கொண்டே பரவச நிலையை அடையும்போது எல்லாச் சொற்களையும் உச்சரிக்க இயலாமல் போய் விடுகிறது. அந்தப் பரவச நிலையில் 'ஹாதீ' 'ஹாதீ' என்று மட்டும்தான் சொல்ல முடிகிறது. அதன் பிறகு 'ஹா' என்று மட்டுமே சொல்ல முடிகிறது. பரவச நிலையில் வாயு தடை பட்டுக் கும்பகம் ஏற்படுகிறது.

"ஒருவன் துடைப்பத்தால் தரையைப் பெருக்கிக் கொண்டிருக்கிறான். அப்பொழுது அவனிடம் ஓர் ஆள் ஓடி வந்து இன்னவன் இறந்து விட்டான் என்று ஒருவனுடைய மரணத்தைப் பற்றிய செய்தியை அறிவிக்கிறான். இறந்தவன் சொந்தக்காரனாக இல்லாவிட்டால், பெருக்கிக் கொண்டிருந்தவன், அவ்வேலையைத் தொடர்ந்து செய்து கொண்டிருப்பான். ஆனால் இடையிடையே, 'அடக்கஷ்டமே! அந்த ஆள் இறந்து விட்டானா? பாவம், நல்ல மனிதன்' என்று மட்டும் சொல்வான். ஆனால் இறந்தவன் சொந்தக்காரனாக இருந்து விட்டால், மரணச் செய்தியைக் கேட்ட அளவில் துடைப்பம் தானாகக் கையினின்று நழுவிக் கீழே விழ, 'ஐயோ!' என்று அலறியவண்ணம் தலை மீது கைவைத்துக் கொண்டு கீழே உட்கார்ந்து விடுகிறான். அவனது மூச்சுக் காற்று அப்போது தடைப்பட்டு விடுகிறது. அப்போது அவனால் எந்த வேலையும் செய்ய முடிவதில்லை. சிந்திக்கவும் இயலுவதில்லை.

"பொதுவாகப் பெண்களிடத்தில் ஒன்றைக் கவனிக்கலாம். ஏதேனும் ஒன்றைப் பார்த்தோ, அல்லது கேட்டோ வியப்பினால் வாயடைத்துப் போய் நிற்கும் ஒரு பெண்ணைப் பார்த்து பிறபெண்கள், 'எதைக் கண்டு நீ இப்படி மெய்மறந்து பரவசத்தில் ஆழ்ந்து நிற்கிறாய்?' என்று வேடிக்கையாகக் கேட்பார்கள். இங்கும் பிராணவாயு செயல்படுவது நின்று விடுவதால் வாய் பிளந்து நிற்கிறாளேயொழிய அப்பெண்ணினால் பேச முடிவதில்லை.

"வாயினால் மட்டும் 'ஸோஹம், ஸோஹம்! நானே அவன், நானே அவன்' என்று சொன்னால் போதாது. ஞானிக்கென்று சில லட்சணங்கள் உள்ளன. நரேந்திரனின் கண்கள் விசாலமாகவும், எடுப்பாகவும் அமைந்துள்ளன. இதோ, இருக்கிறானே இந்த பக்தன், இவனுடைய நெற்றியும், கண்களும் நல்ல லட்சணங்கள் பொருந்தி அமைந்திருக்கின்றன.

"மேலும், எல்லா மக்களும் ஒரேவிதமான நிலையில் இல்லை. ஜீவர்களை நான்கு பிரிவாகப் பிரிக்கலாம், பந்தப்பட்ட ஜீவர்கள், முமுட்சு ஜீவர்கள், முக்த ஜீவர்கள், நித்திய ஜீவர்கள் என்று நான்கு வகையினர் உண்டு. அனைவருமே ஆத்ம சாதனை செய்ய வேண்டும் என்பதில்லை. நித்தியசித்தர் என்றும் சாதன சித்தர் என்றும் இருவகையினர் உண்டு. ஒரு சிலர் பல வித ஆத்ம சாதனைகளைப் பழகிய பின்னர் இறைவனை நேருக்கு நேர் காண்கிறார்கள். வேறு சிலர் பிறவியிலிருந்தே சித்தர்களாக இருக்கின்றனர். பிரஹலாதனைப் போன்றவர்கள் நித்தியசித்தர்கள். 'ஹோமா' என்ற பறவை விண்ணில் வெகு உயரத்தில் வசிக்கிறது. அது விண்ணிலேயே முட்டையிடுகிறது. அந்த முட்டை பூமியை நோக்கிக் கீழே வந்து கொண்டிருக்கும் போதே அதன் மேலோடு திறந்து குஞ்சு பொரித்து விடுகிறது. குஞ்சு வெளியே வந்து, அதுவும் பல நாட்கள் கீழே வந்து கொண்டே இருக்கிறது. இவையெல்லாம் விண்ணின் மிக உயரத்திலேயே நிகழ்கின்றன. பின்னர் குஞ்சு தரையை நோக்கி நெருங்கி வர வர அதற்கு இறக்கை முளைத்து விடுகிறது. கண்களைத் திறந்து பார்க்கிறது. தான் தரையில் வந்து மோதினால், சுக்கல் சுக்கலாகச் சிதறி விடுவோம் என்று உணர்ந்து விடுகிறது. உடனே திடீரென்று தாய்ப்பறவை இருக்கும் இடத்தை நோக்கித் திரும்பிப் பரபரவென்று உயரக் கிளம்பிச் சென்று விடுகிறது! 'எங்கே அம்மா? எங்கே அம்மா?' என்று தேடிய வண்ணம் அது மேலே போய் விடுகிறது!

"பிரஹலாதன் முதலிய நித்திய சித்தர்கள் ஆத்மசாதனை செய்யத்தான் செய்கிறார்கள். ஆனால், அதற்கும் முன்பே அவர்களுக்கு ஆண்டவனது காட்சி கிடைத்து விடுகிறது. பூசணியும் சுரையும் முதலில் பிஞ்சு விட்டுப் பிறகு பூக்கின்றன. அது போலவே நித்திய சித்தர்களுக்கு முதலில் ஈஸ்வர தரிசனமும் பிறகு ஆத்மசாதனை பழகுவதும் அமைகின்றன. (ராக்காலின் தந்தையிடம்) நித்திய சித்தர் ஒருவர் மிக மோசமான குடும்பத்தில் பிறந்தாலும் கூட அவர் நித்திய சித்தராகத்தான் இருப்பார்.

வேறுவிதமாக அவர் ஒரு போதும் ஆகிவிட மாட்டார். அவரை விதை சாணக்குவியலில் விழுந்தாலும், அது அவரைச் செடியாகத்தான் வளரும்!

"பகவான் ஒரு சிலருக்கு அதிகமான சக்தியையும் மற்றும் சிலருக்குக் குறைவான சக்தியையும் அளித்துள்ளார். ஓர் இடத்தில் தீபம் பிரகாசமாக எரிகின்றது. மற்றோர் இடத்தில் மங்கலாக எரிகின்றது. வித்யாசாகர் சொன்ன ஒரு சொல்லி லிருந்தே அவரது அறிவாற்றல் எவ்வளவு என்பதை நான் தெரிந்து கொண்டேன். இறைவனின் ஆற்றல் உயிர்களுக் கிடையில் பல்வேறு விதங்களில் வெளிப்படுகிறது, என்பதைப் பற்றி நான் அவரிடம் பேசியபோது, அவர் என்னிடம், 'சுவாமி, அப்படியானால் ஆண்டவன் சிலருக்கு அதிகமான சக்தியை யும் மற்றும் சிலருக்குக் குறைவான சக்தியையும் கொடுத்திருக் கிறாரா?' என்று கேட்டார்.

"அதற்கு நான், 'ஆம், அப்படித்தான். இறைவன் சிலருக்கு அதிகமாகவும் சிலருக்குக் குறைவாகவும் சக்தியைக் கொடுத்துள்ளான். அவ்விதம் ஓர் இடத்தில் சக்தி குறைவாக வும் மற்றோர் இடத்தில் சக்தி மிகுதியாகவும் இல்லாதிருக்கு மானால், உங்களுடைய பெயர் இந்த அளவுக்குப் புகழுடன் பரவியிருப்பதற்குக் காரணம் என்ன? உங்களிடமிருக்கும் கல்வி, ஏழை எளியவர்பால் தாங்கள் காட்டும் பரிவு இவற்றை பற்றியெல்லாம் கேள்விப் பட்டிருப்பதால் அல்லவா நாங்கள் உங்களைப் பார்க்க வந்திருக்கிறோம்? மற்றபடி உங்களுக்கு இரண்டு கொம்புகளா முளைத்துள்ளன? அப்படி ஒன்றும் இல்லையே!' என்று கூறினேன். வித்தியாசாகர் எவ்வளவு அறி வாற்றல் மிக்கவர்! அவர் எவ்வளவு பெயரும் புகழும் வாய்ந்த வர். என்றாலும் கூட, 'ஆண்டவன் என்ன, சிலருக்கு அதிகமாக வும் மற்றும் சிலருக்குக் குறைவாகவும் ஆற்றலைக் கொடுத்திருக் கிறாரா?' என்ற சிறுபிள்ளைத்தனமான கேள்வியைக் கேட்டு விட்டார்!

"இது எப்படி இருக்கிறது என்றால், மீன் பிடிப்பவன் வலை வீசும் பொழுது முதலில் பெரிய பெரிய மீன்கள் வலையில் விழும். அதன் பிறகு செம்படவன் காலைச் சேற்றில் அழுத்தித் தேய்த்துக் குட்டையை நன்றாகக் கலக்கி விடுகிறான். அப் போது சிறு சிறு மீன்கள் மேலெழுந்து வருகின்றன. சற்றுக் கூர்ந்து கவனித்தால் இவைகளை அறிந்து கொள்ளலாம்.

அதாவது இறைவனது காட்சி கிடைக்காவிட்டால், நாளடைவில் நமது மனத்திலிருந்து சிறு சிறு மீன்கள்[1] வெளிக் கிளம்ப ஆரம்பிக்கின்றன. வெறும் புலமையினால் எதைச் சாதித்துவிட முடியும்?"

### ஞாயிற்றுக்கிழமை, ஜூன் 17, 1883

பிற்பகல் நேரம். தட்சிணேசுவரக் காளி கோவிலில் குருதேவரின் அறை. குருதேவர் பகலுணவிற்குப் பிறகு சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொண்டார். அதர், ம—, முதலியோர் வந்து வணங்கி நின்றனர். தாந்திரீக சாதனை பழகும் பக்தன் ஒருவனும் அவர்களுடன் வந்திருந்தான். சில நாட்களாக, ராம்லால், ஹாஸ்ரா, ராக்கால் முதலியோர் குருதேவருடன் வசித்து வந்தனர்.

குருதேவர் (பக்தர்களைப் பார்த்து): "குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் போது ஒருவனுக்குக் கடவுள் பக்தி ஏன் உண்டாகக்கூடாது? ஆனால் அப்படி உண்டாவது மிகக் கடினம். ஜனகர் முதலிய மகான்கள் ஞானமடைந்த பிறகு இல்வாழ்க்கையில் ஈடுபட்டனர். அந்நிலையில் கூட எச்சரிக்கையோடு இருக்க வேண்டியிருந்தது. பயன் கருதாமல் பணி புரிபவர்கட்கும் உலகில் ஆபத்து உண்டாகலாம்; மிகுந்த கவனத்தோடு இருக்க வேண்டும். ஒரு சமயம் ஜனகர் ஒரு பைரவி சந்நியாசினியைக் கண்டு தலை குனிந்து கொண்டார். பெண்ணைப் பார்ப்பதை அவர் வெறுத்தார். அதைக் கண்ட பைரவி, 'ஜனகரே! உமக்கு இன்னமும் ஞானம் உண்டாகவில்லை போலத் தோன்றுகிறது. ஆண், பெண் வேறுபாடு இன்னமும் உம்மிடம் உள்ளதே!' என்றாள்.

"கரிமுட்டை அடுக்கி வைத்திருக்கும் அறையில் புழங்கும் போது, எவ்வளவுதான் எச்சரிக்கையாக இருந்தாலும் கறை சிறிது படியத்தான் செய்யும். இல்லறத்திலிருக்கும் பக்தர்கள் பட்டாடை உடுத்திக் கொண்டு பூஜை செய்யும் பொழுது மிகுந்த பக்திப் பெருக்குடன் இருப்பதைப் பார்க்கிறேன். பூஜை முடிந்து சாப்பிடும்வரை அவர்கள் அத்தகைய பக்தியோடு இருப்பார்கள். பிறகு தமது இயற்கை நிலையான ரஜோகுணம், தமோகுணம் மேம்பட்டுப் பழைய நிலைக்கு வந்து விடுகிறார்கள். சத்துவ குணத்தால் பக்தி உண்டாகிறது பக்தியில் மூன்று விதம் உண்டு. அவை, சத்துவகுணபக்தி,

---

1. ஆசைகள்.

ரஜோகுணபக்தி, தமோகுணபக்தி என்பவை. சத்துவகுணபக்தி தூய்மையான மனநிலையைக் கொண்டது. இந்தப்பக்தி உண்டாலுல்இறைவனைத் தவிர வேறு எப்பொருளிலும் மனம்செல்லாது. இந்த பக்தர்கள் உடலைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அளவுக்கு மட்டுமே அதன் மீது மனதைச் செலுத்துவர்.

"பரமஹம்சர்களோ இந்த மூன்று குணங்களையும் கடந்தவர்கள். அவர்களிடம் இந்த மூன்று குணங்கள் இருந்தும், அவை இல்லாததற்கே சமம். குழந்தையைப்போல அவர்கள் எந்த குணத்தின் ஆட்சிக்கும் உட்படுவதில்லை. இந்த பரமஹம்ச சந்நியாசிகள் சின்னஞ்சிறு குழந்தைகளின் இயல்பைப் பெற வேண்டும் என்பதற்காக அந்தக் குழந்தைளைத் தங்களருகில் வர அனுமதிக்கின்றனர். பரமஹம்சர்கள் பொருள்களைச் சேகரித்து வைத்துக்கொள்ளமாட்டார்கள். இந்தவிதி இல்லறத்தாருக்கல்ல. இல்லறத்தார்கள் தங்கள் குடும்பத்திற்காகப் பொருள்களைச் சேகரித்தே ஆக வேண்டும்."

தாந்திரீக பக்தர் : "பாவம், புண்ணியம் என்ற வேற்றுமை பரமஹம்சர்களிடம் இருக்குமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இதே கேள்வியைக் கேசவசேனரும் ஒருமுறை என்னைக்கேட்டார். அதற்கு நான் 'இந்த விஷயத்தைப்பற்றி மேலும் உன்னிடம் அதிகமாகப் பேசினுல் உனது சங்கம் கலைந்துவிடும்' என்று பதிலளித்தேன். அதைக் கேட்டதும் அவர் 'அப்படியானுல் நீங்கள் அதைக் கூற வேண்டாம்' என்ருர்.

"பாவம், புண்ணியம் என்பன எப்படிப்பட்டவை தெரியுமா? இறைவனே நல்லெண்ணங்களையும், தீய எண்ணங்களையும் நமக்குக் கொடுப்பதாகப் பரமஹம்சர்கள் காண்கிருர்கள். சுவையானகனிகளும், புளிப்பானபழங்களும் உலகில் இல்லையா? சில மரங்களின் பழங்கள் இனிப்பாக உள்ளன; வேறு சிலவற்றின் பழங்கள் கசப்பு அல்லது புளிப்பாக உள்ளன. இறைவன் சுவையான மாமரத்தை உண்டாக்கி இருக்கிருன். அதே போல் புளிப்பான மரத்தையும் தோற்றுவித்திருக்கிருன்."

தாந்திரீக பக்தர் : "ஆம் ஐயா! அது உண்மைதான். மலை மீது ரோஜாத்தோட்டத்தைப் பார்க்கிரேும். கண்ணுக் கெட்டிய தூரம் வரை வெறும் ரோஜாத்தோட்டம் தான்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : " உண்மை, உண்மையற்றது; நல்லது, கெட்டது; பாவம், புண்ணியம் இவைகளெல்லாம் இறைவனின் மாயை காட்டும் செல்வங்கள் [1]என்று பரமஹம்சர்கள் காண்கிறார்கள். ஆனால் இவை மிகவும் உயர்ந்த கருத்துக்கள். இந்நிலையில் சங்கங்கள், கூட்டங்கள் நடத்துவது இயலாத காரியம்."

தாந்திரீக பக்தர் : "ஆனால் வினைப்பயன் இருக்கிறதே!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆமாம் இருக்கிறது. நற்செயல்கள் நற்பயனையும் தீயசெயல்கள் தீயபயனையும் அளிக்கும். மிளகாயைக்கடித்தால் காரம் உண்டாகாதா? இவைகள் எல்லாம் அவனுடைய விளையாட்டுகள்."

தாந்திரீக பக்தர் : "அப்படி என்றால் எங்களுக்கு வழி தான் என்ன? வினைப்பயன் உண்டல்லவா? என் செய்வது?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இருக்கட்டுமே! அதனால் என்ன? பக்தர்கள் விஷயமே வேறு." இவ்வாறு கூறிவிட்டு குருதேவர் பாடத்தொடங்கினர்.

என்னெஞ்சே, பயிர்செய்தல் எப்படியென்ற றியாயோ?
உன்னுடைய வாழ்வெனுமோர் உயர்வயல்தான் கிடந் திடுதே!
அன்னவயல்தனை உழுதே அரும்பாடு மேற்கொண்டால்
பொன்னெனுமோர் அறுவடைநீ புரிந்திடலாம் நிலம்மீதே!
காளியன்னை திருப்பெயரால் கனவேலி யமைத்திடுவாய்
நாளும் உன்றன் வாழ்க்கை வயல் நல்ல பலன் நல் கிடவே!
நீளுகின்ற படியமைத்த நின் பலத்த வேலி பக்கம்
மாளுகின்ற வகை செய்யும் வன்காலன் அணு கானே!
இத்தினமோ எத்தினமோ இனிய உன்றன் வாழ்வுவயல்
இத்தரையில் உரிமையறும் இடர்வேளை வந்து விடும்,
எத்தகைய கனியனைய எழிற்பலனை விரும்பினையோ
அத்தகைய வினைவு செய்ய அரிய நெஞ்சே, முனைந்திடு வாய்!
குருஅளித்த இறைவன்றன் கொழும்புனித நாமமதால்
திருவிளங்கும் விதை விதைத்துத் தெளிந்த பக்தி நீர் பாய்ச்சி
அருமைமிகும் பலனடைவாய்! அஃதுனக்கு கடினமெனின்
பெருமைஇராம் பிரசாதின் பெருந்துணையைக் கூவிடுவாய்!

குருதேவர் தொடர்ந்து பாடினர்.

அந்தகன் வரும் வழியை அடைத்துவைத்தேன் நன்றாக
அகத்தினுளே நின்றிருந்த அச்சத்தோடு
சந்தேகம் அனைத்தையுமே அகற்றிவிட்டேன் முடிவாக
சங்கரரே என் வீட்டைக் காவல்செய்ய

1. வெறும் தோற்றங்களே.

முத்திவந்து நவவாசல் நின்று கொண்டார் வலுவாக
முக்கயிறும் ஒருதூணும் வீட்டைத்தாங்கும்
செந்தா மரை இதழ்கள் ஆயிரம்தான் இடமாக
திகழ அமர் ஸ்ரீநாதர் அபயம்தந்தார்.

பாடி முடித்தபின் குருதேவர் தொடர்ந்து பேசலானார்: "காசியில் இறப்பவர்கள் பிராமணனாயினும் சரி, அல்லது விலைமாதாயினும் சரி, யாராக இருந்தாலும் அவர்களெல்லாம் சிவகதி அடைவார்கள். ஹரியின் பெயரையோ, காளியின் பெயரையோ, ராம நாமத்தையோ கூறும்போது கண்களில் ஆனந்தக் கண்ணீர் அருவியாக வழியுமானால் அப்பொழுது சந்தியா வந்தனம் முதலான கிரியைகளைச் செய்ய வேண்டிய கட்டாயமில்லை. இச்செயல்கள் தாமாகவே விலகி விடுகின்றன. செயல்களின் பயன்களும் அவனைக் கட்டுப்படுத்த மாட்டா." குருதேவர் மீண்டும் பாடினார்:

எத்துணைத்தியானம் அத்துணைப்பக்தி;
எத்துணைப்பக்தி அத்துணை இலாபம்... ......

வேறொரு பாட்டுப் பாடலானார்:

அன்னை பெயர் நாஓத அந்திமத்தில் என்னுயிர்தான் அகலுமாயின்
சின்மயஞ்சார் கங்கை, கயை, கச்சி, காசி, பிரபாசம் செல்வதேனோ?

.... .... ....

பின்னர் குருதேவர் பேசத்துவங்கினார்: "ஒருவன் தன்னை மறந்து இறை நினைப்பில் மூழ்குவானாயின், அவனிடத்தே தீய போக்கும் பாவ நினைவுகளும் தங்குவதில்லை."

தாந்திரீக பக்தன்: "இத்தகைய பக்தன் 'வித்யா மாயையின் நான்' என்ற எண்ணத்தை மட்டுமே தன்னிடம் வைத்துக்கொள்கிறான் என்று சரியாகச் சொன்னீர்கள்."

குருதேவர்: "ஆமாம். நான் ஞானி, நான் பக்தன், நான் தொண்டன், நான் நல்லவன் என்று பக்குவமடைந்த 'நான்' மட்டிலுமே அவனிடம் தங்குகிறது. அவனுடைய பக்குவ மடையாத 'ஆணவ நான்' மறைந்து விடுகிறது." (சிரிப்பு)

தாந்திரீக பக்தன்: "ஐயா! எங்களிடம் இதுவரை இருந்து வந்த பல ஐயங்கள் இன்று தங்களருளால் மறைந்து விட்டன."

குருதேவர்: "ஆத்மதரிசனம் உண்டாகும் பொழுது ஐயங்கள் யாவும் அழிந்துபோகின்றன. தமோகுண பக்தியை மேற்கொள்ளுங்கள். 'நான் இராமனுடைய பெயரை, காளி யினுடைய பெயரை இடைவிடாமல் கூறி வருகிறேன். அப்படி

யிருக்க எனக்கு ஏது தளைகள்? எனக்கு ஏது வினைப்பயன்? என்று உறுதியாகக் கூறுங்கள்.''

குருதேவர் மறுபடியும் பாடினார் :

துர்க்கையின் நாமம் ஓதிக்கொண்டேஎன் உயிர் தனை யான் விடுவேனாகில்

... ... ... ...

குருதேவர் தொடர்ந்து பேசினார் : ''நம்பிக்கை! நம்பிக்கை! ஒரு குரு ஒருமுறை தன் சீடனிடம், 'இராமனே எல்லாமாகி இருக்கிறார். அந்த இராமன் தான் ஒவ்வொருவர் இதயத்திலும் வீற்றிருக்கிறார்' என்று கூறினார். ஒரு நாய் ரொட்டித்துண்டு ஒன்றைச் சாப்பிட வந்தது. அதைக் கண்ட சீடன், 'ஓ ராமனே! கொஞ்சம் பொறுத்துக்கொள். இந்த ரொட்டியில் வெண்ணெய்த் தடவிக் கொடுக்கிறேன்' என்று கூறினான். சீடனுக்குக் குருவின் வார்த்தைகளில் எவ்வளவு நம்பிக்கை!

''உறுதியற்ற மனிதர்களுக்கு நம்பிக்கை உண்டாவதில்லை. எப்பொழுதும் சந்தேகம்தான். ஆத்ம தரிசனம் கிடைக்காவிட்டால் ஐயங்களெல்லாம் அகலுவதே இல்லை. தூய்மையான பக்தியில் எந்த விதமான ஆசையும் இருக்காது. அத்தகைய பக்தியின் வாயிலாக ஆண்டவனை விரைவில் அடையலாம். ஆனால் அணிமா, மகிமா முதலிய எட்டு சித்திகளையும் அடைவதில்தான் மனிதர்களுக்கு எத்துணை ஆசை இருக்கிறது? கிருஷ்ணன் அர்ச்சுனனிடம், ''நண்பனே! அணிமா முதலான சித்திகளில் ஒன்று இருந்தாலும்கூட இறைவனது காட்சி கிடைக்காது' என்றார். இந்த சித்திகளால் சிறிது சக்தி உண்டாகலாம். அவ்வளவுதான்.''

தாந்திரீக பக்தன் : ''ஐயா! தாந்திரீகக் கிரியைகள் தற்காலத்தில் பலனளிக்காதது ஏன்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் : ''சாதகர்கள் தாந்திரீக விதிகளைச் சரியாகக் கடைப்பிடிக்காததாலும், தூய்மையான பக்தியோடு அவைகளைப் பழகாததாலும்தான், அவைகள் இப்போது பயனளிப்பதில்லை. உண்மையான பக்தனுக்கு எவ்வித அச்சமோ கவலையோ இல்லை. அன்னை பராசக்தி எல்லாம் அறிவாள். பூனை எலியைப் பிடிப்பது ஒருவகை. ஆனால் அதே பூனை தன்னுடைய குட்டிகளைப் பிடிப்பது மற்றொரு வகை. எனவே பக்திதான் சாரம்.''

# 12

# பானிஹாடி அவல் திருவிழா

**திங்கட்கிழமை, ஜுன் 18, 1883**

**பி**ற்பகல் ஒருமணி. பானிஹாடி[1] என்னும் ஊர். அந்த ஊரின் ராஜ வீதியிலுள்ள திருவிழா மண்டபத்தில் ஏராளமான மக்கள் கூடியிருந்தனர். குருதேவரைத் தரிசிக்க ஏங்கிய மக்கள் நான்கு பக்கங்களிலும் நின்று கொண்டிருந்தனர். பக்தர்கள் கூட்டத்தின் நடுவே குருதேவர் பிரேமைப்பித்துப் பிடித்தவராக ஆடிக்கொண்டிருந்தார். 'கௌராங்கரே மறுபடியும் அவதரித்து இங்கே வந்துள்ளாரோ' என்று சிலர் எண்ணினர். நான்கு பக்கங்களிலும் வெகு தூரம்வரை ஹரிநாமம் அலைஓசை போல் ஒலித்துக் கொண்டிருந்தது. எல்லாப் பக்கங்களிலிருந்தும் பக்தர்கள் தூவிய மலர்கள் குருதேவருடைய தலைமீதும், திருவடிகள் மீதும் பூமாரி பொழிவது போன்று விழுந்தவண்ண மிருந்தன. இனிப்புப் பொருட்களையும் வாரி இறைத்தனர்.

நவத்வீப்கோசுவாமி சங்கீர்த்தனம் இசைத்தவாறு ராகவமந்திரை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். அப்போது குருதேவர் வாயுவேகத்தில் ஓடி வந்து சங்கீர்த்தனக்கூட்டத்தின் நடுவில் நின்று நடனம் ஆடலானார்.

ஒரு காலத்தில் ராகவ பண்டிதர் கொண்டாடிய அவல் திருவிழா இது. சுக்கிலபட்சம் திரயோதசி திதியில் ஒவ்வொரு ஆண்டும் இந்த விழா கொண்டாடப் பெறும். முதன் முதலில் இரகுநாத்தாஸ்[2] என்பவர் இந்த விழாவைத் துவக்கினார். அதன் பிறகு ஒவ்வோராண்டும் இராகவபண்டிதர் தொடர்ந்து இதைத் தனிமையில் நடத்தி, அளவிலா ஆனந்தம் அடைந்துவந்தார். இதைக் கண்ட நித்தியானந்தர் இரகுநாத தாஸிடம், 'ஏய் திருடா! வீட்டை விட்டு ஓடிப்போய் திருட்டுத் தனமாகத் தனிமையில் **பக்தி என்னும் பேரின்பத்தை** அனுபவித்து வருகிறாயா நீ? இதை எங்கள் ஒருவருக்கும் தெரியாமல் நடத்துகிறாய்! அதனால் உனக்கு ஒரு தண்டனை

1. தட்சிணேசுவரத்திலிருந்து சுமார் 7, 8 மைல் தொலைவிலுள்ளது.
2. கௌராங்கரின் பக்தர்.

கொடுக்கப் போகிறேன். இன்று முதல் நீ அவல் திருவிழா கொண்டாடிப் பக்தர்களுக்குச் சேவை செய்' என்றார்.

குருதேவர் ஒவ்வொரு வருடமும் இந்தத் திருவிழாவிற்குச் செல்வதுண்டு. இந்த ஆண்டும் ராம் முதலிய பக்தர்களுடன் அங்குச் செல்வதாக இருந்தார். அதற்குரிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ராம், ம-வுடன் காலையிலேயே தட்சிணேசுவரம் வந்து விட்டார். இருவரும் குருதேவரை வணங்கினர்கள். பிறகு வடக்குத்தாழ்வாரத்தில் அமர்ந்து பிரசாதம் உண்டனர். அதன்பின் தாங்கள் கல்கத்தாவிலிருந்து வந்த வண்டியிலேயே குருதேவரைப் பானிஹாடிக்கு அழைத்துச் சென்றனர். குருதேவருடன் ராக்காலும், பவநாத்தும் மற்றும் ஓரிரு பக்தர்களும் சென்றனர். போகும் வழியில் குருதேவர் தம்முடன் வந்த இளஞ்சீடர்களுடன் வேடிக்கை விநோதங்கள் செய்தவாறே சென்றார்.

வண்டி பானிஹாட்டியில் உற்சவம் நடக்கும் இடத்தை அடைந்ததும் அங்கு நடந்த நிகழ்ச்சியைக்கண்டு ராம் முதலியோர் ஆச்சரியமடைந்தனர். இவ்வளவுநேரம் வெகு வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்த குருதேவர் திடீர் என்று வண்டியிலிருந்து கீழே குதித்து அம்புபோலப் பாய்ந்து சென்று கூட்டத்தில் கலந்துவிட்டார். அவரை அங்கும் இங்கும் தேடியும் காணமுடியவில்லை. கடைசியில் அவர் நவத்வீப் கோசுவாமியுடன் சங்கீர்த்தனக் கூட்டத்தில் நடனமாடிக் கொண்டும், இடையிடையே சமாதி அடைந்து கொண்டும் இருந்ததைக் கண்டனர். சமாதியில் இருக்கும் குருதேவர் கீழே விழுந்துவிடாதிருக்க நவத்வீப் கோசுவாமி அவரைக் கவனமாகத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருந்தார். நான்கு பக்கங்களிலும் பக்தர்கள் பகவான் பெயரை உச்சரித்துக் கொண்டே குருதேவரை வணங்கி அவருடைய திருவடிகளில் மலரைத் தூவினர். அவரை ஒரு முறையாவது தரிசிக்க வேண்டும் என்பதற்காகக் கூட்டத்தை இடித்துக் கொண்டு ஆவலுடன் பக்தர்கள் முன் வந்தனர்.

அநேகமாக வெளி உணர்வை இழந்த நிலையில் குருதேவர் நடனமாடிக் கொண்டிருந்தார். பிறகு வெளி உணர்வு சிறிது வரத்துவங்கிற்று. குருதேவர் பாட ஆரம்பித்தார். அதன் கருத்து:

ஹரியின் பெயரை உச்சரித்தாலே கண்களில்
நீர் நிரம்பும் இரு சகோதரர்கள் வந்துள்ளனர் — பார்!

தாங்களும் ஆட, உலகத்தையே ஆடவைக்கும், ஹரி
நாமப்பிரியர் இரண்டு சகோதரர்கள் வந்துள்ளனர் — பார்!
தாங்கள் அழ உலகத்தையே ஹரியின் பெயரில்
அழ வைத்த இரண்டு சகோதரர்கள் வந்துள்ளனர் — பார்!
அடியைத் தாங்கிக் கொண்டு பாவிகளுக்கு ஹரி
நாமத்தை அளித்த இரண்டு சகோதரர்கள் வந்துள்ளனர் — பார்!

குருதேவருடன், மற்றவர்களும் பித்துப் பிடித்தவர்கள் போல் ஆடிக்கொண்டிருந்தனர். கௌராங்கரும், நித்யானந்தரும் தங்களுடன் சேர்ந்து ஆடிக்கொண்டிருப்பது போன்ற இன்பத்தை அவர்கள் அனுபவித்தனர். குருதேவர் தொடர்ந்து பாடினார்.

"கௌராங்கரது அன்பு அலைகளில்
நாதியாவே ஆடுவதைப் பார்த்தாயா! . . . .

சங்கீர்த்தன அலைகள் இராகவரின் ஆலயத்தை நோக்கி மிதந்து சென்று கொண்டிருந்தன. அக்கோயிலைச் சுற்றி வலம்வந்து, தேவதேவியர் முன் நடனமாடி, இறைவனுடைய திருவுருவத்தை வணங்கினர். பிறகு கங்கைக் கரையிலுள்ள இராதாகிருஷ்ணரின் கோவிலை நோக்கி அச்சங்கீர்த்தனக் கூட்டம் செல்லத் துவங்கியது.

இராதாகிருஷ்ணரின் கோயில் சிறியதாகையால் சங்கீர்த்தனக் கூட்டத்தின் ஒரு சிறு பகுதியே உள்ளே செல்ல முடிந்தது. பெரும்பான்மையோர் செல்ல முடியாமல் வெளியே நின்றனர். கோயிலின் வாயிலில் நெருக்கடி. மக்கள் ஆவலுடன் உள்ளே எட்டி எட்டிப்பார்த்துக் கொண்டு நின்றனர்.

இராதாகிருஷ்ணரின் கோயில் முற்றத்தில் குருதேவர் மறுபடியும் நடனமாட ஆரம்பித்தார். இடையிடையே சமாதி நிலையை அடைந்தார். நான்கு பக்கங்களிலிருந்தும் மலர்கள் அவர்மீது விழுந்து கொண்டேயிருந்தன. இதைக்கேட்டு வெளியில் கூடி இருக்கும் பக்தர்களும் எதிரொலிபோல் ஹரியின் திருப்பெயரைச் சேர்ந்து பாடலாயினர். அருகே கங்கையில் படகில் சென்று கொண்டிருக்கும் மக்கள் இதைக் கேட்டு உணர்ச்சி வசப்பட்டவர்களாய் அவர்களும், 'ஹரி போல்' 'ஹரிபோல்' என்று கூறத் தொடங்கினர்கள். எங்கும் ஹரிநாம வெள்ளம் பெருக்கெடுத்து ஓடலாயிற்று.

இந்த விழாவிற்கு வந்திருந்த ஆயிரக்கணக்கான மக்களில் சிலர், 'இந்த மகானிடம் நிச்சயமாக கௌராங்கரது தெய்விகத் தன்மை வெளிப்படையாகத் தெரிகின்றது' என்றும் இன்னும் சிலர், 'இவர் கௌராங்கரேதான்' என்றும் பேசிக்கொண்டனர்.

குருதேவரை பக்தர்கள் அந்தச் சிறிய கோயிலிருந்து மிக எச்சரிக்கையாக அழைத்து வந்தனர். குருதேவர் பக்தர் களுடன் மணிசென் என்பாரது வீட்டு வரவேற்பு அறையில் வந்தமர்ந்தார். மணிசென் குடும்பத்தார்களே இந்த விழாவிற்கு ஏற்பாடு செய்பவர்கள். ஒவ்வோர் ஆண்டும் இந்த விழா கொண்டாடும் போது குருதேவரை இவர்கள் அழைத்து வருவார்கள்.

சிறிதுநேர ஓய்விற்குப் பிறகு மணிசென்னும், அவருடைய குருவான நவத்வீப் கோசுவாமியும் குருதேவரைச் சிறிது உணவுண்ண வேண்டினர்கள். ராம், ராக்கால், ம- முதலிய பக்தர்களும் குருதேவருடன் பிரசாதம் உட்கொண்டனர். குருதேவர் ஆனந்தமாகப் பக்தர்கட்குத் தாமே பிரசாதம் வழங்கி உண்ணும்படிக் கூறினர்.

மாலைவேளை. குருதேவர் ராக்கால், ராம் முதலிய அன்பர் களுடன் மணிசென்னுடைய இல்லத்தில் விருந்தினர் அறையில் உட்கார்ந்திருந்தார். நவத்வீப்கோசுவாமியும் பிரசாதம் உண்ட பின்னர் சிறிது இளைப்பாறிவிட்டு அங்குவந்து குருதேவருக்கு அருகில் உட்கார்ந்தார். குருதேவர் வந்த வண்டிக்கு வாடகை கொடுக்க மணிசென் விரும்பினர். குருதேவர், ராம் முதலி யோரைச் சுட்டிக்காட்டி, "இவர்கள் எல்லோரும் பணம் சம்பாதிப்பவர்கள்தானே. இவர்கள் கொடுக்கட்டுமே. வண்டி வாடகையை உன்னிடமிருந்து இவர்கள் ஏன் வாங்கிக்கொள்ள வேண்டும்?" என்று கூறினர்.

பிறகு நவத்வீப் கோசுவாமியுடன் குருதேவர் இறைவனைக் குறித்துப் பேசுவதில் ஆழ்ந்து போனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கோசுவாமியைப்பார்த்து): "பக்தி கனிந்தால் பாவம் (பரவசநிலை) தோன்றும். அதை அடுத்து மஹாபாவம் தோன்றும். அதையும் அடுத்துப் பிரேமை. கடைசி யாகக் கடவுட்காட்சி. கௌராங்கர் மஹாபாவநிலையையும் பிரேமபக்தியையும் அடைந்திருந்தார். பிரேமபக்தி ஏற் பட்டால் இந்த உலகத்தை அடியோடு மறந்து விடுவது இயற்கையே. விருப்பத்திற்குரிய இந்த உடலைக் கூட மறந்து

விடுவோம். கௌராங்கருக்கு இந்தப் பிரேமபக்தி ஏற்பட்டிருந்தது. கடலைக் கண்ணன் விளையாடின யமுனை என்று நினைத்துக் கொண்டு அதில் குதித்துவிட்டார்.

"சாதாரண மனிதர்களுக்கு மஹாபாவம், பிரேமை என்ற நிலைகள் ஏற்படுவதில்லை. அவர்கள் ஒரு வேளை பாவநிலை வரை போகக் கூடும். கௌராங்கருக்கு இந்த மூன்று நிலைகளும் ஏற்பட்ட துண்டு. அப்படித்தானே?"

கோசுவாமி: "ஆம் சுவாமி. அது உண்மைதான். முழுமையான உள்ளுணர்வு நிலை, பாதி உள்ளுணர்வுநிலை, வெளி உணர்வுநிலை ஆகிய மூன்று உணர்வு நிலைகளிலும் அவர் இருந்தார்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உள்ளுணர்வு நிலையில் அவர் சமாதியில் ஆழ்ந்திருப்பார். பாதி உள்ளுணர்வு நிலையில் அவரால் நடனமாடமுடியும். வெளி உணர்வு நிலையில் சங்கீர்த்தனம் பாடமுடியும்."

அப்போது நவத்வீப் கோசுவாமி தன் மகனை, "இச்சிறுவன் சாஸ்திரம் படித்து வருகிறான்" என்று குருதேவருக்கு அறிமுகம் செய்து வைத்தார். அந்தச் சிறுவன் குருதேவரை வணங்கினான்.

கோசுவாமி: "வீட்டிலேயே வேதம் முதலிய சாஸ்திரங்களைப் படித்து வருகிறான். முன்பெல்லாம் வேதபுத்தகத்தைப் பார்ப்பதே அபூர்வமாக இருந்தது. மாக்ஸ்முல்லர் வேதங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த பின்னர் மக்கள் இவற்றை படிக்கத் துவங்கியுள்ளனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "சாஸ்திரத்தை அதிகம் படிப்பதால் தீமை தான் விளைகிறது. சாஸ்திரத்தின் உட்கருத்தை அறிந்து கொள்ள வேண்டும். அதுதான் முக்கியம். சாரத்தை அறிந்த பின்னர் புத்தகங்களைப் படிக்கவேண்டிய அவசியம் என்ன? சாஸ்திரங்களின் உட்கருத்தை அறிந்தபின்னர், இறைவனை அடைவதற்குரிய வழிகளில் ஆழ்ந்து செல்லவேண்டும். என் அன்னை காளி, வேதாந்தத்தின் சாரத்தை எனக்குக் காட்டிவிட்டாள். பிரம்மம் உண்மையானது. உலகம் பொய்யானது. இதுதான் வேதாந்தத்தின் சாரம். பகவத்கீதையின் சாரம் என்ன? 'கீதா, கீதா' என்று பத்து முறை கூறினால் என்ன வார்த்தை கிடைக்குமோ அதுதான் கீதையின் சாராம்சம். அப்படிக்கிடைப்பது 'தாகி, தாகி' (தியாகி) என்பதுதான்.

கோசுவாமி : "தியாகி அல்ல 'தாகி' என்ற சொல்தான் கிடைக்கும். 'தாகி' என்றாலும் தியாகி என்றாலும் இலக்கணப்படி ஒன்றுதான்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "கீதையின் உட்கருத்து, 'மனிதனே! எல்லாவற்றையும் துறந்து ஈசனை அடையச் சாதனை புரி' என்பதாகும்."

கோசுவாமி : "தியாகம் செய்யும் மனப்பான்மையைப் பெறுவது எப்படி?"

ஸ்ரீராமகிருஷ்ணர் "நீங்கள் ஒரு கோசுவாமி. ஆலயத்தில் அர்ச்சகராகப் பணிபுரிவது உங்களுடைய கடமை. உலகைத் துறத்தல் என்பது உங்களால் இயலாத காரியம். நீங்கள் உலகைத் துறந்தால் கடவுட் காரியங்களைச் செய்பவர் யார்? ஆகவே அகத்துறவைப்பெற நீங்கள் முயலவேண்டும். உலகத்திற்கு ஒரு வழி காட்டியாக இருக்க வேண்டுமென்பதற்காக இறைவனே உங்களை உலகில் ஈடுபடுத்தியிருக்கிறான். ஆயிரம்தடவை நீங்கள் முயற்சி செய்தாலும் உங்களால் துறவைக் கைக் கொள்ள முடியாது. உலகக் கடமைகளைச் செய்வதற்குரிய மனநிலையையே இறைவன் உங்களுக்கு அளித்திருக்கிறான்.

"ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜுனனைப் பார்த்து, 'நீ என்ன சொல்கிறாய்? யுத்தம் செய்யப் போவதில்லையா?' நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் போர் செய்வதிலிருந்து உன்னால் தப்பவே முடியாது. உன் இயற்கையே உன்னைப் போர் செய்யத் தூண்டும்' என்றார்."

'ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜுனனோடு பேசிக் கொண்டிருந்தார்' என்பதைக் கூறிக் கொண்டிருக்கும்போதே குருதேவர் மறுபடியும் சமாதியில் ஆழ்ந்து போனார். அவரது உடல் அசையவில்லை. கண்கள் இமைக்கவில்லை. மூச்சு விடுகிறாரா, இல்லையா என்பதும் சந்தேகமாகவே இருந்தது. கோசுவாமி, அவருடைய மகன் மற்றும் அருகில் உள்ள அன்பர்கள் அனைவரும் பேசும்சக்தி இழந்தவர்களாய் ஆச்சரியத்தோடு குருதேவரையே பார்த்தவண்ணமிருந்தனர்.

சிறிது நேரத்திற்குப்பிறகு குருதேவர் கொஞ்சம் சுயநினைவை அடைந்து கோசுவாமியிடம் மீண்டும் பேசத் துவங்கினார்.

"யோகம், போகம் என்று இரண்டு உள்ளன. நீங்கள் கோசுவாமி வம்சத்தைக் சேர்ந்தவர். உங்களுக்கு இரண்டும் வேண்டும். இப்படி இறைவனிடம் பிரார்த்தனை செய். 'இறைவனே! உனது உலகை மயக்கும் மாயையாகிய செல்வத்தை நான் வேண்டேன். நான் உன்னையே வேண்டுகிறேன்' என்று மனமாரப் பிரார்த்தனை செய்யவேண்டும். கடவுள் எல்லோரிடமும் இருக்கிறார். அப்படியானால் யாரை 'பக்தன்' என்று கூறுவது? எவன் இறைவனிடம் தங்கியிருக்கிறானோ, தன் மனம், உயிர், ஆத்மா எல்லாவற்றையும் எவன் இறைவனிடத்தில் அர்ப்பணித்திருக்கிறானோ அவனே பக்தன்."

இப்பொழுது குருதேவர் முழுமையாக சுயநினைவை அடைந்தார். கோசுவாமியைப் பார்த்தபடி, "என் சமாதி நிலையைச் சிலர், 'வியாதி' என்று கூறுகின்றனர். யாருடைய உணர்வால் இந்த உலகமே உணர்வு மயமாக இருக்கிறதோ அவரை நினைப்பதால் யாராவது உணர்வற்றவர்களாக, பைத்தியக்காரர்களாக ஆக முடியுமா?" என்றார்.

விழாவிற்கு வந்திருந்த பிராமண, வைணவ பக்தர்களை மணிசென் வழி அனுப்பிவைத்துக் கொண்டிருந்தார். அவரவர் தகுதிக்கேற்பச் சிலருக்கு ஒரு ரூபாயும், சிலருக்கு இரண்டு ரூபாயும் தட்சிணை வழங்கினார். குருதேவருக்கு ஐந்து ரூபாய் குருதட்சிணை கொடுக்கவந்தார். குருதேவர் வாங்க மறுக்க, மணிசென் வற்புறுத்தினார். குருதேவர், "உன் குருவின் பெயரால் சொல்கிறேன், என்னை வற்புறுத்தாதே" என்றார். இருந்தாலும் மணிசென் விடவில்லை. குருதேவர் வெறுப்படைந்தவராய், ம-வைப்பார்த்து, "என்ன, பணத்தைப் பெற்றுக் கொள்வதா?" என்றார்.

ம-: "வாங்கிக் கொள்ளாதீர்கள். கண்டிப்பாக வாங்கக் கூடாது" என்றார்.

மணிசென்னுடைய நண்பர்கள் அந்தப் பணத்தை ராக்காலிடம் கொடுத்துப் பழம், இனிப்பு முதலியவற்றை குருதேவருக்கு வாங்கித் தரும்படிக் கேட்டுக் கொண்டனர். குருதேவர், அதைக் கண்டு ம-விடம், "நான் பணத்தைப் பெற்றுக் கொள்ளமாட்டேன் என்று கண்டிப்பாக மணிசென்னிடம் கூறிவிட்டேன். எனது பொறுப்பு தீர்ந்துவிட்டது. ராக்கால் பணத்தைப் பெற்றுக் கொண்டு விட்டான். இனி அது அவன் பொறுப்பு" என்றார்.

தட்சிணேசுவரம் திரும்புவதற்காக குருதேவர் பக்தர்களுடன் வண்டியில் ஏறிக்கொண்டார். வழியில் மோதி சீலினுடைய கோயில் பூந்தோட்டம் இருந்தது. வெகு நாட்களுக்கு முன் குருதேவர் ம-வை இந்தக் கோயிலில் உள்ள குளத்தைப் பார்க்க அழைத்துச் செல்லும்படிக் கூறியிருந்தார். அங்குள்ள மீன்களைக் காட்டிக் கடவுளை உருவமற்றவராக எவ்விதம் தியானம் செய்வது என்பதை விளக்குவதாகக் கூறியிருந்தார்.

குருதேவருக்கு அப்பொழுது ஜலதோஷம் பிடித்திருந்தது. இருந்தாலும் பக்தர்களுடன் இக்கோயிலைக்காண வண்டியிலிருந்து இறங்கினர். இந்தக் கோயிலில் கௌராங்கரின் வழிபாடு நடந்து வந்தது. குருதேவர் பக்தர்களுடன் கௌராங்கரைத் தரையில் விழுந்து வணங்கினர். மாலை வேளை.

குருதேவர் கோயிலின் கிழக்கில் அமைந்துள்ள குளத்திற்கு வந்து அதிலுள்ள மீன்களைக் கண்டார். அந்தக் குளத்தில் மீன்களை யாரும் துன்புறுத்துவதில்லை. பொரி போன்ற தின்பண்டங்களை நீரில் வீசியதும் மீன்கள் கூட்டங்கூட்டமாக வந்து அவற்றை உண்ணும். அதன் பிறகு பயமற்று ஆனந்தமாகத் தண்ணீரில் இங்குமங்கும் விளையாடிக்கொண்டே திரியும்.

குருதேவர் (ம-விடம்): "இதோ இந்த மீன்கள் எப்படித் திரிகின்றன பார்? சச்சிதானந்தக் கடலில் இந்த மீனைப்போன்று ஆனந்தமாக ஓடி விளையாடு."

### திங்கட்கிழமை, ஜூன் 25, 1883

மாலை சுமார் ஐந்து மணி. பலராமர் வீடு. குருதேவர் பலராமரின் வீட்டிற்கு வந்திருந்தார். ம-அருகில் உட்கார்ந்திருந்தார். ராக்காலும் உடன் இருந்தார். குருதேவர் பரவச நிலையில் இருந்தார்.

குருதேவர் (பரவச நிலையில் இருந்தபடி): "இதோ பார்! ஒருவன் உள்ளன்போடு உண்மையாக இறைவனை அடைய விரும்பினல் தன்னுள்ளிருக்கும் ஆத்மாவை அறியமுடியும். ஆனல் எந்த அளவுக்கு உலகப்பொருட்கள் மீது பற்றுதல் இருக்கிறதோ அந்த அளவுக்கு இறைக்காட்சி தடைப்படுகிறது."

ம: "நீங்கள் எந்தநேரமும் இறைவன் நினைப்பிலேயே மூழ்கியிருக்கும்படிக் கூறுகிறீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (மகிழ்ச்சியோடு) : "ஆமாம். அப்படித் தான்." எல்லோரும் மௌனமாக இருக்க, குருதேவர் மறுபடியும் பேசலானார்.

குருதேவர் (ம-விடம்) : "கவனமாகக்கேள். எல்லோரும் ஆத்மஞானம் பெறமுடியும்."

ம : "உண்மைதான். இறைவனே கர்த்தா. அவரவருடைய சக்திக்கு ஏற்ப மக்களைச் செயல்படுத்துகிறார். சிலருக்கு ஞானமளித்திருக்கிறார்; வேறு சிலரை அறியாமையில் வைத்திருக்கிறார்."

குருதேவர் : "உண்மை அதுவல்ல. கடவுளிடம் உள்ளத் துடிப்போடு பிரார்த்தனை செய்யவேண்டும். நம் பிரார்த்தனைகள் உண்மையாகவே நம் மனத்திலிருந்து வருவதாக இருந்தால் கடவுள் நிச்சயமாக அதற்குச் செவிசாய்க்கிறார். இதில் சந்தேகமே வேண்டாம்."

ஒரு பக்தர் : "ஆம் ஐயா. 'நான்' என்ற எண்ணம் இருப்ப தால் தான் பிரார்த்தனை செய்ய வேண்டியிருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து ): "கடவுளின் லீலையான இந்த உலகத்தைப் பிடித்துக்கொண்டு அவருடைய நித்தியநிலையை அடையவேண்டும். படிக்கட்டுகள் வழியாக மாடியை அடைவது போல. நித்தியத்தைக் கண்டபிறகு லீலா நிலைக்கு வந்து பக்தி-பக்தன் என்ற நிலையில் வாழலாம். இது தான் சிறந்தவழி.

"இறைவனுக்குப் பல்வேறு வடிவங்கள் இருக்கின்றன. அவருடைய லீலைகளும் பல்வேறானவை. அவைகள் ஈசுவர லீலை, தேவலீலை, நரலீலை, உலகலீலை என்பன. இறைவனே மனிதவடிவில் அவதார புருஷனாக ஒவ்வொரு யுகத்திலும் தோன்றுகிறார். இதன்நோக்கம் மக்களுக்குப் பிரேம பக்தியை விளக்குவதே. சைதன்ய தேவரைப்பார்! அவர் அவதார புருஷர். அவதார புருஷர் மூலம்தான் இறைவனுடைய பிரேம பக்தியை நாம் அனுபவிக்க முடியும். கடவுளுடைய லீலை அளவற்றது. ஆனால், நான் வேண்டுவதெல்லாம் பிரேமை. பக்தி மட்டும் தான். எனக்கு வேண்டுவதெல்லாம் பால். பசுவின் மடியிலிருந்து பால் வருகிறது. அவதார புருஷர்கள் பசுவின் மடி போன்றவர்கள்."

நான்[1] அவதரித்திருக்கிறேன். என்னை தரிசிப்பது ஈசுவரனைத் தரிசிப்பதற்குச் சமம் என்று குருதேவர் இதன் மூலம் நமக்குக் கூறுகிறாரா? சைதன்ய தேவருடைய அவதாரத்தைச் சுட்டிக்காட்டித் தம்மைப் பற்றியே பேசுகிறாரா?

வெப்பம் மிகுந்த கோடைக்கால மாலைப்பொழுது. இரவு வருவதற்கு இன்னும் சிறிது நேரமே இருந்தது. குருதேவர் தட்சிணேசுவரத்தில் சிவாலயங்களின் படிக்கட்டில் உட்கார்ந்திருந்தார். ம-, பனிக்கட்டி, அரிசி முதலியவைகளைக் குருதேவருக்காகக் கொண்டு வந்திருந்தார். குருதேவரை வணங்கிவிட்டு அவருடைய திருவடிகளின் அருகில் சிவன் கோயில் படிக்கட்டில் உட்கார்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வை நோக்கி) : "மணிமல்லிக்கினுடைய பேத்தியின் கணவன் வந்திருந்தான். அவன் ஏதோ ஒரு புத்தகத்தில் படித்தானாம்! 'இறைவனை ஒரு பெரியஞானி என்றோ, எல்லாம் அறிந்தவன் என்றோ கூறமுடியாது. அப்படியானால் இந்த உலகில் ஏன் இவ்வளவு துன்பங்கள் இருக்கின்றன? மரணத்தைப் பொறுத்தமட்டில், மனிதனை ஒரேடியாகக் கொன்று விடுவது மேல். அதை விட்டுவிட்டுச் சிறிது சிறிதாக வேதனைக்கு உள்ளாக்கி ஏன் வதைக்க வேண்டும்? நான் படைப்பவனாக இருந்திருந்தால் இதைவிட ஒரு நல்ல உலகத்தைப் படைத்திருப்பேன்' என்று அப்புத்தகத்தின் [1]ஆசிரியர் எழுதியிருக்கிறானாம்."

ம- வியப்புடன் இந்த வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டு, பதில் ஏதும் கூறாது உட்கார்ந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப்பார்த்து) : "என்ன குழந்தாய்! இறைவனை நம்மால் அறியமுடியுமா? நானும் சில சமயங்களில் கடவுளை நல்லவராகவும், வேறு சில சமயங்களில் தீயவராகவும் நினைப்பதுண்டு. அவர் தம்முடைய மாயாசக்தியால் நம்மை மயக்கிவைத்திருக்கிறார். சில சமயம் நம்மைத் தட்டி எழுப்புவதுண்டு. வேறுசில சமயம் நம்மை அறியாமையில் மூழ்கி இருக்கும்படிச் செய்கிறார். ஒரு கணம் அறியாமை நீங்குகிறது. ஆனால் மறுகணம் அது நம்மைச் சுற்றி வளைத்துக் கொள்கிறது. பாசியால் மூடப்பட்டிருக்கும் குளத்தில் ஒரு கல்லைப்போட்டால் பாசி விலகிச் சிறிதுநேரம் தண்ணீரைப்

1. John Stuart Mill's Autobiography.

பார்க்கமுடிகிறது. ஆனால் அடுத்த வினாடியே பாசி மறுபடியும் விரைவாக வந்து தண்ணீரை மூடிக்கொள்கிறது.

“உடல்நினைவு இருக்கும் வரைதான் இன்பம், துன்பம், பிறப்பு, இறப்பு, நோய், துயரம் முதலியன எல்லாம். இவைகள் உடலைச் சேர்ந்தவை. ஆத்மாவைத் தீண்டுவதில்லை. இறந்த பிறகு ஒருவன் நல்ல இடத்திற்குப் போகலாம். இது பிரசவ வேதனைக்குப் பிறகு குழந்தை பிறப்பது போன்றதாகும். இன்பம், துன்பம், பிறப்பு, இறப்பு இவைகள் யாவும் ஆத்ம ஞானத்திற்குப் பிறகு கனவுபோல் தோன்றும்.

“நம்மால் எவ்வளவு அறியமுடியும்? ஒரு படி பால் கொள்ளக்கூடிய பாத்திரத்தில், பத்துப் படி பாலை வைக்க முடியுமா? உப்புப்பொம்மை கடலை அளக்க ஆசைப்பட்டால் அது திரும்பிவந்து நமக்குச் செய்தியைத் தரமுடியுமா? அது கடலில் கரைந்து மறைந்து விடுகிறது.”

மாலைவந்தது. கோயில்களில் மாலைவழிபாடு துவங்கிற்று. குருதேவர் தமது அறையில் சிறிய கட்டிலின்மேல் உட்கார்ந்து உலக அன்னையைத் தியானம் செய்து கொண்டிருந்தார். ராக்கால், லாட்டு, ராம்லால், கிசோரி, குப்தா முதலிய பக்தர்கள் உடன் இருந்தனர்.

ம- அன்று இரவு குருதேவருடன் கோயிலில் தங்குவதாக இருந்தார். சிறிது நேரம் சென்றபின் தம்முடைய அறைக்கு வடக்கில் உள்ள சிறிய தாழ்வாரத்தில் குருதேவர் பக்தர் ஒருவருடன் தனியாகப் பேசிக்கொண்டிருந்தார். “இரவிலும், அதிகாலையிலும் தியானம் செய்வது நல்லது. தினமும் சாயங்கால வேளையில் தியானம் செய்ய வேண்டும்” என்றார். உருவக் கடவுளையும், அருவக் கடவுளையும் வழிபடும் விதத்தையும் பக்தருக்கு விளக்கினார்.

சிறிது நேரம் ஆனதும் குருதேவர் தமது அறைக்கு மேற்கே உள்ள அரைவட்டத் தாழ்வாரத்தில் வந்து அமர்ந்தார். அப்போது இரவு சுமார் ஒன்பது மணி இருக்கும். ம- அருகில் இருந்தார். ராக்கால் முதலிய பக்தர்கள் அறையினுள் இங்கு மங்கும் போய்க்கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வை நோக்கி) : “கவனமாகக் கேள்! இங்கு வருபவர்களுக்கு, அவர்களுடைய சந்தேகங்கள் எல்லாம் நிச்சயமாகத் தீர்ந்து போகின்றன. நீ என்ன சொல்கிறாய்?”

ம: "ஆம், கண்டிப்பாக."

இந்தச் சமயத்தில் கங்கையில் வெகு தூரத்தில் படகோட்டிகள் பாடிக்கொண்டே செல்லும் பாட்டின் இனிய ஓசை, இனிமையான ஓங்கார ஓசையைப்போலப் பரந்தவானம் முழுவதும் பரவிக் கங்கையின் உடலைத் தொட்டுவிட்டுக் குருதேவரின் காதுகளில் நுழைந்தது போலும். குருதேவர் பாவ நிலையை அடைந்தார். அவருக்கு மயிர்க்கூச்சல் ஏற்பட்டது. ம-வினுடைய கையைப்பிடித்துக்கொண்டு, 'பார், பார். என் உடலில் கை வைத்துப்பார். எனக்கு மயிர்க்கூச்சல் ஏற்படுகிறது' என்ருர்.

ம-, ஆனந்தத்திஞல் மயிர்சிலிர்க்கும் குருதேவரின் உடலைத் தொட்டுப்பார்த்து ஆச்சரியமடைந்தார். மயிர்க் கூச்சத்தால் ஆனந்த மடைந்த உடல்! எந்தப் பிரம்மம் எங்கும் பரவியிருப்பதாக, வானம்போல் எங்கும் நிறைந்திருப்பதாக உபநிஷதம் பேசுகிறதோ, அதே பிரம்மம் ஓசையின் வடிவில் குருதேவரது உடலைத் தீண்டியதா? இதுதான் நாதப் பிரம்மமா?

இவ்வாறு சிறிது நேரம் கழிந்தது. குருதேவர் மீண்டும் நினைவு பெற்றுப் பேசத் துவங்கிஞர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இங்கு வருபவர்கள் எல்லோரும் நல்ல சம்ஸ்காரங்களோடு[1] பிறந்தவர்கள். நீ என்ன சொல்கிருய்?"

ம: "ஆமாம், ஐயா."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அதர் நல்ல குணங்களைப் படைத்தவர்."

ம: "அதைச் சொல்லவும் வேண்டுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "கள்ளங் கபடமற்ற உள்ளம் படைத்திருந்தால் இறைவனை எளிதில் அடையலாம். நல்லவழி தீயவழி என்று இரு வழிகள் உள்ளன. நல்ல வழியில் செல்ல வேண்டும்."

ம: "ஆமாம் ஐயா. நூலில் ஒரு இழை சிறிது பிரிந்திருந்தாலும் அந்த நூல் ஊசியின் காதில் நுழைய முடியாது."

1. சம்ஸ்காரம்—முற்பிறவியில் செய்த நல்வினை, தீவினைகளின் காரணமாக மனத்திற் படிந்துள்ள நினைவுகள், வாசனைகள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சாப்பிடும் உணவில் ஒரு சிறு மயிர் இருந்தாலும் உணவை அப்படியே எறிந்துவிடுகின்றனர்."

ம : "ஆனால், இறைக்காட்சி பெற்றவன் தீய எண்ணம் படைத்தவர்களுடன் இருந்தாலும் எந்தவிதத் தீமைகளையும் அடையமாட்டான் என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். கொழுந்துவிட்டெரியும் நெருப்புப் பிழம்பில் பச்சை வாழை மரமும் எரிந்து சாம்பலாகி விடுகிறது."

### சனிக்கிழமை, ஜூலை 14, 1883

கல்கத்தாவில் அதர்சென் வீடு. குருதேவர் அதர்சென்னுடைய வீட்டிற்கு வந்தார். ராக்கால், ம- முதலியோரும் உடன்வந்திருந்தனர்.

ராஜ்நாராயணன் என்ற பாடகரைக்கொண்டு சண்டியிலிருந்து சில பாடல்களை குருதேவருக்குப் பாடிக்காட்ட அதர் ஏற்பாடு செய்திருந்தார். பூஜை அறையில் இந்த நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ராஜ்நாராயணன் பாட ஆரம்பித்தார் :

அன்னையின் அபயத் திருவடி யதனில்
என்னுயிர் வைத்தே எய்தினேன் சரணம்!
என்ன பயமினி எமனிடம் எனக்கு?
சென்னியின் முடியில் தேவி காளியின்
உன்னத மந்திரம் தன்னை முடிந்தேன்!
உலகச் சந்தையில் உடலினை விற்று
தலமிகு துர்க்கையின் நாமம் வாங்கினேன்!
கல்ப தருவாம் காளியின் பேரை
உள்நெஞ் சதனுள் உயிர்க்க நட்டுள்ளேன்!
எமன்வரும் தருணம் இதயம் திறந்து தல்
அமைதியோ டதனை அவனிடம் காட்டுவேன்!
தளர்விலா ஆறு பகைவர்கள் தம்மை நான்
வெளியிலே தள்ளி விரட்டி அடித்தேன்!
'ஜெய ஜெய துர்க்கா, ஸ்ரீ துர்க்கா' எனப்
பயணம் வாழ்க்கைப் பரவையில் தொடங்க
ஏற்பா டனைத்தும் இங்கு யான் செய்து
காத்திருக் கின்றேன். காளியே வாழி!

குருதேவர் பாட்டைச் சிறிது கேட்டவுடனேயே பரவச நிலையை அடைந்தார். எழுந்து நின்று கொண்டு பாடகரோடு

சேர்ந்து பாட ஆரம்பித்தார். பாடகரின் பாட்டில் குருதேவர் தன் சொந்த வார்த்தைகளை இணைத்து, 'அம்மா, என்னை உன்னிடம் வைத்துக்கொள், அம்மா!' என்று பாடினர். இந்த வார்த்தைகளைச் சேர்த்த போது மீண்டும் சமாதிநிலையை அடைந்தார். புற உணர்வற்று, மூச்சற்று நின்ருர்.

பாடகர் பாடிக்கொண்டிருந்தார்.

யுத்த களத்தை ஒளிமயமாக்கும் பெண் யார்?

... ... ... ...

குருதேவர் மறுபடியும் சமாதிநிலையை அடைந்தார். பாடல் முடிந்ததும் குருதேவர் பூஜை அறையிலிருந்து மாடியிலுள்ள வேறு அறைக்குச் சென்று பக்தர்களுடன் உட்கார்ந்தார். அப்போது இறைவனைக்குறித்துப் பலவிதமானப் பேச்சுகள் எழுந்தன. "சில பக்தர்கள் பல்கு நதியைப்போன்றவர்கள், அவர்களுக்கு உள்ளத்தினுள் மிகுந்த பக்தி இருக்கிறது. ஆயினும் வெளியில் அதற்கான எவ்வித அடையாளமும் தெரிவதில்லை." என்பதான பேச்சும் நிகழ்ந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் : 'நல்லது. அதரைப் பற்றி நீ என்ன நினைக்கிருய்?"

ம : "சுவாமி! அவரிடம் ஆழ்ந்த பக்தி இருக்கிறது".

### சனிக்கிழமை, ஜூலை 21, 1883

மாலை சுமார் நான்கு மணி. ராம்லால் இன்னும் ஒரிரு பக்தர்களுடன் குருதேவர் தட்சிணேசுவரத்தை விட்டு ஒரு வண்டியில் கல்கத்தாவுக்குப் புறப்பட்டார். வண்டி காளிகோயில் வாயிலைத் தாண்டியதும், எதிரே கையில் நான்கு மாம்பழங்களை ஏந்திய வண்ணம் ம- வந்து கொண்டிருப்பதைக் குருதேவர் கண்டார். உடனே வண்டியை நிறுத்துமாறு கூறினர். வண்டி நின்றதும் வண்டியில் அமர்ந்திருந்த குருதேவரின் பாதங்களில் தலை வைத்து ம- வணங்கினர்.

குருதேவர் முதலில் அதர்சென் வீட்டிற்கும் பிறகு மல்லிக் வீட்டிற்கும் கடைசியாக கேலாத்கோஷினுடைய வீட்டிற்கும் செல்வதாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்துச் சிரித்தபடியே): "நீயும் எங்களுடன் வாயேன். நாங்கள் அதர் வீட்டிற்குப் போகிறோம்."

ம- சம்மதித்தவராய் வண்டியில் ஏறி உட்கார்ந்தார். ம- ஆங்கிலம் படித்தவர், எனவே அவருக்கு சம்ஸ்காரங்களில் நம்பிக்கை கிடையாது. இருப்பினும் அதரிடம் நல்ல சம்ஸ்காரங்கள் உள்ளதால்தான் குருதேவரிடம் பக்தி கொண்டிருக்கிறார் என்பதைச் சில நாட்களுக்கு முன் குருதேவரிடமிருந்து கேட்டு, ஒப்புக் கொண்டிருந்தார். வீட்டிற்குத் திரும்பிச்சென்று ஆலோசித்துப் பார்த்த போது சம்ஸ்காரத்தைப் பற்றிய எண்ணங்களில் தனக்கு இன்னமும் முழுநம்பிக்கை உண்டாகவில்லை என்பதை அவர் கண்டார். இதைக் கூறவே ம- இன்று தட்சிணேசுவரம் வந்தார். குருதேவர் பேசத் துவங்கினர்:

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அதரும் உன்னை மிகவும் பாராட்டுகிறான்."

ம- சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு முற்பிறவியின் சம்ஸ்காரங்களைப் பற்றிய பேச்சை ஆரம்பித்தார்.

ம: "எனக்கு முற்பிறவி, பூர்வ சம்ஸ்காரம் இவைகளில் அவ்வளவாக நம்பிக்கை வரவில்லை. இது என்னிடம் பக்தி தோன்றுவதற்குத் தடையாக இருக்குமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனது படைப்பில் எது வேண்டுமானாலும் நடக்கலாம் என்ற திட நம்பிக்கை இருந்தாலே போதும். 'நான் நினைப்பது தான் உண்மை. மற்றவர்களுடைய கருத்துக்கள் பொய்' என்ற எண்ணத்திற்கு மட்டும் உள்ளத்தில் இடம் கொடுத்து விடாதே. அப்போது இறைவனே உனக்கு எல்லாவற்றையும் விளக்குவார்.

"இறைவனுடைய செயல்களை மனிதனால் என்றாவது அறிந்து கொள்ள முடியுமா? இறைவனின் படைப்பு எல்லையற்றது.எனவேதான், நான் இறைவனுடைய படைப்பையெல்லாம் அறிந்து கொள்ள ஒருபொழுதும் முயன்றதில்லை. 'இறைவனுடைய படைப்பில் எதுவும் நடக்கக்கூடும்' என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இதை மனதிற்கொண்டு மற்ற எண்ணங்களை நீக்கி விட்டு அவனையே எப்பொழுதும் நினைத்து வருகிறேன். ஒரு முறை அனுமனை, 'இன்று என்ன திதி' என்று கேட்ட போது அனுமன், 'நாள், திதி, நட்சத்திரம் முதலியவற்றை நான் அறியேன். இராமன் ஒருவனையே எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்கிறேன். அவன் ஒருவனையே அறிவேன்' என்று பதில் அளித்தார்.

"இறைவனுடைய செயலை நம்மால் அறிந்து கொள்ள முடியுமா என்ன? அவன் நமக்கு மிகவும் அருகில்தான் இருக்கிறான்.

அப்படி இருந்தும் அவனை நம்மால் அறிந்து கொள்ள முடியவில்லை. கிருஷ்ணனை இறைவன் என்று பலராமர், அறிந்திருக்கவே இல்லை."

ம : "உண்மைதான் சுவாமி! பீஷ்மரைப் பற்றியும் நீங்கள் கூறியிருக்கிறீர்களே!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆம்! பீஷ்மரைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறேன்? சொல்?"

ம : "பீஷ்மர் அம்புப் படுக்கையில் படுத்திருந்தபோது அழுது கொண்டிருந்தார். இதைக் கண்ட பாண்டவர்கள் ஸ்ரீகிருஷ்ணனிடம், 'இது என்ன ஆச்சர்யம்! நமது பிதாமகர் ஒரு பெரிய ஞானி, இருந்தும் மரணத்தைக் குறித்து அழுகிறாரே' என்றார்கள்.

"அதற்குக் கிருஷ்ணர் 'ஏன் அழுகிறார் என்று அவரையே கேளுங்கள்' என்றார். பாண்டவர்கள் பீஷ்மரிடம் கேட்டபோது பீஷ்மர், 'ஆண்டவனுடைய செயல்கள் ஒன்றையும் அறிய முடியவில்லையே என்று எண்ணி அழுகிறேன்! ஓ! கிருஷ்ணா! நீ இப்பாண்டவர்களுடன் எப்போதும் இருக்கிறாய். இவர்களை ஒவ்வொரு ஆபத்திலிருந்தும் காப்பாற்றுகிறாய். இருந்தாலும் இவர்களுடைய துன்பத்திற்கு முடிவே இல்லையே, அதனை எண்ணித்தான் அழுகிறேன்' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பகவான் தன்னுடைய மாயையால் எல்லாவற்றையும் மூடி மறைத்து வைத்திருக்கிறார். எதையும் அறிந்து கொள்ள நம்மை அவர் விடுவதில்லை. பெண், பொன் தான் மாயை. இந்த மாயையை அகற்றி எவன் இறைவனைக் காண்கிறானோ அவனே இறைவனை உண்மையாகக் காண்பவன். நான் ஒரு முறை அற்புதச் செயலைப் பற்றி ஒருவருக்கு விளக்கிக் கொண்டிருக்கும் போது, கடவுள் திடீரென்று கமார் புகூரிலுள்ள குளத்தை எனக்குக் காட்டினார். ஒரு மனிதன் பச்சைப் பசேல் என்றிருக்கும் பாசியைக் கையினால் அகற்றி விட்டுத் தண்ணீர் குடித்துக் கொண்டிருந்தான். தண்ணீர் பளிங்கைப் போலத் தூய்மையாக இருந்தது. மாயை என்னும் பாசியால் சச்சிதானந்தம் மூடப்பட்டிருப்பதை எனக்கு இறைவன் இப்படிக் காட்டினான். பாசியை எவன் அகற்றுகிறானோ, அவனால்தான் தண்ணீர் குடிக்க முடியும்.

"சற்று கவனமாகக் கேள்! உனக்கு ரகசியமான ஒரு செய்தி கூறுகிறேன். ஒருமுறை நான் தட்சிணேசுவரத்தில் சவுக்கு மரங்கள் இருக்கும் தோப்புப் பக்கம் சென்று உட்கார்ந்து கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு புகை படிந்த வீட்டின் கதவைக் காண்பது போன்ற ஒரு காட்சி தோன்றியது. அந்த வீட்டினுள் என்ன இருக்கிறது என்று என்னுல் பார்க்க முடியவில்லை. அந்த மரக்கதவில் ஒரு துளை செய்ய முயன்றேன். முடியவில்லை. மண் விழுந்து அந்தத் துளையை மூடிக் கொண்டது. பல முறை முயற்சிகள் செய்தும் பலன் ஏதும் இல்லை! பிறகு இன்னெரு முறை முயன்றேன். ஒரு பெரிய துளை உண்டாயிற்று." இவ்வாறு கூறிவிட்டு குருதேவர் மௌனமடைந்தார். மறுபடியும் பேச ஆரம்பித்தார்.

"இவைகளெல்லாம் மிக உயர்ந்த கருத்துக்கள். பார்த்தாயா? இதைச் சொல்லும் போதே யாரோ எனது வாயைத் திரும்பத் திரும்ப மூடுகின்றனர். இறைவன் யோனியில் வசிப்பதை என் கண்களால் கண்டேன். ஒரு ஆண் நாயும், ஒரு பெண் நாயும் புணரும் சமயத்தில் கூட நான் ஆண்டவனை அங்குக் கண்டேன்.

"இறைவனின் உணர்வால் தான் இந்த உலகம் உணர்வுள்ளதாக விளங்குகிறது. சில சமயம் சிறு சிறு மீன்களிலும்கூட இந்தக் கடவுளின் உணர்வுத் தன்மை துடிப்பதைப் பார்க்கிறேன்."

வண்டி சோபாபஜார் பாதையின் சந்திப்பில் நின்றது. குருதேவர் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார்.

"மழைக் காலத்தில் பூமி தண்ணீரில் ஊறியிருப்பது போன்று இறைவனது உணர்வுத் தன்மையில் உலகம் ஊறியிருப்பதைக் காண்கிறேன். எவ்வளவு காட்சிகளை நான் கண்டிருக்கிறேன். ஆயினும் இவற்றின் காரணமாக நான் ஒரு பொழுதும் வீண் பெருமைப் பட்டுக் கொண்டதில்லை."

ம (சிரித்துக் கொண்டே): "நீங்களாவது, பெருமைப்பட்டுக் கொள்வதாவது?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என் சொற்கள் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். நான் தற்பெருமை சிறிதளவும் கொண்டதில்லை."

அப்படி இருந்தும் அவனை நம்மால் அறிந்து கொள்ள முடிவ தில்லை. கிருஷ்ணனை இறைவன் என்று பலராமர், அறிந் திருக்கவே இல்லை."

ம : "உண்மைதான் சுவாமி! பீஷ்மரைப் பற்றியும் நீங்கள் கூறியிருக்கிறீர்களே!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆம்! பீஷ்மரைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறேன்? சொல்?"

ம : "பீஷ்மர் அம்புப் படுக்கையில் படுத்திருந்தபோது அழுது கொண்டிருந்தார். இதைக் கண்ட பாண்டவர்கள் ஸ்ரீகிருஷ்ணனிடம், 'இது என்ன ஆச்சர்யம்! நமது பிதாமகர் ஒரு பெரிய ஞானி, இருந்தும் மரணத்தைக் குறித்து அழுகிறாரே" என்றார்கள்.

"அதற்குக் கிருஷ்ணர் 'ஏன் அழுகிறார் என்று அவரையே கேளுங்கள்' என்றார். பாண்டவர்கள் பீஷ்மரிடம் கேட்ட போது பீஷ்மர், 'ஆண்டவனுடைய செயல்கள் ஒன்றை யும் அறிய முடியவில்லையே என்று எண்ணி அழுகிறேன்! ஓ! கிருஷ்ணா! நீ இப்பாண்டவர்களுடன் எப்போதும் இருக் கிறாய். இவர்களை ஒவ்வொரு ஆபத்திலிருந்தும் காப்பாற்று கிறாய். இருந்தாலும் இவர்களுடைய துன்பத்திற்கு முடிவே இல்லையே, அதை எண்ணித்தான் அழுகிறேன்' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பகவான் தன்னுடைய மாயையால் எல்லாவற்றையும் மூடி மறைத்து வைத்திருக்கிறார். எதையும் அறிந்து கொள்ள நம்மை அவர் விடுவதில்லை. பெண், பொன் தான் மாயை. இந்த மாயையை அகற்றி எவன் இறைவனைக் காண்கிறானோ அவனே இறைவனை உண்மையாகக் காண் பவன். நான் ஒரு முறை அற்புதச் செயலைப் பற்றி ஒருவருக்கு விளக்கிக் கொண்டிருக்கும் போது, கடவுள் திடீரென்று கமார் புகூரிலுள்ள குளத்தை எனக்குக் காட்டினார். ஒரு மனிதன் பச்சைப் பசேல் என்றிருக்கும் பாசியைக் கையினால் அகற்றி விட்டுத் தண்ணீர் குடித்துக் கொண்டிருந்தான். தண்ணீர் பளிங்கைப் போலத் தூய்மையாக இருந்தது. மாயை என்னும் பாசியால் சச்சிதானந்தம் மூடப்பட்டிருப்பதை எனக்கு இறை வன் இப்படிக் காட்டினான். பாசியை எவன் அகற்றுகிறானோ, அவனால்தான் தண்ணீர் குடிக்க முடியும்.

"சற்று கவனமாகக் கேள்! உனக்கு ரகசியமான ஒரு செய்தி கூறுகிறேன். ஒருமுறை நான் தட்சிணேசுவரத்தில் சவுக்கு மரங்கள் இருக்கும் தோப்புப் பக்கம் சென்று உட்கார்ந்து கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு புகை படிந்த வீட்டின் கதவைக் காண்பது போன்ற ஒரு காட்சி தோன்றியது. அந்த வீட்டினுள் என்ன இருக்கிறது என்று என்னால் பார்க்க முடியவில்லை. அந்த மரக்கதவில் ஒரு துளை செய்ய முயன்றேன். முடியவில்லை. மண் விழுந்து அந்தத் துளையை மூடிக் கொண்டது. பல முறை முயற்சிகள் செய்தும் பலன் ஏதும் இல்லை! பிறகு இன்னொரு முறை முயன்றேன். ஒரு பெரிய துளை உண்டாயிற்று." இவ்வாறு கூறிவிட்டு குருதேவர் மௌனமடைந்தார். மறுபடியும் பேச ஆரம்பித்தார்.

"இவைகளெல்லாம் மிக உயர்ந்த கருத்துக்கள். பார்த்தாயா? இதைச் சொல்லும் போதே யாரோ எனது வாயைத் திரும்பத் திரும்ப மூடுகின்றனர். இறைவன் யோனியில் வசிப்பதை என் கண்களால் கண்டேன். ஒரு ஆண் நாயும், ஒரு பெண் நாயும் புணரும் சமயத்தில் கூட நான் ஆண்டவனை அங்குக் கண்டேன்.

"இறைவனின் உணர்வால் தான் இந்த உலகம் உணர்வுள்ளதாக விளங்குகிறது. சில சமயம் சிறு சிறு மீன்களிலும் கூட இந்தக் கடவுளின் உணர்வுத் தன்மை துடிப்பதைப் பார்க்கிறேன்."

வண்டி சோபாபஜார் பாதையின் சந்திப்பில் நின்றது. குருதேவர் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார்.

"மழைக் காலத்தில் பூமி தண்ணீரில் ஊறியிருப்பது போன்று இறைவனது உணர்வுத் தன்மையில் உலகம் ஊறியிருப்பதைக் காண்கிறேன். எவ்வளவு காட்சிகளை நான் கண்டிருக்கிறேன். ஆயினும் இவற்றின் காரணமாக நான் ஒரு பொழுதும் வீண் பெருமைப் பட்டுக் கொண்டதில்லை."

ம (சிரித்துக் கொண்டே): "நீங்களாவது, பெருமைப்பட்டுக் கொள்வதாவது?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என் சொற்கள் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். நான் தற்பெருமை சிறிதளவும் கொண்டதில்லை."

ம : "கிரீஸ் நாட்டில் ஒரு மனிதர் வசித்து வந்தார். அவர் பெயர் சாக்ரடீஸ். அவர் மனிதர்களில் சிறந்த அறிவாளி என்று ஒரு அசரீரி எழுந்தது. அவர் ஆச்சரியமடைந்தவராய் அந்த வார்த்தைகளை நீண்ட நேரம் தியானம் செய்து கடைசியில் அதன் உட்கருத்தை அறிந்து கொண்டார். தமது நண்பர்களிடம் இதைப்பற்றிக் கூறியபோது, 'எனக்கு ஒன்றும் தெரியாது என்பதை நான் ஒருவன்மட்டுமே அறிந்திருக்கிறேன். ஆனால், ஒவ்வொருவரும் நான்தான் அறிவாளி என்று நினைக்கிறார்கள். உண்மையில் எல்லோரும் அறிவற்றவர்களே. இதைத்தான் நான் அந்த வார்த்தைகளின் மூலம் அறிந்து கொண்டேன்' என்று கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "எனக்கென்ன தெரியும் என்று நான் அடிக்கடி நினைப்பதுண்டு. என்னிடம் இவ்வளவு பேர் ஏன் வருகின்றனர்? வைஷ்ணவ சரண் ஒரு பெரிய பண்டிதர். அவர் 'நீ கூறும் வார்த்தைகள் எல்லாம் சாஸ்திரத்தில் உள்ளன. இருந்தும், உன்னிடம் ஏன் வருகிறேன் தெரியுமா? அவைகளை உனது வாயால் கேட்பதற்காகத் தான்' என்று கூறுவார்."

ம : "உங்களது வார்த்தைகள் எல்லாம் சாஸ்திரத்தோடு பொருந்தியிருக்கின்றன. அன்று பானிஹாடியில் நவத்வீப்கோசுவாமியும் இப்படித் தான் கூறினார். அப்போது நீங்கள் 'கீதா, கீதா என்று திரும்பத் திரும்பக் கூறினால் தியாகி தியாகி என்று வருகிறது' என்று சொன்னீர்கள். ஆனால் உண்மையில் தாகீ என்று தான் வருகிறது. கோசுவாமி 'தாகீ என்றாலும், தியாகி என்றாலும் எல்லாம் இலக்கணப்படி ஒரே பொருள் தான்' என்று கூறினார்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பண்டிதர்கள், துறவிகள் அல்லது வேறு யாரையாவது இப்படி என்னுடன் ஒப்பிட முடியுமா?"

ம : "இறைவன் உங்களைத் தன்னுடைய கைகளால் உண்டாக்கியிருக்கிறார். ஆனால், மற்றவர்களையோ படைப்பின் விதிப்படி இயந்திரத்தின் மூலம் படைத்திருக்கிறார்."

குருதேவர் (சிரித்த முகத்துடன் ராம்லால் முதலியவர்களிடம்) : "இவன் என்ன சொல்கிறான், பார்த்தீர்களா!" குருதேவரால் சிரிப்பை அடக்க முடியவில்லை. மேலும் அவர் "உண்மையாகவே என்னிடம் எந்த விதத் தற்பெருமையும் கிடையாது. அணுவளவுகூடக் கிடையாது."

ம: "அறிவு ஒரு விதத்தில் நமக்கு ஒரு பெரிய நன்மையைச் செய்கிறது. 'எனக்கு ஒன்றும் தெரியாது. நான் ஒன்றுமில்லை' என்று அது உணரச் செய்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நான் ஒன்றுமில்லை! நான் ஒன்றுக்கும் உதவாதவன்! மிக நன்ருகச் சொன்னுய். ஆங்கில வான சாஸ்திரத்தை நீ நம்புகிருயா?"

ம: "ஆங்கில வான சாஸ்திரங்களைக் கொண்டு புதியவற்றைக் கண்டுபிடிக்கலாம். 'யுரானஸ்' என்ற கோளின் தாறுமாருன போக்கைக் காண வேண்டித் தொலைநோக்கிக் கருவியின் வழியாகப் பார்த்தபோது 'நெப்டியூன்' என்ற நட்சத்திரம் ஆகாயத்தில் மின்னுவதைக் கண்டு பிடித்தனர். மேலும் கிரஹணத்தைப் பற்றியும் முன்கூட்டியே அறிய முடிகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆம். உண்மை."

வண்டி அதரின் வீட்டை நெருங்கிக் கொண்டிருந்தது. குருதேவர் ம-விடம் "எப்போதும் உண்மையில் நிலைத்து நில்! அப்போது இறைவனை அடைவது நிச்சயம்" என்று கூறினுர்.

ம: "நீங்கள் நவத்வீப்கோசுவாமியிடம், 'இறைவனே! நான் உன்னையே அடைய விரும்புகிறேன். நீ உனது உலகை மயக்கும் மாயையில் என்னை மூழ்கடிக்காதே. நான் உன்னையே விரும்புகிறேன்' என்று கூறினீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆமாம். மனமார இவ்வாறு கூற வேண்டும். இந்த எண்ணம் உள்ளத்திலிருந்து வர வேண்டும்."

குருதேவர் அதர்சென்னுடைய வீட்டை அடைந்தார். குருதேவர், ராம்லால், ம-, அதர் மற்றும் பல பக்தர்களுடன் அதரின் விருந்தினர் அறையில் சென்று உட்கார்ந்தார். அந்தப் பகுதியைச் சேர்ந்த சில பக்தர்களும் குருதேவரைக் காண வந்திருந்தனர். ராக்காலின் தந்தை அப்போது கல்கத்தாவில் வசித்து வந்ததால் ராக்கால் தந்தையுடன் தங்கியிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அதரைப் பார்த்து): "ராக்காலிடம் நான் வருவதைப் பற்றிச் சொல்லவில்லையா?"

அதர்: "நான் அவனுக்குச் சொல்லி அனுப்பினேன்."

குருதேவர் ராக்காலைக் காண ஆவல் கொண்டிருப்பதை உணர்ந்த அதர், உடனே தன் வண்டியில் ஒருவனை அனுப்பி ராக்காலை அழைத்து வரச் சொன்னார்.

அதர் குருதேவரின் அருகில் உட்கார்ந்து கொண்டார். குருதேவரைக் காண அதர் மிகவும் ஏக்கம் கொண்டவராக விளங்கினார். குருதேவர் வரப் போவது பற்றி, அவருக்கு நிச்சயமாகத் தெரியாது. அதனால் எந்த வித முன்னேற்பாடும் செய்யவில்லை. திடீரென்று இறைவனின் விருப்பப்படி குருதேவர் அப்பொழுது அங்கு சென்றார்.

அதர்: "நீங்கள் இங்கு வந்து அதிக நாட்கள் ஆகி விட்டன. இறைவனிடம் இன்று நீங்கள் வர வேண்டுமென்று வேண்டிக் கொண்டேன், கண்ணீர் வடித்தேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அப்படியா குழந்தாய்!"

இரவு நெருங்கிக் கொண்டிருந்தது. எனவே அறையில் விளக்கு ஏற்றப்பட்டது. குருதேவர் கூப்பிய கைகளுடன் ஜகன்மாதாவை வணங்கி விட்டுத் தமக்குள்ளேயே பிரணவத்தை ஓதிக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

அதன் பிறகு இனிய குரலில், "கோவிந்தா, கோவிந்தா! சச்சிதானந்தா! ஹரிபோல்! ஹரிபோல்! "என்று கூறத் தொடங்கினார். அவர் கூறிய வார்த்தைகள் அமுதினைத் தெளித்தது போல் எல்லோருடைய செவிகளையும் குளிரச் செய்தன. பக்தர்கள் இன்னமுதம் போன்ற இறைவனின் திருநாமத்தைப் பருகினார்கள். ராம்லால் பாட ஆரம்பித்தார். முதலில் அன்னை காளியைப் பற்றிப் பாடினார். பிறகு ஆறு சக்கரங்களைப் பற்றிப் பாடினார். ஐந்தாவதான விசுத்த சக்கரத்தைப்பற்றிய விளக்கம்:

"பதினாறு இதழ்களைக் கொண்ட சிவப்பு வர்ணமுள்ள
தாமரை, மேலே தொண்டையில் உள்ளது.
இந்த மலரின் இதழ்களுக்குள் ஒளிந்திருக்கும் சிதாகாசம்.
அதைப் பிளந்து சென்றால் உலகமே பேராகாசத்தில் ஒடுங்குகிறது."

இப்பொழுது குருதேவர் ம-விடம் "இதைக் கேள். இதைத் தான் உருவமற்ற சச்சிதானந்த பிரம்மம் என்பார்கள். குண்டலினி சக்தி நெற்றியிலுள்ள விசுத்த சக்கரத்தைப் பிளந்து சென்றால் எல்லாமே ஆகாயமாகத் தோற்றமளிக்கும்."

ம: "ஆம், ஐயா."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "மாயை, உயிர்கள், உலகம் இவற்றைக் கடந்து விட்டால் நித்தியத்தை அடைந்து விடலாம். நாதத்தைக் கடந்தால் சமாதிநிலை கூடுகிறது. ஓங்கார உபாசனை செய்யச் செய்ய நாதத்தைக் கடந்து செல்லலாம். பிறகு சமாதி நிலை ஏற்படுகிறது."

அதர் குருதேவருக்குப் பழம், இனிப்பு முதலியவற்றை வழங்கினர். குருதேவர் யதுமல்லிக்கினுடைய இல்லத்திற்குக் கிளம்பினர்.

குருதேவர் யதுமல்லிக்கின் இல்லத்தை அடைந்தபோது எங்கும் நிலவின் ஒளி பரவியிருந்தது. சிம்மவாஹினியைத் தரிசிக்கப் பூஜை அறைக்கு அவர் சென்றார். அடியார்களும் உடன் சென்றனர். மலர்களாலும் மாலைகளாலும் அலங்கரிக்கப் பட்டிருந்த அன்னை அழகாகக் காட்சியளித்தாள். அருகில் அர்ச்சகர் அமர்ந்திருந்தார். அன்னையின் சிலையின்முன் விளக்கு ஏற்றப்பட்டிருந்தது. குருதேவர் பக்தர் ஒருவரிடம் ஒரு ரூபாயைக் காணிக்கையாக வைத்து அன்னையை வணங்கும் படியாகக் கூறினர். "தேவியைத் தரிசிக்க வந்தால் ஏதாவது தட்சிணை கொடுக்கவேண்டும்" என்றார்.

குருதேவர் இப்போது அன்னை சிம்மவாஹினியின் முன் கை கூப்பிய வண்ணம் நின்றார். அருகில் பக்தர்களும் கை கூப்பிய வண்ணம் நின்றனர். நீண்டநேரம் குருதேவர் அன்னையைத் தரிசித்தார். என்ன ஆச்சரியம்? தரிசித்துக்கொண்டே சமாதியில் ஆழ்ந்துவிட்டார். வரைந்த சித்திரம் போன்று பேச்சும் மூச்சும் அற்று அப்படியே நின்று கொண்டிருந்தார். கண்கள் இமைக்கவில்லை.

நீண்ட நேரத்திற்குப் பிறகு பெருமூச்சுவிட்டார். சமாதி கலைந்தது. தெய்விக நிலையில் திளைத்த குருதேவர், "தாயே, போய்வருகிறேன்" என்றார். ஆனால், அவரால் இந்த இடத்தை விட்டு நகர முடியவில்லை. அப்படியே பரவச நிலையிலேயே நின்றுகொண்டிருந்தார். பிறகு ராம்லாலிடம், "நீ அந்தப் பாட்டைப்பாடு. நான் சாதாரண நிலையை அடைவேன்" என்றார். ராம்லால் பாடத் துவங்கினர்:

புவனசிவ மோகினியே! புவி மயங்கச் செய்கின்றாய்! பொலியும் தாயே!
தவ மூலாதாரத்தே தாமரைத்தண் மாமலரில் தந்தி வீணை
நவ வாத்திய விநோதினியாய்! நல்லவண்ணம் விளங்குகின்றாய்! நவிலுகின்ற
உவகைதரும் உடல் உயிராம் ஒப்பில்லா இயந்திரத்தை உடையாய் நீயே!
சொல்லும் அந்த இயந்திரத்தில், சுழுமுனைமுந் நாடிகளில், தோன்றுகின்ற
நல்லகுண பேதத்தால், நாடுமகா மந்திரத்தே நாட்டுகின்ற
வல்லகுணம் மூன்றானாய்! வாய்த்த சுவா திட்டானம் வளர் ஆதா
இல்லமதில் பைரவியாம் இசையாகி ஆறிதழ்சேர் எழிற் பூவானாய்!
அருஞ் சக்தி வடிவினளே! அமைந்த மணி பூரகத்தில் அகத்தை யீர்க்கும்
பெருஞ்சக்தி மல்லாரிப் பேரிசையாய் வளர்பவளே! பேசுகின்ற
அருளிதயக் கமலத்தே அனாகதத்தே வசந்த இசை அமுதமாகத்
திருவுடனே ஒளிவீசித் திகழ்கின்றாய்! மகிழ்கின்றாய் தேவி நீயே!
கண்டமென்னும் விசுத்தியிலே கனிந்துவரும் இந்தோள கானம் ஆனாய்!
அண்டமெனும் ஆஞ்ஞையிலே அருங்கர்னாடக இசையாய் அமைந்தாய்தாயே
கொண்டலய பேதங்களில் கூறுமொலி மூன்றிடையே குடைந்து செல்லும்
மண்டலத்தாய்! எளிதினிலே மாமாயைக் கயிற்றாலே வாட்டுவாயே!
தத்துவமெய் வெளியினிலே தாயே! சௌ தாமினியே! தங்குவாயே
சத்தியமாய் அவ்வெளியில் சலனமின்றித் திரமாகத் தவழ்வாய் நீயே!
வித்தகியே! நந்தகுமார் விமலை, உனை யறிந்திடவே விளம்புகின்றார்!
தத்துவமுக் குணங்களையே தாங்கியடக்கிக் கொண்ட தாயே! மாயே!

பாட்டு முடிந்ததும் குருதேவரும், பக்தர்களும் விருந்தினர் அறைக்கு வந்தனர். வரும் வழியில் குருதேவர், "தாயே! என் உள்ளத்தில் தங்கு" என்று அடிக்கடிக் கூறிக் கொண்டிருந்தார். யதுமல்லிக் தன் உறவினருடன் அறையில் இருந்தார். குருதேவர் பரவசநிலையில் பாடத் துவங்கினார்.

—ஆனந்தமயமான அன்னையே, என்றனை நிரானந்தன் ஆக்கிடாதே.

... ... ...

பாட்டுமுடிந்ததும் மறுபடியும் பரவசநிலையில் மூழ்கியவராய் யதுமல்லிக்கைப்பார்த்து, "என்ன ஐயா? எதைப்பாடுவது? 'அன்னையே, நான் என்ன மாதம் எட்டான உன் அறியாச் சிறு மதலையா' என்ற பாட்டைப் பாடட்டுமா?" என்று கேட்டுவிட்டுப் பாடத் தொடங்கினார்.

அன்னையே, நானென்ன மாதமெட்டானவுன்
அறியாச் சிறு மதலையா?
அடியேனைச் செங்கணால் அச்சுறுத் திடுவையேல்
அஞ்சியே நிற்க மாட்டேன்!

உன் அரும் சிவன்மார்பில் தாங்குமுன் பூம்பர்தம்
உயர்வான எனது செல்வம்!
உரிமைநான் கேட்கையில் தருவதற்கென்னவோ
தாமதப் படுத்துகின்ருய்.
என்னுடை நெஞ்சினில் உன்பதி சிவனதைப்
பரிசெனத் தந்தமைக்கே
எழுதிக் கொடுத்தவோர் சாசனம்தன்னையே
பாதுகாத்துள்ளவன் நான்!
இன்னினி உன்றன்மேல் வழக்கினை மன்றிலே
எளிதினில் போட்டுவிடுவேன்!
எடுத்துயான் கூறுமோர் குறிப்பினுல் மட்டுமே
வழக்கினை வென்று விடுவேன்!
எதிர் வழக் காடிநீ மன்றிலே நின்றையேல்
அன்னையுன் செல்வமைந்தன்
எப்படிப் பட்டவோர் இயல்பினை உடையனோன்
என்பதை நீஅ றிகுவாய்.
சதிரிடும் சிவனவன் தந்தநல் மந்திரச்
செல்வத்தை அந்தவேளை
தாயுனது முன்பாகப் பாரெனக் காட்டியே
தனயன் யான் நின்றிருப்பேன்
அதிகமாம் கடுமையோ டெதிர்த்திடும் வழக்கொரு
தாய்க்குமவள் சேய்க்கு மேதான்!
'அடடாவோ ஈதென்ன விளையாட்டோ' எனராமப்
பிரசாதர் கூறுகின்ருர்.
கதியென நீவந்து வழக்கை நிறுத்தி எனை
ஆட்கொள்ளும் காலம் மட்டும்
கட்டாயமாகவே வேதனை தந்திடும்
காரியம் நிறுத்த மாட்டேன்.

பரவசநிலை கலைந்தது. குருதேவர், "அன்னையின் பிரசாதத்தைச் சிறிது உட்கொள்கிறேன்" என்ருர். சிம்ம வாஹினியின் பிரசாதம் சிறிது குருதேவருக்குக் கொடுக்கப் பட்டது. யதுமல்லிக் உட்கார்ந்து கொண்டிருக்க, அருகில் சில நண்பர்களும், உறவினரும் இருந்தனர். அவர்களில் முகஸ்துதி செய்யும் சிலரும் இருந்தனர்.

குருதேவர் யதுமல்லிக்கைப் பார்த்தவாறு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு சிரித்துப் பேசினுர். குருதேவருடன் வந்த பக்தர்கள் அடுத்த அறையில் இருந்தனர். ம-வும்

இரண்டொரு பக்தர்களும் குருதேவரின் அருகில் அமர்ந்திருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடியே): "நீ ஏன் இந்தக் கோமாளிகளை உன்னுடன் வைத்திருக்கிறாய்?"

யது (சிரித்தவாறே): "கோமாளிகளாய் இருக்கட்டுமே? நீங்கள் அவர்களைக் காப்பாற்றமாட்டீர்களா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடியே): "கங்கைத் தண்ணீரால் சாராயப்புட்டியைப் புனிதமாக்க முடியாதே!"

யதுமல்லிக் தமது வீட்டில் "சண்டி" பாராயணத்திற்கு ஏற்பாடு செய்வதாகக் குருதேவரிடம் வாக்களித்திருந்தார். நீண்ட நாட்கள் கழிந்தபின்னரும் அவர் கொடுத்தவாக்கை நிறைவேற்றவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என்னப்பா? சண்டி பாராயணம் என்ன ஆயிற்று?"

யது: "பல வேலைத் தொந்தரவுகளினால் ஏற்பாடு செய்ய முடியவில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அதெப்படி? மனிதன் தன் வாக்கைக் காப்பாற்ற வேண்டாமா? மனிதனுடைய வார்த்தை யானையின் தந்தம் போன்றது. ஒருமுறை வெளியில் வந்த தந்தம் மீண்டும் உள்ளே செல்வதில்லை. மனிதன் சொன்ன சொல்லைக் காப்பாற்றவேண்டும். என்ன சொல்கிறாய்?"

யது (சிரித்துக் கொண்டே): "அது என்னவோ உண்மை தான்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீ தந்திரமான மனிதன். நீ அதிகமாகக் கணக்குப் பார்த்து வேலை செய்கிறாய். பிராமணன் தேர்ந்து எடுத்த பசுவைப் போன்றவன் நீ. அது குறைவாகத் தீனி தின்ன வேண்டும். அதிகமாகச் சாணம் போட வேண்டும், அதே சமயத்தில் நிறையப் பால் கறக்க வேண்டும்." (எல்லோரும் சிரிக்கின்றனர்.)

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் யதுவிடம் கூறினார். "நான் உன் நிலைமையை அறிவேன். நீ ராம் ஜீவன்பூர் என்ற ஊரிலுள்ள ஏரியைப்போன்றவன். ஒரு பாதி குளிர்ச்சி, ஒரு பாதி சூடு.

"நீ கடவுளையும் நேசிக்கிறாய்; அதே சமயத்தில் உலகையும் நேசிக்கிறாய்."

பிறகு குருதேவர் இரண்டொரு பக்தர்களுடன். யதுவின் வீட்டில் இனிப்பு, பழம், பால் முதலியவற்றை உட்கொண்டார். பின்னர் கேலாத் கோஷின் வீட்டிற்குச் சென்றார்.

குருதேவர் கேலாத் கோஷின் வீட்டிற்குள் நுழைந்தபோது இரவு பத்துமணி இருக்கும். வீட்டையும், வீட்டுத்தாழ்வாரத்தையும் விளக்குகளால் அலங்கரித்து ஒளிமயமாக ஆக்கியிருந்தார்கள். வீட்டிற்குள் நுழைந்ததும் குருதேவர் பரவசநிலை அடைந்தார். அவருடன் ம-, ராம்லால் இன்னும் இரண்டொரு பக்தர்களும் இருந்தனர்.

அது பல கட்டுக்களைக் கொண்ட ஒரு மாளிகை. மாடியில் ஏறித் தாழ்வாரத்தின் வழியாகத் தெற்கே சிறிது தூரம் நடந்து மேற்கே திரும்பி, பிறகு வடக்காகக் கொஞ்ச தூரம் சென்றால் வீட்டின் உட்பகுதியை அடையலாம். வீட்டின் இந்தப் பகுதிக்கு வந்தால், மக்கள் நடமாட்டம் இல்லாதது போல் தோன்றும். வெறுமையான பெரிய பெரிய அறைகளும், தாழ்வாரமும் ஆட்கள் நடமாட்டம் இல்லாமல் வெறிச்சோடிக் கிடந்தன. குருதேவரை வடக்கே உள்ள ஓர் அறையில் உட்கார வைத்தனர். குருதேவருடைய பரவசநிலை இன்னமும் கலையவில்லை. இதற்குள் அந்த வீட்டைச் சேர்ந்த ஒரு பக்தரை அங்கு அழைத்து வந்தனர். அவர் எல்லோரையும் வரவேற்றார். அவர் ஒரு வைணவர், வைதீகர். உடலில் வைணவ சம்பிரதாயத்திற்குரிய நாமம் முதலிய சின்னங்கள் இருந்தன. கையில் ஒரு ஜெபமாலை. இவர் கேலாத் கோஷின் சம்பந்தி. பலமுறை தட்சிணேசுவரம் சென்று குருதவரைத் தரிசித்திருக்கிறார். வைணவர்கள் அநேகமாக மதவிஷயத்தில் குறுகிய மனப்பான்மை கொண்டவர்கள். அவர்கள் வழக்கமாக வேதாந்திகளையும் சாக்தர்களையும்[1] பலவாறு தூற்றுவார்கள். குருதேவர் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராம்கிருஷ்ணர் (வைணவ பக்தரையும் இதர பக்தர்களையும் பார்த்து) : "என் மதம்தான் உண்மை, மற்றவர் மதம் தவறு என்று எண்ணுவது நல்லதல்ல. இறைவன் ஒருவனே, இரண்டல்ல. அவனைப் பல பெயர்களால் பல்வேறு மக்கள் அழைக்கின்றனர். சிலர் 'காட்' (God) என்கின்றனர். வேறு சிலர் 'அல்லா' என்கின்றனர். இன்னும் சிலர் 'கிருஷ்ணன்' என்றும் 'சிவன்' என்றும், 'பிரம்மா' என்றும் அழைக்கின்றனர். குளத்தில்

1. சாக்தர்கள்--சக்தியை வணங்குபவர்கள்.

தண்ணீர் இருக்கிறது. ஒரு துறையில் நீர் அருந்துவோர் 'வாட்டர்' என்கின்றனர். இன்னொரு துறையில் 'ஜலம்' என்கின்றனர். மற்றொரு துறையில் அருந்துவோர் 'பானி' என்கின்றனர். இந்துக்கள் 'ஜலம்' என்கின்றனர். கிறிஸ்தவர்கள் 'வாட்டர்' என்கின்றனர். முகமதியர்கள் 'பானி' என்கின்றனர். ஆனால், பொருள் ஒன்று தான். மதங்கள் என்பவை மார்க்கங்களே. ஒவ்வொரு மதத்தின் கொள்கையும் ஒவ்வொரு வழி. இவ்வழிகள் நம்மை இறைவனிடம் அழைத்துச் செல்கின்றன. பல பாகங்களிலிருந்து வரும் நதிகள் யாவும் கடைசியில் கடலில் சங்கமமாகி விடுகின்றன.

"வேதம், புராணம், தந்திரம் இவைகளின் உட்கருத்து ஒன்றுதான். வேதத்தில் சச்சிதானந்த பிரம்மம்; புராணத்தில் சச்சிதானந்த கிருஷ்ணர், சச்சிதானந்த இராமர்; தந்திரத்தில் சச்சிதானந்த சிவம் என்று கூறப்படுகிறது. ஆனால், சச்சிதானந்த பிரம்மம், சச்சிதானந்தகிருஷ்ணர், சச்சிதானந்த சிவம் எல்லாம் ஒரே சச்சிதானம்."

பக்தர்கள் அமைதியாகக் கேட்டபடி இருந்தனர்.

வைணவபக்தர்: "ஐயா, நாம் ஏன் இறைவனை நினைக்க வேண்டும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இந்த ஞானம்[1] இருந்தால் ஒருவன் ஜீவன் முக்தனாகி விடுகிறான். ஆனால் எல்லோருக்கும் இந்த நம்பிக்கை இல்லை. வெறும் வாய்ப் பேச்சுதான். 'இறைவன் ஒருவன் இருக்கிறான். அவனுடைய விருப்பப்படியே எல்லாம் நடக்கின்றன' என்பதைப் பொருளாசை பிடித்த மக்கள் கேட்கின்றனர். ஆனால் அதில் நம்பிக்கை வைப்பதில்லை.

"உலக ஆசை உடைய மக்கள் இறைவனைப்பற்றிக் கொண்டிருக்கும் எண்ணம் எத்தகையது தெரியுமா? வீட்டில் குழந்தைகள் சண்டை போடும் பொழுது கடவுள் பெயரால் சத்தியம் செய்கின்றன. வீட்டில் வயதான பாட்டி, அத்தைகள் சண்டை போடும் போது இப்படிப் பேசுவதைக் கேட்டு இவர்களும் அப்படியே திருப்பிச் சொல்கின்றனர்."

---

1. கடவுள் உள்ளும் புறமும் எல்லா இடங்களிலும் இருக்கிறார் என்ற ஞானம். இத்தகைய ஞானம் இருந்தால் இறைவனைப்பற்றி நினைப்பது தேவையில்லாத தாகும்.

"எல்லோராலும் இறைவனை அடையமுடியுமா? இறைவன் நல்லவர்களைப் படைத்திருக்கிறான்; தீயவர்களைப் படைத்திருக்கிறான்; பக்தர்களைப் படைத்திருக்கிறான்; நம்பிக்கை உள்ளவர்கள், நம்பிக்கையற்றவர்கள், இவர்களையும் படைத்திருக்கிறான். அவனுடைய திருவிளையாடலில் எல்லாவித விசித்திரங்களும் அடங்கியுள்ளன. சில இடங்களில் அவனுடைய சக்தியின் ஒளி அதிகமாக இருக்கிறது. வேறு சில இடங்களில் குறைவாக உள்ளது. சூரியனின் ஒளி, மணலை விடத் தண்ணீரில் அதிகம் பிரகாசிக்கும். ஆனால் கண்ணாடியில், தண்ணீரைவிட இன்னும் அதிகமாகப் பிரகாசிக்கும். பக்தர்களிலும் பல பிரிவுகள் உள்ளனர். உத்தம பக்தன், மத்தியம பக்தன், சாதாரணபக்தன் என்று. கீதையில் இந்தப்பிரிவுகள் பற்றிச் சொல்லப்பட்டுள்ளன."

வைணவர் : "ஆம் ஐயா."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சாதாரணபக்தன், 'இறைவன் இருக்கிறான். மேலே ஆகாயத்தில் அதிக தூரத்தில் இருக்கிறான்' என்று கூறுகிறான். மத்திமயபக்தன், 'இறைவன் எல்லோரிடமும் உணர்வுமயமாக, பிராண வடிவமாக இருக்கிறான்' என்பான். உத்தம பக்தனோ, 'இறைவனே எல்லாமாக ஆகியிருக்கிறான். பார்ப்பதெல்லாம் அவனது வெவ்வேறு உருவங்கள்தாம். அவனே மாயை; அவனே ஜீவர்கள்; அவனே உலகம்; அவனே இவை எல்லாமாக ஆகியிருக்கிறான். அவனைத் தவிர உலகில் வேறு எதுவுமே கிடையாது' என்று கூறுவான்."

வைணவபக்தன் : "இத்தகைய மனநிலையை எவரேனும் அடைந்திருக்கிறார்களா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவனை அடையா விட்டால் இம் மனநிலை உண்டாவதில்லை. இறைவனை அடைந்ததற்குச் சில அடையாளங்கள் உள்ளன. அவன் சில சமயம் பைத்தியம் பிடித்தவனைப்போலச் சிரிப்பான், அழுவான், ஆடுவான், பாடுவான். சில சமயம் குழந்தையைப் போன்று, அதாவது, ஐந்து வயதுக் குழந்தையின் நிலையில், எளிமை, நேர்மை ஆணவமற்ற நிலை இவற்றின் காரணமாக எப்போதும் ஆனந்த மயமாக இருப்பான். சில சமயம் பிசாசைப் போல, சுத்தம், அசுத்தம் என்ற பேத அறிவு இல்லாமல் இருப்பான். விதிகள், விலக்குகள் எல்லாம் அவனுக்கு ஒன்றாகிவிடும். சில சமயம் உயிரில்லாதவன்போல் எதையோ பார்த்தபடி, பொருளற்ற பார்வையைக்

கொண்டவனாக இருப்பான். சில சமயம் அவனால் எந்தவிதக் காரியமும் செய்ய முடியாது. எந்தவித முயற்சியும் எடுத்துக் கொள்ள முடியாது."

குருதேவர் தமது நிலையையே மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறாரா?

ஸ்ரீராமகிருஷ்ணர் (வைணவபக்தர்களைப்பார்த்து) : 'நீ' 'உனது' என்பது ஞானம். 'நான்' 'எனது' என்பது அறியாமை, அஞ்ஞானம். 'இறைவா, எல்லாச் செயல்களும் உன்னுடையவை. உடல், மனம், வீடு, மனைவி, மக்கள், உலகம் இவைகள் யாவும் உன்னுடையவை. எதுவும் என்னுடையதல்ல.' இதுதான் ஞானம்.

"ஞானம் இல்லாதவன் 'இறைவன் அங்கே இருக்கிறான்; அங்கே, வெகு தொலைவில் இருக்கிறான்' என்று கூறுகிறான். ஞானி, (அறிவாளி) 'இறைவன் இங்கே, இங்கே வெகு அருகாமையில் இந்த மனதிற்குள் அந்தர்யாமியாய் இருக்கிறான்' என்று கூறுகிறான். மேலும் இறைவனே பலவித உருவங்களாகவும், அவைகளுக்குள்ளும் இருக்கிறான் என்றும் ஞானி அறிந்து கொள்கிறான்."

### ஞாயிற்றுக்கிழமை, ஜுலை 22, 1883

பிற்பகல் இரண்டு மணி. தட்சிணேசுவரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரின் அறை. விடுமுறை நாளாதலால் குருதேவரைத் தரிசிக்க பக்தர்கள் அதிகமாக வந்திருந்தனர். பிறநாட்களில் வருவதற்குரிய வாய்ப்பு பக்தர்களுக்கு அவ்வளவாகக் கிட்டுவதில்லை. கல்லூரியில் பயிலும் இளைஞர்கள் வார நாட்களில் வந்து குருதேவரைத் தரிசிப்பது வழக்கம். சில சமயம் குருதேவரே தம்முடைய நெருங்கிய சீடர்களைச் செவ்வாய், சனி போன்ற நாட்களில் வருமாறு கூறுவதுண்டு. அந்நாட்களில் அந்த நெருங்கிய சீடர்களுக்குச் சிறப்பான முறையில் ஆன்மிக நெறிகளை அவர் போதிப்பார். அதர், ராக்கால், ம- முதலியோர் பிற்பகல் இரண்டு மணி அளவில் ஒரு வாடகை வண்டியில் காளிகோயிலுக்கு வந்து சேர்ந்தனர். பகல் உணவிற்குப் பின் குருதேவர் சிறிது ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். குருதேவரின் அறையில் மணிமல்லிக் முதலான பக்தர்களும் உட்கார்ந்திருந்தனர்.

புனிதமும், தூய்மையும், பொலிவும் பொருந்திய சூழ்நிலையில் குருதேவரின் அறை விளங்கியது. அறையின் சுவர்

களில் படங்கள் மாட்டப்பட்டிருந்தன. அவற்றுள் ஒன்று தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருக்கும் பீட்டரை ஏசுநாதர் கை கொடுத்து மேலே தூக்கிக் காப்பாற்றும் படம். புத்தரின் ஒரு சிறிய கற்சிலையும் அங்கே வைக்கப்பட்டிருந்தது. பக்தர்கள் சிலர் பாயின் மீதும், சிலர் தரைமீதும், கம்பளங்களின் மீதும் உட்கார்ந்திருந்தனர். மகாபுருஷரும் ஆனந்த மூர்த்தியுமான குருதேவரின் மீதே அடியார்களின் பார்வை பதிந்திருந்தது. அனைவருடைய கண்களும் அவரை நோக்கித் திரும்பியிருந்தன. அறையின் அருகில் மேற்கே இருந்த தடுப்புச் சுவரைத் தொட்டுக் கொண்டு கங்கை நதி ஓடிக்கொண்டிருந்தது.

மழைக்காலமாகையால் புனித கங்கை வெள்ளப் பெருக் கெடுத்து மிக விரைவாகத் தெற்கு நோக்கிப் பாய்ந்தோடிக் கொண்டிருந்தாள். கடலைச் சேர்வதற்கு எவ்வளவு பரபரப்பு! ஓடும் வழியில் இந்த மகாபுருஷருடைய தியான அறையைப் பார்த்ததும், ஒரே ஒரு முறை தொட்டு வணங்கி விட்டு ஓடிக் கொண்டிருந்தாள்!

மணிமல்லிக் சுமார் அறுபது அல்லது அறுபத்தைந்து வயதுடையவர். பழைய பிரம்மசமாஜ பக்தர். சில நாட்களுக்கு முன் அவர் காசிக்குப் போயிருந்தார். குருதேவரின் தரிசனத் திற்காகத் தட்சிணேசுவரம் வந்தபோது காசி யாத்திரை பற்றிய செய்திகளை அவர் குருதேவரிடம் விவரமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.

மணிமல்லிக் : "நான் அங்கே ஒரு சாதுவைப் பார்த்தேன். அவர், 'புலன்களை அடக்காவிட்டால் ஆன்மிக வாழ்வில் வெற்றிகிடைக்காது. மனதில் நினைக்காமல் வெறும் வாயினால் மட்டும் ஈசுவரன், ஈசுவரன் என்று சொல்லுவதால் யாதுபயன் விளையும்?' என்று கூறினர்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இவர்களுடைய கொள்கை என்ன தெரியுமா? முதலில் சாதனை பழக வேண்டும். சமம், தமம், திதிக்ஷை முதலியன[1] பழகி வரவேண்டும் என்பதாகும். இவர்கள் நிர்வாணமடைய முயல்கின்றனர். இவர்கள் வேதாந்தவாதிகள். எப்போதும் பிரம்ம சத்யம், ஜகத்மித்யை என்று விசாரம் செய்பவர்கள். பின்பற்றுவதற்குக் கடினமான வழி இது!

1. புலன்களை அடக்குவது சமம். மனத்தை அடக்குவது தமம். துன்பங்களைப் பொறுத்தல் திதிக்ஷை.

உலகம் மித்யை என்றால், அதிலுள்ள நீயும் மித்யை; (பொய்) இவ்வாறு சொல்லும் ஆசிரியனும் மித்யை என்றாகும். எனவே அவனுடைய வார்த்தைகளும் கனவுபோல் நிலையற்றவையாகின்றன. இவைகள் சாதாரண மனிதனுக்கு எட்டாத, அப்பாற்பட்ட விஷயங்கள்.

"இவ்வனுபவங்கள் எப்படிப்பட்டவை தெரியுமா? கற்பூரத்தைக் கொளுத்தினால் மிஞ்சுவது ஒன்றும் இல்லை. கட்டையை எரித்தால் சாம்பலாவது கொஞ்சம் மிஞ்சும். விசாரத்தின் முடிவில் சாதகனுக்குச் சமாதிநிலை ஏற்படுகிறது. அந்த நிலையில் 'நான், நீ, உலகம்' இவைகளைப் பற்றிய எண்ணங்கள் அவனிடம் இருப்பதில்லை.

"பத்மலோசனர் மிகப் பெரிய ஞானி. என்னிடம் அவருக்கு மிகுந்த மதிப்பு உண்டு. அந்தக் காலங்களில் நான் 'தாயே, தாயே' என்று அன்னை பராசக்தியை அடிக்கடி அழைப்பேன். அப்போது பத்மலோசனர் பர்துவான் ராஜாவினுடைய அவைப் பண்டிதராக இருந்தார். அவர் கல்கத்தாவிற்கு வந்திருந்த போது காமார்ஹாடி என்ற இடத்திற்குப் பக்கத்தில் உள்ள பூந்தோட்டத்தில் தங்கியிருந்தார். அவரைப் பார்க்க எனக்கு ஆவல் உண்டாயிற்று. அவரிடம் அகங்காரம் இருக்கிறதா என்பதை அறிந்துகொள்ள இருதயனை அனுப்பியிருந்தேன். பண்டிதரிடம் அகங்காரம் இல்லை என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன். அவர் என்னைச் சந்தித்தார். இவ்வளவு பெரிய பண்டிதராகவும் ஞானியாகவும் இருந்தும் இராம் பிரசாதின் பக்திப்பாடல்களை நான் பாடக் கேட்டதும் அவர் கண்ணீர் விட்டு அழுதார்.

"நான் அவருடன் பேசும்போது அடைந்த மகிழ்ச்சியை வேறு எவரிடமும் பெற்றதில்லை. என்னிடம் அவர், 'பக்தர்களோடு கூடி இருக்கவேண்டும் என்ற ஆசையை விட்டுவிடு. இல்லையேல் பலவகையான மக்கள் உன்னைக் கீழே இழுத்துவிடுவார்கள்' என்று சொன்னார்.

"வைஷ்ணவசரணருடைய குருவான உத்ஸவானந்தருக்கும், இவருக்கும் கடிதம் மூலம் ஆன்மிகவாதம் ஒன்று நடந்தது. அதைப்பற்றி நாங்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்தபோது அந்தக்காலத்தில் நடைபெற்ற ஒரு சுவையான நிகழ்ச்சியை என்னிடம் கூறினார். ஒரு சபையில் சிவன் பெரியவரா? பிரம்மா பெரியவரா? என்பது பற்றிப் பெரிய

விவாதம் நடந்து கொண்டிருந்தது. கடைசியில் பண்டிதர்கள் அனைவரும் பத்மலோசனரை அணுகி இது பற்றிய முடிவைக் கூறுமாறு கேட்டனர். அதற்குப் பத்மலோசனர் தமக்குரிய வெள்ளை உள்ளத்தோடு, 'என்னுடைய பதினன்கு தலை முறைகளில் என் முன்னோர்கள் எவரும் சிவனையும் பார்த்த தில்லை; பிரம்மாவையும் பார்த்ததில்லை' என்ருராம். 'காமினி காஞ்சனங்களைத் தியாகம் செய்யுங்கள்' என்று நான் சொல் வதைக் கேட்ட அவர் என்னிடம் ஒரு நாள், 'ஏன் அவைகளைத் தியாகம் செய்கிருய்? "இது பணம் அது களிமண்" என்ற வேற்றுமை அறிவு அஞ்ஞானத்தில் இருந்தல்லவா பிறக்கிறது?' என்று கேட்டார். அதற்கு என்னல் பதில் சொல்லமுடியவில்லை. நான் என்ன சொல்லமுடியும்? 'இதெல்லாம் எனக்கு என்னப்பா தெரியும்? எனக்குப் பணம், காசு இவைகளெல்லாம் பிடிப்பதே இல்லை' என்று கூறினேன்.

"மிகவும் அகங்காரம் கொண்ட பண்டிதன் ஒருவன் இருந்தான். அவன் ஆண்டவனுக்கு உருவம் உண்டு என்பதை ஒப்புக்கொள்ளமாட்டான். இறைவனுடைய திருவுள்ளத்தை யாரே அறிவார்கள்? ஈசுவரன் ஒரு நாள் ஆத்யா சக்தியின் வடிவில் அவனுக்குக் காட்சியளித்தார். அந்தப் பண்டிதர் நீண்டநேரம் வெளி உணர்வு அற்றவராக இருந்தார். சற்று உணர்வு மீண்டதும் அவர், 'கா, கா, கா,' அதாவது 'காளி, காளி, காளி' என்ற இந்த ஒலியையே எழுப்பிக் கொண்டிருந் தார்."

ஒரு பக்தர்: "சுவாமி, நீங்கள் வித்யாசாகரைப் பார்த்தீர்களே. அவரைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "வித்யாசாகரிடம் புலமை இருக்கிறது; கருணை இருக்கிறது. ஆனல் அவருக்கு உள்நோக்கிய பார்வை இல்லை. அவருள்ளே பொன் புதைந்து கிடக்கிறது. அவருக்கு அந்தப் பொன்னைப்பற்றித் தெரிந்திருக்குமேயானல், அவர் வெளியே செய்யும் காரியங்கள் எல்லாம் குறைந்திருக்கும். இறுதியில் அடியோடு எல்லாமே நின்றிருக்கும். உள்ளே இதயத்தில் ஈசுவரன் இருக்கிருன் என்பதை அறிந்திருந்தால் அவனைத் தியானிப்பதிலேயே மனம் சென்றிருக்கும். சிலருக்குப் பலன் கருதாமல் காரியங்களைத் தொடர்ந்து பல நாட்கள் செய்து கொண்டே வரக் கடைசியில் வைராக்கியம் ஏற்படுகிறது. இதற்குப் பிறகு மனம் இறைவனேடு ஒன்றி விடும். அதாவது ஐக்கியப்பட்டு விடும்.

"வித்யாசாகர் செய்துவரும் காரியங்கள், தருமச்செயல்கள் மிகவும் நல்லவை. கருணை மிகவும் நல்லது. கருணைக்கும், மாயைக்கும் அதிக வேற்றுமை உண்டு. கருணை நல்லது, மாயை நல்லதல்ல. மனைவி, மக்கள், சகோதரன், சகோதரி, தாய், தந்தையர் முதலியவர்களிடம் வைக்கும் அன்பு மாயை, எல்லோரிடமும் சரிசமமாக வைக்கும் அன்பு கருணை."

ம: "கருணையும் ஒருவிதத் தளையா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆமாம், ஆனால் அது மிக உயர்ந்த நிலையைப் பற்றிய விஷயம். சத்துவ குணத்திலிருந்து உண்டாவது கருணை. சத்துவ குணத்தினால் காத்தலும், ரஜோ குணத்தினால் படைத்தலும், தமோ குணத்தினால் அழித்தலும் நிகழ்கின்றன. ஆனால், பரப்பிரம்மம் சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களைக் கடந்தது. இயற்கைக்கு அப்பாற்பட்டது.

"இம்மூன்று குணங்களும் பிரம்மத்தை அணுகமுடியாது. 'தான் பிடிபட்டுவிடுவோம்' என்ற பயத்தால் திருடன் எப்படி மக்கள் இருக்கும் இடத்திற்கு வருவதில்லையோ, அதுபோல இந்த மூன்று குணங்களும் பிரம்மம் இருக்கும் இடத்திற்கு வருவதில்லை. சத்துவம், ரஜஸ், தமஸ் இந்த மூன்று குணங்களுமே திருடர்கள்.

"ஒரு கதை சொல்கிறேன் கேள். ஒரு மனிதன் காட்டு வழியாகப் போய்க் கொண்டிருந்தான். அப்பொழுது மூன்று திருடர்கள் அவனைப் பிடித்துக் கொண்டு அவனிடமிருந்த எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டார்கள். பிறகு அவர்களில் ஒருவன், 'இவனை விட்டுவைப்பதனால் என்ன லாபம்?' என்று சொல்லியபடியே வாளைக் கையில் ஏந்திக் கொல்ல முன் வந்தான். அப்போது மற்றொருவன், 'வேண்டாம், இவனைக் கொல்வதனால் என்ன பயன்? கைகால்களைக் கட்டி இங்கேயே போட்டுவிடுவோம்' என்றான். அப்படியே அவனுடைய கை, கால்களைக் கட்டிப்போட்டு விட்டுத் திருடர்கள் மூவரும் போய்விட்டார்கள். சற்று நேரங்கழித்து அவர்களுள் ஒருவன் திரும்பிவந்து, 'ஐயோ பாவம்! உனக்கு வேதனையாக இருக்குமே. இதோ நான் உன் கட்டுக்களை அவிழ்த்து விடுகிறேன்' என்று கூறிக் கட்டுக்களை அவிழ்த்து விட்டான். பிறகு அவன் 'நீ என்னுடன் வா. நான் உன்னை

நெடுஞ்சாலைவரை கொண்டுபோய் விடுகிறேன்' என்று சொன்னான். வெகுநேரத்திற்குப்பின் நெடுஞ்சாலைக்கு இருவரும் வந்து சேர்ந்தார்கள். 'இந்தப் பாதையிலேயே போ, அதோ உன் வீடு அருகில் தெரிகிறது பார்!' என்றான் அத்திருடன்.

"அப்பொழுது அந்த மனிதன் திருடனிடம், 'ஐயா, நீங்கள் எனக்கு மிகுந்த உதவி செய்திருக்கிறீர்கள். நீங்களும் என்னுடன் வாருங்கள். என் வீட்டிற்கு வந்து போகலாம் என்றான். அதற்குத் திருடன், 'அங்கே வர எனக்குத் தகுதி இல்லை. போலீஸ்காரர்கள் பார்த்துவிடுவார்கள்' என்றான்.

"உலக வாழ்க்கைதான் காடு; சத்துவம், ராஜசம், தாமசம் ஆகிய மூன்று குணங்களும் மூன்று திருடர்கள். இவர்கள் பிடுங்கிக் கொண்டது தத்துவஞானமாகிய செல்வம். தமோ குணம் மனிதனை அழிக்க முற்படுகிறது. ரஜோகுணம் சம்சாரத்தில் அவனைக்கட்டுப்படுத்துகிறது. ஆனால் சத்துவ குணம் மனிதனைத் தமோ, ரஜோ குணங்களிலிருந்து காப்பாற்றுகிறது. சத்துவகுணத்தின் உதவியைப் பெற்றால், அது காமக் குரோதங்களால் ஆன தமோ குணத்திலிருந்து நம்மைக் காப்பாற்றும். மனிதனை சம்சார பந்தத்திலிருந்து விடுவிக்கும். இருப்பினும் இந்த சத்துவ குணமும் ஒரு திருடன்தான். நமக்குத் தத்துவ ஞானத்தைத் தர அதனால் முடியாது. ஆனால் ஆண்டவனை அடையும் வழியை அது நமக்குக் காட்டுகிறது. அந்த வழியில் நம்மைப்போகச் செய்து, 'அதோ உன் வீடு தென்படுகிறது போய்ச்சேர்!' என்று கூறுகிறது. எங்கே பிரம்மஞானம் இருக்கிறதோ அதற்கு வெகு தொலைவிலேயே சத்துவகுணம் பின் தங்கி நிற்கும்.

"பிரம்மம் என்ன என்பதைச் சொற்களால் விளக்க முடியாது! அதை அடைந்தவனாலும் அதைப்பற்றிய விவரங்களைச் சொல்ல முடிவதில்லை. கடலின் ஆழமிக்க கருநீர்ப்பகுதியை அடைந்த கப்பல் கரைக்குத் திரும்பி வருவதில்லை என்ற பழமொழி ஒன்று உண்டு.

"ஒரு சமயம் நான்கு நண்பர்கள் நடந்து சென்று கொண்டிருந்தபொழுது வழியில் சுவர்களால் சூழப்பட்ட ஓர் இடத்தைக் கண்டனர். சுவர்கள் மிக உயரமாக இருந்தன. உள்ளே என்ன இருக்கிறது என்பதைப் பார்க்க அனைவருக்கும் ஆவல் ஏற்பட்டது. ஒருவன் சுவரின்மேல் ஏறி உள்ளே எட்டிப் பார்த்ததும் வியப்பினால் பேசும் சக்தியை இழந்தவனாக 'ஹா, ஹா!' என்று மட்டும் சொல்லிக்கொண்டே உள்ளே குதித்து

விட்டான். வெளியில் நின்று கொண்டிருந்த நண்பர்களும் சுவர்மீது ஏறி உள்ளே பார்த்து விட்டு 'ஹா, ஹா!' என்று கத்திக் கொண்டே அவர்களும் ஒருவர் பின் ஒருவராக உள்ளே குதித்துவிட்டனர். எனவே உள்ளே இருந்தது என்ன என்பதை வந்து சொல்பவர் யார்?

"ஜடபரதர், தத்தாத்திரேயர் முதலான பிரம்மஞானிகளுக்கும் தாம் அனுபவித்த பிரம்மத்தைப்பற்றிஏதுவும் கூறமுடியவில்லை. பிரம்ம ஞானம் பெற்றுச் சமாதிநிலை ஏற்பட்டால் பிறகு இந்த 'நான்' இருப்பதில்லை. ஆகவே, இராம்பிரசாதர், 'மனமே, உன்னால் இந்தக் காரியத்தைச் செய்ய முடியாவிட்டால் இராமப்பிரசாதரை உதவிக்கு அழைத்துக் கொள். மனம் அடியோடு ஒடுங்க வேண்டும். பிறகு இராமபிரசாதரும் அதாவது "நான்" என்ற எண்ணமும் அடியோடு மறைய வேண்டும். அப்பொழுதுதான் பிரம்மஞானம் கிடைக்கும்' என்று பாடியிருக்கிறார்."

ஒரு பக்தர் : "சுவாமி, சுகதேவருக்கு பிரம்மஞானம் கிடைக்கவில்லையா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சுகதேவர், பிரம்மமாகிய சமுத்திரத்தைப் பார்த்தார், தொட்டார், அவ்வளவே. ஆனால், அதில் இறங்கி மூழ்கவில்லை என்று சிலர் சொல்கிறார்கள். அதனால் தான் அவரால் திரும்பி வர முடிந்தது. அவரால் மக்களுக்கும் எவ்வளவோ உபதேசங்கள் செய்ய முடிந்தது. சுகர் பிரம்மஞானம் அடைந்த பிறகு உலகமக்களுக்கு உபதேசிப்பதற்காக அந்த நிலையிலிருந்து கீழே இறங்கிவந்தார் என்று ஒரு சிலர் கூறுகிறார்கள். பரீட்சித்து மன்னனுக்குச் சுகர் பாகவதம் உபதேசித்தார். மக்களுக்கு இன்னும் எவ்வளவோ போதனைகளைச் செய்தார். அதற்காகவே ஆண்டவன் அவருடைய 'நான்' என்ற எண்ணத்தை அடியோடு மறைத்து விடவில்லை. அவரிடம் வித்யையின் 'நான்' சிறிது இருந்தது.

ஒரு பக்தர் : "பிரம்மஞானம் அடைந்தால் கட்சி, கூட்டம் எல்லாம் நிலைத்திருக்குமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "கேசவருடன் ஒரு நாள் பிரம்மஞானத்தைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். கேசவர், 'சுவாமி! உயர்ந்த தத்துவங்களை இன்னும் விளக்கமாகச் சொல்லுங்கள்' என்று வேண்டிக் கொண்டார்.

"அதற்கு நான் 'இதற்குமேல் நான் சொன்னல், உன் ஸ்தாபனம், கட்சி இவையெல்லாம் நிலைத்திருக்காது. உன்னல் சங்கத்தையும் அதன் உறுப்பினர்களையும் காப்பாற்றமுடியாமல் போய் விடும்' என்று சொன்னேன். 'அப்படியானல் இதோடு நிறுத்திக் கொள்ளுங்கள் சுவாமி!' என்ருர் கேசவர். (எல்லோரும்சிரிக்கின்றனர்).இருந்தாலும் நான் கேசவரிடம், 'நான் எனது என்பது அஞ்ஞானம். நான் கர்த்தா. இவர்கள் என் மனைவி, மக்கள். பணம், காசு, புகழ் இவைகள் என் உடைமைகள். இவ்வாறு எண்ணுவது அறியாமை. இந்த அறியாமை இல்லையேல், இப்படிப்பட்ட எண்ணங்கள் ஒருவனுக்குத் தோன்றுவதில்லை' என்று சொன்னேன். அப்பொழுது கேசவர், 'சுவாமி, "நான்" என்ற எண்ணத்தைத் தியாகம் செய்துவிட்டால் பிறகு ஒன்றுமே உலகத்தில் மிஞ்சாதே' என்ருர். அதற்கு நான் 'கேசவரே, உம்மை "நான்" என்ற எண்ணத்தை அடியோடு தியாகம் செய்யச் சொல்லவில்லை. பக்குவப்படாத— பழுக்காத நான் என்பதை மட்டும் தியாகம் செய்யுங்கள். நான் கர்த்தா; இவர்கள் என்னுடைய மனைவி, மக்கள்; நான் குரு —இப்படிப்பட்ட அபிமானம்தான் பழுக்காத நான். இதைத்தியாகம் செய்யுங்கள். பழுத்த நானுக இருங்கள். நான் ஆண்டவனுடைய அடிமை. நான் அவனுடைய பக்தன். நான் கர்த்தா அல்ல, அவனே கர்த்தா என்பது பழுத்த நான்' என்று விளக்கினேன்."

ஒரு பக்தர் : "பழுத்த நான் என்ற நிலையில் இருக்கும் பொழுது ஸ்தாபனம், கட்சி முதலியவை இருக்க முடியுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நான் கேசவரிடம், 'நான் தலைவன். நான் சங்கம் நடத்துகிறேன். நான் மக்களுக்குப் போதிக்கிறேன். இந்த எண்ணம் பழுக்காத நான்' என்று சொன்னேன். சமயப்பிரசாரம் செய்வது மிகவும் கடினம். இறைவனுடைய ஆணை இல்லாமல் அது சரிவர நடப்பதில்லை. கடவுளுடைய ஆணை அவசியம். சுகதேவர், பாகவதம் சொல்லக் கடவுளின் ஆணையைப் பெற்றிருந்தார். இறைவனது காட்சியைப் பெற்ற பிறகு யாரேனும் அவனது ஆணையைப் பெற்றுப் பிரசாரம் செய்தால், மக்களுக்குப் போதித்தால், அதில் எவ்விதத் தவறும் இல்லை. இறைவனைப் பற்றிய நான், பழுக்காத நான் அல்ல. அது பழுத்த நான்.

"பழுக்காத நான் என்ற எண்ணத்தைத் தியாகம் செய்யும் படியாக நான் கேசவருக்குச் சொன்னேன். அவரிடம் 'நான் அடிமை, நான் பக்தன் என்ற எண்ணம் இருக்குமாயின் அதில்

தவறு ஏதும் இல்லை' என்றேன். மேலும் கேசவரிடம், 'அடிக்கடி நீங்கள் கூட்டம், சமாஜம் என்று அலைகிறீர்கள். ஆனால், மக்கள் உங்கள் சமாஜத்திலிருந்து அடிக்கடி வெளியேறவும் செய்கின்றனர்' என்றேன். அதற்குக் கேசவர், 'உண்மைதான் சுவாமி! மூன்று ஆண்டுகள் இந்த சமாஜத்தில் இருந்து விட்டுப் பிறகு மற்றொரு சமாஜத்திற்குப் போய் விடுகிறார்கள். அது மட்டுமல்ல. போகும்போது என்னைப் பலவாறு கேவலமாகத் தூற்றி விட்டுப் போகிறார்கள்' என்றார்.

"அதற்கு நான் 'நீங்கள் மனிதர்களுடைய இயல்பை ஏன் ஆராய்ந்து அறிவதில்லை? யார் வந்தாலும் அவர்களைச் சீடர்களாக ஆக்கிக் கொண்டால் என்ன செய்வது' என்று பதில் சொன்னேன்.

"ஆத்யா சக்தியை ஒப்புக் கொள்ளுங்கள் என்று கேசவரிடம் சொல்லியிருந்தேன். பிரம்மமும் சக்தியும் ஒன்றே தான் வேறல்ல. எது பிரம்மமோ அதுவேதான் சக்தி. தேக நினைவு இருக்கும்வரையில் இரண்டு என்ற உணர்வு இருக்கும். பேசத் தொடங்கினாலே இரண்டு வந்து விடுகிறது. கேசவர் காளியைப் பிறகு ஒப்புக் கொண்டார்.

"ஒரு நாள் கேசவர் சீடர்களுடன் இங்கே வந்திருந்தார். 'உங்கள் பிரசங்கத்தைக் கேட்க விரும்புகிறேன்' என்று நான் அவரிடம் சொன்னேன். அவர் மண்டபத்தில் உட்கார்ந்து கொண்டு பிரசங்கம் செய்தார். பிறகு கங்கைப் படித்துறையில் உட்கார்ந்து கொண்டு எங்களுக்குள் பல பேச்சு வார்த்தைகள் நடந்தன. நான், 'பகவான் எவனோ அவனே ஒரு வகையில் பக்தனும் ஆவான். அவனே மற்றொரு வகையில் பாகவதம் ஆவான். நீங்கள் உங்கள் பிரசங்கங்களில் பாகவத—பக்த—பகவான் என்று சொல்லுங்கள்' என்றேன்.

"கேசவரும் சீடர்களும் ஒன்றாகச் சேர்ந்து 'பாகவத—பக்த—பகவான்' என்று சொன்னார்கள். 'குரு—கிருஷ்ண—வைஷ்ணவ' என்று சொல்லும்படி நான் சொன்னதும் கேசவர், 'சுவாமி, இப்பொழுது அவ்வளவு தூரம்* வேண்டாம். மக்கள் என்னை வைதிகன் என்று சொல்லி விடுவார்கள்' என்றார்.

"முக்குணங்களைக் கடப்பது மிகவும் கடினம். கடவுட் காட்சி பெறுதவரை இந்த நிலை ஏற்படுவதில்லை. மாயையாலான இந்த உலகில், ஜீவன் மாயையின் எல்லைக்குள் வாழ்கிறான். அவனுக்கு இறைவனைக் காண்பதற்கு இந்த மாயை இடம் தருவதில்லை. மனிதனை இது அஞ்ஞானத்தில் ஆழ்த்துகிறது.

"ஒரு நாள் இருதயன் ஒரு காளைக் கன்றை வாங்கி வந்தான். அவன் அதைத் தினமும் தோட்டத்தில் புல்மேயக் கட்டி வைத்திருப்பதை நான் பார்த்தேன். 'இருதயா! தினமும் இந்தக் கன்றை ஏன் அங்கே கட்டி வைக்கிறாய்?' என்று நான் கேட்ட போது அவன், 'மாமா, இந்தக் கன்றைக் கிராமத்துக்கு அனுப்பப் போகிறேன். பெரியதானால் ஏர் உழும்' என்றான். இதைக் கேட்டதும் நான் மயக்கம் போட்டுக் கீழே விழுந்து விட்டேன். மாயையின் விளையாட்டுதான் என்ன? காமார்புகூர் எங்கே? இருதயனின் சிகோர் கிராமம் எங்கே? கல்கத்தா எங்கே? இந்தக் கன்று அவ்வளவு தூரம் நடந்து போகுமாம்! அங்கே பெரிதாக வளருமாம்! பல நாட்களுக்குப் பிறகு இதை ஏரில் பூட்டுவானாம்! அது ஏர் உழுமாம்! இதுதான் உலகம்! மாயை!' என்று எண்ணினேன். நீண்ட நேரத்திற்குப் பிறகே எனக்கு மயக்கம் தெளிந்தது."

பிற்பகல் மூன்று அல்லது நான்கு மணி இருக்கும். குருதேவர் சிறிய கட்டிலின் மேல் பாவ நிலையில் உட்கார்ந்திருந்ததை ம- கண்டார். சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் அன்னை காளியுடன் பேசத் தொடங்கினார்.

தேவியுடன் பேசிய பேச்சின் நடுவே, "அன்னையே, அவனுக்கு ஏன் ஒரு கலை மட்டும் கொடுத்தாய்?" என்று கேட்டார். சிறிது நேரம் மௌனமாக இருந்தார். மறுபடியும், "தாயே! இப்போது தெரிந்து கொண்டேன். ஒரு கலையே அவனுக்குப் போதும். அதைக் கொண்டே அவன் உன்னுடைய காரியங்களைச் செய்து முடிப்பான், மக்களுக்குப் போதிப்பான்" என்றார்.

குருதேவர் தம் சீடர்களுக்கு ஆத்மசக்தியைக் கொடுக்கிறாரா என்ன? தமக்குப் பிறகு மக்களுக்குப் போதிக்க அவர்களை இப்போதே தயார் செய்கிறாரா?

ம-வுக்கு அருகில் ராக்காலும் அறையில் அமர்ந்து கொண்டிருந்தார். குருதேவர் இன்னமும் பாவ நிலையிலேயே இருந்தார். அப்படியே ராக்காலைப் பார்த்து, "நீ கோபப்பட்டாயே! உனக்கு ஏன் கோபம் மூட்டினேன் தெரியுமா? காரணம் இருக்கிறது. மருந்து சரியாக வேலை செய்யும் என்பதற்காகத் தான் அவ்வாறு செய்தேன். கட்டி பழுக்கும் பொழுது கள்ளி இலைகளைக் கொண்டு அதைக் குணப்படுத்த வேண்டும்!" என்று கூறினார்.

சிறிது நேரம் கழித்துக் குருதேவர் பேசத் துவங்கினர். "ஹாஸ்ராவை நான் ஓர் உலர்ந்த கட்டையாகப் பார்க்கிறேன். அப்படி இருக்க அவன் இங்கே இருப்பதன் நோக்கம் என்ன? அதற்குக் காரணம் இருக்கிறது. ஜடிலன், குடிலன் போன்ற துஷ்டர்கள் இருந்தால் தான் கடவுளின் லீலை சிறப்பாக அமையும்.

(ம-வைப் பார்த்து) "கடவுளுக்கு உருவம் உண்டு என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். ஜகத்தாத்ரி உருவத்தின் பொருள் என்ன தெரியுமா? அவள் உலகத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிறள் என்பதுதான். அவள் அவ்வாறு தாங்கிக் கொண்டிருக்கா விட்டால்— அவள் காப்பாற்ரு விட்டால், உலகம் விழுந்து விடும்; நாசமாகிப் போகும். யாரால் மனமாகிய யானையை அடக்க முடிகிறதோ அவனுடைய இதயத்தில் ஜகத்தாத்ரி தோன்றுகிறள்."

ராக்கால் : "மனம் ஒரு மதயானை."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சிம்மவாஹினியின் வாகனம் சிங்கம். ஆகவேதான், சிங்கம் யானையை அடக்கி வைத்திருக்கிறது."

இரவு நெருங்கியது. கோயிலில் ஆராதனை ஆரம்பமாயிற்று. சந்தியா வேளை. குருதேவர் தம் அறையில் அமர்ந்தபடி தேவ தேவியர்களின் பெயரை உச்சரித்துக் கொண்டிருந்தார். அறையில் தூபம் போடப்பட்டிருந்தது. குருதேவர் கூப்பிய கைகளுடன் சிறிய கட்டிலின் மேல் உட்கார்ந்து அன்னையைச் சிந்தித்துக் கொண்டிருந்தார். பெல்கோரியாவிலிருந்து கோவிந்த முகர்ஜியும் அவருடைய நண்பர்களும் உள்ளே வந்து அவரை வணங்கித் தரையில் அமர்ந்திருந்தனர். ம-வும், ராக்காலும் உள்ளே உட்கார்ந்திருந்தனர். அறைக்கு வெளியில் சந்திரனின் ஒளி தரையெங்கும் பரவியிருந்தது. வெளி உலகம் அமைதியாக, நிலவின் ஒளியில் மூழ்கி அடக்கமான மகிழ்ச்சியோடு விளங்கிற்று. அறைக்குள் அடியார்கள் மௌனமாக உட்கார்ந்து குருதேவரின் அமைதியான தோற்றத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் பாவ நிலையில் இருந்தபடியே பேசத் துவங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "உங்கள் சந்தேகங்கள் எல்லாவற்றையும் கேளுங்கள். பதில் சொல்கிறேன்."

கோவிந்தரும் மற்ற பக்தர்களும் சிறிது நேரம் சிந்தித்தனர்.

கோவிந்தர் : "அன்னை காளி ஏன் இவ்வளவு கரிய நிறத்தோடு காணப்படுகிறள்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "தொலைவு காரணமாகத்தான். அருகில் சென்றால் எந்த வித நிறமும் அன்னைக்கு இல்லை என்று தெரியும் குளத்துத் தண்ணீர் தூரத்திலிருந்து பார்த்தால் கருப்பாகத் தெரிகிறது. அருகில் சென்று கையில் எடுத்துப் பார்த்தால் நிறமே இல்லை. ஆகாயம் தொலைவில் இருப்பதால் நீல நிறமாகத் தெரிகிறது. பக்கத்திலிருந்து பார்த்தால் எந்த வித நிறமும் தெரிவதில்லை. ஈசனை எந்த அளவிற்கு நாம் நெருங்குகிறோமோ அந்த அளவிற்கு, அவருக்குப் பெயரும் வடிவமும் இல்லை என்பதில் உறுதியான நம்பிக்கை ஏற்படும். கடவுளை விட்டுக் கொஞ்ச தூரம் வந்தாலே மறுபடியும் என் அன்னை விஷ்ணுக் கிரந்திப் பூவைப் போல் நீல நிறம் என்ற நிலைமைதான்.

"காளி, புருஷனா? பிரகிருதியா? ஒரு பக்தன் பூஜை செய்து கொண்டிருந்தான். அதைப் பார்க்க வந்த மற்றொருவன் அன்னையின் கழுத்தில் பூணூலைக் கண்டான்! உடனே அவன், 'அன்னையின் கழுத்தில் பூணூலைப் போட்டிருக்கிறாயே?' என்றான். அதற்கு பக்தன், 'தம்பி! நீ அன்னையைப்பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டாய் போலிருக்கிறது. என்னால் இன்னமும் அறிந்து கொள்ள முடியவில்லை. அவள் ஆணா அல்லது பெண்ணா என்று நிச்சயமாக என்னால் இன்னமும் அறிந்து கொள்ள முடியவில்லை. அதனால்தான் பூணூல் அணிவித்துள்ளேன்' என்றான்.

"எது காளியோ அதுவே பிரம்மம். உருவம் உள்ளவர் எவரோ அவரே உருவம் அற்றவர். எது குணமற்றதோ அதுவே குணமுடையது. பிரம்மமே சக்தி! சக்தியே பிரம்மம்! அது இரண்டற்றது. இறைவன் சச்சிதானந்தமயன், சச்சிதானந்த மயி"

"யோக மாயை என்பது புருஷன் பிரகிருதி ஆகிய இரண்டின் சேர்க்கை. நீ பார்ப்பதெல்லாம் புருஷப் பிரகிருதியின் சேர்க்கை தான். சிவன், காளி வடிவத்தைக் கவனித்துப் பார். சிவன் மீது காளி நின்று கொண்டிருக்கிறாள். சிவன் சவம் போல விழுந்து கிடக்கிறார். காளி சிவனைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். இவையெல்லாம் பிரகிருதி, புருஷன் சேர்க்கையை உணர்த்துகிறது. புருஷன் செயலற்றவன். ஆகவே, சிவன் சவம் போலக் கிடக்கிறார். புருஷனுடைய சேர்க்கையால் பிரகிருதி படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்கள் புரிகிறாள்.

"ராதாவும் கிருஷ்ணனும் இணைந்திருக்கும் உருவத்தின் பொருளும் இதுதான். இந்த இணைப்பின் காரணமாகச் சிலையில் வளைந்த நிலை ஏற்பட்டுள்ளது. இந்த இணைப்பைக் காட்ட கிருஷ்ணனுடைய மூக்கில் பவளம் இருக்கிறது. ராதையின் மூக்கில் நீலமணி உள்ளது. ராதையின் பொன் போன்ற மேனி பவளம் போல் பிரகாசிக்கிறது. கிருஷ்ணர் கரு நிறம் படைத்தவர். ஆகவேதான் ராதையின் மூக்கில் நீலக்கல் இருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணர் பீதாம்பரத்தையும் ராதை நீல ஆடையையும் உடுத்திருக்கின்றனர்.

"உத்தம பக்தன் யார்? பிரம்ம ஞானம் அடைந்த பிறகு இறைவனையே மனிதர்களாகவும், உலகமாகவும், இருபத்து நான்கு தத்துவங்களாகவும் காண்கின்றவனே உத்தம பக்தன். முதலில், 'இது அல்ல, இது அல்ல' என்று ஆராய்ச்சி செய்து மாடியை அடைய வேண்டும். பிறகு மாடி எந்தப் பொருளால் கட்டப்பட்டிருக்கிறதோ, அதே செங்கல், சுண்ணும்பு முதலான பொருள்களினுல் தான் படிக்கட்டுகளும் கட்டப்பட்டுள்ளன என்பதைப் பக்தன் அறிந்து கொள்கிருன். அப்பொழுது பிரம்மமே உயிர்கள், உலகம் ஆகிய எல்லாமாக இருப்பதைக் காண்கிருன். வெறும் வறண்ட ஆராய்ச்சியால் என்ன பயன்? வறண்ட வீணுன வாதம்! சீ! சீ! அதன் மீது நான் எச்சிலைத் துப்புவேன்.

"வறண்ட ஆராய்ச்சி செய்து நான் ஏன் உலர்ந்த கட்டையாக இருக்க வேண்டும்? நான், நீ என்னும் பேத உணர்வு இருக்கும் வரையில், இறைவனுடைய திருவடிக் கமலத்தில் தூய பக்தி கொள்ள வேண்டும். (கோவிந்தரைப் பார்த்து) சில சமயம் அன்னையிடம், 'நீயே நான்—நானே நீ' என்று நான் கூறுகிறேன். வேறு சில சமயம், 'நீ நீயாகவே இருக்கிருய்?' என்கிறேன். அப்பொழுது 'நான்' என்பதைத் தேடிப் பார்க்க முடிவதில்லை.

"சக்தியேதான் அவதாரங்களாக ஆகி இருக்கிறது. ஒரு கொள்கைப்படி இராமரும், கிருஷ்ணரும் சிதானந்தக் கடலின் இரண்டு அலைகளே.

"அத்வைத ஞானத்திற்குப் பிறகு எல்லாமே சின்மயமாக இருக்கும் காட்சி கிடைக்கிறது. அப்பொழுது இறைவன் எல்லா உயிர்களிடத்திலும் சைதன்ய ஸ்வரூபமாக இருப்பதைப் பக்தன் காண்கிருன். இந்தச் சைதன்ய காட்சிக்குப் பிறகு ஆனந்தம். அத்வைதம்-சைதன்யம்-நித்தியானந்தம்."

(ம-விடம்) " உனக்குத்தான் சொல்கிறேன். ஈசுவரனுக்கு உருவம் உண்டு என்பதில் நம்பிக்கையை இழக்காதே. உருவம் இருப்பது உண்மை என்று நம்பு. பிறகு உனக்கு எந்த உருவம் பிடித்திருக்கிறதோ அந்த உருவத்தின் மீது தியானம் செய்.

(கோவிந்தரைப் பார்த்து) "இது எப்படித் தெரியுமா? ஆசைகள் இருக்கும் வரை இறைவனைக் காணவோ, அறியவோ மனம் ஏங்குவதே இல்லை. குழந்தை, விளையாட்டில் தன்னை மறந்திருக்கிறது. இனிப்பைக் கொடுத்தால் கூட ஏதோ சிறிது தான் உண்ணும். ஆனால், விளையாட்டுப் பிடிக்காத போது, இனிப்புப் பிடிக்காத பொழுது அம்மாவிடம் போவேன் என்று சொல்லும். அதன் பிறகு இனிப்பு அதற்கு வேண்டியதில்லை. தனக்கு முன் பின் தெரியாத ஒரு மனிதன், 'வா உன்னை அம்மாவிடம் அழைத்துப் போகிறேன்' என்றால், அவனுடன் குழந்தை போய்விடும். எவன் இடுப்பில் தூக்கி வைத்துக் கொள்கிறானோ அவனுடன் சென்று விடும்.

"சம்சார ஆசைகள் போய் விட்டால் ஆண்டவனுக்காக உயிர் ஏங்கித் தவிக்கும். அவனை எப்படி அடைவோம் என்ற ஒரே ஏக்கம் மட்டும் தான் இருக்கும். அந்நிலையில் யார் எதைச் சொன்னாலும் அதைக் கேட்பான்."

ம- (தனக்குள்) 'அந்தோ! போக வாசனை அழிந்தால் தான் கடவுளுக்காகப் பிராணன் ஏங்கி நிற்குமாம்!'

**சனிக்கிழமை, ஆகஸ்டு 18, 1883**

கல்கத்தாவில் பலராம்போஸ் வீடு. குருதேவர் பலராம் போஸினுடைய வீட்டிற்குச் சென்றிருந்தார். அங்கு பக்தர்களுக்கு அவதார தத்துவத்தை விளக்கிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அவதார புருஷர்கள் மக்களுக்கு ஆன்மிக அறிவினை அளிப்பதற்கு பக்திநிலையை மேற்கொண்டு பக்தர்களோடு வாழ்கிறார்கள். மாடியை அடைந்தபின்னர் மீண்டும் படிக்கட்டுகளில் மேலும் கீழுமாக நடந்து கொண்டிருப்பதை ஒத்தது இந்த அவதார புருஷர்களின் செயல். ஞானத்தை அடையும்வரை, ஆசைகள் மனத்தை விட்டு அகலும்வரை பக்தி நெறியைக் கடைப்பிடித்து வர வேண்டும்.

“ஆசைகள் அடியோடு மறைந்த பின்னர்தான் மாடியை அடைய முடியும், கடைக்காரன் தனது கணக்கை முடிக்காமல் கடையை மூடுவதில்லை. கணக்கு முடிந்ததும் கடையை மூடிவிட்டுத் தூங்கச் செல்கிறன். (ம-வைப்பார்த்து) தீவிரமாக முயன்றல் வெற்றி நிச்சயம். முயற்சித் திருவினையாக்கும்.

“கேசவர், சிவநாத், மற்ற பிரம்மசமாஜத்தலைவர்கள் நடத்தும் வழிபாட்டைக்குறித்து நீ என்ன நினைக்கிருய்?”

ம: “ஐயா, நீங்கள் கூறியது போல் அவர்கள் தோட்டத்தையே வருணிக்கின்றனர். தோட்டத்தின் சொந்தக் காரனைப்பற்றிப் பேசுவது அரிதாகவே இருக்கிறது. அநேகமாக ஆரம்பத்திலிருந்து முடிவு வரை தோட்டத்தைப்பற்றிய வருணனைதான்.”

ஸ்ரீராமகிருஷ்ணர்: “சரியாகக் கூறினுய்! தோட்டச் சொந்தக்காரனைத் தேடிப்பிடித்து அவனுடன் பேச வேண்டும். அதுதான் முக்கியமான வேலை. ஆண்டவனை அடைவதே மனிதப்பிறவியின் நோக்கம்.”

பிறகு பலராமுடைய வீட்டிலிருந்து குருதேவர் அதருடைய வீட்டிற்கு வந்தார். மாலை வழிபாட்டிற்குப்பிறகு அதரின் விருந்தினர் அறையில் பாடலும், ஆடலும் நிகழ்ந்தன. வைஷ்ணவசரண் பக்திப் பாடல்களைப் பாடினுர். அதர், ராக்கால், ம-முதலியோரும் அங்கு இருந்தனர்.

பாட்டு முடிந்த பின்னரும் குருதேவர் பரவசநிலையிலேயே அமர்ந்திருந்தார். அப்படியே ராக்காலிடம், (தன்னைச் சுட்டிக்காட்டி) “இங்கு நடக்கும் தெய்விக நிகழ்ச்சிகள் மழைக் காலத்துத் தண்ணீரைப்போல வேகமாகவந்து உடனே மறைவதல்ல. இது தானுகவே பூமியிலிருந்து உண்டான சிவலிங்கம் போன்றது. இது மனிதனுல் உண்டாக்கப் பட்டதல்ல. அன்று நீ கோபித்துக் கொண்டு தட்சிணே சுவரத்திலிருந்து போய்விட்டாய். உன்னை மன்னித்துவிடும்படி அன்னையிடம் வேண்டிக்கொண்டேன்.”

ஸ்ரீராமகிருஷ்ணர் அவதார புருஷரா? தானுகவே பூமி யிலிருந்து உண்டான (ஸ்வயம்பு) சிவலிங்கமா?

பரவசநிலையில் இருந்தபடியே அதரிடம், “குழந்தாய்! நீ எவருடைய புகழைப் பாடினுயோ, அவ்விறைவனின் திருப் பெயரைத் தியானம் செய்துவா.” இவ்வாறு கூறிக்கொண்டே அதருடைய நாக்கைத் தொட்டு அதில் தன்னுடைய விரலினுல் ஏதோ எழுதினுர். இவ்வாறு அதருக்கு குருதேவர் தீட்சை தந்தாரா?

# ஸ்ரீராமகிருஷ்ணரும் ம-வும்

ஞாயிற்றுக்கிழமை, ஆகஸ்ட் 19, 1883

பௌர்ணமி முடிந்து மறுநாள். சற்று முன்பு பூஜை நடைபெற்றதற்கான நாதஸ்வர ஓசை தட்சிணேசுவரக் கோயிலில் முழங்கியது. நடுப்பகற்பொழுது. கோயிலில் நைவேத்தியம் படைப்பது முடிந்து கோயிலையும் மூடிவிட்டனர். குருதேவர் பிரசாதம் உட்கொண்டு, சிறிது நேரம் ஓய்வு எடுத்துக்கொண்டார். பிறகு தம் அறையில் சிறிய கட்டிலின் மேல் அமர்ந்தார். ம-அங்கு வந்து அவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினார். குருதேவர் ம-விடம் வேதாந்தம் பற்றிப் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- வைப்பார்த்து): "அஷ்டாவக்கிர சம்ஹிதையில் ஆத்மஞானம் பற்றிப் பேசப்பட்டுள்ளது. அத்வைத ஞானிகள் 'ஸோஹம்' 'நான் அந்த பரமாத்மா' என்கிறார்கள். இது வேதாந்தவாதி சந்நியாசிகளின் கொள்கை. சம்சாரிகளுக்கு இந்த வழி பொருந்தாது. அவர்கள் எல்லாச் செயல்களிலும் ஈடுபடுகின்றனர். அதே சமயத்தில், 'நான் அந்தச் செயலற்ற பரமாத்மா' என்பது எப்படிப் பொருந்தும்? வேதாந்திகளின் கருத்துப்படி ஆத்மா பற்றற்றது. இன்ப துன்பம்; பாவ புண்ணியம்; நல்லது கெட்டது இதுபோன்ற பல மாறுபட்ட பொருட்களால் ஆத்மாவிற்கு எந்தக்கேடும் ஏற்படுவதில்லை. ஆனால் உடற்பற்று உள்ளவர்கள் இவைகளால் பாதிக்கப்படுவது நிச்சயம். புகை, சுவரை அழுக்காக்குகிறது. ஆனால் வானத்தை ஒன்றும் செய்யமுடிவதில்லை. கிருஷ்ணகிஷோர் ஞானிகளைப் போல் 'நான் க' (ஆகாயம்) என்பான். ஒரு பரம பக்தனான அவனுக்கு ஒரு வேளை இந்தச்சொல் பொருந்தலாம். ஆனால் எல்லோரும் இவ்வாறு சொல்வது பொருந்தாது.

'நான் முக்தன்' என்ற அகங்காரம் மிகவும் நல்லது. ஒருவன் 'நான் முக்தன்' என்று சொல்லிக் கொண்டே இருந்தால் நாளடைவில் முக்தனாகிவிடுகிறான். 'நான் பத்தன்

நான் பத்தன்"[1] என்று சொல்லிக்கொண்டே இருப்பவன் கடைசியில் பத்தனாகவே ஆகிவிடுகிறான். 'நான் பாவி', 'நான் பாவி' என்று எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருப்பவன் வீழ்ச்சியடைகிறான். 'நான் கடவுளுடைய பெயரைச் சொல்லுகிறேன், எனக்கு ஏது பாவம்? எனக்கு ஏது பந்தம்?' என்று சொல்ல வேண்டும்.

(ம-வை நோக்கி) : "இதோ பார்! இன்று என் மனம் மிகுந்த துயரத்தில் ஆழ்ந்திருக்கிறது. இருதயன் தன் உடல்நிலை மிகவும் கெட்டிருப்பதாகக் கடிதம் எழுதியிருக்கிறான். இது என்ன மாயையா? தயையா?"

ம- என்ன பதிலளிப்பார்? வாய் பேசாமல் உட்கார்ந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "மாயை என்றால் என்ன தெரியுமா? தாய், தந்தை, சகோதரன், சகோதரி, மனைவி, மக்கள், என்று உறவினர்களிடம் மட்டும் அன்பு பாராட்டுவது. ஆனால் தயை என்பது எல்லா உயிர்களிடமும் அன்பு காட்டுவது. அப்படியானால் என்னுடைய இந்த நிலை எதைச் சார்ந்தது? மாயையா? தயையா? இருதயன் எனக்கு நிறையச் செய்திருக்கிறான், பல சேவைகள் செய்தான். கால் கழுவி இருக்கிறான். அவனே கடைசியில் எனக்கு மிகுந்த துன்பங்களையும் கொடுத்தான். ஒரு சமயம் அவன் செய்த துன்பத்தைப் பொறுக்கமுடியாமல் கங்கையில் குதித்து உயிரை விடப்போனேன். ஆனால் எனக்கு அவன் நிறைய சேவை செய்திருக்கிறான். அவனுக்கு இப்பொழுது கொஞ்சம் பணம் கிடைத்தால் நிம்மதியாக இருப்பான். ஆனால் எந்தப்பணக்காரரிடம் நான் இதைச் சொல்வேன்? யார் இதை சொல்லிக் கொண்டு திரிவது?"

மாலை சுமார் இரண்டு அல்லது மூன்று மணி. சிறந்த பக்தரான அதர் சேனும் பலராமும் அறைக்குள் வந்து தரையில் விழுந்து குருதேவரை வணங்கி, அமர்ந்தனர். 'தாங்கள் எப்படி இருக்கிறீர்கள்?' என்று அவர்கள் குருதேவரை விசாரித்தனர். 'என் உடல்நிலை நன்றாக இருக்கிறது. ஆனால் மனத்தில்தான் சிறிது வேதனை' என்றார் குருதேவர். இருதயனின் நோயைப் பற்றி அவர் எந்தப் பேச்சையும் எழுப்பவில்லை.

---

1. கட்டுண்டவன்.

பட்டாபஜாரிலுள்ள மல்லிக் குடும்பத்தாரின் சிம்மவாஹினி தேவியின் சிலையைப் பற்றிப் பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "சிம்மவாஹினியைப் பார்க்க நான் போயிருந்தேன். மல்லிக் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் வீட்டில் சிம்மவாஹினியைப் பார்த்தேன். அது இடிந்த வீடு. வீட்டுக்காரர்கள் ஏழைகளாகி விட்டிருந்தனர். ஒரு பக்கம் புறு எச்சம்; இன்னொரு பக்கம் பாசி; சுவரிலிருந்து சுண்ணும்பு அங்குமிங்கும் உதிர்ந்தவாறு இருந்தது. மற்ற மல்லிக் இனத்தவரின் வீட்டிற்குமாருக இந்த வீட்டில் வறுமைநிலவியது. (ம-விடம்) இது எதைக் குறிக்கிறது? சொல்லேன் பார்க்கலாம்?"

ம-, மௌனம் சாதித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இதன் அர்த்தம் என்னவென்றுல், எந்தக் கர்ம வினையை எவன் அனுபவிக்க வேண்டும் என்று இருக்கிறதோ அதை அவன் அனுபவித்தே ஆக வேண்டும். முற்பிறவி வாசனைகள், வினைப்பயன்கள் இவற்றை நம்பத் தான் வேண்டும். (ம-வைப் பார்த்து) இந்த இடிந்த வீட்டிலும் சிம்மவாஹினியின் முகத்தில் ஒளியைக் கண்டேன். சிலைகளில் அன்னை எழுந்தருளியிருப்பதை ஒப்புக்கொள்ளத் தான் வேண்டும்.

"நான் ஒரு முறை விஷ்ணுபூருக்குப் போயிருந்தேன். அதை ஆண்ட அரசர்கள் அங்குப் பல கோயில்களைக் கட்டியுள்ளனர். ஒரு கோயிலில் அன்னையின் சிலை இருந்தது. தேவியின்பெயர் மிருண்மயி. கோயிலுக்கு அருகில் லால் குளம், கிருஷ்ண குளம் என்றெல்லாம் பல குளங்கள் இருந்தன. குளத்து நீரில் பெண்கள் தலைக்குத் தேய்த்துக் கொள்ளும் வாசனை எண்ணெயின் மணத்தை நான் நுகர்ந்தேன். இது ஏன் என்று எனக்கு முதலில் தெரியவில்லை. பெண்கள் மிருண்மயி தேவியைத் தரிசிக்கும் போது இந்தவாசனை எண்ணெயை தேவிக்கு அர்ப்பணிப்பார்களாம். அந்தக் குளத்தருகில் எனக்குப் பாவ சமாதி ஏற்பட்டது. சிலையினைக் காண்பதற்கு முன்பாகவே இது ஏற்பட்டது. அந்த பாவ நிலையில் குளத்தில் மிருண்மயி தேவியைக் கண்டேன். இடுப்பு வரை அவள் உருவம் தோன்றியது."

இதற்கிடையே இன்னும் பல பக்தர்கள் வந்து சேர்ந்தனர். காபூலில் நடந்த அரசியல் கிளர்ச்சி, சண்டை முதலியவற்றைப்

பற்றிப் பேச்சு எழுந்தது. 'யாகூப்கானை ஆப்கானிஸ்தானத்தின் அமீர் பதவியிலிருந்து நீக்கி விட்டார்கள்' என்று ஒருவன் சொன்னான். அவன் குருதேவரை நோக்கி, 'சுவாமி யாகூப்கான் ஒரு பெரிய பக்தன்' என்று சொன்னான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஒன்றைத் தெரிந்துகொள்ள வேண்டும். உடல் எடுப்பவர்கள் இன்பமும், துன்பமும் அனுபவிக்க வேண்டும் என்பது இயற்கை. கவிகங்கண் எழுதிய சண்டி என்னும் நூலில் ஒரு குறிப்பு இருக்கிறது. காலுவீர் என்பவன் அன்னை காளியின் வரத்தினால் பிறந்தவன். இருப்பினும் அவனும் சிறைக்குப் போனான். தண்டனையாக அவன் மார்பில் கல்லை ஏற்றினர். உடல் தரித்தாலே இன்ப துன்ப அனுபவம் ஏற்படும். ஸ்ரீமந்தன் ஒரு பெரிய பக்தன். அவன் தாய் குல்லனாவை அன்னை பகவதி எவ்வளவு நேசித்தாள்! இருந்தும் ஸ்ரீமந்தனுக்கு எவ்வளவு ஆபத்துக்கள் வந்தன! அவனை வெட்டச் சுடுகாட்டிற்கு அழைத்துச் சென்றனர்.

"ஒரு விறகு வெட்டி, பராசக்தியின் பரம பக்தனாக இருந்தான். அவன் அன்னையின் காட்சியைப் பெற்றான். அன்னை காளி அவனை மிகவும் நேசித்தாள்! எவ்வளவோ கருணை காட்டினாள். ஆனாலும் விறகு வெட்டும் தொழில் அவனை விடவில்லை. கடைசி வரை அவன் விறகு வெட்டியே பிழைக்க வேண்டியிருந்தது. நான்கு கைகளிலும், சங்கு சக்கரம், கதை, தாமரை தரித்த பகவானைச் சிறைச்சாலையில் தேவகி தரிசித்தாள், இருப்பினும் சிறைச்சாலையிலிருந்து அவளுக்கு விடுதலை கிடைக்கவில்லை."

ம- : "சிறைச்சாலையிலிருந்து மட்டுமா விடுதலை கிடைக்கவில்லை! இந்த உடல் எத்தனைத் துன்பங்களுக்கு இருப்பிடமாக இருக்கிறது! இந்த உடலிலிருந்தே அல்லவா தேவகி விடுபட்டிருக்க வேண்டும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இது ஏன் தெரியுமா? இவையெல்லாம் முற்பிறவியில் செய்த வினைப் பயன். வினைப்பயன்கள் அனுபவிக்க இன்னும் எவ்வளவு நாட்கள் எஞ்சியிருக்கின்றனவோ அதுவரை உடலைத் தாங்க வேண்டியிருக்கிறது. ஒரு குருடன் கங்கையில் மூழ்கினான். பாவங்கள் எல்லாம் அவனை விட்டு நீங்கி விட்டன. ஆனால் கண் குருடு மட்டும் அவனை விட்டு நீங்கவில்லை. (எல்லோரும் சிரிக்கின்றனர்). அது முன் பிறவியின் வினை. ஆகவே அதை அனுபவிக்க வேண்டியிருந்தது."

ம- : "ஆம், சுவாமி! எந்த அம்பைக் கையிலிருந்து விட்டு விட்டோமோ அதைத் தடுக்க முடியாது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "தேகத்தைப் பற்றிய இன்ப துன்பம் எப்படியோ இருந்து விட்டுப் போகட்டும். பக்தனுடைய ஞானம், பக்தி என்ற சொத்து அவனிடம் நிலைத்து நிற்கிறது. இந்தத் தெய்விகச் சொத்து ஒரு போதும் அழிவதில்லை. பாண்டவர்களை எடுத்துக் கொள். எவ்வளவு துன்பங்களை அனுபவித்தார்கள்! இருந்தும் அத்தனை துன்பங்களிலும் அவர்கள் ஒரு முறைகூடக் கடவுளை மறக்கவில்லை. அவர்களைப் போன்ற ஞானிகள், அவர்களைப் போன்ற பக்தர்கள் எங்கே இருக்கிறார்கள்?"

அப்போது நரேந்திரரும், விசுவநாத உபாத்தியாயரும், அறைக்குள் நுழைந்தனர். விசுவநாதர் நேபாள அரசரின் வக்கீல். அரச தூதராகவும், பணி புரிந்து வந்தார். அவரைக் 'கேப்டன்' என்று குருதேவர் அழைப்பது வழக்கம். நரேந்திரருக்கு அப்போது வயது இருபத்தி இரண்டு. பி. ஏ. படித்துக் கொண்டிருந்தார். பெரும்பாலும் ஞாயிற்றுக் கிழமைகளில் அவர் குருதேவரைப் பார்க்க வருவார்.

குருதேவரை வணங்கி விட்டு அவர்கள் தரையில் அமர்ந்தனர். குருதேவர் நரேந்திரரைப் பாடும்படிக் கேட்டுக் கொண்டார். அறையின் மேற்குச் சுவரில் தம்பூரா மாட்டப்பட்டிருந்தது. பாடுவதற்காகத் தபேலாவில் சுருதி கூட்டிக் கொண்டிருந்த நரேந்திரரையே எல்லோரும் பார்த்துக் கொண்டிருந்தனர்.

குருதேவர் (நரேந்திரரிடம்): "தபேலாவின் ஓசை முன்பு போல் பெரிதாக ஒலிக்கவில்லையே?"

கேப்டன் : "இப்போது பூரணமான நிலையை அது அடைந்துள்ளது. அதனால்தான் ஓசையற்று இருக்கிறது. (எல்லோரும் சிரிக்கின்றனர்). அது நிறை குடம்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேப்டனைப் பார்த்து): "ஆனால் நாரதர் முதலிய ரிஷிகள் விஷயம் எப்படி?"

கேப்டன் : "அவர்கள் பேசியதற்குக் காரணம் மற்றவர்களுடைய துயரத்தைக் கண்டு மனம் இரங்கி உபதேசிக்க விழைந்ததே!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நீ கூறியது சரியே. நாரதர், சுகதேவர் முதலியோர் சமாதி நிலைக்குப் பின் கீழே இறங்கி வந்தனர். கருணை காரணமாகவும், மற்றவர்களின் நன்மைக்காகவும் அவர்கள் பேசினார்கள்."

நரேந்திரர் பாடத் துவங்கினார் :

சத்தியம் சிவம் சுந்தரம் எனும் தத்துவப்பெரும் சோதியாய்
அத்தன் என்மன ஆலயம் தனில்அமரும் அந்த நாள் அணுகுமோ?
நித்தம் இன்பமே நிலவும் எந்தையின் சித்திரத்திரு வடிவமாய்
முத்து வாரிதிப் புனலில் நாளெலாம் மூழ்கி நிற்கவும் வாய்க்குமோ?
நாதனே பரஞானமே உருவாக என்னுளம் நண்ணுவாய்;
காதலால் உனைக் கண்டு கொண்டதும் கரையிலா வியப்பெய்துவேன்
ஓதும் நாவினில் உரை ஒடுங்கிய ஊமை போல் தடுமாறி, உன்
பாதமே கதி என்று போற்றுவேன், பாலனருள் புரிந்தருள்வாய்.
சாந்தம் ஆயினே, அன்பும் ஆயினே, தலைவன்ஆகிய ஒருவனே,
வேந்தர் வேந்தனே, விமலனே, எனை மீட்கும் ஆருயிர் நாதனே.
ஏய்ந்த நின்மலர்த்தாளில் ஏழையேன் என்னை அர்ப்பணம் ஆக்கியே.
வாய்ந்த வாழ்க்கையின் பயன் அனைத்தையும் மருவி மாண்புற வாழுவேன்.
மருவி நின் சரண் எய்துவேன் எனில் இந்த மானிட வடிவிலும்
அரிய இன்பமும் சொர்க்க போகமும் அனுபவித்து நான் மகிழுவேன்;
பரிதி வந்ததும் இருள் நிலைக்குமோ? சுடர் படர்ந்த நின் பழுதிலா
உருவு கண்டதும் எனது தீவினை ஓடி மாயமாய் ஒழியுமே.
அதிரும் தீவினை ஆணிவேர் அறச் சிதறி வீழ்ந்ததும் அடிமைஎன்
இதய வானிலே உதயம் ஆகுமாம் இன்பம் ஆகிய அமுதமே.
மதுர வெண்ணிலா வருகை கண்ட சகோர பட்சியைப் போலவே
பதித பாவனு உனது சோதியைப் பருகி மெய்மறந் தாடுவேன்.
நீண்ட காலமாய் எனது சிந்தையில் நிகழும் ஆசையை உணருவாய்
பூண்ட வேட்கையைத் தீனபந்துவே பூர்த்தி ஆக்கி, என் உயிரிலே
தூண்டுவாய், திடமான பக்தியின் தூய வெண்சுடர் மூட்டுவாய்.
மீண்ட நல்லொளி அதனை வாழ்க்கையின் துருவமீனெனக் கொள்ளுவேன்.
அன்பு தோய்ந்தபே ரின்ப வாரியில் ஆடி மூழ்குவேன். ஆர்வமாய்
இன்றும் நாளையும் பகலும் அந்தியும் எனை மறந்துனை எய்துவேன்
என்று கூடுமோ? இனிய நின்னருட் காட்சி காணவும் இயலுமோ?
நின்ற ஆவலும் ஆன்ம வேட்கையும் நிறைவு கொள்ளுமோ இறைவனே?

இப் பாட்டில் வரும் 'இன்பம் ஆகிய அமுதமே' என்னும் வார்த்தைகளைக் கேட்டதும் குருதேவர் அப்படியே ஆழ்ந்த சமாதியில் மூழ்கிப்போனார். கூப்பிய கைகளுடன் அவர் கிழக்கு நோக்கி உட்கார்ந்து கொண்டிருந்தார்.

நிமிர்ந்த உடலுடன் ஆனந்தமயியின் உருவக் கடலில் மூழ்கி யிருந்தார். வெளியுலக உணர்வு அவரிடம் அடியோடு அற்றுப் போய் விட்டது. மூச்சு விடுகிறாரா இல்லையா என்பது கூடத் தெரியவில்லை. கண்கள் இமைக்கவில்லை. அசைவற்ற சித்திரம் போல் உட்கார்ந்திருந்தார். அவர் இந்த உலகத்தை விட்டு வேறு எங்கோ சென்று விட்டார் போலும்!

நரேந்திரர் ஸ்ரீராமகிருஷ்ணரின் சமாதி நிலையைக் கண்டதும் முன்னதாகவே அறையை விட்டுக் கிழக்கேயுள்ள தாழ்வாரத்துக்குச் சென்று விட்டார். அங்கே ஒரு கம்பளி மீது ஹாஸ்ரா, துளசி மாலையும் கையுமாக உட்கார்ந்திருந்தார். அவருடன் நரேந்திரர் பேசிக் கொண்டிருந்தார்.

அறை முழுவதும் பக்தர்கள் கூடியிருந்தனர். ஸ்ரீராமகிருஷ்ணர் சமாதி கலைந்ததும் பக்தர்களின் மீது பார்வையைச் செலுத்தினார். நரேந்திரர் காணப்படவில்லை. தம்பூரா மட்டும் தரையில் வைக்கப்பட்டிருந்தது. பக்தர்கள் எல்லோரும், குருதேவரை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவன் நெருப்பை மூட்டினான். அது பற்றிக் கொண்டது. இனிமேல் அவன் இங்கு இருந்தால் என்ன? வெளியில் இருந்தால் என்ன? (கேப்டன் முதலிய பக்தர்களை நோக்கி) சிதானந்தத்தை மனத்தில் நிறுத்துங்கள். நீங்களும் ஆனந்தம் அடையலாம். சிதானந்தம் மனதில் எப்பொழுதும் இருக்கத்தான் இருக்கிறது. ஆனால் ஆவரணம்,[1] விக்ஷேபம்[2] காரணமாக சற்றே மூடப்பட்டிருக்கிறது. விஷயப் பற்று எந்த அளவு குறையுமோ அந்த அளவுக்கு இறைவனிடம் ஆழ்ந்த பற்றும், அன்பும் அதிகரிக்கும்."

கேப்டன்: "கல்கத்தாவில் எவ்வளவு தூரம் வீட்டை நோக்கிச் செல்கிறோமோ அவ்வளவு தூரம் காசி நம்மை விட்டு எட்டிப் போகிறது. அதே போல் எவ்வளவு தூரம் காசியை நோக்கிச் செல்கிறோமோ அவ்வளவு தூரம் நம் வீடும் நம்மை விட்டு எட்டிப் போகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ராதை எந்த அளவுக்குக் கிருஷ்ணனை நோக்கிச் சென்றாளோ, அந்த அளவுக்கு அவளால்

1. உண்மை மூடுண்டு இருப்பது ஆவரணம்.
2. உண்மை அற்றதை உண்மையாகக் கொண்டு மனம் அதில் சலனமடைதல் விக்ஷேபம்.

கிருஷ்ணனின் உடல் மணத்தை நுகர முடிந்தது. இறைவனுக்கு அருகில் எவ்வளவு நெருங்குகிறோமோ அவ்வளவு பாவ பக்தி அவரிடம் ஏற்படுகிறது. நதி கடலின் அருகே போகப் போக அதன் ஏற்றமும் இறக்கமும் அதிகரிக்கிறது.

"ஞானிகளின் உள்ளத்தில் ஒரே தொடர்ச்சியாக ஞான கங்கை ஓடிக் கொண்டிருக்கிறது. ஞானிக்கு எல்லாமே கனவு போன்றதுதான். அவன் எப்பொழுதும் உண்மைச் சொருபத்தில் நிலைத்து நிற்கிறான். ஆனால் பக்தனின் உள்ளத்தில் அது போன்ற ஒரே மாதிரியான உணர்வு இருப்பதில்லை. ஏற்றமும், இறக்கமும் இருந்து கொண்டே இருக்கின்றன. அவன் சிரிக்கிறான், அழுகிறான், ஆடுகிறான், பாடுகிறான். பக்தன் பகவானுடன் விளையாட விரும்புகிறான். சில சமயம் நீந்துகிறான், சில சமயம் மூழ்குகிறான், சில சமயம் நீர் மட்டத்துக்கு எழுகிறான். தண்ணீரில் பனித்துண்டுகள் 'டப் டப்' என்று ஓசை எழுப்பிக் கொண்டிருப்பது போல. (சிரிப்பு)

"ஞானி பிரம்மத்தை அறிய விரும்புகிறான். பக்தனுடைய பகவான், ஆறுவகையான செல்வங்களும் நிறைந்த முழுமையான ஆற்றல் வாய்ந்தவன். ஆனால் உண்மையில் பிரம்மமும் சக்தியும் வேறல்ல. ஒன்றுதான். எது சச்சிதானந்தமோ அதுவே சச்சிதானந்தமயி.[1] மணியும் அதன் ஒளியும் போல. மணியின் ஒளி என்றாலே, மணியை உணர்கிறோம். மணியை நினைக்கா விட்டால் மணியின் ஒளியை நினைக்க முடியாது. அதே போல் மணியினுடைய ஒளியை நினைக்கா விட்டால் மணியை நினைக்க முடியாது.

"ஒரே சச்சிதானந்தம், சக்தியின் வேறுபாட்டால் உபாதி[2] வேற்றுமை அடைந்து அதனால் பல்வேறு வடிவங்களாக ஆகின்றது. அன்னையே இவையெல்லாம். எங்கே செயல் உளதோ அங்கெல்லாம் சக்தி இருக்கிறாள். தண்ணீர், அசைவற்றிருந்தாலும் தண்ணீர்தான், அலைகளாகவும், குமிழிகளாகவும் இருந்தாலும் தண்ணீர்தான். எந்த ஆத்யா சக்தி படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களைப் புரிகின்றதோ, அது அந்த சச்சிதானந்தமே தான். கேப்டன் எந்த வேலையும் செய்யாமல் இருக்கும் போதும் கேப்டன் தான். கவர்னர் ஜெனரலிடம் போகும் போதும் அதே கேப்டன்தான். வெறும் உபாதி தான் வேற்றுமை."

1. சச்சிதானந்த மயமான அன்னை. 2. தனி.

கேப்டன் : "ஆம்! சுவாமி, அப்படித்தான்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நான் கேசவசேனருக்கு இந்தக் கருத்தைச் சொல்லியிருந்தேன்."

கேப்டன் : "கேசவசேனர் ஆசாரப்பிரஷ்டர்[1]. தன் விருப்பப்படியெல்லாம் வாழ்பவர். அவர் ஒரு செல்வந்தர், சாது அல்ல."

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்து) : "கேசவ சேனரை நான் பார்க்கச் செல்வதைக் கேப்டன் தடுக்கிறார்."

கேப்டன் : "சுவாமி! நீங்கள் உங்கள் விருப்பம் போல் போகத்தான் செய்வீர்கள். நான் என்ன செய்ய முடியும்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (வெறுப்புடன்) : "நீ காசு பணத்திற்காக வெள்ளைக்கார கவர்னர் ஜெனரலிடம் போகலாம். ஆனால் கடவுள் விஷயமாக நான் கேசவரைப் பார்க்கப் போகக் கூடாதா? அவர் ஈசுவரனைச் சிந்தனை செய்கிறார், ஹரியின் பெயரை ஓதுகிறார்! எவன் ஈசுவரனே அவனே இந்த எல்லா உயிர்களாகவும் உலகங்களாகவும் ஆகி இருக்கிறான் என்று நீயே சொல்வதில்லையா?"

இவ்வாறு சொல்லிக் கொண்டே குருதேவர் எழுந்து வட கிழக்குத் தாழ்வாரத்திற்குப் போய்விட்டார். கேப்டனும் மற்ற பக்தர்களும் அவர் திரும்பி வருவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். ம- குருதேவருடன் தாழ்வாரத்துக்கு வந்தார். வடகிழக்குத் தாழ்வாரத்தில் நரேந்திரர் ஹாஸ்ராவுடன் பேசிக் கொண்டிருந்தார். ஹாஸ்ரா வறட்டு ஞான விசாரம் செய்பவர் என்பதை குருதேவர் அறிவார். 'உலகம் ஒரு கனவு போன்றது. பூஜை, பாடல் இவையெல்லாம் வெறும் மனக் கோளாறு. உண்மை இயல்பை சிந்திப்பது மட்டுமே நமது நோக்கம், நானே அவன்' என்றெல்லாம் ஹாஸ்ரா சொல்லுவார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்முறுவலுடன்) : "உங்களுக்குள் என்ன பேச்சு நடக்கிறது?"

நரேந்திரர் (புன்முறுவலுடன்) : "பெரிய பெரிய விஷயங்களைப் பற்றி நாங்கள் எவ்வளவோ பேசிக் கொண்டிருக்கிறோம்."

1. குல ஒழுக்கத்தை விட்டவர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக் கொண்டே): "ஆனால் தூய ஞானமும், தூய பக்தியும் ஒன்றுதான். தூய ஞானம் எங்கே அழைத்துச் செல்லுமோ, அங்கேயே தூய பக்தியும் அழைத்துச் செல்லும். பக்தி மார்க்கம் மிகவும் சுலபமான மார்க்கம்."

நரேந்திரர், 'அன்னையே! என்னைப் (பக்திப்) பித்தனுக்கு. ஞான விசாரத்தில் ஒன்றும் பயன் இல்லை' என்ற ஒரு பாடலின் வரியை எடுத்துக் காட்டினார்.

நரேந்திரர் (ம-வை நோக்கி): "இதோ பாருங்கள்! நான் ஹாமில்டனின் நூலைப் படித்தேன். அதில் அவர் 'A learned ignorance is the end of Philosophy and the beginning of religion' என்று எழுதியிருக்கிறார்." (படித்த அறியாமைதான் தத்துவத்தின் முடிவும் சமயத்தின் ஆரம்பமும் ஆகும்.)

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "அப்படியென்றால்?"

நரேந்திரர்: "தரிசனநூல் படிப்பது முடிந்ததும் மனிதன் படித்த முட்டாளாகிறான். அப்பொழுது சமயம், சமயம் என்று கூறுகிறான். அது முடிந்த பிறகு சமய வாழ்வு துவங்குகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே ஆங்கிலத்தில்): "தாங்க் யூ, தாங்க் யூ" (Thank you, Thank you) (சிரிப்பு).

மாலை நெருங்கியபின் பக்தர்கள் பலர் வீடு திரும்பலாயினர். நரேந்திரரும் விடை பெற்றுக்கொண்டார். இரவு நெருங்கும் வேளை. கோயிலின் நான்கு பக்கங்களிலும் விளக்கேற்ற ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. காளி கோயிலையும், விஷ்ணு கோயிலையும் சேர்ந்த பூசாரிகள் இருவர் கங்கையில் நீராடிக் கொண்டிருந்தனர். அவர்கள் விரைந்து சென்று ஆரதி செய்யவும், மாலை நைவேத்தியம் படைக்கவும் ஏற்பாடு செய்ய வேண்டும். தட்சிணேசுவரக் கிராமத்து இளைஞர்கள் சிலர் கையில் பிரம்புடனும், சிலர் தங்கள் உறவினர்களுடனும், தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தனர். அவர்கள் கங்கைக்கரையின் தடுப்புச் சுவரின்மேல் நடந்து கொண்டே மலர் மணத்தை சுமந்து வரும் மாலைக்காற்றை அனுபவித்துக் கொண்டு, சிறிய அலைகளோடும், நுரையோடும் வேகமாகப் பெருகிவரும் மழைக்காலத்துக் கங்கை வெள்ளத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர். சிலர், ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவர்களாய், பஞ்சவடியை அடுத்த வெட்ட வெளியில்

நடந்து கொண்டிருந்தனர். பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் மேற்குத் தாழ்வாரத்திலிருந்த வண்ணம் சிறிது நேரம் கங்கையை தரிசித்துக் கொண்டிருந்தார்.

இருள் சூழத்தொடங்கியது. கோயில்களில் விளக்குகள் ஏற்றப்பட்டன. வேலைக்காரி குருதேவரின் அறையில் விளக் கேற்றித் தூபம் போடத் துவங்கினாள். இதற்கிடையில் பன்னிரெண்டு சிவாலயங்களில் சிவபெருமானுக்கு ஆரதியும், அதன் பிறகு விஷ்ணு ஆலயத்திலும், காளி கோயிலிலும், ஆரதியும் ஆரம்பமாயிற்று. ஜால்ரா, தாளம், மணி முதலிய வற்றின் இனிமையான கம்பீர ஓசை எழுந்தது. கோயிலை அடுத்து ஓடிக்கொண்டிருந்த கங்கையின் 'கலகல' என்ற ஒலி கேட்டவண்ணமிருந்தது.

பௌர்ணமிக்கு அடுத்தநாளாகையால் சிறிது நேரத்திற் கெல்லாம் நிலவு உதித்துவிட்டது. கோயிலின் பெரிய தாழ்வாரத்திலும், பூந்தோட்டத்து மரங்களின் உச்சியிலும், படிப் படியாக நிலவொளி சூழ்ந்தது. நிலவின் ஆட்சியைக் கண்டு கங்கை அளவற்ற ஆனந்த மடைந்து பொங்கிப் பெருகியோடினாள்.

மாலை ஆரதிக்குப்பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் அன்னை காளியை வணங்கி கையைத் தட்டிக் கொண்டு ஹரிநாமத்தைப் பாடத்தொடங்கினார். அறையில், துருவன். பிரகலாதன், இராமர் பட்டாபிஷேகம், காளி, ராதாகிருஷ்ணர் முதலிய படங்கள் மாட்டப்பட்டிருந்தன. குருதேவர் எல்லாத் தேவ தேவியரையும் மனத்தில்நினைத்து அவர்களுடைய பெயரை உச்சரித்தவாறு அவர்களை வணங்கி வழிபட்டார்.

பிரம்மம் ஆத்மா பகவான்
பாகவதம் பக்தன் பகவான்
பிரம்மம் சக்தி, சக்தி பிரம்மம்
வேதம் புராணம் தந்திரம்
கீதா காயத்ரி, சரணாகதி சரணாகதி
நானல்ல நானல்ல, நீதான் நீதான்
நான் இயந்திரம், நீ அதை இயக்குபவன்.

இப்படியெல்லாம் குருதேவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

இறைவன் பெயரையும், புகழையும் பாடியபிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் கூப்பிய கரங்களுடன் உலக அன்னையை

மனத்தில் சிந்தித்துக் கொண்டிருந்தார். இரண்டொரு பக்தர்கள் மாலைநேரத்தில் கங்கைக் கரையிலுள்ள தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தனர். ஆரதி முடிந்த பிறகு ஒவ்வொரு வராக குருதேவரின் அறைக்கு வரத் தொடங்கினர். குருதேவர் கட்டிலில் வந்து அமர்ந்தார். ம-, அதர், கிசோரி, முதலிய பக்தர்கள் எதிரில் தரையில் அமர்ந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப்பார்த்து): "நரேந்திரர், பவநாத், ராக்கால் இவர்கள் நித்திய சித்தர்கள்; ஈசுவர கோடிகள். இவர்கள் சாதனம் பழகுவது என்பது பெயரள விற்குத்தான். நரேந்திரனைப் பாருங்கள். அவன் யாரையும் பொருட்படுத்துவதில்லை. ஒரு நாள் அவன் என்னுடன், கேப்டனின் வண்டியில் வந்து கொண்டிருந்தான். கேப்டன், நரேந்திரனை நல்ல இடத்தில் உட்காரச் சொன்னார். ஆனால் அவன் கேப்டனைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. அவன் என்னைக் கூட எதிர் பார்த்திருப்பதில்லை. அவனுக்கு என்ன வெல்லாம் தெரியுமோ அதை எல்லாம் கூட அவன் என்னிடம் சொல்லுவதில்லை. இதற்குக் காரணம் ஒரு வேளை நான் மற்றவர் களிடம், 'நரேந்திரன் ஒரு பெரிய மேதை' என்று சொல்லிக் கொண்டு திரிவேனோ என்ற பயமாக இருக்கலாம். அவனிடம் மாயா மோகமே இல்லை! எந்தப்பற்றும் இல்லை! அவன் மிகவும் நல்லதொரு பாத்திரம். பல நற்குணங்களுக்கு இருப்பிடமான வன். பாடுகிறான், வாத்தியங்களை வாசிக்கிறான், எழுதுகிறான், படிக்கிறான்! அது மட்டுமல்ல, புலன்களையும் வென்றவன். திருமணம் செய்து கொள்ள மாட்டேன் என்கிறான். நரேந்திரன் பவநாத் இந்த இரண்டு பேருக்கும் நல்ல நட்பு உண்டு- கணவன் மனைவி போல. நரேந்திரன் இங்கு அடிக்கடி வருவ தில்லை, அது ஒரு விதத்தில் நல்லதுதான். அவன் அதிகமாக வந்தால் நான் பரவசமுற்று என் வயமிழந்து விடுகிறேன்."

### திங்கட்கிழமை, ஆகஸ்ட் 20, 1883

தட்சிணேசுவரக் கோயிலில் குருதேவரின் அறை. நேரம் இரவு சுமார் எட்டு மணி. தமது சிறிய கட்டிலில் கொசு வலைக் குள் அமர்ந்து, குருதேவர் தியானத்தில் ஈடுபட்டிருந்தார். ம-, நண்பர் ஹரிபாபுவுடன் அங்கு வந்து தரையில் அமர்ந்தார்.

ம-வின் நண்பரான ஹரிபாபு இருபத்தெட்டு வயது இளைஞர். மனைவி இறந்து பதினொரு ஆண்டுகள் ஆகியிருந்தன. மறுமணம் செய்து கொள்ளாமல் தந்தை, தாய்

சகோதர சகோதரிகளுடன் ஒரே குடும்பமாக வாழ்ந்து வந்தார். அவர்கள் பேரில் பேரன்பு கொண்டவராதலால் அவர்களுக்குச் சேவை செய்ய வேண்டி அவர்களுடனேயே வசித்து வந்தார். இப்பொழுதெல்லாம் ஹாஸ்ரா தட்சிணேசுவரக் காளி கோவிலில் குருதேவருடன் வசித்து வரலானார். ராக்கால்கூடப் பெரும்பாலும் குருதேவருடனேயே தங்கத் தொடங்கியிருந்தார். அதர் வீட்டிற்கும் எப்போதாவது சென்று தங்குவார். நரேந்திரர், பவநாத், அதர், பலராம், ராம், மனமோகன், ம-முதலான பக்தர்கள் தவறாமல் ஒவ்வொரு வாரமும் குருதேவரைத் தரிசிக்க தட்சிணேசுவரம் வந்து கொண்டிருந்தனர்.

இருதயனுக்கு உடல் நலம் சரியில்லாமல் இருந்தது. தனது சொந்த கிராமத்தில் தங்கியிருந்தான். குருதேவர் சாதனைகள் புரிந்த ஆரம்ப காலங்களில் இருதயன் நெடுங்காலம் அவருக்குச் சேவைகள் செய்திருக்கிறான். இருதயன் நோய்வாய்ப் பட்ட செய்தி கேட்டு குருதேவர் பெரிதும் வருத்தமுற்றார். பக்தர்களில் ஒருவர் இருதயனுக்கு அனுப்புவதற்காக ரூபாய் பத்தினை ராம் சட்டர்ஜியிடம் கொடுத்திருந்தார். குருதேவருக்கு இது தெரியாது. பக்தர்கள் நீர் பருகுவதற்கு ஒரு பானை வேண்டும் என்று மட்டும் குருதேவர் அந்த பக்தரிடம் கூறியிருந்தார். இன்று அந்த பக்தர் பானையோடு வந்திருந்தார்.

பக்தர்கள் குழுமியதும் குருதேவர் கொசு வலையிலிருந்து வெளியே வந்தார். குழுமியிருந்த பக்தர்கள் அனைவரும் தரையில் விழுந்து வணங்கினார்கள். கொசு வலை மேலே தூக்கிக் கட்டப்பட்டது. பக்தர்கள் தரையில் அமர்ந்து கொண்டனர். குருதேவர் சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்தபடி, பக்தர்களுடன் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நான் கொசு வலைக்குள் தியானம் செய்து கொண்டிருந்த போது, எனக்கு ஓர் எண்ணம் தோன்றியது. தியானம் என்பது வெறும் உருவம் ஒன்றை நினைத்துக் கொண்டிருப்பது தவிர வேறொன்றும் இல்லை. இப்படி நினைத்தவுடன் எனக்கு தியானம் செய்வதில் ஆர்வம் குன்றியது. மின்னல் தோன்றி மறைவதைப் போல் கடவுள் ஒரு வினாடி நேரம் காட்சி தந்தாலே போதுமானது. பிறகு மீண்டும் நினைத்துக் கொண்டேன். தியானம் செய்வது யார்? யாரைக் குறித்துத் தியானம் செய்கிறார்?"

ம: "ஆம் ஐயா. கடவுளே உலகமாகவும், அதிலுள்ள ஜீவராசிகளாகவும், எல்லாமாகவும் இருக்கிறார் என்று நீங்கள்

கூறியிருக்கிறீர்கள். அப்படி இருக்க தியானம் செய்பவனும் கடவுள் தானே!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அது மட்டுமல்ல. கடவுள் நம்மை தியானத்தில் ஈடுபடுத்தாவிட்டால் தியானம் செய்ய முடியாது. அவர் நம்மைத் தியானத்தில் ஈடுபடுத்தினால்தான் தியானம் ஏற்படும். நீ என்ன சொல்கிறாய்."

ம: "உண்மைதான் சுவாமி. உங்களிடம் 'நான்' என்ற எண்ணமே இல்லை. அதனால்தான் இப்படிக் கூறுகிறீர்கள். எங்கு 'நான்' இல்லையோ அங்கு இப்படிப்பட்ட நிலை ஏற்படுகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆனால் 'நான் இறைவனின் தாசன்-சேவகன்' என்ற எண்ணம் ஒருவனிடம் இருப்பது நல்லது. நான் எல்லாக் காரியங்களையும் செய்கிறேன் என்ற எண்ணம் இருக்கும் போது கடவுளை எஜமானனாகவும், தன்னை அவருடைய வேலைக்காரனாகவும் நினைத்துக் கொள்வது மிகவும் நல்லது. செயல்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும் பொழுது ஆண்டான்-அடிமை என்ற எண்ணத்தில் இருப்பதே நல்லது."

மனமோஹன் இப்பொழுது பிரம்மத்தைப் பற்றிய நினைப்பில் ஆழ்ந்திருந்தார். குருதேவர் அவரை மனத்தில் கொண்டு பின்வருமாறு பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பிரம்மம் ஆகாயத்தைப் போன்றது. நெருப்பிற்கு எந்தவித நிறமும் இல்லாதது போல் பிரம்மத்தில் எந்தவித மாற்றமும் இல்லை. சக்தியின் காரணமாக இறைவன் பல்வேறாகத் தோன்றுகிறான். சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களும் சக்தியின் குணங்களே. நெருப்பில் வெண்மையான பொருளைப் போட்டால் நெருப்பு வெள்ளையாகத் தோன்றுகிறது. அதே நெருப்பில் சிவப்புப் பொருளைப் போட்டால் சிவப்பாகத் தோன்றுகிறது. கருப்புப் பொருளைப் போட்டால் கருப்பாகத் தோன்றுகிறது. பிரம்மமானது சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களையும் கடந்தது. அது என்ன என்று சொற்களினால் கூற முடியாது. அது மனம் வாக்கிற்கு அப்பாற்பட்டது. வேதாந்த விசாரப்படி 'இதுவல்ல இதுவல்ல' என்று உலகப் பொருட்கள் அனைத்தையும் விலக்கிக் கொண்டே போனால், விலக்க முடியாமல் எது மிஞ்சுகிறதோ, ஆனந்தமாக எது இருக்கிறதோ அதுவே பிரம்மம்!

"ஒரு புதுமணப் பெண்ணின் கணவன், மாமனார் வீட்டிற்கு வந்திருக்கிறான். சம வயதுள்ள சில நண்பர்களுடன் வரவேற்பறையில் உட்கார்ந்திருக்கிறான். உள்ளே இருந்து கொண்டு சன்னல் வழியாக மணப் பெண்ணும் அவளுடைய தோழிகளும் அவர்களைப் பார்க்கிறார்கள். அந்தத் தோழிகளுக்குப் பெண்ணின் கணவன் யார் என்று தெரியவில்லை. அங்கிருக்கும் இளைஞர்களில் ஒருவனைச் சுட்டிக்காட்டி, 'இவனா உன் கணவன்?' என்று கேட்கின்றனர். அவளோ, புன்னகைத்தபடி 'இல்லை' என்று தலையாட்டுகிறாள். மறுபடியும் வேறொருவனைச் சுட்டிக் காட்டுகின்றனர். அவள் மறுபடியும் 'இல்லை' என்று தலையாட்டுகிறாள். கடைசியாக அவளது கணவனையே சுட்டிக் காட்டி 'இவனா?' என்று கேட்கும் போது அவள் 'ஆமாம், இல்லை' என்று கூடச் சொல்லாமல், ஆனந்தமாகப் புன்முறுவல் பூத்து விட்டு மௌனமாகி விடுகிறாள். அப்போது தோழிகள் அவன் தான் அவளுடைய கணவன் என்று தெரிந்து கொள்கிறார்கள். உண்மையான பிரம்மஞானம் ஏற்பட்டபிறகு எல்லாம் அமைதி. பிரம்மஞானம் அடைந்தவன் இது போன்று மௌனியாகி விடுகிறான்."

(ம-விடம்) "அது சரி, நான் ஏன் இவ்வளவு அதிகமாகப் பேசுகிறேன்?"

ம: "பக்தர்களின் தெய்விக உணர்வைத் தட்டி எழுப்புவதற்காக நீங்கள் இப்படிப் பேசுகிறீர்கள். 'கொதிக்கும் எண்ணெயில் பூரி தட்டிய பச்சை மாவைப் போட்டதும் சத்தம் உண்டாகிறது' என்று நீங்கள் ஒரு முறை சொல்லியிருக்கிறீர்கள்."

குருதேவர் ம-விடம் ஹாஸ்ராவைப் பற்றி பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஒரு நல்ல மனிதனின் தன்மை எப்படிப்பட்டது தெரியுமா? அவன் மற்றவர்களுக்குத் துன்பம் தருவதில்லை. யாரையும் துன்புறுத்துவதுமில்லை. ஆனால் சில மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்களை விருந்திற்கு அழைத்தால் தனக்கு உட்காரத் தனியாக நல்ல இடம் வேண்டும் என்பார்கள். இது அவர்களின் இயல்பு. இறைவனிடம் உண்மையான பக்தி உள்ளவன் தன்னை அறியாமல் கூடத் தவறுகள் செய்ய மாட்டான். வீணாக மற்றவர்களுக்குத் துன்பம் தரமாட்டான். கெட்ட மனிதர்களிடம் நட்புக் கொள்வது நல்லதல்ல.

அவர்களிடமிருந்து தூர விலகி, தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். (ம-வை நோக்கி) நீ என்ன சொல்கிறாய்?"

ம : "ஆமாம்! தீயவர்களின் சேர்க்கை மனத்தை அதிக தூரம் கீழே இழுத்துச் சென்று விடுகிறது. ஆனால் ஆற்றல் உள்ள மனிதனின் விஷயம் வேறானது என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "எப்படி என்று?"

ம : "சாதாரண நெருப்பின் மீது ஒரு சிறிய கட்டையைப் போட்டால் நெருப்பு உடனே அணைந்து விடும். ஆனால் நெருப்புக் கொழுந்து விட்டு எரியும் போது, வாழை மரத்தைப் போட்டாலும் நெருப்பு அணைவதில்லை. அதற்குமாறாக வாழை மரத்தை அது எரித்துச் சாம்பலாக்குகிறது."

குருதேவர் இப்போது ம—விடம் அவர் நண்பர் ஹரிபாபுவைப் பற்றி விசாரிக்கத் தொடங்கினார்.

ம : "இவர் தங்களைத் தரிசிக்க வந்திருக்கிறார். பல ஆண்டுகளுக்கு முன்பே இவர் மனைவியை இழந்தவர்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹரியை நோக்கி) : "நீ என்ன வேலை செய்கிறாய்?"

ம: "குறிப்பிடும்படியாக எதுவும் இல்லை. வீட்டில் சகோதர சகோதரிகள், தாய் தந்தையருக்குச் சேவை செய்து வருகிறார்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி) : "என்ன இது? எதற்கும் பிரயோசனம் இல்லாத பூசணிக்காய் வெட்டுபவனைப் போல இருக்கிறாய்? நீ இல்லறத்தானும் அல்ல, பக்தனும் அல்ல. இப்படி இருப்பது நல்லதல்ல. சில வீடுகளில் வயதான மனிதர்கள் சிலர் இருக்கிறார்கள். இவர்கள் வேலை எதுவும் செய்யாமல் நாள் முழுவதும் வீட்டுப் பெண்களுடன் பேசிக் கொண்டிருப்பார்கள். அல்லது வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு அடிக்கடி புகை பிடித்துக் கொண்டிருப்பார்கள். இந்த இரண்டும் இல்லாத போது வெறுமனே உட்கார்ந்து கொண்டிருப்பார்கள். வீடுகளில் பெண்கள் பூசணிக்காயை வெட்டுவதில்லை.[1] எனவே குழந்தைகளை அனுப்பி அவர்களை அழைத்து வரச் சொல்வார்கள். அவர்களும் அடிக்கடி உள்ளே வந்து

1. வங்காளத்தில் பெண்கள் பூசணிக்காயை வெட்டுவது அமங்கலம் என்ற ஒரு நம்பிக்கை உள்ளது.

பூசணிக்காயை வெட்டிக் கொடுத்து விட்டுப் போவார்கள். குடும்பத்தில் அவர்களுடைய பயன் அவ்வளவுதான். அதனல் அத்தகையவர்களைப் 'பூசணிக்காய் வெட்டி' என்று கேலியாகக் கூப்பிடுவார்கள்.

"நீ இதையும் செய். அதையும் செய். இறைவனுடைய திருவடிகளில் மனத்தை வைத்து உன் காரியங்கள் அனைத்தையும் செய். தனியாக இருக்கும்போது பக்தி நூல்கள்— பாகவதம், சைதன்யரின் வரலாறு முதலியவற்றைப் படி."

இரவு மணி பத்தாயிற்று. நிலவொளியில் கோயிலின் உச்சியும் தாழ்வாரமும் வெகு அழகாகக் காட்சியளித்தன. இன்னமும் காளி கோயில் மூடப்படவில்லை. ம-, ராம் சட்டர்ஜியுடன் பேசிக் கொண்டே விஷ்ணு ஆலயத்திற்கும், காளி கோயிலுக்கும் சென்று வணங்கி விட்டுக் குருதேவரின் அறைக்குத் திரும்பினர். அங்கே குருதேவர் தெற்கு நோக்கியவராக அமர்ந்து கொண்டு இரண்டொரு பூரியும் சிறிது ரவை பாயசமும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு ம-வும் நண்பரும் குருதேவரை வணங்கி விடை பெற்றுக் கொண்டு கல்கத்தாவிற்குத் திரும்பினர்கள்,

### வெள்ளிக்கிழமை, செப்டம்பர் 7, 1883

தட்சிணேசுவரக் கோயில். குருதேவர் தம் அறையில் சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்தபடி ம-வுடன் பேசிக் கொண்டிருந்தார். ம- தரையில் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அன்றைக்குக் கல்கத்தாவிற்குச் சென்று கொண்டிருந்தேன். வண்டி ஒரு தெரு வழியாகச் சென்று கொண்டிருந்தது. அப்போது தெருவில் சென்ற மக்களையெல்லாம் பார்த்தேன். எல்லோரும் கீழ் நோக்கிய பார்வை உடையவர்களாக இருப்பதைக் கண்டேன். எல்லோருக்கும் வயிற்றைப் பற்றிய நினைப்புத்தான். எல்லோருடைய மனமும் உணவிற்காக ஓடித் திரிந்து கொண்டிருந்தது. எல்லோருடைய மனமும் பெண்—பொன் இவற்றைத் தேடியே சென்று கொண்டிருந்தது. ஒருவர் அல்லது இரண்டு பேர் மட்டுமே மேல் நோக்கிய பார்வை உடையவர்களாக அதாவது கடவுளின் மீது மனத்தைத் திருப்பியவர்களாக இருப்பதைக் கண்டேன்."

ம: "இந்த நாட்களில் வயிற்றைப் பற்றிய நினைப்பே அதிகரித்து விட்டது. மேல் நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களை மேற்கொள்ளும் நம் மக்களின் ஆர்வம் ஆடம்பரத்தைப் பின்பற்றிச் செல்கிறது. எனவே இவர்களின் தேவைகள் அதிகரித்து விட்டன."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "கடவுளைப் பற்றி மேல் நாட்டவர்களின் கருத்து என்ன?"

ம: "அவர்கள் அருவக் கடவுளை வழிபடுகிறார்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அதுவும் வழிபாடுகளில் ஒன்றுதான்."

சிறிது நேரம் இருவரும் மௌனமாக இருந்தனர். இப்போது குருதேவர் பிரம்மத்தைப் பற்றிய தனது அனுபவத்தை வர்ணிக்கத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஒரு நாள் நான் இரண்டற்ற சைதன்யக் காட்சியைக் கண்டேன். முதலில் கணக்கற்ற மனிதர்கள், விலங்குகள், இன்னும் பல்வேறான உயிர்கள் இவற்றை அதில் கண்டேன். அந்தக் காட்சியில் செல்வந்தர்கள், ஆங்கிலேயர்கள், முகமதியர்கள், தோட்டிகள், நாய்கள், நீண்ட தாடியோடு கூடிய ஒரு முகமதியன் முதலியவர்களையும், என்னையும் கண்டேன். அந்த முகமதியன் தன் கையில் வைத்திருந்த தட்டிலிருந்து கொஞ்சம் சோற்றை எடுத்து எல்லோருடைய கையிலும் போட்டான். நானும் கூடக் கொஞ்சம் சாப்பிட்டேன்.

"வேறொரு நாள் இன்னொரு காட்சி தெரிந்தது. அதில் அரிசி, காய்கறிகள், மற்ற உணவுப் பொருள்கள் முதலியன தரையில் சிதறிக்கிடந்தன. அத்துடன் மலம், குப்பை முதலியனவும் விழுந்து கிடப்பதைக் கண்டேன். திடீரென்று என் உடம்பிலிருந்து உயிர் ஒரு நெருப்புப் பிழம்பைப் போன்று வெளியே வந்து இந்தப் பொருட்கள் அனைத்தையும் தொட்டது. அந்தக் காட்சியானது ஒளி விட்டெரியும் நெருப்பு தனது நாக்கினால் இவை எல்லாவற்றையும் தொட்டு ருசி பார்த்தது போல் தோன்றியது. அது மலத்தையும் ருசித்தது. இவை எல்லாம் ஒரே பொருள்; இரண்டறப் பிரிக்க முடியாதவை என்பதைக் கண்டேன்.

"மற்ருெரு நாள் இன்னொரு காட்சியில் எனக்கு நெருங்கிய பக்தர்கள் உண்டு என்பதையும், அவர்கள் என்னுடைய தெய்விகச் சீடர்கள் என்பதையும், எனக்குச் சொந்த மானவர்கள் என்பதையும் கண்டேன். இந்தச் சீடர்கள் என்னைத் தேடி வருவார்கள் என்று பகல் முழுவதும் காத்திருப்பேன். மாலை ஆரதியின் மணி ஓசை கேட்டதும் மாடி மேல் ஏறி, மிகுந்த ஏக்கத்தோடு, 'ஓ பக்தர்களே! எங்கே இருக் கிறீர்கள்? வாருங்கள்! உங்களைக் காண்பதற்காக எனது உயிர் துடிக்கிறது' என்று உரக்கக் கூவுவேன். (ம-விடம்) இந்தக் காட்சிகளைப் பற்றி என்ன நினைக்கிருய்?"

ம: "உங்கள் மூலம் கடவுள் தமது திருவிளையாடல்களை நடத்துகிருர். நீங்கள் இயந்திரம். கடவுள் உங்களை இயக்கு பவர். கடவுள் உலகிலுள்ள மற்ற உயிர்களையெல்லாம் யந்திரப் பொறியின் மூலம் உருவாக்கி இருக்கிருர். உங்களை மட்டும் தன் கைகளினுலேயே தயாரித்திருக்கிருர். இதுவே நான் அறிந்தது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனுடைய காட்சியைப் பெற்ற பிறகு ஒருவர் ஆறு சக்திகளைப் பெறுவதாக ஹாஸ்ரா கூறுகிருன்."

ம: "உண்மையான பக்தியைத் தேடுபவர்கள் இறைவ னின் செல்வங்களை விரும்புவதில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஹாஸ்ரா முற்பிறவியில் ஏழையாகப் பிறந்திருப்பான் போலிருக்கிறது. அதனுல்தான் இறைவனின் செல்வங்களைக் காண இவ்வளவு ஏங்குகிருன். கோயில் சமையல்காரர்களிடம் நான் என்ன பேசுகிறேன் என்பதை அறிய ஆவலுடையவனுக இருக்கிருன். 'நீ இந்தச் சமையல் காரனிடம் எதையும் கேட்க வேண்டியதில்லை. நானே கோயில் அதிகாரிகளிடம் பேசி உனக்கு வேண்டிய வசதிகளையெல் லாம் செய்துத் தரச் சொல்லுகிறேன்' என்று கூறுகிருன்." (ம- இதைக் கேட்டுப் பெரிதாகச் சிரித்தார்.)

குருதேவரும் சிரித்துக் கொண்டே, "இப்படியெல்லாம் அவன் என்னிடம் பேசுகிருன். நான் ஒன்றும் சொல்வதில்லை."

ம: "அன்பிற்காகவே அன்பு செய்யும் பக்தன் இறைவ னின் செல்வத்தைக் காண விரும்புவதில்லை என்று நீங்கள் பல முறை கூறியிருக்கிறீர்கள். உண்மையான பக்தன் கடவுளைக்

கோபாலனைப் பார்க்க விரும்புகிறான். முதலில் கடவுள் ஒரு காந்தக் கல், பக்தன் ஊசி. ஆனால் முடிவில் பக்தன் காந்தக் கல்லாகவும் இறைவன் ஊசியாகவும் மாறி விடுகின்றனர். அதாவது பக்தனிடம் பகவான் சிறியவராக ஆகி விடுகிறார்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆமாம்! உதயமாகும் போது இருக்கும் சூரியனின் நிலையைப் போன்றது இது. அப்பொழுது சூரியனை வெகு சுலபமாகப் பார்க்கலாம். கண் கூசுவதில்லை. கூறப் போனால் இனிமையாக இருக்கும். இறைவன் தன் பக்தனுக்காக இனியவனாகி விடுகிறான். தன் சக்திகளைக் களைந்து விட்டு அவன் முன் தோன்றுகிறான்."

சிறிது நேரம் இருவரும் மௌனமாக இருந்தனர்.

ம : "இக்காட்சிகள் ஏன் உண்மையாக இருக்கக் கூடாது என்று நினைக்கிறேன். இந்தக் காட்சிகள் பொய்யாக இருக்குமானால், இந்த உலகத்தில் உள்ள மற்ற எல்லாமே பொய்தான். ஏனென்றால் அறியக்கூடிய மனம் ஒன்றுதானே. காட்சிகள் எல்லாம் தூய மனத்திலே தோன்றுகின்றன. சாதாரண உலகப் பொருட்களைச் சாதாரண மனம் காண்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நீ இப்பொழுது நிலையற்றவைகளைப் பற்றித் தெளிவாக அறிந்திருக்கிறாய் என்று நான் காண்கிறேன். ஹாஸ்ராவைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?"

ம : "அவர் ஒருமாதிரி. அவரைப்பற்றி எனக்குத் தெரியாது."

அதைக்கேட்டுக் குருதேவர் சிரித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நல்லது. நான் வேறு யாரோடாவது ஒத்திருக்கிறேனா? சொல் பார்க்கலாம்."

ம : "இல்லை, ஐயா!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஏதாவது பரமஹம்ஸர்களைப் போன்று!"

ம : "இல்லை; நீங்கள் ஈடு இணையற்றவர்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே) : "தெரிந்து கொள்ளவே முடியாத மரம் என்பதைப்பற்றி கேள்விப் பட்டிருக்கிறாயா?"

ம: "இல்லை ஐயா!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஒருவகையான மரம் இருக்கிறது. அதைப்பார்த்து என்ன மரம் என்று எவராலும் கூற முடிவதில்லை."

ம: "அதுபோல் உங்களையும் அறிந்து கொள்ளமுடியாது. உங்களை ஒருவன் எவ்வளவு தூரம் அறிந்து கொள்கிறானோ அவ்வளவு தூரத்திற்கு உயர்கிறான்."

ம– மௌனமாக எண்ணத்தொடங்கினர். 'காலையில் உதிக்கும் சூரியன்' 'அறிந்துகொள்ள முடியாத மரம்' என்றெல்லாம் குருதேவர் குறிப்பிடுகிறாரே! இதுவா அவதாரம்? இதுவா நரலீலை? குருதேவர் அவதார புருடரா? அதனால்தான் கோயிலின் மாடிமேல் நின்று கொண்டு, தனது தெய்வீகச் சீடர்களை, 'சீடர்களே, நீங்கள் எங்கு இருக்கிறீர்கள்? வாருங்கள்' என்று கூவி அழைத்தாரா?

### ஞாயிற்றுக்கிழமை, செப்டம்பர் 9, 1883

தட்சிணேசுவரம். குருதேவரின் அறை. குருதேவர் உட்கார்ந்து கொண்டிருந்தார். சிரித்த முகத்தோடு பக்தர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். பகல் உணவு முடிந்துவிட்டது. அப்போது நடுப்பகல் சுமார் ஒன்று அல்லது இரண்டு மணி இருக்கும். தரையில் ம–, ராக்கால், ரதன் முதலியோர் உட்கார்ந்திருந்தனர். ராம்லால், ராம்சட்டர்ஜி, ஹாஸ்ரா முதலியோர் இடையிடையே அறையின் குறுக்கே செல்வதும், சிறிது நேரம் அறையில் உட்காருவதுமாக இருந்தனர். ரதன் என்பவன் யதுமல்லிக்கின் தோட்டக்காரன். அவன் அடிக்கடி குருதேவரைப் பார்க்க வருவான். குருதேவரிடம் அவனுக்கு அளவு கடந்த பக்தி. யதுமல்லிக்கின் கல்கத்தாவிலுள்ள வீட்டில் நீலகண்டன் என்பவரது நாடகம் நடைபெறுவதாக இருந்தது. குருதேவர் அவனிடம் அதைப் பற்றிப் பேசினர்.

ரதன்: "நீங்கள் அதற்குக் கண்டிப்பாக வரவேண்டும். நாடகம் நடைபெறும் தேதியையும் குறிப்பிட்டிருக்கிறார்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நல்லது, எனக்கும் வர விருப்பம் தான். ஆஹா! ஆஹா! நீலகண்டன் எவ்வளவு பக்தியோடு பாடுகிறான்."

ஒரு பக்தர்: "ஆம் ஐயா"

ஸ்ரீராமகிருஷ்ணர் : (ரதனைப்பார்த்து) : "பாடும்போது அவனது கண்களில் நீர் வழிந்து ஓடுகிறது. நாடகத்திற்குப் பிறகு கல்கத்தாவிலேயே இரவைக் கழித்து விட்டு வரலாம் என்று எண்ணியிருக்கிறேன்."

ரதன் : "மிகவும் நல்லது. அப்படியே செய்யுங்கள்."

ராம்சட்டர்ஜி முதலியோர் யதுமல்லிக்கின் வீட்டிலே நடந்த திருட்டைப்பற்றி விசாரித்தனர்.

ரதன் : "யதுமல்லிக்கின் வீட்டிலுள்ள கோயிலிலிருந்து பொற்பாதுகை திருட்டுப் போய்விட்டது. அதனால் வீட்டில் ஒரே குழப்பம். திருடனைக்கண்டுபிடிக்க 'ஜாலத்தட்டு' மந்திரம் உபயோகிக்கப் போகிறார்களாம். எல்லோரும் ஓர் அறையில் உட்காரவேண்டும். திருடினவன் பக்கம் அந்தத்தட்டு நகருமாம்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே) : "தட்டு எப்படி நகரும்? தானாகவா?"

ரதன் : "இல்லை, ஒருவன் அதைத் தரையில் அழுத்திப் பிடித்துக் கொண்டு இருப்பான்."

ஒரு பக்தர்: "இது ஒருவகை வித்தை. கையில் ஏதோ தந்திரம் இருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "எந்தத் தந்திரத்தால் இறைவனை அடைய முடியுமோ அதுவே உண்மையான தந்திரம். எல்லா வித்தைகளையும் விட அதுவே உயர்ந்த வித்தை."

இவ்வாறு பேச்சு வார்த்தை நிகழ்ந்து கொண்டிருந்தபோது, சில கனவான்கள் அறைக்குள் நுழைந்து குருதேவரை வணங்கித் தரையில் அமர்ந்தனர். இவர்கள் தாந்திரீக மதப்படி 'பஞ்சமகார[1]சாதனை' புரிபவர்கள். இவர்களில் ஒருவரை ஏற்கனவே குருதேவர் அறிந்திருந்தார். குருதேவர் அவர்களின் மனநிலையை நன்கு அறிந்தவர். அவர்களில் ஒருவன் மதத்தின் பெயரால் சில பாவச் செயல்களைப் புரிந்துவருவதைக் குருதேவர் கேட்டிருந்தார். அவன் ஒரு பெரிய மனிதருடைய இறந்து போன சகோதரனின் மனைவியுடன் நட்புக் கொண்டு

1. பஞ்சமகாரம் என்பது மது, மாமிசம், மாது (பெண்), மைதுனம், முத்ரா என்பன.

அவளோடு தர்மத்தின் பெயரால் 'பஞ்சமகார' சாதனை பழகு கிறான் என்று கேள்விப்பட்டிருந்தார்.

குருதேவரின் மனோநிலையோ முற்றிலும் வேறானது. தன்னை இறைவனின் குழந்தையாக நினைக்கின்ற சந்தான பாவம் அவருடையது. ஒவ்வொரு பெண்ணையும் தாயாகவும், அன்னை பராசக்தியின் பல்வேறு வடிவங்களாகவும் காண்பவர். குருதேவர் பெண்களைத் தாயே என்று அழைப்பார். தீய பெண்களைக்கூடத் தாயே என்றுதான் அழைப்பார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் *(சிரித்தபடி)*: "அசலானந்தர் எங்கே? (ம- முதலியவர்களைப்பார்த்து) அசலானந்தரும் அவருடைய சீடர்களும் வேறான மனநிலை கொண்டவர்கள். என்னுடைய நிலையோ குழந்தையின் பாவம்."

வந்திருந்த மனிதர்கள் வாய் பேசாது இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஒவ்வொரு பெண்ணும் எனக்கு அன்னைதான். அசலானந்தர் அடிக்கடி இங்கு வந்து தங்குவார். அன்னைக்குப் படைத்த மதுவை அதிகம் அருந்துவார். பெண்களை அன்னையாகக் கருதும் எனது மனநிலையை அறிந்து அடிக்கடி என்னுடன் வாதம் செய்வார். 'நீ ஏன் தந்திர சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ள வீர பாவத்தை ஒப்புக் கொள்ள மறுக்கிறாய்? சிவபெருமான் தந்திர சாஸ்திரத்தைப் படைத்திருக்கிறார். அவருடைய கோட்பாடுகளை ஒப்புக் கொள்ள மாட்டாயா? தந்திரத்தில் எல்லாவிதமான சாதனை களும் சொல்லப்பட்டுள்ளன. வீரசாதனையும் அதில் அடங்கியது அல்லவா?' என்று அடிக்கடி வற்புறுத்துவார். நான் அவரிடம் 'ஐயா! எனக்கு அவைகளைப் பற்றி ஒன்றும் தெரியாது. அவைகள் எனக்குப் பிடிக்கவில்லை. எனக்கு எல்லாப் பெண்களும் அன்னையே' என்று கூறினேன்.

"அசலானந்தர் தன் குடும்பத்தைக் காப்பாற்றுவதில் அக்கறை காட்டுவதில்லை. என்னிடம், 'கடவுள் என் குழந்தை களைக் காப்பாற்றுவார். எல்லாம் இறைவன் விருப்பம்' என்று கூறினார். நான் அதைக் கேட்டு மௌனமாக இருந்தேன். இவ்வாறு குடும்பத்தைத் துறப்பது கூடப் பணம் சம்பாதிக்க ஒரு வழியோ என்னவோ, யாருக்குத் தெரியும்? இவர் எல்லா வற்றையும் துறந்து விட்டார் என்று மக்கள் நினைத்து இன்னும் அதிகமாகப் பணம் கொடுக்கலாம். வழக்கு மன்றத்தில் வழக்

கில் வெற்றியடைவது, பணம் சம்பாதிப்பது, அல்லது வழக்கில் வெற்றிபெற்றுப் பணம் சம்பாதிக்க மற்றவர்களுக்கு உதவுவது, இது போன்ற நோக்கோடு உலக விஷயங்களுக்காகச் சாதனை புரிவது மனிதனின் அற்பத்தனத்தையே காட்டுகிறது.

"உணவு, உடை, இருக்க வீடு, கடவுள் சேவை, சாதுக்கள் பக்தர்களுக்குச் சேவை, ஏழை எளியோர்களுக்கு உதவுவது முதலியவற்றுக்குப் பணம் தேவைதான். இந்த வழிகளில் பணத்தைச் செலவிடுவது நல்லது. இன்ப நுகர்ச்சிக்காகவோ, சுக போகத்துக்காகவோ, புகழைச் சம்பாதிக்கவோ பணத்தைப் பயன்படுத்தக் கூடாது."

"சித்திகளைப் பெறுவதற்காகவே சிலர் தந்திர சாதனைகள் பழகுகின்றனர். இவர்களுக்கு எவ்வளவு அற்பபுத்தி? கிருஷ்ணர் அர்ஜுனனிடம், 'நண்பனே! எட்டு சித்திகளில் ஏதேனும் ஒன்றை நீ அடைந்தால், நீ சிறிது அதிக சக்தியைப் பெற்றவனாக இருக்கலாம். ஆனால் என்னை நீ அடைய முடியாது. சித்திகள் இருக்கும் வரை மாயைகள் நீங்குவதில்லை. மாயையிலிருந்து "நான்" என்ற எண்ணம் எழுகிறது' என்று சொன்னார்.

"உடல், பணம் இவை நிலையற்றவை. இவைகளுக்காக ஏன் இவ்வளவு துன்பப்பட வேண்டும்? ஹடயோகிகளின் நிலையைப் பார். உடலை எப்படி நீண்ட நாட்கள் வைத்திருப்பது என்பதுதான் அவர்களுடைய ஒரே எண்ணம். அவர்களுக்குக் கடவுளைப் பற்றிய சிந்தனையே கிடையாது. குடலைக் கழுவித் தூய்மை செய்வது, பாலை ஒரு குழாயினால் குடிப்பது போன்ற பல யோகப் பயிற்சிகளை அவர்கள் பழகுகிறார்கள்.

"ஒரு முறை ஒரு பொற்கொல்லனுடைய நாக்கு உள்ளே மடித்துக் கொண்டு, மேல் அண்ணத்தில் சிக்கிக் கொண்டது. அதனால் அவன் சமாதியடைந்த மனிதனைப் போல் காணப்பட்டான். ஒரு மரம் போன்று நீண்ட நேரம் அசைவற்றுக் கிடந்தான். மக்கள் அவனை வழிபட ஆரம்பித்தனர். பல வருடங்களுக்குப் பிறகு திடீரென்று ஒரு நாள் அவனுடைய நாக்கு முன்பிருந்ததைப் போல சாதாரண நிலையை அடைந்து அவன் சுய நினைவு பெற்றான். பிறகு பழையபடி அதே தட்டான் தொழிலை நடத்தத்தொடங்கினான். (எல்லோரும் சிரிக்கின்றனர்) இவைகள் உடல் பற்றிய விஷயங்கள். இறைவனைப் பற்றிய எண்ணங்களுக்கும் இவைகளுக்கும் எந்தவிதத் தொடர்பும் கிடையாது.

"ஒருவன் எண்பத்திரெண்டு விதமான யோகப்பயிற்சிகளை அறிந்திருந்தான். அவன் யோக சமாதியைப் பற்றி எவ்வளவோ பேசுவான். ஆனால் அவன் மனம் பெண், பொன் ஆசைகளையே நாடியிருந்தது. ஒரு சமயம் இந்த மனிதன் பல ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள ஒரு பாங்குப் பத்திரத்தைப் பார்த்தான். ஆசையை அவனால் அடக்க முடியவில்லை. அதை அவன் விழுங்கிவிட்டான். யாருக்கும் தெரியாமல் பிறகு வெளியே எடுத்துக் கொள்ளலாம் என்று நினைத்தான். பிறகு அந்தப் பத்திரம் வெளியில் எடுக்கப்பட்டு. அவன் மூன்று வருடம் சிறைத் தண்டனை அனுபவிக்க நேர்ந்தது. அந்த மனிதன் ஆன்மிக வாழ்வில் மிகவும் முன்னேறி இருக்கிறான் என்றுதான் நான் கள்ளங் கபடமில்லாமல் நினைத்தேன். நிஜமாகவே சொல்கிறேன். நான் அப்படித்தான் நினைத்தேன்.

"ஒரு சமயம் சிந்தியைச் சேர்ந்த மகேந்திரபால் என்பவர் ராம்லாலிடம் ஐந்து ரூபாய் கொடுத்தார். அவர் சென்ற பிறகு ராம்லால் இந்த விஷயத்தை என்னிடம் கூறினான். 'யாருக்காக இதைக் கொடுத்தார்' என்று கேட்டபோது, 'உங்களுக்காக' என்றான். அதைக் கொண்டு பால்காரனுக்குத் தீர்க்க வேண்டிய பாக்கியைத் தீர்த்து விடலாம் என்று நினைத்தேன். அன்றிரவு தூங்கச் சென்றேன். தாங்க முடியாத வலி. படுக்கையில் இருந்து எழுந்து கொண்டேன். ஒரு பூனை எனது மார்பிற்குள் நகங்களால் பிராண்டுவது போல் வேதனை. நான் உடனே ராம்லாலிடம் சென்று, 'ராம்லால்! மகேந்திரன் யாருக்காக அந்தப் பணத்தைக் கொடுத்தார்? உன் சித்திக்காகவா?' என்று கேட்டேன். 'இல்லை. உங்களுக்குத்தான்' என்றான். 'அப்படியானால் அந்தப் பணத்தை அவரிடம் திருப்பிக் கொடுத்து விட்டு வா! இல்லாவிட்டால் என் மனம் நிம்மதியடையாது' என்று கூறினேன். மறுநாள் விடியற்காலையில் ராம்லால் அந்தப்பணத்தைத் திருப்பிக் கொடுத்த பிறகுதான் எனக்கு மன நிம்மதி ஏற்பட்டது.

"ஒரு சமயம் ஒரு பணக்காரன் என்னிடம் வந்து 'நான் வழக்கில் வெற்றி பெற வேண்டும் நீங்கள் ஏதாவது செய்யுங்கள். உங்களுடைய வலிமை எனக்குத் தெரியும். அதனால் தான் வந்தேன்' என்றான். 'நீ தவறான மனிதனிடம் வந்திருக்கிறாய். நீ தேடும் மனிதன் நானல்ல. அசலானந்தர் 'என்று பதில் கூறி அனுப்பினேன்.

"யாருக்கு இறைவனிடம் உண்மையான பக்தி இருக்கிறதோ அவன் உடல், பணம் முதலியவற்றைப் பொருட்

படுத்த மாட்டான். உடல் இன்பத்திற்காகவும், பெயர் புகழுக்காகவும், பணத்திற்காகவுமா ஒருவன் பாடுபடுவது? அப்படியானால் ஜபம், தவம் முதலியவற்றால் அடையும் பயன்தான் என்ன? உடல் இன்பம் முதலியவை நிலையற்றவை. சில நாட்கள் இருந்து மறையக் கூடியவை."

வந்திருந்த மனிதர்கள் விடை பெற்றுச் சென்றனர். அவர்கள் சென்றதும் குருதேவர் சிரித்துக் கொண்டே ம-விடம், "திருடர்கள் தெய்விக விஷயங்களைக் கேட்க மாட்டார்கள்" என்றார். (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வை நோக்கிச் சிரித்தபடியே) : "அது சரி! நரேந்திரனைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?"

ம-: "ஐயா! அவன் மிகவும் நல்லவன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆமாம், எவ்வளவு படித்திருக்கிறான்! அது போலவே எத்தகைய அறிவு! பாடுவது,மிருதங்கம் வாசிப்பது முதலியனவும் அவனுக்கு நன்றாகத் தெரியும். அவன் புலன்களை அடக்கியவன். திருமணமே செய்து கொள்ள மாட்டேன் என்கிறான்."

ம : "பாவி, பாவி என்று எவன் எண்ணுகிறானோ அவன் கடைசியில் பாவியாகவே ஆகிவிடுகிறான் என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். அத்தகையவனால் பிறகு வாழ்க்கையில் முன்னேற முடிவதில்லை! 'நான் இறைவனின் குழந்தை' என்பது போன்ற நம்பிக்கை இருந்தால் வெகு விரைவில் முன்னேறி விடலாம்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆமாம்! அதற்கு நம்பிக்கை வேண்டும்! கிருஷ்ணகிசோருக்கு எவ்வளவு அளவு கடந்த நம்பிக்கை! ஒருமுறை என்னிடம் 'நான் கடவுளின் பெயரை உச்சரிக்கிறேன். என்னைப் பாவம் எப்படித் தீண்ட முடியும்? நான் தூய்மையே வடிவானவன்' என்று கூறினார். ஹலதாரி ஒரு முறை 'அஜாமிளன் கூட நாராயணனைக் குறித்துத் தவம் புரியச் சென்றான். தவம் புரியாமல் இறைவனுடைய கருணையைப் பெற முடியுமா? ஒரே ஒரு முறை இறைவனுடைய பெயரைக் கூறுவதால் என்ன பயன் வந்து விடும்' என்று கூறினான். இதைக் கேட்ட கிஷோர் மிகுந்த கோபமடைந்தார். மறுநாள் கோவில் தோட்டத்திற்கு அவர் பூப்பறிக்க வந்த

பொழுது அங்கிருந்த ஹலதாரியைக் கண்ணெடுத்துக்கூடப் பார்க்கவில்லை.

"ஹலதாரியின் தந்தை ஒரு பெரிய பக்தர். ஆற்றில் குளித்து முடிந்ததும், இடுப்பளவு நீரில் நின்று கொண்டு மந்திரங்களை உச்சரிப்பார். 'ரக்த வர்ணம் சதுர்முகம்' என்று துதித்து தியானம் செய்யும் பொழுது அவர் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகும்.

"ஒரு நாள் கங்கைக்கரையில் அரியதாஹா என்ற இடத்திற்கு ஒரு சாது வந்திருந்தார். நாங்கள் அவரைப் பார்க்கப் போக வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தோம். அதைக் கேட்ட ஹலதாரி, 'பஞ்ச பூதத்தாலான அந்தக் கூட்டைப் பார்த்து என்ன பயன்?' என்றான். பிறகு இந்த வார்த்தைகளைக் கிருஷ்ணகிஷோர் கேள்விப்பட்ட பொழுது 'என்ன? ஒரு சாதுவைப் பார்ப்பதனால் என்ன பிரயோசனம் என்றா கூறினான்? எந்தச் சாதகன் கிருஷ்ணன் பெயரையோ அல்லது இராமன் பெயரையோ உச்சரிக்கிறானோ அவனுடைய உடல் தெய்வமயமாக மாறுகிறது. அவன் எல்லாவற்றையும் கடவுள் மயமாகவே காண்கிறான். ஒரு முறை கிருஷ்ண நாமத்தையோ, அல்லது ராமநாமத்தையோ கூறினால், அது நூறு சந்தியாவந்தனம் செய்த பலனைத் தரும்,' என்று கூறினார்.

"அவருடைய பிள்ளைகளில் ஒருவன் உயிர் பிரியும் பொழுது ராமநாமத்தை உச்சரித்தான். இதைக் கண்ட கிருஷ்ணகிஷோர், 'அவன் இறக்கும் பொழுது ராமநாமத்தைக் கூறியிருக்கிறான். அவனுக்கு இனி என்ன பயம்?' என்றார். எப்பொழுதாவது சில சமயம் மகனை இழந்த வேதனையில் அவர் அழுவார்.

"பிருந்தாவனத்தில் ஒரு முறை அவருக்குத் தாகம் எடுத்தது. கிணற்றின் அருகிலிருந்த சக்கிலியனைப் பார்த்து, 'நீ சிவநாமத்தைக் கூறு' என்றார். அவனும் சிவ நாமத்தை உச்சரித்துக் கொண்டே கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துக் கொடுத்தான். பெரும் ஆசாரக்காரரான அந்த பிராமணர் தண்ணீரைக் குடித்தார். கடவுள் நாமத்தில்தான் அவருக்கு எவ்வளவு உறுதியான நம்பிக்கை.

"மனிதனுக்கு இறைவனிடம் நம்பிக்கை கிடையாது. ஆனால் பூஜை, ஜபம், சந்தியா முதலியவற்றை மட்டும் செய்கிறான். இதனால் எந்தவிதப் பயனும் கிடையாது. நீ என்ன சொல்கிறாய்?"

ம: "ஆம், ஐயா!"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): "கங்கையில் குளிக்க வருபவர்களை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் ஓயாமல் வம்பளந்து கொண்டிருப்பார்கள். ஒரு விதவை, 'பாருங்கள் அம்மா, நான் இல்லாவிட்டால் அவர்களால் துர்க்கா பூஜை செய்ய முடியாது. சிலையை அமைப்பது கூட அவர்களால் இயலாது. வீட்டில் கல்யாணம் நடந்தால் நான்தான் எல்லாக் காரியங்களையும் கவனித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது' என்பாள்."

ம: "ஆம் சுவாமி! இவர்கள் மேல் குற்றம் சொல்லி என்ன பயன்? இவர்களால் வேறு என்ன செய்ய முடியும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): "வீட்டு மாடியில் உள்ள பூஜை அறையில் நாராயணனுக்கு வழிபாடு நடக்கிறது. வழிபாட்டிற்காக நைவேத்தியம் தயாரிப்பது, சந்தனம் அரைப்பது முதலியன நடந்து கொண்டிருக்கின்றன. ஆனால் அங்கே இறைவனைப் பற்றிய பேச்சே இல்லை. 'என்ன சமைப்பது? இன்று கடையில் நல்ல காய்கறி கிடைக்கவில்லையே? நேற்று அந்தக்காய் நன்றாக இருந்தது! அந்தப் பையன் என் ஒன்று விட்ட சகோதரன்—டேய்! உனக்கு அந்த வேலை இன்னும் இருக்கிறதா?—நான் எப்படியிருக்கிறேன் பார்! என் ஹரி இல்லையே!' என்பதான பேச்சுக்கள்தாம். பூஜை அறையில் பூஜை நடக்கும் பொழுது இப்படிப்பட்ட வீண் வம்புப் பேச்சுக்கள்."

ம: "ஆம் ஐயா, அநேகமாக இப்படித்தான். 'இறைவனிடம் ஆழ்ந்த அன்புள்ளவன் நீண்ட நாட்கள் பூஜை முதலியன செய்ய வேண்டுமா?' என்று நீங்கள் கூறுவீர்களே!"

குருதேவர் தனியாக ம-விடம் பேசலானார்.

ம: "இறைவனே எல்லாமாக ஆகியிருக்கிறார் என்றால் மனிதர்களிடம் ஏன் பலவிதமான வேற்றுமைகள் காணப்படுகின்றன?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவன் எங்கும் நிறைந்திருப்பவன். ஆனால் அவனுடைய சக்தியின் வெளிப்பாட்டில் வித்தியாசங்கள் உள்ளன. சில இடங்களில் வித்யா சக்தி; வேறு சில இடங்களில் அவித்யா சக்தி. சில இடங்களில் அதிக சக்தி; சில இடங்களில் குறைவான சக்தி. மனிதர்களுக்கிடையில்

ஏமாற்றுபவர்கள், நடத்தை கெட்டவர்கள், முதலியோர் இருப்பதைப் பார்த்ததில்லையா? மேலும் புலி போன்ற பயங்கர குணமுடையவர்களும் இருக்கின்றனர். இவர்களை நான் ஏமாற்றும் நாராயணன், புலி நாராயணன் என்று கூறுவேன்."

ம (சிரித்தபடி): "ஆம் இப்படிப்பட்டவர்களைத் தூரத்திலிருந்து வணங்க வேண்டும். அருகில் சென்று புலி நாராயணனை கட்டிக் கொண்டால் நம்மைத் தின்றுவிடும்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவனும், அவனுடைய சக்தியும் பிரம்மம், அதனுடைய சக்தி— இதைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை. நாரதர் இராமனைத் தோத்திரம் செய்து கொண்டே, 'ஏ ராமா! நீ சிவன், சீதா பார்வதி; நீ பிரம்மா, சீதை பிரம்மாணி; நீ இந்திரன், சீதை இந்திராணி; நீ நாராயணன், சீதை இலக்குமி; புருஷனாக இருப்பதெல்லாம் நீ, பெண்ணாக இருப்பதெல்லாம் சீதை' என்றார்."

ம : "அறிவுமயமான (சின்மய) வடிவம் என்றால் என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிது யோசித்து விட்டு மெதுவாகக் கூறினார் : "என்ன தெரியுமா? தண்ணீரைப் போன்றது. சாதனம் பழகினால் இதை அறியலாம்.

"நீ உருவக்கடவுளிடம் நம்பிக்கை வை. பிரம்மஞானம் அடைந்த பிறகுதான் பிரம்மமும், சக்தியும் ஒன்றே— இரண்டல்ல என்பது தெரியும். இந்த இரண்டிற்கும் எந்தவித வித்தியாசமும் இல்லை. நெருப்பும் அதன் சுடுகின்ற தன்மையும் போல. நெருப்பைப் பற்றி நினைத்தால் சூட்டையும் கூடவே நினைக்க வேண்டும். சூட்டை நினைத்தாலே நெருப்பையும் நினைக்க வேண்டும். மேலும் பிரம்மமும் அதன் சக்தியும், பாலும் அதன் வெண்மையும் போன்றது. தண்ணீரும் அதனுடைய நனைக்கும் சக்தியும் போன்றது.

"பிரம்மஞானத்தை அடுத்து மற்றொரு நிலை உள்ளது. ஞானத்தை அடுத்து விஞ்ஞானம். 'ஞானமடைந்துவிட்டேன்' என்ற எண்ணமுடையவனிடம் அஞ்ஞானம் இருக்கிறது. வசிஷ்டர் தமது நூறு பிள்ளைகள் மடிந்த பொழுது துயரத்தில் ஆழ்ந்தார். இதைக்கண்ட இலட்சுமணன், 'ஞானியாகிய இவர் ஏன் இப்படித் துன்பப்பட வேண்டும்' என்று இராமனிடம் கேட்டான். அதற்கு இராமன், 'தம்பி! ஞானம், அஞ்ஞானம் இரண்டையும் தாண்டிச்செல். யாரிடம் ஞானம் உள்ளதோ

அவனிடம் அஞ்ஞானமும் இருக்கும். காலில் முள் தைத்தால் அந்த முள்ளை மற்றொரு முள்ளால் எடுத்த பிறகு இரண்டாவது முள்ளையும் வீசி எறிய வேண்டும்' என்றார்.''

ம: ''ஞானம், அஞ்ஞானம் இவை இரண்டையும் எறிந்துவிட வேண்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம்! அதற்கு விஞ்ஞானம் அவசியம். யாரிடம் வெளிச்சம் பற்றிய ஞானம் இருக்கிறதோ, அவனிடம் இருளைப் பற்றிய ஞானமும் இருக்கும். யாருக்கு சுகத்தைப் பற்றிய அனுபவம் உள்ளதோ, அவனிடம் துக்கத்தைப் பற்றிய அனுபவமும் உண்டு. புண்ணியத்தைப் பற்றிய அறிவு யாருக்கு உண்டோ அவனுக்குப் பாவத்தைப் பற்றிய அறிவும் உண்டு. நல்லதை அறிபவன் கெட்டதையும் அறிகிறான். எவனிடம் சுத்தம் என்ற எண்ணம் உண்டோ, அவனிடம் அசுத்தம் என்ற எண்ணமும் உண்டு. 'நான்' என்ற அறிவு உடையவன் 'நீ' என்ற அறிவையும் உடையவனாக இருக்கிறான்.

''விஞ்ஞானம் என்பது என்ன? இறைவனைச் சிறப்பான முறையில் அறிவதுதான். விறகில் நெருப்பு இருக்கிறது. இதை அறிவது ஞானம். விறகிலுள்ள அந்த நெருப்பைப் பயன்படுத்திச் சோறு சமைத்து உண்டு, அதனால் வலிமை பெறுவது விஞ்ஞானம். இறைவன் இருக்கிறான் என்று நிச்சயமாக உணர்வது ஞானம். அவனுடன் பேசுவது, அவனால் ஆனந்தம் அடைவது—வாத்ஸல்ய, சக்ய, தாஸ்ய, மதுர பாவங்களில் இறைவனை வழிபட்டு ஆனந்திப்பது; இறைவனே உயிர்களாகவும், உலகமாகவும் ஆகி இருப்பதை உணர்வது விஞ்ஞானம்.

''ஒரு சாரார் கடவுளைக் காண்பது என்பதை ஒப்புக் கொள்வதில்லை. யார் யாரைப் பார்ப்பது? நான் என்னைப் பார்க்க முடியுமா? கருப்புத் தண்ணீர் இருக்கும் இடத்தைக் கப்பல் அடைந்தால் திரும்பி வராது. திரும்பி வந்து செய்தியைக் கூற அதனால் முடிவதில்லை என்று கூறுகிறார்கள்.''

ம: ''ஆமாம்! அப்படித்தான். கல்கத்தாவிலுள்ள மிக உயர்ந்த நினைவுச் சின்னத் தூணின் உச்சியை அடைந்த பிறகு கீழே என்ன இருக்கிறது என்பதே தெரியாமல் போகிறது. கீழே உள்ள வண்டி, மனிதன், கடைகள், வீடுகள் இவைகளைப்

பற்றிய எண்ணமே கிடையாது என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இப்போதெல்லாம் நான் காளி கோவிலுக்குப் போவதில்லை. இதனால் ஏதாவது கெடுதல் ஏற்படுமா? 'இவர் இன்னமும் காளி கோயிலுக்குப் போகிறாரே' என்று நரேந்திரன் கூறுகிறான்."

ம : "ஐயா, உங்களுக்குத் தினமும் புதிய புதிய நிலைகள் ஏற்படுகின்றன. உங்களுக்காவது, கெடுதலாவது!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : 'இருதயனின் உடல்நிலை மோசமாக இருக்கிறது. நீங்கள் இரண்டு வேட்டியும் இரண்டு சட்டைகளும் கொண்டு வந்து கொடுத்தால் நாங்கள் அதை அவனுக்கு அனுப்பிவைக்கிறோம்' என்று பக்தர்கள் சென்னிடம் கூறிய போது அவன் இரண்டு ரூபாய் மட்டும் கொடுத்தானாம். இதை என்னவென்று சொல்வது? அவனிடம் எவ்வளவு பணம் இருக்கிறது! ஆனாலும் பாரேன் இரண்டு ரூபாய் கொடுத் திருக்கிறான்!"

ம : "இறைவனைத் தேடுபவர்கள் அதாவது ஞானம் அடைவதையே நோக்கமாகக் கொண்டவர்கள் இப்படி நடந்து கொள்ள மாட்டார்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவன் மட்டுமே உண்மை. மற்றவை எல்லாம் உண்மையல்ல."

## சனிக்கிழமை, செப்டம்பர் 22, 1883

மாலைப் பொழுது. அதரினுடைய வீட்டிற்கு நல்வருகை தந்திருந்த குருதேவர் விருந்தினர் அறையில் அமர்ந்திருந்தார். ராக்கால், அதர், ம–, ஈசான்[1] முதலானவர்களும் அப்பகுதியைச் சேர்ந்த இன்னும் பல பக்தர்களும் உடன் இருந்தனர்.

1. ஈசானருடைய புதல்வர்கள் நன்கு படித்துப் பட்டம் பெற்றவர்கள். பிற்காலத்தில் மூத்த மகன் கோபாலன் மாவட்டத் துணை நீதிபதியாக வேலை பார்த்தார். இரண்டாவது மகன் சிரீஷ்சந்திரன் மாவட்ட நீதிபதியாக இருந்தார். மூன்றாவது மகன் சதீஷ், நரேந்திரனுடன் படித்து வந்தார். அவர் அற்புதமாக மிருதங்கம் வாசிப்பார். காஜிபூரில் வசித்து வந்தார். நரேந்திரர் இந்தியா முழுவதும் நடந்தே திரிந்த பொழுது இவருடைய வீட்டில் சில நாட்கள் தங்கியிருந்தார். அங்கிருந்த பொழுதுதான் பவஹாரி பாபாவைத் தரிசித்தார். நான்காவது புதல்வராகிய கிரிஷ் கல்கத்தா சர்வகலாசாலையில் துணைப்பதிவாளராக இருந்தார். ஈசானர் வாரி வாரி வழங்கியதன் பயனாகத் தன் வாழ்க்கையில் கடன்பட்டு மிகவும் துன்பத்திற்கு உள்ளானார். அவர் மறைவதற்குப் பல வருடங்களுக்கு முன்பே மனைவியை இழந்து விட்டார். ஈசானர் 'பாட்பாடா' என்னும் இடத்திற்கு அடிக்கடிச் சென்றுத் தங்கிச் சாதனம் புரிவது வழக்கம்.

குருதேவருக்கு ஈசான்முகோபாத்யாயரிடம் விருப்பமதிகம். ஈசான் அரசாங்க அலுவலகத்தில் ஒரு பெரிய கணக்கு மேற்பார்வையாளராக வேலை பார்த்தவர். வேலையிலிருந்து ஓய்வு பெற்றிருந்ததால் ஆன்மீகச் சாதனையிலும், தான தருமங்களைச் செய்வதிலும் நாட்களைக் கழித்து வந்தார். ஏழைகளுக்குப் பண உதவி செய்வதில் அவர் என்றும் தயங்கியதில்லை. அவர் அடிக்கடி குருதேவரைத் தரிசிக்க தட்சிணேசுவரம் வருவதுண்டு.

மெசுவாபஜார் என்ற இடத்திலுள்ள அவர் வீட்டிற்குக் குருதேவர் முன்பு ஒரு முறை சென்றிருந்தார். நாள் முழுவதும் அங்குத் தங்கியிருந்து நரேந்திரர் முதலிய பக்தர்களுடன் உணவு உட்கொண்டார்.

வருவதாக இருந்த நரேந்திரர் இம்முறையும் வரவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஈசானிடம்): "நீ அந்தக் கதையைச் சொல். ஒரு சிறுவன் கடிதம் அனுப்பினான் என்ற அந்தக் கதையைதான்."

ஈசான் (சிரித்தபடி): "இறைவனே நம்மைப் படைத்திருக்கிறார் என்பதை ஒரு சிறுவன் கேள்விப்பட்டான். அந்தச் சிறுவன் தன் பிரார்த்தனைகளை ஒரு கடிதத்தில் எழுதித் தபால் பெட்டியில் போட்டான். என்ன முகவரி எழுதியிருந்தான் தெரியுமா? 'சுவர்க்கம்' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடியே): "பார்த்தாயா! அந்தச் சிறுவனைப் போல நம்பிக்கைக் கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் ஆன்மீக வாழ்வில் வெற்றி பெறமுடியும். (ஈசானிடம்) செயல்களைத் துறப்பதுபற்றிக் கொஞ்சம் சொல்."

ஈசான்: "இறைவனது காட்சிக்குப் பின் சந்தியா முதலிய கிரியைகள் நழுவி விடுகின்றன. கங்கைக் கரையில் எல்லோரும் சந்தியாவந்தனம் செய்து கொண்டிருந்தனர். ஆனால் ஒருவன் மட்டும் செய்யாமல் இருந்தான். காரணம் கேட்டதற்கு, 'எனக்குத் தீட்டு ஏற்பட்டுள்ளது. ஒரு தீட்டு அல்ல. இறந்த தீட்டு; பிறந்த தீட்டு ஆகிய இரண்டு தீட்டுக்களும் எனக்கு ஏற்பட்டுள்ளன. அறியாமை என்ற தாய் இறந்து விட்டாள்; ஆத்மஞானம் என்ற குழந்தை பிறந்திருக்கிறது,

அப்படி இருக்க நான் எப்படி சந்தியாவந்தனம் செய்ய முடியும்?' என்றான்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆத்மஞானம் ஏற்பட்டால் ஜாதி வித்தியாசம் எல்லாம் மறைந்து விடுகிறது. இதைப் பற்றியும் சொல்."

ஈசான் : "ஒருமுறை காசியில் சங்கராச்சாரியார் குளித்து விட்டுக் கங்கைக் கரையில் உள்ள படிக்கட்டுகள் வழியாக ஏறி வந்து கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு சண்டாளன் இரண்டு நாய்களைக் கையில் பிடித்துக்கொண்டு தன் எதிரே அருகாமையில் வந்துகொண்டிருந்ததைக் கண்ட சங்கரர் 'நீ என்னைத் தொட்டுவிட்டாய்!' என்றார். இதைக் கேட்ட அவன், 'வணக்கத்திற்குரியவரே! நான் உங்களைத் தொடவில்லை. நீங்களும் என்னைத் தொடவில்லை. ஆன்மா எல்லோரிடமும் இருப்பது. நம்முள் இருந்து கொண்டு நம்மெல்லோரையும் செயல்படுத்துவது இதுவே. இது எதனாலும் மாசடைவதில்லை. கங்கை நீரில் பிரதிபலிக்கும் சூரியனுக்கும், சாராயத்தில் பிரதிபலிக்கும் சூரியனுக்கும் வேறுபாடு உண்டா?' என்று கேட்டான்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி) : "சர்வசமய சமரசம், எல்லா மதத்தின் மூலமும் இறைவனை அடைதல். இவைகளைப் பற்றியும் விளக்கு."

ஈசான் (சிரித்தபடியே) : "அரி, அரன் என்ற இரண்டு சொற்களும் ஒரே எழுத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளன. வித்தியாசமெல்லாம் அதனுடன் வந்து சேரும் மற்ற எழுத்துக்களில் தான். உண்மையில் 'அரியே தான் அரன்.' இறைவனிடம் நம்பிக்கை இருந்தால் போதும். எந்தக் கடவுளை வழிபட்டால் என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடியே) : "சாதுவின் இருதயம் எல்லாவற்றையும் விடப் பெரியது என்பதைப் பற்றிக் கூறு."

ஈசான் (சிரித்தவாறே) : "பூமி எல்லாவற்றையும் விடப் பெரியது. ஆனால் அதைவிடப் பெரியது கடல். அதையும் விடப் பெரியது ஆகாயம். ஆனால் விஷ்ணு தனது ஒரு காலால் பூமி, ஆகாயம், பாதாளம் ஆகிய மூன்று உலகங்களையும் அளந்தார். அந்த விஷ்ணுவின் பாதமோ சாதுவின் இருதயத்தில் குடி கொண்டிருப்பது. ஆகவேதான் சாதுவின் இருதயம் எல்லாவற்றையும் விடப் பெரியது."

இவ்வார்த்தைகளைக் கேட்டு பக்தர்கள் மகிழ்ச்சி அடைந்தனர். ஈசான் பாட்பாடாவில் தனிமையில் இருந்து காயத்ரி புரச்சரணம் செய்ய நிச்சயித்திருந்தார். அதாவது காயத்ரியின் மூலம் பிரம்மத்தை உபாசனை செய்வது. பொருட்பற்று அடியோடு மறையாவிட்டால் பிரம்மஞானம் உண்டாகாது என்று குருதேவர் கூறியிருந்தார். இந்தக் கலியுகத்தில் உயிர், உணவை மட்டுமே நாடியிருக்குமாதலால் பொருட்பற்று அடியோடு மறைவது அரிது. உருவம், சுவை, வாசனை, உணர்வு, ஓசை, ஆகிய இந்த விஷயங்களிலிருந்து மனிதன் தன் மனத்தை அப்புறப்படுத்துவது என்பது எப்பொழுதும் இயலாத காரியம். ஆகவே கலியுகத்திற்கு வைதிக மதம் உகந்ததல்ல. பிரம்மமே சக்தி. சக்தியை ஆராதித்தால் பிரம்மத்தை வழிபட்டது போல. படைத்தல், காத்தல் அழித்தல் ஆகிய மூன்று தொழில்களைப் புரியும் பொழுது, அந்தப் பரம்பொருளைச் சக்தி என்கிறோம். இரண்டும் வேறுபட்டவை அல்ல. ஒன்றுதான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஈசானிடம்): "இது அல்ல, இது அல்ல என்று கூறி நீ ஏன் நேரத்தை வீணாக்குகிறாய்? 'அது இருக்கிறது' என்பதைத் தவிர பிரம்மத்தைப் பற்றி வேறு ஒன்றும் கூற முடியாது.

"நாம் பார்ப்பது எதுவோ, நினைப்பது எதுவோ— இவை எல்லாமே ஆதிசக்தியின், சித்சக்தியின் வெளிப்பாடுகளே. படைப்பது, காப்பது, அழிப்பது, உயிர்கள், உலகம், தியானம், தியானிக்கப்படும் பொருள், பக்தி, பிரேமை, இவை அனைத்தும் இறைவனது சக்தியின் சிறப்புக்களே. பிரம்மமும் சக்தியும் வேறு வேறு அல்ல, ஒன்றே தான். இலங்கையிலிருந்து திரும்பிய அனுமன் இராமரைப் பார்த்து, 'ஏ ராமா! நீயே பிரம்மம், சீதை உனது சக்தி. உங்கள் இருவருக்கும் இடையில் எந்தவித வித்தியாசமும் இல்லை' என்று துதித்தான். பாம்பும் அதன் வளைந்து செல்லும் தன்மையும் போல பிரம்மமும் சக்தியும் ஒன்றுதான். பிரிக்க முடியாதவை. பாம்பை நினைத்தால் பாம்பின் வளைந்து செல்லும் தன்மையையும், பாம்பின் வளைந்து செல்லும் தன்மையை நினைத்தால் பாம்பையும் நினைக்க வேண்டியுள்ளது. பாலை நினைக்கும் போது கூடவே பாலின் வெண்மை நிறத்தை நினைக்கிறோம், வெண்மை நிறத்தை நினைத்தால் பாலை நினைக்காமல் இருக்க முடியாது. தண்ணீரின் ஈரத் தன்மையை நினைத்தால் தண்ணீரை நினைக்க வேண்டியுள்ளது. தண்ணீரை நினைத்தால் அதன் ஈரத்தன்மையை நினைக்கிறோம்.

''இந்தச் சக்தி அல்லது மகாமாயை பிரம்மத்தை மூடிக் கொண்டிருக்கிறது. இந்த மூடி அகன்று விட்டால், நான் எது வாக இருந்தேனோ, அதுவாக ஆகி விடுகிறேன். 'நானே நீ, நீயே நான்.'

''மாயை மூடியிருக்கும் வரை வேதாந்த வாதிகள் தங்களை ஸோஹம்—'நானே பிரம்மம்' என்று கூறிக்கொள்வது சரியல்ல. அலை, தண்ணீரின் ஒரு பகுதியே. தண்ணீர் அலையினுடைய தாகுமா? மாயையால் மூடப்பட்டிருக்கும் வரை இறைவனை 'அன்னையே, அன்னையே' என்று பிரார்த்திப்பது நல்லது. அன்னையிடம், 'நீ என் அன்னை; நான் உன்னுடைய குழந்தை. 'நீ எஜமான்; நான் உன் அடிமை' என்ற உறவைக் கொள்ள வேண்டும்: ஆண்டான், அடிமை உறவு மிகவும் நல்லது. இந்த அடிமை உறவில் இருந்துதான் மற்ற உறவுகள் பிறக்கின்றன. அதாவது சாந்தம், சக்யம் முதலான உறவுகள் பிறக்கின்றன. எஜமான் தனது வேலைக்காரனிடம் மகிழ்ச்சியடைந்தால்,'இங்கு வா. வந்து என் பக்கத்தில் உட்கார். நம் இருவருக்குமிடையே எந்த வித வித்தியாசமும் இல்லை' என்பார். அதே வேலையாள் தானாகவே தனது எஜமான் பக்கத்தில் உட்கார வந்தால் எஜமான் கோபமடைய மாட்டாரா?

''இறைவன் உலகில் அவதார புருஷனாக லீலை புரிவதே சித்சக்தியின்—அதாவது தெய்விக சக்தியின் வழியாகத் தான். எது பிரம்மமோ, அதுவேதான் இராமன், கிருஷ்ணன், சிவன்.''

ஈசான் : ''ஆம் சுவாமி! அரியும், அரனும் ஒரே எழுத்தின் அடிப்படையில் வந்தவை. வித்தியாசமெல்லாம் வந்து சேரும் எழுத்துக்களைப் பொறுத்துத்தான். (எல்லோரும்சிரிக்கின்றனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் : ''ஆமாம். இருப்பது எல்லாம் ஒன்றே ஒன்றுதான். இரண்டாவது என்பதில்லை. வேதத்தில் ஓம் சச்சிதானந்தப் பிரம்மமாகவும், புராணத்தில் ஓம் சச்சிதானந்தக் கிருஷ்ணனாகவும், தாந்திரீக சாஸ்திரத்தில் ஓம் சச்சிதானந்த சிவமாகவும் இருக்கிறது.

''சித்சக்தி, மகாமாயை வடிவில் எல்லோரையும் அறியாமை யில் ஆழ்த்தி வைத்திருக்கிறது. முனிவர்கள் இராமனைத் தரிசித்த பொழுது, 'ஏ ராமா! எங்களை உன்னுடைய உலகை மயக்கும் மாயையால் மயக்கி விடாதே' என்று மட்டும் வேண்டிக் கொண்டதாக அத்யாத்ம ராமாயணத்தில் கூறப் பட்டுள்ளது.''

ஈசான் : "இந்த மாயை என்பது என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பார்ப்பது, கேட்பது, நினைப்பது-இவை எல்லாமே மாயைதான். ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானால்,பெண்-பொன். இதுவே மாயையின் போர்வை.

"வெற்றிலை போட்டுக் கொள்வதிலோ, மீன் உண்பதிலோ, புகைபிடிப்பதிலோ, உடலில் எண்ணெய் தேய்த்துக் கொள்வதிலோ எந்தவிதத் தவறும் இல்லை. இவற்றை மட்டுமே துறப்பதால் ஒருவன் பெறுகின்ற லாபம் என்ன? பெண் பொன் ஆசைகளை அடியோடு விடுவதுதான் உண்மையான துறவு. இந்தத் துறவுதான் துறவுகளிலெல்லாம் உன்னதமானது. இல்லறவாழ்வில் இருப்பவர்கள் அடிக்கடி தனிமையில் சென்று சாதனை புரிந்து, இறைவனிடம் பக்தியை வளர்த்துக்கொண்டு, மனதில் இத்தகைய துறவினை மேற்கொள்ள வேண்டும். சந்நியாசிகள், உள்ளத்துறவு, வெளித்துறவு ஆகிய இருவகைத் துறவையும் மேற்கொள்ள வேண்டும்.

"நான் கேசவரிடம் ஒருமுறை, 'டைபாய்ட் காய்ச்சல் கண்டிருப்பவன் படுத்திருக்கும் அறையிலேயே தண்ணீர்க் குடமும் ஊறுகாய் ஜாடியும் இருந்தால் நோயாளி எப்படிக் குணமடைவான்? எனவே அடிக்கடி அத்தகைய பொருள்களிடமிருந்து விலகித் தனிமையை நாடிச் செல்ல வேண்டும்' என்று கூறினேன்."

ஒரு பக்தன் : "ஐயா, 'நவவிதான்' என்ற புதிய பிரம்ம சமாஜத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அது ஒரு கலப்படம் போன்று தோன்றுகிறதே?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சிலர் அதைக் காலத்துக்கேற்ப புதிதாக அமைந்தது என்கின்றனர். அதைக்கேட்டதும் எனக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. அப்படியானால் பிரம்ம சமாஜத்தார் கூறும் இறைவன் ஒரு புதிய கடவுளா? பிரம்ம சமாஜத்தினர் தங்கள் மதத்தை நவவிதான்[1] என்று கூறுகின்றனர். ஆறுதரிசனங்கள் பேசப்படுகின்றன. அது போல இதுவும் ஒன்றாக இருக்கலாம். யாருக்குத் தெரியும்?

"உருவமற்ற கடவுளை வணங்குபவர்கள் எங்கு தவறுகிறார்கள் தெரியுமா? 'உருவமற்ற இறைவன் மட்டுமே

---

[1] புதிய ஏற்பாடு.

உண்மை; மற்றதெல்லாம் பொய்' என்று கூறுகின்ற பொழுது தான். இறைவன் உருவம் உள்ளவனுகவும், உருவம் அற்றவனுகவும் இரண்டு வகையாக இருப்பதை நான் அறிவேன். இன்னும் பலவிதமாகவும் இருக்கக்கூடும். இறைவனுல் எல்லாமாகவும் இருக்கமுடியும்."

(ஈசானிடம்) "சித்சக்தியாகிய மகாமாயையே இருபத்தி நான்கு தத்துவங்களாக ஆகி உள்ளது. ஒரு நாள் தியானம் செய்து கொண்டிருக்கும் போது, என் மனம் ரசிக்கினுடைய வீட்டை நோக்கிச் சென்றது. அவன் கழிவிடத்தைக் கழுவும் தோட்டி. 'இங்கேயே இரு முட்டாளே' என்று நான் என் மனத்திடம் கூறினேன். அந்த வீட்டில் பலர் அங்கும் இங்கும் நடமாடிக் கொண்டிருந்தனர். 'அவர்கள் வெறும் உறைகள் தாம். அவர்களுக்குள் இருப்பதெல்லாம் அந்த ஒரே குண்டலினி சக்தி; அதே ஆறு சக்கரங்கள்' என்று அன்னை காட்டியருளினுள்.

"இந்த ஆத்யா சக்தி ஆணு, பெண்ணு? கமார்ப் புகூரில் நான் ஒரு சமயம் லாஹாவின் வீட்டில் நடந்த காளி பூஜையைக் காணச் சென்றேன். காளிஅன்னையின், சிலையின் கழுத்தில் ஒரு பூணூல் அணிவித்திருப்பதைக் கண்டேன். 'ஏன் அவர்கள் அன்னைக்குப் பூணூலை அணிவித்திருக்கிறுர்கள்?' என்று அங்கு வந்திருந்த ஒருவர் கேட்டார். அதற்கு வீட்டுச் சொந்தக்காரர், 'தம்பி! நீ அன்னையைச் சரியாகப் புரிந்து கொண்டு விட்டாய் என்று தோன்றுகிறது. எனக்கு பராசக்தி ஆணு, பெண்ணு என்பது இன்னும் தெரியவில்லை' என்றுர்.

"மகாமாயை சிவனை விழுங்கி 'விட்டதாகப் புராணத்தில் கூறப்படுகிறது. அவளுக்குள் இருந்த சிவன், ஆறு சக்கரங்கள் பற்றிய அறிவைப் பெற்றுர். பிறகு அவளுடைய தொடையிலிருந்து வெளியேவந்தார். அதன் பிறகுதான் அவர் தந்திர சாஸ்திரத்தைத் தோற்றுவித்தார். அத்தகைய மகா மாயையான சித்சக்தியிடம் நாம் சரணடைய வேண்டும்."

ஈசான்: "தயவு செய்து எங்கள் மீது தாங்கள் கருணை காட்ட வேண்டும்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: 'இறைவனே! உனது காட்சியை எங்களுக்குத் தந்து அருள்வாயாக' என்று கடவுளிடம் மனதைத் திறந்து வெள்ளை உள்ளத்தோடு பிரார்த்தனை செய்.

அவனிடம் அழு. 'இறைவா! எனது மனதைப் பெண்-பொன் இவைகளிடமிருந்து வெகு தூரத்தில் வைப்பதற்கு அருள் செய்வாயாக', என்று பிரார்த்தனை செய்! மேலும் **இறைவனுடைய நினைப்பாகிய கடலில் ஆழ்ந்து மூழ்குவாய்.** கடலில் இருந்து விலையுயர்ந்த முத்துக்களைப் பெறவேண்டு மானால், தண்ணீரின் மேல் மட்டத்தில் மிதந்தாலோ அல்லது நீந்தினாலோ போதுமானதாகுமா? அடிமட்டத்திற்கு மூழ்கிச் செல்லவேண்டும்.

"இதற்கு ஒருவன் குருவிடம் உபதேசம் பெறவேண்டும். ஒருவன் 'பாணலிங்கம்' என்ற சிவலிங்கத்தைத்தேடிக் கொண்டிருந்தான். அச்சிவலிங்கம் இருக்கும் இடத்தை அறிந்திருந்த ஒருவன் அவனிடம், 'நீ, குறிப்பிட்ட அந்த ஆற்றுக்குச் செல். அதன் கரையில் ஒரு பெரிய மரத்தைக் காண்பாய். அதற்கருகில் ஒரு குளம் இருக்கிறது. அந்தக் குளத்தில் குதித்து ஆழமான அதன் அடிமட்டத்திற்குச் செல். அங்கு அந்த லிங்கத்தைக் காண்பாய்' என்று கூறினான். அதுபோல குருவிடம் இறைவனை அடையும் மார்க்கத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்."

ஈசான் : "உண்மைதான் சுவாமி!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சச்சிதானந்தமே குருவடிவத்தில் வருகிறது. மந்திர தீட்சை தருகின்ற குருவைச் சாதாரண மனிதராக எண்ணக் கூடாது. அவரை ஈசுவரனாகவே, இறைவனின் பிரதிநிதியாகவே எண்ண வேண்டும். அப்பொழுதுதான் அவர் அளித்த மந்திரத்தில் நம்பிக்கை உண்டாகும். நம்பிக்கை ஏற்பட்டாலே எல்லாம் கிடைத்த மாதிரிதான். தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த ஏகலைவன் மண்ணினால் செய்த குரு துரோணாச்சாரியரின் சிலையின் முன் நின்றே எல்லா வில்வித்தைகளையும் கற்றுக்கொள்ளவில்லையா? மண்ணினாலான உருவத்தை உண்மையான குரு என்றே எண்ணி பூஜை செய்து வந்தான். அதுவே அவனை வில் வித்தையில் தேர்ச்சி பெற்றவனாக்கியது.

"நீ பிராம்மண பண்டிதர்களுடன் அதிகமாகக் கலந்து பழக வேண்டாம். அவர்களுடைய எண்ணங்களெல்லாம் எப்படிப் பணம் பெறுவது என்பதில்தான் இருக்கிறது.

"சில முக்கியமான பண்டிகைகளில் பிராமணப் பண்டிதர்கள் சில தோத்திரங்களைப் படிக்க வருவார்கள் சண்டியோ, வேறு எதெல்லாமோ பாராயணம் செய்வார்கள். புத்தகத்தை விரைவாக முடிப்பதற்காக, பாதிக்கு மேல் பக்கங்களைப் படிக்காமலேயே புரட்டி விடுவார்கள். (எல்லோரும் சிரிக்கின்றனர்).

"தன்னைச் சாகடித்துக் கொள்ள மிகச் சிறு கத்தியே போதும். மற்றவர்களைப் கொல்ல வேண்டுமென்றால், கத்தி, கேடயம் முதலிய எல்லா ஆயுதங்களும் வேண்டும். சாஸ்திரத்தின் நோக்கமும் இது போன்றதுதான்.

"ஒருவன் எல்லாவிதமான சாஸ்திரங்களையும் படிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. விவேகம் தோன்றாத போது பல சாஸ்திரங்களைப் படித்து என்ன பயன்? தத்துவ சாஸ்திரங்கள் ஆறையும் கற்று முடித்திருந்தாலும் என்ன பயன் விளையும்? தனிமையில் உள்ளமுருகி அவனுக்காக அழுது அழுது ஏங்கி அவனைக் கூப்பிடு. உனக்கு வேண்டியதை யெல்லாம் அவனாகவே தருவான்."

ஈசான் கங்கைக் கரையில் 'பாட்பாடா' என்ற பகுதியில் தனிமையில் சாதனம் பழக ஒரு தனி வீடு கட்டுகிறார் என்பதைக் குருதேவர் கேள்விப் பட்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஆவலுடன்): "வீடு கட்டி முடிந்து விட்டதா? இது பற்றிய விஷயத்தை மக்கள் அறியாமல் இருப் பதே நல்லது. சத்வ குணம் நிறைந்த பக்தர்கள், வீட்டின் ஒரு மூலையிலோ அல்லது காட்டிலோ, சில சமயம் கொசு வலைக்குள்ளோ உட்கார்ந்து கொண்டு பிறர் அறியாமல் தனியாகத் தியானம் செய்வர்."

ஈசான் ஹாஸ்ராவை அடிக்கடி பாட்பாடாவிற்கு அழைத்துச் செல்வதுண்டு. வெளி ஆசாரத்தில் நாட்ட முடையவர் ஹாஸ்ரா. ஆகையால் குருதேவர் பல தடவை ஈசானை எச்சரித்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஈசானைப் பார்த்து): "ஒன்று கூறுகிறேன் கேள். ஆசாரத்தில் அதிக நாட்டம் கொள்ளாதே. ஒரு முறை ஒரு சாதுவிற்குத் தாகம் அதிகமாக இருந்தது. அவ்வழியாகப் போய்க்கொண்டிருந்த சக்கிலியன் ஒருவன் தன் தோல் பையிலுள்ள தண்ணீரை அந்தச் சாதுவிற்குக் கொடுக்க முன்

வந்தான். 'உனது பை சுத்தமானதா?' என்று சாது அவனைக் கேட்டார். அதற்கு அவன், 'மகராஜ்! எனது தோல் பை மிகவும் சுத்தமானது. ஆனால் உங்கள் தோல் பையில் பல துர்நாற்றப் பொருட்களான மலம், மூத்திரம் முதலியவை இருக்கின்றனவே! என்னுடைய பையிலிருந்து தண்ணீர் குடித்தால் ஒன்றும் குடிமுழுகிப் போய் விடாது' என்றான்! அவன் தோல்பை என்றது உடல், வயிறு முதலியவற்றை.

"இறைவனது பெயரில் நம்பிக்கை வை. அப்படி நம்பிக்கை வைத்தால் புனிதத்தலங்களுக்குக் கூடப் போக வேண்டிய அவசியமில்லை."

தெய்விக எண்ணங்களில் மூழ்கியவராகக் குருதேவர் பாட ஆரம்பித்தார்.

அன்னை பெயர் நாவோத அந்திமத்தில் என்னுயிர்தான் அகலுமாயின்
சின்மயஞ்சார் கங்கையை கச்சிகாசி பிரபாசம் செல்வதேனோ?
... .... ...

ஈசான் இவைகளையெல்லாம் மௌனமாகக் கேட்ட வண்ணம் இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஈசானிடம்): இன்னமும் ஏதாவது சந்தேகம் இருந்தால் கேட்டுக்கொள்."

ஈசான்: "ஐயா! நம்பிக்கையைப் பற்றித் தாங்கள் தெளிவாக விளக்கிக் கூறியபோதே என் சந்தேகங்கள் எல்லாவற்றையும் போக்கி விட்டீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "திட நம்பிக்கையின் மூலம் இறைவனை அடைய முடியும். இறைவனைப் பற்றிய எல்லா விஷயங்களையும் மனதார நம்பினால் விரைவில் அவனை அடையலாம். தீனியை ஆராய்ந்து தின்னும் பசு பால் அதிகம் தருவதில்லை. கிடைத்ததை எல்லாம் உண்ணும் பசுவின் மடியில்தான், பால் அதிகமாகச் சுரக்கிறது.

"ராஜகிருஷ்ணரின் மகன் ஒரு சம்பவத்தை என்னிடம் கூறினான். 'உன்னுடைய இஷ்ட தெய்வத்தை இந்தச் செம்மறியாட்டிடம் நீ காண்பாய்' என்று ஓர் அசரீரி ஒருவனிடம் கூறியது. அதை அவன் அப்படியே நம்பினான். பிறகு இறைவன் எங்கும் உள்ளான் என்பதை அவன் அறிந்தான்.

"குரு தன் பக்தனிடம், 'இராமர் ஒருவரே எல்லோருடைய தேகத்திலும் வீற்றிருக்கிறார்' என்று கூறினார். இதைக் கேட்ட பக்தன் ஒருவன் அதை அப்படியே நம்பினான்! ஒரு நாய் ரொட்டித் துண்டைக் கௌவிக் கொண்டு ஓடியது. அதைக் கண்ட பக்தன் வெண்ணெய்க் கிண்ணமும் கையுமாக அதன் பின்னால் ஓடிக் கொண்டே, 'ஏ ராமா! கொஞ்சம் பொறு, ரொட்டியில் வெண்ணெய் தடவித் தருகிறேன்' என்றான்.

"கிருஷ்ணகிஷோருக்குத்தான் எவ்வளவு திட நம்பிக்கை! 'ஓம் கிருஷ்ண, ஓம் ராம் என்ற மந்திரங்களை உச்சரித்தால் கோடி சந்தியாவந்தனத்தின் பலன் ஏற்படுகிறது' என்று கூறுவார். பிறகு ரகசியமாக என்னிடம், 'எனக்குச் சந்தியாவந்தனம் முதலிய கிரியைகள் பிடிக்கவில்லை. இதை எவரிடமும் சொல்லாதே' என்பார்.

"எனக்கும் அப்படிப்பட்ட நிலை ஏற்பட்டதுண்டு. இறைவனே எல்லாமாகியுள்ளான் என்பதை அன்னை எனக்குக் காட்டியிருந்தாள். ஒரு நாள் நான் பைன் மரங்கள் உள்ள இடத்திலிருந்து பஞ்சவடியை நோக்கி வந்து கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு நாய் என்னைப் பின் தொடர்ந்தது. பஞ்சவடியின் அருகில் சிறிது நேரம் நின்றேன். அன்னை இந்த நாயின் மூலம் எனக்கு ஏதாவது தெரிவிக்கலாம் என்ற எண்ணம் மனத்தில் எழுந்தது!

"நீ கூறியது போல நம்பிக்கையால் எதையும் அடையலாம்."

ஈசான்: "ஆனால் நாங்கள் இல்லறத்தார்கள் ஆயிற்றே."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அதனால் என்ன? இறைவனுடைய கருணையினால் நடக்க முடியாததும் நடந்தேறுகிறது. இராமப் பிரசாதர் ஒரு பாட்டில் 'இந்த உலகம் ஒரு கற்பனைத் தோற்றம்' என்று பாடினார். இதற்குப் பதிலளிப்பது போல மற்றொருவர் இன்னொரு பாட்டுப் பாடினார்.

இந்த உலகம் ஒரு விளையாட்டு மாளிகை
நான் உண்டு உறங்கிக் களிக்கிறேன்.
சக்தி வாய்ந்த ராஜா ஜனகர்—இவ்வுலகிலும்
அவ்வுலகிலும் என்ன குறையிருந்தது அவருக்கு?
இப்பக்கம் அப்பக்கம் இரண்டையும் வைத்து
நிரம்பிய கோப்பையிலிருந்து பாலுண்டார்.

"ஒருவன் முதலில் தனிமையில் தங்கி சாதனம் பழகி இறைவனது காட்சியைப் பெற்ற பிறகு வாழ்க்கையில் தங்கினல் 'ஜனகராஜா' வைப் போல் வாழலாம். அப்படி இல்லையென்ருல் அவன் சாதிப்பதுதான் என்ன?

"சிவனைப் பார்! கார்த்திகேயர், கணேசர், இலட்சுமி, சரஸ்வதி இவர்கள் எல்லோரும் அவருடன் இருக்கின்றனர். இத்தனைப் பேரோடு இருந்தாலும் அவர் சில சமயம் சமாதியில் மூழ்கிக் கிடக்கிருர். வேறு சில சமயம் 'ராம்', 'ராம்' என்று கூறி நடனமாடிக் கொண்டிருக்கிருர்."

---

# 14

# வைணவர்களுக்கும், பிரம்மசமாஜத்தவர்களுக்கும் அறிவுரை

**ஞாயிற்றுக்கிழமை, செப்டம்பர் 23, 1883**

தட்சிணேசுவரத்தில் குருதேவர் தம் அறையில் ராக்கால், -, ராம் மற்றும் பல பக்தர்களுடன் வீற்றிருந்தார். ஹாஸ்ரா வெளித் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

நித்திய கோபால், தாரக் முதலியோர், பக்தர் மினுடைய வீட்டில் தங்கியிருந்தனர். இராம் அவர்களை குந்த கவனத்துடன் பார்த்துக்கொண்டார். சில சமயம் க்கால், அதர்சென் வீட்டிற்குச் சென்று தங்குவதுண்டு. த்தியகோபால் எப்பொழுதும் தெய்விக உணர்வுப் பெருக்கில் ழ்கியிருப்பார்.

தாரக்கும் உள்நோக்கிய பார்வையுடன் இருப்பார். இவர் ல நாட்களாக யாருடனும் பேசுவதில்லை. குருதேவர் ரேந்திரனைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஒரு பக்தரிடம்): "நரேந்திரன் ப்போதெல்லாம் உன்னையும் விரும்புவதில்லை. (ம-விடம்) ன்று என்னைப் பார்ப்பதற்கு அதரின் வீட்டிற்கு அவன் ஏன் ரவில்லை?

"எத்தனைத் திறமைகள் அவனிடம் இருக்கின்றன! பாடுதல், சைக்கருவிகளை வாசித்தல், படிப்பு, பேச்சு எல்லாவற்றிலும் றமைசாலி அவன். சில நாட்களுக்கு முன் அவன் ங்கிருந்து கேப்டனின் வண்டியில் வீட்டிற்குத் திரும்பிச் -ன்றான். கேப்டன், நரேந்திரனைத் தமது அருகில் அமரும்படி ப்வளவோ கேட்டுக் கொண்டார். அவன் இசையவே ல்லை. எதிர்ப்புறமாக உட்கார்ந்து கொண்டான். கேப்டனைத் நம்பிக் கூடப் பார்க்கவில்லை.

"வெறும் அறிவு இருந்து என்ன பயன்? சாதனை புரிய வண்டும். அதுதான் முக்கியமானது. இந்தேஷ் என்ற ஊரில்

கௌரிபண்டிதர் என்று ஒரு மகாமேதை இருந்தார். அவர் பெரிய சாதகரும் கூட. தேவியைக் குறித்துச் சாதனைகள் செய்திருக்கிறார். அவருக்கு அடிக்கடி தெய்விக ஆவேசம் வருவதுண்டு. அவர் அன்னையைக் குறித்து, 'ஹே நிராலம்ப, லம்போதர ஜனனி, கம் யாமி சரணம்!' என்று உரத்த குரலில் பாடுவார். அப்போது அங்கிருக்கும் மற்ற பண்டிதர்கள் எல்லாம் அவர்முன் ஒரு சிறு புழுப்போல் ஆகி விடுவார்கள். என்னையும் அவர் பரவசப் படுத்தியிருக்கிறார். நான் உண்ணும் உணவைப் பார்த்துவிட்டு, 'நீ பைரவியின் உதவியால் சாதனை புரிகிறாயா?' என்று கேட்டார்.

"கர்த்தாபஜா சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஒருவன் நிராகாரம் என்பதை நீர்-ஆகாரம்[1] என்று பிரித்துப் பொருள் கூறினன்! இதைக் கேட்ட கௌரி பண்டிருக்கு வந்ததே கோபம். அவர் சக்தியை வழிபடுபவரல்லவா! முதலில் சிறிது குறுகிய மனப்பான்மை கொண்டவராக இருந்தார். அன்னையைத் தவிர வேறு எந்த தெய்வத்தையும் வணங்க மாட்டார். விஷ்ணுவுக்குப் பிரியமான துளசியை, தேவியின் வழிபாட்டிற்காகப் பறிக்கும் பொழுது, கைகளால் தொடாமல், இரண்டு குச்சிகளைக் கொண்டு குத்திப்பறிப்பார். (எல்லோரும் சிரித்தனர்). ஒரு சமயம் தம் ஊருக்குச் சென்று தங்கி விட்டு சில நாட்கள் கழித்துத் திரும்பினர். அதன் பிறகு இப்படி நடந்து கொள்வது நின்று போயிற்று. குறிப்பிடத் தக்க மாற்றம் அவரிடம் காணப் பட்டது.

"நான் ஒரு துளசிச் செடியைக் காளி கோயிலின் எதிரில் நட்டிருந்தேன். அது பட்டுப் போய் விட்டது. பலி பீடத்திற்கு அருகில் துளசி முளைப்பதில்லை என்று பிறகு கேள்விப் பட்டேன்.

"கௌரிபண்டிதர் சாஸ்திரங்களுக்கு அற்புதமாக விளக்கம் கூறுவார். 'ஏ' 'ஐ' என்ற சமஸ்கிருதச் சொற்களை விளக்கும் பொழுது, 'ஏ' என்றால் 'ஏ சீடனே!' என்றும், 'ஐ' என்றால் 'இது உனது இஷ்டதேவதை' என்றும் பொருள் கூறுவார். இராமாயணத்தில், கும்பகர்ணன் தமோகுணத்தையும், இராவணன் ரஜோகுணத்தையும், விபீஷணன் சத்துவ குணத்தையும் குறிக்கும் பாத்திரங்கள் என்பார். அதனால்தான் விபீஷணன் இராமனுடைய அன்பைப் பெற்றான் என்றும் கூறுவர்."

1. நிராகாரம் என்றால் உருவமற்றது என்பது பொருள். அதைத் தவறுதலாக, நீர்-ஆகாரம் அதாவது தண்ணீர் வடிவம் என்று பொருள் கூறினான்.

குருதேவர் மதிய உணவிற்குப் பிறகு சிறிது ஓய்வு எடுத்துக் 'ண்டார். அப்பொழுது ராம், தாரக், முதலியோர் கல்கத்தா ருந்து வந்தார்கள். அவர்கள் குருதேவருக்கு வணக்கம் த்தி விட்டுத் தரையில் உட்கார்ந்தார்கள். ம-வும் கே தரையில் உட்கார்ந்தார்.

ாம் : "நாங்கள் மிருதங்கம் வாசிக்கக் கற்று வருகிறோம்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராமிடம்) : "நித்திய கோபாலும் க் கொள்கிறானா?"

ாம் : "இல்லை, ஐயா! அவனுக்குக் கொஞ்சம்தான் க்கத் தெரியும்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "தாரக்?"

ாம் : "அவன் மிக நன்றாக வாசிக்கிறான்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அப்படியானால் அவனால் தலை ந்து, கண்களைப் பூமியில் பதித்து ஒரே மனதுடன் இருக்க ாது. மனம் ஒன்றில் அதிகம் ஈடுபடுமானால், இறைவ ம் அதிகமாக ஈடுபடுவது குறைந்து போகும்."

ாம் : "நான் இதைக் கற்றுக் கொள்வது சங்கீர்த்தனம் ம் போது உபயோகமாக இருக்குமே என்றுதான்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்) : "நீ பாட்டு கற்றுக் ள்வதாகக் கேள்விப்பட்டேனே!"

: "இல்லை ஐயா! எப்போதாவது கொஞ்சம் முணு ப்பேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "உனக்கு இந்தப் பாட்டு தெரியுமா? ந்தால் பாடு பார்க்கலாம். 'இனி ஞான விசாரத்தால் ப் பயனும் இல்லை. என்னைப் பித்தனாக்கி விடு தாயே!' ப் பாட்டு என் மனநிலையை அப்படியே பிரதிபலிக்கிறது."

ல மனிதர்களிடம் ஹாஸ்ரா காட்டும் வெறுப்புணர்ச்சி பற்றிப் பேச்சு திரும்பியது. குருதேவருக்கு ஹாஸ்ராவின் ப்போக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராம் முதலியோரிடம்) : "கமார்ப்புகூரி த பொழுது நான் ஒருவனுடைய வீட்டிற்கு அடிக்கடிச்

வேன். அந்த வீட்டுச் சிறுவர்களுக்கு அப்போது என்
ிருக்கும். அவர்கள் சில நாட்களுக்கு முன் இங்கு வந்திருந்
கள். இரண்டு மூன்று தினங்கள் தங்கி விட்டுச் சென்றார்கள்.
ர்களுடைய தாயார் ஹாஸ்ராவைப் போன்று எல்லோரை
வெறுப்பாள். அவளுடைய காலில் அடிபட்டது. கொஞ்ச
ில் கால் அழுகி விட்டது. அதிலிருந்து கிளம்பிய துர்நாற்றம்
றுக்க முடியாததாக இருந்தது. அதனால் யாரும் அந்த
டிற்குச் செல்ல மாட்டார்கள். ஆகவேதான், 'யாரையும்
றுக்காதே' என்று ஹாஸ்ராவிடம் கூறினேன்.''

மாலை நான்கு மணி ஆயிற்று. குருதேவர் பைன் மரங்கள்
ந்த இடத்திற்குச் சென்று, முகம்கழுவிக் கொண்டு அறைக்
திரும்பினார். அறையில் தென்கிழக்குத் தாழ்வாரத்தில்
க்காளம் விரிக்கப்பட்டிருந்தது. குருதேவர் அதன் மீது
கார்ந்தார். ராம் முதலியோர் அங்கு இருந்தனர். அதர்சென்
ற்கொல்லர் வகுப்பைச் சேர்ந்தவர். அதனால் ராக்கால்
ர் வீட்டில் தங்கி உணவு உட்கொள்வதைக் குறித்து ராம்
ஏதோ பேசத் தொடங்கினர். அதர் நல்ல பக்தர்! எனவே,
கால் அங்குத் தங்குவதில் எவ்விதத் தவறும் இல்லையென்ப
ப் பேச்சு வார்த்தை அடிபட்டது. பொற்கொல்லர்களிடம்
ள சில பழக்க வழக்கங்களைப் பற்றி ஒருவர் பொதுவாகப்
ஆரம்பித்தார்.

பொற்கொல்லர்கள் சப்பாத்தியை மிகவும் விரும்பிச் சாப்பிடு
கள். அத்துடன் பொரியல் இருக்க வேண்டிய கட்டாயம்
லை. அவர்கள் உயர்ந்த ரக அரிசி உணவைச் சாப்பிடு
கள். காலைச் சிற்றுண்டியின் போது சிறிது பழம் தின்றே
வேண்டும். மேல்நாட்டு 'ஆம்டா' என்ற பழத்தை
கம் விரும்புவார்கள். அன்பளிப்பாக வீட்டிற்கு மீனையோ,
ப்பையோ எவரேனும் அனுப்பினால் அவர்கள் தங்களு
ு உறவினர்களுக்குப் பிரித்துக் கொடுப்பார்கள். அந்த
வினர்கள் மறுபடியும் பங்கிட்டு மற்ற உறவினர்களுக்கு
ப்புவார்கள்.

'இப்படியாக, ஒருவருக்குக் கிடைத்த அன்பளிப்பு
ந்து அல்லது இருபது குடும்பங்களுக்குச் செல்லும்.
ு வேலைகள் அனைத்தையும் பெண்களே செய்து கொள்
கள். ஆனால் ஒரியா பிராமணனைக் கொண்டு சமையல்
ும் செய்து கொள்வார்கள், ஆகவே, சமையல்காரர்கள்
வீட்டில் ஒரு மணி நேரம், மற்றொரு வீட்டில் இரண்டு மணி

நரம் என்று வேலை செய்வதுண்டு. ஒருவன் நான்கைந்து டுகளில் கூடச் சமையல் செய்வான்."

இவைகளை எல்லாம் கேட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் சிரித்தார். ஜில். ஏதும் பேசவில்லை.

இரவு நெருங்கிக் கொண்டிருந்தது. வடமேற்குத் தாழ்வாரத் ல் நின்று கொண்டிருந்த குருதேவர் அப்படியே சமாதி நிலை ல் ஆழ்ந்திருந்தார், நீண்ட நேரத்திற்குப் பின்னர் அவரது னம் வெளி உணர்வைப் பெற்றது. கொஞ்ச நாட்களாக குரு தவர் அநேகமாக எப்பொழுதும் சமாதி நிலையிலேயே ருந்து வந்தார். தெய்விக எண்ணங்களினால், சிறிது தூண்டப் ட்டாலும், வெளி உணர்வை அவருடைய மனம் இழந்து டும். பக்தர்கள் வந்தால் அவர்களுடன் சிறிது பேசுவார். ற்ற சமயங்களில் எப்பொழுதும் அவருடைய மனம் உள் நாக்கியே சென்று கொண்டிருக்கும். இப்பொழுதெல்லாம் ஜை, ஜபம் முதலானவற்றைக் குருதேவரால் செய்ய முடிவ ல்லை.

சமாதி கலைந்தது. குருதேவர் நின்றவாறே அன்னையுடன் பசத் துவங்கினர்: "அன்னையே! பூஜை செய்ய முடியவில்லை. பம் செய்ய முடியவில்லை! அம்மா! என்னை ஓர் அசைவற்ற பாருளாக்கி விடாதே! ஆண்டான்-அடிமை நிலையில் என்னை வத்திரு! தாயே, என் பேச்சை நிறுத்தி விடாதே. என்னைப் பச விடு. உன் பெயரையும் புகழையும் நான் பாட வேண்டும். தற்காக எனக்குச் சிறிது உடல் வலிமையைக் கொடு. இங்கும் ங்கும் நடமாடும் சக்தியைக் கொடு. உன் பக்தர்கள் உன் ரப் பற்றிப் பாடும் இடங்களுக்குச் செல்லவும், அவர்கள் ங்கும் இடங்களுக்குப் போகவும் எனக்கு உடலில் வலிமை யக் கொடு!

"அம்மா! இன்று காலை உன் திருவடிகளில் மலர் தூவி ழிபட்டேன். என் மனம் மறுபடியும் பூஜையில் ஈடுபடு தைக் கண்டு, 'இது நல்லதுதான்' என்று எண்ணினேன். ப்படி இருக்க, இப்பொழுது மறுபடியும் என் மனம் ஏன் வறுவிதமாக எண்ணுகிறது? என்னை ஏன் ஓர் அசைவற்ற பாருளாக ஆக்குகிறாய்?"

வானவீதியில் இன்னமும் சந்திரன் வெளிக் கிளம்பவில்லை. ங்கும் இருள் சூழ்ந்திருந்தது. குருதேவர் தமக்குள் ழ்கியவண்ணம் இருந்தார். அறையில் கட்டிலின்மீது உட்

ந்தபடி இடைவிடாது அன்னையிடம் பேசிக் கொண்டிருந்
. பக்தர்களைக் குறித்து அன்னையிடம் பேசுவது போல்
ன்றியது. ஈசான் முகோபாத்யாயரின் விஷயமாகப் பேசு
ர் போலும்! ஈசான் பாட்பாடாவிற்குச் சென்று
த்ரீ புரச்சரணம் செய்வதாகக் கூறியிருந்தார். அதற்கு
தேவர் அவரிடம், 'கலியுகத்தில் வேத மதம் பயன்படாது'
று பதில் சொல்லியிருந்தார். கலியுகத்தில் உடல்
ாவையே நாடி நிற்கிறது. ஆயுளுக்கும் குறைவு ஏற்படு
து. உடற்பற்றும், விஷயப் பற்றும் அடியோடு மறை
ல்லை. ஆகவேதான், ஈசானரிடம் தாந்திரீக முறைப்படி
ி வழிபாட்டைக் கடைப்பிடிக்கும்படி உபதேசம் செய்
ந்தார். மேலும், ஈசானரிடம், 'பிரம்மம் எதுவோ அதுவே
ா பராசக்தி' என்றும் கூறியிருந்தார்.

குருதேவர் பரவச நிலையில் ஆழ்ந்தவராய்ப் பேசலானார்.
ரபடியும் காயத்ரீ புரச்சரணமா? இந்தச் சாதனையிலிருந்து
தச் சாதனைக்குத் தாவுவதா? யார் அவனுக்கு அதுபற்றி
தேசித்தார்கள்? அவன் தன் போக்கில் செய்கிறானே!
கட்டும். சிறிது புரச்சரணம் செய்யட்டும்."

(ம-விடம்) "நீ சொல். நான் இப்படியெல்லாம் பேசுவது
னையா அல்லது உண்மைதானா?"

குருதேவர் ஜகன்மாதாவுடன் இவ்வாறு பேசுவதை ம-
சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார். இறைவன்
க்கு மிக அருகில் இருக்கின்றான்—வெளியிலும், உள்ளேயும்
க்கிறான். வெகு அருகாமையில் இறைவன் இல்லாவிட்டால்
தேவர் இரகசியக் குரலில் எப்படி இறைவனோடு பேச
யும்?

## புதன்கிழமை, செப்டம்பர் 26, 1883

இன்று புதன்கிழமை. வார நாள். எனவே பக்தர்களின்
கை குறைவாக இருந்தது. ஞாயிற்றுக்கிழமைகளில்தான்
ர்கள் குருதேவரைத் தரிசிப்பதற்குப் பெருமளவில் வருவது
க்கம்.

ம- அன்று பிற்பகல் ஒன்றரை மணிக்குப் பிறகு
ளிப் பணியிலிருந்து விடுபட்டு மூன்று மணிக்குத் தட்சிணே
ர் காளி கோயிலில் குருதேவரின் அறைக்கு வந்து சேர்ந்
. அந்நாட்களில் ராக்கால், லாட்டு ஆகிய இருவரும்
நம்பாலும் குருதேவருடனேயே வசித்து வந்தனர்.

அன்று இரண்டு மணி நேரத்திற்கு முன்புதான் கிசோரியும் ட் சிணே சுவரம் வந்தார். அறையின் உட்புறத்தில் சிறிய கட் டின் மீது குருதேவர் அமர்ந்திருந்தார். ம- வந்ததும் தரையில் வீழ்ந்து குருதேவரை வணங்கினர். குருதேவர், ம-விடம் அவரது நலனை விசாரித்துத் தெரிந்து கொண்டார். பின்பு பேச்சு நரேந்திரரைப் பற்றித் திரும்பியது.

ஸ்ரீராமகிருஷ்ணர்(ம-விடம்): " நீ நரேந்திரனைப் பார்த்தாயா! (சிரித்தபடி) நரேந்திரன், 'இப்பவும்கூட இவர் காளி கோயி லுக்குப்போய் வருகிறாரே! எல்லாவற்றையும்நன்றாக உணர்ந்து கொண்ட பிறகு மறுபடியும் காளிகோயிலுக்குப் போக மாட் டார்!' என்று என்னைப் பற்றிச் சொல்கிறான்.

"நரேந்திரன் அடிக்கடி இங்கு வருகிறான் என்று அவனது வீட்டார் அவனைப் பெரிதும் கோபித்துக் கொள்கிறார்கள். அன்றொரு நாள் நரேந்திரன் வண்டி அமர்த்திக் கொண்டு இங்கு வந்திருந்தான். வண்டி வாடகையை, சுரேந்திரர் கொடுத்தார். அதற்காக நரேந்திரனின் அத்தை சுரேந்திரருடைய வீட்டுக்கே சென்று சண்டை போட ஆரம்பித்து விட்டார்."

நரேந்திரரைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த குருதேவர் தமது அறையின் வடகிழக்குத் தாழ்வாரத்திற்குச் சென்றார். அங்கு ஹாஸ்ரா, கிசோரி, ராக்கால் ஆகியோருடன் சில பக்தர்களும் அமர்ந்திருந்தார்கள். அப்போது பிற்பகல் நேர மாக இருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்) : "ஆமாம், இன்று நீ எப்படி இங்கே வந்தாய்? பள்ளிக்கூடம் இல்லையா?"

ம : "இன்று ஒன்றரை மணிக்கே பள்ளிக்கூடம் விட்டு விட்டார்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஏன் அவ்வளவு சீக்கிரம் விட்டு விட்டார்கள்?"

ம : "வித்யாசாகர் இன்று பள்ளியைப் பார்க்க வந்திருந் தார். பள்ளிக்கூடம் வித்யாசாகருக்குச் சொந்தமானது. எனவே அவர் வரும் சமயங்களில் மாணவர்களுக்கு அரைநாள் விடுமுறை விடப்படும்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : ''வித்யாசாகர் தாம் சொன்ன சொல்லைக் ப்பாற்றுவதில்லையா? 'உண்மை பேசுவது, பெண் ளைத் தாயாகக் கருதுவது ஆகிய இரண்டு பண்புகளையும் பற்றிருப்பவர்கள் பகவானை அடையாமல் போவார்களானல் ளசிதாசர் 'பொய் சொன்னவர் ஆவார்.' உண்மையை ழுவாமல் கடைப்பிடிப்பவன் நிச்சயம் பகவானை அடைவான். ன்றொரு நாள் வித்யாசாகர் இங்கே வருவதாகக் கூறினர். ஞல் வரவில்லை.

''பண்டிதருக்கும் சாதுவுக்கும் இடையில் பெரியதொரு வேறு டு இருக்கிறது. வெறும் பண்டிதராக மட்டும் இருப்பவரின் ளம் காமினி, காஞ்சனத்தில் பதிந்திருக்கும். சாதுவின் ளமோ ஹரியின் திருவடித் தாமரைகளில் ஆழ்ந்திருக்கும். ண்டிதர் சொல்வது ஒன்ருக இருக்கும்; செய்வது பருக இருக்கும். சாதுவோ சொல்லிலும் செயலிலும் ஒன்று பாலவே நடந்து கொள்வார். பகவானுடைய தாமரைத் நவடிகளில் மனத்தை வைத்திருக்கின்ற பக்தர்களுடைய ால், செயல், சிந்தனை ஆகிய எல்லாமே அலாதியானவை.

''காசியில் நான் நானக் சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஓர் ளம் சந்நியாசியைப் பார்த்தேன். அவருக்கு உன்னுடைய பதுதான் இருக்கும். என்னை அவர் அன்பான சாது, (பிரேமி து) என்று அழைத்தார். அவரது சம்பிரதாயத்தைச் சேர்ந்த ்களின் மடம் காசியில் இருக்கிறது. ஒரு நாள் அவர் என்னை ந்த மடத்திற்கு அழைத்துச் சென்ருர். மடத்தின் தலைவரான ழந்தைப் பார்த்தேன். அவர் ஒரு வீட்டின் எஜமானி ம்மாளைப் போலக் காணப்பட்டார். நான் அந்த இளம் நியாசியிடம், 'பகவானை அடைவதற்கு வழி என்ன?' என்று ளவினேன். அதற்கு அவர் 'கலியுகத்தில் நாரதர் காட்டிய ்திதான் பகவானை அடைவதற்கு உரிய வழி' என்று பதில் றினர். அவர் ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தார். டித்து முடிந்ததும், 'ஜலே விஷ்ணு; ஸ்தலே விஷ்ணு; விஷ்ணு: வத மஸ்தகே; ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்' [1] என்று உச்சரித் ர். எல்லாம் முடிந்ததும் அவர் 'சாந்தி: சாந்தி: ப்ரசாந்தி:' ன்றார்.

''ஒரு நாள் அவர் கீதை படித்துக் கொண்டிருந்தார். சந்நி ச தர்மத்திற்கு உரிய விதிமுறைகளைப் பின்பற்றுவதில் அவர்

1. நீரில் விஷ்ணு, நிலத்தில் விஷ்ணு, மலையுச்சியில் விஷ்ணு, உலகம் முழுதும் விஷ்ணுமயம்.

யும் கண்டிப்புடன் இருந்தார். உலகப் பற்றுக் கொண்ட பன் பார்க்கும்படிப் புனித நூல்களை அவர் படிக்க மாட் . என்னைப் பார்த்தபடிதான் கீதையைப் படித்தார். அப் து மதுர்பாபுவும் அங்கு என்னுடன் இருந்தார். மதுர்பாபு பக்கம் முதுகைக் காட்டியபடி உட்கார்ந்து கொண்டு ர் கீதை படித்தார். இந்த நானக் சம்பிரதாயத்தைச் சேர்ந்த தான் 'உபாயமாவது நாரதர் கூறிய பக்திமுறையேயாகும்' று கூறியவர்."

ம: "அந்த சாதுக்கள் வேதாந்திகள் அல்லவா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆம், அவர்கள் வேதாந்திகள் தாம். ந்தும் பக்தி மார்க்கத்தையும் ஏற்றுக் கொள்கிறார்கள். க் கலியுகத்தில் வேதங்களில் சொல்லப்பட்ட விதிமுறை எல்லாவற்றையும் முழு அளவில் அப்படியே பின்பற்று இயலாத காரியம். ஒருவர், 'நான் காயத்ரீ புரச்சரணம் யப் போகிறேன்' என்று கூறினார். அதற்கு நான் அவரி 'அதைத் தாந்திரிக முறையில் நீங்கள் ஏன் செய்யக் ாது? கலியுகத்தில் அது மிகவும் நல்ல பயனைத் தரும்' று தெரிவித்தேன்."

"வேதங்களில் விதித்துள்ள சடங்குகளைச் செய்வது மிக கடினம். அத்துடன் மக்களோ இக்காலத்தில் அடிமை ப்பான்மை கொண்டவர்களாக இருக்கிறார்கள்.[1]

"மற்றோர் உண்மையும் இருக்கிறது. 'பன்னிரெண்டு ாடுகள் ஒருவன் அடிமையாக இருந்து வேலை தால் அவன் அடிமையாகவே ஆகி விடுகிறான்' என்று ல்லப்படுகிறது. அவ்வளவு காலம் யாருக்குக் கீழ் அவன் ல செய்கிறானோ அந்த எஜமானனின் இயல்பு னுக்கும் வந்து விடுகிறது. எஜமானனுடைய ரஜோகுணம் மாகுணம், கொடூரமனப்பான்மை, ஆடம்பரத்தில் ப்பம் இவையெல்லாம் வேலைக்காரனுக்கும் வந்து கின்றன. ஒருவனுக்குக் கீழே வேலைசெய்து வரும்போதே விதம் ஏற்பட்டு விடுகிறது. எஜமானருக்கு அடிமையாக ப்பதோடு மட்டும் அவர்கள் நின்று விடுவதில்லை. அந்த தியோகக் காலம் முடிந்த பிறகும் கூட அவர்களிடமிருந்து ன்ஷன்' வாங்கி அனுபவிக்கிறார்கள்.

. அப்போது நம்மை ஆண்ட அன்னியர் ஆட்சியைக் குறிப்பதாகும்.

"ஒரு சமயம் வேதாந்தியான ஒரு சாது இங்கே வந்திருந் .அவர் மேகத்தைப் பார்த்தால் நடனமாடுவார். காற்றடித்து ழ பெய்தால் அவருக்குப் பெரிதும் மகிழ்ச்சி ஏற்படும். ர் தியானம் செய்து கொண்டிருக்கும் போது யாரேனும் ர் அருகில் சென்றால் அவருக்கு மிகவும் கோபம் வந்து ம். நான் ஒரு நாள் அவ்விதம் அவரது அருகில் சென்று .டேன். நான் சென்றதுஅவருக்குப் பெரிதும் வெறுப்பை ாடுபண்ணி விட்டது. அவர் எப்போதும் 'பிரம்ம சத்யம் த் மித்யை' என்று நித்திய அநித்திய பொருட்களைப் பற்றி ன விசாரம் செய்தபடி இருப்பார். மாயையினால் நாமரூபங் க் கொண்ட பலவற்றை நாம் பார்க்கிறோம் அல்லவா? தைக் குறிக்கும் வகையில் ஒரு சரவிளக்குச் சட்டத்திலிருந்து த்த ஒரு முப்பட்டைக் கண்ணாடியை அவர் வைத்துக் ாண்டு திரிவார். முப்பட்டைக் கண்ணாடியை வைத்துக் ாண்டு பார்த்தால் அதில் பல்வேறு நிறங்களைப் க்கலாம். ஆனால், உண்மையில் கண்ணாடிக்கு எந்த நிறமும் லை. அது போலவே உண்மையில் பிரம்மத்தைத் தவிர று எதுவுமேஇல்லை. ஆனால் மாயை காரணமாக, அகங்கார ணர்ச்சி இருப்பது காரணமாக, பல்வேறு பொருட்கள் இருப் துப் போன்ற ஒரு தோற்றம் நமக்கு ஏற்படுகிறது. மாயைக்கு பட்டு, பற்றுதல் ஏற்பட்டு விடக் கூடும் என்ற காரணத் ல் அந்த வேதாந்தியான சாது எந்தப் பொருளையுமே ஒரு வைக்குமேல் பார்க்க மாட்டார். அவர் நீராடிக் கொண் க்கும்போது பறவை பறப்பதைக் கண்டு ஞானவிசாரம் ப்வார். ஹலதாரி அவருடன் சமஸ்கிருத இலக்கணம் பற்றி பாதித்தார். அந்தச் சாதுவுக்கு சமஸ்கிருத இலக்கணமும் ரிந்திருந்தது.

"அவர் இங்கு மூன்று நாட்கள் தங்கியிருந்தார். ஒரு நாள் கைக் கரையின் அருகில் புல்லாங்குழலோசையைக் ட்டதும் அவர், 'இது போன்ற ஓசையைப் பிரம்மதரிசனம் ற்ற ஒருவர் கேட்பாரானால் சமாதி நிலையை அடைந்து வார்' என்று குறிப்பிட்டார்.

இவ்விதம் அந்த சாதுவைப்பற்றிச் சொல்லிக் கொண் ந்த குருதேவரிடமே பரமஹம்ச நிலையை எய்திய ஒருவர் படி இருப்பார் என்பதை பக்தர்கள் கண்கூடாகக் ்டனர். ஒரு குழந்தையைப் போல குருதேவர் நடந்து ாண்டார். முகத்தில் புன்சிரிப்பு தவழ்ந்தபடி இருந்தது. லில் துணி எதுவும் இல்லாமல் திகம்பரராகக் காட்சி

ரித்தார். கண்களில் ஆனந்தப் பரவசம் ததும்பிக் கொண் ருந்தது. சிறிய கட்டிலின் மீது திரும்பவும் அமர்ந்து காண்டு பேச ஆரம்பித்தார். அந்தப் பேச்சு பக்தர்களின் ள்ளத்தை உருக்குவதாக இருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "நான் தோதாபுரியிடம், தாந்தம் கற்றுக் கொண்டேன்—'பிரம்ம சத்யம், ஜகத் மையை!'. ஒரு ஜால வித்தைக்காரன் வந்து எத்தனையோ லங்களைக் காட்டுகிறான். மாஞ்செடியை வரவழைக்கிறான். ம்பழம் உட்படப் பலவற்றை அவன் வரவழைக்கிறான், னுல், இவை யாவும் வெறும் ஜால வித்தைகளேயாகும். ல வித்தைக்காரன் மட்டுமே உண்மை.

ம: "வாழ்க்கையே ஒரு நீண்ட உறக்கம் போலத் ான்றுகிறது. நாம் இவ்வுலகில் உள்ளதை உள்ளபடி ரிந்து கொள்ள முடிவதில்லை என்பது தெளிவாகிறது. மனத்தினுல் ஆகாயத்தின் இயல்பையே உள்ளவாறு ரிந்து கொள்ள முடிவதில்லையோ, அம்மனத்தினுல் தானே லகை நாம் காண்கிறோம். இந்த நிலையில் நமது பார்வை படிச் சரியாக இருக்க முடியும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆகாயத்தை நாம் சரியானபடி ப்பதில்லை தான். ஆகாயம் பூமியைத் தொடுவது போல் லையா நாம் பார்க்கிறோம்? அப்படி இருக்கும் போது மனிதன் படிச் சரியாகக் காண்பான்? மனிதனிடம் அவித்யை என்ற டிக் காய்ச்சல் அல்லவா இருக்கிறது?"

குருதேவர் இனிய குரலில் பாட ஆரம்பித்தார்—காய்ச்சலும் த்துவனும்.

> கடுங்காய்ச்சல் அடிக்கிறது அன்னையேயுன்
> கருணை தான் மருந்தாக அமைய வேண்டும்!
> ... ... ...

"ஆம். இது விஷக்காய்ச்சலே தான். லௌகிக மக்கள் ாடை போட்டுக் கொண்டு ஒருவரை ஒருவர் எப்படித் டிக் கொள்கிறார்கள் என்பதை நீங்கள் பார்த்ததில்லையா? ற்காக இப்படிச் சண்டையிடுகிறோம் என்பதே அவர் நக்கு சரியாகத் தெரிவதில்லை. அதுவும் எவ்வளவு தீவிரமாக ாடை போடுகிறார்கள்! 'நீ நாசமாப் போக! உன்னை என்ன ட்கிறேன் பார்!'என்றெல்லாம் பயமுறுத்தல்! என்ன கத்தல்! ான ஏச்சுப் பேச்சு!"

ம : "காலிப் பெட்டிக்குள் எதுவும் இல்லை. அப்படி இருந்தும் பணம் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டு அதை இரண்டு பேர் அப்படியும் இப்படியும் இழுக்கிறார்கள் என்று நான் கிசோரிடம் கூறினேன். உடல் தாங்கியிருப்பதுதான் இத்தனை விதமான தொந்தரவுகளுக்கும் மூலகாரணம். இதையெல்லாம் பார்த்துத்தான் ஞானிகள் தலையணையுறை போல இருக்கும் இந்த உடலை விட்டொழித்தால்தான் பிழைக்கலாம் என்று கருதுகிறார்கள்."

குருதேவர் ம-வுடன் காளி கோவிலை நோக்கிச் செல்லத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஏன் அவ்விதம் நினைக்க வேண்டும்? இந்தச் சம்சார வாழ்க்கை ஒரு மாயாஜாலக் குழி போல இருக்கலாம். ஆனால், அது இன்ப மாளிகை போன்றது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. உடல் இருப்பதனால் என்ன துன்பம்? உலக வாழ்க்கையை இன்ப மாளிகையாகவும் ஆக்கிக் கொள்ள முடியுமே."

ம : "தொடர்ச்சியான இன்பம்' என்பது இந்த உலகில் எங்கே காண முடிகிறது?

குருதேவர் : "ஆம். நீ சொல்வது உண்மை."

குருதேவர் பவதாரிணியின் சந்நிதிக்கு வந்து சேர்ந்தார். தேவியின் முன் தரையில் வீழ்ந்து வணங்கினார். ம-வும் அவ்விதமே வணங்கினார். பவதாரிணி தேவியின் சந்நிதிக்கு எதிரே இருக்கும் தாழ்ந்த படிக்கட்டின் மீது குருதேவர் ஜகன்மாதாவான தேவியைப் பார்த்தபடி அமர்ந்தார். அவர் இடுப்பில் சிவப்புக் கரை வேட்டி மட்டும் அணிந்திருந்தார். அந்த வேட்டியின் ஒரு பகுதியைத் தோளின் மீதும் முதுகின் மீதும் போட்டுக் கொண்டிருந்தார். குருதேவரின் அருகில் ம-உட்கார்ந்தார்.

ம : "அவ்விதம் தொடர்ந்த இன்பம் என்பது இல்லாதிருக்குமானால், ஒருவன் உடல் தரித்து ஏன் வாழ வேண்டும்? கர்மபயனை அனுபவிப்பதற்காகத் தான் நாம் உடல் எடுக்கிறோம் என்பது எனக்குப் புரிகிறது. ஆனால் எப்படிப்பட்ட வினைகளை இந்த உடல் இப்பொழுது செய்து கொண்டிருக்கிறது என்பது யாருக்குத் தெரியும்? துரதிருஷ்டம் என்னவென்றால் வாழ்க்கை

நாம் மரணத்திற்கொப்பான பலவித அவதிகளுக்கு பட வேண்டியிருக்கிறது."

நருதேவர் : "அவரை விதை, சாணக் குவியலில் வீழ்ந்தா அவரைச் செடியாகத்தான் முளைக்கிறது."

ம : "அப்படி இருந்தும் எட்டு விதமான பந்தங்கள் வேறு க்கின்றன."

நருதேவர் : "அவை எட்டு பந்தம் அல்ல, எட்டு விதப் ங்கள். அவை இருந்தால் என்ன? ஆண்டவனின் கிருபை ும் ஒருவனுக்கு இருக்குமானால் ஒரே விநாடியில் எட்டு ங்களும் அவனை விட்டுத் தொலைந்து போய் விடும். படித் தெரியுமா? ஆயிரம் ஆண்டுகளாக ஓர் அறையில் ர் சூழ்ந்திருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அந்த றக்குள் வெளிச்சம் வருமானால் அந்தக் கணத்திலேயே ர் நீங்கி விடுகிறது அல்லவா? சிறிது சிறிதாக இருள் நீங்கு ு என்பது இல்லையே?

'ஜால வித்தைக்காரன் வித்தை செய்வதை நீ பார்த்ததில் ?ஏராளமான முடிச்சுகளைக் கொண்ட ஒரு கயிற்றின் யை ஒரு தூணில் கட்டுகிறான். அந்தக் கயிற்றின் ரு முனையைத் தன் கையில் பிடித்துக் கொள்ளுகிறான். றை ஒரு உதறு உதறுகிறான். உடனே எல்லா முடிச்சுக் ம் அவிழ்ந்து விடுகின்றன. ஆனால், மற்றொருவன் அது ல முடிச்சுகளை அவிழ்த்து விடுவதற்கு மூச்சைப் பிடித்துக் ண்டு பிரம்மப் பிரயத்தனம் செய்தாலும் முடிவதில்லை. பின்கிருபை இருக்குமானால் எல்லா முடிச்சுகளும் ஒரு த்திலேயே அவிழ்ந்து போகும்.

'அது சரி, கேசவசேனர் இவ்வளவு தூரம் மாறி தற்குக் காரணம் என்ன என்பது உனக்குத் தெரியுமா? போதெல்லாம் அவர் இந்த இடத்திற்குச் சற்று அதிக வே வந்து போகிறார். இங்கிருந்து (என்னிடமிருந்து) எப்படி க்கம் செய்வது என்பதைக் கற்றுக் கொண்டார். ஒரு நாள் அவரிடம் 'சாதுக்களுக்கு இந்த முறையில் 'வணக்கம் யக் கூடாது' என்று பாடம் புகட்டினேன். ஒரு நாள் நான்

. கேசவரிடம் மேல்நாட்டுப் பழக்க வழக்கங்கள் இருந்ததால் நின்றவாறே மேல்நாட்டுப் பாணியில் மற்றவர்களுக்கு வணக்கம் தெரிவிப்பார். குருதேவரிடம் வந்த பிறகே தலை குனிந்து, காலைத் தொட்டு சாதுக்களுக்கு வணக்கம் தெரிவிப்பதைக் கற்றுக் கொண்டார்.

வண்டியை அமர்த்திக் கொண்டு கல்கத்தாவிற்கு ஈசானருடன் சென்றேன். ஈசானர் கேசவசேனரின் வரலாறு முழுவதையும் என்னிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொண்டார். "இந்த இடத்திலிருந்து (குருதேவரிடமிருந்து) எல்லாக் காசோலைகளையும் சரிபார்த்துப் பணம் பெறும் அனுமதியைப் பெற்றுக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால்தான் பாங்கில் பணம் பெற்றுக் கொள்ள முடியும்!' என்று ஹரீஷ் சரியாகச் சொன்னான்." (குருதேவர் சிரித்தார்.)

ம- வியப்புடன் குருதேவர் சொல்லுவதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார். சச்சிதானந்தக் காசோலையின் அனுமதியை குருவிடமிருந்து பெற வேண்டும் என்பதை ம- புரிந்து கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவன் இப்படிப்பட்டவன் என்று உன் சிற்றறிவால் விசாரம் செய்யாதே. அவனை யார் அறிந்துகொள்ள முடியும்? 'அவனுடைய ஒரு சிறு அம்சமே இந்தப்பிரம்மாண்டம் முழுவதும்' என்று தோதாபுரி சொல்ல நான் கேட்டிருக்கிறேன்.

"ஹாஸ்ராவிடம், விசாரம் செய்து கணக்கிடும் அறிவு மிகவும் அதிகமாக இருக்கிறது. அவர் 'பகவானின் இந்த அளவுப் பகுதி இந்தப் பிரபஞ்சமாக ஆகியிருக்கிறது. இன்னும் இவ்வளவு பகுதி அப்படியே மீதியிருக்கிறது' என்றெல்லாம் கணக்குப் போட்டுக் கூறுகிறார். அவர் இவ்வாறு சொல்வதைக் கேட்டு எனக்குத் தலையே சுற்ற ஆரம்பித்து விடுகிறது. 'எனக்கு ஒன்றுமே தெரியாது' என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஒரு சமயம் நான் பகவானை நல்லவர் என்று நினைக்கிறேன்; மற்றொரு சமயம் அதற்கு மாறாக நினைக்கிறேன். பகவானைப் பற்றி எனக்கு என்ன தெரியும்?"

ம: "ஆம், ஐயனே. பரமனைப்பற்றி யார்தான் முற்றும் தெரிந்துகொள்ள முடியும்? ஒவ்வொருவரும் தத்தம் அறிவாற்றலுக்கு ஏற்ப ஏதோ சிறிது தெரிந்துகொண்டு, தாங்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டுவிட்டதாக நினைக்கிறார்கள். ஓர் எறும்பு, சர்க்கரைக் குவியலுக்குச் சென்று சர்க்கரையில் ஒரு துணுக்கை உட்கொண்டு வயிற்றை நிரப்பிக் கொண்டதும், 'ஒரேயடியாக இந்தக் குவியல் முழுவதையும் வீட்டுக்கு எடுத்துச்சென்று விடுவேன்' என்று நினைத்துக்

ண்டதாகத் தாங்கள் முன்பு கூறியதைப் போன்றதுதான் ும்."

ரீராமகிருஷ்ணர் : "பகவானை யாரால் தெரிந்துகொள்ள ம்? நான் பகவானைப்பற்றி அறிவதற்கு முயற்சிகூடச் நதில்லை. நான் 'அம்மா' என்று மட்டும் அழைக்கிறேன். ளை என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளட்டும். மாதாவுக்கு விருப்பம் இருக்குமானால், தன்னை அறியும் ாகச் செய்தருள்வாள். அவளுக்கு விருப்பம் இல்லா ால் தன்னை அறியும்வண்ணம் செய்யமாட்டாள். பூனைக் யின் இயல்பைப் போன்றதே என் இயல்பு. பூனைக்குட்டி, வ், மியாவ்' என்று கத்தித் தாயை அழைக்கிறது. அதன் ாய்ப்பூனை அதை எங்கு வேண்டுமானாலும் கொண்டு வைக்கும். சிலவேளைகளில் அதை சமையலறையில் தும். சிலசமயங்களில் எஜமானனின் படுக்கை மீது தும். குழந்தை தாயை மிகவும் விரும்புகிறது. அந்தக் ைதக்கு அன்னையிடம் எவ்வளவு சொத்து இருக்கிறது து தெரியாது. அதைப்பற்றித் தெரிந்துகொள்ளவும் அது ப்படுவதில்லை. 'எனக்குத் தாய் ஒருத்தி இருக்கிறாள். கென்ன கவலை?' என்பது அதற்குத் தெரியும். ஒரு க்காரியின் குழந்தைக்குக் கூடத் தனக்கு அம்மா ீ இருக்கிறாள் என்பது தெரியும். வேலைக்காரியின் நதை எஜமானனுடைய குழந்தையோடு சண்டையிட போது, 'நான் என் அம்மாவிடம் சொல்லி விடுவேன். ு அம்மா இருக்கிறாள்' என்று சொல்லும். என் மன ம் குழந்தையின் மனநிலையைப் போன்றதுதான்."

வ்விதம் . பேசிக்கொண்டிருந்த ஸ்ரீராமகிருஷ்ணர் ாக் கவனித்துவந்த ம-வின் பக்கம் பார்த்தார். ன்று தம்மைக் குறிப்பிட்டுக்காட்டியபடி தமது மார்பில் ப வைத்து ம-விடம், 'இங்கே ஏதாவது இருக்க டும். அப்படித்தானே? என்ன சொல்கிறாய்?' என்று ினார்.

ஆச்சரியத்தோடு பேசாமல் குருதேவரைப் பார்த்துக் ாடிருந்தார். 'குருதேவரின் இதயத்தில் சாட்சாத் ைகயே வீற்றிருக்கிறாளா? அம்பிகையே மனித ின் நன்மைக்காக இப்படி உடல்தரித்துப் பகவான் ிருஷ்ணராக வந்திருக்கிறாளா? ஜீவர்களுக்கு மங்கள ரிக்க வந்திருக்கிறாளா?' என்று தனக்குள் சொல்லிக் ாடார்.

மாலை வந்தது. குருதேவர் காளிகோவிலில் படிக்கட்டின் ல் உட்கார்ந்து கொண்டு தேவியைத் துதிக்கலானார் :—

'அன்னையே! என் அன்னையே! ஓங்கார ரூபிணி அன்னையே!
இவர்கள் என்னென்னவோ கூறுகிறார்களே! ஒன்றையும் நான் அறியேன் :
எனக்கு எதுவும் தெரியாது; உன்னிடம் தஞ்சம் அடைந்தேன்.
எனக்கு உனது பாதத்தாமரையில் சுத்தபக்தி உண்டானால் மட்டும் போதும்.
உனது உலகை மயக்கும் மாயையில் என்னை மூழ்கடிக்காதே சரணம்! சரணம்!"

கோயிலில் மாலை ஆரதி முடிந்தது. குருதேவர் மீண்டும் அறையிலுள்ள கட்டிலில் வந்து அமர்ந்தார். ம- தரையில் .கார்ந்தார். ம-, முன்பெல்லாம் கேசவருடைய பிரம்ம ஜத்திற்குச் செல்வது வழக்கம். குருதேவரைத் தரிசிக்க ம்பித்ததிலிருந்து அங்குப் போவதை நிறுத்தியிருந்தார். தேவர் அன்னை பராசக்தியுடன் நேருக்கு நேர் பேசுவது, ங்கள் அனைத்தையும் மதித்துப் பாராட்டும் குருதேவருடைய சு, இறைவனிடம் குருதேவருக்கிருந்த ஆழ்ந்த ஈடுபாடு ற்றையெல்லாம் கண்டு குருதேவரிடம் ம- ஆழ்ந்த அன்பு ண்டுவிட்டார்.

இரண்டு வருடங்களாக ம-, குருதேவரிடம் வந்து ய்க் கொண்டிருந்தார். அதனால் குருதேவரின் கருணைக்கும் திரமாகிவிட்டார். அவருக்கும் மற்ற பக்தர்களுக்கும் தேவர் அடிக்கடி இறைவன் உருவமற்றவன், உருவ ளவனும் கூட என்று உபதேசிப்பார். அடியார்களுக்கு ள் புரியவே ஆண்டவன் உருவம் தாங்கியுள்ளார். வமற்ற கடவுளை வணங்குபவரிடம் அவர், "நீங்கள் எதை கிறீர்களோ அதையே வழிபடுங்கள் ஆனால் இறைவனுக்கு தயும் செய்யக்கூடிய ஆற்றல் உண்டு என்பதை மட்டும் து விடாதீர்கள். அவன் உருவமுள்ளவன். அதே த்தில் உருவமற்றவன். இன்னும் எவ்வளவோ விதங்களில் ன் இருக்கக் கூடும். யாரே அறிவர்!" என்று கூறுவார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "ஒரு கொள்கையை நீ க்கொண்டிருக்கிறாய். அது கடவுள் உருவமற்றவர் பது. அப்படித்தானே?"

ம: "ஆம் ஐயா. ஆனால், இறைவனால் எதையும் செய்ய யும். உருவமுடையவனாகவும் இருக்கலாம் என்பதை கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நல்லது. அவர் உணர்வு (சைதன்ய) வடிவில் இவ்வுலகில் அசையும் பொருள்களாகவும் அசைவற்ற பொருள்களாகவும் எல்லாவற்றிலும் பரவியுள்ளார்."

ம : "அவர் உயிருக்கும் உயிர் என்று நினைக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இப்பொழுது உன்னுடைய இந்த நிலையிலேயே நிலைத்திரு. விடாப்பிடியாக அடிக்கடி மாற்றுவது நல்லதல்ல. சாதனை செய்தால் நாளடைவில் உன் உயிர், அவனுடைய உயிர்தான் என்பதை அறிவாய். அவனே உணர்வு மயமானவன். அதாவது உயிருக்கும் உயிராயிருப்பவன் அவனே. அது சரி. உனக்குப் பணம், புகழ் இவற்றில் பற்று உண்டா?"

ம: "இல்லை. ஆனால் குடும்பத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு நிம்மதியாக இறைவனை வழிபடலாமே என்ற நோக்கத்தில் பணம் தேவைப் படுகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நியாயந்தான்."

ம : "அது பேராசையா? இல்லை என்று கருதுகிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆம். நியாயமான ஆசைதான். இல்லாவிட்டால் உன் குழந்தைகளை யார் கவனிப்பார்கள்? எனக்குக் கடமை இல்லை, செயல் இல்லை என்ற ஞானம் ஏற்பட்டுவிட்டால், பிறகு உனது குழந்தைகளின் கதி என்ன ஆகும்?"

ம : "கடமையைப் பற்றிய உணர்வு இருக்கும்போது ஞானம் உண்டாவதில்லை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். கடமை, கடும் வெப்பக்கதிர் வீசும் சூரியனுக்கு ஒப்பாகும்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இப்பொழுது உன் இந்த இயற்கையான நிலையிலேயே தங்கியிரு. கடமை எண்ணம் தானாகவே விலகினால் அது வேறு விஷயம்."

இருவரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தனர்.

ம : "சிறிது ஞானம் கிடைத்தவுடனேயே உலக வாழ்க்கையில் ஈடுபடுவதா! அது சுயநினைவுடன் இறப்பது போலாகும். காலராவில் இறப்பதுபோல."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ராம்! ராம்!"

இறக்கும்போது முழுநினைவு இருக்குமேயானால் விவரிக்க யாத வேதனை ஏற்படுகிறது. அது காலரா கண்டிருப் னுக்கு ஏற்படும் துன்பம்போல.[1] இதைத்தான் ம- கூறுகிறார் லும்! ஞானசாதனம் பழகுபவனுக்கு, அறியாமை நிறைந்த கவாழ்க்கை கொழுந்து விட்டெரியும் நெருப்பிற்குச் சமம். வேதான் குருதேவர் "ராம்! ராம்" என்றார் போலும்.

ம : "முற்றிலும் அறியாமையில் மூழ்கியுள்ளவர்கள் பாயிட் நோயாளியைப் போன்று சுயநினைவு அற்றவர்கள். க்கும் பொழுது அவர்கள் துன்பத்தை உணர்வதில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சற்று கவனி! பணம் இருந்தால் டும் போதுமா? ஜெயகோபால் சென்னிடம் எவ்வளவு ம் இருக்கிறது! இருந்தும் பிள்ளைகள் தன்னை மதிப்பதில்லை று அவர் கவலைப்படுகிறார்."

ம : "வாழ்க்கையில் வறுமை ஒன்றுதானா துன்பமளிப்பது? ம், வெகுளி முதலிய ஆறு விரோதிகள் உள்ளனவே. துடன் நோய், கவலை முதலானவைகளும் இருக்கின்றன."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பிறர் தம்மை மதிக்கவேண்டும் பதற்காகப் பெயர், புகழ் இவற்றில் கொள்ளும் கத்தின் விளைவுதான் இவை. என்னைப்பற்றி நீ என்ன க்கிறாய்?"

ம : "தூக்கத்திலிருந்து எழுந்தவன் எவ்வாறு தன்னை 5 உணர்கிறானோ, அவ்வாறு நீங்கள் இருக்கிறீர்கள். பொழுதும் இறைவனுடன் ஒன்றுபட்டிருக்கிறீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நீ என்னைக் கனவில் காண் ண்டா?"

ம : "ஆம். பலதடவைகள் கண்டிருக்கிறேன்."

---

காலரா கண்டிருப்பவனுக்கு இறக்கும் தறுவாயில் சுயநினைவு நன்றாக இருப்ப தால் அவன் தாங்கமுடியாத மரண வேதனையை அனுபவித்துக் கொண்டே இறக்கிறான். அதுபோல இந்த உலகம் மாயை, நிலையற்றது என்று அறிந்து கொண்ட அரைகுறை ஞானி உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பது மரண வேதனைக்கு ஒப்பாகும். அது அவனைச்சுட்டெரித்து விடும். ஆனால், சுயநினைவை முற்றிலும் இழந்து அதன் காரணமாக மரண வேதனையை உணராமலே இறந்து விடுகின்ற டைபாய்ட் நோயாளியைப் போன்றவர்கள் அறியாமையில் மூழ்கியுள்ள மக்கள். உலக வாழ்வு வேதனை தருவதாக அவர்கள் கருதுவதில்லை. இதைத்தான் ம- குறிப்பிட்டார் போலும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "எப்படி? ஏதாவது உபதேசம் செய்து கொண்டிருப்பது போலவா?"

ம-, ஒன்றும் கூறவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "எப்பொழுதாவது நான் உபதேசிப்பது போல நீ கனவு கண்டால் சச்சிதானந்தமே அவ்வாறு உபதேசிக்கிறது என்று அறிந்து கொள்."

தான் கனவில் கண்டதையெல்லாம், ம-, விளக்கமாகக் குருதேவரிடம் கூறினர். குருதேவர் கவனமாக எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இது மிகவும் நல்லது. இனி விசாரம் ஏதும் செய்யாதே. நீங்கள் சாக்தர்கள் ஆயிற்றே."

## புதன்கிழமை, அக்டோபர் 10, 1883

நவமி திதி. மாலை நேரம். அதர் தன்னுடைய வீட்டில் துர்கா பூஜைக்கு ஏற்பாடு செய்திருந்தார். அதை முன்னிட்டுக் குருதேவரைத் தன் வீட்டிற்கு அழைத்து வந்திருந்தார். குருதேவர் வீட்டுத் தாழ்வாரத்தில் நின்று கொண்டு தேவிக்கு நடக்கும் மாலை ஆரதியைப் பார்த்துக் கொண்டிருந்தார். குருதேவர் வந்த போது அதர் வீட்டில் பக்தர்கள் கூட்டம் நிரம்பியிருந்தது.

குருதேவருடன் பல பக்தர்கள் வந்திருந்தனர். அவர்களில் பலராமரின் தந்தை, பள்ளிக் கண்காணிப்பாளராக இருந்து சமீபத்தில் ஓய்வு பெற்ற அதரின் நண்பர் சாரதாபாபு முதலியோரும் இருந்தனர். அதர் அக்கம்பக்கத்திலுள்ளவர்களையும் இந்த வழிபாட்டிற்கு அழைத்திருந்தார்.

அன்னைக்கு நடைபெற்ற ஆரதியைப் பார்த்த பிறகு குருதேவர் பாவ நிலையில் ஆழ்ந்தவராய் பூஜை மண்டபத்தில் நின்று கொண்டிருந்தார். பரவச நிலையில் இருந்தபடியே அன்னையைத் துதித்துப் பாடலானர்.

அதர் ஓர் இல்லற பக்தர். உலகத் துன்பத்தால் எரிக்கப்பட்ட இல்லற பக்தர்கள் பலர் அங்குக் கூடி இருந்தனர். அவர்கள் அனைவருடைய நன்மைக்காகவும் குருதேவர் அன்னையைக் குறித்துப் பாடினர் போலும்:

ஆழத் துயரக் கடலில்நான் அமிழ்ந்து மடிந்து போகாமல்
வாழத் துணையாய்க் கரை சேர்த்து வைத்தருள் செய்வாய் என்தாயே!
நெஞ்சில் காலன் பயத்தாலே நிதமும் நடுங்கி வாழ்கின்றேன்
தஞ்சம் நீ தா இல்லையெனில் சடுதியில் அழிந்து போய்விடுவேன்.

உள்ளம் உருகித் தொழுகின்றேன் உடனே என்னைக் காப்பாற்று.
உள்ள உலகம் முழுமைக்கும் ஒருதா யாக உள்ளவள் நீ.
மனித குலத்தின் துணையாளுய்! மனம்கவர் ஜகன்மோ கினியாளுய்!
இனிய உயிரைப் பெற்றுள்ள எதற்கும் தாயாய் இருக்கின்ருய்!
பிருந்தா வனத்தில் விளையாடும் பேரெழில் ராதை நீதானே!
விரஜன் துணைக்குத் தோழியென விளங்கு பவளும் நீதானே!
கண்ண பெருமான் அவனுக்குக் காதல் துணைவி நீயன்ருே?
கண்ணன் லீலை அனைத்துக்கும் கைகொடுத் துதவும் உயிர்த்தோழி!
இமய மலையின் சிறுமகவு என்னும் புனிதக் கங்கைநதி
உமையவள் சக்தி உன்புகழை உலகம் பாடித் துதிக்கிறது.
கோவிந்தன் மனம் நிறைந்தவள் நீ, கோபிகை களிலே சிறந்தவள் நீ
தேவி ஆகச் சிவனுள்ளம் திகழும் தெய்வத் திருவும் நீ.
உருவம் பெறுவாய் சிலசமயம்! உருவிலி ஆவாய் சிலசமயம்!
நிறைந்தருள் புரியும் மாதேவன் நிரந்தர அன்புக் குரியவள் நீ.
உண்மையில் முடிவே இல்லாத உன்னரும் புகழைப் பூவுலகில்
எண்ணி உரைக்கும் திறனுடையார் எங்கும் எவரும் உண்டாமோ?

பின்னர் குருதேவர் அதரின் வீட்டில் இரண்டாவது ...யில் உள்ள விருந்தினர் அறைக்குச் சென்று உட்கார்ந்து ...ண்டார். அந்த அறையில் பூஜையைப் பார்க்க வந்த ...தர்கள் கூடியிருந்தனர். பலராமரின் தந்தையும், சாரதா ...வும் அருகில் உட்கார்ந்து கொண்டார்கள். குருதேவர் ...ணமும் பரவசநிலையிலேயே இருந்தார். அங்கு வந்தவர் ...ப் பார்த்து 'அன்பர்களே! நான் பிரசாதம் உட்கொண்டு ...டேன். நீங்கள் போய்ப் பிரசாதம் உண்டுவிட்டு ...ங்கள்'' என்ருர்.

...அதர் அளித்த நைவேத்தியம், பூஜை முதலியவைகளை ...றுக் கொண்டதற்கு அடையாளமாக அன்னை குருதேவர் ...ம், "நான் உணவு உட்கொண்டு விட்டேன், நீங்கள் ...ாதம் சாப்பிடுங்கள்" என்கிருள் போலும்!

பரவசநிலையில் குருதேவர் அன்னையை விளித்து, 'தாயே! ...ா உணவு உட்கொள்ளட்டுமா? இல்லை நீ உண்கிருயா? ...ன்னையே! நீயே காரணனந்தரூபிணி[1]' என்ருர்.

குருதேவர் தம்மையும், அன்னையையும் ஒன்ருக்கிக் காண் ...ா? அன்னையே புதல்வன் வடிவில் தோன்றி மக்களுக்கு ...றவனைப் பற்றிய அறிவைப் புகட்டுகிருளா? இதன்

. தெய்வீகப் பேரானந்தப்போதை வடிவினள்.

ரணமாகத்தான் குருதேவர் 'நான் உட்கொண்டேன்' என்று றுகின்றாரா?

இந்தத் தெய்விக நிலையில் குருதேவர் தமது உடலில் ள்ள ஆறு சக்கரங்களில் அன்னை வீற்றிருப்பதைக் ண்டார். எனவே அந்தக் கருத்தில் அமைந்த பாடலைப் டத் துவங்கினார்.

அன்னையினை உணர்ந்தறிய நினைக்கும் நெஞ்சில்
ஆச்சரியம் நிறைகிறது! அவளின் பேரைச்
சொன்னஉடன் மரணபயம் நீங்கிப் போகும்!
தூயஅவள் திருவடியின் கீழே மிக்க
இன்னல்தரு கின்ற மகா காலன் வீழ்ந்தான்!
ஏன்கரிய நிறம்தாங்கி இலங்கு கின்றாள்?
மன்னுலகின் பல கருமை; ஆனால் அன்னை
வண்ணத்தில் திகைப்பூட்டும் தனிக்க றுப்பு!
உள்ளமெனும் தாமரையில் அவளை வைத்தால்
ஒளிமயமாய் இதயத்தைச் செய்து நிற்பாள்!
தெள்ளியநற் கருமைநிறம் உடைய மேனி!
உலகிலவள் பெற்றபெயர் காளி தேவி!
உள்ளநிறம் கருமையினும் கருமை யானாள்!
உண்மையிலே எவரேனும் அவளைக் கண்டால்
வெள்ளமெனும் பெருமகிழ்வில் ஆழ்ந்து நிற்பார்!
வேறேதும் அனுபவிக்க விருப்பம் கொள்ளார்!
'இந்தப் பெண் எங்கேதான் இருக்கின்றாளோ?'
என ராமப்பிரசாதர் நெஞ்ச கத்தில்
முந்துகிற களிப்போடும் வியப்பி னோடும்
முனைப்பாக ஒருகேள்வி கேட்டுநின்றார்.
சிந்தையெலாம் அவள்பெயரைக் கேட்ட போதில்
தேவியினைக் கண்பாரா திருந்தும் கூட,
சொந்தமென அவளினிலே கலந்து நாளும்
தூயபெரும் அன்பாலே நிறைந்து போகும்!

பயத்தைப் போக்கும் அன்னையின் பாதங்களில் ரணடைந்தால், பக்தர்களின் பயம் பறந்தோடும் என்பதால் ருதேவர் பக்தர்களுக்கு அபயத்தை அளிக்கும்படி மற்றொரு ாடலைப் பாடினார்.

அதரின் நண்பர் சாரதாபாபு மகனை இழந்த துக்கத்தில் ழ்கியிருந்தார். அந்தக் காரணத்தினால்தான் அதர்

சிணேசுவரத்திற்குக் குருதேவரிடம் அவரை அழைத்துச் ன்றிருந்தார். சாரதாபாபு ஸ்ரீசைதன்ய பக்தர். எனவே ப்போது அவரைக் கண்டதும் குருதேவருக்கு கௌராங்கரது னவு மனத்தில் எழுந்தது.

கௌராங்கரது எண்ணப் பெருக்கால் குருதேவர் பாடினர். ரதாபாபு இந்தப் பாட்டைப் பெரிதும் விரும்பி, ரசித்து ழ்ந்தார்.

உள்ளொளிக்கோர் உறைவிடமாம் கௌராங்கர்
உள்ளொளியில் மூழ்காரோ? –
ஆனந்தப் பெருக்காலே — கௌராங்கர்
ஆடுகின்றார்! பாடுகின்றார்!
அகவொளியே பெருகியுள்ள கௌராங்கர்
அழுகின்றார்! சிரிக்கின்றார்!
எழில் பிருந்தா வனம் என்றே — கௌராங்கர்
எண்ணுகின்றார் காட்டினையே!
கங்கையினை யமுனையென்றே — கௌராங்கர்
கருதுகின்றார்! களிக்கின்றார்!
மிக உரக்க அழுகின்றார்! கௌராங்கர்
விம்முகின்றார்! ஏங்குகின்றார்!
பொன்போலும் புறஉடம்பு! -- கௌராங்கர்
பொருந்தும் அகம் கருங்கண்ணன்!
அகத்துள்ளே கருவண்ணன் -- கௌராங்கர்
அருள்வடிவைப் பதித்துள்ளார்!
தவக்கண்ணன் பதமலரைக் -- கௌராங்கர்
தாங்கியுள்ளார் அன்புடனே!

பலராமருடைய தகப்பனர் ஒரு வைணவர். ஆகவே தேவர் கோபிகைகள் கிருஷ்ணனிடம் கொண்டிருந்த ய்விக அன்பைக் குறித்த பாடலைப் பாடினர் :

கண்ணனைக் காணேன் சகியே! என்றன்
கண்ணனைக் காணேன் சகியே!
என்னுடைய வீட்டில் என்மனம் மகிழ
இன்பமாய் நானே இருக்கின் றேனு?
கண்ணன்என் தலையினில் கருங்குழ லாகிடில்
பின்னியே பூக்களைப் பிரியமாய் அணிவேன்!
கண்ணன் கருமை! கவின்முடி கருமை!

கருமையும் கருமையும் கலந்திருந் திடுமே!
நாசியில் அணியும் நகையாய்க் கண்ணன்
இருந்திடில் என்இரு இதழ்களும் தொடுமே!
இப்படி நடந்திடும் என்பது பொய்யே!
கனவினை நானும் கண்டிடல் வீணே!
என்றன் மூக்கின் எழில்நகை யாகிட
இன்பக் கண்ணன் ஏனோ விரும்புவான்?
அன்புக் கண்ணன் அணியும் வளையலாய்
என்கரம் இருந்திடில் இறுமாப் படைவேன்!
வளையொலி செய்ய வளர்கரம் வீசியே
அரச வீதியில் ஆடியே நடப்பேன்!

பலராமருடைய தந்தையார் செல்வந்தர். அவருக்கு ஸாவில் பலவிடங்களில் நிலமும், சொத்துக்களும் ந்தன. பிருந்தாவனம், பூரி, பத்ரி முதலிய புண்ணியத் ங்களில் தேவ பூஜைக்கும், அதிதி சாலைகளுக்கும் வருடைய குடும்பத்தினர் ஏற்பாடு செய்திருந்தனர். ந்தாவனத்திலுள்ள சியாம்சுந்தர் கோவில் திருப்பணியில் வர் தமது கடைசிக் காலத்தைக் கழித்து வந்தார். இவர் ் பரம வைணவர். வைணவர்கள் பொதுவாக, சைவர் ளோடும், சாக்தர்களோடும், வேதாந்த வாதிகளோடும் துப் போகமாட்டார்கள். சிலர், தீவிரமாக அவர்களை றுப்பார்கள். குருதேவர் இப்படிப்பட்ட குறுகிய மனப் ன்மையைப் போற்றியதில்லை. 'உள்ளத்திலே ஆண்டவனை டைய வேண்டும் என்ற துடிப்பு மட்டும் இருந்துவிட்டால் லா வழிகளாலும், எல்லா மதங்களாலும், இறைவனை டைய முடியும்' என்பதே குருதேவருடைய உபதேசத்தின் ரம். பல வைணவ பக்தர்கள் ஜபம் செய்கிறார்கள். ஸ்திரங்கள் படிக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு இறைவனை டைய வேண்டும் என்ற உள்ளத் துடிப்பு இருப்பதில்லை. கவே தான் பலராமரின் தந்தைக்குக் குருதேவர் இத்தகைய பதேசத்தை அளித்தார் போலும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "நான் ஏன் ஒரே வழியை டும் கடைப்பிடிப்பவனாக இருக்க வேண்டும் என்று முறை எனக்குள் நினைத்தேன். ஆகவே பிருந்தாவனத்தில் ந்க்கும்போது வைணவபைராகி போல் சாதனைகள் புரிந்தேன்.

"மூன்று நாட்கள் அந்த எண்ணத்திலேயே மூழ்கிக்கிடந் ன். மீண்டும் தட்சிணேசுவரத்தில் இருந்தபொழுது ராம திரத்தை ஏற்றுச் சாதனை புரிந்தேன். நெற்றியில் பெரிய

கம், கழுத்தில் பெரிய மாலை இப்படியாக அணிந்திருந்தேன். தினங்களுக்குப் பிறகு இவைகளை எல்லாம் கழற்றி எறிந்து டேன்."

"ஒரு மனிதனிடம் ஒரு பெரிய சாயத்தொட்டி இருந்தது. ர் தங்களுடைய துணிகளுக்குச் சாயம் போட்டுக் கொள்ள னிடம் வருவார்கள். அந்தச் சாயம் நிறைந்த தொட்டியில் ரியை நனைத்தால் போதும், யாருக்கு எந்த நிறம் வையோ அந்த நிறம் துணியில் படிந்துவிடும். இந்த சயத்தை ஒரு மனிதன் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு தச் சாயம் போடுபவனிடம் வந்து, இந்த நிறம் ண்டுமென்று கூறுமல், 'தயவு செய்து உன் தொட்டியில் வைத்துக் கொண்டிருக்கும் அந்தச் சாயத்தில் என் துணியை ர்த்துக் கொடு' என்று கேட்டான்!"

பல சமயங்களைச் சேர்ந்த மக்கள் தம்மிடம் வார்களென்றும், அவரவர்களுடைய கொள்கைகளுக் ற்ப ஆன்மிக விழிப்பினைப் பெறுவார்கள் என்பதையும் தேவர் இந்த நிகழ்ச்சியின் மூலமாகச் சுட்டிக்காட்டுகிருரா?

ஸ்ரீராமகிருஷ்ணர் மேலும் கூறினுர்: "ஒரு மரத்தின்மீது ணி ஒன்று இருந்தது. ஒருவன் அதைப் பச்சை நிற ளதாகப் பார்த்தான். இன்னொருவன் கருப்பாகவும், ஒருவன் மஞ்சள் நிறமாகவும் கண்டான். இப்படியாகப் ர் பல நிறமுள்ளதாக அந்த ஓணானைக் கண்டனர். பிறகு களுக்குள் பேசிக் கொள்ளும் பொழுது பச்சை என்றும், ப்பு, மஞ்சள் என்றும் கூறிக்கொண்டு ஒருவருக்கொருவர் டையிட ஆரம்பித்தனர். அப்பொழுது அந்த தடியிலிருந்த ஒரு மனிதனிடம் சென்று ஓணானின் த்தைப் பற்றி வினவியபோது அவன் 'நான் இந்த தடியில் இரவு பகலாக இருக்கிறேன். இது பல நிறங்கள் ண்ட பிராணி என்பது எனக்குத் தெரியும். வினுடிக்கு றுடி இது தன் நிறத்தை மாற்றிக் கொள்ளும். சில சமயம் மில்லாமலும் இருக்கும்' என்ருன்."

'இறைவன் பல குணங்களோடு கூடியவன்; பல ங்களைத் தாங்கியவன். அதே சமயம் குணங்கள் றவன்; நிறங்கள் அற்றவன்; மனம், வாக்கு இவற்றிற் ல்லாம் அப்பாற்பட்டவன்' என்பதை குருதேவர் க்குகிருரா? குருதேவர் பக்தியோகம், ஞானயோகம் என்ற எல்லாப் பாதைகளின் வழியாகவும் சென்று றவனுடைய இனிய சுவையைப் பருகுகிருரா?

ஸ்ரீராமகிருஷ்ணர் (பலராமரின் தந்தையிடம்): "இனிமேல் ுதகங்களைப் படிக்காதே. ஆனால், சைதன்ய சரிதாமிருதம் தலான பக்தி நூல்களைப்படி. சுருக்கமாகச் சொன்னால், றைவனிடம் அன்பு கொள்ள வேண்டும். அவனுடைய னிமையை அனுபவிக்க வேண்டும். இறைவன் இனியவன். ுதன் அவரைச் சுவைப்பவன்; இனிமையான அந்த னந்தத்தைப் பருகி மகிழ்கிறான். இறைவன் தாமரைப்பூ. ுதன் வண்டு. பக்தன் தாமரை மலரிலுள்ள தேனைக் ுக்கிறான். பக்தன் கடவுளை விட்டு விட்டு எப்படி வாழ டியாதோ, அது போலவே கடவுளும் பக்தனை விட்டு விட்டு ழ முடியாது. இந்த நிலையில் பக்தன் இனிப்பாகவும், வான் அதை அனுபவிப்பனாகவும் ஆகிவிடுகிறான். பக்தன் மரைப்பூ. பகவான் தேன் பருகும் வண்டு. இறைவன், னே தனது இனிமையை அனுபவிக்க இரண்டாக மாறி ள்ளான். அதுதான் ராதாகிருஷ்ணலீலை. சாதகன் முதன் தலாக தீர்த்த யாத்திரை போவது, கழுத்தில் ருத்ராட்ச மாலை ணிவது முதலிய சில விதிமுறைகளைக் கடைப் பிடிக்க ண்டும். குறிக்கோள் நிறைவேறி விட்டால், அதாவது றைவனின் காட்சி கிடைத்து விட்டால் வெளி ஆடம்பரங்கள் ாகவே மறைந்து விடுகின்றன. பிறகு அவன் செய்வ ல்லாம் எப்பொழுதும் இறைவனது பெயரை உச்சரிப்பது, டவிடாது அவனையே எண்ணிக் கொண்டிருப்பது பவையே.

"பதினாறு ரூபாய்க்குச் சமமான நாணயங்கள் ஒரு பெரிய ியலாகத் தோன்றும். ஆனால், அதைப்பதினாறு முழுரூபாயாக ற்றினால் பெரிதாகத் தோன்றுவதில்லை. அதைக் கொண்டு பொன் நாணயம் வாங்கினால், அது இன்னமும் சிறிதாகத் ான்றும். அதன் மதிப்பிற்கு வைரம் வாங்கினால் அது க்கும் இடமே தெரியாது."

கழுத்தில் மாலை, சடங்குகள், நடைமுறைகள் முதலிய றைக் கடைப்பிடிக்காவிட்டால் வைணவர்கள் நிந்திக் றனர். இதைக்குறித்துதான் குருதேவர் இப்படிக் கூறினார் ாலும்! இறைவனது காட்சிக்குப்பின் ஜபமாலை முதலிய றில் கவர்ச்சி இருப்பதில்லை. வெளிச்சடங்குகள் படிப் யாகக் குறைந்து விடுகின்றன.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பலராமரின் தந்தையிடம்): "கர்த்தா ாக்கள் சாதகர்களைப் பிரவர்த்தகர்கள், சாதகர்கள், தர்கள், சித்தர்களில் சித்தர்கள், என்று பிரிக்கின்றனர்.

''பிரவர்த்தகர்கள் நெற்றியில் திலகமும், கழுத்தில் மாலையும் ுணிவார்கள். வெளி அனுஷ்டானங்களைக் கடைப்பிடித்து ழுகுவார்கள். சாதகர்கள் வெளிவிஷயங்களுக்கு அவ்வளவு ுக்கியத்துவம் கொடுக்கமாட்டார்கள். சாதனை புரிவதில் னதைச் செலுத்துவார்கள். இதற்கு பௌல்[1] என்பவர்களை .தாரணமாகக் கூறலாம். இறைவன் இருக்கிறுன் என்ற திட ம்பிக்கை உடையவர்கள் சித்தர்கள். ஸ்ரீசைதன்ய மஹாபிரபு பான்றவர்கள், சித்தர்களில் சித்தர். இவர்கள் கடவுட் ாட்சி பெற்றதல்லாமல், இறைவனுடன் எப்பொழுதும் பசுகின்றனர்; இறைவனிடம் நெருங்கிப் பழகுகின்றனர். துதான் ஆத்மிக வாழ்வின் கடைசி எல்லை. இவர்களைத் தான் வணவர்கள் சாயி என்கின்றனர். சாயிக்குப் பிறகு வேறு .யர்ந்தநிலை இல்லை.

''சாதகர்களில் பல வகையுண்டு. சத்வகுணம் நிறைந்த ாதகர்கள் இரகசியமாகச் சாதனம் பழகுவார்கள். பார்ப் தற்குச் சாதாரண மனிதர்கள் போலத் தோன்றுவார்கள். காசுவலைக்குள் உட்கார்ந்து கொண்டு தியானம் செய் ார்கள்.

''ரஜோகுணம் நிறைந்த சாதகர்கள் வெளி ஆடம்பரத்தில் ண்ணும் கருத்துமாய் இருப்பார்கள். பட்டாடையும், நற்றியில் திலகமும், கழுத்தில் ஜபமாலையும், வைணவ ம்பிரதாய உடையும் அணிந்திருப்பர். இடையிடையே பான்மணிகள் கோத்த ஜப மாலையும் கையுமாக இருப்பார்கள். 'ளம்பரப்பலகை போட்டுக் கொண்டு வியாபாரம் சய்பவர்களுக்கு ஒப்பானவர்கள் இவர்கள்.''

வைணவர்களுக்கு வேதாந்திகளிடமும், சாக்தர்களிடமும் ுவ்வளவாக மதிப்பு இல்லை. பலராமருடைய தந்தை ுப்படிப்பட்ட குறுகிய மனப்பான்மையைத் துறக்க வேண்டும் ன்பதற்காகக் குருதேவர் அவருக்கு இவ்வாறு உபதேசம் சய்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பலராமரின் தந்தையிடம்): ''எந்த தமாக இருந்தால் என்ன? எந்தவழியாக இருந்தால்தான் ன்ன? எல்லோரும் அந்த ஒரே கடவுளைத்தான் அழைக்கின் னர். ஆகவே, எந்த மதத்தையும், எந்த வழியையும் நிந்திக்கக்

1. பக்திப் பாடல்கள் பாடிக் கொண்டு திரியும் ஒரு வகை வைணவ சாதுக்கள்.

து; அவமதிக்கக் கூடாது. இறைவனை வேதம் தானந்த பிரம்மம் என்கிறது. புராணங்கள் சச்சிதானந்தக் ஷ்ணன் என்கின்றன. தந்திரங்கள் சச்சிதானந்த சிவன் கின்றன. எல்லாம் சச்சிதானந்தம் தான்.

'வைணவர்களில் பல பிரிவுகள் உண்டு. ஒரு பிரிவைச் ந்தோர் பிரம்மத்தை 'ஆலேக்-நிரஞ்ஜன்' என்பர். ஆலேக் ரல் பொறிகளுக்கு எட்டாதது என்பது பொருள். இவர்கள், ாவும், கிருஷ்ணரும் இந்த ஆலேக்கின் இரு குமிழிகள் மே' என்பார்கள்.

'வேதாந்திகள் கடவுள் அவதாரத்தை ஏற்றுக்கொள்வ ை. இவர்கள், 'இராமரும், கிருஷ்ணரும் சச்சிதானந்தக் ின் இரு அலைகள் மாத்திரமே' என்பார்கள். உள்ளது துதான். இரண்டல்ல. இறைவனை எப்பெயரிட்டும் ழக்கலாம். நம்முடைய அழைப்பு உண்மையானதாக க்குமானால், அதை அவன் நிச்சயமாகக் கேட்பான். ாத்தில் ஆழ்ந்த பக்தியும் துடிதுடிப்பும் இருந்தாலே தும்."

நருதேவர் தெய்விக எண்ணங்களில் மூழ்கியவராய்ப் ர்களுக்குப் பல அமுதமொழிகளைக் கூறிக் கொண்டிருந் இப்பொழுது வெளி உணர்வு சற்று எழப்பெற்றவராய்ப் ாமின் தந்தையைப் பார்த்து, "நீங்கள் பலராமரின் தயா?" என்றார். எல்லோரும் மௌனமாக இருந்தனர். முதிர்ந்த பலராமின் தந்தை மௌனமாக மாலையை டியபடி, ஹரிநாம ஜபம் செய்து கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- முதலியோரிடம்): "நல்லது. கள் ஜபம் செய்கிறார்கள்; யாத்திரை செல்கிறார்கள். தாலும் ஏன் இப்படி எந்தவித முன்னேற்றமும் இல்லாமல் கிறார்கள்? இவர்களைப் பொறுத்தவரையில் இவர்களுக்கு வருடத்திற்குப் பதினெட்டு மாதங்கள் எனலாம்.

'இறைவனை அடைய வேண்டுமென்ற ஏக்கம் இல்லாத கு காசிக்குப் போவதால் என்ன பயன்?' என்று ஒரு முறை ஷிடம் கேட்டேன். உள்ளத் துடிப்பு இருக்குமானால் லே காசி.

"மக்கள் எவ்வளவோ யாத்திரை செய்கின்றனர். ஜபம் ;ய்கின்றனர். இருந்தாலும் பயன் ஏற்படுவதில்லை. ஏன் தரியுமா?, இவர்கள் இறைவனுக்காக ஏங்கி அழுவதில்லை. ள்ளன்போடு ஏங்கி அழைத்தால் இறைவன் தானாகவந்து ட்சி தருகிறான்! நாடகம் ஆரம்பித்த உடன் மேடை மீது தாரண பேச்சு வார்த்தை நிகழ்கிறது. அப்பொழுது நஷ்ணனை மேடை மீது காணமுடிவதில்லை. பிறகு நாரதர் ம்புரா மீட்டிக் கொண்டு 'கிருஷ்ணா, கோவிந்தா, எனது ருயிரே!' என்றெல்லாம் உளமுருகிக் கனிந்து பாடுவார். தன் பிறகு கிருஷ்ணன் மேடைக்கு வராமலிருக்க முடியாது. நஷ்ணன் இடைச் சிறுவர்களோடு நம்முன் தோன்றுகிறான். வள்ளைப்பசுவே வா, வெள்ளைப்பசுவே வா' என்று அழைக் றான்."

## செவ்வாய்க்கிழமை, அக்டோபர் 16, 1883

தட்சிணேசுவரத்தில் குருதேவர் தம் அறையில் பலராமரின் ந்தை, ராக்கால், வேணிபால், ம-, மணிமல்லிக், ஈசான், கிஷோரி மற்றும் பல பக்தர்களுடன் அமர்ந்திருந்தார்.

பலராமரின் தந்தை பரம வைணவர். கையில் ஜபமாலை டன் எப்பொழுதும் ஜபம் செய்தபடியே இருப்பார். சாதார மாக ஆசாரம் மிக்க வைணவர்கள் மற்ற மதத்தவர்களை வ்வளவாக விரும்புவதில்லை. பலராமரின் தந்தை ராமகிருஷ்ணரை அடிக்கடி காணச் செல்வார். மற்ற வணவர்களைப் போல் அவருக்குக் குறுகிய மனப்பான்மை ருக்கவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பரந்த மனப்பான்மை படைத்தவர்கள் ல்லாத் தெய்வங்களையும் ஏற்றுக் கொள்கின்றனர். கிருஷ்ணன் ளி, சிவன், இராமன் ஆகியோரை ஒப்புக்கொள்ளுகின்றனர்."

பலராமரின் தந்தை : "ஆம் ஐயா. இது எப்படியென்றால் ந மனைவி, தன் கணவனை அவன் எந்த ஆடைகளை அணிந்து காண்டிருந்தாலும் சட்டென்று அறிந்து கொண்டு விடுகிறாளே தைப் போல."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஒன்றிய சிந்தையோடு செய்யப் டுகிற நிஷ்டா பக்தி ஒன்று உண்டு. கோபிகைகள் துரையில் தலைப்பாகை தரித்த கிருஷ்ணனைக் கண்ட பொழுது கத்தை மேலாடையில் மறைத்துக் கொண்டவர்களாய்த்

களுக்குள், 'இவன் யார்? மஞ்சள் ஆடை உடுத்தித் தலையில் மயிற்பீலி சூடிய நம் கிருஷ்ணன் எங்கே? அவன் எங்கே இருக்கிறான்?' என்று பேசிக்கொண்டனர்.

"அனுமனிடமும் இந்த நிஷ்டா பக்தி இருந்தது. துவாபர யுகத்தில் அனுமன் துவாரகைக்கு வந்தபோது கிருஷ்ணன் ருக்மிணியிடம், 'அனுமன் வருகிறான். அவனுக்கு இராம வடிவத்தைக் கண்டால் மட்டுமே மகிழ்ச்சி உண்டாகும்' என்று கூறித் தம்முடைய கிருஷ்ண வடிவத்தை இராம வடிவமாக மாற்றிக் கொண்டு அனுமனை மகிழ்வித்தார்.

"என்னுடைய மனநிலையோ விசித்திரமாக இருக்கிறது. செயலற்ற நித்திய நிலையிலிருந்து செயலோடு கூடிய லீலைக்கு என்மனம் இறங்குகிறது. மீண்டும் நித்தியத்திற்குச் செல்கிறது.

"நித்தியத்தை அதாவது செயலற்ற நிலையை அடைவது தான் பிரம்மஞானம். இதை அடைவது மிகவும் கடினம். உலக வாசனை முற்றிலும் நீங்கினாலொழிய பிரம்மஞானம் உண்டாவதில்லை. இமவானுடைய இல்லத்தில் பார்வதிதேவி மகளாகப் பிறந்த பொழுது, தந்தைக்குப் பலவிதமான தெய்விகக் காட்சிகளைக் காட்டியருளினாள். இதைக் கண்ட இமவான், 'மகளே! நான் பிரம்மஞானம் அடைய விரும்புகிறேன். அதையும் அருள வேண்டும்' என்றார். அதற்குப் பார்வதி, 'தந்தையே! அது உங்கள் விருப்பமானால், சாதுக்களுடன் நீங்கள் வாழ வேண்டும். இல்லறத்திலிருந்து விலகி அடிக்கடி, தனிமையில் சாதுக்களுடன் வாழுங்கள்' என்றாள்.

"ஒன்றிலிருந்தே பல தோற்றங்கள் வந்துள்ளன. அதாவது நித்தியத்திலிருந்து லீலை. ஒன்றிலிருந்து பல. பிறகு, 'ஒன்று' என்ற இந்த நிலையும் மறைந்து விடுகிறது, ஏனென்றால், ஒன்று இருந்தாலே இரண்டு வந்து விடுகிறது. இறைவன் உவமைகளால் கூறி விளக்க ஒண்ணாதவன். இந்த நிலையை இருளுக்கும், ஒளிக்கும் இடைப்பட்ட நிலை எனலாம். இது ஒளியே ஆயினும் கண்களால் நாம் பார்க்கின்ற பௌதிக ஒளி அல்ல.

"மறுபடியும் இறைவன் என் மனநிலையை மாற்றும்பொழுது அதாவது லீலை நிலைக்கு இறக்கி என்னை அழைத்து வரும் பொழுது மாயை, உயிரினங்கள், பிரபஞ்சம் ஆகியவை எல்லாமாய் அவனே இருப்பதைக் காண்கிறேன்.

"இன்னும் ஒன்றையும் இறைவன் எனக்குக் காட்டுகிறான். ந்த உலகையும், அதில் வாழும் உயிரினங்களையும் தானே டைத்திருப்பதாகக் காட்டுகிறான். எஜமானனும் அவனுடைய தாட்டமும் போல.

"இறைவன்தான் தலைவன். இந்த உலகமும், அதிலுள்ள யிர்களும் அவனுடையவை. இவ்வாறு அறிவதே ஞானம். ான் கர்த்தா,' 'நான் குரு' 'நான் எஜமானன்' என்று எண் வது அறியாமை. பணம், காசு, சுற்றத்தார், வீடு, வாசல், னைவி, மக்கள் எல்லாம் என்னுடையவை என்று நினைப்பது அறியாமை."

பலராமரின் தந்தை : "உண்மைதான் ஐயா!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவா! நீதான் செயல்புரிபவன் ன்ற உணர்வு ஏற்படாதவரை திரும்பத்திரும்ப இந்த லகிற்கு வர வேண்டும்—பிறப்பு எடுக்க வேண்டும். 'நீயே சயல் புரிபவன்' என்ற உணர்வு ஏற்பட்டு விட்டாலோ றவி கிடையாது. 'நீதான்', 'நீதான்' என்று கூற முடியாத ரை நாம் இவ்வுலகில் இருந்து விடுபடுவதில்லை. வருவதும் பாவதுமாகப் பிறப்பும் இறப்பும் தொடர்ந்து நடந்து காண்டேயிருக்கும். முக்தி கிட்டாது. மேலும், 'எனது' 'எனது' ன்று கூறிக் கொள்ளுவதால் நாம் அடைவதுதான் என்ன? ரு தோட்டத்திற்கு, மேற்பார்வையாளராக ஒருவன் இருக் றான். அவன், 'இது என்னுடைய தோட்டம், இது என்னுடைய ட்டில், நாற்காலி' என்று கூறுகிறான். ஆனால் அதே மேற் ார்வையாளன் வேலையிலிருந்து நீக்கப்பட்டால், ஒரு 'தாரண மரப் பெட்டியைக்கூட எடுத்துச் செல்லும் ரிமையை இழந்தவன் ஆகிறான்.

'நான், எனது' என்ற எண்ணம் உண்மையை மூடிக் காண்டிருக்கிறது. உண்மையை உணர அவை நம்மை ஒரு பாதும் விடுவதில்லை.

"அத்வைத ஞானம் (இரண்டற்றது என்ற அறிவு) ற்படாதவரை, (உணர்வுமயமான) சைதன்யக் காட்சி உண் ாவதில்லை. சைதன்யக் காட்சி கிட்டினால் பிறகு நித்யானந்தம். ரமஹம்சர்களின் நிலைதான் நித்யானந்தம்.

"வேதாந்த மதம் அவதாரத்தை ஒப்புக் கொள்வதில்லை. ன் கருத்துப்படி அவதாரமூர்த்தியான சைதன்ய தேவர் ாடற்ற பிரம்மத்தின் ஒரு நீர்க்குமிழி மட்டுமே. சைதன்யக் சி என்பது என்ன? இருண்ட அறையில் தீக்குச்சியைப் வைத்ததும் திடீரென்று ஒளி ஏற்படுகிறதே அது ன்றது.

'பக்தி மார்க்கத்தைப் பின்பற்றுபவர்கள் அவதாரத்தை க்கொள்கின்றனர். 'கர்த்தாபஜா' என்ற சம்பிரதாயத்தைச் ந்த ஒரு பெண் என்னுடைய நிலையைப் பார்த்து 'ஐயனே, க்கு உட்பொருளின் காட்சி ஏற்பட்டுள்ளது. ஆடுவது, வது ஆகியவற்றில் அதிகமாக ஈடுபடாதே. திராட்சைப் ழை மென்மையான பஞ்சில் மிகவும் கவனமாக வைத்துப் காக்க வேண்டும்' என்றாள். மருமகள் கர்ப்பவதியானால் யார் வீட்டு வேலைகளில் ஈடுபட அவளை அனுமதிப்ப ப. இறைவனுடைய காட்சி ஏற்பட்டதற்கு அறிகுறி, ல்கள் சிறிதுசிறிதாகக் குறைந்து கொண்டே வருவதாகும். கள் மாந்தருக்குள் மாணிக்கம்.

'நான் சாப்பிடும் பொழுது அவள், 'என்ன நீ சாப்பிடு ா? அல்லது வேறு யாரையாவது சாப்பிட வைக்கிறாயா?' து கேட்பாள்.

'இந்த 'நான்' என்ற எண்ணம் உண்மையைத் திரை ு மூடி வைத்திருக்கிறது. 'நான்' எவ்வளவு மறையுமோ, அவ்வளவு தூரம் இறைவனின் 'நான்' டம் வரும்' என்று நரேந்திரன் கூறுகிறான்.

குடத்தில் எந்த அளவுக்கு மண் அதிகமாகுமோ அந்த வுக்குத் தண்ணீர் குறையும்' என்று கேதார் கூறுவார்.

கவான் கிருஷ்ணர் அர்ஜுனனைப் பார்த்து, 'சகோதரனே! வகைச் சித்திகளில் ஒன்றைப் பெற்றாலுங்கூட நீ ன அடைய முடியாது. இவைகள் உனக்கு ஓரளவு லைத் தரலாம். மக்களின் நோயைப் போக்குவது போன்ற லை நீ சிறிது பெறலாம், அதனால் மக்களுக்குச் சிறிது ம ஏற்படும். அவ்வளவுதான். இத்தகைய அற்ப ஆற்றல் க்கு வேண்டுமா?' என்று கேட்டார்.

ஆகவே நான் அன்னையிடம் தூய பக்தியை மட்டுமே டேன். சித்திகளை ஒருக்காலும் கேட்டதில்லை."

பலராமரின் தந்தை, வேணிபால், ம–, மணிமல்லிக் ஆகிய பக்தர்களிடம் இவ்விதம் கூறியவாறே குருதேவர் சமாதி நிலையை அடைந்தார். வெளி உணர்வு முற்றும் நீங்கி, ஒரு சிலையைப் போலத் தோற்றமளித்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு சமாதி கலைந்தது. குருதேவர் பாடத் தொடங்கினார்.

நண்பனே, யாருக்காகப் பித்தனானேனோ, அந்தப்
பண்பனை இன்னுமிந்தப்பாவியேன் காணவில்லை.

பிறகு குருதேவரின் விருப்பத்திற்கிணங்க ராம்லால் பாடத் தொடங்கினார். முதலில் கௌராங்கரின் துறவைப் பற்றிய பாட்டு.

பக்தன் கேசவ பாரதி குடிலில்
எத்தனை இனிய காட்சியைக் கண்டேன்!
கௌராங்க மூர்த்தி கண்க ளிரண்டிலும்
பிரேமை ஆயிரம் தாரைக ளாக
வழிகிறது! அவரோர் மதயா னைப்போல்
ஆடிக் களிக்கிறார்! பாடிக் குதிக்கிறார்!
கள்ளுண் டவர்போல் கால்கள்தள் ளாட
விழிகள் இரண்டும் நீரில் மிதந்திட
ஹரியின் பெயரை அழுத வாறவர்
உரைத்திடும் சிம்ம கர்ஜனை ஓங்கி
பூமியை, வானைப் பிளந்துபோ கின்றது!
புல்லைக் கடித்த வண்ணம் இரண்டு
கரங்களும் குவிந்து வணங்கிய நிலையில்
திரும்பத் திரும்ப முக்திப் பிச்சையைத்
தாசன் கேட்கிறான் - தலைமுடி மழித்து
யோகியின் வேடம் ஒழுங்குறத் தரித்து
பார்த்த உடனே பக்தி ஊட்டிடும்
நேர்த்தி மிகுந்த நிலையிலே உள்ள
அவரைக் கண்டதும் அகம்மிகக் குழைந்து
விம்மி விம்மி அழுதுநிற் கின்றது!
அனைத்தும் துறந்த அந்தத் துறவி
உலகிலே வாழும் உயிர்களின் துயரில்
உள்ளம் கசிந்தே உருகினார் அன்பை
அள்ளி வழங்க ஆசையில் வந்துள்ளார்.
ஸ்ரீசை தன்யர் திருவடிக் கமலம்
தனிலோர் அடிமை எனவே இருந்து
வீடு வீடாக விருப்புடன் அவரைப்
பின் தொடர் வதுவே பக்தனின் விருப்பம்-

சைதன்ய தேவரின் இந்தப் பிரேமை பித்துப் பிடித்த யை வர்ணித்த பிறகு, குருதேவர் ராம்லாலிடம் கோபிகை ர் பித்துப் பிடித்த நிலையைக் குறித்த பாட்டைப் பாடும்படி க செய்தார். ராம்லாலும் கோபிகைகளின் அன்பை ரிக்கும் சில பாடல்களைப் பாடினர்.

ஹரி பக்தி உண்டானல் சாதி வித்தியாசம் ஏற்படுவதில்லை' ் துளசிதாசரின் அந்த வார்த்தைகளைச் சொல் என்று தவர் மணிமல்லிக்கிடம் கூறினர்.

மணிமல்லிக் : ''சாதகப்பட்சிக்குத் தாகம். நீர் வேட்கை. தொண்டையே வெடித்து விடும் போல் இருந்தது. நான்கு பக்கங்களிலும் தண்ணீர் நிறைந்துள்ளது. க, யமுனை, சரயு இன்னும் பல புண்ணிய நதிகள், வறு குளங்கள் உள்ளன. ஆனல், அது எந்தத் தண்ணீ ் குடிப்பதில்லை. சுவாதி நட்சத்திரத்தன்று வானத்தி து விழும் மழைநீரை மட்டும் எதிர்பார்த்து ஏங்கி நிற்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் : "வேண்டுவதெல்லாம் இறைவ டைய திருவடித் தாமரைகளில் அன்பு செலுத்துவது. வையெல்லாம் பயனற்றவை."

மணிமல்லிக் : "துளசிதாசருடைய இன்னொரு உபதேசமும் கிறது. 'பரிசமணி தீண்டினல் எட்டுத் தாதுப் ட்களும் பொன்னக மாறுகின்றன. அதேபோல் ரியன், சண்டாளன் உட்பட, எல்லாச் சாதியினரும் லின் பெயரைக் கூறுவதால், தூய்மையடைகிறார்கள். ், திருமாலின் பெயரை உச்சரிக்கா விட்டால் ந சாதியினரும் சண்டாளர்களே.'

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பதப்படுத்தாத கடினமான வெறும் மனிதர்கள் தீண்டமாட்டார்கள். ஆனல், அதே பதம் செய்துவிட்டால் பிறகு கோயிலுக்குள்ளும் துச் செல்லலாம்.

இறைவனுடைய திருநாமம் மனிதனை மிகவும் தூய்மை கிறது. ஆகவேதான், 'கடவுளின் திருப்பெயரைப் பாட டும். யதுமல்லிக்கின் தாயிடம், 'மரணம் வரும்பொழுது த்தைப்பற்றிய எண்ணங்களே மனத்தில் உதிக்கும். ம், குழந்தைகள், உயில் எழுதுவது போன்ற

ண்ணங்கள்தாம் தோன்றும். இறைவனைப் பற்றிய நினைப்பே ற்படாது' என்று நான் கூறினேன்.

"அவனது பெயரையும், புகழையும் பாடுவது, ஜப தப தனைகள் பழகுவது ஆகியவைதாம் மரண காலத்தில் வனை நினைத்துக்கொள்ள வழிகளாகும். இந்தச் சாதனைகள் ருந்தால் மரணகாலத்திலும், இறைவனுடைய பெயர் நம் விில் எழும். பூனை, கிளியைப் பிடிக்கத் தாவினால், அது 'கீ' என்றுதான் கத்தும். 'ராம்' 'ராம்' 'ஹரே கிருஷ்ண', 'ஹரே ருஷ்ண' என்று கத்தாது.

"மரணத்திற்குத் தயாராக இருப்பது நல்லது. வாழ்க்கையின் றுதிக் காலத்தில் தனிமையில் இருந்து இறைவனைத் யானிக்க வேண்டும். அவனுடைய பெயரையும், புகழையும் ட வேண்டும். நீராட்டியபின், யானையை அதன் இருப் த்திற்குக் கொண்டு போய் கட்டிவிட்டால், மறுபடியும் ம்பில் மண்ணையும், சேற்றையும் பூசிக்கொள்ளாது."

குருதேவருடன் அமர்ந்திருந்த பலராமின் தந்தை, ணிமல்லிக், வேணிபால் ஆகியோர் முதியவர்கள். குறிப்பாக வர்களின் நன்மைக்காகவே குருதேவர் மறுபடியும் தர்களை நோக்கிப் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "தனிமையில் இறைவனைக் குறித்துத் யானம் செய்யும்படியாக உங்களிடம் சொல்வதன் காரணம் என்ன தெரியுமா? இரவு பகலாகக் குடும்பவாழ்க்கையில் ருன்றால் அமைதியின்மையே ஏற்படும். ஓர் அடி த்திற்காகச் சகோதரர்கள் அடித்துக் கொள்வதை நீங்கள் ர்த்ததில்லையா? சீக்கிய சாது ஒருவர் 'இவ்வுலகில் உள்ள ாபங்களுக்கும், குழப்பங்களுக்கும் காரணம் நிலம், பெண் வை தாம்' என்று கூறினார்.

"நீங்கள் குடும்பத்தில் இருக்கிறீர்கள். அதனால் என்ன? தற்காக ஏன் பயப்படவேண்டும்? இராமர் இல்லறத்தைத் க்க நினைத்த பொழுது, தசரதர் மனக்கவலை கொண்ட ாய் வசிஷ்டரைச் சரணடைந்தார். வசிஷ்டர் இராமரிடம், ாமா, நீ ஏன் இல்லறத்தைத் துறக்க வேண்டும்? உலகம், றவனிடமிருந்து வேறுபட்டதென்று உன்னால் நிரூபிக்க யுமா? அப்படியிருக்க, எதைத் துறப்பாய்? எதை ஏற்றுக்

ள்வாய்? இறைவனைத்தவிர இந்த உலகில் வேறு எதுவுமே லையே! இறைவன், மாயை, உலகம், உயிரினங்கள் று அவனே எல்லாமாய் விளங்குகிறன்' என்ருர்."

பலராமரின் தந்தை : "இதைப் புரிந்து கொள்வது மிகக் ஷ்டம் ஐயா!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சாதனை புரியும்போது, சாதகன் வுலகத்தை 'மாய மாளிகை' என்று நினைக்கிறன். றைவனின் காட்சிக்குப்பின் இதுவே அவனுக்கு உல்லாச ளிகையாக அமைகிறது.

"வைணவ சாஸ்திரம், 'நம்பிக்கையினுல் இறைவனை டையலாம். விவாதம் இறைவனை நம்மிடமிருந்து வெகு தூரம் த்துவிடுகிறது' என்று கூறுகிறது. வேண்டுவதெல்லாம் பிக்கை மட்டுமே."

"கிருஷ்ணகிஷோருக்குத்தான் எவ்வளவு நம்பிக்கை! ந்தாவனத்தில், தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்த ஒருவன் வருக்குக் கிணற்றிலிருந்து குடிக்கத் தண்ணீர் எடுத்துக் டுத்தான். அவனை 'சிவா' என்ற நாமத்தை சரிக்கச் சொல்லிவிட்டு அந்தத் தண்ணீரை அவர் குடித் . இறைவனுடைய பெயரை ஓதினுல் போதும். பாவங்களைப் சுக்குவதற்குப் பணம் கொடுத்துப் பிராயச்சித்தம் வேறு ய்ய வேண்டுமா என்ன? அது முட்டாள்தனமான செயல். க்குவந்த நோய்கள் குணமடைய மக்கள் துளசி ழ்களைக் கொண்டு, இறைவனை வழிபாடு செய்வதைக் ட கிருஷ்ணகிஷோர் ஆச்சரியமடைந்து, 'இது என்ன டாள்தனம்' என்று கூறினர்.

"சாதுக்களைத் தரிசிக்கச் செல்லுவதைப் பற்றி லதாரியைக் கேட்டபொழுது அவன், 'அவர்களிடம் பார்க்க ன இருக்கிறது? — பஞ்சபூதங்களின் கூடுதானே' என்ருன். ஷ்ணகிஷோருக்கு இதைக் கேட்டதும் கடுங்கோபம் வந்து டது. 'ஹலதாரி இப்படியா கூறுகிறன்? சாதுக்களின் ல் சின்மயம், தெய்விக உணர்வு மயமானது என்பது னுக்குத் தெரியாதா?' என்ருர்.

"தட்சிணேசுவரத்துக் கங்கைக் கரையில் அவர் எங்களிடம் முறை, 'நீங்கள் ராம்! ராம்! என்று இடைவிடாது கூறுங்கள். வாறு கூறியவண்ணம் உங்கள் வாழ்நாட்கள் கழியட்டும்' று கூறினர்.

"ஒருமுறை நான் கிருஷ்ணகிஷோரின் வீட்டிற்குச் சன்றிருந்தேன். என்னைப் பார்த்தவுடனேயே அவர் னந்தத்தால் நடனமாடத் தொடங்கிவிட்டார்.

"ஸ்ரீராமர், இலட்சுமணனிடம், 'எங்கு திடமான பக்தி ருக்கிறதோ, அங்கு நான் இருப்பேன் என்பதை அறிந்து காள்' என்று கூறினர். அதாவது சைதன்ய தேவரிடம் ருந்தது போன்ற பக்தி. அவர் பக்திப் பரவசத்தால் சிரித்தார், முதார், ஆடினர், பாடினர். சைதன்யர் ஓர் அவதார புருஷர்; றைவன் அவர் வடிவில் உலகில் அவதரித்தார்." குருதேவர் க்கருத்தைக் கொண்ட பாடல் ஒன்றைப் பாடினர்.

பலராமரின் தந்தை, மணிமல்லிக், வேணிபால் முதலியோர் ருதேவரிடம் விடைபெற்றுச் சென்றனர்.

மாலை நேரம். காசாரி பாடாவிலுள்ள ஹரிசபர்வைச் சேர்ந்த க்தர்கள் சிலர் வந்தனர். அவர்களுடன் சேர்ந்து குருதேவர் றையின்ப வெள்ளத்தில் மூழ்கியவராய் ஆடினர், பாடினர். றிது நேரத்தில் பரவசநிலை அடைந்தார். அந்தப் பரவச லையிலேயே, "நான் தனியே சிறிது தூரம் செல்வேன்" ன்ருர். கிஷோரி அவர் கால்களைப் பிடித்துவிட முன் வந்தார். னல், குருதேவர் தம்மைத் தொட யாரையும் அனுமதிக்க ல்லை.

அப்போது இரவு நேரம். ஈசானர் வந்தார். குருதேவர் வசநிலையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். சிறிது நரத்திற்குப் பிறகு ஈசானருடன் பேசத் தொடங்கினர். காயத்ரி ந்திரத்தைப் 'புரச்சரணம்' செய்ய விரும்பிய ஈசான் அது ற்றிக் குருதேவரிடம் வினவினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஈசானிடம்): "உன் மனத்தில் என்ன தான்றுகிறதோ அது போலச் செய். இப்போது மனத்தில் ந்தவிதச் சந்தேகமும் இல்லையே? வேதமார்க்கம் கலி கத்திற்கு ஏற்றதல்ல. தந்திரமார்க்கம் பின்பற்றுவதற்கு ளிது."

ஈசான்: "பிராயச்சித்தம் செய்வது போன்ற நிலையில், தைச் செய்ய நிச்சயித்திருக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "தந்திர மார்க்கத்தின்படி அதைச் சய்ய இயலாதா? பிரம்மமேதான் காளி! சக்தி! 'காளியும்,

ர்மமும் ஒன்றுதான் என்ற இரகசியத்தை அறிந்து நான், ம் அதர்மம் இரண்டையும் அடியோடு விட்டு விட்டேன்" கிறார் இராமப்பிரசாதர்."

ஈசான் : "பிரம்மமே ஆதிசக்தி என்று சண்டி தோத்திரம் கிறது. பிரம்மமும், சக்தியும் வேற்றுமை அற்றது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "வாயால் சொன்னால் மட்டும் போதுமா? த மனம் நன்றாக உணர்ந்தால்தான் பயனுண்டாகும்.

"சாதனைக்குப் பிறகு மனம் தூய்மை அடைகிறது. அப் து ஒருவனுக்கு இறைவன்தான் செயல்புரிபவன் என்பது கு விளங்குகிறது. இறைவனே மனம், புத்தி, பிராணனாக க்கிறான். நாம் வெறும் இயந்திரம் மட்டுமே."

குருதேவர் பாடினார்.

*நீயே யானையைச் சேற்றில் மாட்ட வைத்தாய்*
*முடவனை மலையைக் கடக்க வைப்பதும் நீயே!*

"மனம் தூய்மை அடைந்தால் புரச்சரணம் போன்ற ல்களை அவனே நம்மைச் செய்ய வைக்கிறான் என்பதை ணர்வாய். 'தாயே, நீ உன் தொழில்களைச் செய்கிறாய். ஆனால் தன், தான் செய்வதாகக் கூறுகிறான்.'

"இறைவனுடைய காட்சிக்குப் பிறகு எல்லாச் சந்தேகங் ம் அகன்று விடுகின்றன. அப்போது அவனுக்குச் சாதக க் காற்று வீசத் தொடங்குகிறது. படகோட்டி தனக்குச் கமாகக் காற்று வீசும்பொழுது பாய் மரத்தை உயர்த்தி டு ஓய்வாக உட்கார்ந்து புகை பிடிக்கிறான். அதுபோல வுளின் காட்சிக்குப் பிறகு பக்தன் கவலையற்று நிம்மதி இருக்கிறான்."

ஈசான் விடை பெற்றுக் கொண்டார்.

குருதேவர் ம–வுடன் தனிமையில் பேசத் துவங்கினார்.

"நரேந்திரன், ராக்கால், அதர், ஹாஸ்ரா இவர்களைப் பற்றி ன்ன நினைக்கிறாய்? இவர்கள் களங்கமற்ற வெள்ளை மனம் டைத்தவர்களா? என்னைப்பற்றி என்ன நினைக்கிறாய்?"

ம : "நீங்கள் எளியவர். அதே நேரத்தில் ஆழமானவர். களை அறிந்து கொள்வது என்பது எளிதல்ல. அது அரிய யல்."

குருதேவர் வாய் விட்டுச் சிரித்தார்.

## நவம்பர் 26, 1883

மணிமல்லிக்கின் வீடு. அங்கு சிந்தூரியாப்பட்டி பிரம்ம மாஜத்தின் ஆண்டு விழா அன்று நடைபெறவிருந்தது. மாடித் ழ்வாரத்தில் விழாவிற்குரிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந் ன. விழாவிற்கு ஏற்பாடு செய்தவர் மணிலால்.

வழிபாட்டு அறையில் ஆனந்தம் குடி கொண்டிருந்தது. றையின் உள்ளும் வெளியிலும் பச்சைக்கொடிகளும், மலர் ளும், மாலைகளும் தொங்க விடப்பட்டு அந்த இடம் தெய்விக ழகோடு பொலிந்து நின்றது. வழிபாட்டு அறையில் இருந்த டியார்கள் வழிபாடு எப்போது ஆரம்பிக்கும் என்று வலுடன் எதிர்பார்த்திருந்தனர். அறையில் அனைவருக்கும் ட்கார இடம் போதவில்லை. எனவே மேற்குப் புறத்தில் ள்ள திறந்த மாடியில் பலர் உலாவியபடி இருந்தனர். ன்னும் சிலர் ஆங்காங்கு போடப்பட்டுள்ள பெஞ்சுகளில் ட்கார்ந்திருந்தனர். அடிக்கடி வீட்டுத் தலைவரும் அவருடைய றவினர்களும் விழாவிற்கு வந்திருந்த அன்பர்களை ன்மொழி கூறி அன்புடன் வரவேற்றனர்.

மாலை நேரம் வருவதற்கு முன்பே பிரம்மசமாஜ பக்தர்கள் ரத் தொடங்கி விட்டனர். அன்று அவர்கள் பெரும் உற் கத்தோடு காணப்பட்டனர். காரணம், அங்கு பகவான் ராமகிருஷ்ணர் நல்வருகை தர இருந்தார். பிரம்மசமாஜத் லவர்களான கேசவர், விஜயர், சிவநாத் முதலிய பக்தர்களைக் நதேவர் ஆழ்ந்த அன்புடன் நேசித்து வந்தது அனைவருக் ம் தெரிந்ததே. ஆகவேதான் பிரம்மசமாஜ பக்தர்களுக்குக் நதேவரிடம் அதிக அளவில் அன்பு இருந்தது. ஹரிப் ரேமப் பித்து, கடவுள் கொள்கையில் திடநம்பிக்கை, ழந்தையைப் போல் இறைவனிடம் பேசுவது, இறைவன் பாருட்டு ஏங்கி அழுவது, மாதரை அன்னையாக மதித்து ணங்குவது, உலக விஷயங்களைப் பற்றியப் பேச்சுக்களைத் ரிப்பது, 'தைலதாரை[1] போலத்' தொடர்ந்து எந்நேரமும் னைப் பற்றியே பேசுவது, சமய சமரசக் கொள்கை, மற்ற ங்களை எள்ளளவும் வெறுக்காமை, பக்தர் உய்வதற்காக ன்னையிடம் அழுது அரற்றுவது—இவை போன்ற உன்னத ண செயல்களால் பிரம்மசமாஜ பக்தர்களுடைய மனத்தைக் காள்ளை கொண்டிருந்தார் குருதேவர். ஆகவே வெகு தொலை

1. எண்ணெய் ஒழுக்குப் போல.

் இருந்து கூட குருதேவருடைய தரிசனம் பெறுவதற்காகப் அன்பர்கள் வந்திருந்தனர்.

வழிபாடு ஆரம்பிக்குமுன் விஜயகிருஷ்ணகோசுவாமி லான பல பிரம்ம சமாஜ பக்தர்களுடன் ஸ்ரீராமகிருஷ்ணர் ாலிவு மிகுந்த முகத்தோடு சிரித்தபடியே பேசிக் கொண்டி தார். விழா மண்டபத்தில் விளக்கேற்றினர்கள். விரைவில் 'பாடு தொடங்க இருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சிவநாத் வரமாட்டாரா?"

பிரம்மசமாஜ பக்தர் : "வரமாட்டார் சுவாமி. இன்று ருக்கு அதிகமான வேலைகள் உள்ளன."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சிவநாதரைப்பார்ப்பதே எனக்கு ாந்தம். எப்போதும் அவர் பக்திப்பரவசத்தில் மூழ்கி க்கிறார். யாரைப் பலர் புகழ்கின்றனரோ, மதிக்கின்றனரோ ரிடம் இறைவனின் சக்தி நிச்சயமாகச் சிறிதேனும் இருக்க ண்டும். ஆனால் சிவநாதரிடம் ஒரு பெரிய குறை உள்ளது. ன்னசொல்லை அவர் காப்பாற்றுவதில்லை. என்னிடம் அவர் முறை 'தட்சிணேசுவரக் காளிகோயிலுக்கு வருகிறேன்' று சொன்னர். அதன்படி வரவில்லை. அதைப்பற்றிய ்தி எதுவும் சொல்லி அனுப்பவுமில்லை. இது சரியன்று. ைமை பேசுவதுதான் கலியுகத்தின் தவம் என்று சொல்லு கள். சத்தியத்தைக் கடைப்பிடித்தாலே போதும். றவனின் காட்சி கிட்டும். சத்தியத்துக்குக் கட்டுப்படா ல் படிப்படியாக எல்லாம் அழிந்துவிடும். இதை நன்றாக ா மனத்தில் வைத்துக் கொண்டுள்ளேன். அதனால்தான் பொழுதாவது மலங்கழிக்க வேண்டும் என்று சொல்லி டேனால், அந்த உணர்ச்சி எனக்கு ஏற்படாவிட்டாலும் கையில் தண்ணீர்ச் செம்புடன் ஒரு முறை சவுக்குத் ப்பை நோக்கிப் போய்வருவேன். எங்கே சத்தியத்தின் ுள்ள பிடிப்பு தளர்ந்து விடுமோ என்ற அச்சமே ்குக் காரணம்.

"எனக்கு இத்தகைய மனநிலை வந்த பிறகு கையில் பூக்களை த்துக் கொண்டு அன்னையிடம், 'அன்னையே! இதோ உனது ாத்தை எடுத்துக் கொள். இதோ உனது அஞ்ஞானத்தை த்துக்கொள். இவைகளுக்குப் பதிலாக தூய்மையான ிையை எனக்குக் கொடு. தாயே! இதோ உனது தூய்மை

தோ உனது மாசு. இரண்டையும் எடுத்துக்கொள். சுத்த த்தியை மட்டும் எனக்குக்கொடு. தாயே! இதோ நீ அளித்த ர்மை. இதோ உன்னுடைய தீமை. இவ்விரண்டையும் டுத்துக்கொள். சுத்த பக்தியை மட்டும் எனக்குக் கொடு. யே! இதோ, உனது புண்ணியம். இதோ உனது பாவம். ண்டையும் எடுத்துக்கொள். சுத்த பக்தியை மட்டும் எனக்கு ாடு.' என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருப்பேன், ஆனால், ன்னையே! இதோ, உனது சத்தியத்தை எடுத்துக்கொள். தோ உனது பொய்யை எடுத்துக்கொள் என்ற வார்த்தைகளை ட்டும் என்னால் சொல்ல முடியவில்லை. என்னால் எல்லா ற்றையும் அன்னையிடம் கொடுக்க முடிந்தது. ஆனால் ண்மையை மட்டும் கொடுக்க முடியவில்லை."

பிரம்மசமாஜத்தின் விதிகளுக் கேற்ப வழிபாடு ஆரம்ப யிற்று. மேடைமீது சென்று ஆசாரியர் உட்கார்ந்தார். அவர் ன் அலங்கரித்த மண்டபம். அவர் இறைவணக்கத்தைக் கூறி டித்தார். பிறகு ஆசாரியர் பரப்பிரம்மத்தைக் குறித்து தத்தில் சொல்லப்பட்டுள்ள மகாமந்திரத்தை உச்சரிக்கத் ாடங்கினர். பழங்கால முனிவர்களின் திருவாக்கிலிருந்து ளிப்பட்ட புனிதநாமங்களைப் பிரம்மசமாஜ பக்தர்கள் ரேகுரலில் ஆசாரியரோடு சேர்ந்து பாடத் துவங்கினர்.

சத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம;
ஆனந்த ரூபம் அம்ருதம் யத்விபாதி;
சாந்தம் சிவம் அத்வைதம்;
சுத்தம் அபாப வித்தம்.

ஓங்காரத்துடன் கூடிய இந்த மந்திரம் பக்தர்களுடைய யவானில் எதிரொலியை எழுப்பியது.

பலருடைய உள்ளங்களில் உலக எண்ணங்கள் பெரும் லும் மறைந்துவிட்டன. அவர்களுடைய மனம் அமைதி னும், தியான நிலையை நாடியதாகவும் ஆயிற்று. லோருடைய விழிகளும் மூடியிருந்தன! சிலவிநாடிகள் தத்தில் சொல்லப்பட்ட சகுணப் பிரம்மத்தைத் தியானிக்க ாடங்கினர்கள்.

பரமஹம்சதேவர் பாவநிலையில் ஆழ்ந்திருந்தார், மூச்சு டாமல் நிலைத்த பார்வையுடன் சித்திரப்பாவை போன்று ட்கார்ந்திருந்தார். மனமாகிய பறவை ஆனந்தவெளியில் ங்கெங்கோ திரிந்து கொண்டிருந்தது. உடல்மட்டும் பறுமையாகக் காட்சி தந்தது.

சமாதிநிலை கலைந்து குருதேவர் கண்திறந்து நாலா கமும் பார்த்தார். அவையில் கூடியிருந்த எல்லோருடைய கனும் மூடி இருந்ததைக் கண்டார். 'பிரம்மம், பிரம்மம்' று மொழிந்தபடியே திடீரென்று எழுந்துநின்றார். வழிபாடு ந்தது. பிரம்மசமாஜ பக்தர்கள் தாளம், மிருதங்கம் முதலிய சக்கருவிகளோடு பக்திப்பாடல்கள் பாடத் தொடங்கினர். மகிருஷ்ணர் பிரேமானந்தப் பித்துப் பிடித்தவராய் அவர் டன் சேர்ந்து பாடினார், ஆடினார். அனைவரும் ஆனந்தத்தில் த்தவர்களாக அந்தத்தேவ நடனத்தைப் பார்த்துக் கொண் ந்தனர். விஜயரும், மற்ற பக்தர்களும் குருதேவரைச் றிச் சுற்றி வந்து நடனம் ஆடினார்கள். பலர் அந்த அற்புதக் சியைக் கண்ணாரக் கண்டும், இசை இன்பத்தைக் காதாரக் டு அனுபவித்தும் உலக நினைவு அறவே அற்றவர்களாகக் சியளித்தனர். சில விநாடிகள் ஹரியின் பிரேமரச மதுவைப் கிப் புலன் இன்பத்தை மறந்திருந்தனர். புலன் இன்ப நினைவு ர்களுக்கு அந்தக் கொஞ்ச நேரத்திற்குக் கசந்து யிருந்தது.

கீர்த்தனம் முடிந்ததும் எல்லோரும் கீழே உட்கார்ந்தனர். தேவர் என்ன சொல்லப் போகிறார் என்பதைக் கேட்க வலோடு அவரைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டனர். தம்மைச் றி அமர்ந்திருந்த பிரம்மசமாஜ பக்தர்களை நோக்கிக் தேவர் பேசத் துவங்கினார்.

"பற்றற்ற நிலையில் குடும்பத்தை நடத்துவது மிகவும் னம். பிரதாபர் ஒருமுறை 'சுவாமி நாங்கள் ஜனகராஜாவைப் ான்றவர்கள். ஜனகர் பற்றின்றி இல்வாழ்க்கை நடத்தினார். துபோல நாங்களும் வாழ்வோம்' என்று கூறினார். அதற்கு ன், 'நினைத்த உடனே ஜனகராகிவிட முடியுமா? ராஜா கர் எவ்வளவு தவம் செய்து ஞானத்தைப் பெற்றார் பது உங்களுக்குத் தெரியுமா? தலைகீழாகவும், தூக்கிய களுடனும் பல ஆண்டுகள் கடுமையான தவம் செய்தார். ன் பிறகுதான் அவர் குடும்பவாழ்க்கைக்குத் திரும்பினார்' று கூறினேன்.

அப்படியானால் இல்லறத்தார்க்குக் கதியே இல்லையா என்றால் க்கிறது; கண்டிப்பாக இருக்கிறது. சில நாட்கள் தனிமையில் னை பழக வேண்டும். தனிமையில் சாதனை பழகிப் தியைப் பெறுகிறோம்; ஞானம் அடைகிறோம். அதன் பிறகு சாரத்திற்குத் திரும்பினால், அதில் துன்பம் ஏதும் இல்லை. மையில் சாதனை பழகும்போது சம்சாரத்திலிருந்து முற்றிலும்

லகியிருக்க வேண்டும். அப்பொழுது மனைவி, மகன், மகள்
ய், தந்தை, சகோதரன், சகோதரி, உறவினர்கள் எவருமே
ருகில் வராதபடி பார்த்துக் கொள்ளவேண்டும். தனிமையில்
தனம் பழகும்போது, 'எனக்கு உற்றார், உறவினர் என்று
வருமே இல்லை. ஈசுவரன்தான் எனக்கு எல்லாம்' என்று
ண்ண வேண்டும். இறைவனிடம் ஞானத்திற்காவும்
க்திக்காகவும் அழுது அழுது புலம்ப வேண்டும்.

குடும்பத்தில் இருந்து விலகித் தனிமையில் எவ்வளவு
ட்கள் இருக்க வேண்டுமென்று கேட்பீர்களாயின், ஒரே
ரு நாள் விலகி இருந்தாலும் நல்லதுதான். மூன்று நாட்கள்
ருக்க முடிந்தால் மிகவும் நல்லது; பன்னிரெண்டு நாட்கள்,
ருமாதம், மூன்றுமாதங்கள், ஓர் ஆண்டு இப்படியாக யாருக்கு
வ்வளவு முடிகிறதோ அவ்வளவு நாட்கள் தனித்து
ருக்கலாம். ஞானம், பக்தி இவற்றை அடைந்த பின்னர்
ல்லறத்தில் இருந்தால் பயம் எதுவும் இல்லை. கையில்
ண்ணெய் பூசிக்கொண்டு பலாப்பழத்தை அறுத்தால்
கயில் பிசின் ஒட்டிக்கொள்ளாது. கண்ணாமூச்சி விளையாட்டில்
ாய்ச்சியைத் தொட்டுவிட்டால் பிறகு பயம் இல்லை. ஒரு முறை
ரிசமணியைத் தொட்டுப் பொன்னாகிவிடு; பொன்னாக மாறிய
ன் ஆயிரம் ஆண்டுகள் மண்ணில் புதைந்துகிடந்தாலும்,
ண்ணைத்தோண்டினால் பொன்னாகவே இருப்பாய்.

"பாலைப் போன்றது மனம். இந்த மனத்தைக் குடும்பமாகிய
ண்ணீரில் வைத்தால் பாலும் தண்ணீரும் கலந்து
டுகின்றன. ஆகவே பாலைத் தனியான இடத்தில் வைத்துத்
யிராகமாற்றி, அதைக் கடைந்து வெண்ணெய் எடுக்க
வண்டும். தனிமையில் சாதனைகள் பழகி மனமாகிய தயிரில்
ருந்து, ஞானம், பக்தி என்ற வெண்ணெயைக் கடைந்
தடுக்க வேண்டும். அப்பொழுது அந்த வெண்ணெயைச்
லபமாகச் சம்சாரமாகிய தண்ணீரில் வைத்திருக்கலாம். அந்த
வெண்ணெய் சம்சாரமாகிய தண்ணீருடன் ஒருபோதும் கலந்து
டாது. சம்சாரத் தண்ணீரின் மேலே ஒட்டிக் கொள்ளாமல்
தக்கும்."

ஸ்ரீ விஜயகிருஷ்ண கோசுவாமியைக் குருதேவர் பார்த்தார்.
விஜயகோசுவாமி சில நாட்களுக்கு முன்புதான் கயையி
ருந்து திரும்பி வந்திருந்தார். அங்கே ஏகாந்த வாசமும், சாதுக்
ளின் நேசமும் அவருக்குப் பல நாட்கள் கிடைத்திருந்தன.
குருதேவரை இப்போது காண வந்த அவர் காவியுடை

ரிந்திருந்தார். அவரது தோற்றம் மிகவும் அழகாக மைந்திருந்தது. அவருடைய பார்வை எப்போதும் உள் க்கியபடியே இருப்பதுபோல் தோன்றியது. குருதேவரின் கில் அவர் குனிந்த தலையுடன் அமர்ந்திருந்தார். அவர் நா ஆழ்ந்து சிந்திப்பவராகக் காணப்பட்டார்.

விஜயரையே பார்த்துக் கொண்டிருந்த குருதேவர் ரிடம் "விஜயரே! நீர் இடம் பிடித்தாகி விட்டதா? இதைக் ருங்கள். இரண்டு சாதுக்கள் தனித்தனியாகச் சுற்றுப் ணம் செய்து கொண்டே ஒரு பட்டணத்தை அடைந் கள். அவர்களுள் ஒருவர் மிகுந்த ஆச்சரியத்தோடு டணத்தின் வீதிகள், கடைகள், வீடுகள் முதலியவற்றைப் த்துக் கொண்டிருந்தார். அந்தச் சமயம் மற்ற சாதுவை ர் சந்திக்கநேர்ந்தது. அப்பொழுது அவர், 'நீ பட்டணத்தை சரியத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறாயே! உனது டை முடிச்சுகள் எல்லாம் எங்கே?' என்று கேட்டார். ற்கு முதல் சாது, 'முதலில் நான் இடம் பிடித்து, அதில் டை முடிச்சுகளை வைத்துவிட்டு, அறையைப் பூட்டிக் ண்டு, கவலையில்லாமல் வெளியே கிளம்பியிருக்கிறேன். பொழுது பட்டணத்தின் அழகைப் பார்த்துக் கொண்டு கிறேன்' என்று பதில் கூறினார். அதனால் தான் நீர் இடம் த்துக் கொண்டு விட்டீரா என்று கேட்டேன். (ம- ியவர்களிடம்) இதோபார், இவ்வளவு நாட்களாக யரின் நீர் ஊற்று மூடி இருந்தது. இப்பொழுது திறந்து ண்டது.

(விஜயரைப்பார்த்து) "சிவநாதர் பல தொல்லைகளில் மூழ்கி ப்பதைப் பாருங்கள். அவர் பத்திரிகைக்கு எழுத வேண்டி ாது. மேலும் பல பணிகளைச் செய்ய வேண்டியுள்ளது. துவாக செயல்களைச் செய்தாலே அமைதி என்பது போய் கிறது. பல்வேறு எண்ணங்களும் கவலைகளும் சூழ்ந்து ள்கின்றன.

'அவதூதர் தாம் ஏற்றுக் கொண்ட இருபத்து நான்கு குருக் ் பருந்தை ஒரு குருவாக ஏற்றுக் கொண்டிருந்தார். இது வதத்தில் சொல்லப்பட்டுள்ளது. ஓரிடத்தில் செம்படவர்கள் பிடித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு பருந்து வந்து க் கொத்தி எடுத்துச் சென்றது. அந்த மீனைக் கண்டதும் ர் ஆயிரம் காகங்கள் அந்தப் பருந்தைத் துரத்தின. ா' என்று கத்திக் கொண்டு பெரிய கலவரத்தைத் தோற்று ன. மீனுடன் எந்தத் திசையில் பருந்து சென்றதோ,

ந்தத் திசையை நோக்கி எல்லாக் காகங்களும் துரத்திச் ன்றன. பருந்து தெற்கு நோக்கிச் சென்றபோது கங்களும் தெற்கே சென்றன. வடக்குநோக்கிப் பறந்த ாது வடக்கே சென்றன. இவ்வாறே கிழக்கிலும், மேற்கிலும் ந்து சுற்றிச் சுற்றி அலைந்தது. கடைசியில் என்ன செய்வது ாறு அறியாமல் திகைத்த போது அதன் அலகிலிருந்த மீன் ழ விழுந்து விட்டது. அப்போது காக்கைகள் பருந்தை ட்டு விட்டு மீன் விழுந்த இடத்தை நோக்கிச் சென்றன. ந்து கவலையற்று ஒருமரக்கிளையில் போய் உட்கார்ந்து ாண்டது. பிறகு தனக்குள், 'இந்தச் சின்னஞ் சிறு மீன்தான் ாக்கு எவ்வளவு கலவரத்தை விளைவித்து விட்டது! இப்போது ா என்னிடம் இல்லை. நான்கவலை நீங்கி அமைதியாக நக்கிறேன்!' என்று எண்ணிக்கொண்டது.

''அவதூதர் பருந்திடமிருந்து இந்தப் பாடத்தைக் கற்றுக் ாண்டார். எதுவரை நம்மிடம் மீன் இருக்குமோ அதாவது சைகள் இருக்குமோ அதுவரை உலக விவகாரங்கள் நக்கும். அவற்றால் உண்டாகக் கூடிய துன்பம், கவலை, மைதியின்மை ஆகியவையும் கூடவே இருக்கும். ஆசையைத் ந்த உடனேயே காமங்கள் விடுபடுகின்றன. அமைதி ஆகவே கிட்டுகிறது.

''பயன் கருதாது பணிபுரிவது நல்லது. அதனால் மன மைதியின்மை,பரபரப்பு, கவலை முதலியவை ஏற்படுவதில்லை. னால் அது மிகவும் கடினமானது. பயனை எதிர்பார்க்காமல் ரியம் செய்வதாக நாம் எண்ணுகிறோம். ஆனால் எங்கிருந்தோ சைகள் நம்மையறியாமலேயே நம்மிடம் வந்து ஒட்டிக் ாள்கின்றன. முதலில் பல சாதனைகள் பழகி இருந்தால், ந்த சாதனைகளின் பயனாக ஒரு சிலரால் மட்டுமே பயன் தாமல் காரியம் செய்ய முடிகிறது. ஆனால், கடவுளின் ட்சிக்குப் பின் பயன்கருதாமல் காரியங்களை மிக எளிதாகச் ய்யலாம். ஆண்டவன் தரிசனத்திற்குப் பிறகு அநேகமாகக் ரியங்களைச் செய்யாமல் விட்டுவிடும் நிலை ஏற்படுகிறது. வுளைக் கண்ட பின்னரும் ஏதோ இரண்டொருவர் மட்டுமே ரதர் போன்றவர்கள்) மக்களுக்குப் போதிப்பதற்காகக் ரியங்களை செய்கின்றனர்.

''அவதூதருக்கு மற்றொரு குரு உண்டு. தேனீ தான் ந்தக் குரு. பல நாட்கள் மிகவும் கஷ்டப்பட்டுத் தேனைச் ர்த்து வைக்கிறது தேனீ. ஆனால், அந்தத் தேன் அதற்கு

ணாவாவதில்லை. எவனோ ஒருவன் வந்து, கூட்டை உடைத்துத் னை எடுத்துச் சென்று விடுகிறான். அவதூதர் தேனீயிடம் ற பாடம் 'சேர்த்து வைக்கக் கூடாது' என்பதேயாகும். துக்கள் கடவுளை நூற்றுக்கு நூறு நம்பி இருக்க வேண்டும். வர்கள் எதையும் சேர்த்து வைக்கக் கூடாது.

'இல்லறத்தார் விஷயம் அப்படியல்ல. அவர்களுக்குக் டும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய அவசியம் இருக்கிறது. கவே, சேமிப்பு அவர்களைப் பொறுத்த வரையில் அவசிய னது. பறவையும் சாதுவும் சேர்த்து வைப்பதில்லை. ஆனால், வை குஞ்சு பொரித்தால் சேர்த்து வைக்கிறது. குஞ்சுக்காக லகில் உணவைச் சேகரித்துக் கொண்டு வருகிறது.

"விஜயரே, இன்னும் கேளுங்கள். ஒரு சாதுவிடம் மூட்டை டச்சுக்களும் முடிச்சுபோட்டத் துணிகளும் இருந்தால் அவனை பாதீர். நான் பஞ்சவடியில் ஆலமரத்தடியில் இப்படிப் ட சாதுக்களைப் பார்த்திருக்கிறேன். அம்மாதிரியான துக்கள் இரண்டு, மூன்று பேர் உட்கார்ந்திருந்தனர். ஒருவன் ப்பைச் சுத்தம் செய்து கொண்டிருந்தான். இன்னொருவன் ந்த துணியைத் தைத்துக் கொண்டிருந்தான். எல்லோரு க ஒரு பெரிய மனிதரின் வீட்டில் நடந்த விருந்தைப்பற்றி பளந்து கொண்டிருந்தார்கள். 'அடேயப்பா! அந்தப் ாக்காரன் லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவு செய்தான். துக்களுக்கு வயிறு நிறையச் சாப்பாடு போட்டான். பூரி, லேபி, பேடா, பர்பி, மால்பூவா முதலிய பல திண்பண்டங் ச் செய்திருந்தான்' என்று பலவாறாக வீண்பேச்சு பேசிக் ாண்டிருந்தார்கள்." (எல்லோரும் சிரித்தனர்).

விஜயர்: "ஆம் சுவாமி. கயாவில் இப்படிப்பட்ட துக்களைக் கண்டிருக்கிறேன். அவர்களை, கயாவைச் சேர்ந்த ட்டாவாலா சாதுக்கள் என்பார்கள்." (எல்லோரும் த்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (விஜயரைப் பார்த்து): "இறைவனிடம் ரமை ஏற்பட்டு விட்டால் செயல்கள் தாமாகவே நழுவி கின்றன. எவர்களை பகவான் செயல்களில் ஈடுபடுத்து னோ அவர்கள் செய்யட்டும். உனக்கு இப்போது பான சமயம் வந்திருக்கிறது. எல்லாவற்றையும் துறந்து டு, மனத்திடம், 'ஏ, மனமே! நீ பார், நானும் பார்க்கிறேன். ற எவரும் பார்க்காமல் இருக்கட்டும்' என்று கூறு."

இவ்வாறு சொல்லிவிட்டு பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் ஈடும் ணயும் அற்ற தமது இனிய குரலில் இசை மழையைப் ாழிய ஆரம்பித்தார்.

அருளுரு வாய சியாமா அன்னையை நெஞ்சே ஆர்வம்
பெருகிட உள்ளே வைத்துப் பேணுதி; நானும் நீயும்
உருகியே தரிசித் தின்பம் உற்றிடு வோம்; மற்றோரை
அருகிலும் வாராமற்செய் தடக்கியே தடுப்பாய் நீயே.
அன்னையை ஏகாந்தத்தில் அன்புசெய் தருளைத்துய்ப்பாய்!
மன்னிய காமம் மோகம் மற்றுள புறத்தில் உய்ப்பாய்!
இன்னியல் நாவைமட்டும் இடையிடை அன்னை தன்னைத்
துன்னியே அழைக்கும் வண்ணம் துணையென வைத்தி ருப்பாய்!
இழிவுறும் ஆசை யின்காற் றேனும் உட்புகவி டாதே!
அழிவுறும் போக்கும் கெட்ட மதியும்உள் அணுக ஒட்டேல்!
விழியெனும் உண்மை ஞானம் மேவியே காவல் காக்க!
பழிபடா அஃதுநம்பால் பரிந்திருந் துதவி செய்க!

(விஜயரிடம்) "ஆண்டவனிடம் சரண் புகு. நாணம், சம் என்பவற்றையெல்லாம் விட்டு விடு. நான் வானின் பெயரைச் சொல்லி நடனமாடினால் மக்கள் னைப்பற்றி என்ன நினைப்பார்கள் என்ற எண்ணங்களை ல்லாம் விட்டுவிடு.

"நாணம், வெறுப்பு, அச்சம் இம்மூன்றும் இருக்கக் ாது. வெட்கம், வெறுப்பு, பயம், குலப்பெருமை, யமான ஆசைகள் முதலியன வெல்லாம் பந்தங்களே. த பந்தங்களைக் களையும் போதுதான் ஜீவனுக்கு முக்தி டைக்கிறது.

"பந்தங்களால் கட்டுப்பட்டவன் ஜீவன். பந்தங் லிருந்து விடுபட்டவன் சிவன். பகவானிடம் பிரேமை ாடாவது, மனிதனுக்கு எளிதில் கிடைக்கக் கூடியதல்ல. ஷில், மனைவி கணவனிடம் காட்டும் ஒருமுகமான அன்பு ன்ற அந்த நிஷ்டாபக்தியை இறைவனிடம் காட்டினால், தோன்றும். தூயபக்தி உண்டாவது மிகமிகக் கடினம். யால் பிராணன், மனம் அனைத்தும் இறைவனிடம் ஒடுங்கு றன. அதன் பிறகு பாவம் தோன்றுகிறது. பாவநிலையில் தன் வியப்படைகிறான். மூச்சு ஒரே சீராக மாறுகிறது. பகம் தானாகவே உண்டாகிறது. துப்பாக்கியிலிருந்து ாடைச் சுடும் சமயத்தில் எவன் குண்டைச் சுடுகிறானோ ன் பேசாமல் இருக்கிறான். அப்போது மூச்சும் ஒரே சீராக. ுகிறது.

"ஆனால், பிரேமை ஏற்படுவது அவ்வளவு எளிதல்ல. சைதன்யதேவருக்குப் பிரேமை உண்டாகியிருந்தது. இறைவனிடம் பிரேமை உண்டானால், உலகப்பொருட்களை மறந்து விடுகின்றோம். உலகத்தை மறந்து விடுகின்றோம். அன்புக்குப் பாத்திரமான நமது உடலைக் கூட மறந்து விடுகின்றோம்."

இவ்வாறு சொல்லிக் கொண்டு குருதேவர் மறுபடியும் பாடத் துவங்கினார்.

அந்த நாள் வருவதென்றோ? ஆண்டவன் பேர் சொல்லிடுங்கால்
சிந்திடும் கண்ணீர் வழிந்து சிந்தைமிக நைந்திடுமோர்,
அந்த நாள் வருவதென்றோ?

வாட்டுகின்ற சம்சார வாசனைதான் தீர்ந்தொழிந்து,
நீட்டுகின்ற உடல் சிலிர்த்து நிறை உரோமக் கூச்செறியும்,
அந்தநாள் வருவதென்றோ?

பேச்சு வார்த்தை தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. அழைப்பு அனுப்பப்பட்டிருந்த மற்றும் சில பிரம்மசமாஜ அன்பர்கள் இப்போது வந்து உட்கார்ந்தனர். அவர்களில் சில பண்டிதர்களும், உயர்ந்த அரசாங்கப் பதவியில் உள்ளவர்களும் இருந்தனர். அதில் ரஜனிநாத் ராய் என்பவரும் ஒருவர். குருதேவர் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார்.

"பாவநிலை ஏற்பட்டால் மூச்சு அமைதி அடைகிறது. அர்ச்சுனன் தனது இலட்சியத்தில் குறியாக இருந்த பொழுது மீனின் கண்[1] மட்டுமே அவனுடைய பார்வையில் இருந்தது. மற்ற எதிலும் அவனுடைய பார்வை செல்லவில்லை. இன்னும் சொல்லப் போனால், மீனின் கண்ணைத்தவிர அவன் வேறு எதையும் பார்க்கவில்லை. இந்த நிலையில் மூச்சு அடங்கி விடுகிறது. கும்பகம் ஏற்படுகிறது.

"இறைவனைக் கண்டதற்கான ஒரு அறிகுறி, அவனுள் இருந்து மகாவாயு 'கட, கட' வென்று கிளம்பி சிரசின் பக்கமாகச் செல்கிறது. அப்பொழுது சமாதிநிலை ஏற்பட்டால் ஆண்டவனுடைய தரிசனம் கிடைக்கிறது.

(சற்று முன்பு அறைக்கு வந்த பிரம்ம சமாஜ பக்தர்களைப் பார்த்து) "யார் பகவானிடம் பக்தி இல்லாமல் வெறும் பண்டி

1. திரௌபதியை மணந்து கொள்ள வைத்த போட்டி இது. மேலே வேகமாகச் சுழலும் மீன் பொம்மையின் கண்ணை, கீழே உள்ள தெளிந்த நீரில் பார்த்தபடி அடித்து வீழ்த்த வேண்டும்.

களாக மட்டும் இருக்கிறார்களோ, அவர்களுடைய பேச்சு ண்பட்டதாக இருக்கும். சாமாத்தியாயி என்று ஒரு ன்டிதர். அவர் 'ஈசுவரன் ரசம் (அன்பு) அற்றவர். நீங்கள் ங்களுடைய பிரேம பக்தியினால் அவரை ரசம் உள்ளவராக க்குங்கள்' என்று பேசினார். வேதம் எவரை 'ரசஸ்வரூபி' ன்று சொல்லுகிறதோ, அவரை ரசம் இல்லாதவர் என்று ால்வதா! இதிலிருந்து இறைவன் எப்படிப்பட்டவர் ர்பதை அவர் சற்றுக்கூட அறியவில்லை என்பது தெரிகிறது. கவேதான் இத்தகைய குழப்பமான பேச்சு அவரிடமிருந்து ந்தது. 'என்னுடைய மாமன் வீட்டு மாட்டுத் தொழுவத்தில் திரைகள் ஏராளம் இருக்கின்றன' என்று ஒருவன் சொன்னான். திலிருந்து அவனிடம் குதிரைகளே இல்லை என்பதை அறிந்து ாள்ளலாம். ஏனென்றால் மாட்டுத் தொழுவத்தில் குதிரைகள் ருக்காது (எல்லோரும் சிரித்தனர்).

"செல்வம், பெயர், பதவி, புகழ் இவற்றினால் சிலர் அகங் ரம் கொள்ளுகின்றனர். இவைகளெல்லாம் இரண்டொரு ட்களுக்குத்தான். இவைகளில் எதுவும் நம்முடன் வரப் ாவதில்லை. இக்கருத்துக் கொண்ட பாட்டு ஒன்று உண்டு.

நினைவில் இதனை வைத்திடுவாய்! நெஞ்சே, உனது சொந்தமென்று
நினைக்கப் புவியில் எவருமில்லை! நிலத்தில் அலைதல் நீவீணே!
வினையாம் மாயை வலைவீழ்ந்து விமலை அன்னை நாமமதை
நினைக்க மறந்து விடவேண்டாம்! நெஞ்சே, இதை நீ நினைவுகொள்வாய்!
எந்தத் துணைவி நலங்கருதி இந்த உலகில் வாழ்வாயோ
சொந்த மனைவியவளும் உனைத் தொடர மாட்டாள் மரணதினம்!
வந்து வீதி தனில்நின்று வழியும் அனுப்பி விடை பகர்வாள்!
பந்தம் இழந்து நின் பிணத்தைப் பார்த்து வெறுப்பாள் தீமையென்றே!
ஒரு நாள் அல்ல (து) இரு நாட்கள் உலகோர்உன்னைப் போற்றிடுவார்!
கரிய காலன் வருங் காலம் அந்தச் சிறப்பும் அழிவுறுமே.

"செல்வச் செருக்கு வரக்கூடாது. 'நான் பணக்காரன்' ன்று நீ நினைத்தால் உன்னைவிடப் பெரிய பணக்காரன் வன் இருக்கிறான். அவன் தன்னைப் பணக்காரன் என்று னத்தால் அவனையும் விட மிகப் பெரும் பணக்காரன் மற்றொருவன் இருக்கிறான். இருட்டியபின் மின்மினிப் பூச்சி ளிவந்ததும் இந்த உலகத்திற்கே தான்தான் வெளிச்சம் வதாக நினைக்கிறது. ஆனால்,சிறிது நேரத்தில் நட்சத்திரங்கள் தித்ததும் அந்தப்பூச்சியின் அகங்காரம் தானாக மறைந்து டுகிறது. நாம்தான் இந்த உலகத்திற்கு வெளிச்சம்

கிரேம் என்று நட்சத்திரங்கள் எண்ணத் துவங்குகின்றன. று நேரத்தில் சந்திரன் உதிக்கிருன். அப்பொழுது சத்திரங்கள் நாணத்திஞல் மங்கிப் போகின்றன. பிறகு திரன், 'என் ஒளியைப் பார்த்துத்தான் இந்த உலகமே ந்து மகிழ்கிறது. நான்தான் இவ்வுலகிற்கு ஒளி தருபவன்' று எண்ணுகிருன். எண்ணிக் கொண்டிருக்கும் பொழுதே ப உதயம் ஏற்படுகிறது. அதன் பிறகு சூரியன் நன்கு காசிக்கிருன். சந்திரன் மங்கிவிடுகிருன். சற்று நேரத்திற்குப் கு சந்திரனைக் காண இயலாமற்போகிறது. செல்வந்தர்கள் ற்றையெல்லாம் சிறிது சிந்தித்துப்பார்த்தால் செருக்கடைய ட்டார்கள்."

உற்சவத்தை முன்னிட்டு மணிலால் பல வகை உணவுப் ாருட்களைத் தயாரித்து ஒரு பெரிய விருந்திற்கு ஏற்பாடு ட்திருந்தார். அவர் மிகுந்த கவனத்தோடு ஸ்ரீராம ஷ்ணரையும் அங்கே கூடியிருந்த பக்தர்களையும் திருப்தி டையும்படி உபசரித்தார். எல்லோரும் வீடு திரும்பும்போது வு நெடுநேரமாகிவிட்டது. அப்படியிருந்தும், யாருக்கும் மாகிவிட்டதே என்ற சிந்தனை சிறிது கூட இல்லை. ழ்ச்சியுடன் பக்தர்கள் எல்லோரும் வீடு திரும்பினர்கள்.

# 15

# கேசவருடன் கடைசிச் சந்திப்பு

**புதன்கிழமை, நவம்பர் 28, 1883**

பிற்பகல் இரண்டுமணி. கல்கத்தாவில் சர்க்குலர் சாலையின் மேற்குப்புறத்தில் கேசவசந்திர சேனருடைய வீடாகிய 'கமலகுடீர்' இருந்தது. அதன் கிழக்கே உள்ள நடைபாதையில் ஒரு பக்தர், யாரோ ஒரு மகானை மிக்க ஆவலுடன், வழிமேல் விழி வைத்து எதிர்பார்த்தவண்ணம் அங்குமிங்குமாக நடந்து கொண்டிருந்தார். அவ்வாறு நடந்தவாறே பலர் அவ்வழியாக இங்குமங்கும் செல்வதையும், இன்னும் பல காட்சிகளையும் கண்டுகொண்டிருந்தார்.

கேசவர் மிகவும் நோய்வாய்ப்பட்டிருந்தார். அவருடைய உடல்நிலை நாளுக்குநாள் மோசமாகிக்கொண்டிருந்தது. இம்முறை அவர் பிழைத்தெழுவார் என்பதில் யாருக்கும் நம்பிக்கையில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் கேசவரை மிகவும் நேசித்தார். அவரைக் காணத் தட்சிணேசுவரத்தினின்று விரைந்து வந்துகொண்டிருந்தார். அவரை எதிர்நோக்கித்தான் அந்த பக்தராகிய ம-, அங்கு நடந்துகொண்டிருந்தார்.

'கமலகுடீர்' வீட்டிற்கு வடக்கே மங்களவாடி என்ற குடியிருப்புப் பகுதி இருந்தது. அங்கு பல பிரம்மசமாஜத்தவர்கள் வசித்து வந்தனர். கமலகுடீருக்கு எதிரில் விக்டோரியா கல்லூரி இருந்தது. அங்கு பிரம்மசமாஜத்தைச் சேர்ந்த மாதர்களும், உறுப்பினர்களின் புதல்வியர்களும் கல்வி பயின்று வந்தனர். அந்தக் கல்லூரிக்கு வடக்கே விசாலமான தோட்டத்தின் நடுவே அமைந்த வீட்டில் ஓர் ஆங்கிலேயக் குடும்பம் வசித்து வந்தது. அந்த வீட்டைப் பார்த்தபோது, அங்கு ஏதோ ஒரு சோக நிகழ்ச்சி நடைபெற்றிருக்கவேண்டும் என்று ம-வுக்குத் தோன்றியது. அது என்னவாக இருக்கும் என்று யோசித்துக்கொண்டிருந்தபொழுது, கருப்பு உடை அணிந்த காரோட்டி ஒரு சவப்பெட்டி தாங்கிய வண்டியை வீட்டிற்குள் ஓட்டிச் சென்றான். வீட்டிலிருந்தவர்கள் சோகமே வடிவெடுத்தவர்களாகக் காணப்பட்டனர். அங்கு யாரோ இறந்திருக்கிறார்கள் என்பதை ம- உணர்ந்துகொண்

டார். அவர் உள்ளத்தை வருத்தம் கவ்வியது. 'இந்தப் பூதவுடலை நீத்துவிட்டு, இறந்தவரின் ஆன்மா எங்கே செல்கிறது?' என்று ம- தனக்குள் எண்ணியவாறே நின்றிருந்தார்.

வடக்கேயிருந்து எத்தனையோ வண்டிகள் தெற்கே சென்ற வண்ணமிருந்தன. குருதேவர் வருகிறாரா என்று ஒவ்வொரு வண்டியையும் ம-, ஆவலுடன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

மாலை மணி ஐந்து இருக்கும். குருதேவரின் வண்டி வந்து சேர்ந்தது. குருதேவருடன் ராக்கால், லாட்டு மற்றும் ஓரிரு பக்தர்களும் வந்திருந்தனர். ம-வும் அவர்களுடன் சேர்ந்துகொண்டார்.

குருதேவர் வண்டியை விட்டு இறங்கியதும், கேசவரின் உறவினர்கள் விரைந்து வந்து குருதேவரை வரவேற்று மேல் மாடிக்கு அழைத்துச் சென்றனர். அங்கு விருந்தினர் அறைக்குத் தென்புறம் உள்ள தாழ்வாரத்தில் ஒரு கட்டில் போடப்பட்டிருந்தது. அந்தக் கட்டிலில் குருதேவர் சென்று அமர்ந்தார்.

குருதேவர் நீண்ட நேரம் அங்கேயே அமர்ந்து கேசவரின் வருகைக்காகக் காத்துக்கொண்டிருந்தார். கேசவரைக் காண வேண்டும் என்ற ஆசையுடன் துடித்துக்கொண்டிருந்தார். கேசவரின் சீடர்கள் பணிவான குரலில், ஸ்ரீராமகிருஷ்ணரிடம், கேசவர் ஓய்வு எடுத்துக்கொண்டிருப்பதாகவும், விரைவில் குருதேவரைக் காண்பதற்கு வந்துவிடுவார் என்றும் தெரிவித்தனர். கேசவரின் நிலைமை மோசமாக இருந்தது. எனவே அவருடைய சீடர்களும் வீட்டாரும் அவரை மிக்க எச்சரிக்கையுடன் கவனித்து வந்தனர். குருதேவருக்கோ கேசவரைப் பார்க்கும் ஆவல் மேலும் மேலும் அதிகரித்து அமைதியை இழந்தவராகக் கேசவரின் சீடர்களை நோக்கி, "குழந்தைகளே, அவர் இங்கு என்னிடம் வரவேண்டும் என்பது என்ன அவசியம்? நானே ஏன் உள்ளே சென்று அவரைப் பார்க்கக் கூடாது?" என்று கேட்டார்.

பிரசன்னர் (தாழ்மையாக): "சுவாமி, அவரே சில நிமிடங்களில் இங்கு வந்துவிடுவார்."

குருதேவர் : "சரிதான் போங்கள். நீங்கள் ஏன் இப்படி நிலைமையைக் குழப்புகிறீர்கள்? நானே உள்ளே போகிறேன்!"

உடனே பிரசன்னர் குருதேவரின் கவனத்தைத் திருப்பும் பொருட்டுக் கேசவரைப் பற்றிப் பேசத் தொடங்கினர்.

பிரசன்னர்: "இப்போதெல்லாம் கேசவர் முற்றிலும் மாறுபட்டவராக இருக்கிறார். தங்களைப் போலவே அவர் ஜகன்மாதாவிடம் பேசுகிறார். அம்பிகை பேசுவது அவருக்குக் கேட்கிறது. தேவி மொழிவதைக் கேட்டுச் சிரிக்கிறார்! அழுகிறார்!"

இவ்விதம் கேசவர் அன்னையுடன் பேசினர், சிரித்தார், அழுதார் என்பதைக் கேட்டதும் குருதேவர் தெய்விகப் பரவச நிலை அடைந்தார். அன்பர்கள் பார்த்துக்கொண்டிருக்கும் போதே அவர் சமாதியில் ஆழ்ந்தார்.

அப்போது குளிர்காலம். குருதேவர் பச்சை நிறமுடைய மெல்லிய 'பிளானல்' கம்பளிச் சட்டையை அணிந்து, அதன் மீது ஒரு சால்வையை போர்த்திக்கொண்டிருந்தார். நிமிர்ந்து உட்கார்ந்த நிலையில் கண்கள் நிலைகுத்தி இருந்தன. அசைவற்ற பார்வையுடன் நீண்ட நேரம் தெய்விகப் பரவசத்தில் மூழ்கியிருந்த அவரிடம் சமாதி கலைந்து சாதாரண விழிப்பு நிலைக்கு வருவதற்குரிய அறிகுறியொன்றும் காணப்படவில்லை.

மாலை சாய்ந்து இரவு நேரம் வந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் சாதாரண நிலைக்குச் சிறிது திரும்பினர். பக்கத்தில் இருந்த விருந்தினர் அமரும் கூடத்தில் விளக்கு ஏற்றப்பட்டது. குருதேவரை அங்கு அழைத்துச் செல்ல எண்ணி அதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தனர்.

சாதாரண நிலைக்குக் குருதேவரின் மனம் மெதுவாக இறங்கி வந்தபோது, மிகுந்த சிரமத்தின் பேரில் அவரை விருந்தினர் கூடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்த்தனர். அந்தக் கூடம், சோபாக்கள், சாய்வு நாற்காலி, மேஜை, கண்ணாடி போன்ற பல்வேறு வசதிகளுடன் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது.

குருதேவர் அங்கிருந்த ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்தார். அவ்விதம் அமர்ந்த அக்கணமே அவர் மீண்டும் வெளியுலக நினைவிழந்து பரவசத்தில் ஆழ்ந்தார். அந்த நிலையில் இருந்தபடி, அங்கிருந்த அலங்காரச் சாமான்களைப் பார்த்து, "இவையெல்லாம் முன்பு அவசியமாய் இருந்தன; இனி இவைகளால் என்ன பயன்?" என்று ஏதேதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தார். பின்னர் அவர் ராக்காலைப் பார்த்து, "ராக்கால், நீ இங்கே இருக்கிறாயா?" என்றார்.

இவ்விதம் வினவிய குருதேவர் வேறுதிசையில் தனது பார்வையைச் செலுத்தியபடி மீண்டும் பேசத் தொடங்கினார்:

"இதோ, இதோ ஜகன்மாதா! தேவீ! அம்மா! நீயும் வந்து விட்டாயா! காசிப் பட்டுப்புடவை உடுத்துக்கொண்டு எவ்வளவு அழகாகக் காட்சி அளிக்கிறாய்! தயவு செய்து இப்பொழுது என்னைத் தொந்தரவு செய்யாதே. உட்கார்! அம்மா, உட்கார்!"

குருதேவர் ஆழ்ந்த பரவசத்தில் மூழ்கியிருந்தார். அறை முழுவதும் அந்தப் பரவசம் வெள்ளமாகப் பெருக்கெடுத்தோடுவது போலிருந்தது. நல்ல வெளிச்சம் இருந்த அந்த அறையில் பிரம்மசமாஜ அன்பர்கள் குருதேவரைச் சூழ்ந்து உட்கார்ந்து கொண்டார்கள். லாட்டு, ராக்கால், ம- மூவரும் குருதேவரின் அருகே அமர்ந்திருந்தனர். குருதேவர் இன்னும் தெய்விகப் பரவசத்தில் திளைத்தபடியே தமக்குத்தாமே பேசிக் கொண்டிருந்தார்.

"உடலும், ஆன்மாவும்! உடல் பிறந்தது, அது இறக்கும். ஆனால் ஆன்மாவுக்கோ இறப்பு என்பது இல்லை. கொட்டைப் பாக்கைப் போன்றது. பழுத்த பாக்கு ஓட்டுடன் ஒட்டிக் கொள்ளாது, தனியாக இருக்கும். அதனால் அது காயாக இருக்கும்போது, பாக்கை மேலோட்டிலிருந்து தனியாகப் பிரித்தெடுப்பது மிகவும் கடினம். ஈசனைத் தரிசித்தபின் ஒருவன் உடலோடு ஒன்றாகத் தன்னைக் கருதமாட்டான். அவனுக்கு உடற்பற்று நீங்கி விடுகிறது. அப்போது உடலும் ஆன்மாவும் இரு வெவ்வேறு பொருள்கள் என்ற ஞானம் அவனுக்கு உண்டாகிறது."

அச்சமயத்தில் கேசவர் அறைக்குள் நுழைந்தார். அவர் கிழக்கு வாயிற் கதவின் வழியாக உள்ளே வந்தார். நகரப் பொது மண்டபத்திலும் (டவுன் ஹால்), பிரம்மசமாஜக் கோவிலிலும் கேசவர் இடி முழக்கச் சொற்பொழிவுகளை நிகழ்த்திய போது பார்த்தவர்கள், அவர் எலும்பும் தோலுமாய் இளைத்த நிலையில் இப்போது இருப்பதைக் கண்டு அதிர்ச்சி அடைந்தனர். கேசவரால் நிற்க முடியவில்லை. சுவரை ஆதாரமாகப் பற்றிக் கொண்டே அவர் மெல்ல மெல்ல நகர்ந்து வந்தார்.

கேசவர் மிகச்சிரமத்தோடு நடந்து வந்து குருதேவர் அமர்ந்திருந்த சாய்வுக் கட்டிலின் முன் கீழே உட்கார்ந்தார். இதற்கிடையில், ஸ்ரீராமகிருஷ்ணர் சாய்வுக்கட்டிலிலிருந்து இறங்கித்

தரையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். கேசவர், குருதேவருக்கு முன்னல் தாழ்ந்து வணங்கி அவரது திருவடிகளில் தமது தலையை வைத்துக் கொண்டு நெடு நேரம் அப்படியே இருந்தார். வணக்கம் செய்து முடித்ததும் கேசவர் எழுந்து உட்கார்ந்து கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் இன்னும் தெய்விகப் பரவசநிலையில் இருந்தார். அவர் தமக்குள்ளே ஏதோ முணு முணுத்துக் கொண்டும், ஜகன்மாதாவிடம் பேசியபடியும் இருந்தார்!

அப்போது கேசவர் தமது குரலை ஒரு சிறிது உயர்த்தி 'சுவாமி, நான் வந்து விட்டேன். நான் இதோ இங்கே இருக்கிறேன்' என்று தெரிவித்துக் கொண்டார். இவ்விதம் சொல்லி விட்டு அவர் ஸ்ரீராமகிருஷ்ணரது இடது கையை ஏந்திக் கொண்டு அதை மெல்லத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தார். குருதேவரோ ஆழ்ந்த சமாதியில் மூழ்கி இருந்தார். தெய்விகப் பிரேமையில் தோய்ந்து தம்மை முழுவதும் இழந்திருந்தார். தமக்குள்ளே பேசிக் கொண்டிருந்த போதே அவரது திருவாயினின்றும் அமுதமொழிகள் தடையின்றி மடை திறந்த வெள்ளம் போல் பெருகி வரத் தொடங்கின. குழுமியிருந்த பக்தர்கள் மந்திரவசப்பட்டவர்கள் போன்று பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் சொல்லமுதத்தைப் பருகினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஒரு மனிதன் உபாதிகளோடு சம்பந்தபட்டிருக்கும் வரையில் அவன் பலவற்றைக் காண்கிறுன். இவர் கேசவர், அவர் பிரசன்னர், இவர் அமிருதர், என்றெல்லாம் பல வாருகக் காண்கிறுன். பூரண ஞானம் ஏற்பட்ட பின்போ ஒரே சைதன்யத்தை எங்கும் காண்கிறுன். இந்தப் பூரண ஞானம், இன்னென்றையும், அதாவது சைதன்யமே உலகமாகவும் உயிர்களாகவும், இருபத்து நான்கு தத்துவங்களாகவும் ஆகியுள்ளது என்பதை அவன் உணருமாறு செய்கிறது.

"ஆனல் தெய்வசக்தியின் பிரகாசம் உயிர்களிடத்து ஒரேபடித்தாயில்லாமல் பலவிதமாய் வெளிப்படுகிறது. அவரே(பகவானே) எல்லாமாகியுள்ளார் என்பதில் ஐயமில்லை. ஆனல் ஆண்டவனின் பிரகாசம் சிலவற்றில் மற்ற பொருள்களிலிருப்பதைக் காட்டிலும் கூடுதலாக வெளிப்படுகிறது.

"வித்யாசாகர் ஒரு முறை என்னிடம், 'அப்படியானல், இறைவன் சிலருக்குப் பேராற்றலையும், மற்றும் சிலருக்குக் குறைந்த ஆற்றலையும் கொடுத்திருக்கிறுரா?' என்று கேட்டார்.

அதற்கு நான், 'ஆமாம். அப்படியில்லாவிட்டால், ஒரு மனிதன் மட்டும் ஐம்பது பேர்களைத் தோற்கடித்து விடுகிறானே! அது எப்படி இயலும்? மேலும் தங்களைப் பார்ப்பதற்கு நாங்கள் இப்போது வந்திருப்பதற்கு என்ன காரணம்?' என்று கேட்டேன்.

"ஆண்டவனின் லீலை எந்த இடத்தில் பிரகாசமாக வெளிப் படுமோ அந்த இடத்தில் தெய்விக ஆற்றல் சிறப்பாகக் காணப் படுகிறது. ஜமீன்தார் ஒருவர் அவருடைய வீட்டில் எல்லா இடங்களிலும் இருப்பார்; தமக்குச் சொந்தமான எந்த இடத் தில் வேண்டுமாயினும் அவர் இருப்பார்; ஆனாலும் ஒரு குறிப் பிட்ட வரவேற்பறையில் தான் அவரைப் பெரும்பாலும் காண முடியும். அவ்வறையில்தான் பொதுவாக அவரைச் சந்தித்துப் பேச முடியும். பக்தனே பகவானின் வரவேற்பறை ஆவான் இறைவன் தமது பக்தனின் உள்ளத்தில் லீலை புரிவதற்கு மிகவும் விரும்புகிறார். அத்தகைய பக்தனின் உள்ளத்தில் ஆண்டவனுடைய சிறப்பாற்றலின் பிரகாசம் விளங்குகிறது. அதற்கான அடையாளம் என்ன? ஒருவன் பெரிய பெரிய காரியங்களைச் சாதிக்கும் போது, ஈசனது சிறப்பாற்றல் அவனிடம் பிரகாசிக்கிறது என்று அறிந்து கொள்ளுங்கள்.

"இந்த ஆதிசக்தியும், பரப்பிரம்மமும் ஒன்றே, வெவ் வேறான இரண்டல்ல. இந்த இரண்டுள் ஒன்றைத் தவிர்த்து விட்டு மற்றொன்றை நினைப்பதென்பது முடியாது. மாணிக்கக் கல்லும் அதன் ஒளியும் போன்று. மாணிக்கக் கல்லை விடுத்து அதன் ஒளியை மட்டும் நினைப்பது நடக்காத காரியம். அது போன்றே ஒளியை நீக்கி, மாணிக்கக்கல்லை மட்டும் எண்ணுவது என்பதும் இயலாது. வளைந்து வளைந்து செல்வது பாம்பின் இயல்பு. பாம்பை நீக்கி விட்டு அதனுடைய வளைந்து செல்லும் இயல்பை மட்டும் நினைக்க முடியுமா? பாம்பின் வளைந்து செல்லும் இயல்பைத் தவிர்த்து விட்டுப் பாம்பை மட்டும் நினைப்பதென்பதும் முடியாத காரியம். அதைப் போன்றே ஆதிசக்தியும் பரப்பிரம்மமும்.

"ஆதிசக்திதான் ஜீவர்களாகவும், இருபத்து நான்கு தத்து வங்களாகவும் ஆகியுள்ளது. அனுலோமம், விலோமம்.

'ராக்கால், நரேந்திரன் முதலிய இந்த இளைஞர்களைப் பற்றி நான் ஏன் இவ்வளவு கவலைப்படுகிறேன்? ஹாஸ்ரா ஒரு சமயம் என்னைப் பார்த்து, 'இவர்களைப் பற்றி இப்படிக் கவலைப்பட்டுக்

கொண்டிருந்தால் எப்போதுதான் நீங்கள் பகவானை நினைப்பது?' என்று வினவினான். (கேசவரும் மற்றவர்களும் புன்முறுவல் பூத்தனர்).

"ஹாஸ்ரா அவ்வாறு சொன்னதைக் கேட்டு நான் மிகவும் வேதனைப்பட்டேன். ஜகன்மாதாவிடம், 'அம்மா! என் நிலை இப்படி ஆகியதே! இந்த இளைஞர்களைப் பற்றியெல்லாம் நீ ஏன் கவலைப்படுகிறாய் என்று கேட்டு ஹாஸ்ரா என்னைக் கோபித்துக் கொள்கிறானே!' என்று முறையிட்டேன். பிறகு போலாநாத் என்பவரிடம் இதைப் பற்றிக் கேட்டேன். போலாநாத்[1] உண்மையை விளக்கிச் சொன்னார். 'மஹாபாரதத்தில் இவ்விஷயம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சமாதியில் நிலைத்த ஒருவரின் மனம், சமாதி நிலையிலிருந்து கீழிறங்கி வந்ததும் எங்குத் தங்க முடியும்? அவருக்குப் பிடிப்பு எது? அது சத்துவகுணம் நிறைந்த பக்தர்களின் தொடர்பே' என்று என் மனநிலைக்கு விளக்கம் கூறினார் போலாநாத். மஹாபாரதத்தின் இந்தக் கருத்தைக் கேட்டு நான் மனக்கவலையிலிருந்து விடுபட்டேன். (அனைவரும் சிரித்தனர்).

"ஹாஸ்ராவின் மீது குற்றம் கூறிப் பயனில்லை. சாதகனின் நிலையில் இருக்கும்போது, 'இது அல்ல, இது அல்ல' (நேதி, நேதி) என்று விசாரம் செய்து முழுமனத்தையும் இறைவனிடம் செலுத்த வேண்டும். ஆனால் சாதகனின் நிலை பழுத்து பரிபூரணத்துவத்தை எய்தியதும் நிலைமையே வேறாகிவிடுகிறது. இறைவனை அடைந்த பிறகு அனுலோம நியாயம் தான். (எதையெல்லாம் 'இதுவல்ல, இதுவல்ல' என்று தள்ளினோமோ அதையெல்லாம் பரிபூரண நிலை எய்திய பிறகு ஏற்றுக் கொள்வது). வெண்ணெயைப் பிரித்தெடுப்பதற்கு முதலில் மோரைக் கடைந்தாக வேண்டும். பிறகு மோர் தான் வெண்ணெய், வெண்ணெய் தான் மோர் என்பதை அறிந்து கொள்கிறோம். அது போலவே இறைவனே அனைத்துமாய் ஆகியிருக்கிறார் என்பதைத் திட்டவட்டமாகத் தெரிந்து கொள்கிறோம். சில இடங்களில் அவருடைய பிரகாசம் மிகுந்த அளவில் காணப்படுகிறது. வேறுசில இடங்களில் குறைவாகக் காணப்படுகிறது.

"கடல் பொங்கியெழும்போது அருகிலுள்ள நிலப் பரப்பின்மீது எங்கு பார்த்தாலும் ஒரே தண்ணீர் மயமாக

---

1. போலாநாத் என்பவர் தட்சிணேசுவரக் காளி கோவிலில் பணிபுரிந்தவர். குருதேவரிடம் ஆழ்ந்த அன்பு கொண்டவர். அடிக்கடி, குருதேவருக்கு மஹாபாரதத்தைப் படித்துக் காட்டுவார்.

இருக்கிறது. கடல் கொந்தளிப்பில்லாத பொழுது ஒருவன் கடலை அடைய வேண்டுமானால் சுற்றி வளைத்துச் செல்லும் நதியின் வழியாகப் படகைச் செலுத்த வேண்டும். கடல் பெருக்கு ஏற்பட்டு எங்கு பார்த்தாலும் தண்ணீர் இருக்கும் போது படகைச் சுற்றி வளைத்துச் செல்லாமல் நேராகச் செலுத்தி எளிதில் கடலை அடைந்து விடலாம்.

"வயல் அறுவடையாவதற்கு முன் வரப்பு வழியாகச் சுற்றி வளைத்துக் கொண்டு செல்ல வேண்டும். ஆனால் அறுவடை யானபின் வயலைக் கடப்பதற்கு வரப்பு வழியாகச் சுற்றி வளைத்துச் செல்ல வேண்டிய அவசியமில்லை. குறுக்கே நடந்து சென்று வயலைக் கடந்து விடலாம்.

"இறைவனைத் தரிசித்த பின்னர் அவரை எல்லா உயிர் களிலும் காணலாம். ஆயினும், மனிதனிடம் தான் அவரது பிரகாசம் அதிகமாயுள்ளது. மனிதரிலும், சத்துவ குணமுடைய பக்தர்களிடம், அதாவது காம, காஞ்சனங்களை அனுபவிக்கும் ஆசை அடியோடு மறைந்தவர்களிடம் இறைவனின் பிரகாசம் மிகத் தெளிவாக இருக்கும். (எல்லோரும் மௌனமாக இருந்தனர்). சமாதி நிலையடைந்த ஒருவர், அந்நிலையிலிருந்து இறங்கிய பின், தனது மனத்தை எங்கே தங்க வைப்பார்? இக்காரணத்தினால் தான் சத்துவ குணம் பெற்றவர்களும், காம காஞ்சனப் பற்று நீங்கியவர்களுமான, தூய மனம் படைத்த பக்தர்களது சேர்க்கையை நாடும் அவசியத்தை அவர் உணர்கிறார். அப்படியில்லையாயின் சமாதி நிலையிலிருந்து கீழிறங்கிய பின், அவர் வேறு எதைப் பற்றிக் கொண்டு இவ் வுலகில் வாழ முடியும்?

"எது பிரம்மமோ அதுவே ஆதிசக்தி. செயலற்றிருக்கும் போது அதனைப் பிரம்மம் என்றும், புருஷன் என்றும் குறிப்பிடு கின்றோம். ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில் களில் ஈடுபடும் போது அதனைச் சக்தி என்றும், பிரகிருதி என்றும் அழைக்கிறோம். எவர் புருஷனோ அவரே பிரகிருதி. ஆனந்தமயர், ஆனந்தமயி.

"புருஷன் என்று நினைத்தால் பிரகிருதியின் நினைவும் கூடவே எழும். யாருக்கு ஆடவனைப் பற்றிய உணர்வு இருக்கின்றதோ, அவருக்குப் பெண்ணைப் பற்றிய உணர்வும் இருக்கும். தந்தை என்று எண்ணுபவனுக்குத் தாயைப் பற்றிய எண்ணமும் இருக்கிறது. (கேசவர் சிரித்தார்). இருள் பற்றிய

அறிவுடையவனுக்கு ஒளியைப் பற்றிய அறிவும் இருக்கிறது. இரவைப் பற்றிய அறிவுடையவனுக்குப் பகலைப் பற்றிய அறிவும் இருக்கிறது. இன்பத்தைப்பற்றிய அறிவுடையவனுக்குத் துன்பத்தைப் பற்றிய அறிவும் இருக்கிறது. இவை உனக்குப் புரிந்ததா?"

கேசவர் (சிரித்தபடியே): "ஆம் புரிந்து கொண்டேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அன்னை! எந்த அன்னை? இந்த உலகிற்கே அன்னை. எவள் இவ்வுலகைப் படைத்திருக்கிறாளோ, காக்கிறாளோ, எவள் தன் குழந்தைகளை எப்போதும் காப்பாற்றுகின்றாளோ, அறம், பொருள், இன்பம், வீடு என்பனவற்றில் விரும்புவது எதுவாயினும் அதனைக் கொடுக்கிறாளோ, அவளேதான். தாயிடம் உண்மையான அன்பு கொண்ட குழந்தை, தாயைப் பிரிந்திருக்க முடியாது. அன்னையே இவை அனைத்தையும் அறிவாள். உண்பதும், உறங்குவதும், திரிவதும் தான் குழந்தை செய்பவை. வேறு எதைப் பற்றியும் அந்தக் குழந்தை ஒரு சிறிதும் கவலைப் படுவதேயில்லை."

கேசவர்: "ஆம் சுவாமி."

பேசிக் கொண்டிருக்கும் போதே குருதேவர் சாதாரண நிலைக்குத் திரும்பி விட்டார். முகத்தில் புன்னகை தவழக் கேசவரை நோக்கிப் பேசினார். அந்த அறை நிரம்ப அமர்ந்திருந்த பக்தர்கள் அவ்விருவரையும் ஆவலோடு உற்று நோக்கிக் கொண்டும், அவர்களுடைய மொழிகளைக் கவனமாகக் கேட்டுக் கொண்டும் இருந்தனர். கேசவரோ, குருதேவரோ, ஒருவருக்கொருவர் உடல்நலத்தைப் பற்றி விசாரிக்காதது கண்டு அனைவருமே ஆச்சரியமடைந்தனர். அவர்கள் பகவானைப் பற்றி மட்டுமே பேசிக் கொண்டிருந்தார்கள். வேறு எந்த விதமான பேச்சும் அங்கு எழவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேசவரிடம்): "பிரம்ம சமாஜத்தின் அங்கத்தினர்கள் இறைவனது பெருமைகளைப் பற்றி அவ்வளவு விரிவாக வர்ணித்துப் பேசுவதேன்? 'ஹே, ஈசுவரா! நீ சந்திரனைப் படைத்திருக்கிறாய்; சூரியனைப் படைத்திருக்கிறாய்; நட்சத்திரங்களைப் படைத்திருக்கிறாய்' என்பன போன்றவைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் என்ன? பெரும்பாலான மக்கள், தோட்டத்தைக் கண்டதும் அதன் புகழில் மூழ்கி நின்று விடுகின்றனர். தோட்

டத்தின் சொந்தக்காரனைக் காண ஆசைப்படுபவர் எத்தனை பேர் இருக்கின்றனர்? அவர்கள் எண்ணிக்கையில் மிக மிகக் குறைவு. பெரியது, தோட்டமா? அதன் சொந்தக்காரனா?

"மது அருந்திய பின், கடையில் இன்னும் எவ்வளவு பீப்பாய் மது இருக்கிறது என்பதைப் பற்றி நான் ஏன் கவலைப் பட வேண்டும்? ஒரு புட்டி மதுவிலேயே என் காரியம் முடிந்து போய் விடுகிறதே!

"நரேந்திரனைப் பார்க்கும் போதெல்லாம் நான் ஒருமுறை கூட, 'உன் தந்தையின் பெயர் என்ன? அவருக்கு எத்தனை வீடுகள் இருக்கின்றன?' என்று கேட்டதே இல்லை.

"உங்களுக்கு நான் ஒரு உண்மையைச் சொல்லட்டுமா? தான் ஈட்டிய செல்வத்தின் மீது பற்று; அதைப் பற்றிய பெருமை; இவ்விரண்டின் மீது கொள்ளும் அபிமானம்; இவை ஒருவனிடம் இயல்பாகவே இருக்கின்றன. இதுபோன்றே இறைவனுக்கும் அவனது சொத்தின் மீது ஆசையிருக்கும் என்று நினைக்கிறான். நாம் ஆண்டவனுடைய சொத்தைப் புகழ்ந்தால் அது அவருக்கு மகிழ்ச்சியை அளிக்கும் என்று அவன் நினைக்கிறான். ஒரு சமயம் சம்பு என்னிடம், 'சுவாமி, என்னுடைய சொத்துக்களையெல்லாம் பகவானின் தாமரைத் திருவடிகளில் அளித்துவிட்டு இறந்து போகும்படி ஆசீர்வதியுங்கள்' என்று வேண்டினர். அதற்கு நான் அவரிடம், 'இவையாவும் உன்னைப் பொறுத்தவரையில் தான் செல்வம். ஆண்டவனுக்கு நீ எதைக் கொடுக்க முடியும்? இவையெல்லாம் அவருக்கு வெறும் கல்லும் மண்ணுமேயாகும்' என்று பதில் கூறினேன்.

"விஷ்ணு கோவிலைச் சேர்ந்த நகைகள் களவு போன போது, மதுர்நாத்தும், நானும் சுவாமி விக்கிரகத்தைப் பார்க்கச் சென்றோம். அப்போது மதுர்நாத், விக்கிரகத்தைப் பார்த்து, 'பகவானே! இது என்ன வெட்கக்கேடு! உமக்கு எந்த யோக்கியதையும் இல்லை. உமது மதிப்பு இவ்வளவு தானா? உம்மீது அணிவிக்கப் பெற்றிருந்த எல்லா நகைகளையும் திருடன் திருடிக் கொண்டு போய் விட்டான். உம்மால் எதுவும் செய்ய முடியவில்லையே' என்றார். நான் மதுர்நாத்திடம், 'வெட்கக்கேடு! இது என்ன பேச்சு? நீ எதை நகை நகை யென்று பிரமாதப் படுத்துகிறாயோ, அதுவெல்லாம் பகவானைப் பொறுத்தவரை வெறும் மண் கட்டிகளே. செல்வத்திற்கே அதிதேவதையான மஹாலட்சுமி அவருடைய பத்தினியாக

இருக்கிருள். உனது அற்பப் பணம் களவு போய்விட்டதே என்று அவர் கவலையில் ஆழ்ந்திருப்பாரா என்ன? நீ இப்படியெல்லாம் பேசாதே' என்றேன்.

''இறைவன் செல்வத்துக்குக் கட்டுப் பட்டவனு? அவன் பக்திக்குக் கட்டுப்பட்டவன். அவன் விரும்புவது என்ன? பணம் அல்ல. அவன் தமது பக்தர்களிடம் விரும்புவதெல்லாம் அன்பு, பிரேமை, பக்தி, விவேகம், வைராக்கியம் என்பவைகள் தாம்.

''ஒவ்வொருவரும் தமது மனநிலைக்கு ஏற்ப பகவானைப் பற்றி எண்ணுகிருர்கள். உதாரணமாகத் தமோகுணம் நிறைந்த ஒரு பக்தனை எடுத்துக்கொள்வோம். அவன் தன்னைப் போலவே ஜகன்மாதாவும் ஆட்டிறைச்சியை உட்கொள்கிருள் என்று நினைக்கிருன். ஆதலால் அவன் தேவிக்கு ஆட்டைப் பலியிடுகிருன். ரஜோ குணம் நிறைந்த பக்தனே, பல வித சித்திரான்னங்களையும், தின்பண்டங்களையும் தயாரித்து நைவேத்தியம் படைக்கிருன். சத்துவகுண பக்தனின் பூஜையில் ஆடம்பரம் எதுவுமே இருக்காது. மக்களுக்குத் தெரியாத வகையில் அவனது வழிபாடு அமைந்திருக்கும். மலர் கிடைக்காவிட்டால், அவன் வில்வ இலைகளையும், கங்காநீரையும் அர்ப்பித்துப் பூஜையை முடிப்பான். இஷ்ட தெய்வத்திற்கு அவன் படைக்கிற நைவேத்தியமெல்லாம் வெல்லம் கலந்த சிறிது அவல் அல்லது சிறிது கற்கண்டு—இதிலேயே அடங்கி விடுகின்றன. ஏதோ சில சமயங்களில் கொஞ்சம் பாயசம் தயாரித்துப் படைப்பான்.

''முக்குணங்களையும் கடந்தவர்கள் என்று ஒரு வகையினர் உண்டு. அவர்கள் குழந்தை இயல்பு கொண்டவர்கள். இறைவனின் நாமத்தை ஜெபிப்பது தான் அவர்கள் செய்யும் பூஜை. இறைவனின் நாமம் புனிதமானது.

(புன்சிரிப்போடு கேசவரிடம்) ''நீ நோயால் வருந்துவது ஏன்? அதற்கொரு காரணம் உண்டு. பக்தியால் விளையும் பல பாவ நிலைகள் உன் உடலைக் கடந்து சென்றுள்ளன. அதனுல் தான் உன் உடல் பாதிக்கப்பட்டுள்ளது. பாவ நிலை வரும் பொழுது நாம் ஒன்றும் அறிவதில்லை. பல நாட்களுக்குப் பிறகே அதை அறிகிறோம். பெரிய நீராவிக் கப்பல்கள் கங்கையைக் கடந்து செல்வதைப் பார்த்திருக்கிறேன். அவை செல்லும்போது அதன் விளைவு ஒன்றும் தெரிவதில்லை. ஆனுல்,

அம்மம்மா! சில விநாடிகள் கழிந்த பிறகோ, அலைகள் 'பளார், பளார்' என்று கரைகளின் மீது மோதும் பொழுது எவ்வளவு பயங்கரமாக இருக்கிறது! ஒரே குழப்பம் உண்டாகிறது! சில சமயம் அலைகள் மோதுவதன் காரணமாகக் கரையின் ஒரு பகுதி இடிந்து நீரில் விழுவதுண்டு. ஒரு குடிசைக்குட் புகும் யானை உள்ளே நாசம் பண்ணிவிட்டு, முடிவில் குடிசையையே அசைத்துக் கீழே தள்ளி விடுகிறது. பாவம் என்னும் யானை உடலென்னும் குடிசைக்குட் புகுந்து அதை அப்படியே ஆட்டி விடுகிறது.

"உண்மையாகவே என்ன நடக்கிறது தெரியுமா? வீடு தீப்பற்றும் போது முதலில் உள்ளேயிருக்கும் ஒரு சில பொருட்கள் எரிகின்றன. பிறகு பொருள் நாசம், கூக்குரல் இவற்றின் காரணமாகப் பெருங்குழப்பம் ஏற்படுகிறது. அது போல ஞானத்தீயும், ஞானவாழ்விற்கு எதிரிகளான காமம், குரோதம் முதலியவற்றை முதன் முதலில் அழிக்கிறது. பின்பு ஆணவமும் நாசமாகிறது. கடைசியாக உடலில் ஓர் உக்கிர மான குழப்பம் காணப்படுகிறது!

"எல்லாம் முடிந்துவிட்டது என்று நீ நினைக்கலாம். ஆனால் உனது நோயில் இம்மியளவு மீதி உள்ளவரை இறைவன் உனக்கு விடுதலையளிக்கமாட்டார். மருத்துவமனையில் உன் பெயரைப் பதிவு செய்துவிட்டால், பிறகு நினைத்தபோது அதைவிட்டு வெளியேற முடியாது. நோய் முழுவதும் குண மாகும் வரை, வெளியேற உனக்கு மருத்துவர் அனுமதிச் சீட்டுத் தரமாட்டார். நீ ஏன் உன் பெயரை மருத்துவமனையில் பதிவு செய்தாய்?" (எல்லோரும் சிரித்தனர்).

குருதேவர், மருத்துவமனையை உதாரணமாகக் கூறியதை எண்ணிக் கேசவர் திரும்பத் திரும்பச் சிரிக்கலானார். அவரால் சிரிப்பை அடக்க முடியவில்லை. பலமுறை முயன்று பார்த்தும் முடியாமல், விட்டு விட்டுச் சிரித்தார். பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் தமது சொந்த நோயைப் பற்றிக் கூறலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேசவரிடம்): "இருதயன் ஒருமுறை என்னிடம், 'மாமா! உங்களிடம் தோன்றும் இப்படிப்பட்ட பாவ நிலையை நான் எங்கும் பார்த்ததில்லை. உங்கள் நோயைப் போலவும் வேறெங்கும் பார்த்ததில்லை' என்று கூறுவான். அப்போது நான் தீராத வயிற்றுப்போக்கு நோயால் அவதிப் பட்டேன். இலட்சக் கணக்கான எறும்புகள் எனது தலையைக்

அடிப்பது போன்ற வேதனை. ஆனாலும் ஆண்டவனைப் பற்றிய பேச்சு மட்டும் இரவும் பகலும் நடந்துகொண்டேயிருந்தது. ராம் கவிராஜர் என்ற வைத்தியர் என்னைப் பார்க்க வந்தார். நான் ஞான ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்ததை அவர் கண்டார். 'இதென்ன பைத்தியம்! ஒரு சில எலும்புகளைத் தவிர வேறொன்றும் உடலிலில்லாத இந்நிலையிலும் கூட இவ்வாறு ஞான ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறாரே' என்று அவர் குறிப்பிட்டார்.

(கேசவரிடம்) "எல்லாம் அவர் விருப்பம்."

'என்னரும் தாயே உன்றன் இனிய நல் விருப்பத் தால்தான்
மன்னுல கிதனில் யாவும் வகையுற நிகழ்வ தாகும்.
இன்னலில் உழலும் மாந்தர் எவரையும் மீட்டுக் காக்கும்
உன்னுள விழைவிற் கேற்ப உண்மையில் விளங்குகின்றாய்.
பாங்குறச் சிலர்க்கே பிரம்ம பதத்தினை அருள்வாய்; மற்றோர்
ஏங்கிடப் பாதா ளத்தில் எங்கேயோ உருட்டித் தள்ளி
ஆங்கவர்க் கின்னல் செய்வாய்! அனைத்தையும் இயக்கி வைக்கும்
ஓங்கிய அன்னை உன்றன் ஒருவிசைப் பொறிதான் யானே!

"பனித்துளிகளின் முழுப் பயனையும் பெறுவதற்காகத் தோட்டக்காரன் ரோஜாச் செடியை வேரோடு பிடுங்கி வைக்கிறான். பனியின் ஈரம் படுவதனால் ரோஜாச் செடி நன்றாக வளர்கிறது. அதனால்தான் நீயும் வேர் வரை அசைக்கப்பட்டிருக்கிறாய் (கேசவரும் குருதேவரும் சிரிக்கின்றனர்). மீண்டும் குணமடையும்போது பெரிய காரியங்களைச் சாதிப்பாய் என்று தோன்றுகிறது.

"உன் உடல் நோய்வாய்ப்பட்டாலே என் மனம் மிக ஏங்குகிறது. முன்பு நீ நோய்வாய்ப்பட்டிருந்த பொழுது, நடு இரவில் நான் அன்னையிடம் அழுததுண்டு. 'அம்மா! கேசவனுக்கு ஏதேனும் நேர்ந்துவிட்டதென்றால் பிறகு நான் யாருடன் பேசுவேன்?' என்று ஜகன்மாதாவிடம் முறையிட்டுக் கொண்டேன். பின்னர் நான் கல்கத்தாவிற்கு வந்தபொழுது, உன் உடல் நலமடையப் பிரார்த்தித்து, சித்தேஸ்வரி தேவிக்கு இளநீரும் சர்க்கரையும் காணிக்கையாகச் செலுத்தினேன்."

ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் கேசவர் மீதிருந்த இத்தகைய ஆழ்ந்த அன்பையும், அவருக்காக அடைந்த துயரத்தையும் பக்தர்கள் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆனால், இந்த முறை நான் அவ்வளவு கவலைப்படவில்லை. இது உண்மை. இரண்டு மூன்று நாட்கள் மட்டுமே ஒரு சிறிது கவலைப்பட்டேன்."

கேசவர் உள்ளே நுழைந்த அதே கிழக்கு வாயிலில், மூதாட்டியாகிய அவரது அன்னையார் வந்து நின்றார். அருகிலிருந்த உமாநாத் என்பவர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் உரத்த குரலில், "சுவாமி, இங்கு அன்னையார் தங்களை வணங்குகிறார்" என்று கூறினார்.

குருதேவர் சிரித்தார். உமாநாத் மீண்டும், "கேசவரின் நோய் தீருமாறு அவரை ஆசீர்வதிக்கும்படி அன்னையார் தங்களை வேண்டிக்கொள்கிறார்" என்று சொன்னார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேசவரின் அன்னையைப் பார்த்து): "எல்லா இன்பங்களையும் அருள்பவளாகிய ஜகன்மாதாவிடம் நீங்கள் பிரார்த்தித்துக் கொள்ளுங்கள். துன்பங்களை அவள் போக்கியருளுவாள்."

(கேசவரிடம்): "வீட்டின் அந்தப்புரத்திலே நீண்ட நேரம் இருக்கவேண்டாம். மாதரின் சேர்க்கையால் மேலும் கீழேதான் அமிழ்ந்து போக நேரும். பகவானைப் பற்றிய பேச்சில் மனதை வைத்தால் நீ முன்னிலும் நலம் மிகுந்து வருவதை உணர்வாய்."

குருதேவர் கம்பீரமான குரலில் இவ்வார்த்தைகளைக் கூறி விட்டு, ஒரு குழந்தையைப்போல் சிரிக்கத் தொடங்கினார். அவர் கேசவரைப் பார்த்து, "எங்கே, உன் கையைக் காட்டு, நான் பார்க்கிறேன்" என்றார். ஸ்ரீராமகிருஷ்ணர் கேசவரின் கையை விளையாட்டாக நிறுத்து எடை பார்த்தார். பின்னர், "உன் கை இலேசாகத்தான் இருக்கிறது. கபடமுடையவர்க்குக் கை கனமாக இருக்கும்" என்றார். (எல்லோரும் சிரித்தனர்).

உமாநாத் கதவருகிலிருந்து குருதேவரிடம் மறுபடியும், "அன்னையார் கேசவரை ஆசீர்வதிக்கும்படியாகத் தங்களை வேண்டுகிறார்" என்று தெரிவித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கம்பீரமான குரலில்): "என்னால் என்ன செய்ய முடியும்? ஆண்டவன்தான் யாவரையும் ஆசீர்வதிக்கிறார். 'தேவீ, உன் காரியத்தை நீ செய்கிறாய்; உலக மக்களோ அவைகளைத் தாம் செய்வதாகக் கூறுகின்றனர்!'

"கடவுள் இரண்டு சமயங்களில் சிரிக்கிறார். இரு சகோதரர்கள் தமக்குள்ளே நிலத்தைப் பிரித்துக் கொள்ளும் போது அவர் சிரிக்கிறார். நிலத்தின் குறுக்கே அவர்கள் ஒரு கயிற்றைப் பிடித்து, ஒருவர் மற்றவரைப் பார்த்து, 'இந்தப்பக்கம் என்னுடையது, அந்தப்பக்கம் உன்னுடையது' என்று சொல்லிக்கொள்கிறார்கள். அப்போது பகவான் தமக்குள், 'இதென்ன? இந்தப் பிரபஞ்சம் முழுதும் என்னுடையது. அப்படி இருக்கும்போது ஒரு சிறு நிலப்பகுதியை முன்னிட்டு இவர்கள் இந்தப்பக்கம் என்னுடையது, அந்தப்பக்கம் உன்னுடையது என்கிறார்களே!' என்று நினைத்துச் சிரித்துக் கொள்கிறார்.

"தனது குழந்தையின் தீர்க்க முடியாத நோயைக் குறித்துத் தாய் மனம் உருகி அழுது கொண்டிருக்கும் போது வைத்தியர் அந்தத்தாயிடம், 'அம்மா! பயப்படாதே. நான் உன் குழந்தையைக் குணப்படுத்திவிடுகிறேன்' என்று சொல்கிறார். அப்போதும், கடவுள் மீண்டும் ஒரு முறை சிரிக்கிறார். குழந்தை இறக்க வேண்டும் என்பது கடவுளின் விருப்பமானால், எவனும் அதைக் காக்க முடியாது என்பதை வைத்தியன் அறிவதில்லை." (எல்லோரும் மௌனமாக இருந்தனர்.)

அந்தச் சமயத்தில் கேசவர்,நெடுநேரம் தொடர்ந்து நீடித்த இருமலால் அவதிப்பட்டார். அவரது இருமல் நிற்குமென்று தோன்றவில்லை. அவரது வேதனையைக் கண்ட அனைவரும் வருத்தப்பட்டனர். வெகுநேரம் கழித்த பின்னர், மிகவும் முயற்சி செய்த பிறகு இருமல் ஒரு சிறிது அடங்கியது. மேலும் அங்கிருப்பதற்கு அவரால் முடியவில்லை. அவர் குருதேவர் முன்பு தரையில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கினார். பின்னர் முன்புபோல் மிகவும் சிரமத்துடன் சுவரைப்பிடித்துக் கொண்டே அங்கிருந்து வெளியேறித் தம் அறைக்குச் சென்றார்.

குருதேவருக்குச் சிற்றுண்டி அளிக்க ஏற்பாடு செய்திருந்தனர். கேசவரின் மூத்தமகன் அவரது அருகில் வந்து அமர்ந்து கொண்டான். அமிருதர், அந்தப் பையனை ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அறிமுகப்படுத்தினார். 'இவன் தான் கேசவரின் மூத்தமகன். நீங்கள் இவனை ஆசீர்வதித்து அருளுங்கள். இவன் தலையில் கைவைத்து ஆசீர்வாதம் செய்யுங்கள்' என்று ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வேண்டிக் கொண்டார்.

குருதேவர் : "எவரையும் என்னால் ஆசீர்வதிக்க இயலாதே!" என்று சொல்லிவிட்டு, இனிய புன்சிரிப்போடு கேசவருடைய மகனது உடலைத் தம்கையினால் மென்மையாகத் தடவிக் கொடுத்தார்.

அமிருதர் (புன்சிரிப்போடு): "மிகவும் சரி, அப்படியானால் தங்கள் விருப்பப்படியே உடம்பைக் கையினால் தடவிக் கொடுங்கள்." (எல்லோரும் சிரித்தனர்).

அமிருதர் முதலிய பிரம்மசமாஜ அன்பர்களிடம் குருதேவர் கேசவரைப் பற்றிப் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "என்னால் ஒருபோதும் 'நோய் குணமடையட்டும்' என்பது போன்றவற்றைச் சொல்ல முடியாது. நோயைத் தீர்க்கும் சக்தியை அருளுமாறு நான் ஒருபோதும் ஜகன்மாதாவிடம் கேட்டதில்லை. சுத்த பக்தியையே நான் எப்போதும் அவளிடம் பிரார்த்திக்கிறேன்.

"கேசவர் என்ன சாதாரண மனிதரா? செல்வந்தர்களும் அவரை மதிக்கின்றனர்; சாதுக்களும் மதிக்கின்றனர். நான் ஒருமுறை தயானந்தரைச் சந்தித்தேன். அப்போது அவர் ஒரு தோட்ட மாளிகையில் தங்கியிருந்தார். அவர் கேசவரை எதிர்பார்த்து, 'கேசவசேன், கேசவசேன்' என்று உச்சரித்தவாறே வீட்டின் மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தார். கேசவர் எப்போது வருவார் என்று மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அன்றைய தினம் கேசவர் அங்கு வருவதாக இருந்ததைப் பின்னர் நான் அறிந்து கொண்டேன்.

"தயானந்தர் வங்காள மொழியை 'கௌராண்ட மொழி' என்பார். கேசவருக்கு வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் வேள்விகள், தேவதைகள் ஆகியவற்றில் நம்பிக்கையில்லாதிருந்திருக்கக் கூடும். அதைக் குறிப்பிட்டுத் தயானந்தர், 'கடவுள் இத்தனை பொருட்களையும் படைத்துள்ளபோது அவர் தேவதைகளையும் படைத்திருக்கமாட்டாரா என்ன?' என்று சொன்னார்."

ஸ்ரீராமகிருஷ்ணர் கேசவரைப் புகழ்ந்து அவரது சீடர்களிடம் தொடர்ந்து கூறினார்.

"கேசவரிடம் குறுகிய மனப்பான்மை இல்லை. அவர் பலரிடம், 'உங்களுக்கு ஏதாவது ஐயங்கள் ஏற்பட்டால் அங்கே சென்று (அதாவது ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சென்று) தீர்த்துக் கொள்ளுங்கள்' என்பார். என்னுடைய மன நிலையும் அப்படித்தான். கேசவரின் குண நலன்கள் கோடி கோடியாகப் பெருகட்டும். மக்களிடமிருந்து எனக்கு கௌரவமும் மதிப்பும் ஏற்பட்டு நான் என்ன செய்யப் போகிறேன்? என்று சொல்வதுதான் என்னுடைய இயல்பாகும். கேசவர் உண்மையிலேயே ஒரு பெரிய மனிதர்தாம். அனைவரும் அவரை மதிக்கிறார்கள். செல்வந்தர்களும், சாதுக்களும் அவரை மதிக்கிறார்கள்."

சிற்றுண்டி அருந்திய பின்னர் குருதேவர் புறப்படத் தயாரானர். தெருவில் நின்றுகொண்டிருந்த வண்டி வரை வந்து பிரம்மசமாஜ பக்தர்கள் குருதேவரை வழியனுப்பினர்.

படிகள் வழியாகக் கீழிறங்கி வரும்பொழுது கீழ்ப் பகுதியில் விளக்கில்லாமல் இருந்ததைக் குருதேவர் கவனித்தார். அவர் அமிருதரிடமும் மற்ற பக்தர்களிடமும், "இந்த இடங் களிலெல்லாம் நல்ல வெளிச்சம் இருக்கும்படி விளக்கு வைக்க வேண்டும். விளக்கு இல்லாத வீட்டில் வறுமை வளரும். இனி இவ்வாறு நடக்காமற் பார்த்துக்கொள்ளுங்கள்" என்று கூறினர்.

பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் ஓரிரு பக்தர்களுடன் தட்சிணேசு வரம் நோக்கிப் புறப்பட்டார். வழியில் மாதாகஷா என்னும் சந்தில் வசித்து வந்த ஜெயகோபால் சென் என்பாருடைய வீட்டிற்குச் சென்றார். அப்போது மணி சுமார் ஏழு இருக்கும். ஜெயகோபாலருடைய வீட்டின் வரவேற்பறையில் உறவினர் களும் அக்கம்பக்கத்திலுள்ள மக்களும் கூடியிருந்தனர்,

ஸ்ரீராமகிருஷ்ணரைக் காணும் பக்தர்கள் எவ்வாறெல்லாம் அவரைப்பற்றி நினைக்கிறார்கள்?

"குருதேவர் இரவு பகலாக ஹரிப்பிரேமையில் மூழ்கி இருக் கிறார். திருமணம் செய்து கொண்டிருக்கிறார். ஆயினும் மற்றவர்களைப் போன்று மனைவியோடு குடும்ப வாழ்க்கை நடத்தவில்லை. மாறாக மனைவியிடம் பக்தி காட்டுகிறார். மனைவியைப் பூஜிக்கிறார். அவருடன் ஈசுவரனைக் குறித்து மட்டுமே பேசுகிறார். ஈசுவரனைக் குறித்துப் பாடுகிறார்.

ஈசுவரனைப் பூஜித்து வழிபட்டு வருகிறார். தியானம் செய்கிறார். மாயை சம்பந்தமான எவ்விதத் தொடர்பும் இல்லை. ஈசுவரன் தான் உண்மை, மற்றவைகளெல்லாம் உண்மையல்ல என்பதைக் காண்கிறார். பணம், உலோகப் பொருட்கள், பாத்திரங்கள் இவைகளை அவரால் தொட முடிவதில்லை. பெண்களை அவரால் சற்றும் தொட முடிவதில்லை. தொட்டால் முள் தைப்பது போல் தொட்ட இடம் 'விர், விர்' என்று வலிக்கிறது. பணம், பொன் இவற்றைக் கையில் எடுத்தால் கை மரத்துப் போய் விடுகிறது. மூச்சு நின்று விடுகிறது. கடைசியில் அந்தப் பொருளை எறிந்தால்தான் பழையபடி மூச்சு விட முடிகிறது!

பக்தர்கள் இன்னும் என்னென்னவோ நினைத்தனர். சம்சாரத்தைத் துறக்க வேண்டுமா? கற்பதனாலும் கேட்ப தனாலும் பயன் என்ன? மணம் செய்து கொள்ளாவிட்டால் வேலை செய்ய வேண்டிய அவசியம் இல்லாது போகும். தாய், தந்தையரைத் துறக்க வேண்டுமா? நான் திருமணம் செய்து கொண்டிருக்கிறேன். எனக்குக் குழந்தை இருக்கிறது. நான் மனைவி, மக்களைக் காப்பாற்ற வேண்டும். என்னுடைய கதி என்னவாகும்? குருதேவர் இரவு பகலாக தைலதாரைபோல இடைவிடாது ஈசுவரனையே சிந்தனை செய்கிறார். ஆனால், நானோ இரவு பகலாக உலகப் பொருட்களைத் தேடி அலைந்து கொண்டிருக் கிறேன். இவருடைய தரிசனம் ஒரு முறை கிடைத்ததும் மேகம் மூடிய ஆகாயத்தில் ஒளியைப் பார்ப்பதுபோல் ஆறுதல் பெறுகிறேன். வாழ்க்கைப் பிரச்சனையை எவ்வாறு தீர்க்கமுடியும்?

இவர் தாமே வாழ்ந்து காட்டுகிறார். அப்படி யிருந்தும் இன்னமும் சந்தேகமா? மணலால் ஆன அணைக் கட்டை உடைத்து, மனத்தில் உள்ள ஆசைகளை நிறைவேற்று என்பார்கள். உண்மையிலேயே மனத்தின் நினைப்புகள் மணலால் ஆன அணைக்கட்டா? அப்படியானால், ஏன் ஆசைகளை என்னால் விலக்கிவிட முடியவில்லை? வலிமை குறைவு காரணமாகவா? கடவுளிடம் ஆழ்ந்த பக்தி உண்டானால் இப்படிக் கணக்கு போடும் புத்திவராது. கடல்நீர் கங்கையில் வேகமாகப் பாய்ந்தால் அதைத் தடுத்து நிறுத்த யாரால் முடியும்? எந்தப் பிரேமை உதித்ததால் கௌராங்கர் கோவணம் பூண்டு துறவியானாரோ, எந்தப் பிரேம பக்தியினால் ஏசுநாதர் ஒரே சிந்தனையோடு வனத்தில் தங்கினாரோ, பிரேமை நிறைந்த தம் பரம பிதாவின் முகத்தைப் பார்த்துக் கொண்டே உயிரை

விட்டாரோ, எந்தப் பிரேமையினுல் புத்தர் அரச போகத்தைத் துறந்து வைராக்கியம் பெற்ருரோ, அந்தப் பிரேமையின் ஒரு துளி என் உளத்தில் உதயமாஞலும் போதும். இந்த நிலையற்ற உலகவாழ்க்கை எங்கோ வீழ்ந்துவிடும்!

அப்படியானுல் எவர்கள் பலவீன மானவர்களோ, எவர்கள் மனத்தில் அத்தகைய பிரேமை தோன்றவில்லையோ, யாரெல்லாம் உலகவாழ்க்கையில் சிக்கிக் கொண்டிருக்கும் ஆத்மாக்களோ, யாருடைய கால்களில் மாயையாகிய விலங்குகள் பூட்டப்பட்டிருக்கின்றனவோ, அவர்களுக்கு என்ன வழி? பிரேமையே உருவான இந்தத் துறவியின், இந்த மஹாபுருஷரின் தெய்விகக் கூட்டுறவை நான் விடமாட்டேன். இவர் என்ன கூறுகின்ருர் என்று பார்ப்போம்!'

இவ்வாறு பக்தர்கள் சிந்தித்துக் கொண்டிருந்தனர். குருதேவர் ஜெயகோபாலருடைய வீட்டு விருந்தினர் அறையில் பக்தர்களுடன் வந்து உட்கார்ந்தார். அவர் எதிரில் ஜெயகோபாலும், அவருடைய உறவினர்களும், அண்டை வீட்டார்களும் நெருக்கமாக வந்து அமர்ந்தனர். அண்டை வீட்டார் ஒருவர் குருதேவருடன் பேசுவதற்கு மிகவும் விருப்பத்தோடு இருந்தார். இப்போது அவரே தாஞக முன் வந்து பேச்சைத் துவக்கினுர். ஜெயகோபாலரின் தமையஞரான வைகுண்டரும் அங்கே இருந்தார்.

வைகுண்டர் : "சுவாமி. நாங்கள் சம்சாரத்தில் உழலும் மனிதர்கள். எங்களுக்கு ஏதாவது வழி சொல்லுங்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "கடவுள் இருக்கிருர் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். ஒரு கையால் அவருடைய தாமரைத் திருவடிகளைப்பற்றிக் கொள்ளுங்கள். மற்ருெரு கையால் உலககாரியங்களைச் செய்து வாருங்கள்."

வைகுண்டர் : "சுவாமி! உலகவாழ்க்கை பொய்யா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஆம். ஆண்டவனுடைய காட்சி கிடைக்காதவரை இந்த உலகம் பொய்தான். நிலைமை இப்படி இருக்கும்போது இறைவனை மறந்து உலகப் பொருட்களை 'என்னுடையவை, என்னுடையவை' என்கிருர்கள். மாயையின் வலையில் அகப்பட்டு, காமினி காஞ்சனத்தின் பிடியில் சிக்குண்டு துன்பத்தில் மூழ்குகின்றனர். இந்த

மாயையின் காரணமாக மனிதர்கள் இயல்பாகவே அஞ்ஞானிகளாகி விடுகின்றனர். தப்பிக்க வழி இருக்கிறது என்றாலும் அவர்களால் தப்பிக்க முடிவதில்லை. ஒரு பாட்டு இருக்கிறது.

மாயையின் சக்தியை —மதிப்பிடப்போமோ?
ஆயும்நல் லறிவையும் அழித்திடும் அன்றோ?
அயன்அரி இருவரும் அசேதனர் ஆகி
நயம்இழந் தார்எனில் நரர்ஒரு பொருட்டோ?
பொறிஎன நீரினிற் பொருத்தி வைக்கின்ற
குறுகிய கூடையில் குதிக்குமாம் மீன்கள்!
விரும்பினால் வெளிப் புறம் திரும்பலாம் எனினும்,
நிரம்புமாம் கூடையில், நெளியுமாம் மீன்கள்!
பட்டுநூற் பூச்சிகள் நுட்பமாய்ப் பார்த்துக்
கட்டிய கூட்டிலே கலைத்தொழில் இயற்றும்!
வரும்வழி இருப்பினும் மாயையில் சிக்கி
இருள் அறை இடுக்கிலே மரணமும் எய்தும்!

"இந்த உலகம் நிலையில்லாதது என்பதை நீங்கள் ஒவ்வொருவரும் அனுபவத்திலிருந்தே அறிந்து கொள்ள முடியும். இந்த வீட்டையே எடுத்துக் கொள்ளுங்கள். எத்தனையோ பேர் இதில் பிறந்திருக்கிறார்கள். எத்தனையோ பேர் இறந்திருக்கிறார்கள். உலக வாழ்வு என்பது 'இதோ இப்போதுதான் அவரைப் பார்த்தது போல் இருக்கிறது. அதற்குள் இல்லை என்ற நிலை!' யாரை 'நம்முடையவர், நம்முடையவர்' என்று கூறிக் கொண்டோமோ அவர் கண்களை மூடிவிட்டால், அப்புறம் அவர் இல்லவே இல்லை. அப்படி இருக்க 'எனக்குச் சொந்தம் என்று இந்த உலகில் யாரும் இல்லை. இருந்தாலும் பேரனை விட்டுக் காசிக்குப் போக முடியவில்லையே' என்று ஒருவர் கூறுகிறார். 'எனது ஹாருவை யார் கவனிப்பார்கள்?' என்று மற்றொருவர் சொல்லுகிறார்.

"வெளியே செல்லவழி இருக்கிறது என்றாலும் வலையில் அகப்பட்ட மீன் தப்ப முயலுவதில்லை. வெளியே செல்ல வழி இருந்தாலும் பட்டுப் பூச்சி, தான் கட்டிய கூட்டில் தானே கிடந்து சாகிறது. உலகத்தின் நிலை இதுதான். நிலையாமை."

அண்டைவீட்டான்: "சுவாமி ஒரு கையால் ஈசுவரனையும் மற்றொரு கையால் சம்சாரத்தையும் ஏன் பற்றிக் கொள்ள வேண்டும்? உலக வாழ்வு நிலையற்றது எனும்போது ஒரு கையால் கூட ஏன் அதைப் பிடித்துக்கொள்ள வேண்டும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "கடவுளை அறிந்த பிறகு உலகவாழ்வு நிலையற்றதாகாது. பாட்டைக்கேள் :

என்னெஞ்சே பயிர் செய்தல் எப்படியென் றறியாயோ?
உன்னுடைய வாழ்வெனுமோர் உயர் வயல்தான் கிடந்திடுதே!
அன்ன வயல் தனை உழுதே அரும்பாடு மேற்கொண்டால்
பொன்னெனுமோர் அறுவடை நீ புரிந்திடலாம் நிலமீதே!
காளியன்னை திருப்பெயரால் கனவேலி அமைத்திடுவாய்!
நாளும்உன்றன் வாழ்க்கை வயல் நல்லபலன் நல்கிடவே
நீளுகின்ற படியமைத்த நின்பலத்த வேலிபக்கம்
மாளுகின்ற வகைசெய்யும் வன்காலன் அணுகானே!
இத்தினமோ எத்தினமோ இனிய உன்றன் வாழ்வுவயல்
இத்தரையில் உரிமையறும் இடர் வேளை வந்து விடும்!
எத்தகைய கனியனைய எழிற்பலனை விரும்பினையோ
அத்தகைய விளைவுசெய்ய அரியநெஞ்சே, முனைந்திடுவாய்!
குருஅளித்த இறைவன்றன் கொழும்புனித நாமமதால்
திருவிளங்கும் விதைவிதைத்துத் தெளிந்தபக்தி நீர்பாய்ச்சி
அருமைமிகும் பலனடைவாய்! அஃதுனக்குக் கடினமெனின்
பெருமைஇராம் பிரசாதின் பெருந்துணையைக் கூவிடுவாய்!

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பாட்டைக் கேட்டாயா?"

காளி என்னும் பெயரால் வேலி அமை. விளைச்சல் நாசமாகாது.
ஈசுவரனைச் சரணமடை. எல்லாவற்றையும் பெறுவாய்.
காளியே நம்முடைய உறுதியான வேலி,
அவள் அருகில் யமன் அணுகவே மாட்டான்!

"ஆமாம். வேலி உறுதியானது! ஆண்டவனை அடைந்தால் உலகவாழ்வு சாரமற்றது என்ற உணர்வு ஏற்படும். எவன் இறைவனை அறிந்துகொண்டானோ அவன், இறைவனே உயிர்களாகவும், உலகமாகவும் இருப்பதைத் தெளிவாகக் காண்கிறான். நீ குழந்தைக்கு உணவு ஊட்டும் போது கோபாலனாகிய கடவுளுக்கே உணவு ஊட்டுவதாக நினைத்துக் கொள். தாய் தந்தையரை சிவசக்தியாகப் பார். அவர்களுக்குச் சேவை செய். கடவுளை அறிந்தபிறகு, குடும்பம் நடத்தினால் மனைவியிடம் அநேகமாக உடல் சம்பந்தம் இருப்பதில்லை. கணவன், மனைவி இருவருமே பக்தர்களாகி விடுவார்கள். இறைவனைப்பற்றியே பேசுவார்கள். இறைவனைப் பற்றிய பேச்சை ஆதாரமாகக்கொண்டே வாழ்க்கையை நடத்துவார்கள். பக்தர்களுக்குச் சேவை செய்வார்கள். எல்லா உயிர்களிடத்தும் தங்கி இருக்கும் இறைவனுக்கு அவர்கள் இருவரும் சேவை செய்வார்கள்."

அண்டைவீட்டான் : "சுவாமி, இப்படிப்பட்ட கணவன், மனைவியைப் பார்க்கவே முடியாது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அப்படிப்பட்டவர்கள் இருக்கிறார்கள். ஆனால் பார்ப்பதுதான் கடினம். உலகம், உடல்இன்பம் இவைகளில் ஆசை கொண்டவர்களால் இவர்களை அறிந்து கொள்ள முடியாது. ஆனால் கணவன், மனைவி இப்படித்தான் இருக்க வேண்டும். இருவருமே கடவுளின் ஆனந்தத்தைச் சுவைத்திருந்தால்தான் இத்தகைய வாழ முடியும். அத்துடன் கடவுளின் தனிப்பட்ட கிருபையும் வேண்டும். இல்லாவிட்டால் இருவருக்கும் இடையே எப்பொழுதும் மனவேற்றுமை இருந்து கொண்டே இருக்கும். சில சமயம் ஒருவர் மற்றவரை விட்டு விலக வேண்டியும் நேரலாம். இருவருக்கும் இடையே ஒற்றுமை இல்லாவிட்டால் வாழ்க்கையே துன்பமயமாகிவிடும். இரவு பகலாக மனைவி தன் கணவனிடம், 'என் தந்தை என்னை ஏன் இங்கே மணம் செய்து கொடுத்தார்? சாப்பாட்டிற்கும் வழியில்லை. குழந்தைகளுக்கும் நல்ல உணவு கொடுக்க முடியவில்லை. நல்ல துணிமணிகளை அணிந்து கொள்ள வசதியில்லை. ஒரு நகை நட்டு கூட இல்லை. நீ என்னை என்ன சுகத்தில் வைத்திருக்கிறாய்? இந்த லட்சணத்தில், கண்களை மூடிக் கொண்டு 'ஈசுவரா, ஈசுவரா' என்று சொல்லிக் கொண்டிருக்கிறாய். இத்தகைய பைத்தியகாரத்தனத்தையெல்லாம் விட்டுவிடு' என்று சொல்லுவாள்."

ஒரு பக்தர் : "ஆம் சுவாமி. இப்படிப்பட்ட தடங்கல்கள் எல்லாம் இருக்கின்றன. பிள்ளைகள் சொன்ன பேச்சைக் கேட்பதில்லை. இன்னமும் எத்தனையோ துன்பங்கள். அப்படியானால் வழிதான் என்ன சுவாமி?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "சம்சாரத்தில் இருந்துகொண்டு சாதனை பழகுவது மிகக் கடினம். பல இடையூறுகள் உள்ளன. இதையெல்லாம் நான் உங்களுக்குச் சொல்லவேண்டியதில்லை. உங்களுக்கே தெரியும். நோய், துன்பம், வறுமை, மனைவியுடன் மனத்தாங்கல்; அடங்காத, மூர்க்கத்தனமான, பிடிவாதம் பிடிக்கும் பிள்ளைகள்; இன்னும் எத்தனையோ இடையூறுகள். இருந்தாலும் வழி இருக்கிறது. அடிக்கடி தனிமையில் போய் இறைவனைப் பிரார்த்திக்க வேண்டும். அவனை அடைய முயலவேண்டும்."

அண்டைவீட்டான் : "வீட்டை விட்டு வெளியேற வேண்டுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஒரேயடியாக வேண்டாம். சமயம் கிடைக்கும்போது தனிமையில் ஒரு நாளோ, இரண்டு நாளோ வீட்டுக்கு வெளியே சென்று தங்கு. குடும்பத்துடன் அப்போது எந்தவிதத் தொடர்பும் இல்லாமல் இருக்கட்டும். புலன் இன்பங்களில் ஈடுபட்டுள்ள மக்களுடன் குடும்பத் தொடர்பான பேச்சுவார்த்தைகள் ஏற்படாமல் இருக்கட்டும். தனிமையில் இரு. அல்லது சாது சங்கத்தை மேற்கொண்டு சாதனை பழகு."

அண்டைவீட்டான் : "சாதுவை எப்படி அறிந்து கொள்வது?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "யாருடைய உள்ளம், உயிர், ஆத்மா இவை யாவும் ஈசுவரனையே சரணடைந்திருக்கின்றனவோ அவன்தான் சாது. எவன் காமினி, காஞ்சனத்தைத் தியாகம் செய்திருக்கிறானோ அவன்தான் சாது. எவன் சாதுவோ அவன் பெண்களைச் சிற்றின்பப் பார்வையோடு பார்ப்பதில்லை. எப்பொழுதும் அவர்களை விட்டு விலகியே இருக்கிறான். அவர்கள் அருகில் வந்தால், தாயாகப் பார்க்கிறான். அவர்களைத் தாயாகப் பூஜை செய்கிறான். சாது எக்காலமும் ஈசுவர சிந்தனை செய்கிறான். ஈசுவரனைப் பற்றிய பேச்சைத் தவிர, மற்றதைப் பேசுவதில்லை. ஈசுவரன் எல்லா உயிர்களிடமும் இருக்கிறான் என்று அறிந்து அவர்களுக்குச் சேவை செய்கிறான். அநேகமாக இவைகளே சாதுவின் இலக்கணங்கள்."

அண்டைவீட்டான் : "எப்பொழுதும் தனிமையில் வாழ வேண்டுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "பாதையின் ஓரத்தில் இருக்கும் மரங்களை நீ பார்த்திருக்கிறாயா? அவை சிறு செடிகளாக இருக்கும்வரை நான்குபக்கங்களிலும் வேலி அமைக்க வேண்டும். இல்லாவிட்டால் ஆடு, மாடுகள் தின்று விடும். செடியின் அடிமரம் தடிப்பாக வளர்ந்ததும் வேலியின் அவசியம் இல்லை. அப்பொழுது யானையைக் கட்டி வைத்தாலும் மரத்துக்கு ஆபத்தில்லை. அடிமரமாக உன் மனத்தைச் செய்து கொள்ள முடிந்தால், பின் என்ன கவலை? முதலில் விவேகத்தைப் பெறப் பாடுபாடு. எண்ணெய் பூசிக்கொண்டு பலாப்பழத்தை அறுத்தால் கையில் பிசின் ஒட்டாது."

அண்டைவீட்டான் : "விவேகம் என்றால் என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனை அடையாதவரை உலகப் பொருட்களை, இது கடவுள் அல்ல, இது கடவுள் அல்ல (நேதி, நேதி) என்று தியாகம் செய்யவேண்டும். அவனை அடைந்தவர்கள் அவனே எல்லாமாகவும் இருக்கிறான் என்பதை அறிகின்றனர். ஈசுவரன், மாயை, உயிர்கள், உலகம். இவை எல்லாம் இறைவனே என்ற அறிவு அப்பொழுது கிடைக்கும். ஒரு வில்வப் பழத்தின் ஓடு, சதை, விதை,இவைகளைப் பிரித்து விட முடியுமானால், எவரேனும், 'இந்தவில்வப் பழத்தின் எடை எவ்வளவு சொல்லு பார்க்கலாம்' என்று கேட்டால் ஓடு, விதை இவைகளை எறிந்துவிட்டுச் சதையை மட்டும் எடை போடுவாயா? மாட்டாய். எடை போடவேண்டுமானால் ஓடு, விதை எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ள வேண்டும். இவைகளை எல்லாம் எடுத்துக்கொண்டால்தான் வில்வப் பழத்தின் எடை இவ்வளவு என்று சரியாகச் சொல்லமுடியும். உலகம், பழத்தின் ஓடு போன்றது; விதைகள் ஜீவராசிகள் போன்றவை. விசாரம் செய்யும்பொழுது, 'ஜீவன், ஜகத் இவை அநாத்மா, அவஸ்து. சதைதான் சாரம், ஓடும் விதையும் சாரமற்றது' என்ற உணர்வு ஏற்படுகிறது. ஆனால் விசாரம் முடிந்துவிட்டால் எல்லாம் சேர்ந்து ஒன்று என்ற எண்ணம் உண்டாகிறது. எந்த சத் வஸ்துவிலிருந்து சதை உண்டாயிற்றோ அதிலிருந்தே வில்வப்பழத்தின் ஓடும், விதைகளும் உண்டாகி இருக்கின்றன என்ற உணர்வு ஏற்படுகிறது. வில்வப்பழத்தை அறியும்பொழுது எல்லாம் அறிந்துவிடுகிறோம்.

"வெளிப்படுதல் ஒடுங்குதல், அனுலோமம் விலோமம், எனப்படும். உலகம் பிரளயத்திற்குப் பிறகு இறைவனிடம் ஒடுங்கும். இறைவன் படைத்தல் தொழில் புரியும்பொழுது தன்னிடமிருந்து உலகத்தை வெளிப்படுத்துகிறார். மோரைச் சேர்ந்தது வெண்ணெய்; வெண்ணெயைச் சேர்ந்தது மோர். மோர் உண்டாகியபொழுதே வெண்ணெயும் உண்டாகி இருக்கிறது; வெண்ணெய் உண்டாகி இருந்தால், மோரும் உண்டாகி இருக்கிறது. ஆத்மா இருக்குமானால், அனாத்மாவும் இருக்கத்தான் இருக்கும்.

"நித்தியம் எவருடையதோ அவருடையதே லீலையும். அதே போல, லீலை எவருடையதோ அவருடையதே நித்யமும். ஈசுவரன் என்று எவனை அறிகிறோமோ அவனே மக்களாகவும் உலகமாகவும் ஆகியிருக்கிறான். ஈசுவரனை எவன் அறிகிறானோ அவன், 'ஈசுவரனே எல்லாமாகி இருக்கிறான்' என்பதைக்

கா்ண்கிருன். தாய், தந்தை, குழந்தை, அண்டை வீட்டான், ஜீவராசிகள், நல்லது கெட்டது, சுத்தம் அசுத்தம் எல்லா மாகவும் இறைவன் ஆகியுள்ளான்."

அண்டைவீட்டான்: "அப்படியானுல் பாவம், புண்ணியம் என்பது இல்லையா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இருக்கிறது; அதே சமயத்தில் இல்லவும் இல்லை. இறைவன், 'நான்' என்ற எண்ணத்தை நம்மிடம் வைத்திருந்தால் வேற்றுமை காணும் புத்தியையும் வைக்கிருர்; பாவ, புண்ணியம் என்ற எண்ணத்தையும் வைக்கிருர். ஏதோ ஓரிருவருக்கு அவர் அகங்காரத்தை அடியோடு துடைத்துவிடுகிருர். இவர்கள் பாவ புண்ணியம், நல்லது கெட்டது இவற்றைத் தாண்டிச் செல்கின்றனர். ஈசுவரக் காட்சி கிட்டாதவரை நல்லது கெட்டது என்ற வேற்றுமை எண்ணம், இருந்தே தீரும். 'பாவ புண்ணியம் இரண்டும் எனக்குச் சமமானவை. இறைவன் எவ்வாறு செய்விக்கிருனோ அப்படியே செய்கிறேன்' என்று நீ வாயினுல் சொல்லலாம். ஆனுல், இவைகளெல்லாம் வெறும் வார்த்தைகள் மட்டுமே என்பதை உனக்குள் நீ அறிவாய். ஏதாவது தீச் செயல் புரிந்தாலே மனம் படபடவென்று அடித்துக்கொள்ளும். இறைக் காட்சிக்குப் பிறகும், இறைவன் விரும்பினுல், 'நான் தாசன்' என்ற எண்ணத்தை (பக்தனிடம்) வைக்கிருன். அந்த நிலையில் பக்தன், 'நான் தாசன், நீ பிரபு' என்கிருன். இப்படிப் பட்ட பக்தனுக்கு, ஈசுவரனைப் பற்றிய பேச்சு, ஈசுவரனுக்கான செயல்கள் மட்டுமே இன்பம் அளிக்கின்றன. ஈசுவரனிடம் பக்தி கொள்ளாதவர்களை இந்த பக்தன் விரும்ப மாட்டான்; ஈசுவரனுக்கென்று செய்யப்படாத செயல்களைவிரும்புவதில்லை. இறைக் காட்சி பெற்ற இப்படிப்பட்ட பக்தர்களிடமும் இறைவன் பேதபுத்தியை வைக்க முடிகிறது என்பது இதிலிருந்து தெரிகிறது."

அண்டைவீட்டான் : "சுவாமி, ஈசுவரனை அறிந்து சம்சார வாழ்க்கையை நடத்து என்று சொல்லுகிறீர்கள். அவரை அறியமுடியுமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவனைப் புலன்களின் மூல மாகவோ, மனத்தின் மூலமாகவோ அறியமுடியாது. ஆனுல், எந்த மனத்தில் பொருளாசை இல்லையோ அந்தத் தூய மனத்தினுல் அவனை அறியமுடியும்."

அண்டைவீட்டான் : "ஈசுவரனை யார் அறியக் கூடும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "யார்தான் அவரைச் சரியாக அறிய முடியும்! நமக்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு அறிந்தால் போதும். ஒரு கிணறு முழுவதும் உள்ள தண்ணீரால் எனக்கு என்ன பயன்? எனக்கு ஒரு குடம் தண்ணீர் இருந்தாலே போதும். சர்க்கரை மலையின் அருகே ஓர் எறும்பு சென்றது. அதற்கு அத்தனை சர்க்கரையாலும் என்னபயன்? இரண்டொரு துணுக்குகள் கிடைத்தாலே போதும்!"

அண்டைவீட்டான் : "எங்களுடைய டைபாய்டு காய்ச்சலுக்கு ஒரு குடம் தண்ணீர் எப்படிப் போதும்? ஈசுவரனை முழுதுமாக அறிந்துவிட வேண்டும் என்று ஆசை தோன்றுகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "உண்மைதான். ஆனல் டைபாய்ட் காய்ச்சலுக்கு மருந்து உண்டு."

அண்டைவீட்டான் : "என்ன மருந்து சுவாமி?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சாதுக்களின் சேர்க்கை, இறைவனது பெயரையும் புகழையும் பாடுவது, எப்பொழுதும் இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருப்பது. நான் அன்னை பராசக்தியிடம் 'தாயே! எனக்கு ஞானம் வேண்டாம். இதோ உன் ஞானத்தை எடுத்துக்கொள். இதோ உனது அஞ்ஞானம். இதையும் எடுத்துக்கொள். உன் பாத கமலங்களில் பூணும் தூய பக்தியை மட்டுமே கொடு. எனக்கு வேறு ஒன்றுமே வேண்டாம்' என்று பிரார்த்திப்பேன்.

"நோய்க்குத் தகுந்த மருந்து வேண்டும். கீதையில், 'அர்ஜுனு, நீ என்னையே சரணடை. உன்னை நான் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்!' என்று பகவான் கூறியிருக்கிருர். இறைவனிடம் சரணடை. அவன் நல்ல புத்தியைக் கொடுப்பான், அவன் எல்லாப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்வான். அப்பொழுது எல்லாவித நோய்களும் உன்னை விட்டு அகலும். அதை விட்டுவிட்டு நம்முடைய இந்த உலக புத்தியினுல் இறைவனை அறியமுடியுமா? ஒரு படி பாத்திரத்தில் நாலு படி பாலை வைக்க முடியுமா? இறைவனே தன்னைப் பற்றி அறிவிக்காவிட்டால் அவனை எப்படி அறிய முடியும்? ஆகவேதான் அவனைச் சரணடை என்று சொல்லுகிறேன். இறைவனுக்கு எது விருப்பமோ அதை அவன் செய்யட்டும். அவன் தன் விருப்பப்படியே செய்பவன். மனிதனுக்கு என்ன சக்தி இருக்கிறது?"

# தட்சிணேசுவரத்தில் பக்தர்களுடன்

**ஞாயிற்றுக்கிழமை, டிசம்பர் 9, 1883**

பிற்பகல் சுமார் ஒன்று அல்லது இரண்டு மணி இருக்கும். குருதேவர் தமது அறையில் கட்டிலில் அமர்ந்து பக்தர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார்.

அதர், மனமோகன், டன்டனியா என்ற பகுதியைச் சேர்ந்த சிவசந்திரன், ராக்கால், ம-, ஹரீஷ் மற்றும் பல அன்பர்கள் அறையில் அமர்ந்திருந்தனர். ஹாஸ்ராவும் அப்போது தட்சிணேசுவரக் கோவிலில் தங்கியிருந்தார்.

ஸ்ரீகிருஷ்ண சைதன்யரின் உன்னதமான ஆன்மிக நிலைகளைக் குருதேவர் விவரித்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): சைதன்யரின் மனம் மூன்று வித ஆன்மிக நிலைகளிலும் சஞ்சரித்தது. **முதலாவது**, புற உலகத்தின் நினைவோடு இருந்த உணர்வு நிலை. இந்த நிலையில் அவரது மனம் ஸ்தூலத்திலும் சூட்சமத்திலும் தங்கி இருந்தது. **இரண்டாவது**, புறஉலகத்தின் பாதி நினைவோடு இருந்த நிலை. இந்த நிலையில் அவரது மனம் காரண சரீரத்தில் நுழைந்தும் தெய்விகப் பேரின்பத்தில் அமிழ்ந்தும் இருந்தது. **மூன்றாவது**, உள்ளுணர்வு மட்டும் இருந்த நிலை. இந்த நிலையில் அவரது மனம் மஹா காரணத்தில் லயித்து நின்றது.

"ஸ்ரீ சைதன்யரின் இந்த மூன்று நிலைகளும் வேதாந்தம் குறிப்பிடும் பஞ்ச கோசங்களுடன் நன்கு பொருந்துகின்றன. ஸ்தூல சரீரம் அன்னமய கோசத்தைக் குறிப்பிடுகிறது. சூட்சும சரீரம் என்பது பிராணமய, மனோமய, விஞ்ஞானமய கோசங்களைக் குறிப்பிடுகிறது. காரண சரீரம் என்பது, ஆனந்தமய கோசத்தைக் குறிப்பிடுகிறது. மஹா காரணம் என்பது பஞ்சகோசங்களைக் கடந்தது. ஸ்ரீசைதன்யரின் மனம் மஹா காரணத்தில் லயித்து விடும்போது அவர் சமாதி நிலைக்குச் சென்று விடுவார். இதுவே நிர்விகல்ப சமாதி அல்லது ஜட சமாதி என்று சொல்லப்படுகிறது.

"வெளியுலக நினைவு இருக்கும் போது சைதன்யர் நாம சங்கீர்த்தனம் செய்வார். அரைப்பிரக்ஞை நிலையில் இருக்கும் போது பக்தர்களுடன் சேர்ந்து ஆடுவார். ஆழ்ந்த உள்ளுணர்வு நிலையில் அவர் சமாதியில் மூழ்கித் தோய்ந்திருப்பார்."

ம : (தமக்குள்) குருதேவர் தமது சொந்த மனநிலைகளையே இப்படி மறைவாகக்கூறுகிறாரா? சைதன்ய தேவரும் இத்தகைய நிலைகளைப் பெற்றிருந்தார் என்று சொல்லுகிறாரா!

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஸ்ரீசைதன்யர் பக்தியின் அவதாரம். மக்களுக்குப் பக்தியைப் போதிப்பதற்காகவே அவர் மண்ணுலகில் அவதரித்தார். ஒருவனுக்கு ஆண்டவனிடம் பக்தி ஏற்பட்டுவிடுமானால் எல்லாமே கிடைத்த மாதிரிதான்; அவன் அனைத்தையும் பெறுகிறான். ஹடயோகம் பழக வேண்டும் என்பதற்கெல்லாம் எந்தவித அவசியமும் இல்லை."

ஒரு பக்தர் : "சுவாமி, ஹடயோகம் என்பது என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஹடயோகம் பயிலும் ஒருவன் தனது உடலைப்பற்றியே மிகவும் சிந்திக்கிறான். அவன் தனது மலவாயில் வழியாக ஒரு சிறிய மூங்கில் குழாயைச் செலுத்தித் தன் குடல்களைக் கழுவிச் சுத்தம் செய்கிறான். ஆண்குறி வழியாகப் பால், நெய் ஆகியவற்றை உள்ளுக்குள் இழுக்கிறான். நாக்கு சித்தியைப் பழகுகிறான். ஏதாவது ஒரு ஆசனம் போட்டு உட்காருவான், அப்படியே உடலை அந்தரத்தில் நிறுத்துவான். இவையெல்லாம் பிராணனின் செயல்களாகும். ஒரு மந்திரவாதி ஜாலவித்தையைக் காட்டிக் கொண்டிருந்த போது அவனுடைய நாக்கு, தொண்டைப் பக்கம் மேல் நோக்கி வளைந்து ஒட்டிக் கொண்டது. அது காரணமாக அவனது உடல் உடனே அசைவற்று நின்று விட்டது. அவனது அந்த நிலையைக் கண்ட மக்கள் அவன் இறந்து போய் விட்டான் என்று முடிவு செய்து அவனைப் புதைத்து விட்டனர். பல ஆண்டுகளாக அவன் மண்ணில் புதைந்து கிடந்தான். நீண்ட காலத்திற்குப் பிறகு அந்த மண் எப்படியோ நீக்கப்பட்ட போது அந்த ஜால வித்தைக்காரனுக்குத் திடீரென்று உணர்வு திரும்பியது. உடனே அவன், 'மாயம் பார்! மந்திரம் பார்! குழப்பமெல்லாம் வருகுது பார்! பார்!' என்று கத்த ஆரம்பித்து விட்டான். (எல்லோரும் சிரித்தனர்). இவையெல்லாம் பிராணனின் செயல்களாகும். வேதாந்திகள் ஹடயோக முறைகளை ஏற்றுக் கொள்வதில்லை. ராஜயோகம் என்று ஒன்று உண்டு. ராஜயோகத்தில்

மனத்தின் மூலம் யோகம் சித்திக்கிறது. பக்தியின் மூலமும் ஞானவிசாரத்தின் மூலமும் யோகம் ஏற்படுகிறது. இந்த யோகமே சிறந்தது. ஹடயோகம் நல்லதல்ல. கலியுகத்தில் பிராணன் உணவைச் சார்ந்திருக்கிறது."[1]

குருதேவர் பைன் மரங்கள் அடர்ந்திருந்த பக்கம் சென்று விட்டுச் சிறிது நேரத்திற்குப் பிறகு முகம் கழுவிக் கொண்டு தமது அறையை நோக்கித் திரும்பி வரும்வழியில் நஹபத்தை அடுத்துள்ள பாதையில் சற்று நின்று கவனித்தார். நஹபத்தின் தாழ்வாரத்தில் வேலியின்ஒரு பக்கத்தில் மறைவாகஉட்கார்ந்து கொண்டு ம—, ஆழ்ந்த தியானத்தில் மூழ்கி இருப்பதைக் கண்ணுற்ருர். ஆழ்ந்த இறை எண்ணத்தில் உள்ளாரா என்ன?

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஓ! நீ இங்கே இருக்கிருயா? மிகவும் விரைவிலேயே உனக்கு ஆன்மிக விழிப்பு ஏற்பட்டு விடும். நீ சிறிதளவு முயற்சி செய்தாலே யாராவது ஒருவர் தாளுக முன் வந்து 'இப்படி இப்படிச் செய்' என்று உனது ஆன்மிக முன் னேற்றத்திற்கு வேண்டிய உதவிகளைச் செய்து கொடுப்பார்."

தியானத்திலிருந்த ம- திடுக்கிட்டு குருதேவரை நிமிர்ந்து பார்த்தார். குருதேவரைப் பார்த்தபடியே அவர் அமர்ந்திருந் தார். இருந்த இடத்தை விட்டுச் சிறிதும் அசையவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "உனக்கேற்ற சரியான காலம் கூடி விட்டது. தகுந்த நேரம் வராத வரையில் தாய்ப்பறவை முட்டையின் மேலோட்டை உடைக்காது. ஏற்கனவே, நான் என்ன கூறியிருந்தேனே அதுவே உண்மையில் உன் லட்சிய மாகும்."

இவ்விதம் சொல்லி விட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் மீண்டும் ம- வுக்கு அவரது ஆன்மிக நிலை எது என்பதை எடுத்துச் சொன்னர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "எல்லோருமே கடுமையாகத் தவம் பழக வேண்டும் என்ற அவசியமில்லை. ஆனல், நான் மிகவும்

---

1. உயிரானது கிருதயுகத்தில் எலும்புகளைப் பற்றி இருந்தது; திரேதாயுகத்தில் மாமிசத்தைப் பற்றி இருந்தது; துவாபரயுகத்தில் இரத்தத்தைப் பற்றி இருந்தது; கலியுகத்தில் அன்னத்தைப்பற்றி இருக்கிறது; என்று ஸ்மிருதி முக்தாபலம் என்ற நூல் கூறுகிறது. அந்த ஸ்லோகம் வருமாறு:—

க்ருதே த்வஸ்திகதா: ப்ராணு : த்ரேதாயம்ச மாம்ஸ மாச்ரிதா : ।
த்வாபரே ருதிரே சைவ கலௌத் வன்னாதிஷு ஸ்திதா : ॥

கஷ்டப்பட்டுத் தவம் பழகினேன். மண்மேட்டைத் தலையணையாகக் கொண்டு, தரையில் விழுந்து கிடப்பேன். அப்போது நாட்கள் எப்படிக் கழிந்தன என்பதே எனக்குத் தெரியாது, 'அம்மா! அம்மா!' என்று மட்டும் சொல்லிக் கொண்டே ஜகன் மாதாவை அழைத்து அழுது புலம்புவேன்."

கடந்த இரண்டு வருடங்களாக ம- குருதேவரிடம் வந்து போய்க் கொண்டிருந்தார். ம- ஆங்கிலம் படித்தவர். சில சமயங்களில் ஸ்ரீராமகிருஷ்ணர் ம-வை 'இங்கிலீஷ்மேன்' என்று அழைப்பது வழக்கம். ம- கல்லூரியில் படித்தவர். அவருக்குத் திருமணம் ஆகியிருந்தது.

கேசவ சந்திரசேன், மற்றும் பல அறிஞர்களின் சொற்பொழிவுகளைக் கேட்பதில் ம-வுக்குப் பெரிதும் விருப்பம் இருந்தது. மேலை நாட்டுத்தத்துவம், மேலைநாட்டு விஞ்ஞானம் முதலிய நூல்களைப்படிப்பதிலும் அவருக்கு அதிக ஆர்வம் இருந்தது. ஆனால்ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வரஆரம்பித்ததிலிருந்து ஐரோப்பிய அறிஞர்களின் நூல்களிலும், மற்றும் பிற மொழிச் சொற்பொழிவுகளிலும் அவருக்கு விருப்பமில்லாமல் போய் விட்டது. இப்போது இரவுபகலாகக் குருதேவரைத் தரிசிப்பதிலும், அவரது திருவாயிலிருந்து பொழியும் அமுத மொழிகளைக் கேட்பதிலும் விருப்பம் கொண்டிருந்தார். இப்போதெல்லாம் ம- ஸ்ரீராமகிருஷ்ணரின் ஒரு உபதேசத்தையே எப்பொழுதும் சிந்திக்கிறார். ஆத்மசாதனை பழகினால் நிச்சயம் பகவானைத் தரிசிக்க முடியும் என்றும் மனிதப் பிறவியின் ஒரே நோக்கம் கடவுட் காட்சி பெறுதல் என்றும் கூறியிருந்தார் குருதேவர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்) : "நீ ஒரு சிறிது ஆத்மசாதனை பழகினாலே யாராவது ஒருவர் முன் வந்து 'நீ இப்படி இப்படிச் செய்' என்று உனக்குச் சரியான மார்க்கத்தைக் காட்டி உதவி செய்வார். நீ ஏகாதசி நாட்களில் விரதம் இரு.

"நீ எனக்கு மிக மிகச் சொந்தமானவன். எனக்கு வேண்டியனாக இல்லா விட்டால், நீ இங்கே அடிக்கடி ஏன் வர வேண்டும்?

"ஒரு சமயம் நான் நாமசங்கீர்த்தனம் கேட்டுக் கொண்டிருக்கும் போது, ஸ்ரீகிருஷ்ணனின் தோழர்கள் மத்தியில் ராக்காலும் ஒருவனாக இருந்ததை ஒரு ஞானக் காட்சியில் பார்த்தேன். நரேந்திரன் ஓர் உயர்ந்த ஆன்மிக பூமியைச்

சேர்ந்தவன். ஹீரானந்தனும் அப்படிப்பட்டவன் தான். அவன் ஒரு குழந்தையின் மன நிலையில் அல்லவா இருக்கிருன்! அவன் மனநிலை எவ்வளவு இனிமையாக இருக்கிறது! அவனைப்பார்க்க விரும்புகிறேன்.

"ஒரு சமயம் கௌராங்கர் தமது சீடர்களுடன் கூட்டமாக வருவதைப் பார்த்தேன். என் மனம் அகவுணர்வில் ஆழ்ந்திருக்கவில்லை. இந்தப் புறக் கண்களைக் கொண்டே பார்த்தேன். முன்பெல்லாம் ஊனக்கண்களைக் கொண்டே இது போன்ற எல்லா விதமான ஆன்மிகக் காட்சிகளையும் பார்க்கக்கூடிய நிலையில் என் மனம் இருந்தது. ஆனல், இப்போதோ ஞானக் காட்சிகளைத் தெய்விகப் பரவசத்தில், சமாதியில் இருக்கும் போது மட்டுமே காண்கின்றேன்.

"கௌராங்கரும் அவரது சீடர்களும் அடங்கிய கூட்டத்தை இந்தப் புறக்கண்களைக் கொண்டுதான்பார்த்தேன். அவர்களில் ஒருவனுக உன்னையும் பார்த்தேன். பலராமரையும் பார்த்தேன்.

"சில பேர்களைப் பார்க்கும்போது மட்டும் நான் திடீரென்று குதித்தெழுந்து நிற்கிறேன். அதற்கு என்ன காரணம் தெரியுமா? ஒருவன் நீண்ட காலத்திற்குப் பிறகு தனக்கு மிகவும் சொந்தமான ஒருவனைப் பார்க்கும்போது இப்படித்தான் ஏற்படுகிறது.

"நான் ஜகன்மாதாவிடம் அழுது கொண்டே, 'அம்மா, பக்தர்களைக் காண வேண்டும் என்று என் உயிர் துடியாய்த் துடிக்கிறது. அவர்களை விரைவில் இங்கு அழைத்து வா!' என்று முறையிட்டுப் பிரார்த்தித்துக் கொள்வேன். அந்த நாட்களில் நான் மனதில் என்னென்ன நினைப்பேனே அவையெல்லாம் அப்படியே நடந்தேறின.

"ஜபமும் தியானமும் பழகுவதற்காகப் பஞ்சவடியில் ஒரு துளசித் தோட்டம் அமைத்தேன். அந்தத் துளசித் தோட்டத்தைச் சுற்றி மூங்கில் கழியால் வேலி போடவேண்டும் என்று பெரிதும் விரும்பினேன். இப்படி நான் நினைத்த மறுநாளே கங்கையில் மூங்கிற் கழிகள் கொண்ட ஒரு கட்டும், கயிறுகளும் மிதந்து வந்து சரியாகப் பஞ்சவடிக்கு எதிரே ஒதுக்கப்பட்டிருப்பதைப் பார்த்தேன். அவற்றை அங்கே பார்த்த கோவிலைச் சேர்ந்த ஓர் ஊழியன் மிகவும் மகிழ்ச்சி

யோடு ஆடிக்கொண்டும் குதித்துக் கொண்டும் என்னிடம் வந்து இந்தத் தகவலைத் தெரிவித்தான்.

"எனக்கு தெய்விகப் பரவசநிலை வாய்த்தபோது என்னால் பூஜை முதலியவற்றை விதிமுறைகளுக்கிணங்கச் செய்ய முடியாதுபோயிற்று. நான் ஜகன்மாதாவிடம் 'அம்மா! என்னை யார் கவனித்துக் கொள்வார்கள்? அம்மா! என்னை நானே கவனித்துக் கொள்வதற்கு உரிய சக்தி என்னிடம் இல்லையே! உன் பேச்சைக் கேட்கவே விரும்புகிறேன்; என் முன்னால் யாராவது எதிர்ப்பட்டால் அவருக்கு ஏதாவது கொடுக்க விரும்புகிறேன்; இதையெல்லாம் நான் எப்படி நிறைவேற்ற முடியும்? அம்மா, நீ ஒரு பெரிய மனிதரை என்னிடம் அனுப்பிவை' என்று முறையிட்டுப் பிரார்த்தித்தேன். ஆகவேதான், மதுர்பாபு முன்வந்து எனக்கு இவ்வளவு தொண்டுகள் செய்தார்.

"மேலும் அம்பிகையிடம், 'அம்மா! எனக்கு நிச்சயமாகக் குழந்தை பிறக்காது. ஆனால் பகவானிடம் உண்மையான பிரேம பக்தி கொண்ட ஒரு பையன் என்னுடன் எப்போதும் தங்கியிருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். அத்தகைய பையனை நீ எனக்குத் தந்தருள்' என்றும் பிரார்த்தனை செய்தேன். அதன் காரணமாகத்தான் ராக்கால் இங்கே வந்து சேர்ந்தான். யாரெல்லாம் எனக்குச் சொந்த மானவர்கள் என்று நான் நினைக்கிறேனோ அவர்களெல்லாம் என்னில் ஓர் அம்சமோ, கலையோ ஆவர்."

மீண்டும் குருதேவர் ம-வுடன் பஞ்சவடியை நோக்கிச் சென்றார். அப்போது வேறு யாரும் அவர்களுடன் இல்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் தமது வாழ்க்கையின் கடந்தகால நிகழ்ச்சிகள் பலவற்றைப் புன்முறுவலுடன் ம-விற்குத் தொடர்ச்சியாகக் கூறிக்கொண்டு வந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (ம-விடம்) "இதோ பார். ஒருநாள் நான் காளி கோவிலிலிருந்து பஞ்சவடி வரையிலும் உள்ள இடைவெளி முழுவதையும் வியாபித்துக்கொண்டிருந்த ஓர் அற்புதமான உருவத்தைப் பார்த்தேன்! இதை நீ நம்புகிறாயா?"

ம-வியப்பின் காரணமாகப் பேச்சற்று மௌனமாக இருந்தார். பஞ்சவடி மரங்களிலிருந்து சில இலைகளைப் பறித்துத் தமது சட்டைப்பையில் வைத்துக்கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "அதோ மரத்தின் ஒடிந்துபோயிருக்கிற கிளை. அதனடியில் அமர்ந்துகொண்டுதான் நான் ஞான சாதனைகள் புரிந்தேன்."

ம : "நான் அதிலிருந்து ஒரு சிறிய குச்சியை ஒடித்து வீட்டில் வைத்திருக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: (புன்சிரிப்புடன்) "ஏன் அப்படிச் செய்தாய்?"

ம: "அதைப் பார்க்கும் போதெல்லாம் நான் மகிழ்ச்சி அடைகிறேன். இதெல்லாம் நடந்து முடிந்த பிறகு, இந்த இடம் ஒரு மஹா புண்ணியத்தலமாக மக்களால் கருதப்படும்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புத் தவழ) : "எந்த மாதிரியான புண்ணியத்தலம்? பானிஹாடி மாதிரியா?"

பானிஹாடியில் ராகவபண்டிதர் ஒவ்வோர் ஆண்டும் மஹோற்சவம் நடத்துவது வழக்கம். குருதேவர் சில ஆண்டுகளாக அந்த விழாவைக்காணத் தவறாமல் சென்று கொண்டிருந்தார். அங்கே சங்கீர்த்தனம் நடைபெறும். அப்போது குருதேவர் பிரேமானந்தம் பெருக நடனம் செய்வார். ஸ்ரீகௌராங்க பக்தர்களின் அழைப்புக்கு அவரால் செவி சாய்க்காமல் இருக்கமுடியாது. சங்கீர்த்தனத்தின்போது பக்தர்களுக்கு அவர் பிரேம மூர்த்தியாகவே தோன்றுவார்.

மாலைநேரம் வந்தது. குருதேவர் தமது அறையில் இருந்த சிறிய கட்டிலின் மீது அமர்ந்து ஜகன்மாதாவைக் குறித்துத் தியானத்தில் ஆழ்ந்தார். உரியகாலத்தில் கோவிலில் மாலை வழிபாடு, சங்கு, சேகண்டி ஓசையுடன் ஆரம்பமாயிற்று. ஆலயமணி முழங்கியது. ம- அன்றிரவு தட்சிணேசுவரத்தில் குருதேவருடன் தங்குவதாக இருந்தார்.

சிறிது நேரத்திற்குப்பிறகு குருதேவர் ம-விடம் வைஷ்ணவ மஹான்களைப்பற்றிய 'பக்தமாலா' என்ற புத்தகத்தைப் படித்துக்காட்டும்படி கூறினார். அதன்படி ம-வும் படிக்க ஆரம்பித்தார்.

ஜயமல் என்று ஓர் அரசன் பகவான் ஸ்ரீகிருஷ்ணரிடம் இதயபூர்வமான பக்தி பூண்டிருந்தான். அவன் கிருஷ்ணரை சியாமளசுந்தரர் என்ற பெயரில் வழிபட்டு

வந்தான். கிருஷ்ணபூஜைக்குரிய எல்லா நியம அனுஷ்டானங்களையும் விதிமுறை தவறாமல் அவன் மிகுந்த சிரத்தையோடு கடைப்பிடித்து கிருஷ்ணனை வழிபட்டு வந்தான். தனது இஷ்ட தெய்வத்திடம் ஆழ்ந்த பற்றுக் கொண்ட அந்த அரசனின் உள்ளத்தில் மற்ற தேவதேவியரைப் பற்றிய எண்ணம் எழுந்ததில்லை. தனது இஷ்ட தெய்வமான கிருஷ்ணரை நாள்தோறும் தவறாமல் நீண்டநேரம் ஒரே மனத்துடன் பூஜை செய்வது அவன் பின்பற்றி வந்த பக்தி சாதனைகளில் ஒன்று. இந்த நல்ல பழக்கத்தை அவன் எந்தக் காரணத்தை முன்னிட்டும் கைவிடாமல் செய்து வந்தான். தனது ராஜ்யமே அழிந்தாலும் சரி, அல்லது செல்வம் முழுவதும் கரைந்து போனாலும் சரி, பூஜை நியமத்தை மட்டும் ஒருபோதும் மாற்றிக்கொள்ள மாட்டான். இவ்விதம் பூஜைக்கிரமத்திலிருந்து ஜயமல் வழுவாதவன் என்ற ரகசியத்தை அறிந்துகொண்ட பக்கத்து நாட்டு அரசன் காலை நேரத்தில் ஜயமல்லின் ராஜ்யத்தின் மீது படையெடுத்தான். ஜயமல்லின் கட்டளை யில்லாதபடியால் அவனது போர் வீரர்களால் போரில் ஈடுபடமுடியவில்லை. எனவே, அவர்கள் பகைவரின் படையெடுப்பைப் பேசாமல் பார்த்துக்கொண்டிருந்தனர். மெல்ல மெல்லப் பகைவர்கள் தலைநகரின் கோட்டையைச் சூழ்ந்து கொண்டனர். அரசனுடைய தாய் பூஜையறைக்குப் போய்ப் பரிதாபமாகத் தேம்பித்தேம்பி அழுதுகொண்டே ஜயமல்லை யுத்தம் செய்யப் போகும்படி வேண்டினாள். ஆனால் மன்னனோ மிகவும் அமைதியாக அவளிடம் 'அம்மா, நீ ஏன் கவலைப்படுகிறாய்? எனக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுத்தவர் சியாமளசுந்தரர்தான். அவரே அதைத் திரும்ப எடுத்துக்கொண்டுவிட நிச்சயித்திருந்தால், நான் என்ன செய்ய முடியும்? அவரே என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைத்தாரானால், எவராலும் எனக்கு எந்தவிதத் தீங்கும் விளைவிக்க முடியாது. நமது சொந்த முயற்சிகளெல்லாம் பயனற்றவையே யாகும்' என்று கூறிவிட்டான்.

இவ்விதம் அரசன் ஜயமல் சொல்லிக்கொண்டிருந்தபோது அவனது இஷ்ட தெய்வமான சியாமளசுந்தரரே குதிரை லாயத்திலிருந்து ஜயமல்லின் குதிரையை அவிழ்த்து எடுத்துக்கொண்டு, உண்மையாகவே போருடை தரித்துப் போர்க்களத்தை நோக்கிப் புறப்பட்டார். தன்னந்தனியாகவே அவர் பகைவரை எதிர்த்து, எதிரியின் படையை அழித்தார். படையெடுத்து வந்த எதிரியின் படையைச் சின்னபின்னப்படுத்திய பிறகு, கோவிலுக்குப் பக்கத்தில் குதிரையைக் கொண்டுவந்து நிறுத்திவிட்டு, சியாமள சுந்தரர் கோவிலுக்குள் நுழைந்து விட்டார்.

ஜயமல் பூஜையை முடித்து விட்டு வெளியில் வந்த போது,கோவிலுக்கு அருகில் தன் குதிரை கட்டப்பட்டிருந்

தைக் கண்டான். அது வேர்வை சொட்டச் சொட்ட நிற்பதையும் கண்டான். 'என் குதிரை மீது சவாரி செய்தது யார்? கோவிலுக்கு அருகில் அதைக் கொண்டுவந்து யார் நிறுத்தியது?' என்று காவலாளிகளை அதட்டிக் கேட்டான். காவல் வீரர்களோ தங்களுக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது என்று ஒரே குரலாகக் கூறினார்கள். குழப்பத்துடன் மன்னன் தனது படையைத் திரட்டிக்கொண்டு போர்க்களம் நோக்கிச் சென்றான். அங்கே பகைவரின் படைவீரர்கள் அனைவரும் இங்கும் அங்கும் பிணமாக வீழ்ந்து கிடந்ததை ஜயமல் கண்டான். பகை அரசன் மட்டுமே அந்த யுத்த களத்தில் உயிர்தப்பியிருந்தான். நடந்தது என்னவென்று ஒன்றும் புரியாமல் விழித்தபடியே ஜயமல் யுத்த களத்தைப் பார்த்துக் கொண்டு நின்றபோது, பகை அரசன் ஜயமல்லின் அருகில் வந்து அவனை வணங்கி, 'தயவுசெய்து நான் சிலவற்றைத் தங்களுக்குத் தெரிவிக்க அனுமதியுங்கள். என்னால் எதிர்த்துப் போரிட முடியவில்லை. உங்களுடைய அந்தப் போர்வீரர் இந்த உலகத்தையே வெற்றிகொள்ளக் கூடிய பராக்கிரமசாலியாக இருக்கிறார். இனி எனக்கு உங்கள் செல்வமோ, ராஜ்யமோ வேண்டாம். தாங்கள் விரும்பினால் என் ராஜ்யத்தையும் சந்தோஷமாகத் தங்களுக்குத் தந்துவிடுகிறேன். நீங்கள் மட்டும் உங்களுடைய நண்பனான அந்த நீலநிறப் படைவீரனைப் பற்றி எனக்குச் சொன்னால் போதும். என் கண்கள் அந்த வீரரின் மீது பட்டதுதான் தாமதம், அவர் என் உள்ளத்தையும் உயிரையும் ஒரேயடியாகக் கவர்ந்துவிட்டார்' என்று கூறினான். அந்த மன்னன் அவ்விதம் தெரிவித்தபோது சியாமளசுந்தரர்தாம் போர்க்களம் சென்றவர் என்பதை ஜயமல் ஒரு நொடியில் புரிந்துகொண்டான். படையெடுத்து வந்த மன்னனுக்கும் அந்த உண்மை விளங்கி விட்டது. அவன் ஜயமல் மன்னனை மரியாதையுடன் வணங்கி எழுந்தான். ஜயமல்லின் மூலமாகக் கிருஷ்ணரின் அருளுக்கு அந்த மன்னன் பாத்திரமானான்.

ம— கதையைப் படித்து முடித்ததும் குருதேவர் அவருடன் பேசத்துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இதையெல்லாம் நீ நம்புகிறாயா? கிருஷ்ணரே குதிரைமீது சென்று ஜயமல்லின் பகைவர்களைக் கொன்றார் என்பதை நீ நம்புகிறாயா?"

ம: "ஜயமல் சிறந்த கிருஷ்ண பக்தன். அவன் மனப்பூர்வமாகக் கிருஷ்ணரை வழிபட்டான் என்பதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆனால், கிருஷ்ணர் குதிரை மீதேறிப் போர்க்களத்திற்கு வந்ததைப் பகைவர்கள் அனைவரும் பிரத்தியட்சமாகப் பார்த்தார்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள

முடியவில்லை. கிருஷ்ணர் குதிரை மீதேறி அங்கு வந்திருக்கலாம், ஆனால் அங்கிருந்தவர் எல்லாரும் உண்மையாகவே அவரைப் பார்த்தார்களா என்பதுதான் புரியவில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்): "இந்தப் புத்தகத்தில் பக்தர்களைப் பற்றிய பல அழகிய கதைகள் இருக்கின்றன. ஆனால், இவையெல்லாம் ஒருதலைப்பட்சமாகவே இருக்கின்றன. இந்த நூல், தனது கருத்துக்களிலிருந்து வேறுபடுபவர்களை யெல்லாம் தூற்றுகிறது."

மறுநாள் காலை நேரம். தோட்டத்தில் நின்றுகொண்டு குருதேவரும், ம-வும் பேசிக்கொண்டிருந்தனர்.

ம: "நான் இங்கே வந்து தங்கலாமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "தங்கலாம். அது சரி. நீங்களெல் லோரும் இப்படி அடிக்கடி இங்கு வருகிறீர்களே? இது எதைக் குறிக்கிறது?

"பொதுவாக ஒரு சாதுவைப் பார்ப்பதற்கு மக்கள் எப்போதாவது ஒரு தடவை வந்துவிட்டுப் போவார்கள். ஆனால், நீங்கள் எல்லோரும் இப்படி அடிக்கடி வருகிறீர்களே! இதன் உட்கருத்து என்ன?"

ம- பதில் சொல்லாமல் மௌனமாக இருந்தார். குருதேவரே தமது கேள்விக்கும் பதில் அளித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "எனக்கு மிகவும் அந்தரங்க மானவர்களில் ஒருவனாக நீ இல்லாமற்போனால் இப்படி அடிக்கடி வருவாயா என்ன? அந்தரங்கமானவன் என்பதற்கு என்ன அர்த்தம் என்றால் என் சொந்த உறவினன், எனக்குச் சொந்தமானவன், எனக்கு உரியவன், தந்தையும் மகனும் போல, சகோதரனும் சகோதரியும் போல என்று அர்த்தம். நான் உங்களுக்கு எல்லா விஷயங்களையும் சொல்லுவதில்லை. அப்படி எல்லாவற்றையும் சொல்லிவிட்டேனானால், மீண்டும் நீ இங்கு வருவாயா என்ன?

"ஒரு சமயம் சுகதேவர் பிரம்மஞானம் பெறும் பொருட்டு ஜனகரிடம் சென்றார். ஜனகர், 'முதலில் தட்சிணையை எனக்குத் தந்துவிடு' என்று சுகதேவரிடம் கூறினர். அதற்குச் சுகதேவர், 'உபதேசம் பெறுவதற்கு முன்னால் நான் ஏன் உங்களுக்குத் தட்சிணை தரவேண்டும்?' என்று வினவினார்.

ஜனகர் சிரித்துக்கொண்டே, 'உனக்குப் பிரம்மஞானம் ஏற்பட்ட பிறகு குரு சிஷ்ய உணர்வு உன்னிடம் நிலைத் திருக்குமா என்ன? ஆகவே தான் நீ முதலில் தட்சிணையைத் தரவேண்டும் என்று கூறினேன்!' என்று விளக்கினார்.

சுக்லபட்சத்தின் இரவு நேரம். சந்திரன் தனது குளிர்ந்த ஒளிக்கிரணங்களை எங்கும் பரப்பிக்கொண்டிருந்தான். ம-, காளிகோவிலைச் சேர்ந்த தோட்டத்தில் தனிமையில் உலவிக் கொண்டிருந்தார். தோட்டத்தின் ஒரு பக்கத்தில், குருதேவரின் அறை, நஹபத், மகிழமரங்கள் அடர்ந்திருந்த குளம், பஞ்சவடி ஆகியவை இருந்தன. மறுபக்கத்தில் நிலவொளியினால் பிரகாசித்தபடி புனித கங்கை பிரவாகமாகச் சென்றுகொண்டி ருந்தது.

ம- தமக்குத் தாமே சிந்தித்துக் கொண்டிருந்தார். 'உண்மையாகவே ஒருவன் இறைவனைத் தரிசிக்க முடியுமா? ஸ்ரீராமகிருஷ்ணர், கண்டிப்பாக முடியும் என்று சொல்லுகிறார். நீ சிறிதளவு முயற்சி செய்து ஆத்மசானம் பழகினால் போதும். உடனே யாரோ ஒருவர் முன் வந்து 'இப்படி இப்படிச் செய்' என்று ஆன்மிக முன்னேற்றத்திற்கு வேண்டிய உதவிகளைச் செய்து தருவார் என்று கூறுகிறார். நானோ திருமணமானவன், குழந்தைகள் வேறு இருக்கின்றன. இப்படியெல்லாம் இருந்தும் என்றால் பகவானை அடைய முடியுமா?......' தடைப்பட்ட அவரது சிந்தனை மீண்டும் தொடர்ந்தது. 'நிச்சயம் என்றால் பகவானை அடைய முடியும். அப்படி இல்லாவிட்டால் குருதேவர் அவ்வளவு உறுதியாக எப்படிச் சொல்லியிருக்க முடியும்? கடவுளின் அருள் மட்டும் இருக்குமானால் ஏன் அவரைத் தரிசிக்க முடியாது?

'இதோ என் முன்னால் இந்த உலகம் இருக்கிறது. சூரியன், சந்திரன், நட்சத்திரம், உயிர்கள், இருபத்து நான்கு தத்துவங்கள் இவையெல்லாம் எப்படி உண்டாயின? இவற்றைப் படைத்தது யார்? நான் யார்? எனக்கும் அந்த சிருஷ்டிகர்த்தாவுக்கும் உள்ள தொடர்பு என்ன? இதை யெல்லாம் அனுபூதியில் அறிந்து கொள்ளாவிட்டால் மனிதப் பிறவி வீணேயாகும்.

'ஸ்ரீராமகிருஷ்ணர் மனிதருள் சிறந்தவர் என்பது நிச்சயம். இப்படிப்பட்ட ஒரு மகாபுருஷரை என் வாழ்க்கையில் இதற்கு முன் பார்த்ததில்லை. இவர் நிச்சயமாகப் பகவானைத் தரிசித் திருக்கிறார். அப்படி இல்லாவிட்டால் 'அம்மா! அம்மா!'

என்று அந்த அளவுக்கு நெருக்கமாக ஆண்டவனை அழைத்து அவருடன் இரவும் பகலும் எப்படிப் பேசமுடியும்? ஆண்டவன் மீது இவருக்கு இந்த அளவிற்கு ஆழ்ந்த பக்தி எப்படி ஏற்பட்டிருக்க முடியும்? வெளியுலகத்தையே மறந்துவிடும் அளவிற்கு ஆண்டவன்மீது பிரேம பக்தி கொண்டிருக்கிறார். சமாதியில் லயிக்கிறார். அசைவற்ற ஜடம் போன்று இருக்கிறார். சில சமயங்களில் பிரேமையால் விளைந்த பரவசம் காரணமாகச் சிரிக்கிறார், அழுகிறார், ஆனந்த நர்த்தனம்|புரிகிறார்,பாடுகிறார்...'

## வெள்ளிக்கிழமை, டிசம்பர் 14, 1883

அன்று பௌர்ணமி. காலை சுமார் ஒன்பது மணி இருக்கும். பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் தமது அறைக்கு அருகிலுள்ள தென்கிழக்குத் தாழ்வாரத்தில் நின்றுகொண்டிருந்தார். அருகில் ராம்லால் நின்றுகொண்டிருந்தார். குருதேவரது இருபக்கத்திலும் ராக்காலும், லாட்டுவும் நின்றுகொண்டிருந்தனர். அங்கு வந்த ம- ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரையில் வீழ்ந்து வணங்கினார்.

பரமஹம்சர் அவரிடம் அன்பு ததும்ப, "ஆகா, நீ வந்து விட்டாயா! மிகவும் நல்லது. இன்று ஒரு நன்னாள்" என்று இனிய குரலில் கூறினார்.

ம- ஸ்ரீராமகிருஷ்ணருடன் சில நாட்கள் தங்கியிருந்து ஆத்ம சாதனம் பழகவேண்டும் என்ற எண்ணத்துடன் வந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் ம-விடம், "இங்கே காளி கோவிலி லுள்ள விருந்தினர் விடுதியில் நீ தினமும் உணவு உட் கொள்வது சரியல்ல. இந்த அதிதிசாலை துறவிகளுக்கும் ஏழை எளியவர்கட்கும் இலவசமாக உணவு வழங்குவதற்கென்று ஏற்படுத்தப்பட்டுள்ளது. நீ இங்கே சில நாட்கள் தங்கியிருக்க விரும்பினால் வரும்போது உனக்குச் சமையல் செய்வதற்காகச் சமையற்காரன் ஒருவனையும் உன்னோடு அழைத்துவா" என்று கூறியிருந்தார். அவ்விதமே குருதேவரின் அறிவுரைக்கிணங்க ம- ஒரு சமையற்காரனைத் தம்முடன் அழைத்து வந்திருந்தார். ம- அழைத்து வந்திருந்த சமையற்காரனுக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் இந்த இடத்தில் சமைக்கலாம் என்று ஓர் இடத்தைச் சுட்டிக் காட்டினார். அதோடு ம- பால் அருந்துவார் என்பது தெரிந்து, குருதேவர் பால்காரனிடம் சொல்லிப் பாலுக்கு ஏற்பாடு செய்து தரும்படி ராம்லாலிடம் தெரிவித்தார்.

சிறிது நேரத்திற்குப்பிறகு ராம்லால் அத்யாத்ம ராமாயணத்திலிருந்து படிக்க ஆரம்பித்தார். அவர் படித்ததை குருதேவரும் ம-வும் ஊன்றிக் கேட்டுக்கொண்டிருந்தனர்.

> சிவதனுசை முறித்த பிறகு ஸ்ரீராமபிரான் சீதையைத் திருமணம் செய்துகொண்டார். சீதாபிராட்டியுடன் அவர் அயோத்திக்குச் சென்றுகொண்டிருந்தபோது வழியில் பரசுராமர் தசரதராமரை எதிர்த்தார். பரசுராமர் ஸ்ரீராமபிரானுக்குப் பெருந் தொந்தரவுகளை உண்டாக்கினர். பரசுராமர் ஒரு வில்லை ஸ்ரீராமபிரானிடம் கொடுத்து, அதில் நாணேற்றும்படிச் சவால் விடுத்தார். இதையெல்லாம் கண்டு தசரதர் பயத்தால் மிகவும் நடுநடுங்கினர். ஆனால் ஸ்ரீராமபிரானோ புன்முறுவலுடன் அந்த வில்லை தமது இடது கையால் எடுத்து மிகவும் சுலபமாக நாணேற்றினர். பிறகு அவர் அந்த வில்லில் அம்பைத் தொடுத்து நாணை இழுத்து, 'இப்போது இந்த அம்புக்கு இலக்கு எங்கே என்று சொல்லுங்கள்' என்று பரசுராமரை நோக்கி வினவினர். ஸ்ரீராமபிரான் தொடுத்த அம்பு பரசுராமரின் கர்வத்தை மாய்த்தது. அவர் ஸ்ரீராமபிரானை சாட்சாத் பரப்பிரம்மம் என்று அறிந்து துதி செய்தார்.

பரசுராமர் செய்த துதியைக் கேட்டுக்கொண்டிருந்த போதே ஸ்ரீராமகிருஷ்ணர் தெய்விகப் பரவசத்தில் லயித்து விட்டார். அந்த நிலையில் இருந்தபடியே அவர் இடையிடையே 'ராம், ராம்' என்று ராம நாமத்தை மெல்லிய குரலில் இனிமையாக ஓதினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராம்லாலிடம்) : "இப்போது குகனைப் பற்றிக் கொஞ்சம் படி, கேட்கலாம்."

ராம்லால் குகனின் வரலாற்றை **பக்தமாலா** என்ற நூலிலிருந்து படிக்க ஆரம்பித்தார்.

> தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த குகன் ஸ்ரீராமபிரானின் நெருங்கிய நண்பனாக விளங்கினன். தசரத மன்னனின் வாக்கினைக் காப்பாற்ற வேண்டி ஸ்ரீராமசந்திரமூர்த்தி சீதையோடும் லட்சுமணனோடும் வனவாசத்தை மேற்கொண்டபோது வழியில் குகனைச் சந்தித்தார். அவர்கள் கங்கையைக் கடப்பதற்கு குகன் படகைச் செலுத்தி உதவி செய்தான். குகனின் உண்மையான அன்பைக் கண்டு உள்ளம் நெகிழ்ந்த ஸ்ரீராமபிரான் குகனை மார்போடு சேர்த்து அணைத்துக் கொண்டார். குகன் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியிடம் முழு அளவில் தன்னை ஆத்ம சமர்ப்பணம் செய்துகொண்டுவிட்டான். குகனிடம், மரவுரி தரித்தும், கனி, கிழங்கு, மூலிகை வகைகளை உணவாகக் கொண்டும் பதினான்கு வருஷ காலம் தாம்

வனவாசம் செய்யப்போவதாக ஸ்ரீராமபிரான் தெரிவித்தார். ஆரண்யவாச காலம் முடிந்த பின்பு அயோத்திக்குத் திரும்பும் வழியில் குகனைத் தாம் மீண்டும் சந்திப்பதாக அவர் வாக்குக் கொடுத்தார்.

ஸ்ரீராம்பிரான் பதினான்கு வருஷ காலம் வனவாசம் செய்வார் என்றும், சடைமுடி தரித்து வாழ்வார் என்றும் சொல்லக்கேட்டு, குகன் தானும் சடைமுடிதரித்தும், கனி கிழங்குகளை உணவாக உண்டும் ஸ்ரீராமபிரானின் சந்திப்பை எதிர்நோக்கி இருந்தார். பதினான்கு ஆண்டுகள் முடிந்தபின்னர் ஸ்ரீராமன் திரும்பிவராததைக் கண்ட குகன் அக்கினிப்பிரவேசம் செய்யத் தீ மூட்டினான். அந்தத் தீயில் குகன் குதிக்க இருந்த சமயத்தில் ஸ்ரீராமதூதராக ஆஞ்சநேயர் வாயுவேகத்தில் விரைவாக அங்கு வந்து சேர்ந்தார்.

அவர் ஸ்ரீராமபிரான் வந்துகொண்டிருக்கும் செய்தியைக் குகனுக்குத் தெரிவித்து அவன் ஆறுதல் பெறுமாறு செய்தார். சிறிது நேரத்திற்குள்ளாகவே ஸ்ரீராமபிரானும் சீதாபிராட்டியும் வீற்றிருந்த புஷ்பகவிமானம் ஆகாயமார்க்கமாக அங்குவந்து சேர்ந்தது. அவர்களைக் கண்டதும் குகன் எல்லையற்ற பேரானந்தத்தில் திளைத்தான்.

நண்பகல் உணவிற்குப் பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிது ஓய்வு கொள்ளத் தமது படுக்கையில் படுத்தார். ம—, ஸ்ரீராமகிருஷ்ணரின் அருகில் தரையில் அமர்ந்து கொண்டார். சிறிது நேரத்திற்குள் டாக்டர் சியாமாவும் மற்றும் சில பக்தர்களும் அங்கு வந்தனர். படுத்திருந்த குருதேவர் எழுந்து உட்கார்ந்துகொண்டு, வந்தவர்களுடன் உரையாட ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "எப்போதுமே ஒருவன் செயலில் ஈடுபட்டிருக்கவேண்டும் என்பதில்லை. பிஞ்சு தோன்றியவுடன் பூ தானாகவே உதிர்ந்துவிடுவது போல, ஈசுவர அனுபூதியைப் பெற்றபின்பு செயல்கள் தாமாகவே ஒருவனை விட்டு விலகி விடுகின்றன.

"ஈசுவரனை அனுபூதியில் அறிந்து கொண்டவன் அதற்குப் பிறகு சந்தியாவந்தனம் முதலான நித்திய கர்மங்களை அனுஷ்டிப்பதில்லை. கிரியைகள் அவனிடம் தங்காது. அவன் விஷயத்தில் சந்தியாவந்தனம் காயத்ரி மந்திரத்தில் ஒடுங்கி விடுகிறது. அப்போது காயத்ரி மந்திரத்தை மட்டும் ஜபம் செய்தாலேபோதும். காயத்ரி மந்திரமோ ஓங்காரத்தில்

லயமாகிறது. அந்த நிலையில் காயத்ரி மந்திரத்தைக் கூட ஜபிக்க வேண்டிய தேவையில்லை. வெறுமனே 'ஓம், ஓம்' என்று பிரணவத்தை ஜபம் செய்து வந்தாலே போதுமானது.

"சந்தியாவந்தனம் முதலான கிரியைகளை எவ்வளவு காலத்திற்கு ஒருவன் கடைப்பிடிக்க வேண்டும் என்றால் ஹரி நாமத்தையோ, ராமநாமத்தையோ உச்சரிக்கும்போது உடலில் மயிர்க்கூச் செறிதல், கண்களில் ஆனந்தக் கண்ணீர் மல்குதல் முதலிய தெய்விக உணர்ச்சிகள் வரும்வரையிலும் நித்திய கர்மங்களைச் செய்துவரவேண்டும். பணம் வேண்டியோ, நீதி மன்றத்தில் வழக்குவெற்றி பெறுவதற்காகவோ சிலர் கடவுளை வணங்குகிறார்கள்; பூஜை முதலியன செய்கிறார்கள். அது சரியல்ல."

ஒரு பக்தர் : "பணத்திற்காக எல்லோருமே முயற்சி செய்வதை நாம் பார்க்கிறோம். கேசவசந்திர சேனர் கூடத் தமது மகளை ஓர் இளவரசனுக்குத் திருமணம் செய்து கொடுத்தார்."

ஸ்ரீராமகிருஷ்ணர் : "கேசவரின் விஷயம் முற்றிலும் வேறானது. ஓர் உண்மையான பக்தன் தானாக எவ்வித முயற்சியும் செய்யாமற் போனாலும் பகவானே அவனுக்குத் தேவையான எல்லாவசதிகளையும் செய்துவைக்கிறார். ஓர் இளவரசனின் செலவுக்குத் தேவையான பணம் அவன் கேட்காவிட்டாலும் எப்படியும் தானாகத் தரப்படுவதைப் போன்று அந்தப் பக்தனின் நிலை இருக்கிறது.

"பணம் சேர்ப்பதற்காகவே ஓயாமல் பாடுபட்டுக் கொண்டிருக்கும் வக்கீல் போன்றவர்களைப்பற்றி நான் இங்கே பேசவில்லை. அவர்கள் பணம் சம்பாதிப்பதற்காக மற்றவர்களைத் திருப்திப்படுத்த வேலை செய்து வேலை செய்து, நாளடைவில் மற்றவர்களுக்கு அடிமைகளாகவும் ஆகிவிடுகிறார்கள். உண்மையான இளவரசனைப்போல இருக்கும் உத்தம பக்தனைப் பற்றித்தான் நான் இப்போது பேசுகிறேன். உண்மையான பக்தனுக்கு எந்தவித ஆசையும் இல்லை. அவன் பணத்தைப் பொருட்படுத்துவதும் இல்லை; சேர்க்க விரும்புவதுமில்லை. பணம் தானாக அவனுக்கு வந்து சேருகிறது. பகவத் கீதையில் அத்தகைய பக்தனைப் பற்றி 'யத்ருச்சாலாப சந்துஷ்ட:' — தானாகக் கிடைப்பதைக் கொண்டு திருப்தியடைபவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

"சுயநல ஆசைகளிலிருந்து விடுபட்டிருக்கும் ஓர் உத்தம பிராமணன் எந்த வீட்டிலிருந்து வேண்டுமானாலும் உணவுப் பொருட்களை ஏற்றுக் கொள்வான். கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைவான். எனவே அவன் எதையும் விரும்புவதில்லை. ஆனால் அவனுக்குத் தேவையானது தானாகவே வந்தடைகிறது."

ஒரு பக்தர் : "சுவாமி, உலகில் மனிதன் எப்படி வாழ வேண்டும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "சேற்றில் வாழ்கிற சேற்றுமீன் போல நீ இந்த உலகில் வாழ்ந்து வர வேண்டும். சாதகன் ஒருவன் அடிக்கடி உலக வாழ்க்கையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு ஏகாந்தமான இடத்திற்குச் சென்று பகவானைக் குறித்துத் திரும்பத் திரும்ப தியானத்தில் ஈடுபட வேண்டும். அவ்விதம் செய்வானானால், அவனுக்குக் கடவுளிடம் பக்தி தானாகவே உண்டாகும். அதற்குப் பிறகு அவன் உலகில் வாழ்ந்தாலும் பற்றின்றி இருக்கலாம். சேற்றில்தான் சேற்றுமீன் வாழ்கிறது. ஆனால், அந்த மீனின் உடலில் சிறிதேனும் சேறு படிவதில்லை. அது போலவே குடும்ப வாழ்க்கையில் இருப்பினும் பற்றற்றவனாக வாழ்ந்து வர வேண்டும்."

இவ்விதம் தாம் பேசியவைகளையெல்லாம் ம- கூர்ந்து கேட்டுக் கொண்டிருப்பதை, குருதேவர் கவனித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து) : "உலகப் பொருள்களிடம் ஒருவனுக்குத் தீவிரமான வைராக்கியம் ஏற்படுமானால் அத்தகையவன் ஈசுவர சாட்சாத்காரத்தைப் பெறுகிறான். தீவிர வைராக்கியம் படைத்தவனுக்கு உலக வாழ்க்கை ஒரு காட்டுத் தீ போன்று தென்படுகிறது. அத்தகையவனுக்குத் தன் மனைவியும் மக்களும் உறவினர்களும் ஓர் ஆழமான பாழுங் கிணறு போன்று தென்படுகிறார்கள். அப்படிப்பட்ட தீவிர வைராக்கியம் ஒருவனுக்கு ஏற்படும் போது அவன் வீட்டையும் குடும்பத்தையும் துறந்து சென்று விடுகிறான். பற்றற்ற மனப் பான்மையுடன் குடும்ப வாழ்க்கையில் இருப்பது என்பதெல்லாம் அவனுக்குப் போதாது; அவன் விஷயத்தில் அது பொருந்தவும் பொருந்தாது.

"காமினி காஞ்சனமே மாயையாகும். மாயை எத்தகையது என்பதை நீ புரிந்து கொண்டால் அது வெட்கப்பட்டு உன்னிடமிருந்து ஓடோடி விடும். ஒருவன் புலித்தோலைப் போர்த்துக் கொண்டு மற்றொருவனைப் பயமுறுத்துவதற்கு

வந்தான். ஆனால் பயமுறுத்தப் பெற்றவனோ, 'டேய்! நீ யார் என்று எனக்குத் தெரியும். நீ நம்முடைய ஹரிதானே?' என்று புலிவேஷக்காரனிடம் கேட்டதும் புலிவேஷம் போட்டிருந்தவன் புன் சிரிப்புச் சிரித்துக் கொண்டே வேறு ஒருவனைப் பயமுறுத்துவதற்குச் சென்றான்.

''பெண்கள் அனைவரும் ஜகன்மாதாவான அம்பிகையின் வடிவமாவர். அந்த ஆதிபராசக்தியே பெண்களாக விளங்கிக்கொண்டிருக்கிறாள்; பெண்வடிவம் தாங்கியிருக்கிறாள். இராமாயணத்தில் நாரதமகரிஷியும் மற்றவர்களும் ஸ்ரீராமனைப் பார்த்துப் பின்வருமாறு போற்றித் துதித்ததாகச் சொல்லப் பட்டிருக்கிறது—'ஓ ராமா! உலகிலுள்ள ஆண்கள் எல்லாம் நீ, பெண்கள் எல்லாம் சீதை. நீ இந்திரன், சீதா இந்திராணி. நீ சிவபெருமான், சீதா பிராட்டி பார்வதி தேவி. நீ ஆண், சீதை பெண். இதற்கு மேலும் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது. எங்கெல்லாம் ஆண் தத்துவம் உள்ளதோ அங்கெல்லாம் நீ விளங்குகிறாய். எங்கெல்லாம் பெண் தத்துவம் உள்ளதோ அங்கெல்லாம் சீதை விளங்குகிறாள்.

(பக்தர்களிடம்) ''விரும்பிய மாத்திரத்திலேயே ஒருவன் எல்லாவற்றையும் துறந்துவிட முடியாது. முன்வினைப்பயன், பிறவிவாசனை போன்றவையும் இருக்கின்றன. ஒரு சமயம் யோகி ஒருவர், 'நீ என்னுடன் கானகத்தில் வந்து பகவானைத் தியானிப்பதில் ஈடுபடுவாயாக' என்று ஓர் அரசனிடம் கூறினார். அதற்கு அந்த அரசன், 'தங்கள் ஆணையை என்னால் சரிவர நிறைவேற்ற முடியாது. உங்களோடு என்னால் சேர்ந்து வாழ முடியும். ஆனால் போகத்தில் எனக்கு இன்னும் ஆசை இருக்கிறது. நான் இந்தக் காட்டில் வாழ ஆரம்பித்தால் இந்த இடத்திலும் ஒரு ராஜ்யத்தை ஏற்படுத்தி விடுவேன். என்னிடம் இன்னும் பந்தபாசங்களும் ஆசைகளும் இருக்கின்றன' என்று பதில் கூறினான்.

''நட்வர்பாஞ்சா, சிறிய பையனாக இருந்தபோது இங்குள்ள தோட்டத்தில் தன் பசுக்களை மேய்த்து வந்தான். ஆனால் அவனிடம் பல ஆசைகள் இருந்தன. ஆதலால் அவன் விளக்கெண்ணெக் கிடங்கு ஆரம்பித்தான். இப்போது அந்த வியாபாரத்தின் மூலம் நிறையப் பணமும் சேர்த்து விட்டான். ஆலம்பஜாரில் அவனுடைய எண்ணெய் வியாபாரம் இப்போது மிக மிக நன்றாக நடந்து வருகிறது.

"சக்தியை உபாசிக்கும் ஒரு சம்பிரதாயத்தில் பெண்களுக்கிடையிலிருந்து ஆத்மசாதனை செய்யும் வழக்கம் இருக்கிறது. கர்த்தாபஜா என்ற சம்பிராயத்தைச் சேர்ந்த பெண்கள் இருந்த இடத்திற்கு என்னை ஒரு சமயம் சில பக்தர்கள் அழைத்துச் சென்றார்கள். அங்கிருந்த எல்லாப் பெண்களும் என்னைச் சூழ்ந்து உட்கார்ந்து கொண்டனர். நான் அவர்களை, 'அம்மா, அம்மா!' என்று அழைத்தேன். நான் அவ்விதம் அழைத்ததும் அவர்கள் தங்களுக்குள் குசுகுசுவென்று ரகசியமாகப் பேசிக்கொண்டனர். 'இவர் இன்னும் ஒரு பிரவர்த்தகராகத்தான் (ஆரம்பநிலையிலுள்ள ஒரு சாதகராகத்தான்) இருக்கிறார் போலிருக்கிறது. ஆதலால்தான் எது சரியான வழி என்று இவர் இன்னும் தெரிந்துகொள்ளவில்லை' என்று அந்த மாதர்கள் ஒருவருக்கு ஒருவர் பேசிக்கொண்டார்கள். அவர்கள் கருத்துப்படி பழுக்காத நிலையில் இருப்பவன் பிரவர்த்தகன். அடுத்து சாதகன். அடுத்து சித்தர் சித்தன்.

"அங்கே குழுமியிருந்த பெண்களில் ஒருத்தி வைஷ்ணவ சரணரின் அருகில் சென்று அமர்ந்தாள். பிறகு அதைப் பற்றி வைஷ்ணவ சரணரிடம் வினவியபோது அவர், 'இந்த மாது தன்னை ஒரு சிறுமி என்று கருதி வருகிறாள்' என்று பதில் சொன்னார்.

"பெண்களை மனைவியாகக் கருதுபவன் ஆன்மிக வாழ்க்கையிலிருந்து வழுவி விரைவில் வீழ்ச்சியடைகிறான். ஆனால் மாது ஒருத்தியைத் தாய் என்று கருதுவது தூய்மையான மனநிலையாகும்."

காசாரிபாடா என்ற இடத்திலிருந்து வந்திருந்த பக்தர்கள் பரமஹம்சரிடம் விடைபெற்றுச் செல்ல எழுந்தனர். 'நாங்கள் போய் வருகிறோம். காளிதேவியையும் மற்றும் இங்குள்ள தெய்வங்களையும் தரிசித்துவிட்டுச் செல்கிறோம்' என்று அவர்கள் பரமஹம்சரிடம் சொல்லி விடைபெற்றுச் சென்றனர்.

காளி கோவிலைச் சேர்ந்த பஞ்சவடியிலும் மற்றும் சில இடங்களிலும் ம- தனிமையில் உலவிக்கொண்டிருந்தார். முன்பு ஒரு முறை குருதேவர், 'சிறிது சாதனை செய்தாலே இறைவனைத் தரிசிக்க முடியும்' என்று கூறியிருந்தார். அதைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறாரா? அல்லது தீவிர வைராக்கியம் பற்றியும் மாயை எத்தகையது என்பது பற்றியும் அறிந்துகொண்டால் அது தானாகவே உன்னிடமிருந்து விலகி

ஓடிவிடும் என்று குருதேவர் கூறிய எண்ணங்களில் மூழ்கியிருக்கிறாரா?

பிற்பகல் சுமார் மூன்றரை மணி இருக்கும். ம- குருதேவரின் அறைக்கு மீண்டும் வந்தார். ப்ரெளட்டன் பள்ளியிலிருந்து சில மாணவர்களை அழைத்துக்கொண்டு ஒரு ஆசிரியர் குருதேவரைத் தரிசிக்க வந்தார். அவர்களுடன் குருதேவர் பேசிக்கொண்டிருந்தார். இடையிடையே அந்த ஆசிரியர் மாணவர்களிடம் சில கேள்விகளைக் கேட்டார். உருவ வழிபாட்டைக் குறித்து அவர்கள் உரையாடிக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அந்த ஆசிரியரிடம்): "சிலையை வழிபடுவதில் என்ன தவறு இருக்கிறது? எங்கே அஸ்தி, பாதி, ப்ரியம்[1] இருக்கிறதோ அங்கே பிரம்மத்தின் சாந்நித்யம் இருக்கிறது என்று வேதாந்தம் கூறுகிறது. ஆகவே பிரம்மத்தைத் தவிர வேறு ஒன்றும் இல்லை.

"சிறு பொம்மைகளை வைத்துக்கொண்டு சிறுமியர் எவ்வளவு காலம் விளையாடுகிறார்கள்? தங்களுக்குத் திருமணமாகாதவரைதானே? அவர்கள் திருமணம் செய்துகொண்டு தங்கள் கணவன்மாருடன் வாழ ஆரம்பிக்கும்போது அந்த விளையாட்டுகளெல்லாம் நின்றுவிடுகின்றன. திருமணத்திற்குப் பிறகு தங்கள் பொம்மைகளையெல்லாம் பெட்டியில் போட்டு மூடிவைத்துவிடுகிறார்கள். அதுபோலவே ஈசுவரானுபூதி அடையப்பெற்ற பிறகு மேலும் விக்கிரக வழிபாட்டில் தொடர்ந்து ஈடுபட வேண்டும் என்ற அவசியம் இல்லை.

(ம-வை நோக்கித் தமது பார்வையைச் செலுத்தியபடி) "ஒருவன் கடவுளுக்காக ஏங்கும்போது அவனை அடைகிறான். இன்னும் பகவானை அடையாமல் இருக்கிறோமே என்ற துடிப்பு சாதகன் ஒருவனுக்குத் தீவிரமாக உண்டாக வேண்டும். அத்தகைய துடிதுடிப்பு ஒரு சாதகனிடம் அளவுகடந்து தோன்றும்போது அவன் மனம் முழுவதும் கடவுளிடம் சென்று தங்கிவிடுகிறது.

"ஒருவனுக்கு ஒரு மகள் இருந்தாள். மிகச் சிறுவயதிலேயே அவள் விதவையாகிவிட்டாள். அவள் தன் கணவனின் முகத்தைக் கூடப் பார்த்ததில்லை. சிறுமியான அவள் மற்றப்

1. அஸ்தி—இருப்பது, பாதி—பிரகாசிப்பது, ப்ரியம் – ஆனந்தமளிப்பது.

பெண்கள் தங்கள் கணவன்மாருடன் வாழ்ந்து வருவதைப் பார்த்தாள். அவள் ஒருநாள் தன் தந்தையிடம், 'அப்பா, என்னுடைய கணவர் எங்கே?' என்று கேட்டாள். அதற்கு அவளது தந்தை, 'அம்மா, கோவிந்தன்தான் உன் கணவன். நீ அவனைக் கூவியழைத்தால் அவன் உன்னிடம் வருவான்' என்று பதிலளித்தார். இதைக் கேட்டதும் அந்தச் சிறுமி ஓர் அறைக்குள் சென்று கதவை மூடித் தாழிட்டுக் கொண்டு கோவிந்தனை நினைத்துக் கதறிக் கதறி அழத் தொடங்கினாள். 'ஏ கோவிந்தா! என்னிடம் வா. உன்னை எனக்குக் காட்டு. நீ ஏன் வராமல் இருக்கிறாய்?' என்று சொல்லிக்கொண்டே அவள் பரிதாபமாக அழுது புலம்பினாள். அந்தச் சிறுமியின் ஏக்கத்திற்குப் பகவானால் செவிசாய்க்காமல் இருக்க முடியவில்லை. அந்தச் சிறுமிக்குக் காட்சி தந்து அருள்புரிந்தார்.

"குழந்தைக்கு இருப்பதைப் போன்ற நம்பிக்கை ஒரு சாதகனிடம் இருக்கவேண்டும். தாயைப் பார்க்கவேண்டும் என்ற ஏக்கத்தோடு குழந்தை கதறிக் கதறி அழுகிறது. அது போன்ற ஏக்கத்துடன் சாதகன் இறைவனைக் குறித்து அழ வேண்டும். அத்தகைய ஏக்கம் அருணோதயம் போன்றது. அது ஆன்மிக வாழ்க்கையில் மிகவும் நல்லதோர் அறிகுறியாகும். இந்த ஏக்கத்தைத் தொடர்ந்து இறைவனுடைய காட்சி கிடைக்கிறது.

"ஜடிலன் என்ற ஒரு பையனின் கதையை உங்களுக்குச் சொல்லுகிறேன். அவன் ஓர் அடர்ந்த காட்டின் வழியாகப் பள்ளிக்கூடத்திற்குப் போவது வழக்கம். அவ்விதம் காட்டு வழியாகச் செல்வது அவனுக்குப் பயமாக இருந்தது. ஒரு நாள் அவன் தன் பயத்தைப் பற்றித் தாயிடம் கூறினான். அதற்கு அவள், 'நீ ஏன் பயப்படவேண்டும்? மதுசூதனனை உனக்குத் துணையாகக் கூவி அழைத்துக்கொள்' என்று பதில் கூறினாள். அதற்கு அந்தச் சிறுவன், 'அம்மா, அந்த மதுசூதனன் யார்?' என்று கேட்க 'மதுசூதனன் உன் அண்ணன்' என்று தாய் பதில் சொன்னாள்.

"இதற்குப்பின்பு ஒருநாள் ஜடிலன் காட்டுவழியாகப் போனபோது அவனுக்குப் பயம் தோன்றியது. அந்தப் பயத்தில், 'ஓ அண்ணா மதுசூதனா!' என்று கூப்பிட்டான். ஆனால் அவனது குரலைக் கேட்டு யாரும் வரவுமில்லை; பதிலுக்குக் குரல் கொடுக்கவுமில்லை. ஜடிலன் உரத்த குரலில் கதறியழுது கொண்டே, 'அண்ணா மதுசூதனா! நீ எங்கே இருக்கிறாய்?

என்னிடம் வா. எனக்கு மிகவும் பயமாக இருக்கிறது' என்று அழைத்தான். அதற்குப் பிறகும் மதுசூதனனுகிய கண்ணனுல் வராமல் இருக்க முடியவில்லை. கண்ணன், ஜடிலன் முன்னிலையில் வந்து 'இதோ நான் இங்கேதான் இருக்கிறேன், நீ ஏன் பயப்படுகிருய்?' என்று சொல்லித் தைரியமூட்டினுன். அவ்விதம் பேசிக்கொண்டே கண்ணன் அந்தப்பையனுடன் காட்டின் வழியாக நீண்டதூரம் துணையாகச் சென்ருன். பிறகு ஜடிலனைக் காட்டுக்கு வெளியே கொண்டுபோய் விட்டு விட்டு பள்ளிக்குச் செல்லும் வழியையும் காட்டினுன். 'நீ கூப்பிடும் போதெல்லாம் நான் உடனே வருவேன். நீ பயப்பட வேண்டாம்.' என்று சிறுவனிடம் சொல்லி விடைபெற்றுக் கொண்டு கண்ணன் காட்டுக்குள் சென்று விட்டான். இது தான் குழந்தையின் நம்பிக்கை! இதுதான் ஏக்கம்!

"ஓர் அந்தணன் தனது குல தெய்வத்தை அன்ன நைவேத்யத்துடன் நித்திய பூஜை செய்து வழிபட்டுவந்தான். ஒரு நாள் அவன் ஏதோ காரியமாக வெளியூருக்குச் செல்ல வேண்டியிருந்தது. அவன் வீட்டை விட்டுப் புறப்படும்போது தன் சிறிய பையனிடம் 'இன்றையதினம் நீ நமது குல தெய்வத்திற்கு நைவேத்தியம் படை. பகவானுக்கு உண்ண உணவு அளிப்பாயாக' என்று சொல்லிவிட்டுச் சென்ருன்.

"பையன் தந்தை கூறியபடியே பூஜையறையில் சுவாமி விக்கிரகத்தின் முன்னுல் நைவேத்தியம் படைத்தான். ஆனுல் அந்தத் தெய்வமோ, இருந்த இடத்தைவிட்டு அசையவுமில்லை; வாய்திறந்து அவனேடு பேசவுமில்லை, படைக்கப்பட்ட உணவை உட்கொள்ளவுமில்லை. சிறுவன், 'சுவாமி தமது பீடத்திலிருந்து எழுந்துவந்து சாப்பிடுவார்' என்று நினைத்து அங்கேயே நீண்டநேரம் உட்கார்ந்து காத்துக் கொண்டிருந் தான். ஆனுல், நேரம்தான் ஆயிற்றேதவிர, சுவாமி என்னவோ தமது பீடத்திலிருந்து எழுந்திருக்கவே இல்லை. சிறுவனே தெய்வம் நிச்சயமாகப் பீடத்திலிருந்து கீழே இறங்கிவந்து ஆசனத்தில் அமர்ந்துகொண்டு அன்ன நைவேத்தியத்தை உட்கொள்ளும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையுடன் இருந்தான்.

"ஆகவே அவன் சுவாமி விக்கிரகத்தைப் பார்த்து, 'சுவாமி கீழே வந்து உட்கார்ந்து உணவைச் சாப்பிடுங்கள். ஏற்கனவே நேரம் அதிகமாகிவிட்டது. இனிமேலும் என்னுல் இங்கே காத்துக்கொண்டிருக்க முடியாது' என்று திரும்பத் திரும்ப முறையிட்டுப் பிரார்த்தித்தான்.

"ஆனால் சுவாமி விக்கிரகமோ பதில் பேசவில்லை. சிறுவன் அழ ஆரம்பித்து விட்டான். 'பகவானே, உனக்கு அமுது படைக்கும்படி என் தந்தை என்னிடம் சொல்லிப் போயிருக்கிறார். நீ ஏன் கீழே இறங்கிவந்து இன்னும் சாப்பிடாமல் இருக்கிறாய்?' என்று கண்ணீரும் கம்பலையுமாக, சுவாமி விக்கிரகத்தைப்பார்த்து மன ஏக்கத்துடன் புலம்பிக் கொண்டிருந்தான்.

"அச்சிறுவன் ஏங்கி ஏங்கிச் சிறிது நேரம் பிரார்த்தித்துப் புலம்பியதும், தெய்வம் புன்முறுவல் தவழப் பீடத்திலிருந்து இறங்கிவந்து அங்கு வைத்திருந்த அன்ன நிவேதனத்தின் முன் அமர்ந்து அதை உட்கொள்ள ஆரம்பித்தது.

"அவ்விதம், படைக்கப்பட்ட நிவேதனத்தைத் தெய்வம் உட்கொண்டபிறகு சிறுவன் பூஜையறையிலிருந்து வெளியே வந்தான். அப்போது அவனது வீட்டார், 'நைவேத்தியம் படைத்தாகிவிட்டதா? பிரசாதத்தை எடுத்துக் கொண்டுவா' என்று அவனிடம் கூறினர்.

"சிறுவனே, 'ஆமாம். உணவு படைப்பது முடிந்துவிட்டது. பகவான் நைவேத்தியமாகப் படைத்த எல்லாவற்றையும் சாப்பிட்டுவிட்டுப் போய்விட்டார்' என்று உறவினர்களிடம் தெரிவித்தான். 'அது எப்படியப்பா?' என்று உறவினர் அவனைக் கேட்டனர். சிறுவன் கள்ளங்கபடற்றவன். எனவே அவன், 'ஏன்? பகவான் படைத்த நைவேத்தியங்களைச் சாப்பிட்டார்' என்று சொன்னான். வீட்டார் அனைவரும் பூஜை அறைக்குள் சென்று பார்த்தபொழுது பெரிதும் வியப்பில் ஆழ்ந்தனர்!"

மாலைநேரம் ஆயிற்று. சூரியன் அஸ்தமித்துச் சந்திவேளை வருவதற்கு இன்னும் நேரம் இருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணரும், ம-வும் நஹபத்தின் தென்பக்கதில் நின்று பேசிக்கொண்டிருந்தனர். அவர்கள் இருந்த இடத்திற்கு எதிரில் புனிதகங்கை அமைதியுடன் ஓடிக்கொண்டிருந்தது. குளிர்காலமாதலால் குருதேவர் ஒரு கம்பளிச் சால்வையைப் போர்த்திக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "நீ எங்கே தூங்கப் போகிறாய்? பஞ்சவடியில் இருக்கும் குடிசையிலா?"

ம : "நஹபத்தின் மேல்மாடியில் இருக்கும் அறையை எனக்குத் தரமாட்டார்களா?"

கோவிலைச் சேர்ந்த நிர்வாக அதிகாரியிடம் ம-வைப் பற்றித் தெரிவித்து அவர் தங்குவதற்கு உரிய ஓர் இடத்தை ஏற்பாடு செய்து தரத் தீர்மானித்தார் குருதேவர்.

நஹபத்தின் மேல்மாடி ம-வுக்குப் பிடித்திருந்தது. அவர் கவிதையுள்ளம் படைத்தவர். கங்கையையும், சந்திரனையும் தோட்டத்து வண்ணப் பூக்களையும் பார்த்து ரசிக்க விரும்பினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஏன் கொடுக்க மாட்டார்கள்? நஹபத்தின் மேல் மாடி அறையை நிச்சயம் உனக்குத் தருவார்கள். ஆனால், பஞ்சவடியில் இருக்கும் குடிசையில் நீ தங்கியிருக்க வேண்டும் என்று நான் ஏன் உனக்கு யோசனை சொன்னேன் தெரியுமா? அங்கு எவ்வளவோ தியானமும். நாம ஜபமும் நடைபெற்றிருக்கின்றன என்பதற்காகத்தான் அந்த இடத்தை உனக்குக் கூறினேன்."

மாலை சூழ்ந்தது. குருதேவரின் அறையில் தூபம் போடப் பட்டு நறுமணப்புகை கமழ்ந்து கொண்டிருந்தது. அங்கே சிறிய கட்டிலின் மீது அமர்ந்து ஸ்ரீராமகிருஷ்ணர் தியானத்தில் ஈடுபட்டிருந்தார். ராக்கால், லாட்டு, ராம்லால் ஆகியோருடன் ம-வும் வந்து அந்த அறையில் தரையில் உட்கார்ந்தார்.

குருதேவர் ம-விடம் "சுருக்கமாகச் சொன்னால் விஷயம் இதுதான். மனிதன் தெய்வ பக்தியை வளர்த்துக் கொள்ள வேண்டும். ஆண்டவனிடம் அன்பு செலுத்த வேண்டும்" என்று கூறினார். பிறகு ராம்லாலைப் பக்திப் பாடல்கள் சிலவற்றைப் பாடும்படி பணித்தார். ராம்லால் இனிய குரலில் பாட குருதேவரே ஒவ்வொரு பாட்டுக்கும்முதல் அடியை எடுத்துக் கொடுத்தார்.

குருதேவரின் சொற்படி ராம்லால் முதலில் ஸ்ரீகௌராங்கரின் சந்நியாசம் பற்றிய பாடலைப் பாடினார்.

நள்ளிரவு நேரம். அப்போது நஹபத்தின் மேல் மாடி அறையில் ம- தனிமையில் அமர்ந்திருந்தார். அன்று பௌர்ணமியாதலால் ஆகாயம், கங்கை, காளி கோவில், ஆலய கோபுரம், தோட்டம், மரங்கள், பஞ்சவடி ஆகிய எல்லா இடங்களிலும் பால் சொரிந்தாற் போல நிலவொளி வெள்ளம் பரவிக் கிடந்தது. ஆழ்ந்த நிசப்தத்தில் உலகம் உறங்கிக் கொண்டிருந்தது. தனிமையின் ஆட்சி எல்லா இடங்களிலும் பரிபூரணமாக இருந்தது. இடையிடையே அன்னை கங்கையின் சலசலவென்ற முனகலொலி நிச்சப்தத்தைச் சற்றே கலைத் தாலும் ஆனந்தத்தை அதிகப்படுத்திற்று. அந்த அமைதியான

இனிய சூழ்நிலையில் ம- பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தியானித்துக் கொண்டிருந்தார்.

ம-வின் மனம் கற்பனையில் ஆழ்ந்தது. அவர் மனதில் பின் வரும் காட்சி தோன்றிற்று:

நான்கு புறமும் ஒரே அமைதி. இரவு பதினேரு மணிக்கு ம- பஞ்சவடியை நோக்கிச் சென்றூர். கங்கையில் கடல் ஏற்றம் தோன்றியிருந்தது. அடிக்கடி தண்ணீர் ஏறும் சப்தம் கேட்டது. அந்த அமைதியான சூழ்நிலையில் சோகமயமான ஒரு குரல் ம-வின் காதுகளில் வந்து விழுந்தது. பஞ்சவடி யிலுள்ள தோப்பிலிருந்து 'அண்ணு மதுசூதனு! நீ எங்கே இருக்கிருய்? என்று யாரோபுலம்பி அழும்குரல் கேட்டுத் திடுக்கிட்டார் ம-.

பௌர்ணமி இரவு ஆதலால் நான்கு புறமும் அடர்ந்திருந்த மரங்களின் ஊடே நிலவொளி பாய்ந்து பூமியில் திட்டு திட்டாகப் பதிந்திருந்தது.

ம- மேலும் சற்று தூரம் சென்றூர். ஒரு காட்சி அவருக்குத் தெரிந்தது. அங்கே பஞ்சவடியின் நடுவே குருதேவரின் பக்தர் ஒருவர் அமர்ந்திருந்தார். அந்த பக்தர் அமைதி நிலவிய அந்தப் பகுதியில் தன்னந்தனியாக இருந்து கொண்டு -'அண்ணு. மதுசூதனு! எங்கே இருக்கிருய்?' என்று இடையிடையே சோகக் குரலில் அழுது பிரார்த்தித்துக் கொண் டிருந்தார். ம- அந்தக் காட்சியை வியப்புடன் கூர்ந்து கவனித்தவாறு நின்றூர்.

விடியற்காலை சுமார் மூன்று மணி இருக்கும். ம- ஆசனத் திலிருந்து எழுந்தார். பஞ்சவடியை நோக்கிச் சென்றூர். குருதேவர் பஞ்சவடியைப் பற்றிக் கூறி இருந்தார். நஹபத்தின் மேல்மாடியறை அவ்வளவு சிறந்ததாக இப்போது ம-வுக்குத் தோன்றவில்லை. பஞ்சவடியிலிருந்த குடிசையிலேயே இனி தாம் தங்குவது என்று தீர்மானித்துக் கொண்டார்.

### சனிக்கிழமை, டிசம்பர் 15, 1883

காலை சுமார் எட்டு மணி. தட்சிணேசுவரக்கோயிலில் குருதேவரின் அறை. குருதேவர் தரையில் அமர்ந்திருந்தார். ராம்லால், பக்தமாலா என்ற புத்தகத்திலிருந்து பிரகலாத சரித்திரத்தைப் படித்துக் கொண்டிருந்தார். குருதேவர் கேட்ட வண்ணம் இருந்தார். தட்சிணேசுவரத்தில் குருதேவரின் திருவடித் தாமரையின் அருள் நிழலில் சில நாட்களாக வசித்து வரும் ம-வும் குருதேவரின் அருகில் அமர்ந்து

பிரகலாத சரித்திரத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார். அறையில் ராக்கால், லாட்டு, ஹரீஷ் முதலியோரும் இருந்தனர். வேறு சிலர் அங்கும் இங்குமாக நடந்து கொண்டிருந்தனர். ஹாஸ்ரா தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்தார். குருதேவர் பிரகலாதனுடைய கதையைக் கேட்டவாறு பரவச நிலையை அடைந்தார்.

"இரணியகசிபு மடிந்தபிறகு நரசிம்ம அவதாரத்தின் பயங்கரமான உருவத்தையும், அவருடைய சிங்க கர்ஜனையையும் கேட்டு பிரம்மா முதலான தேவர்கள் நடுங்கினர். உலகம் எல்லாம் பிரளயத்தில் மூழ்கிவிடப் போகிறதோ என்று பயந்து அவர்கள் குழந்தை பிரகலாதனை நரசிம்மத்தின் அருகில் அனுப்பினர்கள்.

"குழந்தை பிரகலாதன் இறைவனைப்புகழ்ந்து பாடலானர். குழந்தை உள்ளத்தின் அன்பு தோய்ந்த பாடலைக் கேட்டு பக்தவத்சலனான பகவான் பிரகலாதனை அன்புடன் தம் நாக்கால் நக்கினர். குருதேவர் இந்தப் பகுதியைக் கேட்டதும் பரவசநிலையில்! 'ஆ! ஆ! பக்தர்கள் மேல் என்ன அன்பு! என்னஅன்பு' என்று கூறிக்கொண்டே பாவ சமாதியில் ஆழ்ந்துவிட்டார். மூச்சு நின்றுவிடக் கண்களின் ஓரத்தில் கண்ணீர் வழிந்தது.

பரவசநிலை கலைந்ததும், சிறிய கட்டிலின்மீது சென்று உட்கார்ந்தார் குருதேவர். ம—கீழே குருதேவரின் பாதகமலங்களுக்கு அருகே உட்கார்ந்துகொண்டார். ம—வுடன் குருதேவர் பேசத் துவங்கினர். இறைவனுடைய வழிபாட்டில் ஈடுபட்டிருக்கும் பொழுது பெண்களுடன் தொடர்பு கொள்பவரைக் கடிந்து தனது கோபத்தையும், வெறுப்பையும் குருதேவர் காட்டிக்கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம—வைப்பார்த்து) : "உனக்கு வெட்கமாக இல்லை? குழந்தைகள் இருக்கின்றன. இருந்தாலும் மனைவியுடன் கூடுகிருய். இதில் உனக்கு இன்னும் வெறுப்புத் தோன்றவில்லையா? ஏன் இத்தகைய மிருகத்தனமான வாழ்க்கை? நரம்பு, ரத்தம், மலம், மூத்திரம் இவைகள் உன்னை வெறுப்படையச் செய்யவில்லையா? எவன் இறைவனது பாதத்தாமரைகளை இடைவிடாது எண்ணுகிருனே அவனுக்கு வெகு அழகான பெண்ணும் சுடுகாட்டுச் சாம்பலுக்கு சமம்.

"எந்த உடல் நிலையற்றதோ, எதற்குள் கிருமிகள், குடல், இரத்தம், சதை, எலும்பு போன்ற தூய்மையற்ற பொருட்கள் உள்ளனவோ அந்த உடலிலா நீ ஆனந்தம் காண்கிருய்? என்ன வெட்கக்கேடு!"

இவ்வாறு கண்டிக்கப்பட்ட ம- அவமானத்தால் தலை குனிந்து மௌனமாக இருந்தார். குருதேவர் மேலும் தொடர்ந்து, "பகவானுடைய அன்பில் ஒரு துளியையாவது ஒருவன் பெறுவானானால் அவனுக்குப் பெண்ணும் பொன்னும் மிகமிகத் துச்சமானவைகளாக ஆகிவிடுகின்றன. கற்கண்டு பானம் கிடைத்தால் வெல்லப்பானம் அற்பமானதாகத் தோன்றுகிறது. இறைவனிடம் உள்ளம் உருகிப் பிரார்த்தனை செய்தால், அவனுடைய பெயரையும் புகழையும் எப்பொழுதும் விடாமல் பாடினால் நாளடைவில் அந்த அன்பு உண்டாகும்" என்றார். இவ்வாறு கூறிய குருதேவர் பிரேமப்பித்துப் பிடித்தவராக அறையில் சுற்றிச்சுற்றி நடனமாடிக்கொண்டு பாடத் துவங்கினார்.

"புண்ணிய கங்கைக்கரையில் யார் ஹரியின் பெயரைக்கூறுவது?
அன்பை அளிக்கும் நிதாய்வந்துள்ளான் போலும்."

காலைநேரம் பத்து மணி. ராம்லால் காளி கோவிலில் அன்னைக்கு நித்யபூஜை செய்து முடித்தார். குருதேவர், ம- பின் தொடர அன்னை காளியைத் தரிசிக்கக் காளி கோவிலுக்குப் புறப்பட்டார். குருதேவர் கோவிலுள் நுழைந்து காளிதேவியின் முன்பு அமர்ந்தார். அன்னையின் பாதங்களில் இரண்டொரு மலர்களைத் தூவினார். தன்தலையின்மேல் பூ ஒன்றை வைத்துக் கொண்டு தியானம் செய்யத் துவங்கினார். அன்னையின் மீது துதிப்பாடலொன்று பாடலானார்.

உன் பெயர் பவதாரா, பயத்தைப் போக்கக் கூடியது பயஹரா என
கேட்டுள்ளேன்
ஆகவே எனது பயத்தை உன்னிடம் கொடுத்துள்ளேன்! ஓ!
அன்னையே என்னைக் காப்பாற்று! காப்பாற்று!

குருதேவர் காளிகோயிலிலிருந்து திரும்பி வந்து தனது அறையை அடுத்த தென் கிழக்குத் தாழ்வாரத்தில் உட்கார்ந்தார். இன்னமும் காளிகோவிலில் காளிக்கு நிவேதனம் ஆகவில்லை. சிறிது நேரம் சென்ற பின்னர் அன்னை காளி, விஷ்ணு, இவர்களுக்கு நைவேத்யமாகப் படைக்கப்பட்ட வெண்ணெய், பழம் முதலிய பிரசாதத்தைத் தானும் உட்கொண்டு ராக்கால் முதலிய பக்தர்களுக்கும் அளித்தார்.

ராக்கால் குருதேவரின் அருகில் உட்கார்ந்து லார்ட் எர்ஸ்கின் என்பவரைப் பற்றி ஸ்மைல்ஸ் என்பவர் எழுதிய தனக்குத்தானே உதவி [1] என்ற புத்தகத்தைப் படித்து கொண்டிருந்தார்.

---

1. Self help

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "அதில் என்ன சொல்லி இருக்கிறது?"

ம: "அப்புத்தகத்தில் மேலை நாட்டான் ஒருவன், பயன் கருதாது செயல் புரிவதைப் பற்றி அதாவது நிஷ்காமகர்மம் பற்றிச் சொல்லியிருக்கிறான்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அப்படியாயின் அது நல்லது. முழுமையான ஞானம் பெற்றவர்களின் அறிகுறி, அவர்கள் ஒரு புத்தகத்தையும் உடன் வைத்துக் கொள்ள மாட்டார்கள். சுகதேவர் இப்படிப்பட்டவர். அவருக்கு எல்லாம் மனப்பாடம். சாஸ்திரத்தில் சர்க்கரையும் மணலும் கலந்து கிடக்கிறது. சாது, சர்க்கரையை மட்டும் எடுத்துக் கொண்டு மணலை விட்டு விடுகிறான். அதாவது அவன் சாரத்தைமட்டும் எடுத்துக் கொள்கிறான்."

சுகதேவரின் பெயரைக் கூறி குருதேவர் தம் நிலையை எடுத்துக் காட்டுகிறாரா?"

வைஷ்ணவசரண் பாடகர் ஒருவரோடு வந்தார். பாடகர் சில பாடல்களைப் பாடி முடித்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு ராம்லால் ஒரு தட்டில் பிரசாதம் கொண்டு வந்தார். உணவிற்குப் பிறகு குருதேவர் சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டார்.

ம- இரவை நஹபத்தில் கழித்தார். அன்னை சாரதா தேவி குருதேவருக்குச் சேவை புரிவதற்காக இந்த நஹபத்தில்தான் தங்கியிருந்தார். அப்போது அவர் சில மாதங்களாகக் கமார்புகூரில் இருந்து வந்தார்.

**ஞாயிற்றுக்கிழமை, டிசம்பர் 16, 1883**

காலை சுமார் பத்துமணி. தட்சிணேசுவரக் கோயிலில் குருதேவர் தம் அறையை அடுத்த அரைவட்டத் தாழ்வாரத்தில் ம-வுடன் உட்கார்ந்து கொண்டார். கண்ணுக்கெதிரில் கங்கை தெற்கு நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. அருகில் உள்ள மல்லிகை, முல்லை, ரோஜா, செண்பகம் முதலிய பூச் செடிகளில் மணம் கமழும் பூக்கள் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தன. குருதேவர் ம-வைப் பார்த்துக்கொண்டே பாடத் தொடங்கினார்.

அன்னையே! தாரா! உன்னிடம் புகலடைந்தேன்! என்னைக் காப்பாற்று.
கூட்டுப் பறவை போன்று உதவியற்று உள்ளேன்!
எண்ணற்ற தவறுகள் இழைத்துள்ளேன்!
கன்றைக் காணாத பசுபோல் மாயையில் சிக்குண்டு அறிவற்றுத் திரிகிறேன்!

"ஏன் கூண்டில் அடைப்பட்ட பறவைபோல் ஆக வேண்டும்? ஆ! வெட்கம் வெட்கம்!" இவ்வாறு கூறிக்

கொண்டே குருதேவர் பரவச நிலையை அடைந்தார். உடல், மனம் எல்லாமே அசைவற்றுக் காணப்பட்டன. கண்களில் கண்ணீர் வழிந்தது. சிறிது நேரம் கழிந்த பிறகு, 'தாயே! என்னைச் சீதை போல் ஆக்கிவிடு. சீதை எல்லாவற்றையும் அடியோடு மறந்தாள். உடல், பொறிகள், கை, கால் முதலியவை எல்லாமே உணர்ச்சியற்ற நிலையில் இருக்க, எங்கே இராமர்? என்ற ஒரே எண்ணத்தில் இருந்தாள்' என்றார்.

எந்தவித உள்ளத் துடிப்பு இருந்தால் இறைவனை அடையலாம் என்பதை ம-விற்கு எடுத்துக் காட்டவே குருதேவருக்குச் சீதையின் நினைப்பு மனத்தில் உதித்ததோ? சீதையின் வாழ்க்கை இராமரையே மையமாகக் கொண்டது. இராமரைப்பற்றி நினைத்து நினைத்துப் பித்துப் பிடித்தவளாகச் சீதை ஆகி விட்டாள். தனக்கு மிகவும் விருப்பமான தன் உடலைக் கூட மறந்தாள்!

மாலை நான்கு மணி. குருதேவர் பக்தர்களுடன் அறையில் உட்கார்ந்திருந்தார். பிராணகிருஷ்ணரின் உறவினரான முகர்ஜி என்பவர் ஒரு பிராமணப் பண்டிதருடன் வந்து சேர்ந்தார். ம-, ராக்கால், லாட்டு, ஹரிஷ், யோகின் முதலிய பக்தர்களும் அப்போது அங்கு இருந்தனர்.

யோகின் தட்சிணேசுவரத்தைச் சேர்ந்த இளைஞன். திருமணம் ஆகாதவன். இப்பொழுது சில நாட்களாக நாள் தோறும் மாலையில் குருதேவரைப் பார்க்க வந்து கொண்டிருந்தான். இரவு வீடு திரும்பிச் செல்வான்.

முகர்ஜி (குருதேவரை வணங்கி): "உங்களைத் தரிசித்து மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவன் எல்லோருடைய உள்ளத்திலும் ஒரேமாதிரியாகப் பொன்மயமானவனாக இருக்கிறான். சில இடங்களில் ஒளி அதிகம். கட்டுண்டவர்களிடம் அந்தப் பொன், ஆசையெனும் மண்ணால் அதிகம் மூடப் பட்டிருக்கிறது."

முகர்ஜி (சிரித்தபடி): "ஐயா, இந்த உலகம், அந்த உலகம் இவைகளின் வித்தியாசம் என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "சாதனை புரியும்பொழுது 'இது அல்ல, இது அல்ல' என்று கூறி எல்லாவற்றையும் துறக்கவேண்டும். அவனை அடைந்த பிறகு அவனே எல்லாமாக ஆகியுள்ளான் என்பதை அறிய முடிகிறது. ஒரு சமயம் இராமருக்கு வைராக்கியம் தோன்றியபொழுது தசரதர் மிகவும் மனம்

வருந்தி வசிஷ்டரைச் சரணடைந்தார். இராமர் வாழ்க்கையைத் துறக்காமல் இருக்கவேண்டி வசிஷ்டரை வேண்டினர். அதன் படி வசிஷ்டர் தீவிர வைராக்கியத்தோடு உட்கார்ந்திருந்த இராமரைக் கண்டு பின்வருமாறு கூறினர்:

'இராமா, எதற்காக நீ உலகத்தைத் துறக்க நினைக்கிருய்? உலகம் என்பது இறைவனிடமிருந்து தனியாகப் பிரிந்து இருக்கிறதா? இதுபற்றி என்னுடன் வாதம் செய் பார்க்கலாம்' என்ருர். அந்தப் பரம்பிரப்மத்திடமிருந்தே உலகம் உண்டாகி யிருப்பதை இராமர் அறிந்து வாய் பேசாது மௌனமாக இருந் தார்.

"எதிலிருந்து மோர் உண்டானதோ, அதிலிருந்தே வெண்ணெயும் உண்டாகியிருக்கிறது. வெண்ணெயைச் சேர்ந்தது மோர். மோரைச் சேர்ந்தது வெண்ணெய். அதிகத் துன்பப்பட்டு வெண்ணெயை எடுத்த பிறகு அதாவது ஞான மடைந்த பிறகு, வெண்ணெய் இருந்தால் மோரும் இருக்கும் என்பதை நீ அறிவாய். எங்கு மோர் இருக்கிறதோ, அங்கே வெண்ணெய், எங்கே வெண்ணெய் இருக்கிறதோ அங்கே மோர். பிரம்மம் என்பதொன்று உண்டு என்ற அறிவு ஏற்பட்டால், உலகம், மக்கள், இருபத்திநான்கு தத்துவங்கள் முதலியனவும் உள்ளன என்ற எண்ணம் ஏற்படும்.

"பிரம்மம் எப்படிப்பட்டது என்று வாயால் சொல்ல முடியாது. எல்லாப் பொருட்களும் நாக்கால் தீண்டப்பட்டு எச்சிலாக்கப்பட்டுவிட்டன. அதாவது வாயினல் அவை விளக்கப்பட்டுவிட்டன. ஆனல் பிரம்மம் மட்டும் என்ன என்பதை யாராலும் கூற முடியவில்லை. ஆகவே எச்சிலாக்கப் படவில்லை. இந்தக் கருத்தை நான் வித்யாசாகருக்குக் கூறினேன். வித்யாசாகர் இதைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.

"உலக ஆசை சிறிதளவு இருந்தாலும் பிரம்ம ஞானம் கிட்டாது. பொன், பெண் இவற்றிலிருந்து மனம் முற்றிலும் விலகினல்தான் அது கிட்டும். பார்வதி ஒருமுறை தன் தந்தையைப் பார்த்து 'தந்தையே! பிரம்ம ஞானத்தை நீ விரும்பினல் சாதுக்களை நாடிச் செல்லவேண்டும். அவர் களுடன் வாழவேண்டும்' என்று கூறினள்."

இல்லறத்தானுக இருந்தாலும் சரி, துறவியாக இருந்தாலும் சரி, பொன், பெண் இவற்றில் ஒருவன் அதிக ஆசைகொள் வானகில் அவனுக்கு பிரம்மஞானம் கிட்டாது என்பதைக் குருதேவர் இவ்வாறு குறிப்பாக எடுத்துக்காட்டுகிருர?

ஸ்ரீராமகிருஷ்ணர் (மறுபடியும் முகர்ஜியைப் பார்த்து): "உன்னிடம் செல்வம் இருக்கிறது. இருந்தும் இறைவனிடம் பக்தி செலுத்துகிறாய். அவனை அழைக்கிறாய். இது மிகவும் நல்லது. முற்பிறவியில் யோகத்திலிருந்து வழுவியவர்களே பணக்காரர் வீட்டில் பக்தர்களாகப் பிறக்கின்றனர் என்று கீதையில் கூறப்பட்டிருக்கிறது."

முகர்ஜி (நண்பர்களிடம் சிரித்தவாறே): "சுசீனும் ஸ்ரீமதாம் கேஹே யோகப் பிரஷ்டோபிஜாயதே!"[1]

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவன் விரும்பினால் ஞானியைக் கூட உலக வாழ்க்கையில் ஈடுபடச் செய்யலாம். அவருடைய விருப்பத்தால்தான் உலகம், மக்கள் முதலிய எல்லாமே உண்டாகியிருக்கின்றன. அவன் இச்சாமயன்.

முகர்ஜி (சிரித்தவாறே): "இறைவனுக்கும்: ஆசையா? இது என்ன? அவருக்கு ஆசைப்பட ஏதாவது தேவை இருக்கிறதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): "அதில் என்ன தவறு இருக்கிறது? தண்ணீர் அசையாமல் இருந்தாலும் தண்ணீர் தான். அலைகளோடு கூடியிருந்தாலும் தண்ணீர்தான். சுற்றி வட்டமாகப் படுத்திருந்தாலும், அல்லது வளைந்து வளைந்து சென்றாலும் பாம்பு பாம்புதான். சும்மா இருந்தாலும் அல்லது வேலையில் ஈடுபட்டிருந்தாலும் மனிதன் மனிதனேதான்.

"உலகம், ஜீவராசிகள் இவற்றை விட்டுவிட்டு உலகத்தை எவ்வாறு எடை போட முடியும்? அப்படியானால் எடை குறையாதா! ஓடு, விதை இவைகளை விட்டுவிட்டு வில்வப் பழத்தை எடை போட்டால் முழுப் பழத்தின் எடை கிடைக்குமா?

"பிரம்மம் எங்கும் ஒட்டாதது, எதனுடனும் சேராதது. காற்றில் நல்ல வாசனை, கெட்ட வாசனை இரண்டையும் முகருகிறோம். ஆனால் இவைகள் எதுவும் காற்றில் ஒட்டாது. பிரம்மமும், சக்தியும் ஒன்றுதான். அனைத்துக்கும் அடிப்படையான ஆத்யாசக்தியே உலகம், ஜீவராசிகள் முதலிய எல்லாமாக ஆகியுள்ளது."

முகர்ஜி: "மனிதர்கள் யோகநிலையிலிருந்து ஏன் வழுவுகின்றனர்?"

1. கீதை VI — 41.

ஸ்ரீராமகிருஷ்ணர் :

அன்னையின் வயிற்றில் யோகநிலையில் இருந்தேன்!
உலகத்திற்கு வந்து, அதன் மண்ணைத் தின்றேன்!
மருத்துவச்சி எனது தொப்புள் கொடியை அறுத்தாள்!
மாயைக் கொடியை எப்படி அறுப்பேன்?

"பெண், பொன்தான் மாயை. இந்த இரண்டும் மனத்தை விட்டு அகன்றால் பிறகு யோகம் உண்டாகும். ஆத்மா அதாவது பரமாத்மா காந்தக்கல். ஜீவாத்மா ஊசி.

"இறைவனாகிய காந்தம் இழுத்துக்கொண்டால் யோகம் ஏற்படுகிறது. ஆனால் ஊசி மீது களிமண் பூசப்பட்டிருந்தால் காந்தக்கல் அதை இழுக்காது. மண்ணைத் துடைத்துத் தூய்மை செய்தால், ஊசியைக் காந்தம் இழுக்கும். பெண், பொன் என்ற மண்ணைத் தூய்மை செய்ய வேண்டும்."

முகர்ஜி : "தூய்மை செய்வது எப்படி?"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவனுக்காக உள்ளத்துடிப்புடன் அழு. அந்தக்கண்ணீர் களிமண்ணின் மீது விழுந்தால் களிமண் கரைந்து ஓடும். நன்றாகப் பரிசுத்தமடைந்த ஊசியைக் காந்தக்கல் இழுத்துக்கொள்ளும். அப்போது யோகம் வந்தடையும்."

முகர்ஜி : "ஆஹா! எவ்வளவு அற்புதமான வார்த்தைகள்!"

ஸ்ரீராமகிருஷ்ணர் : "இறைவனுக்காக அழுதால் அவருடைய காட்சிகிட்டும். சமாதி உண்டாகும். யோகத்தில் நிலைத்தால் சமாதி கிடைக்கும். அழுதால் கும்பகம் தானாகவே உண்டாகும். அதன்பிறகு சமாதிநிலை கிட்டும்.

"மற்றொரு தியானம் இருக்கிறது. தலையில் உள்ள சஹஸ்ரார சக்கரத்தில் சிவபெருமான் ஆற்றலோடு வீற்றிருக்கிறான். பக்தன் அவரைக்குறித்துத் தியானம் செய்யவேண்டும். உடல் குடம். மனமும் புத்தியும் தண்ணீர். இந்தத் தண்ணீரில் சச்சிதானந்த சூரியனின் உருவம் விழுகிறது. இந்தப்பிரதிபிம்பமான உருவத்தைத் தியானம் செய்யச் செய்ய இறைவனுடைய கருணையால் உண்மையான சூரியனைக் காணலாம்.

"உலகமக்களுக்கு எப்பொழுதும் சாதுக்களின் உறவு மிகவும் அவசியம். எல்லோருக்கும் இது அவசியம். சந்நியாசிகளுக்கும் அவசியம். இல்லறத்தில் வாழ்பவர்களுக்கு நிச்சயமாகச் சாதுக்களின் உறவு வேண்டும். அவர்கள் பெண், பொன் இவைகளுக்கு இடையில் எப்பொழுதும் வாழவேண்டி

யிருப்பதால் அவர்களுடைய நோய் எப்பொழுதும் இருந்து கொண்டே இருக்கிறது."

முகர்ஜி: "ஆம் ஐயா. நோய் எப்பொழுதும் இருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனிடம் உன் பொறுப்புக்களை வக்காலத்துக்கு விட்டுவிடு. அவன் தன் விருப்பம்போல் செய்யட்டும். பூனைக்குட்டியைப்போல் நீ மனத்துடிப்புடன் இறைவனை அழை. தாய்ப்பூனை தன்னை எங்கே வைக்கும் என்று குட்டிக்குத்தெரியாது. சில சமயம் படுக்கையில் வைக்கும். சில சமயம் சமையலறையில் கொண்டுபோய் வைக்கும்."

முகர்ஜி: "கீதை முதலிய சாஸ்திரங்களைப் படிப்பது நல்லது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "வெறும் படிப்பினால் என்ன பயன்? சிலர் பாலைப்பற்றிக் கேட்டிருக்கிறார்கள்; சிலர் பார்த்திருக்கிறார்கள்; சிலர் அதைப் பருகியிருக்கிறார்கள். இறைவனைப் பார்க்கவும் அவனுடன் பேசவும் முடியும். முதலில் பிரவர்த்தக நிலை. அவன் படிப்பான், கேட்பான். அடுத்தது சாதகன் நிலை. அவன் படித்தது, கேட்டது இவைகளைக் குறித்துத் தியானம் பழகுகிறான். இறைவனை அன்போடு அழைக்கிறான். அவனுடைய பெயரைப்பாடுகிறான். அடுத்தது சித்தன் நிலை. இவன் இறைவனுடைய காட்சியைப் பெறுகிறான். இவன் உள்ளம் இறைவனை நன்றாக உணர்ந்து அனுபவிக்கிறது. அதற்கும் அடுத்தது சித்தர் சித்தன் என்றநிலை. சைதன்ய தேவருடையது போன்ற நிலை. இவர்கள் சில சமயம் வாத்ஸல்ய நிலையிலும், வேறு சிலசமயம் மதுரபாவத்திலும் நிலைத்து நிற்கிறார்கள்."

ம-, ராக்கால், யோகின், லாட்டு முதலியவர்கள் தேவர்களுக்கும் கிடைக்காத இவ்வார்த்தைகளை ஆச்சரியத்துடன் கேட்டுக்கொண்டிருந்தனர். பின்பு முகர்ஜியும் அவருடைய நண்பரும் வணங்கி விடை பெற்றனர். குருதேவரும் அவர்களுக்கு மரியாதைகாட்ட எழுந்துநின்றார்.

முகர்ஜி (சிரித்தபடியே): "நீங்கள் எழுந்துநிற்பதா?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): 'எழுந்தால் என்ன தவறு? அசையாது இருந்தாலும் தண்ணீர், அலைகளோடு கூடியதாக இருந்தாலும் தண்ணீர். எச்சில் இலையைக் காற்று எங்கெங்கு எடுத்துச் செல்லுமோ, அங்கெல்லாம் செல்லும். நான் இயந்திரம்; இறைவன் அதை ஓட்டுபவன்."

முகர்ஜியும், அவருடைய நண்பரும் அறையை விட்டுச் சென்றனர். ம- தனக்குள் நினைத்துக் கொண்டார். வேதாந்தத்தின்படி எல்லாம் கனவு போன்றது. அப்படியானால் உலகம், ஜீவராசிகள், 'நான்' என்ற எண்ணம், இவைகள் எல்லாம் மித்யையா?

ம- கொஞ்சம் வேதாந்தம் படித்திருந்தார். ஜெர்மானிய தத்துவ ஞானிகளான கான்ட், ஹெகல் முதலியவர்களுடைய புத்தகங்களைப் படித்திருந்தார். இவர்களுடைய தத்துவங்கள் நம் வேதாந்தத்தின் ஒரு இலேசான எதிரொலி எனலாம். சாதாரண பண்டிதர்களைப் போல் குருதேவர் விசாரம் செய்து சித்தாந்தத்திற்கு வரவில்லை. ஜகன்மாதாவே அவருக்கு நேராக எல்லா தத்துவ சாஸ்திரங்களையும் உள்ளது உள்ளபடி காட்டியிருக்கிறார். ம- அதை நினைத்துக் கொண்டார்.

சிறிது நேரம் கழிந்ததும் குருதேவர் அரைவட்டத் தாழ்வாரத்திற்கு வந்து ம-வுடன் பேசிக் கொண்டிருந்தார். எதிரில் கங்கை பிரவாகமாக ஓடிக் கொண்டிருந்தாள். குளிர்காலம் மாலைப்பொழுது. சூரியன் இன்னமும் மறையவில்லை. தென் மேற்கு மூலையில் ஒளி வீசிக் கொண்டிருந்தான். யாருடைய வாழ்வு வேதமயமானதோ, யாருடைய வாயிலிருந்து வரும் வார்த்தைகள் எல்லாம் வேதவாக்குகளோ, யாருடைய வாயிலிருந்து கொண்டு ஸ்ரீபகவான் பேசுகிறாரோ, யாருடைய அமுத மொழிகள் வேதம், வேதாந்தம், பாகவதம் முதலிய சாஸ்திரங்களின் சாரமோ, அந்தக் கருணைக்கடல் இந்த மனிதவடிவம் தாங்கிப் பேசிக் கொண்டிருந்தது.

ம : "சுவாமி! உலகம் நிலையில்லாததா?

ஸ்ரீராமகிருஷ்ணர் : "ஏன் நிலையில்லாதது? நிலையில்லாதவை என்று வாதிப்பவர்கள் சொல்லும் மொழிகள் அவை. முதலில் 'இது அல்ல, இது அல்ல' என்று, அவர்கள் வேதாந்த விசாரம் செய்யும் பொழுது இறைவன் ஜீவராசிகள் அல்ல, உலகம் அல்ல, இருபத்துநான்கு தத்துவங்களும் அல்ல என்று அறிகிறார்கள். அப்போது அவைகள் கனவு போல் தோன்றும். அந்த நிலையை அடைந்த பிறகு உலகப் பொருள்கள் அனைத்தையுமே இறைவனாக ஏற்றுக் கொள்ளும் நிலை வருகிறது. அப்பொழுது இறைவனே ஜீவராசிகளாக ஆகியுள்ளார் என்பதை அறிகிறார்கள்.

"படிக்கட்டுகளின் வழியாக நீ மாடியை அடைந்தாய். மாடி இருக்கிறது என்ற எண்ணம் இருக்கும் வரை படிக்கட்டுகளின் எண்ணமும் இருக்கிறது. உயர்ந்தது என்ற எண்ணம் உடைய

வர்கள் தாழ்ந்தது என்ற எண்ணமும் உடையவர்களாகவே இருப்பார்கள். செங்கல், சுண்ணும்பு, மணல் முதலிய எந்தப் பொருட்களைக் கொண்டு மாடி கட்டப்பட்டுள்ளதோ, அதே பொருட்களைக் கொண்டுதான் படிக்கட்டுக்களும் கட்டப்பட்டிருக்கின்றன என்பதை அறிவாய்.

"வில்வப்பழத்தைப்பற்றிய செய்தியைக் கூறியிருக்கிறேன். எது அசையாததோ அதற்கு அசையும் தன்மையும் உண்டு.

'நான்' என்ற எண்ணம் அவ்வளவு எளிதில் மறைந்து விடாது. நான் என்ற எண்ணமும் இருக்கும் வரை உலகம் ஜீவ ராசிகள் என்ற எண்ணமும் இருக்கத்தான் செய்யும் இறைவனுடைய காட்சிக்குப் பின், அவனே உலகமாகவும் ஜீவர்களாகவும் ஆகியிருக்கிறுன் என்பதை அறிய முடியும். வெறும் வாதத்தினுல் இதை அறிய முடியாது.

"சிவனுக்கு இரண்டு மனுேநிலைகள் உண்டு. சமாதியில் இருக்கும்பொழுது, அதாவது யோகநிலையில் இருக்கும்பொழுது ஆத்மாராம் என்பார். அந்த நிலையிலிருந்து இறங்கி வந்தால் சிறிது நான் என்கின்ற உணர்வு தோன்றும். அப்பொழுது 'ராம், ராம்' என்று கூறி நடனமாடுவார்!"

குருதேவர் சிவபெருமானுடைய நிலையை விளக்குவதன் மூலமாகத் தம் நிலையையே விளக்குகிருரா!

மாலைநேரம் நெருங்கியது. குருதேவர் அன்னையின் பெயரை உச்சரித்தபடி அவருடைய சிந்தனையில் மூழ்கிக் கொண்டிருந்தார். பக்தர்களும் தனித்தனியாக எழுந்து சென்று அவரவர் விருப்பப்படி தியானம் முதலியன செய்ய முற்பட்டனர். விஷ்ணு, சிவன் ஆலயங்களில் மாலை வழிபாடு துவங்கிற்று.

அன்று கிருஷ்ணபட்சம், இரண்டாவது நாள். சந்திரன் வானத்தில் தோன்றினுன். கோவிலையும், அதன் சுற்று வட்டாரத்தையும் தன் ஒளிக்கதிர்களால் மூடி அவன் அழகு படுத்தத் துவங்கினுன்.

குருதேவர் தம் அறையில் அமர்ந்திருந்தார். ம- அவர் அருகில் தரையில் அமர்ந்தார். மாலையில் வேதாந்தத்தைப் பற்றி என்ன பேச்சு நிகழ்ந்ததோ அதையே குருதேவர் இப்பொழுது தொடர்ந்து பேசலானுர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "உலகத்தை மித்யையாக ஏன் நினைக்க வேண்டும்? இது வேதாந்த விசாரம் செய்பவர் களுடைய வார்த்தைகள். இறைவனைக் கண்டால், அவனே

உலகமாகவும், ஜீவராசிகளாகவும் ஆகியுள்ளான் என்பதை அறியலாம். என் அன்னை பராசக்தியே எல்லாமாகி இருக்கிறாள் என்பதை அவள் எனக்குக் காளி கோவிலில் காட்டி அருளினாள். எல்லாமே உணர்வுள்ளவை. பூஜைப் பாத்திரங்களும் உணர்வுள்ளவை. கதவும், படிகளும் உணர்வுள்ளவை. சலவைக்கல்லாலான தரையும் உணர்வுள்ளது இப்படி எல்லாப் பொருட்களுமே உணர்வுமயமாக, சின்மயமாக உள்ளன என்பதை அன்னை உணர்த்தினாள்.

''கோயில் அறையினுள் எல்லாப் பொருட்களும் ஆனந்தத்தில், சச்சிதானந்தத்தில் மூழ்கியிருப்பதை நான் கண்டேன். காளிகோயிலின் அருகில் ஒரு துஷ்டனைக் கண்டேன். அவனுள்ளும் இறைவனுடைய சக்தி ஒளி வீசுவதைக் கண்டேன்.

''இந்தக் காரணங்களால்தான் ஒருமுறை நான் அன்னைக்குப் படைக்க வேண்டிய பூரியை ஒரு பூனைக்குக் கொடுத்தேன். அப்போது அன்னையே எல்லாமாகி இருப்பதைக் கண்டேன். பூனையும்கூட அன்னையாக இருப்பதைக் கண்டேன். அப்பொழுது கோயில் மேற்பார்வையாளர், 'அன்னைக்குப் படைக்க வேண்டிய பூரியை நான் பூனைக்குக் கொடுக்கிறேன்' என்று குற்றம் சாட்டி மதுருக்குக் கடிதம் எழுதினார். மதுர்பாபு என் நிலையை நன்றாக அறிவார். அகவே, 'அவர் விருப்பம் போல் செய்யட்டும். நீ அவரிடம் ஒன்றும் சொல்லாதே' என்று அவருக்குப் பதில் எழுதினார்.

''இறைவனை அடைந்தால் அவரே எல்லாமாகி இருப்பது அதாவது, உலகம், ஜீவராசிகள், இருபத்துநான்கு தத்துவங்களாக ஆகியிருப்பது தெரியும். 'நான்' என்ற எண்ணத்தை இறைவன் அடியோடு நீக்கிவிட்டால் என்ன நிகழ்கிறது என்பதைக் கூற முடியாது. அப்பொழுது நீ நல்லவனா அல்லது நான் நல்லவனா என்பதை நீயே அறிவாய் என்றார் ராம்பிரசாதர். சில சமயம் அந்த நிலையும் எனக்கு ஏற்படுகிறது. விசாரம் செய்யும்பொழுது நாம் ஒருவிதத்தில் காண்கிறோம். இறைவன் காட்டியருளும்போது நாம் பார்க்கும் விதமே வேறு.''

### திங்கட்கிழமை, டிசம்பர் 17, 1883

தட்சிணேசுவரக் காளிகோயில். காலை எட்டு மணி. குருதேவர் தம் அறையில் கட்டிலில் வீற்றிருந்தார். ராக்கால், லாட்டு முதலிய பக்தர்கள் அருகே அமர்ந்திருந்தனர். ம- தரையில் உட்கார்ந்திருந்தார், டாக்டர் மதுவும் அன்று

வந்திருந்தார். வயது முதிர்ந்த டாக்டர் மது வேடிக்கையாகப் பேசக்கூடியவர். கட்டிலின் மேலே அவரும் உட்கார்ந்திருந்தார். குருதேவருக்கு உடல்நிலை சரியில்லாதபோது அவர் வந்து பரிசோதிப்பார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "சுருக்கமாகச் சொன்னால், சச்சிதானந்தத்திடம் பிரேமை கொள்ள வேண்டும். அதுதான் முக்கியம். எத்தகைய பிரேமை? இறைவனை எப்படி நேசிக்க வேண்டும்? 'இராமரைக் காண விரும்பினால் சீதையைப்போல் ஆக வேண்டும்! பகவானை அறிய வேண்டுமானால் பகவதியைப் போல் ஆகவேண்டும்' என்று கூறுவார் கௌரி பண்டிதர். பார்வதி சிவனை அடைவதற்கு எப்படியெல்லாம் கடுமையான தவம் செய்யவேண்டியிருந்தது! அதைப்போன்ற தவத்தைச் செய்யவேண்டும். புருஷனை அறியவேண்டுமானால் பிரகிருதியின் பாவத்தை அடையவேண்டும். அதாவது நண்பனைப் போன்றும், தாசியைப் போன்றும், அன்னையைப் போன்றதுமான பாவத்தைப்பெற வேண்டும்.

"நான் சீதையை ஒரு ஞானக்காட்சியில் கண்டபோது அவளுடைய மனம் முழுவதும் இராமரிடமே ஒன்றிக் கிடந்ததைப் பார்த்தேன். பொறிகள், கைகால்கள், உடைகள், அணிகலன்கள் இவைகள் எதிலுமே அவளுடைய மனம் செல்லவில்லை. அவளுடைய ஒவ்வொரு உயிர் அணுவும் இராமர் மயமாக இருந்தது. இராமர் இல்லாவிட்டால், இராமரை அடையாவிட்டால் உயிர்நிலைக்காது போல தோன்றியது."

ம: "ஆம் சுவாமி. அவள் இராமர் பைத்தியமாகத்தான் இருந்தாள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பைத்தியம் பிடித்தவள்! இதுதான் சரியானவார்த்தை. இறைவனை அடையவேண்டுமானால் பைத்தியம் பிடித்தவனாக ஆகவேண்டும்.

"பெண், பொன்னில் மனம் தங்குமானால் இத்தகைய அன்பு தோன்றாது. பெண்களிடம் இன்பம் நுகர்வதில் என்ன சுகம்? இறைவனுடைய காட்சி கிட்டினால், பெண்ணிடம் கிடைக்கும் ஆனந்தத்தைப்போன்று கோடிமடங்கு அதிக ஆனந்தம் கிடைக்கிறது. மஹா பாவம் ஏற்படும்பொழுது, உடலில் உள்ள ஒவ்வொரு மயிர்க்காலும் மஹாயோனியாக மாறி விடுகிறது. ஒவ்வொரு துவாரத்திலும் ஆத்மா இன்பத்தை அனுபவிக்கிறது என்று கௌரிபண்டிதர் கூறுவார்.

"உள்ளத் துடிப்புடன் இறைவனை அழைக்கவேண்டும். என்ன செய்தால் அவனை அடையலாம் என்று குருவிடம்

கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டும். குரு முழுமையான ஞானியாக இருந்தால்தான் சீடனுக்கு வழிகாட்ட முடியும். ஞானமுண்டானால் ஆசைகள் அழிகின்றன. ஐந்து வயதுக் குழந்தையைப்போல் அவன் ஆகிவிடுகிறான். தத்தாத்ரேயர், ஜடபரதர் முதலிய முனிவர்கள் இப்படிக் குழந்தை இயல்போடு இருந்தார்கள்."

ம: "ஆம், சுவாமி. உலகம் இவர்களைப் பற்றி மட்டுமே தெரிந்துகொண்டிருக்கிறது. இவர்களைப் போன்று எவ்வளவோ முனிவர்கள் இருந்திருக்கலாம்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆமாம். ஞானிகளிடம் எல்லாப் பற்றுக்களும் மறைந்துவிடுகின்றன. ஏதாவது தங்கியிருந்தாலும் அது எந்தவிதக் கெடுதலையும் செய்யாது. ஸ்பரிசமணியால் தீண்டப்பட்ட இரும்புக்கத்தி பொன்கத்தியாக மாறுகிறது. அப்பொழுது இரும்புக் கத்தியைப்போல் எந்த விதத் தீமையும் இதனால் செய்யமுடியாது. அதேபோல் ஞானியிடம் காமம், வெகுளி, இவைகள் இருந்தாலும் அவை வெறும் வெளித்தோற்றத்திற்கும் பெயரளவிற்கும் மட்டுமே உள்ளன. இவைகளால் எந்தவிதக் கெடுதலும் யாருக்கும் உண்டாகாது."

ம: "ஆம் சுவாமி. தாங்கள் ஏற்கனவே கூறியதுபோல ஞானி முக்குணங்களையும் கடந்தவனாக இருக்கிறான். சத்வம், ரஜஸ், தமஸ் எனப்படும் எந்தக் குணங்களின் வசமும் அவன் இல்லை. இம்மூன்று குணங்களும் மூன்று திருடர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆம் இவைகளை நன்கு புரிந்து கொண்டு மனத்தில் ஆழப்படிய வைத்துக்கொள்ளவேண்டும்."

ம: "இந்த உலகில் பூரண ஞானம் பொலிந்த ஞானிகள் மூன்று நான்கு பேர்களுக்கு மேல் இல்லை என்றுதான் நினைக்கிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஏன் அப்படிக் கூறுகிறாய்? இந்த நாட்டின் வடபகுதியில் உள்ள மடாலயங்களில் ஏகப்பட்ட சாதுக்களையும், சந்நியாசிகளையும் பார்க்க முடிகிறதே?"

ம: "அவர்களைப் போல சந்நியாசியாக இருக்க என்னாலும் முடியும்." ம-அவ்வாறு கூறியதும் ஸ்ரீராமகிருஷ்ணர் அவரை அப்படியே சிறிது நேரம் உற்றுப்பார்த்தார். பிறகு "எல்லாவற்றையும் துறந்துவிட்டா?" என்றார்.

ம: "மாயையை அடியோடு ஒழிக்காவிட்டால் எதை அடையமுடியும்? மாயையை வெல்லாமல் வெறும் சந்நியாசியாக இருந்து என்ன பயன்?"

இருவரும் சில நிமிடங்கள் மௌனமாக இருந்தனர்.

ம: "சுவாமி, மூன்று குணங்களையும் கடந்த பக்தியின் இயல்பு என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இந்த பக்தி உண்டானால் பக்தன் எல்லாவற்றையும் சின்மயமாகக் காண்கிறான். சின்மய கிருஷ்ணர். அவருடைய வாசஸ்தலம் சின்மயம். பக்தனும் சின்மயம். எல்லாம் சின்மயம்! இப்படிப்பட்ட பக்தி ஏதோ ஒரு சிலருக்குத்தான் உண்டாகும்."

டாக்டர் மது (சிரித்தபடி): "இது திரிகுணாதீத பக்தி. அதாவது பக்தன் எந்தவித குணத்திற்கும் கட்டுப்படாத பக்தியுடையவனாகிறான். முக்குணங்களைக் கடந்த நிலை."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): "ஆமாம்! ஐந்து வயதுக் குழந்தையைப்போல ஆகிவிடுகிறான். எந்த குணத்தின் வசத்திலும் அப்போது அவன் இல்லை."

பகல் உணவு முடிந்ததும் குருதேவர் சிறிது நேரம் ஓய்வு கொண்டார். அப்போது மணிமல்லிக் வந்து குருதேவரை வணங்கிவிட்டுத் தரையில் உட்கார்ந்துகொண்டார். ம-வும் தரைமீது அமர்ந்திருந்தார். குருதேவர் படுக்கையில் படுத்திருந்தபடியே மணி மல்லிக்கோடு ஓரிரண்டு வார்த்தைகள் பேசிக்கொண்டிருந்தார்.

மணிமல்லிக்: "நீங்கள் கேசவரைப் பார்க்கப் போயிருந்ததாகக் கேள்விப்பட்டேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "கேசவர் இப்பொழுது எப்படி இருக்கிறார்?"

மணிமல்லிக்: "கொஞ்சங்கூடத் தேறவில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவரிடம் ரஜோகுணம் நிறைந்திருந்ததைக் கண்டேன். நீண்டநேரம் அவரைப்பார்க்க நான் காத்துக்கொண்டிருக்க வேண்டியதாயிற்று."

குருதேவர் எழுந்து உட்கார்ந்து கொண்டார். பக்தர்களிடம் பேசத்துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "நான் ஒரு சமயம் இராமர் பேரில் பைத்தியமாக இருந்தேன். அப்போது ஒரு சந்நியாசி கொடுத்த ராம்லால் விக்கிரகத்தை எடுத்துக் கொண்டு திரிவேன். குளிப்பாட்டுவேன், உணவு ஊட்டுவேன், தட்டித் தூங்கச் செய்வேன். எங்கெல்லாம் போவேனோ அங்கெல்லாம் அதையும் கூட எடுத்துக்கொண்டு செல்வேன். 'இராம்லால், இராம்லால்' என்று சதா கூறியபடி ஒரு பைத்தியக்காரனைப் போல் இருந்தேன்."

## முதற்பகுதி முற்றும்

# சொல்லடைவு

———